தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—113

# கிரேக்க நாட்டு வரலாறு-III

(History of Greece - III)


ஆசிரியர்:

ஜே. பி. ப்யூரி

தமிழாக்கம்:

இராமானுஜம் தேவதாஸ், எம்.ஏ.,

வரலாற்றுத் துறை,

மாநிலக் கல்லூரி, சென்னை - 5.







தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்

# கிரேக்க நாட்டு வரலாறு-III

(History of Greece - III)



ஆசிரியர் :

ஜே. பி. ப்யூரி

தமிழாக்கம் :

இராமாநுஜம் தேவதாஸ், எம்.ஏ.,
வரலாற்றுத் துறை,
மாநிலக் கல்லூரி, சென்னை - 5.



தமிழ் வெளியீட்டுக் கழகம்
தமிழ்நாடு - அரசாங்கம்

# அணிந்துரை

(திரு. எம். பக்தவத்ஸலம், தமிழக முதலமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ., வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்ல மெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர் களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறை களில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண் டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே திருப்தி கரமாக நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல். வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'கிரேக்க நாட்டு வரலாறு—III' என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 113ஆவது வெளியீ டாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 148 நூல்கள் வெளிவந் துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளை எல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலையாசனத்தில் அமர்ந்துள்ளாள். எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழ்ப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக் கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத்துழைப் புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரித்தாகுக.

எம். பக்தவத்ஸலம்

# பொருளடக்கம்

# கிரேக்க நாட்டு வரலாறு

## 13. ஏதென்ஸின் மறுமலர்ச்சியும் அதன் நாடுகளின் இரண்டாம் கூட்டிணைப்பும்

### 1. ஸ்பார்ட்டாவின் தான்தோன்றிக்கொள்கை

**மான்டினே பட்டின மறைவு, கி.மு. 386-5.**

எவ்வித சச்சரவுமில்லாமல் பெலப்போனீஸ் நாடுகளின் வாயில்கள் ஸ்பார்ட்டாவிற்கு மறுபடியும் திறந்துவிடப்பட்டன. பெர்ஷியா, ஸ்பார்ட்டாவை ஆதரித்தது. மேலும் தன்னுடைய சக்தியை இரண்டாகப் பிரிக்கக்கூடிய அளவில் ஆசியாவில் அதற்கு எவ்வித பிரச்சினையும் கிடையாது. ஆகையால் ஸ்பார்ட்டா லைசாண்டர் கற்றுக்கொடுத்த பேராதிக்கக் கொள்கையை மீண்டும் புதுப்பிக்கஆரம்பித்தது. அக்கார்டியன் மான்டினே (Acordian Mantinea) அக்கொள்கைக்கு முதல் பலியானது. அந்நாட்டவர் ஸ்பார்ட்டாவிடம் விசுவாசமற்றும், பலவகைகளில் கீழ்ப்படியாதும் இருந்தனரெனக் குற்றம் சாற்றி, அவர்களுடைய மதிற்சுவர்களை இடித்துத் தள்ளிவிடும்படி கட்டளையிட்டது. மான்டினே அக்கட்டளைக்குக் கீழ்ப்படியவில்லை. நாடு கடத்தப்பட்ட பவுசானியாஸ் மன்னனின் மகன் எஜிஸ்போலிஸ் மன்னன் அந்நகரத்தை நோக்கிப் படையுடன் சென்றான். மான்டினே நகரம் ஒரு சமவெளியில் கட்டப்பட்ட நகரம். அதற்கு எவ்விதமான இயற்கை அரணும் கிடையாது. அதனுடைய சுவர்கள் சுடாத செங்கற்களால் கட்டப்பட்டவை. ஒபிஸ் (Ophis) ஆறு அப்பட்டணத்தின் குறுக்கே ஓடியது. அந்நகரை முற்றுகையிடுவது கடினமாகையால் ஆற்றின் குறுக்கே ஓர் அணையை எழுப்பினான். அப்பட்டினம் வெள்ளத்தில் மிதந்தது. நகரத்தின் சுவர்கள் கரைந்து வீழ்ந்தன. அங்குள்ள ஒரு பெரிய கோபுரம் கீழே விழுந் தறுவாயிலிருந்தது. அப்பொழுது மான்டினே நகரவாசிகள் தங்களுடைய இக்கட்டான

நிலையை உணர்ந்தனர். உடனே சரணடைந்தார்கள் அவர்களுக்குக் கொடுந்தண்டனை கொடுக்கப்பட்டது. தன்னைச் சுற்றியுள்ள ஐந்து கிராமங்களுக்குப் பொதுவான மான்டினே நகரம் மறைந்தது. அவ்விடத்தில் வாழ்ந்த பூர்வீகக் குடிகளின் சந்ததியார்கள் மட்டும் மான்டினே கிராமத்தில் நிலைத்துத் தங்கினர். மற்றவர்கள் தங்களுடைய பூர்வீக கிராமங்களுக்குச் சென்றனர். கிரேக்கன் குடிமையுரிமையை இழக்க நேரும்போது அவன் வாழ்க்கையிலுள்ள சகல இன்பங்களையும் இழந்ததாகக் கருதுவான்.

### ஐஸோகிரேட்டஸின் புகழ் மொழி (381ல் எழுதப்பட்டது), 380.

ஒரு காலத்தில் பாரசீகப் பேரரசை வீழ்த்தித்தள்ளப் படையெடுத்த எஜிஸிலாஸ், இப்போது அரசனுடைய சமாதானத்தை ஆர்வத்துடன் ஆதரித்தான். எஜிஸ்போலிஸ் மன்னனும் மற்றும் சில ஸ்பார்ட்டனரும் அரசாங்கத்தின் புதிய கொள்கையைத் தாக்கிப் பேசினுர்கள். ஆசியா நாட்டுக் கிரேக்கர்களைக் கைவிட்டு விட்டதற்காக வருந்தினுர்கள். சமாதானமாகிய சில ஆண்டுகளுக்குப்பின், அவர்கள் ஆசியாவின் மீது படையெடுக்க ஆயத்தம் செய்வதாக, ஆதாரமற்ற ஒரு செய்தி பரவிற்று. அதற்கு உயிரூட்டக்கூடிய ஓர் சந்தர்ப்பமும் ஏற்பட்டது. 'ஒலிம்பியன் விழா' ஆரம்பமானது. கிரீஸின் பல பாகங்களிலுமுள்ளவர்கள் விழாக் கொண்டாடுவதற்காக அங்கு வந்து கூடினுர்கள். அச்சமயம் அத்தீனிய ஐஸோகிரேட்டஸ் அவ் விழாவிலாற்றிய சொற்பொழிவைக் கேட்டார்கள். கிரேக்கர்கள், ஸ்பார்ட்டா, அத்தீனியா, என்ற இரு நாடுகளின் தலைமையில் ஒன்று சேர்ந்து பாரசீகத்தை எதிர்க்கவேண்டு மென்றும், ஸ்பார்ட்டா, தரைப்படைக்குத் தலைமை தாங்க வேண்டு மென்றும், ஏதென்ஸ் கடற்படைக்குத் தலைமை தாங்க வேண்டு மென்றும், அவன் அங்குக் கூடியுள்ளவர்களின் மனத்தில் பதியும்படி விளக்கமாகக் கூறினுன். இந்தக் கருத்தை அந்த இடத்தில் அப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் பேசியவர்களில் இவன் மூன்ருவது மனிதனுவான். சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன் சாதுரியப் பேச்சாளராகிய கோர்ஜியாஸ் (Gorgias) இக்கருத்தை அறிந்து பேசினுர். சமீபத்தில் லிசியாஸ் (Lysias) எளிய நடையில் தெளிவாக அக்கருத்தைமீண்டும் எடுத்துக் கூறினுன். இப்போது ஐஸோகிரேட்டஸ அக்கொள்கையை மேலும் வற்புறுத்திக் கூறினுன். ஐஸோகிரேட்டஸ் அக்கருத்தை வலியுறுத்திய காலத்திற்கும், அதற்கு முந்திய காலத்திற்கும் இடையே பெருத்த வேறுபாடு இருந்தது. நூறு ஆண்டுகளுக்கு முன் சமபலமுள்ள கிரேக்க நாடுகளைத் தற்காப்புக்காக ஒன்று சேர்த்து ஒத்துழைக்கும்படி செய்ய முடியாதிருந்தது. இப்போது அத்தகைய ஒத்துழைப்பை ஆக்கிரமிப்புக்காகப் பயன்படுத்த நினைக்க முடியாது.

சைக்லாடு தீவுகளின் திறை குறித்து ஸ்பார்ட்டாவும் ஏதென்ஸும் சண்டைப் போட்டுக் கொண்டிருந்ததென்று ஐஸோகிரேட்டஸ் அவற்றின்மேல் குறை கூறினன். அவர்கள் தங்களுக்குள்ள பிரச்சினையை வாள் முனையைக் கொண்டு தீர்த்துக்கொள்வார்களேயன்றி, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து ஒதுங்க மாட்டார்கள். இப்பொழுது அவர்களுக்குத் தொல்லைகள் பல மற்றோர் இடத்தில் எழும்பிக் கொண்டிருந்தன.

## சைப்பிரஸின் எவாகோராஸ்

மேற்கிற்கும், கிழக்கிற்குமுள்ள போட்டி இப்போது சைப்பிரஸில் நடந்து கொண்டிருந்தது. அதனுடைய இயற்கை அமைப்பு சிஸிலியின் இயற்கையமைப்போடு ஒத்திருந்தது. அதாவது அந்நாடு பல இனத்தவரும், பல நாட்டினரும் வியாபாரத்தின் காரணமாக ஒன்ருகக் கூடுமிடத்தில் இருந்தது. இப்போராட்டத்தில் முதன்மையான பங்கெடுத்துக் கொண்ட எவாகோராஸ் என்ற சலாமிஸ் சிற்றரசனைப்பற்றி நாம் முன்பே படித்திருக்கிறோம். அவன் தேயுக்கிரிட் (Teucrid) குடும்பத்தைச் சேர்ந்தவன். அக்குடும்பம் டேரியஸ், ஸெக்ஸன் என்ற பாரசீகப் பேரரசர்கள் காலத்தில் அங்கே ஆட்சி புரிந்து வந்தது. ஆனல் ஐந்தாம் நூற்ருண்டின் இடையில் ஒரு போயினீஸியக் குடும்பம் இவர்கள் ஆட்சியைக் கைப்பற்றியது. எவாகோராஸ், சிலிசியன் சோலி (Cilician Soli) என்ற ஊரிலிருந்து புறப்பட்டுச் சென்று திடீரென்று போயினீஸியர்களைத் தாக்கித் தன் முன்னோர்கள் இழந்த ஆட்சியைக் கைப்பற்றி, நடுநிலை தவருமல் வெற்றியுடன் ஆண்டான். கடந்த ஐம்பதாண்டுகளில் அங்குப் பெரும்பாலும் அழிந்துவிட்ட கிரேக்கப் பண்பாடு புத்துயிர் பெற்றெழப் பெரிதும் பாடுபட்டான். எகோஸ் பொட்டாமி (Aegospotami) சிதறுண்டு பல இடங்களுக்குச் சென்று குடியேறினர்கள். எவாகோராஸ், அகதிகளான அத்தீனியர்களுக்கு அடைக்கலமளித்து, முதல் பதினறுஆண்டுக்காலம் வரையில் பாரசீகப் பேரரசனுக்கு விசுவாசமாக நடந்து வந்தான். அதனல் சுசாவில் அவனுக்கு நல்ல செல்வாக்கு ஏற்பட்டது. கோனேன் சுசாவிற்குச் சென்றிருந்தபோது, அவனுடைய செல்வாக்கினல் பாரசீகப் பேரரசனின் கருணைக்குப் பாத்திரமானன். சினிடஸ் சம்பவத்திற்குப் பின் இவன் பாரசீகத்தோடும், அத்தீவிலுள்ள சில போயினீஸியன் நகரங்களோடும் போர் புரிய நேர்ந்தது. அரசனுடைய சமாதான (King's Peace) வாசகத்தின்படி சைப்ரஸ், ஆர்ட்டாக்ஸெர்ஸஸ் என்பவன் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டது. சமாதான உடன்படிக்கையில் கையெழுத்திட்டபின், பாரசீகம் தன்னுடைய படைகளை எவாகோராஸுக்கும், அவனுடைய கூட்டாளியான ஓர் எகிப்திய அரசனுக்கும் எதிராக அனுப்பியது. கடற்சண்டையொன்றில் தான் அடைந்த படுதோல்

விக்குப்பின், எவாகோராஸ் சாலாமிஸ் நகரிலுள்ள கோட்டையில் அடைபட்டுக் கிடந்தான். அந்நகரம் முற்றுகைக்குள்ளாயிற்று. எவாகோராஸ் முற்றுகையைத் துணிச்சலோடு சமாளித்து நின்ருன். இந்தப் போரினல் பாரசீகத்திற்குப் பலத்த நஷ்டம் ஏற்பட்டது. அதனல், ஓர் அடிமை தன் எசமானனிடம் நடந்துகொள்வதுபோல், பணிவோடு திறையை ஒழுங்காகச் செலுத்துவதாக திரிபாஸஸ் ஒப்புக் கொண்டால், அவன் நாட்டை விட்டு விடுவதாகச் சொன்ஞன். அவன் அதற்கு இணங்கவில்லே. ஒரு மன்னன் மற்ருெரு மன்ன னுக்குத் திறை செலுத்துவதைப் போலவே தன்ஞல் நடந்துகொள்ள முடியுமென்ருன். எனவே கௌரவம் காரணமாக, சிறிது காலம் சமாதானப் பேச்சு வார்த்தையில் முறிவு ஏற்பட்டது. இதற்கு இடை யில்ஸாட்ராப் திரிபாஸஸுக்கும், இவனுடைய படைத் தலைவனுக்கு மிடையே ஏற்பட்ட சச்சரவில் திரிபாஸஸ் பதவியிலிருந்து விலக்கப் பட்டான். அவனுக்குப் பின் வந்த ஸாட்ரஸ், எவாகோராஸை அவன் விருப்பத்திற்கு விட்டுவிட்டான்.

**மரணம்**

சாலாமீனியன் நாட்டுச் சர்வாதிகாரி அடைந்த வெற்றி நேர்மை யானதொன்ருகும். அவ்வெற்றியின் பலனை அனுபவிக்க அவன் நீண்ட நாட்கள் நிலைத்து வாழவில்லை. அவனது மரணத்தைப் பற்றிய கதை விஞேதமானது. நிக்கோகிரியோன் (Nicocreon) என்பவன் இவனைக் கொல்லச் சதிசெய்தான். இச் சதி கண்டுபிடிக் கப்பட்டதும் இவன் ஊரைவிட்டு ஓடிவிடும்படியாகிவிட்டது. இவன் ஓடும்போது தன் மகளை, பேடியான தன் அடிமையின் பாதுகாப்பில் விட்டுச் சென்ருன். அப் பேடி சாமர்த்தியசாலி. அவன் எவா கோராஸையும் அவனுடைய மகன் பினிட்டா கோராஸையும் தனித் தனியே சந்தித்து, நிக்கோகிரியோனுடைய மகளின் அழகைக் குறித்து விரிவாக எடுத்துக் கூறினுன். தகப்பனுக்குத் தெரியாமல் மகனையும், மகனுக்குத் தெரியாமல் தகப்பனையும் அழைத்துச் சென்று, அந்த அழகியிடம் அறிமுகப்படுத்தி வைத்தான். இருவரும் அவளுடைய வலையில் சிக்கிக் கொண்டனர். தகப்பனுக்குத் தெரியாமல் மகன் அவளிடம் சென்று களியுண்டு கிடப்பது வழக்கமாகி விட்டது. அப் பேடி தகுந்த சமயம் பார்த்து இருவரையும் கொன்று விட்டான். நாடு கடத்தப்பட்ட தன் எஜமானனின் பழியை அப்பேடி இவ்வாறு தீர்த் துக்கொண்டான். எவாகோராஸுக்கு மற்ருெரு மகனிருந்தான். அவன்தான் நிக்கோகிலிஸ் என்பவன். அவன் அரசுகட்டிலேறிய தும், தன் தகப்பனின் ஹெலனிக்கொள்கையைப் பின்பற்றி வந்தான். இருவரும் கலைப்பித்தர்கள். அக்காலத்தில் கிரீஸில் ஏற்பட்ட அறிவாற்றல் இயக்கங்கள், கலை இயக்கங்கள் முதலியவை களோடு தங்கள் நாடு தொடர்புகொள்ளும்படி செய்தார்கள்.

நிக்கோகிலிஸ் கிரேக்க தத்துவக் கலையின் மாணவன். கட்டுரைக் கலைஞனாகிய ஐஸோகிரேட்டஸின் சிறந்த நண்பன். ஐஸோகிரேட்டஸ் எழுதிய கட்டுரையைக் கொண்டே நாம் எவாகோராஸின் வாழ்க்கை வரலாற்றைப் பெரிதும் அறிகிறோம்.

**மாசிடோனியா, கி.மு. 383.**

சாலாமிஸ், பாரசீகத்திற்கெதிராகத் தனித்துநின்று போராடியதை முழுதும் பார்த்துக் கொண்டிருந்த கிரேக்கர்களுடைய கண்கள் இப்போது மற்றொரு மூலையில் நடக்கும் நிகழ்ச்சியொன்றைத் தலைதூக்கிப் பார்க்கும்படி நேரிட்டது. ஏஜியானுக்கு வடக்கே பல சம்பவங்கள் நடந்து கொண்டிருந்தன. ஸ்பார்ட்டவும் ஏதென்ஸும் அவற்றை ஊன்றிக் கவனித்தன. அவர்களுடைய கிரேக்க சகோதரர்களாகிய சைப்ரஸும், ஆசியாவின் கடற்கரைகளிலுள்ள கிரேக்க நாடுகளும், அவர்களால் முற்றிலும் மறக்கப்பட்டதாகத் தோன்றுகின்றன. சிறிதுகாலம் வரையில் கீழ்நாட்டுப் பிரச்சினைகள் கிரேக்க வரலாற்று ஏடுகளில் இடம் பெறவில்லை. ஏஜியானுக்கு வடமேற்கு மூலையிலுள்ள அந்நாடு மற்றவர்களால் மறக்கப்பட்ட சைப்ரஸ், மற்றும் ஆசிய நாட்டுக் கடற்கரையிலுள்ள கிரேக்க நகரங்களின் மீது பாத்தியம் கொண்டாடுவதோடு, வெளிச்சந்தரும் கிரேக்க விளக்கை ஏஜிஸிலாஸ் கனவில்கூடக் கண்டிராத நாடுகளுக்கு எடுத்துச் செல்லவும், காலத்தினால் தீர்மானிக்கப்பட்டிருந்தது. அச்சக்தி மாசிடோனியா மேட்டு நிலத்தில் உருவாக்கப்பட்டிருந்தது. ஐஸோகிரேட்டஸ் பாரசீகப் பேரரசனுக்கு எதிராகக் கிரேக்க நாட்டைப் புகழ்ந்து பேசியபோது குழந்தைகளாக இருந்தவர்களில் சிலர், பாரசீகப் பேரரசு வீழ்ச்சியடைந்ததைத் தங்கள் கண்களால் பார்க்க முடிந்தது.

**சால்சிடியான் கூட்டமைப்பு, கி.மு. 385.**

தெற்கிலுள்ள கிரேக்கர்கள் இப்பொழுது பிற்போக்கான மாசிடோனிய சகோதரர்களோடு மறைமுகமாகத் தொடர்புகொள்ள நேர்ந்தது. அவர்களுடைய பக்கத்து நாடாகிய இல்லிரீயா (Illyria) அடிக்கடி இவர்கள் நாட்டைத் தாக்கியது. இவர்கள் முன்னேற்றத்திற்கு இது முதன்மையான தடையாக இருந்தது. ஒரு சமயம் இல்லீரியன் தாக்குதலுக்குக் அந்நாட்டுக் குடிமக்கள் உடந்தையாக இருந்தார்கள். இதனால் அப்போது அந்நாட்டை ஆண்ட பெரிடிக்காசின் (Perdiccas) மருமகன் அமின்தாஸ் (Amyntas) தன் நாட்டை விட்டு ஓடும்படியாகிவிட்டது. ஆனால் அவன் பட்டத்துக்கு வந்ததும், தற்காப்பிற்காகவும், வணிகத்திற்காகவும், சால்சிடியன் நாட்டுக் கூட்டமைப்போடு ஐம்பதாண்டுக் கால ஒப்பந்தம் ஒன்றைச் செய்து கொண்டான். சால்சிடியான் கூட்டமைப்பு ஒலிந்தஸ் என்பவனால்

உருவானது. அக் கூட்டமைப்பில் சித்தோனியன் (Sitoonian) பூ சந்தியிலுள்ள (Promontory) பட்டணங்கள் சேர்ந்திருந்தன. நாம் முன்பே அறிந்ததைப் போல் அது கூட்டாட்சி முறை நிலவிய காலம். அமின்தாஸ் தன்னுடைய நாட்டிற்குத் திரும்பியவுடனே, மாசிடோனியாவின் கீழ்ப்பகுதியிலுள்ள மா நிலங்களையும், தெர்மேயிக் வளைகுடாவைச் சுற்றியுள்ள நகரங்களையும், சால்சிடியாவுக்குக் கொடுத்து விட்டான். இல்லீரியர்களின் தாக்குதல்களிலிருந்து தம்மைக் காத்துக்கொள்ள, மாசிடோனியா நகரங்கள் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டமைப்பை ஏற்படுத்திக்கொண்டன. கடற்கரையிலுள்ள பட்டினங்களும், உள் நாட்டில் பெல்லா வரையிலுள்ள பட்டணங்களும், இந்த ஐக்கியத்தில் சேர்ந்தன. ஐக்கியத்தில் ஈடுபட்ட நாடுகளில் முழுச் சமத்துவத்தையும், சகோதரதத்துவத்தையும் நிலை நிறுத்துவதே சால்சிடியான் கூட்டமைப்பின் அடிப்படைக் கொள்கை யாகும். கூட்டமைப்பில் ஈடுபட்ட நாடுகளுக்குள் பொதுவான சட்டங்கள், குடிமை உரிமைகள், கலப்பு மணம், பொது வணிகம் முதலியவைகளிருந்தன. அடிப்படைக் கொள்கைகளை, கூட்டமைப் பின் சிறப்பான கொள்கையாகக் கருதி மதித்து வந்தார்கள். ஒலிந்தஸ் தமக்கெனச் சிறப்பான அதிகாரம் எதையும் விரும்பவில்லை. அண்மையிலுள்ள நாடுகளையும் இக் கூட்டமைப்பில் சேருமாறு தூண்டினர்கள். சில பட்டணங்கள், உதாரணமாக போட்டடே இந்தக் கூட்டமைப்பில் சேர்ந்தது. இப்படிச் சேருகிற கிரேக்க நகரம் தன்னுடைய பரம்பரைச் சட்டங்களில் ஒரு பகுதியையும், அதனுடைய இறைமையில் ஏதாவதொரு பாகத்தையும் கூட்டமைப்பு அரசாங்கத் தினிடம் ஒப்படைப்பது வழக்கம். மாசிடோனியா நகரங்களைவிட சால்சிடியான் நகரங்கள் விருப்பத்திற்கு மாருக இந்தக் கூட்டமைப்பி சேர்ந்திருந்தன. ஒலியந்தியர்களுடைய பணி வளர வளர இக் கூட்டமைப்பின் அதிகாரத்தை, சால்சிடிஸ் தீபகற்ப நாடுகளிலும் அதன் பக்கத்திலுள்ள நாடுகளிலும் நிலைநாட்ட நோக்கங் கொண் டார்கள். இப்படிப்பட்ட அதிகாரம் உருவாகியவுடன் அதை நிலை பெறச் செய்வதற்கான பொறுப்பு ஏற்பட்டது. கட்டுப்பாட்டை மீறுபவர்களைப் பலவந்தப்படுத்த நேரிட்டது. பலமுள்ள ஆகாந்தஸ் பட்டினமும் அப்போலோனியா பட்டினமும் (Aconthus and Apollonia) இக் கொள்கையை எதிர்த்தன. அவை ஸ்பார்ட்டாவின் உதவியை நாடி, அரசியல் தூதுவர்களை அனுப்பின, இச்சூழ்நிலையில் அமின்தாஸ் இழந்த தன்னுடைய அரசுகட்டிலைத் திரும்பப் பெற்றுக் கொண்டான். அவன் நாடுகளின் கூட்டமைப்பிடம் ஒப்படைத்த நகரங்களையும், மா நிலங்களையும் திருப்பிக் கொடுக்கும்படி கேட்டான். ஆனல் அவை திரும்ப அவனிடம் ஒப்படைக்கப்படவில்லை. ஆகையால் அவனும் ஸ்பார்ட்டாவின் உதவியை நாடினன். இத் தகைய முறையீடுகள் எல்லோருடைய கவனத்தையும் சால்சிடியான்

கூட்டமைப்பு முறையின்பால் திருப்பின. கூட்டு சேர்வதைத் தடுப்பதும், கிரேக்க நகரங்கள் தனித்து நின்று வாழ்வதை ஆதரிப்பதும், ஸ்பார்ட்டாவின் கொள்கையாகும். இதன் விளைவாக கிரீஸில் கூட்டாட்சி அரசியல் அமைப்புமுறை வளரவில்லை. ஸ்பார்ட்டாவிற்குச் சென்ற அரசியல் தூதுவர், சால்சிடியான் நாடுகளின் கூட்டமைப்பு, ஸ்பார்ட்டாவின் நலனைப் பாதிப்பதால் அதை உடனே அழித்துவிட வேண்டுமென்று கூறினர். அந்தக் கழகம் தோன்றும்போது எவ்வளவிற்குக் கவர்ச்சிகரமாக இருந்ததோ, அவ்வளவிற்கு அது வளர்ந்த பிறகு அபாயமுள்ளதாகி விட்டது என்றூர்கள். அப்போலினியாவிற்கும், ஆகாந்தஸ் நாட்டிற்கும் உதவிபுரிவதென ஸ்பார்ட்டா தீர்மானித்தது. யூடாமீடாஸ் (Eudami las) என்பவனின் தலைமையில் ஒரு படையை ஸ்பார்ட்டனர் அனுப்பினுர்கள். இப்படை கூட்டமைப்பு நாடுகளின் படையைச் செருக்களத்தில் சந்திக்கப் போதுமானதாகயில்லாதிருந்த போதிலும், அவ்விரு பட்டணங்களையும் பாதுகாக்கக்கூடியதாய் இருந்தது. அப்படை போட்டிடே நகரத்தைக் கலகம் விளைவிக்குமாறு தூண்டியது.

### ஸ்பார்ட்டனர் தீப்ஸ் பட்டினத்தின் தற்காப்பு அரணைப் பிடித்துக் கொள்ளல், கி.மு. 383 அல்லது 382.

சால்சிடியான் கூட்டமைப்புக்கு எதிராக அனுப்பியபடை மற்ரேர் இடத்தில் சிறப்பான ஒரு சம்பவம் ஏற்பட வழி வகுத்தது. யூடாமீடாஸின் சகோதரன் போயிபிடாஸ் (Phoebidas) என்பவன் தலைமையில் ஸ்பார்ட்டா ஒரு பெரும்படையை அனுப்பியது. அவன் போயிஷியா (Boeatia) நாட்டைக் கடந்து செல்லவேண்டும். தீப்ஸ் நாட்டில் ஸ்பார்ட்டாவிற்குச் சாதகமாக ஒரு கட்சியிருந்தது. அக்கட்சி ஸ்பார்ட்டாவின் படையைக் கொண்டு ஒரு புரட்சியை ஏற்படுத்தத் திட்டமிட்டது. அப்போது அந்நாட்டின் நிர்வாகத்தலைவர்களில் (Polemarcls) ஒருவனுன லெயோன்ஷியாதாஸ் சிறந்து விளங்கினுன். அவன் போயிபிடாஸ் என்ற ஸ்பார்ட்டன் தலைவனைச் சந்தித்துத் தன்னுடைய சதித்திட்டம் நிறைவேற உதவி பெற்ருன். அவர்கள் தீப்ஸ் பட்டினத்தின் காட்மே என்ற தற்காப்பு அரணை (Cadmea) தெஸ்மோபோரியா (Thesmophoria) என்ற பண்டிகை தினத்தில் கைப்பற்றுவதென முடிவுசெய்தனர். ஏனெனில் குறிப்பிட்ட அத்தினத்தில் பண்டிகையைக் கொண்டாடுவதற்கு, காட்மேயைப் பெண்களுக்குக் கொடுத்துவிடுவது அங்கு வழக்கமாக இருந்தது. அரணைப் பாதுகாக்கப் பெண்களைத்தவிர போர் வீரர்கள் அங்கு இல்லாதபடியால், அவர்களுடைய சதித்திட்டம் வெற்றிபெற்றது. தற்காப்பு அரண் இரத்தம் சிந்தாமல் கைப்பற்றப்பெற்றது. ஆலிகார்க் ஆட்சிக் குழுவினரை லெயோன்ஷிதாஸ் தனக்கிணங்க வைத்தான். அவனுடைய கூட்டாளியும் மற்ருெரு நிர்வாகத்

தலைவனுமாகிய இஸ்மேனியாஸ் கைது செய்யப்பட்டான். ஸ்பார்ட்டாவை எதிர்ப்பவர்களில் முக்கியமானவர்கள் தீப்ஸிலிருந்து ஓடிவிட்டனர். ஆகையால் ஸ்பார்ட்டாவுடன் நேசமாக இருக்கக்கூடிய ஓர் அரசாங்கத்தை அங்கே நிலை நாட்டினார்கள். இது ஸ்பார்ட்டாவிற்கு பெருத்த வெற்றியையும் எஜிசிலாஸுக்கு மிகுந்த மனநிறைவையும் தந்தது. அரசனுடைய சமாதானத்தை மீறிநடந்த இச்செயல், எல்லோரையும் சிறிது நேரம் மலைக்கச்செய்தது. போயிபிடாஸின் செய்கையை அரசாங்கம் ஏற்றுக்கொண்டதா? அதனால் அதற்கு ஏதாவது நன்மை ஏற்பட்டதா? இக்கேள்விகளுக்கு ஸ்ப்பார்ட்டா சுருக்கமான விடையளித்தது. போயிபிடாஸுக்கு அவன் மதியீனத்திற்காக ஒரு லட்சம் டிராச்சமா (Drachmae) அபராதமளித்தது. ஸ்பார்ட்டா காட்மேயைத் தன் பிடியில் வைத்துக்கொண்டது. தன் நேசவுறவு நாடுகளின் நீதிபதிகளையும், தன் நாட்டு நீதிபதிகளையும் கொண்ட ஒரு சட்ட மன்றத்தைக் கூட்டி, ஸ்மேனியாஸ் மீதுள்ள வழக்கை விசாரணை செய்து, அவனுக்கு மரண தண்டனை அளித்தது. அரசனுடைய சமாதானத்திற்கு இணங்கியபின் ஸ்ப்பார்ட்டா, தீப்ஸ் நாட்டுக் குடிமகன் ஒருவன்மீது மெடிசம் (Medism) என்ற குற்றத்தைச் சுமத்தித் தண்டித்தது. அதனது இச்செயல் நீதியைக் கேலி செய்வதாக அமைந்தது.

### பிளாட்டேயியாவில் மறுமலர்ச்சி, கி.மு. 382 - 1. கி.மு. 380; சால்சிடியன் கூட்டமைப்பை அடக்கிவைத்தல் கி.மு. 379.

தீப்ஸ் கோட்டை, ஸ்பார்ட்டாவின் கையிலிருந்ததால், அது அங்கிருந்து தன் அதிகாரத்தை மத்திய கிரீஸ் நாடுகளில் பரவச்செய்யவும், தான் பெற்ற ஆதிக்கத்தை நிலை நாட்டவும் முடிந்தது. ஐம்பது ஆண்டுகளுக்கு முன் ஸ்பார்ட்டாவால் அழிக்கப்பட்ட பிளாட்டேயியா (Plataea) புத்துயிர் அடைந்தது. பெரும்பான்மையான பிளாட்டியர்கள் தாயகம் மீண்டனர். ஆனால் ஸ்பார்ட்டாவின் முழுக்கவனமும் சார்சிடியான் கூட்டமைப்பை ஒழித்துக் கட்டுவதில் ஈடுபட்டிருந்தது. ஆகையால் ஸ்பார்ட்டனர் போயினீஸியாவில் போயிபிடாஸின் செய்கையால் தடைபட்ட திட்டத்தைத் தொடர்ந்து நிறைவேற்ற முற்பட்டார்கள். தங்கள் யுத்தத்தை வெற்றிகரமாக முடிக்க எஜிசிலாஸின் சகோதரனாகிய தெலுத்தியாஸ் என்பவனைப் படைத்தலைவனாக அனுப்பினார்கள். மாசிடோனியா நாட்டு மன்னன் அமின்தாஸ் அவனுக்கு உதவி புரிந்தான். மேல் மாசிடோனியா மன்னனாகிய தேர்தாஸ் (Derdas) சிறந்த குதிரைப் படை ஒன்றை அவனுக்கு உதவியாக அனுப்பி வைத்தான். இத்தகைய உதவிகள் இருந்த போதிலும் அவனால் கூட்டமைப்பு நாடுகளின் படையைச் சமாளிக்க இயலவில்லை. ஒலிந்தஸ் நகரின் மதிலையடுத்து நடந்த யுத்தகளத்தில், செலுத்தியாஸ் படுதோல்வி

யடைந்து வெட்டுண்டிறந்தான். இந்த யுத்தம் ஓர் அரசனுக்கும் அவனுடைய சகோதரனுக்கும் அழிவைக் கொண்டுவந்தது. செலுத்தியாஸ் மாண்டுபோனதால் அவனுடைய சகோதரனுகிய எஜிஸிஸ்போலிஸை ஒரு பெரும்படையுடன் அனுப்பினர். பொறுத்தற்கரிய கோடை வெயிலின் காரணமாக எஜிஸிஸுக்குக் கொடிய காய்ச்சல் ஏற்பட்டது. அவனை அப்பிட்டிஸ் (Aphyitis) என்ற விடத்திலிருந்த டயோனிசஸ் ஆலயமிருந்த நிழலிலுள்ள தோப்பிற்கு எடுத்துச் சென்ருர்கள். ஆனுல் அவன் அங்கே இறந்துவிட்டான். அவனுடைய உடலை அடக்கம் செய்வதற்காக ஸ்பார்ட்டாவிற்குக் கொண்டு வந்தார்கள். அவனுக்குப்பின் வந்த போலிபியாடாஸ் (Polybiadas) மன்னன் அவனை விடத் திறமை மிக்கவன். அவன் ஒலியந்தியர்கள் தங்களுடைய கூட்டமைப்பைக் கலைத்து விட்டுத் தன்னுடன் சமாதானம் செய்து கொள்ளும்படி கட்டாயப் படுத்தினுன். அவர்களும், அந்தத் தீபகற்பத்திலிருந்த மற்ற நகரங்களும், லாசிடோமோனியாவுடன் நேசஉறவு உடன்படிக்கை செய்து கொள்ளுமாறு கட்டாயப்படுத்தப்பட்டனர். ஸ்பார்ட்டா, மாசிடோனியாவின் வணிகத் துறைப்பட்டினங்களை அமின்தாசுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டது. இவ்வாறு ஸ்பார்ட்டா, கிரேக்கப்பட்டினங்கள் ஒவ்வொன்றையும் தனித்து வாழும்படிசெய்தது. அந்நியர்களின் கெடுபிடி கிரேக்க நகரங்களைச் சூழ்ந்திருந்த இக்காலத்தில் ஸ்பார்ட்டாவின் கொள்கை அவர்களுக்குப் பாதகமாக முடிந்தது. ஸ்பார்ட்டா ஓர் வல்லரசாக இராமலிருந்திருக்குமானுல், சால்சிடியான் கூட்டமைப்பு ஆதிக்கம் பெற்றிருக்கும். இதனுல் பெரிதும் வளர்ச்சியடைந்திருக்கக் கூடும். ஸ்பார்ட்டா தனது கொள்கையின் காரணமாக வடகிரீஸில் நிலை நாட்டிய ஆதிக்கம், சிறிது காலத்திற்கே நிலைத்திருந்தது. முடிவில் அது மாசிடோனியாவின் வளரும் தன்மையுள்ள ஆதிக்கத்திற்குப் பணிய நேரிட்டது.

**ஃபிலியஸில் ஸ்பார்ட்டாவின் கொடுமை, முற்றுகை, கி.மு. 381-79.**

லாசிடோமோனியர்கள் இதற்கிடையில் தங்களுடைய ஆதிக்கத்தின் வல்லமையைப் பெலப்போனீசியாவிலுள்ளவர்கள் உணரும்படி செய்தார்கள். அரசனுடைய சமாதானத்திற்கு அங்கீகாரமளித்த சிறிது காலத்திற்குள்ளாக ஸ்பார்ட்டா பிலியஸ் பட்டினத்தின் சுதந்திரத்திற்குத் தீங்கு விளைவிக்க ஆரம்பித்தது. பிலியாசியர்கள் தங்கள் நாட்டு உயர் குடிமக்கள் சிலரை நாடு கடத்தியிருந்தார்கள். ஸ்பார்ட்டா, அவர்களை உடனே திரும்பத் தாயகம் வரவழைக்கவும், அவர்கள் உடைமைகளை அவர்களுக்குத் திருப்பிக் கொடுத்துவிடவும் கட்டளையிட்டது. பறிமுதல் செய்யப்பட்ட உடைமைகள் குறித்துப் பிலியஸில் தகராறென்று ஏற்பட்டது.

ஸ்பார்ட்டாவில் நாடு கடத்தப்பட்டவர்களுக்கு எஜிசிலாஸ் மன்னன், ஆதரவாக இருந்தான். ஆகையால் அவர்களுடைய தகராறைப்பற்றிய வழக்கில், ஸ்பார்ட்டாவுக்கு மேல் முறையீடு செய்து கொண்டனர். அதன் விளைவாக ஸ்பார்ட்டாவுக்கும் பிலியஸ் நகருக்கும் ஒரு யுத்தம் மூண்டது. எஜிசிலாஸ் மன்னன் அப்பட்டினத்தை முற்றுகையிட்டுப் பணிய வைத்தான். அவனால் நியமிக்கப்பட்ட நூறு அங்கத்தினர்களைக் கொண்ட குழுவொன்று அந்நாட்டிற்கான அரசியலமைப்பை உருவாக்கும் வரையில், ஆறு மாத காலத்திற்கு லாசிடோமோனிய காவற்படை யொன்றை அவர்கள் தங்கள் நாட்டில் வைத்துக் கொள்ளுமாறு அவர்களைக் கட்டாயப் படுத்தினான்.

**லிசியாஸின் ஒலிம்பியச் சொற்பொழிவு, கி.மு. 384.**

இவ்வாறு லாசிடோமோனியர்கள், கொடுங் கோலனாகிய டயோனிஷியஸ் மன்னனோடும், காட்டுமிராண்டியான ஆர்ட்டாக்ஸெர்ஸ் பேரரசனோடும் சேர்ந்து கொண்டு, சிறிதுகாலம் கிரேக்கர்களுக்குக் கொடுமை இழைத்தனர். அகில கிரேக்கர்களின் நலன் பெயரால் கொடுங்கோலாட்சியின் மீதிருந்த வெறுப்பை, சொற்பொழிவுகள் மூலமாகவும், செயல்கள் மூலமாகவும் அவர்களுக்கு எடுத்துக் காட்டவேண்டிய நிலைமை ஏற்பட்டது. அரசனுடைய ஒப்பந்தம் ஏற்பட்ட இரண்டாண்டிற்குப்பின் ஒலிம்பியாவில் நடந்த பண்டிகைக்கு அகில கிரேக்க நாடுகளிலிருந்தும் கிரேக்கர்கள் வந்தனர். அவ்வமயம் அத்தீனிய லிசியாஸ் அகில கிரேக்கர்களின் நலனைப் பாதித்த அபாயங்களைக் குறித்துத் தன் சொற்பொழிவில் விளக்கிக் கூறினான். கிழக்கிலிருந்தும் மேற்கிலிருந்தும், முறையே பாரசீகம், சிசிலியின் மூலமாகக் கிரேக்க நாடுகளை எதிர் நோக்கி வந்து கொண்டிருக்கிற அபாயங்களை எடுத்துக்கூறி இவற்றைக் குறித்துலாசிடோமோனியர்கள் கொண்டுள்ள ஒவ்வாக்கொள்கைகளையும் விளக்கினான். அவன் தன் சொற்பொழிவில் டயோனிஸியஸ் மன்னனைப்பற்றியும் கூறினான். அப் பேச்சைக் கேட்டவர்களில் சிலர் உணர்ச்சி வசப்பட்டு, சிசிலியிருந்து அங்கு வந்திருந்த பிரதிநிதிகளைத் தாக்குவதற்காகப் பாய்ந் தெழுந்தனர். அங்கிருந்த மற்றவர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். நான்காண்டுகளுக்கு முன் அத்தீனிய ஐஸோகிராட்டஸ் அதே இடத்தில் ஒரு சொற்பொழிவாற்றினான். அதில் அவன், லாசிடோமோனியர்கள் தங்கள் சொந்த நலனுக்காகக் கிரேக்கர்களுடைய சுதந்திரத்தை அந்நியர்களுக்கு விலைக்கு விற்றுவிட்டதாகவும், கிரேக்கர்களுக்கு அவர்கள் நம்பிக்கை மோசஞ்செய்து அந்நியர்களையும் கொடுங்கோலர்களையும் ஆதரிக்கிறார்களென்றும் கூறினான். அவன் அன்று விதைத்த விதை முளைத்தது. அதற்கு லிசியாஸ் தன்

சொற்பொழிவு மூலமாகத் தண்ணீர் பாய்ச்சி வளர்த்தான். இவ்வித மாக கிரேக்கர்கள் எல்லோரும் ஒரே இனத்தினர். 'கிரேக்கநாடு கிரேக்கர்களுக்கே' என்ற உணர்ச்சி வளர்ந்து வந்தது.

ஸ்பார்ட்டன் நாட்டு அரசனின் நண்பனும், அந்நாட்டின் அரசியல் நிறுவனங்களைப் பற்றி புகழ்ந்து கொண்டிருந்தவனுமான ஸெனப்பனுக்குக் கூட ஸ்பார்ட்டாவின் நடத்தையின் மீது எரிச்சல் ஏற்பட்டது. அதற்காக அவன் வருத்தமுற்ருன். ஸ்பார்ட்டாவின் வீழ்ச்சி அதற்கு நியாயமாக அளிக்கப்பட வேண்டிய தண்டனை என்பதையும் அவன் ஒத்துக் கொண்டான். 'லாசிடாமோனியர்கள் கிரேக்க நகரங்களின் சுதந்திரத்தை மதித்து நடப்பதாக உறுதிமொழி கொடுத்தனர். அவர்கள் தீபர்களுடைய தற்காப்பரணைக் கைப்பற்றினார்கள். இதற்கு முன்னால் தனிப்பட்ட ஓரினத்திற்கு அவர்கள் தலைகுனிந்து நின்றதில்லை. இப்போதோ அவர்களால் தீங்கிழைக்கப்பட்ட ஓர் சாதாரண தனி இனத்தினர் அவர்களைத் தலை குனிந்து நிற்கும்படி செய்து விட்டார்கள். சமயப் பற்றில்லாதவைகளும் தூய்மையற்றவைகளுமான செயல்கள் புரிகிறவர்களைக் கடவுள் கவனித்துக் கொண்டிருக்கிருர் என்பதை இது எடுத்துக் காட்டுகிறது.' —இவ்வாறு ஸ்பார்ட்டாவின் வீழ்ச்சியையும், தீப்ஸின் எழுச்சியையும் சரித்திர ஆசிரியர் அறிமுகம் செய்கிருர்.

## 2. ஏதென்ஸ்—தீப்ஸ் என்ற இரு நாடுகளின் நட்பு

**தீப்ஸ் நாட்டின் மீட்பு, கி.மு. 379-8 குளிர்காலம்.**

லெயோன்ஷிதாஸ் என்பவனும், அவனுடைய கட்சியினரும் 1500 லாசிடாமோனிய வீரர்களின் உதவியைக் கொண்டு தீப்ஸ் அரசாங்கத்தை நடத்திவந்தார்கள். அவர்கள் ஆட்சி ஏதென்ஸில் முப்பது பேர்கள் கொண்ட குழுவினர் செய்து வந்த ஆட்சியைப் போல் கொடுங்கோல் ஆட்சியாக இருந்தது. குடிமக்களைப் பற்றிய தங்கள் பயம் அவர்களைக் கொடுங்கோலாட்சி செய்யவும், எல்லோர் மீதும் சந்தேகங் கொள்ளவும் செய்துவிட்டது. நாட்டிலிருந்து வெளியேறிய பெருவாரியான அகதிகள் ஏதென்ஸில் அடைக்கலம் பெற்றனர். அவர்கள் தங்கள் நாட்டைக் கைப்பற்ற தக்க சமயம் நோக்கியிருந்தனர். இதனுல் லெயான்ஷிதாஸின் பயம் மேலும் அதிகரித்தது. ஏதென்ஸ், தீப்ஸ் நாட்டு அகதிகளுக்கும் தக்க அடைக்கல மளித்தது. ஏனெனில், ஏதென்ஸில் முப்பது பேர்கள் கொண்ட குழுவின் ஆட்சியில் ஏதென்ஸை விட்டு வெளியேறிய காலத்தில், தீப்ஸ், திராசிபூலஸ் என்பவனையும், அவனுடன் அங்கு

வந்து சேர்ந்த ஏதென்ஸ் அகதிகளையும், அன்புடன் நடத்தியது. பெலோப்பிடாஸ் என்பவன் தீப்ஸ் அகதிகளில் ஒருவன்; வீரமும் ஒழுக்கமுமுள்ளவன். அவன் தன் நாட்டை மீட்கத் தன் உயிரைப் பணயம் வைத்தான் தன் திட்டத்திற்கு உதவியாக அறுவரைத் தேர்ந்தெடுத்தான். கொடுங் கோலர்களை நேர்முகமாகத் தாக்கும் யோசனையை விட்டுவிட்டார்கள். சூழ்ச்சியினால் கொடுங்கோலர் கைப்பற்றிய அரசியலைச் சூழ்ச்சியைக் கொண்டே பெறவேண்டு மென்பது அவர்கள் கருத்து. ஆட்சியிலுள்ளவர்களை எதிர்க்கும் பலர் தீப்ஸ் நகரில் இருந்தனர். அவர்களில் எப்பாமினுண்டஸ் என்பவனொருவன். அவன் பெலோப்பிடாஸின் சிறந்த நண்பன். அவர்களில் பலர் விடுதலைக்காகப் போரிட அது ஏற்ற காலமல்ல வென்று எண்ணினார்கள். எனினும், சிலர் விடுதலை இயக்கத்தை உடனே ஆரம்பிப்பதற்காகத் தங்கள் உயிரையும் இழக்க முன்வந் தனர். அவர்களில் இருவர் குறிப்பிட தக்கவர்கள். ஒருவன் போல் மார்ச்சஸ் என்ற நிர்வாகத் தலைவனுடைய காரியதரிசியான பில்லிதாஸ் (Phyllidas) என்பவன். மற்றொருவன் செல்வம் படைத்த சாரோன் (Charon) என்பவன். சாரோன், சதித் திட்டத்தில் ஈடுபட்டவர்கள் ஒளிந்து வாழ்வதற்குத் தன் வீட்டைக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டான். ஆர்ச்சியாஸ் (Archias), பிலிப்புஸ் (Philippus) என்ற இரு நிர்வாகத் தலைவர்களும் பதவி காலம் முடிந்து வீட்டுக்குச் செல்லும் அன்றைய தினத்தைத் தங்கள் செயலுக்கேற்ற தினமாகக் கருதினார்கள். குறித்த தினத் திற்கு முந்திய நாள் பெலோப்பிடாஸ் தன்னுடைய ஆறு நண்பர்களு டன் வேட்டைக்காரர்களைப் போல் மாறு வேடம் பூண்டு சித்தேரோ னைக் கடந்து தீப்ஸை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அப் போது சூரியன் மறைந்து இருட்டேற்பட்டது. குடியானவர்கள் வயலி லிருந்து வந்து கொண்டிருந்தார்கள். இவர்கள் குடியானவர்களோடு சேர்ந்து நகரத்துக்குள் புகுந்து விட்டார்கள். அங்கிருந்து அவர்கள் சாரோன் தங்களுக்காகத் திறந்து வைத்திருந்த வீட்டிற்குள் சென்றார்கள். அவ்வீடு அவர்கள் ஒளிந்திருப்பதற்குத் தகுந்த வீடாக அமைந்திருந்தது. அதற்கு அடுத்த நாள் காரியதரிசியாகிய பில்லிதாஸ் பதவிலிருந்து விலகிச் செல்லுகிறவர்களுக்காக ஒரு விருந்து நடத்தினான். அவர்கள் விருப்பப்படியே உயர்குடியில் பிறந்த சில அழகிய நங்கைகளை விருந்தில் அவர்களுக்குக் கொடுப்ப தாகச் சொன்னான். விருந்து நடந்தது. தலைவர்கள் அளவிற்கு மீறிக் குடித்திருந்தார்கள். அப்போது ஒரு தூதுவன் ஆர்ச்சியாஸுக்கு ஒரு கடிதம் கொண்டு வந்து கொடுத்து அது மிக முக்கியமான தென்று கூறினான். ஆர்ச்சியாஸ் கடிதத்தைப் பிரித்துப் படிக்க வில்லை. 'நாளைக்குப் பார்த்துக் கொள்ளுகிறேன்' என்று சொல்லிக் கொண்டே கடிதத்தைத் தலையணைக்குக் கீழ் வைத்துக்

கொண்டான். அக் கடிதம் ஒரு சதித்திட்டத்தைப் பற்றியது. பக்கத்து அறையில் தங்களுக்காகக் காத்திருந்த பெண்களைத் தலைவர்கள் தங்களிடம் கொண்டுவரும்படி சொன்னார்கள். பில்லிதாஸ் (Phyllidas) வேலைக்காரர்கள் எல்லோரையும் வெளியே அனுப்பிய பிறகே அப் பெண்கள் அங்கு வரமுடியும் என்று சொன்னான். சாப்பாட்டறையிலுள்ள வேலைக்காரர்களெல்லோரும் வெளியே சென்றனர். அத்தலைவர்களும் அவர்களுடைய நண்பர்களுமே அங்கிருந்தார்கள். பெண்கள் நீண்ட முகமூடியோடு பிரபுக்களின் அருகில் வந்தமர்ந்தனர். முகமூடியை எடுத்துவிட்டு அழகிய முகத்தை காட்டுமாறு அப்பிரபுக்கள் வேண்டினார்கள். ஆனால் முகமூடிகளை விலக்குவதற்கு முன்பு அப்பெண்கள் தங்கள் கத்திகளால் தலைவர்களைக் கொன்றார்கள். அவர்கள் உண்மையான பெண்களல்லர். பெண் வேடம் பூண்டு வந்த பெலோப்பிடாஸும் அவர்களுடைய நண்பர்களுமே யாவார்கள். அங்கிருந்து அவர்கள் லெயோன்தியாதாஸ் (Leontiadas), ஹிப்பாட்டாஸ் என்ற அக்கட்சியின் மற்றத் தலைவர்களின் வீடுகளுக்குச் சென்று அவர்களையும் கொன்றார்கள். அரசியல் கைதிகளை விடுதலை செய்தார்கள். இவ்வாறு கொடுஞ் செயலில் ஈடுபட மனம் ஒவ்வாத எப்பாமினன்டஸ் உள்பட தேச பக்தர்கள் பலர் அப் புரட்சியை மகிழ்ச்சியோடு வரவேற்றார்கள். பொழுது விடிந்தது. அகோராவில் மக்கள் சபை கூடிற்று. சதியில் ஈடுபட்டவர்கள் மாலைத் தோரணங்களால் முடி சூட்டப்பட்டார்கள். பெலேப்பிடாஸ் உள்பட மூவர் நிர்வாகத் தலைவர்களாக நியமிக்கப்பட்டார்கள். குடியாட்சி அரசியலமைப்பு அங்கே நிலைநாட்டப்பட்டது.

### காட்மே சரணடைதல்

இந்த வெற்றியைக் கேள்விப்பட்டு மற்ற அகதிகள் ஓர் அத்தீனியத் தொண்டர்ப் படையுடன் உடனடியாக தீப்ஸ் நாட்டிற்கு வந்து சேர்ந்தார்கள். காட்மேயிலிருந்த ஸ்பார்ட்டன் படைத் தலைவன் இச் செய்தியைக் கேட்டு மிகவும் அதிர்ச்சியுற்றான். படை உதவிக்காக அவன் தெஸ்ப்பியே, பிளாட்டியே முதலிய இடங்களுக்குத் தூதுவர்களை அனுப்பினான். உதவிக்காக வந்த படைகள் நகரின் வாயில்களுக்கு வெளியே தடுத்து நிறுத்தப்பட்டு, பின்வாங்கியோடும்படி செய்யப்பட்டது. பிறகு காட்மேயைத் தாக்கினார்கள். லாசிடாமோனிய (Lasidamonie) கவர்னர்கள் ஒப்பந்தத்தின் பேரில் சரணடைய சம்மதித்தார்கள். ஸ்பார்ட்டாவுக்குத் திரும்பிச் சென்ற படைத்தலைவர்களில் இரண்டு பேருக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. மூன்றாவது படைத்தலைவன் நாடு கடத்தப்பட்டான். யூப்பர்ஸ் என்ற நிர்வாகத் தலைவர்களும் எஜிசிலாஸ் மன்னனும் ஏமாற்றமடைந்து வருந்திப் புலம்பினார்கள். அவர்கள் கிளியோம்

பொரோட்டஸ் மன்னனை ஓர் பெரும்படையுடன் தீப்ஸ் நாட்டிற்கு அனுப்பினர்கள். அவன் சிறப்பான வெற்றி எதையும் அடைய முடியவில்லை. ஏதென்ஸ் தொண்டர்படையின் செயலை ஏற்றுக் கொள்ளவில்லை. தலைவர்கள் தண்டிக்கப்பட்டார்கள்.

ஏதென்ஸ் ஸ்பார்ட்டாவுடன் சமாதானமாக இருந்தது. இரு நாடுகளுக்கிடையே போரெழ எவ்வித காரணங்களுமில்லை. போயிஷியாவில் நடந்த சம்பவத்திற்காக ஏதென்ஸ் உள்ளூர மகிழ்ச்சியடைந்திருந்தது. அத்தீனியத் தொண்டர்படை தீப்ஸ் நகருக்குச் சென்றதைப் பற்றி ஏதென்ஸ் வெளிப்படையாகக் கோபமுற்றது. அரசியல் தூதுவர்களை ஸ்பார்ட்டா ஏதென்ஸுக்கு அனுப்பியது. ஏதென்ஸ் தீப்ஸ் நகருக்குப் படையுதவி அனுப்பியதற்குத் தக்க காரணம் கூறவேண்டுமென்று கேட்டது. கிளியோம்பொரோட்டஸ் மன்னன் ஒரு படையுடன் முடிவான பதிலுக்காக ஏதென்ஸ் நகரின் எல்லையில் காத்துக் கொண்டிருந்தான். தொண்டர் படைக்குத் தலைமைதாங்கிய இருபடைத்தலைவர்களைப் பற்றிக் குறைகூறக் காரணம் எதுவுமில்லை. ஆனல் அவர்கள் தங்கள் நடத்தையின் காரணமாக ஏதென்ஸ் நகருக்கு இக்கட்டான தொல்லைகளைக் கொண்டு வந்து விட்டார்கள். ஆகையால் அவர்களில் ஒருவன் மரண தண்டனையடைந்தான்; மற்றவன் நாடுகடத்தப்பட்டான்.

### ஸ்போடிரியாஸ் தாக்குதல்

அநியாயமாகத் தண்டிக்கப்பட்ட இரு அத்தீனியப் படைத் தலைவர்களுக்காக நாம் அனுதாபப்பட நேரிடுகிறது. அவர்கள் தான்தோன்றித் தனமாகச் செய்த காரியத்திற்காக இரு நாடுகளுக் கிடையே யிருந்து வந்த சமாதானம் முறிந்துவிடும் என்பதற்காகத் தண்டிக்கப்பட்டார்கள். லாசிடோமோனியப் படைத்தலைவனும் தெஸ்ப்பியே நகரத்து கவர்னருமான ஸ்போடிரியாஸ் (Sphodrias) ஏதென்ஸ் நகர வாசிகளுக்குத் தெரியாமல் ஒரு நாள் நள்ளிரவில் ஏதென்ஸ் நகரில் படையைச் செலுத்தி பிரேயஸ் துறைமுகத்தைப் பயமுறுத்தத் திட்டமிட்டான். தீப்ஸ் நகரை இழந்ததினல் ஏற்பட்ட நஷ்டத்தை, பிரேயஸ் துறைமுகத்தைக் கைப்பற்றுவதினல் ஈடு செய்துவிட வேண்டுமென்பது அவனுடைய திட்டத்தின் நோக்கம். இரவோடு இரவாக தெஸ்ப்பியே நகரிலிருந்து ஏதென்ஸை நோக்கிப் படையுடன் பயணம் மேற்கொண்டான்; எலூசிஸ் நகருக்குச் சமீபத்தில் வந்தபோது, பொழுது விடிந்து விட்டது. ஆகையால் அவன் தெஸ்ப்பியே நகருக்குத் திரும்பி விட்டான். திரும்பிச் செல்லும் போது வழியிலிருந்த ஊர்களைப் பாழ்படுத்தி விட்டுச் சென்றன்.

பகையின் காரணமாக ஏற்பட்ட இவ் விளைவு அத்தீனியர்களை எரிச்சலடையும்படி செய்தது. ஸ்பார்ட்டாவிலிருந்து வந்த

அரசியல் தூதுவர்கள் இன்னும் திரும்பிச் செல்லவில்லை. அத்தீனியர்கள் அவர்களை உடனே சிறையில் தள்ளினார்கள். இப்படையெடுப்பிற்குத் தங்கள் அரசாங்கம் பொறுப்புடையதன்று என்றும், ஸ்ப்போடிரியாஸ் (Sphodrias) மீது ஸ்பார்ட்டாவின் அரசாங்கம் நடவடிக்கை எடுத்துக் கொள்ளும் என்றும், காரணம் காட்டித் தப்பித்துக் கொண்டார்கள். அவர்கள் கொடுத்த வாக்குறுதி நிறைவேற்றப்படவில்லை. ஸ்போடிரியாஸை ஸ்பார்ட்டா தண்டிக்கவில்லை. அவனுடைய மகனும் எஜிசிலாஸ் மன்னனுடைய மகனும் நெருங்கிய நண்பர்கள். எனவே, அரசனுடைய செல்வாக்கு ஸ்போடிரியாஸைக் காப்பாற்றியது எஜிசிலாஸ் மன்னன் பின்வரும் வாக்கியங்களின்படி ஸ்போடிரியாஸ் மீதிருந்த குற்றத்திற்குத் தீர்ப்புக் கூறியதாக ஓர் அறிக்கை இருக்கிறது. ‘ஸ்போடிரியாஸ் செய்தது தவறுதான். ஆயினும் குழந்தைப் பருவமுதல் இதுகாறும் கண்ணியமாக வாழ்ந்தவனை இக் குற்றத்திற்காகக் கொல்வது கடினமாகும். மேலும் ஸ்பார்ட்டாவிற்கு அப்படிப்பட்ட போர் வீரர்கள் தேவை’. இவ்விதம் நீதியை விருப்பத்திற் கேற்றபடி மாற்றிக்கூறுவது ஒரு பெரும் தவறாகும். ஏதென்ஸ், ஸ்போடிரியாஸ் செய்த தவற்றைவிட மிகக் குறைவான குற்றத்தைச் செய்த தன்னுடைய படைத் தலைவர்களைத் தண்டித்துத் தன்னுடைய நேர்மையை நிலை நாட்டியது. ஆனால் ஸ்பார்ட்டா பெரிய குற்றம் புரிந்த அவனுக்காகப் பரிந்து பேசித் தன்னுடைய அகம்பாவத்தை வெளிப்படுத்தியது. அத்தீனியப் படைத்தலைவர்கள் லாசிடாமோனியா நாடுகளின்மீது படையெடுத்துச் செல்ல வில்லை. ஸ்போடிரியாஸ் ஏதென்ஸ் மீது படையெடுத்துச் சென்றதற்கு யார் பொறுப்பாக இருக்கக் கூடுமென்பது அன்றுமுதல் இன்றுவரையில் வாதத்துக் குரிய பிரச்சினையாக இருந்து வருகிறது. கிளியோம்பொரோட்டஸ் இதற்குப் பொறுப்பாளியாக இருக்கக்கூடுமென்பது சிலருடைய யூகம். அவனைப் படையெடுத்துச் செல்லும்படி தீபர்கள் தூண்டி விட்டிருப்பார்களென்று சிலர் நினைக்கிறார்கள். ஏனெனில் இப்படையெடுப்பினால் இலாபமடைந்தவர்கள் தீபர்கள். ஆனால் ஸ்போடிரியாஸின் சொந்த நிராசை இதற்குப் பொறுப்பாக இருக்குமென் றெண்ணுவதும் பொருத்தமாகும்.

### ஏதென்ஸ், தீப்ஸ் நாடுகளின் நேசவுறவு உடன்படிக்கை, கி.மு. 378.

ஸ்போடிரியாஸின் படையெடுப்பும், அவனுடைய விடுதலையும், ஏதென்ஸ் நகரை அதன் விருப்பத்திற்கு மாறாக ஸ்பார்ட்டாவுடன் போர் தொடுக்கவும், தீப்ஸ் நகருடன் நேசவுறவு உடன் படிக்கை செய்துகொள்ளவும் தூண்டி விட்டன. அவை ஏதென்ஸை நடுநிலைமைக் கொள்கையை விட்டு, போர்க்கோலம் பூணவும் செய்தன. அடுத்த ஆறாண்டுக் காலம் இரு நாடுகளும் போர்புரிந்து கொண்

டிருந்தன. அப்போர் இரு நாடுகளின் நலன்களேயும் பாதித்த போதிலும், சிறப்பாக ஸ்பார்ட்டாவைப் பெரிதும் பாதித்தது.

## 3. இரண்டாவது அத்தீனியன் கூட்டமைப்பும் தீபர்களுடைய சீர்த்திருத்தங்களும்

ஸ்போடிரியாஸ் படையெடுப்பும் இரண்டாவது அத்தீனியன் கூட்டமைப்பு ஏற்படுவதற்கு நேரடியாக வழி வகுத்தது. அநேக ஆண்டுகளுக்குமுன், அதாவது சினிடஸ் போருக்குப்பின், ஏதென்ஸ், தெரேஸ் ஏஜியான் ஆசியா மைனர் கடற்கரை நாடுகள் முதலியவை களுடன் ஒப்பந்தங்கள் செய்து கொண்டிருந்தது. இவ் வுறவுகள் யாவும் தனித்தனியே செய்து கொள்ளப்பட்ட உறவுகள். இப்போது ஸ்பார்ட்டாவிற்கும் ஏதென்ஸுக்கு முள்ள உறவு முறிந்து பகை ஏற்பட்டது. இதன் காரணமாக ஸ்பார்ட்டாவின் ஆக்கிரமிப்பிலிருந்து கிரேக்க நாடுகளின் சுதந்திரத்தைப் பாதுகாக்க ஒரு கூட்டமைப்பு ஏற்படுத்த வேண்டியதாயிற்று. டிலாஸின் பழைய கூட்டமைப்புப்பற்றி எண்ணுபவர் இப்போது ஏற்படப் போகிற கூட்டமைப்பு ஏதென்ஸின் இரண்டாவது பேரரசாக மாறி விடக்கூடுமோ வென்று பயப்படக்கூடும். அப் பயத்தைப் போக்கு வதற்காக ஏதென்ஸ் புதிய முறையைப் பின்பற்ற நேர்ந்தது. நௌசினிகஸ் நியாயாதிபதியாக இருந்தபோது, மாரத்தான் ஊரைச் சேர்ந்த அரிஸ்டாட்டலிஸ் அத்தீனிய சபையில் ஒரு சட்டம் கொண்டுவந்தான். அச்சட்டத்தில் இரண்டாவது அத்தீனியக் கூட்டமைப்பிற்கு வேண்டிய கொள்கைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. அச்சட்டம் ஆசியாவிலுள்ள கிரேக்க நாடுகளின் மீது பாரசீ கத்திற்கிருந்த ஆதிக்கத்தை அங்கீகரித்தது. ஆகையால் கூட்ட மைப்பின் கொள்கைகள் ஐரோப்பிய கிரேக்க நாடுகளிலும், தீவுகளி லுள்ள கிரேக்க நாடுகளிலும் செயல்படுத்தப்படவேண்டியது. தற்காப்புக்காக ஏற்படுத்தப்பட்ட கூட்டமைப்பு இரு பிரிவுகளேக் கொண்டது. ஒன்று ஏதென்ஸைப் பற்றியது. மற்ருென்று கூட்ட மைப்பிலுள்ள நாடுகளேப் பற்றியது. கூட்டமைப்பு நாடுகளின் காங்கிரஸ் கூடுமிடம் ஏதென்ஸ் என நிர்ணயிக்கப்பட்டது. அக்கூட்டத் தில் ஏதென்ஸ் சேர்க்கப்படவில்லே. கூட்டமைப்பு நாடுகளுக்கென் தனிச் சபையும், ஏதென்ஸுக்கென தனிச் சபையும் இருந்தன. கூட்டமைப்பு அவையில் சட்டத் தொடக்கம் செய்ய ஏதென்ஸுக்கு உரிமை அளிக்கப்பட்டது. ஒரு சபை இயற்றும் சட்டத்தை மற்ருெரு சபை அங்கீகரிக்கவேண்டும். மற்ருெரு சபையின் அங்கீகாரம் பெறுதவை சட்டமாகக் கூட்டமைப்பில் சேர்ந்த எல்லா நாடுகளுக்கும் சம அந்தஸ்து அளிக்கப்பட்டது. ஏதென்ஸ் மற்ற நாடுகளேப் போலவே சம நிலேயில் வைக்கப்பட்டது. கூட்டமைப்பிலுள்ள நாடு

களுக்கு மறுப்பாணை (Veto) அதிகாரம் அளிக்கப்பட்டது. அத்தீனியர்கள் கொண்டுவரும் பிரேரணையைக் கூட்டமைப்பு நாடுகள் விரும்பாவிடில் தங்கள் மறுப்பாணை மூலமாக அதை ரத்து செய்துவிடலாம். கூட்டமைப்புக்குப் பொதுவான நிதியிருக்க வேண்டியது அவசியமாயிற்று. ஒவ்வொரு நாடும் குறிப்பிட்ட ஒரு தொகை கொடுத்தல் வேண்டும். முன்பு அதைத் திறை (Phoros) என்று அழைத்தார்கள். இப்போது அது நன்கொடை அல்லது உதவித்தொகை என்று அழைக்கப்பட்டது (Syntaxlis). முன்பு அத்தீனியர்கள் கூட்டுறவு நாடுகளில் குடியேறுவது வழக்கமாக இருந்தது. இப்போது அத்தீனியன் எவனும் கூட்டமைப்பு நாடுகளில் குடியேறக்கூடாது. அங்கே அவன் வீடு அல்லது பண்ணையை விலைக்கு வாங்கவும் கூடாது; நிலங்களை அடகு பிடிக்கவும்கூடாது. நிதியை நிர்வகிக்கும் பொறுப்பும், போர் ஏற்பட்டால் படைக்குத் தலைமை தாங்கும் பொறுப்பும் அத்தீனியர்களுக்கு விடப்பட்டது.

### கள்ளிஸ்ட்ராட்டஸ்

அத்தீனியன் கூட்டமைப்புக் கொள்கைகள் எழுதப்பட்ட கல்வெட்டு பதனம் பண்ணப்பட்டிருப்பது நமது நற்பயனின் விளைவாகும். கல்வெட்டு இருபது துண்டுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. 'சமாதானத்தைச் சுதந்திரத்திலும், சுயாதீனத்திலும் கண்டு அனுபவிக்கும், நாடுகளை ஆக்கிரமிக்காமலிருக்க லாசிடா மோனியர்களை கட்டாயப்படுத்த வேண்டும்', என்பதாக வாசகம் கூட்டமைப்பின் நோக்கத்தைத் தெளிவாக்குகிறது. இப்புதிய திட்டம் வெற்றிகரமாக உருவாவதற்கு கள்ளிஸ்ட்ராட்டஸ் என்பவன் காரணமாயிருந்தான். அவன் அக்காலத்தில் திறமையுள்ள அரசியல் வாதியாகவும் பேச்சாளனுகவுமிருந்தான். அவனை இரண்டாவது கூட்டமைப்பின் அரிஸ்ட்டைடிஸ் என்றுகூட அழைக்கலாம். அரிஸ்ட்டைடிஸ் முதல் கூட்டமைப்பை, பாரசீகர்களை எதிர்ப்பதற்காக ஏற்படுத்தினுன். கள்ளிஸ்ட்ராட்டஸ் இரண்டாவது கூட்டமைப்பை, ஸ்பார்ட்டனர்களை எதிர்ப்பதற்காக உண்டாக்கவில்லை. ஸ்பார்ட்டனர்களுடன் இசைந்து வரக்கூடியதும், தீப்ஸ் நாட்டினர்களுக்கு எதிர்ப்பாக உள்ளதுமான அடிப்படையில் அக் கொள்கையை அவன் பின்பற்றினுன். ஏதென்ஸின் அயல் நாட்டுக் கொள்கைக்கு வழிகாட்ட, அக்காலத்தில் இரு கட்சிகள் போட்டியிட்டன. ஒன்று போயிஷியாவுக்கு நட்பாகவும் மற்ரென்று அதற்கு எதிராகவுமிருந்தது. தீப்ஸ் நாட்டிற்கு ஏதென்ஸில் சில நண்பர்கள் இருந்த போதிலும் அவர்களைத் தீபன் கட்சியென்ரோ, போயிஷியர்கள் கட்சியென்ரோ சொல்வதற்கு நமக்கு ஆதாரங்களில்லை. ஆனுல் ஸ்பார்ட்டாவுக்கு எதிர்ப்பான கட்சியொன்று இருந்ததென்பது உண்மையே. அது தன்னுடைய நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள தீப்ஸ் நாட்டின் உறவை நாடியது. கள்ளி-

ஸ்ராட்டஸ், ஸ்ப்பார்ட்டாவுக்கு விரோதமான உணர்ச்சியை எதிர்ப்பதனால் பயனில்லை என்றும், ஏதென்ஸ் தன் பலத்தைப் பெருக்கிக் கொள்ள அதற்குக் கிடைத்த வாய்ப்பை விட்டுவிடுவதில் பயனில்லை என்பதையும் உணர்ந்தான். ஆகையால் அவனுடைய உறுதியான கொள்கையை அச் சந்தர்ப்பத்தில் விட்டு விட்டு, தீப்ஸோடு நட்புக் கொள்ளும் பண்பையுடைய திட்டத்தைக் கண்டு பிடித்தான்.

இப்புதிய கூட்டமைப்பில் சியாஸ், பைஸான்ஷியம், மைத்திலேனே, மெத்திம்னு, ரோட்ஸ் முதலிய நாடுகள் ஆரம்பத்தில் சேர்ந்து கொண்டன. பிறகு யுபேயாவிலுள்ள பட்டினங்கள் பல சேர்ந்து கொண்டன. தீப்ஸ் இந்தப் புதிய கூட்டமைப்பில் சேர்ந்து கொண்டது வியப்பையளித்தது. தெரேசிய பட்டினங்கள், கார்சிரா, தெசாலியிலுள்ள பேரேயின் சர்வாதிகாரி ஜேசன், ஈப்பிரசின் இளவரசனுன ஆல்க்கிட்டாஸ் உள்பட எழுபது நாடுகள் இப்புதிய கூட்டமைப்பில் சேர்ந்திருந்தன. ஆரம்பத்தில் எல்லோரும் உற்சாகமாகச் சேர்ந்தார்கள். கடைசியில் தீப்ஸ் இக்கூட்டமைப்பில் சேர்ந்துவிட்டபடியால் அக்கூட்டமைப்பில் வளர்ச்சி ஏற்படவில்லை. அது உயர்ந்த அரசியல் சிறப்பை அடையவில்லை. ஏதென்ஸ், ஸ்பார்ட்டாவுடன் சமாதானமாக வாழவேண்டுமென்ற விருப்பம் கூட்டமைப்பின் நோக்கத்திற்கு ஒத்து வரவில்லை. இக்கூட்டமைப்பு ஒன்று வீழ்ச்சியடைய வேண்டும். அல்லது ஸ்ப்பார்ட்டாவுக்கு ஓர் பாடம் கற்பித்த பின், இது ஏதென்ஸின் கைப்பாவையாக மாறவேண்டும். தீப்ஸ் நகரத்துடன் செய்து கொண்ட பொருந்தாத உடன்படிக்கையை ஏதென்ஸ் தன் நன்மைக்காக என்றைக்காவது மாற்றியமைக்க நேரிடும். இஸ்போரா (Eisphora) அல்லது சொத்து வரி. அசலில் $\frac{1}{500}$ பங்கு :—

முதன்மையான கிரேக்க நாடுகள் தங்கள் அரசாங்கத்தை ஒழுங்காக அமைத்துக் கொண்டிருந்த காலம் அது. தீப்ஸ் ஒரு புதிய வாழ்வை வாழ ஆயத்தம் செய்து கொண்டிருந்து. ஸ்பார்ட்டா தன்னுடைய கூட்டமைப்பைத் திருத்தியமைத்துக் கொண்டிருந்தது.[1] ஏதென்ஸ் தன்னுடைய நிதிநிலையைப் புதுபித்துக் கொண்டிருந்தது. பெலப்போனீசிய போரின் மூன்றும் ஆண்டிலே ஏற்படுத்திய சொத்து வரியை மறுபடியும் புதுப்பித்தது. ஒரு புதிய சொத்து வரியையும் கொண்டு வந்தார்கள். அதன்படி ஒவ்வொரு குடிமகனும் தன்னுடைய அசலில் ஐந்தில் ஒரு பாகத்துக்கு வரி செலுத்த வேண்டும். (சுமார் ஒரு சதவீதம்) இவ் வரி அசலின் ஒரு பாகத்துக்கு மட்டும் போடப்பட்ட வரி. இந்த வரி மூலமாக அரசாங்கத்துக்கு ஆண்டு

[1] ஒன்பது பிரிவுகள்: 1, 2. ஆர்காடியா 3. எலிஸ் 4. அச்சேயா 5. கொரிந்தியாவும், மெகாராவும் 6. சிசியோன், பிலியஸ், ஆர்கோலிசின் ஆக்டே 7. அகார்னேனியா 8. போஸிஸ், லோக்ரிஸ் 9. ஒலிந்தசும் மற்ற தெரேசியன் பட்டினங்களும்.

தோறும் அறுபது தாலந்து கிடைத்தது. வரிவசூல் சம்பந்தமாக நாட்டை இருபது பிரிவுகளாகப் பிரித்தார்கள். ஒவ்வொரு பிரிவிலும் திரண்ட செல்வமுடையவன், அப்பிரிவினர் அரசாங்கத்துக்குச் செலுத்த வேண்டிய வரியை மொத்தமாக அங்குள்ள மற்றவர்களுக்காகக் கொடுத்துவிட வேண்டும். இதனால் வரி வசூலில் முன்பு அரசாங்கத் திற்கிருந்த தொல்லை நீங்கிவிட்டது. இப்போது ஒழுங்காகச் சுலப மான முறையில் அரசாங்கம் இந்த வரியினால் வரும் வருமானத்தை அடைந்து வந்தது. முன்பு ஒவ்வொரு குடிமகனையும் சந்தித்து அர சாங்க அலுவலர் வரி வசூலித்தார்கள். இப்போது அது கூட்டுப் பொறுப்புக்கு விடப்பட்டது. இப்போது குறிப்பிட்ட வரி வசூலிக்கப் பட்டது. சிறிய பட்டினத்தில் ஏற்படுத்தப்பட்ட இக் கூட்டுப்பொறுப்பு முறை பின்னால் வந்த பேரரசுக்கு வழி காட்டியாக இருந்தது.

### புனித லோச் சோஸ்; எப்பாமினாண்டஸ்.

தீப்ஸ் நாட்டின் அரசாங்கம் தன் கவனத்தை அந்நாட்டின் படையை வலுப்படுத்துவதில் செலுத்தியது. தடுக்க முடியாத லாசி டோமோனிய படையெடுப்பிலிருந்து நாட்டைப் பாதுகாப்பதற்காக தீபன்கள், தங்கள் நாட்டின் நில எல்லையின் ஒரு பகுதியில் ஓர் அகழியைத் தோண்டி அதைச் சுற்றி மதிலொன்றை எழுப்பினர். இந்த முன்னேற்பாட்டைப் புதிதாக உண்டாக்கப்பட்ட 300 ஹாப் லைட்டுகளைக் கொண்ட படையோடு ஒப்பிடும்போது, இந்தச் சிறு படை அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. இம் முந்நூறு வீரர்களும் உயர்குடிப் பிறப்பினர். அவர்கள் நீண்ட நாட் படைப் பயிற்சி பெற்றவர்கள். மல்யுத்தத்திலும் தேர்ச்சிப் பெற்றவர்கள். பயிற்சிக் காலத்தில் தங்களுடைய அபார சக்தியை மற்றவர்கள் கண்டு வியப்படையும்படி செய்தவர்கள். ஒவ்வொருவனுக்கும் ஓர் நெருங்கிய நண்பனுண்டு. அவன் இவனோடு போர்க் களத்தில் சேர்ந்து போரிட்டு, சேர்ந்து மடியத் தயாராக இருப்பான். போர்க் களத்தில் நண்பர்கள் இருவரும் முன்னணியில் ஒருவருக்குப் பின்னால் ஒருவர் நின்று போரிடுவார்கள். படையில் மேலும் பல மாறுதல்களைத் தீப்ஸ்கள் செய்திருப்பார்களென உறுதியாக நம்பலாம். நற்காலத்தின் பயனாக, அவர்களுக்கேற்பட்ட நல்ல வாய்ப்பில் வெற்றியைத் தேடித் தரும் ஓர் ஒப்பற்ற தலைவன் கிடைத்தான். அவன் அருந்திறலுடை யவன். இயற்கை அவனிடம் கிரேக்கப் பண்பாட்டில் சிறப்பானவை களை மட்டும் பதித்து வைத்துவிட்டு, அதன் குறைகளை அவனிட மிருந்து நீக்கியிருந்தது. அவன்தான் எப்பிமினாண்டஸ்; பெலோப் பிடாஸின் நண்பன்; அவன் கள்ளங் கபடமற்ற கண்ணியவான். குடிமகனுக்குரிய கடமைகளைச் செய்துகொண்டு உலகத்தவர் அவனைப் பற்றித் தெரிந்து கொள்ள முடியாத சாதாரண வாழ்வை வாழ்ந்து விட்டுப் போயிருக்க வேண்டியவனாகிய அவனை, சூழ்நிலை உலகத்தில்

சிறந்தவர்களிலொருவனுக மதிக்கும்படி செய்து விட்டது. அப்பொழுது எழுந்த புரட்சி அவனது நாட்டுப் பற்றைக் கிளறி விட்டு, அவனைப் பொதுப் பணிக்கு இழுத்து வந்தது. அங்கே அவன், கிடைத்தற்கரிய தன் திறமையைப் படிப்படியாக வெளிப்படுத்தி, எட்டாண்டுகளில் அந்நகரின் மிகச் செல்வாக்குள்ள மனிதனுகி விட்டான். உடற்பயிற்சிக்கு நேரத்தைச் செலவிட்டதைப்போல, சங்கீதம் பயில்வதிலும் காலம் கழித்தான். யாழ் வசிப்பதிலும், தீப்ஸ் நாட்டினரின் குழலை வாசிப்பதிலும் அவனது நாட்டில் அவனைப்போல் யாருமே இருந்ததில்லை. தத்துவக் கலையிலும் அவனுக்கு மிகுந்த ஈடுபாடுண்டு. அவனுக்கு டாரெண்டைன் (Tarentine) நண்பனெருவனிருந்தான். அதிகம் கற்று, சிறிதளவே பேசுபவர்களில் அவனைப்போல் யாரையும் ஒரு காலத்திலும் தாம் கண்டதில்லை என்று அந்நண்பன் கூறுவான். தீப்ஸ் நாட்டு அரசியல் அறிஞனுகிய அவன், தான் விரும்பியபோது பேசுவான். அல்லது பேசத் தேவைப்பட்டபோது பேசுவான். அவன் சொற்கள் நன்கு மனத்தில் பதியுமாறு இருந்தன. அவனுக்கு எந்தவிதமான ஆசையும் கிடையாது. அவன் பணத்தைப்பற்றிக் கவலைபட்டதில்லை. அவன் இறக்கும்போது ஓர் ஏழையாக இறந்தான். கிரேக்க நாட்டில் பல குற்றங்களைப் புரிந்த கட்சி யுணர்ச்சி, அவனிடம் இருந்ததில்லை. அரசியல் பகையில் அவனுக்குப் பங்கில்லை. பழிக்குப் பழி வாங்கும் பண்பிலும் அவனுக்குப் பாகமில்லை. அவன் பெலோப்பிடாஸ் உண்டாக்கிய சதித் திட்டத்தில் சேரவிருப்ப மில்லாதிருந்தா னென்பதை நாம் ஏற்கெனவே அறிந்திருக்கிறேம்.

## 4. நாக்ஸாஸ் போரும் கள்ளியாஸ் சமாதானமும்

கி.மு. 378-1.

பின்வரும் எட்டாண்டுகளில், தீப்ஸ் தன்னுடைய தற்காப்புக்காக ஸ்பார்ட்டாவுடன் வெற்றிகரமாகப் போரிட்டதென்பதும், ஸ்பார்ட்டாவின் மதிப்புக் குறைந்து வந்ததென்பதும், தீப்ஸ் தன்னுடைய ஆதிக்கத்தை போயிஷியாவில் பரவச் செய்ததென்பதும், குறிப்பிடத்தக்கச் சம்பவங்களாகும். அதே சமயத்தில் ஏதென்ஸ், லாசிடாமோனிய நாடுகளின்மேல் கடற்போர் நடத்தி வெற்றியடைந்தது. இப்போரினலேற்பட்ட பண நெருக்கடியும், தீப்ஸ் நாட்டின் பொருமை வளர்ச்சியும் ஒன்று சேர்ந்து, ஸ்பார்ட்டாவுடன் சமாதானம் செய்து கொள்ளத் தூண்டின.

போயிஷியாவில் எஜிஸிலாஸின் படையெடுப்பு, கி.மு. 378-377.
போயிப்பிடாஸின் தோல்வியும் மரணமும், கி.மு. 377.

**கிளியோம்பொரோட்டஸ் சித்தேரோனுக்குப் படையெடுத்துச் செல்லல், கி.மு. 373.**

அடுத்தடுத்த கோடையில் எஜிஸிலாஸே நேரில் போயிஷியாவில் நடத்திய படையெடுப்புக்களால் எவ்வித பயனும் ஏற்படவில்லை. தீப்ஸ் நகரின் தற்காப்பரணைக் கைப்பற்றி நற்பேரடைந்த போயிபிடாஸ் என்பவனைக் கொன்று விட்டதற்காகத் தீபர்கள் மன நிறைவு எய்தினர். அவனுக்குப் பின்னால் படையெடுத்து வந்த கிளியோம்பொரோட்டஸ் மன்னன் எதையும் சாதித்துவிடவில்லை. ஏனென்றால் சித்தேரோன் கணவாய்கள் பகைவர்கள் வசமிருந்தன. அவன் அவைகளைக் கடந்து போயிஷியாவிற்கு வரமுடியவில்லை. இதன் பிறகு தீப்ஸ் நாட்டுப் படைக்கு, போயிஷிய பட்டினங்களைத் தாக்கி அவைகளிலிருந்த ஸ்ப்பார்ட்டன் காவற்படைகளை விரட்டுவதற்குப் போதுமான காலம் கிடைத்தது. நான்காண்டுகள் முடிவதற்குள் போயிஷிய கூட்டமைப்புக் கொள்கை போயிஷிய நாடு முழுவதும் பரவி, உள்நாட்டு அரசியல் முறையை அழித்தது. அந்நிய கவர்னர்கள் விரட்டியடிக்கப்பட்டனர். மேற்குக் கோடி மூலையில் ஆர்க்கோமேனஸ், சாரோனே என்ற இரு இடங்களில் மட்டும் ஸ்பார்ட்டன் ஆதிக்கம் நிலைத்திருந்தது. போயிஷியன் கூட்டமைப்பு மறுமலர்ச்சி அடைந்து கொண்டிருந்த இந்தச் சந்தர்ப்பத்திலே பெலோப்படாஸும் அவனுடைய புனித குழுவும் ஓர் சிறப்பான செயலைச்செய்ய நேர்ந்தது. தேஜிராவில், ஆர்கோமேனசிலிருந்து லாக்ரீசுக்கு செல்லும் சாலையில் ஓர் குறுகிற கணவாயில் தீப்ஸ் நாட்டுப் படைவீரர்கள் இருமுறை லாசிடாமோனியப் படையைப் பின்வாங்கி ஓடும்படி செய்ததோடு, இரு ஸ்ப்பார்ட்டன் படைத் தலைவர்களைக் கொன்றுவிட்டார்கள். ஸ்ப்பார்ட்டாவுக்கு ஏற்பட்ட தோல்விகளிலே, இந்தப்போர்க்களத்தில் ஏற்பட்ட நஷ்டத்தைவிட, படையின் ஒழுக்க முறையின் விளைவு குறிப்பிடத்தக்கது. நானூற்றுவர் கழகத்தின் ஆட்சியிலே இழந்து போன ஒரோபஸ் என்ற பட்டினத்தை ஏதென்ஸ் ஒரு வேளை இப்போது வென்றிருக்கக் கூடும்.

**நாக்ஸாஸ் யுத்தம், செப்டெம்பர் கி.மு. 376. டிலாசில் கலகக் குறி இயக்கம்.**

தரையில் போர் நடந்து கொண்டிருந்த அதே சமயத்தில் கடலிலும் போர் நடந்தது. போயிஷியா படையெடுப்பில் தோல்வியைக் கண்ட ஸ்பார்ட்டா, கடல் மூலமாக போயிஷியாவிற்குத் தீங்கு விளைவிக்க விரும்பியது. ஆகையால் ஸ்பார்ட்டா ஒரு கடற்படையைத் தயார் செய்து, யூக்சைன் (Euxine) பிரதேசத்திலிருந்து அட்டிகாவிற்கு வரும் தானியக் கப்பல்களைக் கைப்பற்றும்படி அனுப்பியது. தானியக் கப்பல்கள் யுபோயே (Euboe) யாவின் தென்கோடியிலிருந்த ஜெரேஸ்ட்டஸ் (Geraestus) என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்தன.

அப்பொழுது 60 சிறிய கப்பல்களைக் கொண்ட ஸ்பார்ட்டன் போர்க் கப்பல்கள், ஸ்பார்ட்டன் பொல்லிஸ் (Pollis) என்பவனுடைய தலைமையில், அவைகள், சூனியம் முனையைச் சுற்றிக்கொண்டு (Cape of Sunium) வருவதைத் தடுத்தது. ஏதென்ஸில் பஞ்சம் ஏற்படக்கூடிய அபாய நிலை ஏற்பட்டது. ஏதென்ஸ் கடலாதிக்கத்தை மறுபடியும் நிலைநாட்ட மூன்றடுக்கு வரிசைத் துடுப்புகளைக் கொண்ட 80 கப்பல்களை சாபிரியாஸ் (Chabrias) தலைமையில் அனுப்பியது. அக்கப்பல்கள் பிரேயஸ் துறைமுகத்திலிருந்து கிளம்பின. சாபிரியாஸ் நாக்ஸாஸுக்குப் போய்ச் சேர்ந்தான். நாக்ஸாஸ் அப்போது அத்தீனியக் கூட்டமைப்பிலிருந்து விலகிப் போவதற்கு ஆயத்தமாக இருந்தது. சாபிரியாஸ் அதை முற்றுகையிட்டான். பொல்லிஸ் அதை மீட்பதற்காக, விரைந்து சென்றான். பரோசுக்கும் நாக்ஸாஸுக்குமிடையிலிருந்த கடலிடுக்கில் போர் நடந்தது. அத்தீனியர்கள் பூரண வெற்றிப் பெற்றார்கள். பொல்லிஸ் பதினொரு கப்பல்களுடன் தப்பியோடினான். பழுதடைந்த கப்பல்களிலுள்ளவர்களும், கடலில் மிதந்து கொண்டிருப்பவர்களுமான தன்னுடைய மாலுமிகளைக் காப்பாற்ற, சாபிரியாஸ் போரை நிறுத்தியிராவிடில், அப்பதினொரு கப்பல்களும் தப்பிச் சென்றிருக்க முடியாது. அத்தீனிய மக்கள் தங்களுடைய கடற்படைத் தலைவர்களுக்கு ஆர்ஜினூசே (Arginusae) போருக்குப் பின் கற்றுக்கொடுத்த பாடத்தை, அவர்கள் இன்னும் மறக்கவில்லை. நாக்ஸாஸ் போர் சினிடஸ் போரைப்போல் சிறப்பான பலன்களைக் கொண்டு வராவிடினும், அது அத்தீனியர்களுக்கு மன மகிழ்ச்சியை அளித்தது. சினிடஸ் போர்க் களத்தில் அத்தீனியப் படைத் தலைவன் வெற்றியைக் கொண்டு வந்த போதிலும், அவன் பாரசீகர்களையும், பாரசீக கப்பல்களையும் ஆதாரமாகக் கொண்டே வெற்றியடைந்தான். ஆனால் இப்போது படைத் தலைவன் அத்தீனியன் போர்க் கப்பல்கள் அத்தீனிய மாலுமிகளைக் கொண்டவை. எனவே இவ்வெற்றியின் காரணமாக அத்தீனியக் கூட்டமைப்பு உடனடியாக விரிவடைந்தது. வெற்றியடைந்த கடற்படை ஏஜியானைச் சுற்றி வந்து, பதினேழு நகரங்களைக் கூட்டமைப்பில் சேர்த்து கொண்டதுமல்லாமல் பெருந்தொகையை வசூலித்துக் கொண்டும் வந்தது. ஏதென்ஸ் மீண்டும் தன் ஆதிக்கத்தை டிலாசில் வலியுறுத்த வேண்டியிருந்தது. அந்தத் தீவிலுள்ளவர்கள், அத்தீனியர்களைக் கொண்ட குழுவினரால் பாழாக்கப்பட்ட தங்கள் கோவிலின் நிர்வாகத்தைத் திரும்பப் பெற லாசிடாமோனியர்களின் உதவியை நாடினார்கள். இச்சம்பவத்தைப்பற்றிக் கூறும் ஒரு கல் பதனமாகப் பாதுகாக்கப்பட்டிருக்கிறது. 'அத்தீனிய கோயில் நிர்வாகிகளை, கோயிலுக்கு வெளியே நிறுத்தி அடித்ததற்காக,' கலகத்தில் ஈடுபட்டவர் எழுவருக்கு விதித்த அபராதத் தண்டனை, நாடு கடத்தல் தண்டனை முதலியன, அக்கல் சொல்லும் கதையாகும்.

கி.மு. 376. திமோத்தியுஸ் படையெடுப்பு.

அடுத்த ஆண்டு கோனேனுடைய மகனாகிய திமோத்தியுஸ் தலைமையில் ஒரு கடற்படை பெலப்போனீசியாவைச் சுற்றி பிரயாணம் செய்து வர அனுப்பப்பட்டது. ஏதென்ஸ் மறுபடியும் கடலாதிக்க நாடாகிவிட்டதென்பதைக் காட்டுவதற்காகவே அப்படை அனுப்பப் பட்டது. ஸ்பார்ட்டாவை அச்சுறுத்துவதும், அத்தீனிய செல்வாக்கை கிரீஸின் மேற்கு பாகத்தில் பரவச் செய்வதும், அதன் நோக்கமாகும். மேலும், ஸ்பார்ட்டா, கிரியூஸிஸ் (Creusis) துறைமுகத்தின் மூலமாக போயிஷியாவிற்குப் படையை அனுப்ப நேரிட்டால், அப்போது அதன் கவனத்தைக் கொரிந்தியன் விரிகுடாவில் செலுத்த நடவடிக்கை எடுப்பதும் ஏதென்ஸின் நோக்கங்களில் ஒன்றாகும். திமோத்தியுஸின் அறிவுத் திறன் கொள்கையின் காரணமாக கார்சிரா, செப்பல்லெனியா (Corcyra & Cephallenia) தீவுகளும், மோலோசியின் மன்னன், மற்றுஞ் சில அகார்னனியர்களின் நகரங்கள் அத்தீனியக் கூட்டமைப்பில் சேர்ந்து விட்டன. அப்படை பகைவர்களுடைய கடற்படையோடு போரிட்டுச் சில வெற்றியுமடைந்தன. இவ் வெற்றிகரமான படையெடுப்பிலும் சில குறைபாடுகளிருந்தன. அத்தீனியர்களின் சக்திக்கு விஞ்சிய அளவில் யுத்தச் செலவு அதிகரித்தது. ஏதென்ஸ், திமோத்தியுஸுக்குப் போதுமான பண உதவி செய்யவில்லை. அதனால் அவன், தன் மாலுமிகளுக்குச் சரிவர பணம் கொடுக்க முடியவில்லை. பண நெருக்கடியான இந்தச் சந்தர்ப்பத்தில் ஒவ்வொரு கப்பல் தலைவனும், அவர்களிடமுள்ள மாலுமிகளுக்கு முன் பணம் தரவேண்டுமென்று கட்டளை பிறப்பித்திருந்தான். கடற்படைக்குப் பண உதவியளிக்க வேண்டுமென்று ஏதென்ஸ், தீப்ஸ் நாட்டைக் கேட்டுக் கொண்டது. ஏனெனில் அவ்விதமான படையெடுப்பு நடைபெற தீப்ஸ் மக்களும் உடன்பட்டிருந்தனர். ஆனால் தீப்ஸ் இவ்வேண்டுகோளை மறுத்தது. எனவே, தீப்ஸ் மக்களின் வெற்றியின் காரணமாக வளர்ந்துகொண்டுவரும் பொறாமையும், பண நெருக்கடியும் சேர்ந்து ஏதென்ஸை ஸ்பார்ட்டாவுடன் சமாதானம் செய்துகொள்ளத் தூண்டின. உண்மையில் அதன் இக் கொள்கை அறிவுத் திறனுள்ளதொன்றாகும். சமாதானத்திற்கான சமரச பேச்சு வார்த்தைகள் ஆரம்பித்து வெற்றிகரமாக முடிந்தன. அவர்கள் ஏற்படுத்திய சமாதானம் கையெழுத்தான அதே சமயத்தில் முறிந்தும் விட்டது. ஏதென்ஸ் அரசாங்கம் திமோத்தியுஸை கார்சிராவிலிருந்து திரும்பிவரும்படி கட்டளையிட்டது. அவன் தன்னுடைய விருப்பத்திற்கு மாறாக அக்கட்டளைக்குக் கீழ்ப்படிந்தான். வரும் வழியில் அவன் சாசிந்தஸ் என்ற தீவில் தங்க நேரிட்டது. அங்கு அவன் தன்னுடன் கொண்டு வந்திருந்த சாசிந்தஸ் அகதிகளை அங்கே இறங்கும்படி செய்து அவர்களுடைய பாதுகாப்பிற்காக ஒரு காவல் நிலையத்தைப் பலப்படுத்திக் கொண்டான். சாசிந்தஸ் மக்கள்

ஸ்ப்பார்ட்டாவுக்கு முறையீடு செய்தார்கள். ஸ்ப்பார்ட்டா ஏதென்ஸை அச் செயலுக்கான தக்க காரணங் கேட்டது ஏதென்ஸ் காரணம் கூற மறுக்கவே ஒப்பந்தம் முறிந்துவிட்டது. இருநாடுகளுக்கிடையே போர் தொடர்ந்து நடந்தது.

**கார்சிராமீது லாசிடாமோனிய தாக்குதல், கி.மு. 374-373.**

மேற்கில் தன்னுடைய அதிகாரத்தைத் திரும்ப நிலைநாட்டுவதும், திமோத்தியுஸ் செய்து வைத்த வேலையை அழித்துவிடுவதும், ஸ்பார்ட்டாவின் முதன்மையான நோக்கமாகும். திமோத்தியுஸ் அடைந்த வெற்றிகளில் சிறப்பானது கார்சிராவை மறுபடியும் ஏதென்ஸின் நேச நாடாக்கியதேயாம். மறுபடியும் கார்சிரா 'பெலப்போனிசியப்' போரின் முதல் அரங்கமாயிற்று. கொரிந்தியா உள்பட தன்னுடைய கூட்டமைப்பு நாடுகளின் உதவியோடு ஆயிரத்து ஐந்நூறு (1500) கூலிப்படை ஹாப்லைட்களுடனும், அறுபது (60) போர்க்கப்பல்களுடனும் லாசிடோமோனியர்கள் கார்சிராவைத் தாக்கினார்மள். சிசிலி, கார்ஸிராயர்க்கு உதவுமானால், சைரகூசி லுள்ள டயோனிஸஸ் மன்னன் தமக்கு உதவி புரியவேண்டுமெனக் கூற, ஓர் தூதுவனை அங்கு அனுப்பினார்கள். படைத் தலைவனாகிய மனசிப்பஸ் கார்சிராவின் படைகளைத் துறைமுகத்திற்குள் தள்ளித் துறைமுகத்தை முற்றுகையிட்டான். அவன் அப் பட்டினத்தைத் தரை மூலமாகவும் முற்றுகையிட்டான். ஆகையால், அப்பட்டினம் உணவுப் பொருள்களை வெளியிலிருந்து கொண்டுவர வழியில்லாமல் தவித்தது. அத்தீவு செல்வம் நிறைந்தது. போர் வீரர்கள் கொள்ளை யடிப்பதற்கு ஏற்றவிடம். கார்சிராவின் ஒயின் என்ற சாராயம் உயர்தரமானது. போர்வீரர்கள் மட்டரகமான சாராயத்தைக் குடிப்ப தில்லை. கார்சிரா நாட்டு மக்கள் படை உதவிக்காக ஏதென்ஸுக்குத் தூதுவர்களை அனுப்பினார்கள். நகர வாசிகள் பஞ்சத்தினால் அவதி யுற்றார்கள். பஞ்சத்தின் கொடுமையினால் பல அடிமைகள் நகரத் துக்கு வெளியே விரட்டப்பட்டார்கள். குடிமக்களில் சிலர் அனாதை களானார்கள். பட்டினத்தைவிட்டு வெளியேறியோடத் தலைப்பட்ட வர்களை லாசிடோமோனியப் படைத்தலைவன் சவுக்கினால் அடித்து, நகரத்துக்குத் திரும்பிப் போகும்படி செய்தான். பட்டினம் தன் கைவசத்தில் இருக்கிறது என்ற அகந்தை அவனுடைய மதியைக் கெடுத்துவிட்டது. கார்சிரா நாட்டு மக்கள் பகைவர்களைப் பட்டினத் தின் கோபுரத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்தார்கள். பகைவன் விழிப்பில்லாதிருப்பதை உணர்ந்தார்கள். உடனே திடீர்த் தாக்குதல் மேற்கொண்டு பகைவனை முற்றிலும் முறியடித்து வெற்றி பெற்றார்கள். கூலிக்காகப் படையில் சேர்ந்த போர் வீரர்கள் தங்களுக்குக் கூலி ஒழுங்காகக் கிடைக்காத காரணத்தினால், கார்சிரா நகரவாசிகளை எதிர்த்துப் போரிட்டு உயிர் விட விரும்பவில்லை.

ஆகவே, அவர்கள் பின் வாங்கி ஓடினார்கள். மனசிப்பஸ் என்ற ஸ்ப்பார்ட்டன் படைத் தலைவன் கொலையுண்டான். பட்டினம் முற்றுகையிலிருந்து மீண்டது. ஏதென்ஸிலிருந்து எதிர்பார்த்த உதவி வரும் வரையில் அவர்கள் கவனமாக இருந்தார்கள். மந்தமாக வந்து கொண்டிருந்த உதவி இவர்களை அடையுமுன், லாசிடோமோனியர்கள் அத்தீவைக் காலி செய்துகொண்டு போய் விட்டார்கள். கடைசியில் அத்தீனியர்களின் கடற்படை கார்சிராவுக்குப்போய்ச் சேர்ந்தது.

## திமோத்தியுஸின் தொல்லைகளும் தாமதங்களும்

ஏதென்ஸ் எந்தக்கெட்ட எண்ணத்துடனும் கார்சிராவுக்குத் தாமதித்து உதவி அனுப்பவில்லை. தவிர்க்க முடியாத பல தொல்லைகள் தாமதத்திற்குக் காரணமாக இருந்தன. அத் தாமதத்திற்குக் காரணம் கூறும் கதையொன்றுண்டு. கார்சிராவிலிருந்து செய்தி வந்தவுடன் அறுபது போர்க்கப்பல்களையும், 'கவண்கல்' வீரர்களையும் அனுப்புவதென ஏதென்ஸ் சபை முடிவு செய்தது. கடற்படைக்குத் தலைமை தாங்க திமோத்தியுஸை நியமித்தது. அத்தீனிய அரசாங்கத்தின் நிர்வாக ஊழலின் காரணமாக அவன் உடனே புறப்படமுடியவில்லை. அவனைப் படைத் தலைவனாக நியமித்தார்களே தவிர, படைக்கு வேண்டிய பண வசதி, பொருள் வசதி முதலிவைகளைப் பற்றிய எண்ணமே அவர்களுக்குத் தோன்றவில்லை. திமோத்தியுஸ் போர் வீரர்களையும் பணத்தையும் பெற ஏஜியானுக்கு வடக்கே சென்றான். தெஸாலி, மாசிடோனியா, தெரேஸ் முதலிய பட்டினங்களுக்கும் போனான். அவன் கப்பல் படையின் பெரும்பகுதி அவன் வரவுக்காக, காலவுரியா (Calauria) தீவில் காத்துக்கிடந்தன. கார்சிரா, நெருக்கடியினால் தவித்தது. அங்கிருந்து உதவி கோரும் செய்தியைச் சுமந்து தூதுவர்கள் வந்தவண்ணமிருந்தனர். உடனே கார்சிராவுக்குப் போகாமல் காலம் கடத்திக்கொண்டிருக்கின்ற படைத்தலைவன் திமோத்தியுஸ் கோபத்திற்கு ஆளானான். அவன் படைத் தலைமையை இழந்தான். அவனுக்குப் பதிலாத எப்பிகிராட்டிஸ் படைத்தலைவனான். அவனுடன் சேர்ந்து கூட்டாகத் தலைமைத் தாங்க சாப்ரியாஸ், கள்ளிஸ்ட்ராட்டிஸ் முதலியவர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் உடனே கார்சிராவை நோக்கிப் பயணம் செய்யவேண்டியதாயிற்று.

## தெரேசில் எப்பிகிராட்டிஸ்

அக்காலத்தில் கள்ளிஸ்டிராட்டிஸ் நாவன்மைப் படைத்த ஒரு சாதுரியப் பேச்சாளன். சாபீரியாஸ் பல போர்க்களங்களைக் கண்டவன்; தேர்ச்சிப்பெற்ற சிறந்த போர் வீரன். சைப்பீரியோட்டே மன்னனிடத்திலும் எகிப்திய மன்னனிடத்திலும் போர்ப்பணி செய்

தான். இவன் நாக்சாஸின் வெற்றி வீரன் என்பதை நாம் ஏற் கெனவே பார்த்தோம். எப்பிகிராட்டிஸ் தன் வீரத்தினுலும், கொரிந்தியப் போரில் நடந்த வெற்றியினுலும் முன்னுக்கு வந்தவன். இவன் பதினைந்து ஆண்டுக் காலமாக, கவண்கல் வீரர்களின் படைக்குத் தலைவனுயிருந்து, தீப்ஸ் நாட்டு இளவரசர்களின் சேனையில் பணி புரிந்தவன். கோட்டிஸ் மன்னனின் மகளை மணம் புரிந்துகொண்டவன். இவன் அந்நிய இனத்தின் பெண்ணை மணம் செய்துகொண்டதற்காக விகட கவிகள் இவனைப்பற்றி ஓர் எழுத் தோவியம் கொடுத்திருக்கிருர்கள். பரட்டைத்தலை தெரேசியக் கும்பலுக்குச் சந்தை வெளியில் விருந்தொன்று வைத்தனர். கூழால் நிரப்பப்பட்ட பெரிய வெண்கலக் கொப்பரைகள் அங்கிருக்கின்றன. அரசன் முன் நின்று பொன் வட்டில்களில் தன் கையாலேயே அதைப் பரிமாறினுன். பிறகு ஒயினும் தண்ணீரும் சரியான விகிதத்தில் கலக்கப்படுகின்றன. முதலில் அரசன் கோப்பைகளில் கலந்தவற்றை ஒவ்வொன்ருக ருசிப்பார்க்கின்ருன். அவன் போதையடையும் வரையில் குடித்துப் பார்க்கிருன். 'வெண்ணெய் சாப்பிடும்' அன்னி யர்கள் மத்தியில் வாழ்ந்த வாழ்க்கை எப்பிகிரேட்டிஸுக்கு மன நிறைவை அளிக்கவில்லை. எனவே, அவன் பாரசீக மன்னனின் பணியாளாக எகிப்தில் சேவை புரிந்துவந்தான். பிறகு ஏதென் ஸுக்குத் திரும்பிவந்து, கார்சிராவுக்குப் படையெடுத்துச் சென்ருன். அவன் ஏதென்ஸுக்குத் திரும்பிவந்த பிறகு, செய்த முதல் பணி இதுவேயாகும். அவன் அப்பணியைத் திறமையோடு நன்கு செய் தான். அவன் அப்பணியைச் செய்வதற்குப் பூரண அதிகாரம் அளிக் கப்பட்டது. போர்க்கப்பல்களை உடையோரை வேண்டிய உதவி செய்யும்படி கட்டாயப்படுத்தினுன். அட்டிக் கடற்கரையைக் காவல் புரிந்துவந்த படகோட்டிகளையும் சேர்த்துக்கொண்டான். சாலா மினியா, பாரலஸ் என்ற புனித கப்பல்களையும் கடற்படைக்காக எடுத்துக்கொண்டான். வழக்கத்திற்கு மாருன இம் முயற்சியின் காரணமாக இப்போது அவன் எழுபது கப்பல்களுக்குத் தலைவனுனன். அவன் கடற்படை புறப்படும் தருவாயில், திமோதியுஸ் திரும்பிவந்து விட்டான். அவன் படையெடுப்பதற்கான பணத்தோடும். ஆட்க ளோடும் நில்லாது இரண்டாவது அத்தீனியக் கூட்டமைப்பில் சேர விருந்த நாடுகளின் பெயர்களையும் கொண்டுவந்தான். அவன் படையெடுப்புக்குத் தேவையானவைகளைச் சேகரிக்கச் சென்ற தாலேயே தாமதம் ஏற்பட்டது. 'அத்தாமதத்தை மன்னிக்கக் கூடாதா?' என்று சிந்திப்பதனுல் பயனென்றுமில்லை. விதி அவ னெதிரில் நின்றது. அவன் கொண்டுவந்த பணம் படையெடுப்புச் செலவிற்குப் போதுமானதாக இருக்கவில்லை என்ற காரணத்தினுல் அவனைச் சினந்துகொண்டனர். அடுத்தபடியாக, மோசடி செய்து விட்டானென்று அவன்மீது ஒரு பெரிய குற்றத்தைச் சுமத்தினுர்கள்.

எப்பிகிராட்டிஸ், கள்ளிஸ்ட்டிராட்டிஸ் என்ற இரு அரசியல் விரோதிகள் அவன் மீது ஓர் குற்றச்சாட்டைக் கொண்டு வந்தார்கள். அவர்கள் உடனடியாக மேற்கு நோக்கிப் பயணம் செய்யவேண்டி யிருந்ததால் வழக்கு விசாரணையை இலை உதிர்காலம் வரையில் ஒத்தி வைத்துவிட்டனர்.

### சைரக்கூசிலிருந்து வந்த உதவிப்படையைக் கைப்பற்றியது, கி.மு 372.

கார்சிராவின் மீட்புச் செய்தியை, எப்பிகிராட்டிஸ் அங்கு வருவதற்கு முன்பே வழியில் கேள்விப்பட்டான். எனவே, அட்டிகாக் கடற்கரையைக் காவல் புரியும் கப்பல்களை உடனே அனுப்பிவிட்டான். ஆனால் அவன் அங்கு மேலும் செய்யவேண்டிய பணியிருந்தது. லாசிடாமோனியர்கள் சைரக்கூசைப் படையுதவி கேட்டது வீண் போகவில்லை. பத்துக் கப்பல்களை சைரக்கூசுக்கு அனுப்பிவைத்தது. அவைகள் கிரேக்க நாட்டின் எல்லையை அணுகிக்கொண்டிருந்தன. நீண்ட தூர பிரயாணத்தின் காரணமாக மாலுமிகள் கார்சிராத் தீவின் வட பாகத்தில் ஓய்வெடுத்துக் கொண்டனர். சாரணர்கள் மூலமாக அவ் வுதவிப்படையைப் பற்றிக் கேள்வியுற்ற எப்பிகிராட்டிஸ் ஒன்றைத் தவிர மற்றக் கப்பல்களைக் கைப்பற்றினான். அந்த ஒன்பது கப்பல்களும் அவனுக்கு அறுபது தாலந்துகளைக் கொடுத்தன. அப் படையைப் பாரமரிக்க அவ்வறுபது தாலந்துகளும் போதவில்லை. எப்பிகிராட்டிஸைப் பண முடை நெருக்கியது. போர் வீரர்களுக்கு ஒழுங்காகச் சம்பளமளிக்க வேண்டும், அல்லது ஸ்பார்ட்டாவுடன் சமாதானம் செய்துகொள்ளவேண்டும். இந்த இரண்டில் ஒன்றைச் செய்யும்படி ஏதென்ஸ் மக்களை இணங்கச்செய்ய, கள்ளிஸ்டிராட்டிஸ் ஏதென்ஸை நோக்கிப் பயணமானான்; இதற்கு இடையில் எப்பிகிராட்டிஸின் படை வீரர்கள் கார்சிகன் பண்ணைகளில் வேலைசெய்து உயிர் வாழ்ந்தனர்.

### திமோத்தியுஸின் வழக்கு விசாரணை, நவம்பர், கி.மு. 373.

கார்சிரா வீழ்ச்சியடைந்திருக்குமானால், திமோத்தியுஸ் கொடிய தண்டனைக்குள்ளாயிருக்கக் கூடுமென்பதில் சந்தேகமேயில்லை. கார்சிராவைப்பற்றி வந்த ஓர் நற்செய்தி ஏதென்ஸ் மக்களுக்கு மகிழ்ச்சியை அளித்தது. அவமதிக்கப்பட்ட படைத் தலைவன் திமோத்தியுஸுக்கு இந்த விளைவு நன்மை தந்தது. அவனைப் பற்றிய வழக்கு விசாரணை அவ்வாண்டின் கடைசியில் நடந்தது. திமோத்தியுஸைக் கருவூலத்தின் குற்றவாளியாக்கி, மரண தண்டனை தந்தனர். ஆனால் திமோத்தியுஸ் விடுதலையடைந்தான்; வழக்கத்திற்கு மாறான சக்திவாய்ந்த ஆதரவு அவனுக்கு இருந்தது. அவனுக்குச் சார்பாகச் சாட்சி சொல்ல, அன்னிய நாட்டு

அரசர்களில் இருவர் ஏதென்ஸுக்கே வந்துவிட்டார்கள். அவர்களில் ஒருவன் எப்பிரோட்டு மன்னன் ஆல்ஸெடாஸ்(Epirot King Alcetas); மற்றவன் தெசாலியன் பேரேயினுடைய சர்வாதிகாரி, ஜேசன் (Jason the despot of Thessalian Pherae) என்பவன். திமோத்தியுஸின் தூண்டுதலின் பேரில் இம்மன்னர்கள் அத்தீனியக் கூட்டடமைப்பில் சேர்ந்தார்கள். இவர்கள் மூலம் திமோத்தியுஸ் கவண்கல் படையைச் சேர்ந்த அறுநூறு (600) வீரர்கள், தேசாளி, ஈப்பிரஸ் வழியாக கார்சிராவுக்கு முன்னதாக அனுப்பிவைத்தான். பின்னுல் சீரும் சிறப்பும் பெறவிருக்கும் ஜேசன் அங்கு வந்தது நற்பயனை அளித்தது. மதிப்பிற்குரிய இவ் விருந்தினர்களுக்கு, திமோத்தியுஸ், பிரேயஸிலுள்ள தன் வீட்டிற்கு வரவழைத்து விருந்தளித்தான். தகுந்த முறையில் அவர்களை உபசரிக்கத் தன்னுடைய அண்டை வீட்டுக்காரனும், காசுக்கடைக்காரனுமான பாஸியேன் (Pasion) என்பவனிடம் படுக்கைகள், இரண்டு வெள்ளிக்கோப்பைகள், மற்றும்பல பொருள்களைக் கடனாக வாங்கினுன். அவன் குற்றவாளி அல்லவென்று விடுதலை பெற்றபோதிலும், பொது மக்களின் நன் மதிப்பை இழந்துவிட்டான். ஆகையால் பேரரசனுக்கு எகிப்தில் பணிபுரிய, திமோத்தியுஸ் விரைவில் ஏதென்ஸை விட்டுப் புறப்பட்டான்.

பிளாட்டியாவை தீப்ஸ் கைப்பற்றுதல்

ஸ்பார்ட்டாவுக்குக் கார்சிராவில் கிடைத்த தோல்வி மனச்சோர்வை உண்டாக்கியது. இதனோடு பூகம்பம் சேர்ந்து கொண்டது. போசிடான் என்ற கடல் தெய்வத்தின் கோபத்தினுல் பூகம்பம் ஏற்பட்டதாக நம்பினுர்கள். ஆகையால் ஸ்பார்ட்டா சமாதானத்தைத் தேடியது. முன்போல, பாரசீகத்தின் மூலமாக சமாதானம் பெற ஸ்பார்ட்டா விரும்பியது. ஸ்பார்ட்டன் ஆண்டால்ஸிடாஸ், பாரசீக அரசசபையை நோக்கிப் புறப்பட்டான். அவன் அதை அவ்வளவு தூரம் தேடிப் போகத் தேவையில்லை. யுத்தத்தின் பளு ஏதென்ஸுக்கு[மன வேதனை யளித்தது. ஏதென்ஸுக்கு, ஸ்பார்ட்டா விடம் இருந்த மனக் கசப்பை விட, தீப்ஸ் மேலுள்ள பொருமையைச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஆகையால் ஏதென்ஸ், ஸ்பார்ட்டாவுடன் சமாதானம் செய்து கொண்டே தீரவேண்டு மெனத் தீர்மானித்தது. நாவன்மையும் செல்வாக்குமுள்ள கள்ளிஸ்டிராட்டிஸின் கொள்கையும் அதற்கு ஒத்து வந்தது. சமீபத்தில் தீப்ஸ் போயிஷியாவில் செய்த ஆக்ரமிப்பு. தீப்ஸ் நாட்டிற்கும் ஏதென்ஸுக்குமுள்ள உறவை முறித்து விட்டது. போயிஷியா ஏதென்ஸின் பழைய நேச நாடு. மலை நாடாகிய பிளாட்டியாவின்மீதும் பகைவர்களாகிய தீப்ஸ் தங்கள் கையை நீட்டி விட்டார்கள். மறுபடியும் உயிர்பெற்று வந்த பிளாட்டியா, போயிசியன் கூட்டமைப்பிலுள்ள நாடுகளில்

ஒன்று. அதற்கு எப்போதும் அட்டிகாவின் மீது ஆசை. ஆகையால் ரகசியமாக அட்டிகாவுடன் இணைந்து கொள்ள திட்டமிட்டுக் கொண்டிருந்தது. அதனுடைய ரகசியத் திட்டம் தீப்ஸ் நாட்டிற்கு ஐயப்பாட்டை உண்டுபண்ணியது. ஒரு சிறிய தீப்ஸ்படை திருட்டுத்தனமாக பிளாட்டியாவுக்குள் புகுந்து அதைப் பாழ் பண்ணியது. ஒருநாள் நகர வாசிகளில் ஆண்கள் வயலுக்குத் தங்கள் அலுவல்களை கவனிக்கப் போயிருந்தார்கள். சந்தர்ப்பம் பார்த்து, தீப்ஸ் நாட்டின் சிறிய படை பிளாட்டியாவுக்குள் புகுந்து நகர வாசிகளை அங்கிருந்து விரட்டியது. பிளாட்டியா நாட்டு மக்கள் தங்கள் வீடுகளையும் நிலங்களையும் இழந்தனர். ஏதென்ஸில் அகதிகளாக வாழும் நிலை ஏற்பட்டது. ஏதென்ஸின் ஐஸோக்கிராட்டிஸ் அவர்களுக்கிரங்கி ஒரு நூலை எழுதினான். அந்நூலில் (Plataeic Discourse) தீப்ஸ் நாட்டின் கொள்கைகளை இகழ்ந்து கூறுகிறான்.

**கள்ளியாஸின் சமாதானம், .மு. 317.**

ஏதென்ஸும் அதனுடைய கூட்டமைப்பு நாடுகளும் சமாதான உடன்படிக்கைக்கான பேச்சு வார்த்தைகளை நடத்துவதில் முந்திக் கொண்டன. வசந்த காலத்தில் லாசிடோமோனியாவும் அதனுடைய நேச நாடுகளும் ஒன்றாகக் கூடிய கூட்டத்தில் மூன்று அத்தீனியர்கள் அங்கு வந்து தோன்றினர்கள். அவர்களில் முதன்மையானவன் கள்ளிஸ்ட்ராட்டிஸ்; அவனுடன் வந்தவர்களில் ஒருவன் கள்ளியஸ். அவன் எலூசியனின் முன்னணித் தொண்டன்; இந்த சமாதான உடன்படிக்கைக்காக மூன்றாண்டுகளுக்கு முன்பு காயைக் கனிவிபவனைப் போல் பாடுபட்டான். தீப்ஸ் நாடும் அரசியல் தூதர்களை அனுப்பியது. அவர்களில் எப்பாமினாண்டஸ் ஒருவன். உடன்படிக்கையின் அடிப்படைக் கருத்து அரசனின் சமாதானக் கருத்தேயாகும். ஒவ்வொரு கிரேக்க நாடும் சுதந்திர நாடாக இருக்கவேண்டுமென்பதும், ஒரு நாட்டின் சுதந்திரத்தை மற்ற நாடுகள் மதித்து நடக்கவேண்டுமென்பதும் அதன் கருத்தாகும். அத்தீனியர்களின் கூட்டமைப்பும், லாசிடோமோனிய நாடுகளின் கூட்டும் இக்கொள்கையின் காரணமாக மதிப்பிழந்தன. கூட்டமைப்பில் சேருவதற்கு எந்த நாட்டையும் கட்டாயப்படுத்தல் கூடாது. நாடுகள் ஒன்றோடொன்று கட்டுப்பாடில்லாமல் அவைகளின் விருப்பம்போல் ஒத்துழைக்கலாமேயன்றி, அவைகளை ஒப்பந்தங்கள் மூலமாகக் கட்டுப்படுத்தக் கூடாது. அல்லது கட்டுப்படும்படி செய்யவுங் கூடாது. ஏதென்ஸும் ஸ்பார்ட்டாவும் பேரரசுக் கொள்கையை விட்டுவிட்ட போதிலும், ஏதென்ஸ் கடலிலும், ஸ்பார்ட்டா தரையிலும் முதன்மையான நாடுகளாக இருக்க வேண்டியதை இருநாடுகளும் ஒப்புக் கொண்டன. ஆனல் இக் கொள்கையை ஆக்ரமிப்பினால் வற்புறுத்தக் கூடாதென்பதையும், இவர்களுடைய முதன்மைத் தன்மை, நாடுகள் எல்லா

வற்றினுடைய சுதந்திரத்துக்கும் ஒத்ததாக இருத்தல் வேண்டுமென்பதையும், இருநாடுகளும் ஏகமனதாக ஒத்துக் கொண்டன.

**போயிஷிய பிரச்சினை ; தீப்ஸ் விலக்கப்படல்.**

சுதந்திர நகரங்கள் எல்லாவற்றினுடைய உரிமை என்ற கொள்கையின்படி போயிஷியன் கூட்டமைப்பைச் செல்லாக் காசைப் போல் தள்ளிவிடுவதா வென்ற பிரச்சினை உடனடியாக எழுந்தது. ஸ்ப்பார்ட்டாவும், ஏதென்ஸூம், அதைக் கலைத்துவிட நோக்கங் கொண்டன. தீப்ஸ் நாட்டைத் தலைமையாகக் கொண்ட போயிஷியன் கூட்டமைப்பு தற்காலிகமாக ஏற்பட்டதன்று. சில குறிப்பிட்ட நோக்கங்களைப் பூர்த்தி செய்துகொள்வதற்காக ஏற்பட்டதன்று. வரலாறு, புவியியல் முதலியவைகளின் அடிப்படையிலே ஏற்பட்ட பழமையான ஓர் அரசியல் நிறுவனம். அதன் அமைப்பு, ஏதென்ஸைத் தலைமையாகக்கொண்ட அட்டிகாவைப் போலவும், ஸ்பார்ட்டாவைத் தலைமையாகக்கொண்ட லோக்னியாவைப் போலவும் உள்ளது. ஆகவே அது அழிக்கப்படுவதற்குத் தகுதியற்றது. ஆனல் அத்தீனியக் கூட்டமைப்பும், ஸ்ப்பார்ட்டாவின் நாடுகளின் கூட்டமைப்பும் வரலாறு, புவியியல், அரசியல் ஒருமைப்பாடு முதலியவைகளைக் கொண்டு ஏற்படுத்தப்பட்டதல்ல. தற்காலிகமாகச் சில குறிப்பிட்டதேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள உண்டாக்கப்பட்டவை. இங்ஙனம் பலவாருன வாதங்கள் ஏற்பட்டன. பிரமாணம் எடுத்துக் கொள்ளும் சந்தர்ப்பம் வந்தபோது, தீப்ஸ் போயிஷிய நகரங்களின் சார்பில் உடன்படிக்கையின் உறுதிப்பாட்டைச் செய்யும் உரிமை கொண்டாடியது. எப்பாமினுண்டஸ் ஸ்பார்ட்டாவுக்கும், ஏதென்ஸூக்கும் எளிதில் இணங்கி விடுபவனல்லன். போயிஷியன் கூட்டமைப்பு லாக்கோனியாவிற்கு ஒப்பாக இருக்கிறதென்றும், லாசிடாமோனிய நாடுகளின் கூட்டமைப்புடன் ஒப்பிடக் கூடாதெனவும், எப்பாமினுண்டஸ் கூறினன். 'நீ போயிஷியாவின் ஒவ்வொரு பட்டினத்தையும் சுதந்திரமாக வாழவிட மாட்டாயா?' என்று எஜிசிலாஸ் மன்னன் கண்ணியத்தோடும், கோபத்தோடும் கேட்டான். 'நீங்கள் லாக்கோனிய நகரங்கள் ஒவ்வொன்றும் சுதந்திரமாக வாழவிட மாட்டீர்களா?' என்று எப்பாமினுன்டஸ் எதிர்த்துக் கூறினன். தீப்ஸ் நாட்டின் பெயர், உடன்படிக்கையிலிருந்து நீக்கப்பட்டது.

எப்பாமினுன்டஸ் எதிர்த்துப் பேசியதில் இருவகைக் கருத்துள்ளன: ஒன்று தர்க்கம்; மற்ருென்று சுடுசொல். தர்க்க ரீதியில் பார்க்கையில் நமக்கு லோக்கானியாவின் உள்நாட்டு விவகாரத்தில் போயிஷியாவின் உள்நாட்டு விவகாரங்களில் தலையிட ஸ்பார்ட்டாவுக்குஉரிமை கிடையாது. லாக்கோனியா, போயிஷியா, அட்டிகா ஆகிய மூன்றிற்கும் தனித்தனியே அரசியல் அமைப்புகளுண்டு.

மூன்றிற்கும் ஒரே வகையான அரசியல் அமைப்பு கிடையாது. ஒவ்வொரு அரசியலமைப்பும் அவ்வந் நாட்டிற்குப் பொருத்தமான தாகும். கூட்டாட்சி முறையைக் கொண்ட போயிஷியாவின் ஐக்கியம் ஓர் தனிப்பட்ட பட்டினத்தை தலைமையாகக் கொண்ட அட்டிகாவின் ஐக்கியத்தைப் போல் இயற்கையானது. ஸ்பார்ட்டன் ஆலிகார்க் கொள்கைக்கு அடிமைப்பட்டுள்ள லாக்கோனியன் ஐக்கியத்தைப்போல் சட்டபடி அமைந்துள்ளது. சில இனங்களின் தடையற்ற விருப்பத்தை அவமதிக்காமல், லாக்கோனிய ஐக்கியத்தைப் போன்ற போயிஷியா வின் ஐக்கியத்தை அனுபவிக்கவும், அதை நிலைநிறுத்தவும் முடியாது. ஒரு நாடு மற்றொரு நாட்டுக்கு, 'நாங்கள் கொடுமைகளைச் செய்கிறோம். ஆனால் நீ தலையிடக் கூடாது; வரலாற்றில் நமது ஞாபகத்திற்கு வராத காலத்திற்கு முன் உன்னுடைய முன்னோர்கள் இதைப் போன்ற நோக்கங்களுக்கு இதைவிடக் கொடிய வன்முறைகளை கையாண்டார்கள். அவர்கள் செய்து வைத்து விட்டுச் சென்றதை நீ பின்பற்றி வருகிறாய், என்று சொல்லுவது சட்ட ரீதியல்ல. லாக் கோனியாவில் ஸ்பார்ட்டாவின் கொடுங்கோலாட்சி அதன் படை முறையிலுள்ள பலவீனத்தைக் காட்டுகிறது. எப்பாமினாண்டஸ் அளித்த விடை கிரேக்க நாடுகள் சிந்தித்துப் பார்க்க வேண்டிய அரசியல் கலையிலுள்ள ஒரு பிரச்சினையாகும். அரசியல் சூழ்ச்சித் திறனை ஆய்வு செய்வதை விடுத்து, சூழ்நிலையின் முக்கிய செய்தியை ஆராய்வோம். ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் போன்ற நகரங்களுக்குச் சமமான வல்லரசாக தீப்ஸ் நகரம் விளங்க, போயிஷியாவிலுள்ள நகரங்கள், தீப்ஸ் நகரின் தலைமையில் ஐக்கியப் பட்டு, கூட்டாட்சி முறை அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டும். அப்படிப்பட்ட ஐக்கியம் ஏற்படா வண்ணம் அதை முளையிலேயே கிள்ளிவிடுவது, ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் என்ற இருநாடுகளின் நோக்கமாக இருந்தது.

### ஏதென்ஸ், ஸ்பார்ட்டா நிலைமை

ஒப்பந்தத்தில் ஈடுபட்ட முதன்மையான இருநாடுகளைப் பொறுத்த மட்டில், 'கள்ளியாஸ் சமாதானம்' என்று அழைக்கப் படுகிற இந்தப் பேரத்தால், இரு நாடுகளின் சிறப்பான நலன்களைப் பாதித்த போருக்கு ஒரு முடிவு ஏற்பட்டது. இரு நாடுகளையும் ஓரளவு குறை கூறுவதற்கு இடமுண்டு. அவைகளில் ஸ்பார்ட்டா வின் பழைய பகை நாடாகிய ஏதென்ஸைவிட, ஸ்பார்ட்டாவைத் தான் அதிகம் குறை கூறவேண்டும். ஸ்போடிரியாஸின் படை யெடுப்பை அலட்சியமாக மதித்த அதனுடைய அறிவற்ற கொள்கை போரை விளைவித்தது. அக் கொள்கை, பகை கொள்வதைத் தவிர, வேறொன்றும் செய்யமுடியாத நிலைக்கு ஏதென்ஸைக் கொண்டுபோய் விட்டது. நாலாண்டுகளுக்குப் பிறகுதான் அவர்களுக்குப் புத்தி வந்தது. உடனே சமாதானம் செய்துகொண்டார்கள். அவர்கள்

அடைந்த இலாபத்தை அழித்துவிட்ட சாசிந்தஸ் சம்பவம் நடைபெறுவதை அனுமதிக்குமளவிற்கு அவர்கள் மடையர்களாக இருந்தார்கள். அவர்கள் தங்கள் சொந்த புத்தியைத் திரும்பப் பெறுவதற்கு மூன்றாண்டுக் காலப் போர் தேவையாக இருந்தது. இப்போர் ஏதென்ஸின் பொருளாதார நிலையை நெருக்கடிக் குள்ளாக்கிய போதிலும், அதன் இழப்பு ஈடுகட்டப்பட்டது. நாக்ஸாஸின் வெற்றி, பெலப்போனீசைச் சுற்றி வலம் வந்த செய்கை, அதன் செல்வாக்கு மேற்கு கிரீஸில் மறுமலர்ச்சியுயடைதல் முதலியவைகள் ஏதென்ஸ் அடைந்த நஷ்ட ஈடுகளாகும். இவற்றால் ஏதென்ஸ் மீண்டும் ஸ்பார்ட்டாவிற்குச் சமமான ஒரு முதல் தரமான ஹெலனிக் வல்லரசாகி விட்டதென்று எவ்வித எதிர்ப்புமின்றி முடிவு செய்யப்பட்டது. உண்மை. கள்ளியாஸ் சமாதான உடன்படிக்கையால் இவ்வுண்மை ஒப்புக் கொள்ளப்பட்டது. விழிப்புடனிருந்து அரசியல் காட்சிகளைக் காண வேண்டுமென்ற உண்மையை ஸ்போடிரியாஸின் படையெடுப்பு இதற்குக் கற்பித்தது. அரசியல் போட்டியில் தீப்ஸும், ஸ்பார்ட்டாவும் விளையாடும் விளையாட்டை ஏதென்ஸ் மறுபடியும் அமைதியாகக் கவனித்துக் கொண்டிருந்தது. ஏதென்ஸ் நகருக்கு எவ்வளவு லாபம் கிடைத்ததோ, அவ்வளவு நஷ்டம் ஸ்பார்ட்டாவுக்கு ஏற்பட்டது. நாக்ஸாஸ், தேஜிரா, கார்சிரா, என்ற இடங்களில் ஏற்பட்ட தோல்வி ஸ்பார்ட்டாவின் புகழை மங்கச் செய்தது. அரசனுடைய சமாதானத்திற்குப் பின் ஸ்பார்ட்டா கிரீஸின் மீது ஆதிக்கம் செலுத்த இரண்டாம் முறையாக முயன்றது. கள்ளியாஸ் உடன்படிக்கை அதன் தோல்வியை ஒப்புக் கொள்ளச் செய்தது. மூன்றாவது முயற்சி வெற்றியடைய வேண்டுமானால், தீப்ஸ் நாட்டை வீழ்த்திய பிறகே அது இயலுமென்பது தெளிவு.

## 5. மறுமுறை நிலைநாட்டிய குடியாட்சியில் ஏதென்ஸ்

### கிரீஸில் ஏதென்ஸின் செல்வாக்கு

பெரிக்கிளிஸ், ஏதென்ஸ் நகரம் கிரேக்க நாட்டின் பள்ளிக்கூடம் என்று கூறியபோது, கிரேக்க நாடு எவ்வாறு விளங்கவேண்டுமென்ற இலட்சியத்தை வெளியிட்டானேயன்றி உண்மையை வெளியிடவில்லை. அந்த இலட்சியம் ஏதென்ஸ் தனது பேரரசின் கொள்கையைக் கைவிட்ட போது நிறைவேறியது என்பதை அவன் அறிந்திருப்பானாகில், வியப்பில் மூழ்கி இருப்பான். உண்மையில் நடந்தது இதுதான். ஏதென்ஸின் பேரரசு நிலைத்திருக்கும் வரையில் இந்தக் குறிக்கோள் கிரேக்கர்களுடைய சிந்தனையிலும், பண்பாட்டிலும் இடம் பெறவில்லை. நிலை நிறுத்தப்பட்ட பள்ளிக் கூடங்கள், சிறப்பாக ஐசோகிராட்டிஸின்

இலக்கிய மன்றம், பிளாட்டோவின் மெய்விளக்கத் துறை முதலியன இந்தக் குறிக்கோளின் ஒரு பாகத்தை மட்டும் கிரேக்க நாடுகளுக்குப் படித்துக் கொடுத்தன. அக் காலத்தில் கிரேக்க நாட்டின் பலபாகங்களிலிருந்து மாணவர்கள், அறிவைத்தேடி ஏதென்ஸிலுள்ள ஐசோகிராட்டிஸின் இலக்கிய மன்றத்திற்கும், பிளாட்டோவின் மெய்விளக்கத்துறைக்கும் வருவது வழக்கமாயிருந்தது. அறிவாற்றலில் அதன் செல்வாக்கு வளர்ந்தது. அவ் வளர்ச்சி அதன் சொந்த அறிவை மட்டும் சார்ந்திருக்கவில்லை. வெளியிலிருந்துவரும் உயர்ந்த கருத்துக்களையும் அது ஏற்றுக் கொள்ளத் தவறுவதில்லை. அதனது கருத்துக்கள் அகில கிரேக்க நாடுகளுடன் ஐக்கியப்பட்ட கருத்துக்கள். இவைகளில் மட்டும் அந்நாடு இன்பம் காணவில்லை. கிரேக்கர் களல்லாத வெளி நாட்டினர்களின் உயரிய கருத்துக்களுக்கும் அது செவிசாய்த்து வந்தது. நாட்டுப்பற்றுக்களுக்கு அப்பாற்பட்ட மெய்விளக்கத்துறை எண்ண நீள நினைவுகள் (Speculation) இவர்கள் உல கொன்றிய நோக்கத்தைப் பெறுவதற்கு ஆதரவளித்தன. ஐசோகிராட்டிஸ் என்ப வனுடைய அகில கிரேக்கக் கோட்பாடும், பிளாட்டோ, ஸெனப்பன், போன்றவர்கள் ஏதென்ஸ்மீது கொண்டுள்ள நோக்கங்களும், ஏதென்ஸிலும் பிரேயஸிலும் நிலைநிறுத்தப்பட்ட அந்நிய சமய வழி பாடுகளின் வளர்ச்சியும், குறைந்து வரும் நாட்டுப்பற்றும், மேலும் பல சாதனங்களும் இக்குறிக்கோளைப் பலவகைகளில் வெளிப்படுத்தின. நான்காம் நூற்றாண்டிலே கிரேக்கர்களின் உயர்ந்த குறிக்கோள்களைச் சிறந்த முறையில் போதிப்பதற்கான நிறுவனங்கள் ஒன்றுமே கிடையாது. நாடக மேடைகள் மட்டுமிருந்தன. அவை கிரேக்கர் களின் சிந்தனைகளை அந்நாட்டினருக்குப் போதித்து வந்தன. மகிழச்சிதரும் நாடகக் கதைகளின் மூலமாக உள் நாட்டு அரசியல் தத்துவங்கள் போதிக்கப்பட்டன. அவர்களுக்குப்பின் வந்தவர்கள் உள்நாட்டு அரசியல் தத்துவத்தின் அடிப்படையில் நாடகங்களை எழுதவில்லை. மனித நலனைப் பொதுவாகக் கொண்ட நாடகங்களை எழுதினார்கள். இச் சந்தர்ப்பத்தில் கூட ஏதென்ஸ் தன் கருத்துக் களை வெளியிடுவதில் பயன் விளைவிக்கக் கூடிய கருவிகளை உபயோகித்தது. துயரத்தைக் கொடுக்கும் சோகக்கதைகள் கொண்ட நாடகங்கள் நல்ல கருத்துக்களைப் போதித்து வந்தன. அக்காலத்தி லிருந்த நிறுவனங்கள் சமய உணர்ச்சிகள் முதலியவைகளிலுள்ள குறைபாடுகளை, யூரிபைடிஸ் வெளிப்படையாக எடுத்துச் சொன்னான். அப்போதனை நகைச்சுவைக் கவிஞர்களைப் பெரிதும் கவர்ந்தது.

### தனியாள் உரிமைக் கொள்கை

பகுத்தறிவுக் கொள்கை தனியாள் உரிமைக் கொள்கைக்கு வழி காட்டிற்று. இதுவரையில் தனிப்பட்ட மனிதன் ஒவ்வொருவனும் வெளி உலகத்தைத் தன் சொந்த நாட்டின் மேலாக

அல்லது சொந்த நாட்டின் கண்கொண்டு பார்த்து வந்தான். இப்போது அதை அவன் தனது சொந்தக் கண்களைக் கொண்டு நேரடியாகக் காண்கிருன். வெளியுலகின் சூழ்நிலையில் தனக்குள்ள செல்வாக்கையும் உணருகிருன். இதுவரையில் அரசாங்கம் பின்பற்றி வந்த சமயத்தில் அங்கத்தினனுக இருந்தான். அரசாங்கம் பின்பற்றிவந்த சமயக் கொள்கை அவனது கொள்கை யாக இருந்தது. இப்போது அவன் சுய உணர்வுடன் வெளியுல கோடு தொடர்பு கொள்ளும்போது தன் மனத்திற்கேற்ற சமயத்தைப் பின்பற்றுகிருன். எந்தச் சமயம் தனக்கு நல்ல சமயம் என்பதை அவனே தெரிந்து கொண்டு, அந்தச்சமயத்தின் அங்கத்தினனுகிருன். இவ்வாறு தன் சொந்த வாழ்க்கையில் சுதந்திரத்தை காண்பவனின் சொந்த நகரத்தைப்பற்றிய நோக்கமும் மாறிவிடுகிறது. ஏதென்ஸின் குடிமகனுக இருந்தவன், உலகக் குடிமகனுக மாறி விடுகிருன். அவன் நாட்டுக்குச் செய்ய வேண்டிய கடமைக்கும், மனிதன் என்ற முறையில் தனக்காக அவன் செய்து கொள்ள வேண்டிய கடமைக்கும் முரண்பாடு ஏற்படுகிறது. பண்பாடுகளில் நாட்டுப்பற்றுதான் தலை சிறந்ததென்று அவன் ஒரு காலத்தில் எண்ணி வந்தான். இப்போது அத் தவறுதலுக்காக வருந்துகிருன். நாடு மனிதனுக்காக ஏற்பட்டதா? அல்லது மனிதன் நாட்டிற்காக ஏற்பட்டிருக்கிருனு? என்ற பிரச்சினை அடிக்கடி எழுகிறது. தயங்காமல் சமுதாயத்துக்குக் கட்டுப்பட்டிருந்த நிலைமாறியது. இப்போது குடிமகன் தன் சுய நலனுக்காக அரசாங்கத்தினிடமிருந்து பல நன்மைகளை எதிர்பார்க்கிருன். முன்பு தன் வாழ்வு, நகரத்தின் வாழ்வோடு இணைத்துக் கட்டப்பட்டதாக எண்ணினுன். இப்போது தன்னை நாட்டிலிருந்து பிரிக்கமுடியாத நிலை ஒன்றுமே இல்லை என்பதை உணர்ந்து, அதை விட்டு வெளியேறி விருப்பமான இடத்தில் வாழத்தயாராக இருக்கிருன். ஏதென்ஸ் நகரின் அனுமதியில்லாமல் அந்நியப் படைகளில் சம்பளத்திற்காகச் சேர்ந்து பணிபுரிந்த அத்தீனியர் களை நாம் பார்த்தோம். கோனுேன், ஸெனப்பன், எப்பிகிராட்டிஸ், சாபிரியாஸ் மற்றும் பலர் ஏதென்ஸை விட்டு வெளியேறி அந்நிய நாட்டின் படையில் சேர்ந்து பணி புரிந்து வந்தார்கள்.

பிளாட்டோ அரசியல் கலைக்கு அளித்த கொடைகளில் ஒன்று 'குடியரசு' (Republic). இவன் அந் நூலில் தனியாள் தத்துவத்தைப் பற்றி மிகைப்பட விளக்குகிருன். அவன் கூறுவதாவது: 'குதிரை களும் கழுதைகளும் குடிமகனுக்குரிய உரிமைகள் என்ற பெயரில் தலை தெறிக்க ஓடுகின்றன. அவற்றின் எதிரில் வருபவர் விலகி வழிவிடா விட்டால், அவை அவர்கள்மீது மோதிவிடும். யாவும் சுதந்திரத் தோடு சேர்ந்து வெடித்துவிடத் தயாராக இருக்கின்றன.'[1]

[1] ஜோவெட் மொழி பெயர்ப்பு.

அவன் குடியாட்சியின் மிகுதியான சுதந்திரத்தைப்பற்றி மிகையாகப் பேசுகையில் தனியாள் கொள்கையைப் பற்றியும் பேசுகிருன். அரசியல் அமைப்பின் விளைவால் சுதந்திரம் ஏற்பட்டதாகக் கூறுகிருன். மக்களாட்சி அரசியல் அமைப்பின் விளைவால் தனியாள் உரிமைக் கொள்கை வளர்ந்ததென்ற அவனது தர்க்கம் இரண்டுவித விளக்கங்கள் தரும் 'சுதந்திரம்' என்ற வார்த்தையின் மேல் சார்ந்திருக்கிறது. பிளாட்டோவும் அவனுடைய கூட்டாளும் போல வேறுயாரும் இக்கொள்கையை மேம்படச் செய்ததில்லை. தனிப்பட்ட ஒரு மனிதன் தனியாள் உரிமைக் கொள்கையைப் பற்றிப்பேசியதற்கு யாராவது பொறுப்பேற்க வேண்டுமானுல், அப் பொறுப்பை யூரிப்பீடிஸ்[1] மட்டுமே ஏற்கக்கூடும். அவனுக்குப் பிறகு அப் பொறுப்பை ஏற்க வேண்டியவன் சோப்ரோனிஸ்கஸின் மகனும் பிளாட்டோவின் ஆசிரியனுமாகிய சாக்ரட்டீஸே ஆவான்.

சோப்ரோனிஸ்கஸின் மகனுகிய சிற்பி சாக்ரட்டீஸ், பிறப்பு: கி.மு. 469. அவனுடைய உள் உயிர்.

பெரிக்கிளிஸ், கிளியான், நிசியாஸ், லைசாந்தர் போன்றவர்களைப் பற்றி அக்காலத்தில் கிரேக்க நாட்டில் கேள்விபடாதவர்யாருமேயில்லை. அப்போது சாக்ரட்டீஸ் பொது வாழ்க்கையில் ஈடுபடாமல் தனித்து வாழ்ந்தான். ஆகையால் அவனைப்பற்றி மிகச் சிலருக்கு மட்டுமே தெரியும். உலகத்தின் ஒரு மூலையிலுள்ள ஒரு சிறிய நாட்டிற்கு, பெரிக்கிளிஸும், லைசாந்தரும் செய்த சேவை, சில தலைமுறைகளுக்கு மட்டுமே நிலைத்திருந்தது; ஆனுல் அத்தீனியர்களின் வேறுபட்ட தனி மனிதனை சாக்ரட்டீஸின் உள் உயிர், மனித வர்க்கத்தின் சிந்தனையில் எக்காலத்திலும் மறையாவண்ணம் பதிவு பண்ணப்பட்டிருக்கிறது. நாம் அவனுக்கு எந்தக் கருத்துக்களுக்காகக் கடமைப்பட்டிருக்கிருேமோ, அந்தக் கருத்துக்களின் உயிர்ப் பொருளாக நாகரிக மக்களின் மனத்திலே ஐக்கியப்பட்டுவிட்டான்; அவை பழக்கமான பொது அறிவின் கருத்துக்களாக விளங்குகின்ற படியால் நாம் அதை உணர்வதில்லை. அவை தோன்றுவதற்குக் காரணமாக இருந்தவனை நாம் புகழ்வதில்லை. அறிவே தலையாயது என்று அறிவுறுத்தியவன் சாக்ரட்டீஸ் என்பவனே. அவன் கூறியதற்கு மறுப்புக் கூற அல்லது மேல் முறையீடுசெய்து கொள்ள நீதி மன்றம் எதுவுமில்லை. ஒரு மனிதனுக்கு வாழ்க்கையில் அறிவு வழிகாட்டியாக இருக்க வேண்டும்: ஒருவனின் பழக்க வழக்கங்களோ, உணர்ச்சியின் தூண்டுதல்களோ, வழிகாட்டியாக இருத்தல் கூடாதென்று கூறியவன் சாக்ரட்டீஸ். சமூகக் கட்டுத்திட்டங்களை எதிர்த்த

[1] முதலாம் யூரிப்பீடிஸ்; சாக்ரட்டீஸைப் போல யூரிப்பீடிஸ் உலகில் புகழை நிலை நாட்டவில்லையாயினும், அவன் வாழ்ந்த காலத்திலும் அதற்குப் பின்னுல் வந்த இரண்டு தலை முறைகளிலுமுள்ளவர்களிடம் அவனுக்குச் செல்வாக்கிருந்தது.

வன் சாக்ரட்டீஸ்தான். தான் எடுத்துச்சொன்ன உண்மைக்காக தனக்குவரக் கூடிய பலனைக்கண்டு பயந்தவனல்லன். கிழவன் அறிவுள்ளவனுகவிராவிடில், யாரும் இவனை வயதிற்பெரியவன் என்பதற்காக மதிக்க வேண்டுவதில்லை என்பதைத் தன் கூட்டாளிகளுக்கு எடுத்து விளக்குவான். மேலும், அறிவற்றவர்கள் பெற்ரோர்கள் என்ற உறவின் பெயரில் தங்கள் குழந்தைகள் தங்களுக்குக் கீழ் படிந்து நடக்க வேண்டுமென்று உரிமை கொண்டாடக்கூடாது என்பான். அறிவும், உணர்வும் விவேகத்தின் அடிப்படை. பலனைப் பற்றி அவை கவலைப்படுவதில்லை. குடும்பப்பற்று, நாட்டுப்பற்று முதலியவைகளுக்கு அப்பாற் பட்டவை அறிவும், உணர்வும். ஸாக்ரட்டீஸ் இந்தஉயரிய குறிக்கோளைத்தான் போதித்தான். அவனுடைய போதனைகள் நிலையுள்ளன; அழிந்து போகாதன.

### அவனது முறை

ஆனல் மனிதர் தங்கள் அறிவாற்றலைக் கொண்டு மாறுபட்ட முடிவு செய்கிருர்கள். சாக்ரட்டீஸ் ஏற்றுக்கொள்ள முடியாத சமூகக் கட்டுப்பாடு அல்லது கருத்து, ஒருசிலரின் மனப்போக்கினுல் ஏற்பட்டது. உண்மை நிலையும், குறைகள் இருப்பதற்கு விளக்கமும் மனிதருக்கு வேண்டுமென்பது வெளிப்படை. அதைப் பெறுவதற்கு சாக்ரட்டீஸ் சுருக்கமான ஒரு வழி சொல்லுகின்ருன்: நாம் ஒன்றைப் பற்றி மதிப்பிடும்போது, இரு கருத்துக்களை ஒப்பிடுகிருேம். அவ்விரு கருத்துக்களும் தெளிவும் திட்டமும் நிறைந்து விளங்கவேண்டும். திட்டமும் தெளிவுமற்ற கருத்துக்களை ஆராயும் போது தவறுதல்கள் ஏற்படுகின்றன. சாக்ரட்டீஸின் முறைப்படி உண்மையை அறிந்துகொள்ள விளக்க உரை மிகவும் தேவைப்படுகிறது. அது ஒரு புதிய முறையாகவும் இருக்கிறது. அது எத்தனை இன்றியமையாததென்று இப்போது எல்லோரும் அறிந்ததே. எனவே, அதற்கு எதிராகவுள்ள அபாயங்களிலிருந்து நம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும்.

### பயன் கருது தத்துவத்தின் முதல்வர்

இந்த முறையை அற நெறியில் பயன்படுத்துவதே சாக்ரட்டீஸின் முதன்மையான பணியாயிருந்தது. ஏனெனில் அவன் மனம் மானிடரின் வாழ்க்கை நலன்களிலும், அவர்களது வாழ்க்கையில் ஏற்படுகிற திகைப்புகள் அல்லது மலைப்புகளிலும் மூழ்கிக் கிடந்தது. அறநெறிக் கொள்கை வரலாற்றில் முதலிடம் பெற்றவன் அவனே. பயன் கருது தத்துவம் அவனுல் ஏற்பட்டது. 'நல்லது' என்ற கருத்தை அவன் ஆய்வு செய்ததின் விளைவால் இக் கோட்பாடு உருவாயிற்று. 'பயனுள்ளதுதான் நல்லது' என்ற கருத்துதான் அவன் ஆய்வின் விளைவால் ஏற்பட்ட கருத்து. புண்ணியச் செயல்

என்பது மகிழ்ச்சி என்ற அவனுடைய கோட்பாட்டுடன் நெருங்கிய தொடர்புள்ளதாக இருக்கிறது. தானறிந்து தவறு செய்கிறவன் எவனுமில்லை. அறியாமையினாலேயே தவறு செய்கிறான். ஏனென்றால், எவனும் தன் சொந்த மகிழ்ச்சியைத் தனது ஆணவத்தினால் இழக்க விரும்புவதில்லை என்பது சாக்ரட்டீஸ் கொள்கையின் அடிப்படைத் தத்துவம். இக் கோட்பாட்டிலுள்ள குறைகளை எடுத்துக் காட்டுவது எளிது. பயிற்சி பெறாத மனமும், மந்த புத்தியினால் குழம்பி எண்ணங்களாலும், மனிதன் கணக்கற்ற தவறுதல்களைச் செய்கிறான் என்பதை இவர் எளிதில் மறந்துவிட்டார்.

**சமயத்தைப்பற்றி சாக்ரட்டீஸின் குறிக்கோள்**

அரசாங்கம், ஆட்சி இவற்றை சாக்கரட்டீஸ் மதித்து நடக்கவில்லை. அவனுக்குத் தெய்வங்களைப்பற்றிய கவலையோ மதிப்போ கிடையாது. அக் காலத்தில் கிரேக்க நாட்டிலிருந்த சமயத்தைப் பற்றியும் அவன் தாக்கிப் பேசியதுண்டு. அனக்ஸாகோராஸ், மற்றும் பல சமயப் பற்றற்ற தத்துவ ஞானிகளைப் போலவும் சாக்கரட்டீஸ் வாழ்ந்து வந்தான். அவர்களுக்குச் சமயங்களின் உண்மையில் நம்பிக்கை இருந்ததில்லை. அவன் புதிய சமயக் கொள்கை எதுவும் போதித்ததில்லை. அவனுக்குக் கடவுள் ஒருவர் உண்டென்பதைப் பற்றிய நம்பிக்கைக் கிடையாது. எனினும் ஆன்மா நிலையானதென்பதை அவன் மறுத்துக் கூறவில்லை.

சாக்கரட்டீஸ் புதிய தர்க்க முறையை உண்டாக்கியவன். பயன் கருது தத்துவம் என்ற கொள்கையை ஏற்படுத்தியவனும் அவனே. பூமியிலும், வானிலும் காணப்படுபவை, மக்கள் எண்ணங்கள் யாவும், அவனால் மதிப்பிடப்பட்டன. சிறப்பாக, மனிதர்களின் எண்ணங்கள் பற்றிக் குறைகூறிப் பேசியிருக்கிறானே தவிர, வான வெளியிலுள்ளவைகளைப்பற்றி அவன் பேசியதில்லை. வான லோகத்தைப் பற்றியவைகள் அவனுக்கு விரும்பத்தகாதவைகளும் பொருந்தாதவைகளுமாகக் காணப்பட்டன. பக்தி உணர்ச்சியினாலும், விருப்பு வெறுப்புக்களாலும் இவன் பாதிக்கப்படவில்லை. சமய நெறி, அரசியல் முறை முதலியவைகளைப் பற்றிக் குறைகூறிப் பேசியுள்ளான்; அவன் எழுத்து மூலமாகத் தன்னுடைய கருத்துக்களை வெளியிட்டதில்லை. உரையாடல் மூலமகவே அவன் தன் கருத்துக்களைப் போதித்து வந்தான். அறிவும் திறமையும் வாய்ந்த இளைஞர்களோடு அவன் உரையாடினான். அவ் வாலிபர்கள் பிற்காலத்தில் சிறந்த சிந்தனையாளர்களாகவும், சகல கலை வல்லவர்களாகவும் விளங்கி அழியாப் புகழ் பெற்றார்கள். அவன் தன் உயர்ந்த குறிக்கோள்களை, பிளாட்டோ (Plato), அரிஸ்ட்டிப்பஸ் (Aristippus), யூக்குலிட்ஸ் (Euclides) என்பவர்களின் மனத்தில் பதிய வைத்தான். அவர்களை அவன் அறிவாற்றலுள்ள வீரர்களாகவும் சுதந்திரப்

பிரியர்களாகவும் மாற்றிவிட்டான். அவன் உரையாடினனே தவிர, சொற்பொழிவாற்றியதில்லை. 'உரையாடல் முறை' என்பதே சாக்கரட்டீஸின் முறையாக இருந்தது. அவன் ஒருநாளும் போதனை செய்ததில்லை. மற்றவர்களுக்குப் போதிக்குமளவில் (தனக்கு) அறிவில்லை என்பது அவனுடைய நம்பிக்கையாக இருந்தது. அவன் தனக்கு ஒன்றுமே தெரியாதென்று வெளிப் படையாக அறிக்கையிடுவான். இவ்விதமான அவனுடைய பழக் கத்தை, வஞ்சப் புகழ்ச்சி யென்று மற்றவர்கள் சொன்னர்கள். அக்காலத்தில் மக்களிடையே நிலவிய பல கருத்துக்கள் பொருந்தாத வைகளென்றும், ஆதாரமற்றவைகளென்றும், காட்ட ஆரம் பித்தான். அவன் ஒவ்வொரு மனிதனையும் சந்தித்து உரை யாடினன். அவனவனிடமிருந்த கருத்துக்கள் உறுதியானவைக ளல்லவென்பதை அவனவன் உணரும்படி செய்தான். இவ்வகை யான அவனது பழக்கம் இளைஞர்களுக்குப் புதிய ஊக்கத்தையும் உற்சாகத்தையுமளித்தது. முதியோர்களுக்கு எரிச்சலையும் கோபத் தையுமுண்டாக்கியது. அவன் சந்தைகள், மற்ற சாலைகள் முதலிய இடங்களுக்கு அடிக்கடி செல்வான். அங்குத் தன்னெதிரில் தென் படுகிறவர்களுடன் உரையாடுவான். இளைஞர்களோடும் முதியோர் களோடும் வயது, தகுதி முதலிய பாகுபாடின்றி உரையாடி வந்தான். உயர்ந்த நிலையிலுள்ள வயது முதிர்ந்தோர்களின் அறியாமை யைத் தன் கேள்விகளால் அடிக்கடி வெளிப்படுத்தினன். எனவே உயர்ந்த நிலையிலுள்ள பெரியோர்கள் அவனைப் பகைத்தார்கள். அவன்மீது அருவருப்படைந்தார்கள். சாக்ரட்டீஸ் ஓர் ஆசிரி யனுக இருந்ததில்லை. மற்றவர்களுக்குப் போதிப்பதற்கான சொற் பொழிவுகளை அவன் தயாரித்ததில்லை. ஆனல் அவனைப்போல் ஒருவரும் அவ்வளவு திறமையோடு ஒரு காலத்திலும் போதித்த தில்லை. அவன் தன்னுடைய போதனைகளுக் கேற்ற சம்பளம் வாங்கியதில்லை. அக்காலத்தில் பணம் வாங்கிக்கொண்டு தத்துவம், தர்க்கம் போன்ற கலைகளைப் போதிக்கின்ற அறிஞர்கள் பலரிருந் தார்கள். ஆனல் சாக்கரட்டீஸ் மட்டும் தன் வேலைக்குப் பணம் வாங்கியதில்லை. அவன் தன் அறிவாற்றலின் காரணமாக அக்காலத்திலுள்ள அறிஞர்களைவிடச் சிறந்து விளங்கினன். ஏதென்ஸ் நகரத்தின் தெருக்களில் அவன் சிறப்பான ஓர் மனிதனுகக் காணப்பட்டான். அவன் அறிவாற்றலில் மட்டும் மற்றவர்களிட மிருந்து வேறுபட்டு விளங்கவில்லை. உடலமைப்பிலும் அவன் மாறுபட்டுத் தோன்றினன்.

மக்களாட்சியைப்பற்றிய குற்றச்சாட்டு; அவனுடைய போதனை யைப்பற்றிய ஐயப்பாடு; அதைப்பற்றிய வெறுப்பு.

சாக்கரட்டீஸ் மக்களாட்சி நாட்டில் பிறந்தவன். அவன் பிறந்து வளர்ந்த நகரம் குடிமக்களின் சுதந்திரத்தைப் பேணி

வளர்த்த இடமாக இருந்தது. அந் நகரில் பேச்சுச் சுதந்திர மிருந்தது. இத்தகைய சிறப்புவாய்ந்த ஏதென்ஸில் மக்களாட்சியைப் பற்றியும் சாக்ரட்டீஸ் குறை கூறியுள்ளான். நீதிபதிகளைத் திருவுளச் சீட்டு மூலமாகத் தேர்ந்தெடுக்கும் முறையைச் சாக்ரட்டீஸ் குறை கூறிவந்தான். அம்முறை ஏதென்ஸின் மக்களாட்சிக்கும் பாது காப்பாக இருந்துவந்தது. அவன் போலித்தனம், அறியாமை, மூடநம்பிக்கை முதலியவைகளின் பகைவனாக இருந்தமையால் ஏதென்ஸ் பொதுமக்கள் அவனை விரும்பவில்லை. திராஸி பூலஸ் (Thrasybulus), அனிட்டஸ் (Anytus) போன்ற மக்களாட்சிக் கொள்கையினர்கூட சாக்ரட்டீஸை வெறுத்தார்கள். அவர்கள் அவனை ஓர் அபாயகரமான மனிதனென்றும், அத்தீனிய இளைஞர் களைக் கெடுத்துவிடுபவனென்றும், அத்தீனிய சமூக ஒழுங்கு முறையை அழித்துவிடக்கூடிய கருத்துக்களைப் போதிப்பவ னென்றும் கருதினார்கள். அவனால் சமூகத்தின் ஒழுங்குமுறை அழிக்கப்படுமென்று அவர்கள் பயந்தார்கள். சாக்ரட்டீஸோடு எப்போதும் சூழ்ந்துகொண்டு, அவன் போதனையைக் கேட்டுவந்த இளைஞர்களை அவர்கள் சுட்டிக்காட்டி, அவர்கள் கெட்ட முறையைப் பற்றியும் பேச ஆரம்பித்துவிட்டார்கள்: 'அவனது உரையாடலின் பலனைப் பாருங்கள்! அவனுடைய நண்பன் ஆல்ஸிபியாடெஸின் நடத்தையைக் கூர்ந்து கவனியுங்கள். அவன் தன் நாட்டிற்கு அழிவைக் கொண்டுவந்தவனாயிற்றே! ஆல்ஸிபியாடெஸுக்கு அடுத்தபடியாக கிரிட்டியாஸைப் பாருங்கள். அவனும் சாக்ரட் டீஸைச் சூழ்ந்துகொண்டிருந்த இளைஞர்களில் ஒருவனல்லவா! அவனும் ஏதென்ஸுக்குப் பெரிய தீங்கை இழைத்தவனாயிற்றே! அவன் மக்களாட்சிக்கு விரோதமாக முதல் முதலில் ஒரு நூலை வெளியிட்டவனல்லவா? அவன் தெஸ்ஸாலிக்குச் சென்று பண்ணை யாட்களை அவர்களுடைய எசமானர்களுக்கு எதிராகக் கலகம் செய்யும்படி தூண்டிவிட்டவனாயிற்றே! அவன் ஏதென்ஸுக்குத் திரும்பி வந்தபோது பயங்கர ஆட்சியை நிலைநாட்டவில்லையா? மற்றொரு புறத்தில் பிளாட்டோவைப் பாருங்கள். அவன் மிகவும் திறமையுள்ள ஓர் இளைஞன். அவன் ஸாக்ரட்டீஸோடு சேர்ந்து அவனது போதனையைக் கேட்டபடியால் கெட்டுவிட்டான். அவன் தன் நாட்டிற்குச் செய்யவேண்டிய கடமையைச் செய்யத் தவறி விட்டான். ஸெனப்பனைப் பாருங்கள், அவன் தன் நாட்டிற்குச் சேவை செய்வதற்குப் பதிலாக, அதன் பகை நாட்டிற்குச் சேவை செய்து வந்தான். உண்மையில் சாக்ரட்டீஸும், அவன் பிர சாரமும் அத்தீனிய அரசாங்கத்திற்குச் சிறிதளவு நன்மைகூடச் செய்யவில்லை.' ஆராய்ந்து பார்க்கத்திறமையற்றவர்கள், சாக்ரட் டீஸிற்கும், அவனது நூதன வாழ்க்கை, போதனை முதலியவை களுக்கும் ஆதரவளிக்கவில்லை. அக் காலத்தின் முறைப்படி அவர்கள்

மீது குறைகூற வழியில்லாதிருந்தது. சாக்ரட்டீஸ் அத்தீனிய சமூகத்தின் ஒவ்வொரு பழக்கவழக்கங்களிலுமிருந்த குற்றங் குறைகளை வெளிப்படுத்தினன். சமூகத்தின் அமைப்பில் மாறுதல் ஏற்படும் வகையில் அவன் போதனை அமைந்திருந்தது. அவன் தனியாள் தத்துவத்தை வலியுறுத்திப் போதித்து வந்தான். கிரீஸ் சிறந்த செல்வாக்கடைந்திருந்த நாட்களிலே கிரேக்க நகரங்கள் மிக உயர்வாக மதித்த நாட்டுப்பற்றுக்கு மாருனது, இவனது தனியாள் தத்துவம்.

### அவன் டெல்பியின் சம்மதத்தைப் பெறுதல்

சாக்கரட்டீஸின் போதனை கிரேக்க நாடுகளுக்கு அதிர்ச்சியைத் தந்தது. அவைகளுடைய அடிப்படைகளை ஆட்டம் கொடுக்கும்படி செய்யக்கூடிய அவனது கொள்கையின் வன்மையை யாரும் புரிந்து கொள்ளவில்லை. ஆனல் டெல்பியிலுள்ள குருக்கள் அவனுடைய போதனைக்கு ஆதரவளித்தார்கள். டெல்பியின் சூலாசனத்திலிருந்து வந்த தெய்வ வாக்கு, சாக்கரட்டீஸைப் போன்ற ஞானி உலகிலிருந்த தில்லையென்று சாட்சி பகர்ந்தது. இந்த வாக்கு அவனது வாழ்க்கையின் எப்பகுதியில் கொடுக்கப்பட்டதென்பது நமக்குத் தெரியாது. டெல்பியின் தெய்வ மொழியைச் சிறந்ததாகக் கருதினல், அது ஓர் நூதனமான உள்ளாராய்வென்பது வெளிப்படும். அப்படிப்பட்ட ஓர் உள்ளாராய்வை டெல்பியிலிருந்து சாக்ரட்டீஸைப் பொறுத்த மட்டில் கிடைப்பது கடினமானது. உலக வழக்கிற்கேற்ற முறையில் கொள்கைகளையும் கோட்பாடுகளையும் மாற்றிக் கொள்வதில் டெல்பியிலுள்ள கிரேக்க சமயத்தின் குருமார்கள் வல்லவர்கள். வரப்போகிற அற்புத நிகழ்ச்சிகளைப்பற்றி அவர்கள் சிந்தனை செய்து கொண்டிருப்பவர்களென்று அவர்களை ஐயுற முடியாது. அல்லது அவர்கள் மனிதர்களின் சிந்தனைகளிலுள்ளவைகளைத் தெரிந்துகொள்வதில் ஊக்கமுடையவர்களென்று எண்ணிவிடவும் முடியாது. சாக்ரட்டீஸின் ஞானத்தைப்பற்றிய தெய்வவாக்கின் நோக்கம் முடிவுவான பிரச்சினையாக இருந்ததில்லை. அனக்ஸகோராஸ் போன்றவர்களால் கிரேக்க சமயத்திற்கு ஆபத்து ஏற்பட்டிருந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் டெல்பியின் குருமார்கள் சாக்ரட்டீஸின் கூட்டுறவை விரும்பினர்களா வென்பதையும் நோக்க வேண்டி இருக்கிறது. அப்படி அவர்கள் அவனுடைய கூட்டுறவினல் பலன் ஏற்படுமென்று நம்பி இருந்திருந்தால் அது ஓர் வீணன குருட்டு நம்பிக்கையென்றே கருதவேண்டும்.

### சாக்ரட்டீஸின் விசாரணை கி.மு. 399. அவனுடைய மரணம்.

அத்தீனியப் பேரரசு வீழ்ச்சியுற்று ஐந்தாண்டுகளுக்குப் பின் சாக்ரட்டீஸ் இறந்துவிட்டான். அவனடைந்த மரணத்தின் முறை அவனது வாழ்க்கைச் சிறப்பின் முத்திரையாக விளங்குகிறது. அக்-

காலத்தில், ஏதென்ஸில் அனிட்டஸ் ஒரு சிறந்த மனிதனாக விளங்கினான். அவன் மக்களாட்சி முறையின் பாதுகாவலனாக விளங்கினான். அவன் ஏதென்ஸில் மக்களாட்சி முறையை மறுபடியும் நிலைநிறுத்தினான். அவனும், அவனைச் சேர்ந்தவர்களும் சாக்ரட்டீஸை துர்நாத்திகன் என்றழைத்தார்கள். அவர்கள் சாக்ரட்டீஸின்மீது பின்வருமாறு குற்றம் சுமத்தினர்: 'சாக்ரட்டீஸ் ஒரு குற்றவாளி; ஏனெனில் அவன் நாட்டின் தெய்வங்களை நம்புவதில்லை. அவன் நூதனமானதும் இயல்பிற்கு மேற்பட்டதுமான தெய்வ வழிப்பாட்டைப் போதிக்கிறான். அவன் இளைஞர்களைத் தன் போதனையின் மூலம் கெடுத்து விடுகிறான்.' அவனுக்கு மரண தண்டனை அளிக்கப்பட்டது. அவன்மீது பழி சுமத்தியவர்கள் கூட அவனுடைய மரணத்தை விரும்பவில்லை. நாட்டின் தலைவனுக்கு, அவனது குற்றப்பத்திரிகை சமர்ப்பிக்கப்பட்டது. அவன் அட்டிகாவினின்றி ஓடிவிடுவானென்று எல்லோரும் எதிர்பார்த்தார்கள். அவன் ஓடிவிடுவதைத் தடுக்கக்கூடியவர்கள் அங்கு யாருமே இருந்ததில்லை. ஆனால் அவன் மரணத்தைக் கண்டு பயப்படவில்லை; நாட்டை விட்டு ஓடிவிடவுமில்லை. அவன் எழுபது வயது நிரம்பிய வயோதிகனாக இருந்தான். இளைஞர்களுடன் உரையாடுவதில் அவனுக்கு இன்பமிருந்தது. அதைத் தவிர வாழ்க்கையில் மற்ற இன்பமில்லையென்பதை அவன் உணர்ந்தபடியால் ஏதென்ஸில் தங்கிவிட்டான். அவன் தன்மீது சுமத்தப்பட்டக் குற்றத்திற்கு நீதிமன்றத்தில் பதில் கூறுவதற்காக அங்குத் தங்கி யிருந்ததைக் கண்ட மற்றவர்கள் வியப்படைந்தார்கள். விசாரணை நடக்கும் நேரம் நெருங்கியது. நீதிமன்றத்தில் 501 நீதிபதிகள் நாட்டுத் தலைவனுடைய தலைமையின் கீழ்க் கூடி இருந்தார்கள். அவன் குற்றவாளியென்று, அறுபது ஓட்டு அதிகம் பெற்றதின்மூலம் தீர்ப்பளிக்கப்பட்டது. அவன்மீது சாட்டப்பட்ட குற்றம் மறுக்கமுடியாத உண்மையான குற்றமென்பதை நாமறிவோம். ஆனால் அவனுக்கு எதிராக அளிக்கப்பட்ட ஓட்டின் பெரும்பகுதி மிகவும் குறைவானது. அத்தீனியச் சட்டத்தின் வழக்கப்படி தன்னுடைய குற்றத்திற்கு அளிக்கப்பட்ட தண்டனையைக் குறைப்பதற்காகப் பிரதிவாதி வாதாடும் வாய்ப்பு அளிக்கப்பட்டிருந்தது. நீதிபதிகள், குற்றவாளிக்குக் குற்றம் சுமத்தியவர்கள் நிர்ணயித்த தண்டனையை அவ்வாறே உறுதிபண்ணவும், அதைக் குறைக்கவும் உரிமை பெற்றவர்கள். சாக்ரட்டீஸ் குறைவான அபராதத் தொகை மட்டும் கட்டினான். ஆகையால் நீதிபதிகளில் பெரும்பாலோர் அவனுடைய மரண தண்டனையை உறுதிப் படுத்தினார்கள். ஒரு மாதம் கழித்து அவனுக்கு விஷத்தைக் குடிக்கக் கொடுத்தார்கள். நஞ்சு அடங்கிய ஓர் கிண்ணம் அவனுக்குக் கொடுக்கப்பட்டது. அவன் முக மலர்ச்சியோடு அதை வாங்கி அருந்தினான். வழக்கம்போல் தன்னுடைய மாணவர்களுடன் உரையாடிக் கொண்டிருந்தான். மரணமடையும்

கடைசி நேரம் வரையில் உற்சாகத்தோடு உரையாடிக் கொண்டிருந்தான்.

**பிளாட்டோவின் மன்னிப்புக் கோரிக்கை**

சாக்ரட்டீஸ் தன் விசாரணையின்போது கூறிய மறுமொழிகள் பாதுகாத்து வைக்கப்படவில்லை. ஆனால் அதனுடைய தொனி, ஆத்மசக்தி, அதைவிட மேலாக அதனுடைய நோக்கம் முதலியன நாமறிவோம். அவனது மரணத்தறுவாயில் அவனுடைய நண்பனும் மாணவனுமான பிளாட்டோ அவனருகிலிருந்தான். பிளாட்டோ அவனுடைய மரணத்தைப்பற்றிச் சாட்சி பகர்ந்துள்ளான். சாக்ரட்டீஸினுடைய மன்னிப்பு கோரிக்கை (Apology of Socrates) என்ற நூலில் பிளாட்டோ சாக்ரட்டீஸின் மரணத்தைப்பற்றி எழுதி இருக்கிறான். அந்நூலில் அவன் சாக்ரட்டீஸின் ஆளுமையைப்பற்றிச் சிறப்பித்து எழுதியிருக்கிறான். சாக்ரட்டீஸின் ஆளுமை அந்நூலை வாசிப்பவர்களுக்கு ஒரு தூண்டுகோலாக விளங்குகிறது. அந்நூல் இலக்கிய நூல்களில் சிறப்பான ஒரு நூலாகவும் கருதப்படுகிறது. பிளாட்டோவினால் சிறப்பாக எழுதப்பட்டுள்ள சாக்ரட்டீஸின் குற்ற விசாரணையில் அவன் தற்காப்பிற்குக் கூறிய மறுமொழிகள் யாவையும் திருப்பிச் சொல்லும் நூலாக விளங்குகிறது. சாக்ரட்டீஸ் தன் மீது சாட்டப்பட்ட குற்றங்களுக்குத் தக்க மறுப்புக் கூற முடியாதிருந்த நிலையை அந்நூலில் நாம் காண்கிறோம். சாக்ரட்டீஸ் தன் வாழ்க்கையையும் வாழ்க்கையின் நோக்கங்களையும் எடுத்துக் கூறினான். தன் மீது சாட்டப்பட்ட குற்றங்கள் பொய்யானவைகளென்றும் சொன்னான். சமயச் சார்பான கேள்விகளுக்கு அவன் அளித்த விடைகள் சுருக்கமானவைகளாகவும் திருப்தியற்றவைகளாகவுமிருந்தன. சட்ட முறைப்படி அவன் அநியாயமாகக் குற்றம் சுமத்தப்படவில்லை. அக்கட்டம் அங்கு நேர்ந்த சோக சம்பவத்தின் கட்டமாக இருந்தது. சாக்ரட்டீஸைப் போன்ற சிறப்பான மனிதர்கள் அங்கு யாருமே இருந்ததில்லை. இருந்த போதிலும் அவன்மீது குற்றம் சுமத்தியவர்களும் தவறான முறையில் அவன்மீது குற்றம் சுமத்தவில்லை. அந்தக் காலத்தில் அவர்கள் வைதீகக் கொள்கைக்காகப் பிடிவாதம் செய்ததின் காரணம் நமக்குத் தெளிவாகத் தெரியவில்லை. அதே சம்பவம் இருபது ஆண்டுகளுக்குப் பின் நடந்திருக்குமானால் சாக்ரட்டீஸின் மீது குற்றம் சுமத்தியவர் தோற்றுப் போயிருப்பர். சாக்ரட்டீஸ் காலத்திலிருந்த அத்தீனியர்களில் ஐவரில் இருவர் சமயச் சார்பற்றவர்கள். அவனுடைய குற்ற விசாரணை சமய சம்பந்தப்பட்டது மட்டுமல்ல, பழங்காலச் சமூக முறைக்கு எதிராக அவனது போதனை அமைந்திருந்தது. குற்றம் சுமத்தியவர்கள் அத்தீனியர்களுடைய சமயக் கொள்கையை மட்டும் பாதுகாக்க முன்வரவில்லை. அவர்கள் தனியாள் தத்துவக் கொள்கை பரவாமலிருப்பதைத் தடுப்பதற்காகவும் முயன்றனர்.

பலாத்கார முறையினால் புதிதாகத் தோன்றும் கொள்கைகளையும், கோட்பாடுகளையும் ஒழித்துக்கட்ட முடிவதில்லையென்று வரலாறு கூறு கிறது. சாக்ரட்டீஸைப்பற்றி நினைத்த போதெல்லாம் ஏதென்ஸின் நகர வாசிகள் பெருமையடைவார்கள். அதே நேரத்தில் அவனுக் கிழைத்த தீமையை நினைத்தும் வருந்தினார்கள். சோகம் நிறைந்த அவனுடைய மரணம் அவனுடைய செல்வாக்கை வளரும்படி செய் தது. அவனுடைய உள்ளுயிர் அழிந்து விடவில்லை. அவனுடைய மாணவர்கள் அவனுக்கு மரண தண்டனையளித்த அத்தீனிய மக்க ளாட்சியை மன்னித்து விடவில்லை. அவன் அவர்களுடைய சிந்தனை களிலும் கற்பனா சக்திகளிலும் நிலைபெற்று வாழ்ந்து வந்தான், அவன் விட்டுச் சென்ற வேலையை அவர்கள் தொடர்ந்து செய்து வந்தார்கள்.

அடிமை முறையைப்பற்றிய லைக்கோப்புரோனுடைய நோக்கம்; அரிஸ்ட்டோபேன், பிளாட்டோவின் பொதுவுடைமை; சொத் துரிமை.

அவனுடைய நண்பர்களும் மாணவர்களுமாக இருந்தவர்கள் அவனுடைய வேலையைத் தொடர்ந்து செய்தார்கள். ஆனால், இன்னது செய்கிறோமென்பதை அறியாமல் அவர்கள் அவ்வேலையைச் செய்து வந்தார்கள். மாராத்தான் (Marathon) போர்க் களத்தில் உயிர்த் தியாகம் செய்ய முன் வந்தவர்களுக்குத் தெரிந்த கிரேக்க நகர வாழ்க்கையின் சிறப்பை இவர்கள் உணரவில்லை. இவர்களுடைய பணி நகர வாழ்க்கையை அடியோடு அழித்துவிடக் கூடியதாக இருந் தது. பிளாட்டோ சாக்ரட்டீஸின் உண்மையான குழந்தையாக இருந்தான். இருந்தபோதிலும் சாக்ரட்டீஸ் தன்னுடைய வாழ் நாள் முழுவதும் போற்றி வளர்த்த தனியாள் தத்துவத்தை இவன் ஆதரிக்கவில்லை. அதற்குப் பதிலாக அதைத் தாக்கிப் பேசினான். பிளாட்டோவும், ஸெனப்பனும் தங்களுடைய சொந்த நகரத்தைப் புகழ்வதற்குப் பதிலாக, ஸ்பார்ட்டாவைப் புகழ்ந்தார்கள். அவர்கள் நேசித்துப் போற்றி வந்த அவர்களுடைய ஆசிரியன் ஸ்பார்ட்டா வில் வாழ்ந்திருப்பானாகில் அவனுக்கு அக்கதி நேர்ந்திராதென்பது அவர்களுடைய நம்பிக்கை. அவர்களுடைய புகழ்ச்சி ஸ்பார்ட்டா வுக்குத் தனிச் சிறப்பையளித்தது. ஏனெனில் பெரிக்கிளிஸ் ஸ்பார்ட் டாவின் அரசியல் அமைப்பை இகழ்ந்து பேசியதுண்டு. ஸ்பார்ட் டன் அரசியல் அமைப்புப் பழங்காலத்தது என்றும் பெரிக்கிளிஸ் காலத்தவர்கள் கருதினார்கள். இப்போது அதைப் பிளாட்டோவும், ஸெனப்பனும் புகழ்ந்து கூறினார்கள். கிரேக்க நாடுகள் யாவும் ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பை இகழ்ந்து வந்த இந்தக் காலத்தில், அரசியல் சிந்தனையாளர்கள் அதற்குத் தனி சிறப்பு அளித்தார்கள். பழங்கால முறை அந்நாட்டில் இன்னும் நிலைத்

திருந்தபடியால் அந்நாட்டு அரசியல் அமைப்பு அவர்களுடைய சிந்தனையைக் கவர்ந்தது. அந்நாட்டுக் குடிமக்கள் அரசாங்கத்திற்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்தார்கள். அவர்கள் அரசாங்கத்தை மாற்றியமைப்பதற்கான புரட்சியை ஏற்படுத்தவில்லை. கிரீஸின் ஒவ்வொரு நகரத்திலும் தனியாளின் உரிமைக்கும் அரசாங்கத்தின் அதிகாரத்திற்குமிடையே போராட்டமிருந்தது. ஆனல் ஸ்பார்ட்டாவில் மட்டும் அவ்விதமான போராட்டம் எதுவுமிருந்ததில்லை. அரசாங்கத்தின் அதிகாரம் வரம்பில்லா அதிகாரமாகவே இருந்து வந்தது. ஆகையால் அரசியல் சிந்தனையாளர்கள் அரசாங்கத்தின் உருவத்தை ஸ்பார்ட்டாவில் காண முடிந்தது. அவர்கள் தங்களது அரசியல் தத்துவத்தில் சிறப்பித்துக் கூறின தனியாள் தத்துவத்திற்கு ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பில் இடமே இல்லை. பழங்காலச் சமூகத்தின் அடிப்படையான அடிமை முறை அக்காலத்தில் ஒரு பிரச்சினையாக இருந்து வந்தது. யூரிபைடிஸ் (Euripides) அடிமை முறைப் பிரச்சினையைப்பற்றிப் பேசியுள்ளான். அடிமை முறையைப்பற்றிய அவனுடைய கருத்துக்கள் தற்காலத்துக் கருத்துக்களுக்கு ஏற்றதாக இருந்தது. அடிமை முறை இயற்கைக்கு மாறுபட்டதென்று ஒருவர் அக்காலத்தில் கூறியிருந்தார். பெண்கள் அரசியல் அடிமைகளாக இருப்பதைப்பற்றிய பிரச்சினையும் அக்காலத்தில் எழும்பிற்று. அரிஸ்ட்டோபேன்ஸ் 'பெண்களின் பாராளு மன்றம்' (Parliament of women) என்றவொரு நகைச்சுவை நாடகத்தை எழுதி இருக்கிருன். அந்நாடகத்தில், அவன் பெண்களின் உரிமையைப்பற்றிக் கேலி செய்துள்ளான். பிளாட்டோ, 'குடியரசு' என்ற தன் நூலில் பெண்களுக்குச் சம உரிமையளிக்க வேண்டுமென எழுதியுள்ளான். அக்காலத்தில் பொதுவுடைமைக் கொள்கைகளும் வளர்ச்சியடைந்திருந்துத. அரிஸ்ட்டோபேன்ஸ் தன் நாடகத்தில் அக்கொள்கையைக் கேலி செய்து எழுதியிருக்கிருன். பிளாட்டோ சமுதாயப் பொதுவுடைமையைப் புகழ்ந்து கூறினன், அவன் தன் சிறந்த அரசுக்கு அக்கொள்கை பொருத்தமானதென்று எண்ணினன். சாதாரணமான சமுதாயப் பொதுவுடைமையை ஏற்படுத்துவது அவனது நோக்கமில்லை. எல்லோரும் இன்புற்றுவாழ்வதற்கான சமுதாயப் பொதுவுடைமையை ஏற்படுத்துவது அவன் நோக்கமாக இருந்தது தன் நாட்டிலுள்ள குடிமக்கள் உறுபசிக்கும், ஒவாப்பிணிக்கும், செறுபகைக்கும் இரையாகக் கூடாதென்பது அவனது நோக்கமாக இருந்தது. அவன் மரிப்பதற்கு முன் பொதுவுடைமைக் கொள்கை நடைமுறைக்கு ஏற்றதல்லவென்பதை அறிந்துகொண்டான். அவன் பிற்காலத்தில் புகழ்ந்து போற்றியுள்ள அரசாங்கத்தில் தனியார் சொத்துரிமைக்கு ஆதரவளித்தான். தனியார் சொத்துரிமை தனி நபரிடமிருப்பதை அவன் ஆதரிக்காமல், குடும்பத்தினிடமிருக்க வேண்டுமென்று வலியுறுத்திக் கூறியுள்ளான்.

**உரைநடையின் முன்னேற்றம்**

இந்தக் காலத்தில், அதாவது எகோஸ்போட்டாமி யுத்த களத்திற்குப் பின்வந்த ஐந்தாண்டுக் காலத்தில், ஏதென்ஸில் உரைநடைக் கலை முழுமையடைந்தது. அங்கு உரைநடை வளர்ந்த முறை நம்முடைய கவனத்தைக் கவருகிறது. சாக்ரட்டீஸும் மற்றவர்களும் சிந்தனைச் சக்தியில் புரட்சியையேற்படுத்தினர்கள். அதே காலத்தில் சிஸிலிநாட்டானுகிய ஜார்கியாஸும் (Gorgias) மற்றவர்களும் எண்ணங்களை வெளிப்படுத்தும் முறையில் புரட்சிகரமான முன்னேற்றத்தைக் கொண்டு வந்தார்கள். தர்க்கம், குற்றஞ் சாட்டுதல் முதலியவைகளில் வசன நடை மிகவும் சிறப்பாகக் காணப்பட்டது. அறிவைத் தேடும் மார்க்கத்தில் உரைநடை இன்றியமையாததாகத் தோன்றிற்று. ஆகையால் நான்காம் நூற்றுண்டு உரைநடையின் முன்னேற்ற காலமாக இருந்தது. நான்காம் நூற்றுண்டில் ஏற்பட்ட உரைநடை முன்னேற்றம் ஐந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த அத்தீனிய கவிஞர்களைப் போன்றவர்கள், நான்காம் நூற்றுண்டில் வாழவில்லையே யென்ற குறையை நிறைவாக்கிற்று. பிளாட்டோ ஐம்பதாண்டுகளுக்கு முன் பிறந்திருப்பானுகில் அவன் எஸ்ச்சிலஸ், சோபோக்கிளிஸ் முதலியவர்களுக்குப் போட்டியாக இருந்திருப்பான். எஸ்ச்சிலஸும், சோபோக்கிளிஸும் இரண்டு அல்லது மூன்று தலைமுறைகளுக்குப்பின் வாழ்ந்திருப்பார்களாகில், அவர்கள் தங்கள் கருத்துக்களை வசன நடையில் வெளியிட்டிருந்திருப்பார்கள். முறைகளைக் கண்டுபிடிக்கும் திறமை பெற்ற யூரிபைடஸ் வசனநடை முன்னேற்றமடைந்த காலத்திற்கு முந்தியவன். அவன் தன் கருத்துக்களைச் செய்யுள் நடையில் வெளியிட்டு வந்தான். கருத்துக்களைச் செய்யுள் நடையில் வெளியிடுவது கடினமாக இருந்தது. ஐந்தாம் நூற்றுண்டில் எழுதப்பட்ட நாடகக் கவிகளில் சமயத் தொடர்புள்ள பண்பாடுகள் நிறைந்திருந்தன. காலம் வந்தபோது கலைஞர்களும் இலக்கிய வல்லுநர்களும் சமயத்தோடு தொடர்பு வைத்துக்கொள்ளவில்லை. அவர்கள் பழைய முறைப்படி நாடகங்கள் எழுதுவதையும் நிறுத்திவிட்டார்கள். இதன் காரணமாகவே நான்காம் நூற்றுண்டு உரைநடைக் காலமாக மாறிவிட்டது. யூரிபைடிஸ், சாக்கரட்டீஸின் உணர்வுகள் சோகம் நிரம்பிய செய்யுள் எழுதும் பழக்கம் வீழ்ச்சியடைவதற்குக் காரணமாக இருந்தன. தனியாள் தத்துவக் கொள்கை உரைநடையில் எழுதப்பட்டது. இக்காலத்தில் வசனநடையின் சந்தம் மிகக் கவனத்தோடு செய்யுள்களின் சந்தத்திற்கு ஏற்றவாறு எழுதப்பட்டது. சரளமாக எண்ணங்களை உருவாக்கவும், குறைபாடுகளைத் தடையின்றி எடுத்துச் சொல்லவும் உரைநடையை ஏற்ற கருவியாகப் பயன்படுத்துந் தன்மை கிரேக்க மொழிக்கிருந்தது.

இவ்விதமாக ஏதென்ஸ், கிரீஸின் பள்ளிக்கூடமாக விளங்கிற்று. தனியாள் தத்துவம் ஏதென்ஸில் பிறந்தது. பெரிக்கிளிஸ் இவ்வித

மான வளர்ச்சியைப்பற்றி முன்கூட்டிப் பேசியுள்ளான். அவன் சொன்னதாவது: 'ஏதென்ஸ் கிரீக்கின் பள்ளிக்கூடமாக இருக்கு மென்றும், அத்தீனியன் சூழ்நிலைக்கேற்றவாறு கண்ணியத்தோடும் கௌரவத்தோடும் வாழத் தெரிந்து கொண்டவனென்றும் நான் கூறுகிறேன்.'[1]

**ஏதென்ஸில் உயர் கல்வி; பிளாட்டோவும் ஐஸோகிராட்டிஸும்.**

மக்களாட்சியையுடைய அத்தீனிய நீதிமன்றங்கள் அட்டிகாவின் உரைநடையை வளரச் செய்ததென்பதை மறந்துவிடக் கூடாது. இந்த நிறுவனம் பிழைப்பிற்காகச் சொற்பொழிவுகளை எழுதும் எழுத் தாளர்களை ஆதரித்தது. பலர் லிசியாஸைப் போன்றவர்கள் எழுதிய சொற்பொழிவுகளை மனப்பாடம் செய்து அவைகளை நீதிமன்றங்களில் ஒப்பிப்பதில் மனநிறைவடையவில்லை. அவர்கள் சொந்தமாகவே சொற்பொழிவுகள் செய்யப் பழகிவிட்டார்கள். அத்தீனியச் சபையினுல் புகழப்படுவதை விரும்பிய சொற்பொழிவாளர்களுக்கு, சொந்தமாகச் சொற்பொழிவைத் தயாரிப்பது மிகவும் இன்றியமையாததாகத் தோன்றிற்று. இந்தக் கலையைக் கற்றுக் கொடுத்தவர்களில் ஐஸோ கிராட்டிஸ் மிகவும் சிறந்து விளங்கினன். சொற்பொழிவில் வாக்கி யங்களை அமைத்தல், தர்க்கங்களின் தலையங்கங்களை ஒழுங்குபடுத்து தல் முதலியவைகளைக் கற்றுக் கொடுப்பது மட்டும் ஐஸோ கிராட்டி ஸைப் போன்றவர்களின் நோக்கமாகவிருக்கவில்லை. அவர்கள் தங்கள் கலைக் கூடங்களில் கலாச்சாரங்களைப் போதித்தார்கள். மனிதர்களைப் பொது வாழ்க்கைக்குத் தகுந்தவர்களாக்கும் முறையில் அவர்களுடைய போதனை அமைந்திருந்தது. அரசியல் விஞ்ஞானத் தைப்பற்றிய சிக்கல்களைப் படித்தார்கள். ஐஸோகிராட்டிஸ் தத்துவ ஞானத்தைத் தெரிந்துகொள்ளும் வகையில் மாணவர்களுக்குப் பாடம் கற்பித்தான். ஆனல், பிளாட்டோ தன்னுடைய மாணவர்களுக்குத் தத்துவ ஞானத்தையே போதித்து வந்தான். நேர் விரோதமான கொள்கைகளையும் குறிக்கோள்களையுமுடைய அவ்விருவர்களின் கல்வி நிறுவனங்கள் தற்காலத்திலுள்ள சர்வகலாசாலைக்கு ஒப்பாக இருந் தன. ஐஸோகிராட்டிஸின் மாணவர்களும், பிளாட்டோவின் மாணவர்களும் வருந்தியுழைத்துக் கல்வி கற்ருர்கள். போதனுமுறை பூரணமுள்ளதாக இருப்பதே ஐஸோகிராட்டிஸின் பள்ளியின் நோக்கமாக இருந்தது. அவனுடைய கல்வி நிறுவனம் அகில கிரேக்க நாடுகளாலும் புகழப்பட்டு வந்தது. அவனுடைய கலைக் கூடத்திற்கு உலகத்தின் பல பாகங்களிலுமிருந்தும் மாணவர்கள் வந்தார்கள். அவன் கூறுவதாவது: 'நம்முடைய நகரம் சொற் பொழிவாற்றுகிறவர்களுக்கும், மற்றவர்களுக்குச் சொற்பொழிவைக்

[1] ஜோவெட்டின் மொழி பெயர்ப்பு.

கற்றுக் கொடுக்கிறவர்களுக்கும், ஓர் ஆசிரியனைப்போல் விளங்குவதாகக் கருதப்படுகிறது. இத்துறையில் அறிவுத் திறமை படைத்தவர்களுக்கு நமது நகரம் சிறப்பான அன்பளிப்பு வழங்குகிறது. பயிற்சி பெற விரும்புகிறவர்களுக்குத் தக்க வாய்ப்பையும் நமது நகரம் அளிக்கிறது. சொற்பொழிவு செய்கிறவர்கள் அக்கலையில் வெற்றி பெறுவதற்கான அனுபவத்தையும் நமது நகரம் வழங்குகிறது'.[1] ஐஸோகிராட்டிஸ், நாட்டின் ஒருமைப்பாட்டிற்காக உழைத்து வந்தான். அவன் எல்லாவற்றையும் பரந்த நோக்கத்தோடு கவனித்து வந்தான். குறுகிய மனப்பான்மையின் காரணமாக அல்லது சொந்த நகரத்தின்மீதுள்ள பற்றின் கரரணமாக எழுதவில்லை; பேசவுமில்லை. அவனது போதனை அறநெறிச் சார்புடையதாக இருந்தது. தற்காலத்துச் சர்வகலாசாலையிலுள்ள ஆசிரியர்களின் பணியை மட்டும் அவன் செய்யவில்லை. சிறந்த தினசரிப் பத்திரிகையாளர் புரிந்து வருகின்ற பணியையும் அவன் செய்தான். சபை நடுவே நின்று பேசுவதற்கு அவனுடைய தொனி, உடல் நடுக்கம் தடையாக இருந்தன. இருந்தபோதிலும் சிக்கலான பிரச்சினைகள் எழும்பிய போதெல்லாம் துண்டுப் பத்திரிகைகள் மூலமாகத் தன் கருத்துக்களை வெளியிட்டு வந்தான். அவனுடைய துண்டுப் பத்திரிகைகளில் அவனுடைய சொற்பொழிவுகள் அடங்கியிருந்தன. அவைகள் பொதுமக்களின் சிந்தனையைக் கிளறி விட்டன. துண்டுப் பத்திரிகைகளின் சொற்பொழிவுகளிலுள்ள அரசியல் அறிவைவிட, அவைகளின் உன்னத நடையை அத்தீனியர்கள் புகழ்ந்தார்களோ என்று நாம் ஐயுறக்கூடிய அளவிற்கு அதன் நடை சிறந்து விளங்கியது.

**ஐஸோகிராட்டிஸின் சொற்பொழிவிலுள்ள உலகொன்றிய கருத்துக்கள், கி. மு. 381; ஏதென்ஸின் ஆறும் நூற்றாண்டின் கருத்து: ஆரியோபேகிட்டிகோஸ்: நான்காம் நூற்றாண்டுக் கலையில் தனிபட்டபண்பு.**

ஐஸோகிராட்டிஸின் சொற்பொழிவின் ஒரு பகுதியில், கிரேக்க நாட்டில் சிறந்து விளங்க ஆரம்பித்த பரந்த நோக்கமுடைய உலகொன்றிய கருத்துக்களடங்கி இருக்கிறது. அவன் கூறுவதாவது: 'சிந்திக்கும் திறமையிலும் சொற்பொழிவாற்றுந் திறமையிலும் ஏதென்ஸ் உலகிலுள்ள மற்றநாடுகளைவிடச் சிறந்து விளங்குகிறது. ஏதென்ஸின் குடிமக்கள் மனிதவர்க்கத்தின் ஆசிரியர்களாகிவிட்டார்கள். கிரேக்கர் என்ற வார்த்தை இனி தனிப்பட்ட இனத்தைக் குறித்துக் காண்பிக்காது. அது தனிப்பட்ட அறிவைக் குறித்துக் காட்டும் வார்த்தையாகிவிட்டது. நம்முடைய கலையில் மற்றவர்கள் பங்கு பெறுவதற்கான வாய்ப்பை அவ்வார்த்தை அளிக்-

[1] ஜெப்பின் மொழி பெயர்ப்பு.

கின்றதேதவிர, கிரேக்கர் தனிப்பட்ட இனத்தவர் என்ற மூலாதாரத் திற்கு உதவாது.' முப்பது அல்லது நாற்பது ஆண்டுகளுக்கு முன் யூரிபைடிஸைத் தவிர யாரும் இவ்விதமாகப் பேசுவதற்கு நெஞ்சுரம் கொண்டிருக்கவில்லை. ஐஸோகிராட்டிஸ் தன்னால் புகழப்பட்ட அறிவின் ஒளிக்கும், அவன் காலத்தில் அழிந்துகொண்டிருந்த பொதுமக்களுடைய பழைய கருத்துக்களுக்கும், தொடர்பிருந்த தென்பதைத் தெரிந்துகொள்ளவில்லை. உலகக் குடிமக்களைப் பற்றிப் புகழ்ந்து பேசுகிற ஐஸோகிராட்டிஸ், சோலோன் காலத்திய கிரேக் கர்களின் நிலைமை மாறியதற்காக வருந்துவதும், அரியோபேகஸ் என்ற நீதி மன்றம் அத்தீனியக் குடிமக்களின் வாழ்க்கையைக் கட்டுப்படுத்திவந்த முறை மறபடியும் புதுப்பிக்கப்பட வேண்டு மென்று கூறுவதும் நமக்கு நூதனமாக இருக்கின்றன.

அக்காலத்தைப் பற்றிய விவரங்களை அக்காலத்தில் வளர்ந்த கலையின் கண்கொண்டே பார்க்கவேண்டும். நான்காம் நூற்றாண்டின் உள்ளுயிரைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டு மாயின் முதலில் நாம் பிராக்ஸிட்டெலஸ் உருவாக்கிய சித்திரங்களை வரிசையாக உற்று நோக்கவேண்டும். பின்பு அவற்றிலுள்ள கருத் துக்களைப் பிடியாஸின் சித்திரக்கலைக் கூட்டத்தில் உருவாக்கப்பட்ட சித்திரங்களோடு ஒப்பிடவேண்டும். தனிப்பட்ட மனிதன், நாட்டில் தன் உரிமைக்காகப் போராடுவதைப்போலவே, சிற்பிகளும் பழைய முறைகளைப் பின்பற்றாமல் தங்கள் விருப்பத்திற் கிசைந்தவாறு சிற்பக்கலையை வளர்த்தனர். கோயில்களிலுள்ள தெய்வங்களின் உருவங்களையும், சிற்பங்களையும் பழைய முறைப்படி செய்து வரும் பழக்கத்திலிருந்து சிற்பியர் விடுபட்டுப் புதிய முறைகளைக் கொண்டு வந்தனர். ஐந்தாம் நூற்றாண்டில் ஏதென்ஸிலும், ஒலிம்பியா விலும், பிடியாஸ் செய்த பெரிய சிற்பங்கள் இருந்தன. அக் காலத்தில் சிற்பக்கலையில் சிறப்பான மாறுதல்கள் ஏற்பட ஆரம்பித்து விட்டன. நான்காம் நூற்றாண்டில் அக் கலை முன்னேற்றமடைய ஆரம்பித்தது. ஸ்க்கோமாஸ் என்ற சிற்பி, தன் இளமையில் தேஜே (Tegea) என்ற நகரிலிருந்த அத்தேனா அலேயா என்ற ஆலயத்தைச் சிற்பங்களால் அலங்கரித்தான். அவனுடைய அந்திய காலத்தில் காரியான் இளவரசனுடைய (Carian prince) கல்லறையைக் கட்டினான். பொதுவாக அந்தச் சிற்பி பழங்கால வழக்கத்திற்கு மாறான முறையில் சிற்பங்களை உருவாக்கினான். பாக்ஸிட்டெல் லஸின் சிற்பங்களும் நூதனமுறையில் அமைந்திருந்தன. சிற்பக் கலையில் மாறுதல் ஏற்பட்டதைப்போல சமயக் கோட்பாட்டிலும் மாறுதல்கள் ஏற்படவாரம்பித்தன. பிடியாஸ் காலத்திலிருந்த சிற்பி, தெய்வங்களை மனித உருவில் செய்தபோதிலும், மனிதர் களுக்கில்லாத சிறப்பான குணங்களை அவை பெற்றிருப்பதாகத் தோன்றுமளவில் சிற்பங்கள் செய்தான். நான்காம் நூற்றாண்டில்

செதுக்கப்பட்ட சிலைகளில் அவை பழங்காலச் சிறப்பை இழந்தன. அவை சாதாரண மனிதர்களையே உருவத்திலும் பண்பிலும் ஒத்திருப்பதாகச் செய்யப்பட்டுள்ளன. மனிதர்களுக்கு ஏற்படும் உணர்ச்சிகள் அவற்றுக்கு முண்டு என்ற முறையில் அவை செதுக்கப்பட்டுள்ளன. சஞ்சலம் என்ற பண்பைத் தவிர மற்ற உணர்ச்சிகளின் சாயல்கள் தெய்வ விக்கிரகங்களில் சித்திரித்துக் காண்பிக்கப்பட்டுள்ளன. இந்த வேறுபாட்டை, பார்த்தினன் சிலைகளில் காணலாம். அதை பிராக்ஸிட்டெல்லஸ் செதுக்கிய சிலைகளிலும் காணக்கூடும். ஒலிம்பியாவிலே ஹேரா ஆலயத்திலுள்ள ஹெர்மெஸ் என்ற தெய்வத்தின் சிலை இதற்கு எடுத்துக்காட்டாக விளங்குகிறது. சினிடஸின் அப்ரோடைட்டும் (Aphrodite of Cnidus) ஓர் உதாரணமாக இருக்கிறது. குளிக்கும் அறைக்குச் செல்லும் ஒரு பெண் தன்னுடைய உடலின் அழகைக் காட்ட நாணுவதைப்போல் அவ்வுருவம் செய்யப்பட்டுள்ளது. சாட்டிர் (Satyr) என்ற உருவம் ஒன்றுள்ளது. அது மனித சிரசும் மிருகத்தின் மூளையும் கொண்டதாக அமைக்கப்பட்டிருக்கிறது. அவ்வுருவம் தனியாள் தத்துவத்திற்கு இருவிதமான பொருள் கொடுக்கிறது. ஒவ்வொரு கலைஞனும் தன் சொந்தக் கற்பனைசக்திக் கேற்றவாறு சிற்பக்கலையை வளர்த்தான். தனிப்பட்ட மனிதன் அல்லது பெண்ணின் சுபாவத்தை வெளிப்படுத்துவதே அவர்களுடைய நோக்கமாக இருந்தது.

சிற்பக்கலையிலேற்பட்ட மாறுதலுக்கும், அத்தீனியர்களுடைய அரசியல் வாழ்க்கையிலேற்பட்ட மாறுதலுக்கும் நெருங்கிய தொடர்புண்டு. தனியாளின் நலனுக்காகவே அரசாங்கம் இருக்க வேண்டும் என்ற கருத்து இக்காலத்தில் வளர ஆரம்பித்தது. குடிமக்கள் கூட்டுறவு முறையைக் கொண்ட சமுதாயத்திற்கு ஒப்பானவர்கள் என்றும், அரசாங்கத்தினல் வரும் இலாபத்தை அவர்களே சமமாகப் பகிர்ந்துகொள்ளவேண்டும் என்ற கருத்தும், வளர ஆரம்பித்தன. இது அக்காலப் பொதுமக்களின் கருத்தாக இருந்தது. அக்காலத்திலுள்ளவர்கள் அந்நியநாடுகளின் விவகாரங்களில் தலையிடுவதை விரும்பவில்லை. ஏனெனில் இதனல் அவர்களுடைய வணிகத்திற்குப் பாதுகாப்பும் முன்னேற்றமும், ஏற்படாதென்பதை அவர்கள் உணர்ந்திருந்தார்கள். நான்காம் நூற்ருண்டில் அவர்களுடைய நிராசை குறைவாகவும் அவர்களுடைய கீர்த்தி மங்கியும் இருந்தன. எனினும், ஐந்தாம் நூற்ருண்டைவிட இந்த நூற்ருண்டில் அவர்கள் சுதந்திரமுள்ளவர்களாகவும், மகிழ்ச்சியுள்ளவர்களாகவும் வாழந்துவந்தார்கள்.

**அத்தீனிய வணிகம் ; பாங்குகள் ; வட்டி விகிதம்.**

ஏதென்ஸ் பேரரசை இழந்த போதிலும், அதன் வணிகம் வீழ்ச்சி யடையவில்லை ; சிறந்தே விளங்கியது. அதன் வியாபார

முன்னேற்றம் கொரிந்தியாவிற்குக் கவலையை யளித்தது. ஏதென்ஸின் வணிகத்தை அழிக்கவே, கொரிந்தியா, போரை ஆரம்பித்தது. ஏதென்ஸ் தன்னுடைய வணிகத்தைச் சிறந்த முறையில் நடத்திவந்தது. அத்துறையில் அதற்குப் போட்டியாக ரோட்ஸ்தீவு இருந்துவந்தது. ரோட்ஸ் கிழக்கு மத்தியதரைக்கடலில் வியாபார மார்க்கத்தின் நடுநாயகமாக விளங்கிற்று. நீண்ட நாட்களாக ரோட்ஸ் அத்தீனிய வியாபாரத்திற்குத் தடையாக இருந்ததில்லை. அட்டிகாவின் ஜனத்தொகை குறைந்துவிட்டது. சுமார் 35,000 ஆண்கள் இருந்த விடத்தில் கொள்ளை நோய் காரணமாகவும் போரின் காரணமாகவும் 21,000 ஆண்களே யிருந்தனர். ஆனால் அதைக் கெடுதலென்று கருதுவதற்கில்லை. அட்டிகாவில் ஜனப் பெருக்கம் அதிகரித்துள்ள அக்காலத்தில், குடியேற்றத்திற்கான நாடுகளில்லை. மக்கள் தொகை குறைந்தபோதிலும் வேலையில்லா நெருக்கடி அட்டிகாவிலிருந்தது. ஆகையால் அட்டிகாவின் இளைஞர் களும் போர் வீரர்களும் வேலைக்காக அயல்நாடுகளுக்குச் செல்ல வேண்டியதாயிற்று. பிரேயஸ் (Piraeus) துறைமுகத்தின் காரண மாக அத்தீனிய வணிகம் முன்னேற்றமடைந்தது. ஏதென்ஸ், துறைமுகத்தை விரிவாக்குவதில் ஊக்கம் கொண்டிருந்தது. பலர் துறைமுகப் பட்டினத்திலிருந்து வெளியேறிவிட்டனர். பாங்குகள் பல அங்கே நிறுவப்பட்டன. இதன் காரணமாக அவர்களுடைய வணிகம் வளர்ந்தது. பணத்தைக் கோவிலின் பாதுகாப்பில் வைப்பது நீண்டநாள் பழக்கமாக இருந்தது. கோயில்களின் குருமார்கள் இவற்றை மற்றவர்களுக்கு வட்டிக்குக் கடன் கொடுத்து வந்தார்கள். பண மாற்றுதல் செய்கிறவர்கள் இந்த முறையைப் பின்பற்ற ஆரம்பித்தார்கள். பாசியோன் (Pasion) என்பவன் ஏதென்ஸில் ஒரு நாணயச் சாலையை 50 தாலந்து மூலதனத்தோடு ஆரம்பித்தான். கிரேக்க நாட்டிலுள்ள வணிகத்துறைகளுடன் இந்த நாணயச்சாலை கடன் வாங்குதல், கடன் கொடுத்தல் முதலிய தொடர்பு கொண்டிருந்தது. இவ்விதமாகப் பணவரவு செலவு, கடிதங்கள் மூலமாக நடைபெற்றன. நாணயங்களை உபயோகிப் பதற்குப் பதிலாகக் கடிதங்கள் மூலமாக இவர்கள் கடன் கொடுத்தும், கடன்வாங்கியும் வந்தார்கள். இம் முறையினால் வியாபாரம் முன்னேற்ற மடைந்தது. இதன் காரணமாகப் பணப் பெருக்கு ஏற்பட்டது. விலைவாசிகள் முன்னைவிடப் பன்மடங்கு அதிகரித் திருந்தன. ஐந்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் உலோகங்கள், சிறப்பாக, தங்கம் கிரேக்க நாட்டில் அதிகரித்திருந்தது. தொடர்ச் சியாக நடந்த போரின் காரணமாக கோயில்களில் சேமித்து வைக்கப் பட்டிருந்த தங்கம், நாணயங்களாக மாற்றப்பட்டன. நாணயச் சாலைகளின் மூலமாக, முடங்கிக் கிடந்த பணம் புழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டது, விலைமதிப்புள்ள உலோகங்கள் மலிந்து

கிடந்தபோதிலும், வட்டிவிகிதம் உயர்ந்திருந்தது. அங்கே பன்னிரண்டு சதவிகிதத்திற்கு வட்டிக்குப் பணம் கொடுத்தல், கடன் வாங்குதல் பழக்கத்தில் இருந்துவந்தது. தொழிற்சாலைகள் வளம் பெற்றிருந்தன. வணிகம் முன்னேற்ற மடைந்திருந்தது. தொழிற்சாலைகளை வளம் பெறச் செய்யும் மூலதனம் மிகவும் தேவைப்பட்டது. அக்காலத்து 50 தாலந்து, ஆங்கில நாணய மதிப்பின்படி, 10,000 பவுன் என மதிப்பிடப்படுகிறது. 10,000 பவுன் மதிப்புள்ள 50 தாலந்து, 1500 பவுன் மதிப்புள்ள வட்டியை ஆண்டுதோறும் கொண்டுவந்தது. 50 தாலந்து எடையுள்ள கிரேக்கத் தங்கம், அதற்குச் சமமான எடையுள்ள தற்காலத்துத் தங்கத்திற்கு வாங்கும் பொருள்களின் மதிப்பைவிட உயர்ந்திருந்தது.

### சோஷியலிஸம்

மூலதன வளர்ச்சியின் காரணமாகவும், தனியாள் தத்துவ வளர்ச்சியின் காரணமாகவும், சமுதாயப் பொதுவுடைமையின் கருத்துக்கள் வளருவது தடுக்கமுடியாத ஒரு செயலாகிவிட்டது. செல்வந்தர்கள் அனுபவித்துவரும் பொருளாதாரச் செல்வாக்கிற்கும் குடிமக்கள் அனுபவித்துவரும் அரசியல் சமத்துவத்திற்குமிடையேயிருந்த வேறுபாட்டை, குடிமக்களில் ஏழ்மை நிலையிலிருந்தவர்கள் உணர்ந்து வந்தனர். சமூகத்தில் செல்வத்தின் காரணமாக ஏற்றத்தாழ்வு இருந்துவந்தது. சமூகத்தில் சமத்துவம் இருந்தாலொழிய அரசியலில் சமத்துவமிருப்பதற்கு வழியில்லை யென்பதையும் உணர ஆரம்பித்தார்கள். ஏனென்றால், திரண்ட செல்வம் படைத்தவர்களுக்கு அரசாங்கத்தில் செல்வாக்கிருந்தது. அவர்கள் தங்களை உயர்ந்தவர்களாகக் கருதினார்கள். நவீன காலத்து ஐரோப்பாவைப் போல, பழங்காலக் கிரீஸிஸ் மூலதனமும், மக்களாட்சிக் கோட்பாடும், சோஷலிஸக் கொள்கையினரை எழுப்பின. சமூகத்தில் சமத்துவம் ஏற்படுத்த அரசாங்கம் சொத்துகளைச் சமமாகப் பங்கிட்டுக்கொடுக்க வேண்டுமென்று அவர்கள் போதித்தனர். அரிஸ்ட்டோபேன், தான் எழுதிய ‘பெண்களின் பாராளுமன்றம்’ என்ற நூலிலும், ‘செல்வம்’ என்ற நூலிலும், இக் கொள்கையைக் கேலி செய்திருக்கிறான். பிளாட்டோ, ‘குடியரசு’ (Republic) என்ற நூலில், சமுதாயப் பொதுவுடைமையைப்பற்றி விவரித்துள்ளான். சமுதாயப் பொதுவுடைமைக் கருத்துக்கள் அவனால் கொண்டுவரப்பட்டவை அல்ல. அவன் அவற்றிற்கு மூலகர்த்தாவுமல்லன். அக்காலத்தில் வழக்கிலிருந்த சமுதாயப் பொதுவுடைமைக் கருத்துக்களையே பிளாட்டோ தன் ‘குடியரசு’ என்ற நூலில் விளக்கிக் கூறியுள்ளான். அத்தீனியர்கள் அரசியல் குடியாட்சி முறையைவிட்டு சமூகக் குடியாட்சி முறையைப் பின்பற்ற வில்லையென்பது மகிழ்ச்சிக்குரியதாகிவிட்டது. இவ்விதமான மாறுதல் ஏற்படாததற்கு அத்தீனிய அரசியல் அறிஞர்கள்,

காரணமாயிருந்தனர். அவர்கள் சமூகக் குடியாட்சிக்கொள்கையினுல் ஏற்படக்கூடிய கெடுதல்களை நன்கறிந்திருந்தார்கள். ஆகவே ஏதென்ஸில் அரசியல் குடியாட்சி நிலைத்திருந்தது.

### சபைக் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளுகிறவர்களின் சம்பளம் (கி மு.389-க்கு முன் கொண்டுவரப்பட்டது)

அத்தீனிய தேசிய சபையின் கூட்டத்தில் பங்கெடுத்துக் கொள்ளுகிறவர்களுக்கு, தினம் அரை ($\frac{1}{2}$) டார்ச்சுமா பணம் கொடுக்கும் பழக்கம் கொண்டுவரப்பட்டது. விலைவாசிகளின் உயர்வு காரணமாக, சம்பள உயர்வு ஏற்பட்டது. ஒழுங்காகத் தொடர்ச்சியாக நடைபெறும் கூட்டங்களில் நிகழ்ச்சி நிரல்கள் கவர்ச்சிகரமாக இல்லாத சந்தர்ப்பங்கள் பல இருந்தன. அப்படிப்பட்ட கூட்டங்களில் பங்கெடுத்துக்கொள்பவர்களுக்கு ஒரு நபருக்கு ஒன்றரை டார்ச்சுமா சம்பளம் அளித்தனர். சபையின் மற்றக் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொள்பவர்களுக்கு ஒரு டார்ச்சுமாவாக உயர்த்தினுர்கள். நீதி மன்றங்களில் பணிபுரிந்து வருபவர்களின் சம்பளம் உயர்த்தப்படவில்லை. அங்கு வழக்குகளின் விசாரணையில் கலந்து கொள்ளுகிறவர்களுக்கு அரை டார்ச்சுமா அளிக்கப்பட்டது. அரசியல் கடமைகளைச் செய்பவர்களுக்குப் பணம் கொடுப்பதை மக்களாட்சியின் சிறப்பென்று அத்தீனியர்கள் கருதினுர்கள். நாடகக் கொட்டகைகளில் அத்தீனிய ஏழைகளுக்கு அனுமதிச் சீட்டுக்கான பணம் வழங்கும் முறையும் எப்போது ஏற்பட்டதென்று இன்னும் நிர்ணயிக்கப்படவில்லை. அது பெரிக்கிளிஸ் காலத்தில் ஏற்படுத்தப்பட்டிருக்க வேண்டும். ஏதென்ஸ் தன் பேரரசின் வீழ்ச்சியிலிருந்து மறுபடியும் உயர்வுபெற்றெழுந்திருக்கும் வரையில் இப்பழக்கம் ஏற்பட்டிருக்கவே முடியாது. ஆனுல் இப்பழக்கம் நான்காம் நூற்றுண்டில் நடைமுறையிலிருந்தது. குடிமக்களுக்கு அடிக்கடி இவ்விதமான முறையில் பணம் கொடுக்கும் பழக்கம் அதிகரித்தபடியால், அது நெருக்கடி சமயத்திற்காக ஓர் நிதியை ஒதுக்கிவைக்க முடியவில்லை. ஏழைகளுக்குப் பணம் கொடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்ட நிதியை நிர்வகித்து நடத்தத் தனிப்பட்ட ஓர் அமைச்சர் தேவையாக இருந்தது; எந்த அரசியல் தலைவர்களின் காலத்தில் இந்நிதியிலிருந்து ஏழை மக்களுக்குப் பணம் அதிகமாகக் கொடுக்கப்பட்டதோ, அவர்கள் மிகவும் செல்வாக்குடையவர்களாகிவிட்டார்கள். நிதி சம்பந்தமான நிர்வாகம் தனிச் செல்வாக்கை அளித்தது. நிதி நிர்வாகத்திறமை சிறந்த முறையில் வளர்வதற்கு இம்முறை வாய்ப்பளித்தது. இவ்வாறு அரசாங்கம் வணிக சமுதாயத்தின் பண்பையுடைய அரசாங்கமாகக் காட்சியளித்தது. இதன் காரணமாக வரிப் பளுவும் அதிகரிக்க ஆரம்பித்துவிட்டது. இரண்டாவது அத்தீனியக் கூட்டமைப்பு ஏற்பட்ட ஓராண்டிற்குள், ஏதென்ஸ், ஸ்பார்ட்டா

வுடன் போர் தொடுக்க நேரிட்டது. அப்போது ஏதென்ஸ் சொத்து வரி வசூலிக்க ஆரம்பித்துவிட்டது. இவ் வரியின் காரணமாக சொத்துரிமையிலும் புதிய மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டன.

இவ்விதமாக ஏதென்ஸ் ஏழ்மை நிலையிலுள்ள குடிமக்களைச் செல்வம் படைத்த பணக்காரக் குடிமக்களின் செலவில் காப்பாற்றி வந்தது. இக்கொள்கை தனிப்பட்ட குடிமக்களின் வசதிக்காகவும், இன்பத்திற்காகவுமே, அரசாங்கம் நிலைப்பெற்றிருக்க வேண்டுமென்ற கருத்தை அரசியல் விஞ்ஞானத்தின் கோட்பாடாக மாற்றியது. இது ஏதென்ஸில் முதன்மையான கோட்பாடாக இருந்தது. மற்றக் கோட்பாடுகள் இதற்குக் கீழானவைகளாக மதிக்கப்பட்டன. நாம் ஏற்கெனவே கவனித்ததைப்போல. இக் கோட்பாடு ஏதென்ஸின் அயல்நாட்டுக் கொள்கையைப் பாதித்துவிட்டது. கிரீஸின் பொதுக் கருத்துக்கு மாருக, ஏதென்ஸ், சாமோஸிலும் மற்றவிடங்களிலும் குடியேற்றத்தை ஆரம்பித்தபோது, இலாபம் அடைவதையே தன் முதல் நோக்கமாகக் கொண்டது.

### நான்காம் நூற்ருண்டின் அரசியல் அமைப்பு

அரசியல் அமைப்பின்படி, அத்தீனியக் குடிமக்களாட்சி முறை மறுபடியும் நிலைநாட்டப்பட்டது ஒரு வியக்கத்தக்க வெற்றியாக இருந்தது. முப்பதின்மரின் ஆட்சியை, குடிமக்களாட்சிக் கொள்கைகளையுடைய அரசியல் அறிஞர்கள் கவிழ்த்தபோது அவர்களுக்கிருந்த இடுக்கண்கள் அறிவாற்றலோடும், நிதானத்தோடும் சமாளிக்கப்பட்டன. ஏனென்ருல் அதேவிதமான இடுக்கண்கள் மற்ற நாடுகளில் ஏற்பட்டபோது அவற்றை ஒழித்துக்கட்டுவதில் பலவிதமான கொலைகளும் கொடுமைகளும் நடந்தன. ஆலிகார்க்குகள் குடியாட்சிக் கொள்கையினர்களின் உடைமைகளைக் கொள்ளையிட்டார்கள். கொள்ளையடித்துக் கைப்பற்றிய பொருள்களை விற்றுவிட்டனர். விலைக்கு வாங்கியவர்கள் நஷ்ட ஈடு பெருமல் திருப்பிக்கொடுத்துவிட்டார்கள் ? முப்பதின்மரின் செயல்கள் யாவும் சட்டவிரோதமானதென்று பிரகடனம் செய்யப்பட்டதா ? இவ்விதமான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருந்தால், அதன் காரணமாக மன நிறைவற்றவர்கள் ஒன்று சேர்ந்து ஓர் தனிக் கட்சியை அரசாங்கத்திற்கு எதிராக ஏற்படுத்தக்கூடுமென்ற பயம் அங்கிருந்தது. மக்களாட்சிக் கட்சித் தலைவர்களில் பலர், தாங்கள் இழந்த சொத்துக்களுக்கு நஷ்டஈடு வேண்டியதில்லையென்று வெளிப்படையாக அறிவித்து விட்டார்கள். இவர்களுடைய பரந்த நோக்கத்தின் காரணமாக இரு கட்சிகளும், அதாவது குடியாட்சிக் கொள்கையினரும், ஆலிகார்க்குக் கொள்கையினரும் ஒரு சமரச முடிவுக்குவர வழியேற்பட்டது. திராஸிபூலஸூம், அவனைச் சார்ந்தவர்களும், இப்படிப்பட்ட அரிய சேவையைச் செய்தார்கள். மறுபடியும் ஏதென்ஸில் ஆலிகார்க்குகளால் எவ்வித சதித்

திட்டங்களும் ஏற்படவில்லை. பிற்காலத்தில் குடியாட்சிக் கொள்கைக்கு மாருக ஏதென்ஸில் கலகம் விளைவிக்கவில்லை.

### சபைக்குத் தலைமை தாங்குவதில் மாறுதல்கள்

இக் காலத்தில் சட்டங்கள் திருத்தப்பட்டன. நகரவாசிகளுடைய பதிவுகளும் திருத்தப்பட்டன. அரசியல் அமைப்பில் மட்டும் எவ்வித மாறுதலும் உண்டாக்கவில்லை. மேல் சபையில் தலைமை தாங்கும் இனத்தவர்களில் ஏழு நாட்களுக்கொருமுறை பத்து அங்கத்தினர்களைத் தேர்ந்தெடுத்து ஒரு குழு அமைப்பது வழக்கமாக இருந்தது. இக் குழு அத்தீனிய சபைக்குத் தலைமை வகித்தது. இந்த வழக்கம் இப்போது மாற்றப்பட்டுவிட்டது. பழைய வழக்கத்தைக் கைவிட்டு, ஒரு புதிய முறையைக் கொண்டுவந்தார்கள். இப்புது முறைப்படி சபைக்குத் தலைமை தாங்க ஒன்பது பேர் கொண்ட ஒரு குழுவை நியமித்தார்கள். அத்தீனிய சமூகம் பத்து இனங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் ஒன்பது இனத்திலிருந்து குழு அமைக்க ஓர் ஆள் தேர்ந்தெடுக்கப்பட்டான். நிர்வாகத்தின்மீது ஆதிக்கம் செலுத்தப் புதியமுறை கொண்டுவரப்பட்டது. மேல் சபை இப்போது நேரடியாக மக்கள் சபையோடு தொடர்பு கொள்ள வழியில்லாமல் போய்விட்டது. மேல்சபை கொண்டுவரும் தீர்மானங்கள் யாவும், பொது மக்களின் கருத்துப்படியே அமுலாக்க வேண்டிய சூழ்நிலை இதனுல் ஏற்பட்டது. மேலும் அரசாங்கமொழியினும், மாறுதல்களை எற்படுத்தினர். பழைய அட்டிக் எழுத்துக்களுக்குப்பதிலாக அயோனிக் எழுத்துக்கள் உபயோகத்திற்குக் கொண்டுவரப்பட்டன.

இக் காலத்தில் ஏதென்ஸ் அறிவாற்றலுள்ள தலைவர்களைத் தேடவில்லை. தன்னுடைய அரசாங்கத்தை ஒழுங்காக நடத்திச் செல்லக் கூடிய திறமைசாலிகளையே ஏதென்ஸ் விரும்பிற்று. இக் காலத்தில் அது அடைய வேண்டிய உயர்ந்த குறிக்கோள்களோ, அது தப்பிப் பிழைக்க வேண்டிய அபாயங்களோ அதற்கு நேரிடவில்லை. ஆகையால் பெரிக்கிளிஸ், தெமிஸ்ட்டோகிளிஸ் போன்ற தலைவர்கள் அதற்கு இப்போது தேவையில்லை; அத்தீனியப் பேரரசு வீழ்ச்சியுற்ற பிறகு இரண்டு தலைமுறைகள் வரையில் அறிவாற்றல் படைத்த அத்தீனியர்களுக்கு அந் நாட்டில் உயர்வடைய வழி ஏற்படவில்லை. ஆனுல் சாதாரணத் திறமையுடையோர் பலர் இருந்தனர். நிலையற்ற தலைவர்களின் கீழ் ஏதென்ஸ் நிராசையற்று வாழ்ந்து வந்தது. அவர்களில் அகிரியஸ் (Agyrrhius), கள்ளிஸ்ட்ராட்டஸ் (Callistratus), யூபூலஸ் முதலியவர்கள் சிறந்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் யாவரும் அவ்வளவு சிறப்புள்ள மனிதர்களல்லர். இலாப முறையை அகிரியஸ்கொண்டுவந்தான். இம்முறை தியேரிக் நிதிக்கு வழி காட்டியாக இருந்தது. பைலேயின் (Phyle) வீரர்களுடைய ஸ்பார்ட்டாவுக்கு விரோதமான கொள்கையை எதிர்த்தவர்களில்

அகிரியஸ் ஒருவன். இவனுடைய உறவினனுன. கள்ளிஸ்ட்ராட்டஸ் நீண்டநாள் அரசியலில் ஈடுபட்டிருந்தான். இவன் இரண்டாவது அத்தீனியக் கூட்டமைப்பை உருவாக்கியவன். கள்ளியாஸ் என்ற உடன்படிக்கையினுல் ஏற்பட்டது. இவன் எப்பாமினுண்டஸின் பகைவனுகவு மிருந்தான். இவனது கொள்கை அறிவும் நிதானமும் கொண்டு விளங்கியது. ஏதென்ஸ் ஸ்பார்ட்டாவைச் சார்ந்திராமல் சுதந்திரமாக வாழும் வலுவுள்ளதாக விளங்கவேண்டுமென்பதே இவனுடைய கொள்கையாய் இருந்தது. கிரீஸில் ஏதென்ஸும் ஸ்ப்பார்ட்டாவும் தலைமை நாடுகளாக விளங்க வேண்டு மென்பதே இவனுடைய விருப்பமாகும். அட்டிகா, போயிஷியாவின் அண்டை நாடாக இருந்ததால், தீப்ஸின் ஆக்ரமிப்பை ஒழித்துவிட வேண்டு மென்பதே இவன் கொள்கையாக விருந்தது.

அகிரியஸும் கள்ளிஸ்ட்ரார்ட்டஸும் ஸ்ட்ராட்டகோஸ் என்ற தலைமைப்பதவியை அடிக்கடி வகித்து வந்தார்கள். இவர்கள் கிளியானைப்போலவும், ஹைபர்போலஸைப்போலவும், அத்தீனிய சபைக்கு அறிவுரை அளிப்பவர்களாகவே இருந்து வந்தார்கள். படைக்கலை ஆண்டுதோறும் விருத்தியடைந்து வந்தது. படை முறையில் தங்கள் வாழ்நாட்களைக் கழித்துவந்த படைத் தலைவர் களில்லாமல் படைகள் தனிப்பட்ட முறையில் பெரிய காரியங்களைச் சாதிக்கத்தக்க நிலையிலில்லை. லேவுகாஸின் (Leucas) வீரனுக திமோத் தியுஸ் அக்காலத்தில் ஓர் சிறந்த படைத்தலைவனுக விளங்கினுன். நாக்ஸாஸின் (Naxos) வீரனுக சாபிரியாஸ் இந்தப் படைத்தலைவர் களில் ஒருவனுக இருந்தான். இக் காலத்துப் படைத்தலைவர்களில் ஒருவனுகிய எப்பிக்கிரேட்டிஸைப் பற்றி நாம் பல சந்தர்ப்பங்களில் படித்திருக்கிறோம். திமோத்தியுஸ் செல்வந்தனுக இருந்தான். அவனுடைய தந்தை கோனேன் இவனுக்குத் திரண்ட செல்வத்தை விட்டு இறந்து போனுன். இவன் தன் நாட்டின் நலனுக்காகவே தன் வாழ்நாள் முழுவதும் வருந்தியுழைத்துவந்தான். ஆனுல் சாபிரியாஸும் எப்பிகிராட்டிஸும். அந்நிய நாடுகளின் படையில் சேர்ந்து சேவைசெய்ததின் காரணமாகச் செல்வந்தர்களானுர்கள். எப்பிகிராட்டிஸ் திரேஸ் நாட்டு மன்னனுடைய மகளை மணந்து கொண்டான். இவன் தன் சொந்த நாட்டிற்கு எதிராகத் திரேஸ் மன்னனுடன் சேர்ந்து போரிட்டவன். படைத்தலைவர்களாகிய இவர்கள் எல்லோரும் ஏதென்ஸில் குடியிருப்பதற்குப்பதிலாகவெவ் வேறு ஊர்களில் வாழ்ந்து வந்தார்கள். அயல் நாடுகளில் இவர்கள் ஆடம்பரமாக வாழ முடிந்தது. ஏதென்ஸில் மக்கள் நடுத்தரமான எளிய வாழ்க்கையை விரும்பி வாழ்ந்து வந்தார்கள். அவர்கள் ஆடம்பரமாக வாழ்பவர்களிடம் அருவருப்புக் கொண்டனர். அத்தீனியக் குடிமக்கள் அயல்நாடுகளில் யுத்தப்பணிபுரிய விரும்பாத தின் காரணமாக, படைத் தலைவர்கள் கூலிக்குப் போர்புரியும் போர்

வீரர்களைத் தங்கள் படையில் சேர்த்துக் கொண்டார்கள். படைத் தலைவர்கள் தங்கள் வீரர்களுக்குச் செய்யும் செலவிற்கான பணத்தை அவர்களே தேடும்படியான நிலைமையும் ஏதென்ஸிலிருந்தது. இக்காலத்தில் ஏதென்ஸ், அயல் நாடுகளில் செய்த போர்களில் தோல்வி ஏற்படுவதற்கு அந் நாட்டின் அரசியல் அமைப்பு முறையும் காரணமாக இருந்தது. இக்காலத்தில் படைக்கு வேண்டிய வசதிகளை அரசாங்கம் செய்து கொடுக்கவில்லை. படை எடுப்பின் சார்பாக அல்லதுபோரிலிடுபடுவதன் சார்பாகச் சபை தன்னுடைய சம்மதத்தை வாக்கெடுப்பின் மூலமே தெரிவித்து வந்தது. ஆனால் தேவையான பணத்தைத்தேடித்தருவதில் அவர்கள் ஊக்கம் காட்டாதிருந்தார்கள். முதல் கூட்டத்தில் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி நடைபெறச் சம்மதித்த அதேசபையார், அடுத்த கூட்டத்தில் பண உதவி பொருளுதவி கொடுக்க முடியாதென்று மறுத்துவிடும் வழக்கத்தை அனுசரித்து வந்தார்கள். இவ்விதமாகப் போர் நடந்து கொண்டிருக்கும்போதே போர் வீரர்களுக்குத் தேவையான சாதனங்கள் அனுப்பப் படாமல் நிறுத்தப்பட்டு வந்தன. இக் குறைபாடு ஐந்தாம் நூற்றுண்டில் ஓர் பெரிய குறையாகத் தோன்ற வில்லை. ஏனென்றுல் அக்காலத்துப் படைத் தலைவர்கள் அரசியல் வல்லுநர்களாகவும் அத்தீனிய சபையில் செல்வாக்குள்ளவர்களாகவுமிருந்தார்கள். நான்காம் நூற்றுண்டில் படைத் தலைவர்கள் படையில் பணிபுரிவதைத் தங்கள் பிழைப்பாகக்கொண்டு வாழ்ந்து வந்தனர். இவர்கள் அரசியல்வாதிகளின் ஆணையின்படியே பணிபுரிந்து வந்தார்கள். கள்ளியாஸ் உடன்படிக்கைக்குப் பின் வந்த பத்தாண்டுகளில் ஏதென்ஸ் பல போர்களில் அயல் நாடுகளுடன் ஆக்கிரமிப்பின் காரணமாக ஈடுபட நேர்ந்தது. ஆனால் இச்சண்டைகளில் ஏதென்ஸ் சிறப்பான வெற்றிகளை அடையவுமில்லை. பெரியகாரியங்களைச் சாதிக்கவு மில்லை. ஏனென்றுல் ஏதென்ஸிடம் போதுமான போர்க்கருவிகளும் போருக்கான சாதனங்களுமில்லா திருந்தன. போர்க் கருவிகள் உற்பத்தி செய்வதற்குப் பணம் ஒதுக்கி வைக்கப்படவில்லை. ஆனால் தியோரிக் நிதிக்காகப் பணம் சேகரிக்கப்பட்டது. அந்நிதிக்குப் பணம் கொடுத்துவந்தவர்களின் இன்னல்களையும் நாம் நினைத்துப் பார்க்கவேண்டியிருக்கிறது.

# 14. தீப்ஸ்நகரின் கூட்டுத் தலைமை

## 1. பேரேயின் ஜேஸன், லூக்ட்ரா போர்

நூருண்டுக் காலம் கிரேக்கநாட்டின் ஆதிக்கம் ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் என்ற இரு பகை நாடுகளின் கைகளிலிருந்தன. கள்ளி யாஸின் சமாதான உடன்படிக்கை அவ்விரண்டு நாடுகளையும் சம நிலையில்வைத்தது. அவ்வுடன்படிக்கை உருவாக்கிய இரட்டைக் கொள்கைக்கு ஆரம்பத்திலிருந்தே அபாயம் ஏற்பட்டது. பழமை யான இரு நாடுகள் அனுபவத்துவந்த தலைமைப் பதவிக்குப் போட்டியிட, கடந்த சில ஆண்டுகளாகச் சில சக்திகள் உருவாயின என்பது தெளிவாயிருந்தது. தீப்ஸ், பேரே என்பவை அபாயத்தை விளைவிக்கக் கூடிய முறையில் முதன்மையான நகரங்ளாயின.

### பேரேயின்ஜேஸன், கி.மு. 371.

தீப்ஸ் நகரின் வளர்ச்சியை அறிந்த அளவிற்கு பேரே நாட்டின் வளர்ச்சியை நாம் அறிந்துகொள்ள வில்லை. கள்ளியாஸ் சமாதான உடன்படிக்கை சமயத்தில் நாம் அந்நாட்டைப்பற்றிக் கேள்விப் பட்டோம். தெஸாலியிலுள்ள நகரங்கள் ஒற்றுமையாக வாழவில்லை. அவை தங்களுக்குள் முரண்பட்டிருந்தன. இறுதியில் அவை தம் பகையை விட்டுவிட்டு ஒன்ருகச் சேர்ந்ததால் அங்கு வல்லரசு ஏற்பட்டது. அங்கு வல்லரசு ஏற்படுவதற்குப் பேரே என்ற சர்வாதிகாரி காரணமாகவிருந்தான்.

அவன் சலியா உழைப்பாளி; போர் விருப்பமுள்ளவன். ஆனுல் நிராசை கொண்டவன். தன்னுடைய ஆதிக்கத்தை தெஸாலிக்கு அப்பாலுள்ள கிரேக்க நாடுகளிலும் பரப்ப விரும்பினன். 6000 வீரர் களைக் கொண்ட கூலிப்படையையும் தம் அரசியல் திறனையும் கொண்டு அவன் தன் வல்லாட்சியைத் தெஸாலியில் நிலை நாட் டினுன். பார்ஸாலஸ் (Pharsalus) நகரத்தில் மிகுந்த செல்வாக்குள்ள ஒரு பெருமகன் ஸ்பார்ட்டாவிற்கு ஜேஸனின் நிராசையை எடுத்துக் காட்டி, அவனுடைய ஆதிக்கத்தை முளையிலேயே கிள்ளி விடும்படி

யோசனை கூறினன். ஸ்பார்ட்டாவிற்கு வேறு தொல்லைகள் இருந்த தால் அவன் கூறிய அறிவுரையை ஏற்றுக்கொள்ள வில்லை. ஆகை யால் ஜேஸன் பார்ஸ்ஸாலஸின் தலைவனுனன். அவன் தன் னுடைய அதிகாரத்தை ஈப்ரஸ் (Epirus) நாட்டிலும் நிலைபெறச் செய் தான். அந் நாட்டரசனுகிய ஆல்சிட்டாஸ், ஜேஸனின் தலைமையை ஏற்றுக்கொண்டான். மாசிடோனியாவும் அவனுக்குப் பணிந்து விட்டது. மிக அரிய அரசியல் திறனும், படைத்திறனும் படைத்த ஜேஸனிடத்தில் மிகச்சிறந்த குதிரைப் படையொன்று இருந்தது. அதற்கு ஒப்பான குதிரைப்படை கிரீஸில் எந்த நாட்டிலுமில்லை. ஐக்கிய கிரிஸுக்குத் தலைவனுகிய அவன், அப்போதிருந்த கிரேக்க நடவடிக்கைகளை மாற்றி அமைத்து வருவான் போல் தோன்றிற்று. கிரேக்க நாட்டிலுள்ள ஆதிக்கங்களைத் தன் கீழ்க் கொண்டுவர வேண்டு மென்பதே அவனுடைய ஆவல். ஆனுல் அவன் தன் ஆசையைப் பூர்த்தி செய்துகொள்வதற்கான மூல-ஆதாரங்களில்லை. ஐக்கிய தெஸாலியின் தலைவனுக இருந்ததால் அவனுக்கு ஓரளவிற்கு வெற்றி கிடைத்தது. பாரசீகத்தின்மீது படையெடுத்து அங்குள்ள பேரரசனை விழ்த்திவிட வேண்டுமென்பதே அவன் கண்ட கனவு. கப்பற்படையை உருவாக்குவதில் முனைந்திருந்ததே, அவன் எத்தனை யளவு தன் திட்டத்தின் மீது கண்ணுயிருந்தான் என்பதைக் காட்டு கிறது. நிலத்தால் சூழப்பட்ட ஐயோல்காஸ் (Iolcus) விரிகுடா விற்கு ஆர்கோ (Argo) கப்பல் சென்றதாகக்கூறும் கிரீஸ் நாட்டுக் கதை குறிப்பிடும் பெரும் கடலாதிக்கத்தை தெஸ்ஸாலி மீண்டும் அடைய ஆரம்பித்தது.

**ஸ்பார்ட்டா உடன்படிக்கைக்கு மாருக கிளியோம்ப்ரோட்டஸ் மன்னனை, தீப்ஸ் நாட்டின்மீது படையெடுக்கக் கட்டளை யிட்டது; கி.மு. 471 பொரோத்தோஸ் எதிர்ப்பு.**

ஸ்பார்ட்டாவின் ஆதிக்கம் அழிந்துவிட்டது. எனினும் அதைக் கிரேக்க நாடுகள் இன்னும் ஓர் வல்லரசாகவே கருதி வந்தன. அதன் பலத்தை மேலும் ஒடுக்க வேண்டுமென்பதும், வல்லரசு அட்டவணையிலிருந்து அதன் பெயரை எடுத்துவிட வேண்டுமென் பதும் ஜேஸனின் நோக்கங்களாயிருந்தன. தென் கிரீஸின் திறவு கோலாகிய தெர்மாபைலே கணவாயை உடனடியாகக் கைப்பற்ற வேண்டுமென்பது அவனுடைய இரண்டாவது ஆசை. ஆனுல் அக்கணவாயை ஸ்பார்ட்டாவின் குடியேற்ற நாடாகிய ஹொராக் கிளியா பாதுகாத்துவந்தது.

அவனுடைய இரு நோக்கங்களும் ஒன்ருக இணைக்கப்பட்டன. உடனே அவன் ஸ்பார்ட்டாவின் பகைகளைத் தேடினன். பக்கத்தி லிருந்த தீப்ஸ் தயங்காமல் அவனுடன் சேர்ந்துகொண்டது. போயிஷியன் கூட்டமைப்புக்கும், தெஸ்ஸாலியன் கூட்டமைப்புக்கு

மிடையே ஒரு நேச உறவு உடன்படிக்கை யுண்டாயிற்று. கள்ளியாஸ் உடன்படிக்கையின்படி ஒவ்வொரு நாடும் அவரவர் படையை அந்நிய நாடுகளிலிருந்து வரவழைத்துவிடவேண்டும்; ஏதென்ஸ், எப்பிகிராட்டிஸை, கார்ஸிராவைவிட்டுப் படையுடன் திரும்பிவந்து விட வேண்டுமெனக் கட்டளையிட்டது. ஆனால் ஸ்பார்ட்டா, ஒப்பந்தத்தின்படி நடந்துகொள்ளவில்லை. கிளியோம்ப்ரோட்டஸ் மன்னன் போசிஸ் நாட்டின்மீது படையெடுத்துச் சென்றான். உடன்படிக்கையில் கையொப்பமிட்ட பிறகும் அவன் தன்னுடைய படையைக் கலையவிடவில்லை. அவனைத் திரும்ப ஸ்பார்ட்டாவிற்கு வந்துவிடும்படி சொல்லவில்லை. அதற்கு மாறாக அவன் தன் படையைத் தீப்ஸ் நாட்டிற்கு எதிராகச் செலுத்தி, போயிஷிய கூட்டமைப்பைக் கலைத்துவிடும்படி கட்டாயப்படுத்துமாறு கட்டளையிட்டது. ஸ்பார்ட்டன் மக்கள் சபையில் ஒருவன் இந்தக் கொள்கை சரியான கொள்கை என்றான். 'புதிதாக ஏற்பட்ட சமாதான உடன்படிக்கையை மீறக் கூடாது' என்ற இந்தக் கூக்குரலுக்கு அரசாங்கம் செவிசாய்க்கவில்லை. இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்பார்ட்டா பகுத்தறிவை இழந்துவிட்டது. விதி அந்நாட்டினரின் மதியைக் கெடுத்து, அதை அழிவுக்கு இழுத்துச்செல்ல வேண்டுமென்பது அங்கிருந்த தெய்வங்களின் விருப்பம் என ஒருவன் கூறுகிறான். பகை அதன் அறிவை மறைத்தது. நீதி, கொள்கை, கோட்பாடுகள் யாவையும் மறந்துவிட்டார்கள். அவற்றை அவமதிக்கவும் செய்தனர். ஸ்பார்ட்டாவிற்கும் தீப்ஸுக்குமுள்ள போட்டி தவிர்க்க முடியாதது. ஸ்பார்ட்டன் வெற்றி மீது நம்பிக்கையுள்ளவர்கள். தீப்ஸ் நகரம் மறைந்து, அது மீண்டும் சிறு கிராமங்களாகிவிடப் போகிறதென்று எண்ணினர். ஸ்பார்ட்டா, கிளியோம்ப்ரோட்டஸின் படையைக் கலைத்துவிட்டு, உதவிசெய்ய விருப்பமுள்ள நேச நாடுகளின் துணை கொண்டு ஒரு புதிய படையைத் தயாரிக்கவேண்டியிருந்தது.

கிளியோம்ப்ரோட்டஸ் அப்பொழுது போசிஸ் போயிஷியா நாடுகளுக்கிடையிலுள்ள வாயிலில் சேரோனே (Chaeroneo) என்ற இடத்துக்கருகில் இருந்தான். தீப்ஸ் பட்டணத்தை அணுகிவிட வேண்டுமென்பது அவன் நோக்கம். அவன் பிரயாணம் செய்ய வேண்டிய நேர்வழி மேற்கில் கோப்பேஸ் (Copais) ஏரியின் மேல் தென் கரைகள் வழியாகவும், கோரோனே, ஹாலியார்ட்டஸ் வழியாகவும் சென்றது. அவனை வழியில் தடுத்து நிறுத்திவிட தீப்ஸ் முடிவு கட்டியது. ஆகையால் கோரோனேக்கருகில் ஒரு படையை நிறுத்தி வைத்தனர். அதே இடத்தில் கால் நூற்றாண்டிற்கு முன் எஜிஸிலாஸ் மன்னனை அவர்கள் வழி மடக்கினார்கள் ஆனால் கிளியோம்ப்ரோட்டஸ் பகைவன் ஏமாறும்படி செய்துவிட்டான். அவன் ஹெலிக்கோன் குன்றிலிருந்து தீஸ்பேக்குச் சுற்றிப் போகக் கூடிய ஒரு கடினமான பாதையில் பிரயாணம் செய்தான். அங்

கிருந்து அவன் செருசிஸ் துறைமுகத்தையடைந்தான். பன்னிரண்டு தீபன் கப்பல்களோடு துறைமுகத்தைக் கைப்பற்றினுன். இவ்வாறு, பகைவர் பின்புறமாகத் தாக்காவண்ணம் தன்னைப் பாதுகாத்துக்கொண்டு, வடக்கு நோக்கி தீப்ஸுக்குச் செல்லும் சாலையில் வேகமாக முன்னேறிக்கொண்டிருந்தான்.

**லூக்ட்ராவில் படைகளின் நிலை; எப்பிமினுன்டஸின் யுத்த தந்திரம்.**

கிளியோம்ப்ரோட்டஸ் லூக்ட்ராக் குன்றின் உச்சியை யடைந்தான். அங்கிருந்தப்படியே அவன் பார்வையைச் செலுத்தினுன். அவனுக்கெதிரில் அவனுடைய பாதையை, அடைத்துக்கொண்டிருக்கிற தீப்ஸ் படையைக் கணடான். லூக்ட்ரா, குன்றுகளின் மேலுள்ள ஓர் இடம். அக் குன்றுகள் ஒரு சிறிய சமவெளியின் தெற்கிலிருப்பவை. அச் சமவெளி அரைமைலுக்கு மேல் அகலாயிருந்தது. அசோப்ஸ் ஓடை அச்சமவெளியின் குறுக்கே ஓடியது. கடற்கரையிலிருந்து தீப்ஸ்நகருக்குச் செல்லும் ஒருசாலை சமவெளியைக் கடந்து குன்றுகளின் வலப்பக்கமாக ஏறிச்செல்லுகிறது. அங்கே இப்பொழுது போஷியர் படை அணிவகுத்து நின்றது. சாலைக்குச்சற்றுக் கிழக்கில் தாழ்வான குன்றுகளில் ஒன்றின் வட்டமான மேல் பாகத்தைச் சமபடுத்தி, பெரிதாக்கி, அங்கு மிருதுவான ஒரு மேடையை அமைத்தார்கள். இங்கே திபன்ஹப்லைட்டுகளின் இடது சாரியில் படை நிறுத்தப்பட்டது. கை வேலைப்பாடான மேடொன்று இன்றைக்கும் அங்கிருப்பதை நாம் காணலாம். போர்செய்ய வந்துள்ள இருநாடுகளின் படையெண்ணிக்கையை நாம் அறிவோம். லாசிடாமோனியர்களிடம் சுமார் பதினோராயிரம் போர் வீரர்களும், தீபர்களிடம் சுமார் ஆறுயிரம் போர் வீரர்களுமிருந்திருக்கலாம். எண்ணிக்கையினுல் ஏற்பட்ட குறைவை நிறைவாக்கப் போர்த்திறன் பெற்ற ஓர் தீபன் அங்குவந்து முதல் தடவையாகத் தன் பெரும் சக்தியை வெளிப்படுத்தினுன். எப்பாமினுண்டஸ் இடதுசாரிப் படைக்குத் தலைமை தாங்கினுன். பெலோப்பிடாஸ் தலைமையில் புனிதக் குழு என்ற படை கிளியோம்ப்ரோட்டஸ் மன்னனை எதிர்த்து நின்றது. கிளியோம்ப்ரோட்டஸ் மன்னன் ஸ்பார்ட்டன் படையின் வலதுசாரிப் படைக்குத் தலைவன். இடதுசாரிப் படை வெற்றியைக் கொண்டு வந்துவிடுமென்று எப்பாமினுன்டஸ் நம்பினுன். யுத்தத்தின் முடிவு இரு படைகளும் மோதிக்கொள்வதைப் பொறுத்திருந்தது. போயிஷியர்கள் வலது பக்கத்திலும் மத்தியிலும் பொருத்திவைக்கப்பட்டிருந்தார்கள். தெஸ்பியர்கள் அவ்விடத்தை விட்டு அகலும்படி கடைசி நேரத்தில் கூறப்பட்டனர். போயிஷியர்களும், லாசிடாமோனியர்களின் நேசநாடுகளும், அப்போர் வீரர்களைத் தடுத்து, அவர்களை மீண்டும் படை வீடுகளுக்குத் திரும்பும்படி

செய்தார்கள். அவர்கள் படையை விட்டு விலகி இந்தச் செயலில் ஈடுபட்டதினால், லாசிடாமோனியப் படையில் பலவீனம் ஏற்பட்டது.

லூக்ட்ரா போர்க்களம், கி.மு. 371.

போர் தொடங்கியது. குதிரைப்படைகளும், குதிரைப்படைகளும் மோதிக் கொண்டன. லாசிடாமோனியர்களின் குதிரைப் படை எப்பொழுதும் பலவீனமானது. எனவே, இது தோற்றுப்போய் பின்வாங்கி யோடியது. அதனால் லாசிடாமோனியக் குதிரைப்



Position before the Battle of Leuctra, B.C. 371.

படையில் பலவீனம் ஏற்பட்டது. கிளியோம்ப்ரோட்டஸ் இனி வெற்றியடைவோமென்பதில் முழு நம்பிக்கை கொண்டான். அவன் தன் படைகளுடன் மேட்டிலிருந்து கீழிறங்கி எப்பாமினண்டஸ் தலைமையிலிருந்த தீபன் இடதுசாரிப் படையின்மீது பாய்ந்தான். அவனுடைய இடதுசாரியிலும் மத்தியிலும் நிறுத்திவைக்கப்பட்ட

படைகள் செயலில் இறங்காவண்ணம், குதிரைப்படையினல் தடுக்கப் பட்டது. எப்பாமினண்டஸ் தன்னுடைய தீபன் போர் வீரர்களுடன் கிளியோம்ப்ரோட்டஸை எதிர்க்காமல் மேலும் கீழ் நோக்கிச் சென்ருன். அந்தச் சமயத்தில் மற்றப்படைகள் அவற்றிற்குரிய இடங்களில் நின்றுகொண்டிருந்தன. எப்பாமினண்டஸின் இப் புதிய முறை, போரின் முடிவைத் தீர்மானித்தது. பெலோப் பிடாஸின் படை இடசாரியின் இரு பக்கங்களிலும் நின்று கொண் டிருந்தது. அப்போது இடசாரியின் மத்தியில் அகப்பட்ட ஸ்பார்ட்டா படையைத் தாக்கினன். அத் தாக்குதலை வீரத்தோடு எதிர்த்த ஸ்பார்ட்டர்களால், அவர்களைச் சமாளிக்க முடியவில்லை. கிளியோம்ப்ரோட்டஸ் அடிபட்டு கீழேவிழுந்து உயிர்துறந்தான். இரு பக்கங்களிலும் பலர் கொல்லப்பட்டதால் குருதியாறு வழிந்து ஓடியது. தீப்ஸ் நகரத்துப் படை, ஸ்பார்ட்டன் போர் வீரர்களை அவர்களுடைய படை வீட்டிற்கு விரட்டியடித்தது. போர்க்களத்தின் மற்றப்பாகங்களிலும் சிறு சண்டையும், படு கொலையும் நடந்தன. லாசிடமோனியர்களின் நேச நாட்டினர் வலதுசாரிப்படைக்கு ஏற்பட்ட கதியைக் கண்டு மேலும் போர் செய்யாமல் திரும்பினர்.

**போருக்குப் பிறகு லூக்ட்ராவின் நிலை; ஆர்ச்சிடாமஸ் தலைமையில் உதவிப் படை; ஏதென்ஸில் செருக்களச் செய்தி எட்டுதல்.**

ஓராயிரம் லாசிடாமோனியர் செருக்களத்தில் கொல்லப்பட்டனர். 400 ஸ்பார்ட்டன் வீரர்களும் உயிரிழந்தனர். எஞ்சியவர் தோல் வியை ஒப்புக் கொண்டு, இறந்தவர்களை எடுத்துச் செல்ல வழக் கமான ஒரு தற்காலிக உடன்படிக்கை செய்துகொண்டனர். பாதுகாப்பான இடமாகிய கிரியூசிஸ் (Creusis) துறைமுகத்திற்கு அவர்கள் உடனடியாகத் திரும்பிப் போயிருப்பார்களென்று நினைக் கலாம். கிரியூசிஸ் மன்னன் முன்யோசனையோடு அந்தப் பாது காப்பை ஏற்படுத்தியிருந்தான். எனினும், திரும்பிச் செல்கையில் எண்ணிக்கையில் அதிகமான இவர்களைத் தடுக்கவோ துன்புறுத் தவோ இல்லை. எதிர்பாராமல் அடைந்த அவ் வெற்றி, தீப்ஸி யருக்கு மிக்க வியப்பாயிருந்தது. லாசிடமோனியர்களைத் திறந்த போர்க்களத்தில் தோற்கடித்து, அவர்கள் மன்னனைக் கொன்றது, அவர்களைப் போயிஷியாவை விட்டுத் துரத்தியது முதலான செயல்கள் அவர்களுக்கு மனநிறைவை யளித்தன. ஆனல் லாசிடாமோனியர் களுக்குத் திரும்பிச் செல்ல மனமில்லை. இன்னும் பாதுகாப்புக்காக ஏற்படுத்திய குழிகளில் தங்கிவிட்டார்கள். புதியபடை யுதவி ஸ்பார்ட்டாவிலிருந்து வரும்; அதைக்கொண்டு இழந்த வெற் றியைத் திரும்பப் பெறலாம் என்று மனக்கோட்டை கட்டினர். தூதுவனொருவன் ஸ்பார்ட்டாவிற்குத் துக்கச் செய்தியை எடுத்துச் சென்ருன். துக்கத்தையும் மகிழ்ச்சியையும் ஒன்ருகப் பாவிக்கும்

பண்புடையவர்கள் ஸ்பார்ட்டனர். அவர்களுக்கும் முதலில் அதிர்ச்சிதான் ஏற்பட்டது. எனினும் அதைச் சமாளித்துக் கொண்டார்கள். ஸ்பார்ட்டன் நகரில் மீதியுள்ள படைகள் ஒன்ருகத் திரட்டப்பட்டன. அதை எஜிஸ்லாஸின்மகன் ஆர்ச்சிடாமஸ் தலைமையில் அனுப்பினுர்கள். சில நேசநாடுகளும் படை உதவி யளித்தன. கப்பல் மூலம் அப்படை கொரிந்தியாவிலிருந்து கிரியூஸிஸ் துறைமுகத்திற்கு அனுப்பப்பட்டது.

ஸ்பார்ட்டனர் படை உதவி அனுப்பியபோது, தீப்ஸ் நாட்டு மக்கள் சோம்பித்திரியவில்லை. வாகைச் செய்தியை எடுத்துச்சொல்ல ஏதென்ஸிற்கும், தெஸ்ஸாலிக்கும் தூதுவர்களை அனுப்பினுர்கள். வெற்றிமாலையுடன் வந்த அந்தத் தூதுவனை ஏதென்ஸ் அன்புடன் வரவேற்க வில்லை. அவனைப் பொருமையின் கண்கொண்டு நோக் கியது. சமீபத்தில் ஏற்பட்ட சமாதான உடன்படிக்கை முறிவடைந்து விடுமென எண்ணினுர்கள். அதே சமயத்தில் பேரேயில் மரியாதை யுடன் தூதுவன் வரவேற்கப்பட்டான். ஜேஸன் போர்க்கோலம் பூண்டான். குதிரைப்படை, காலாட்படையுடன் தீப்ஸை நோக்கி வாயுவேகத்தில் பறந்தான். வழியில் அவனுடைய பகைநாடாகிய போஸிஸ் நாட்டைக் கடந்து சென்ருன். எதிர்பாராதமுறையில் அவன் தங்கள் நாட்டிற்குள் புகுந்து சென்றதையறிந்து போஸிஸ் நாட்டினர் வியப்படைந்தார்கள். ஆறு அல்லது ஏழுநாட்கள் கழித்து ஜேஸன் செருக்களம் சேர்ந்தான். அவனுடைய படை யுதவியைக் கொண்டு பகைவன் படை வீட்டைத்தாக்கத் தீபன்கள் கருதினர். அதனுல் வரும் அபாயத்தைக் கண்டு அவர்கள் அஞ்ச வில்லை. லாசிடேமோனியர்கள் படுதோல்வி யடைவதையும், தீபர்கள் மேற்கொண்டு வெற்றி பெறுவதையும், ஜேஸன் விரும்ப வில்லை. ஆகையால் லாசிடாமோனியர்களோடு ஒரு தற்காலிகச் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டு, தீங்கில்லாமல் திரும்பிப் போகும்படி, ஜேஸன், தீபன்களுக்கு யோசனைகூறி இணங்க வைத்தான். லாசிடேமோனியர்கள் திரும்பிப்போக மனமில்லா திருந்தார்கள். ஜேஸனுடைய வருகையால் நிலைமை மாறியதால் படையுதவி வரும்வரையில் அவர்கள் காத்திருக்கவில்லை. பகைவர்களின் சொற்களில் நம்பிக்கையில்லாதபடியால் அவர்கள் இரவோடிரவாகப் பயணத்தைத் தொடங்கினுர்கள்; தோற்கடிக்கப் பட்ட லாசிடாமோனியாத் துருப்புகள் கடற்கரைக்கு வந்துசேர்ந்தன. அங்கே ஆர்ச்சிடாமஸைக் கண்டன. அப்படை பின் வேறுவழியின்றிக் கலைந்துவிட்டது.

### போயிஷியாவைக் காலிசெய்ததைப்பற்றிய மற்ருெரு கருத்து

போயிஷியாவிலிருந்து ஸ்பார்ட்டன் படை காலி செய்ததைப் பற்றி மற்ருெரு கருத்து நிலவுகிறது. நாம் வரலாற்று விரிவுரை

யாளரின் கருத்தைமட்டும் ஏற்றுக் கொள்ளுகிருேம். இந்தச் சம்பவத்தைப் பற்றிய முழு விவரங்களேயும் கூறுவதில் ஸெனப்பன் சில நுணுக்கப் பிரிவுகளேச் சொல்ல மறந்து போயிருக்கலாம். இந்த யுத்தத்தைப் பற்றிக் கூறுகிற மற்ருேர் ஆசிரியர், ஆர்ச்சிடாமஸ் படை, உதவிப்படையன்றென்றும், அது லூக்ட்ரா போர்க்களத்தின் விளேவுக்குப்பின் அனுப்பப்படவில்லையென்றும் கூறுகிருர். லூக்ட்டிரியா யுத்தம் நடப்பதற்கு முன்னல் ஆர்ச்சிடாமஸ் புறப்பட்டு வந்தான். கிளியோம்ப்ரோட்டஸ் மன்னன் ஆர்ச்சிடாமஸ் வரவை எதிர்பார்த்தபடியால் அவனேச் சந்திக்க கிரியூஸிஸ் துறைமுகத்துக்குச் சென்ருன் எனவும் கூறுகிறது. ஜேஸன் தீபன்களுக்கு உதவி புரிய ஏற்கெனவே புறப்பட்டுவிட்டான் எனவும், அவன் வெற்றிச் செய்தியைச் சுமந்து சென்ற தூதுவன் தெற்கு நோக்கி வரும்போது கண்டானேதவிர, வெற்றியைப்பற்றிக் கேள்விப்பட்ட பிறகு அவன் புறப்படவில்லே எனவும் கூறப்படுகின்றன. இதைக் கொண்டு தற்காலிக உடன்படிக்கை அடுத்தநாள் காலேயில் நடந்திருக்க வேண்டுமெனவும், அது படையுதவி வருமென்று காத்திருக்கவில்லே என்றும் நாம் கருதவேண்டியிருக்கிறது. லூக்ட்ராவிலிருந்து கிரியூஸிஸ் துறைமுகத்துக்குச் செல்லும் சாலே காலியாக இருந்தபடியால், லாசிடோமோனியர் உடனடியாகப் பயணம் மேற்கொண்டிருப்பர். ஒரு வாரம் லூக்ட்ராவில் தங்கியிருக்க மாட்டார்கள்.

### ஜேஸன் கடற்படை

சமரசம் செய்து வைத்ததும், தீபன்களோடு சேர்ந்து போர் புரிந்ததும், ஜேஸன் ஆரம்பத்தில் கொண்ட நோக்கங்களாலென்பதை அறியவேண்டும். அவன் கடல்மூலமாகவும் உதவி புரியத் தன் கடற்படையைக் கொண்டு வந்திருந்தான். எதற்காக அவன் கடற்படையைக் கொண்டு வந்திருக்கக்கூடுமென்பதை யறிய நாம் விரும்புகிருேம்.

### தெர்மாபைலேயில் ஜேஸன்; அவன் திட்டங்கள்.

ஜேஸன் வடக்கிலுள்ள தன் நாட்டிற்குத் திரும்பி வந்துவிட்டான். வருவதற்குமுன் ஸ்பார்டாவிற்கும் அதனுடைய குடியேற்ற நாடாகிய ஹெராக்ளியாவுக்குமுள்ள தொடர்பை அறுத்தான். இப்பொழுது தெர்மாபைலே கணவாய் ஸ்பார்ட்டன் ஆதிக்கத்திலிருந்து ஜேஸனுடைய கைக்கு மாறியது. அவன் நிறைவேற்ற வேண்டிய பல திட்டங்கள் இருந்தன. அத் திட்டங்களே அவன் வெளியிடத் துடித்தான். பிதியன் (Pythian) பண்டிகையில் அவற்றை வெளியிட விரும்பினன். அங்குக் கூடியுள்ள ஹெல்லாஸ் நாடுகளின் பிரதிநிதிகள் தன்னுடைய வல்லமையையும் மேன்மையையும் அறிந்துகொள்ள வேண்டுமென்பதே அவன் விருப்பம்.

பண்டிகையில் விருந்து பலமாக இருக்கவேண்டும். அதற்கு மாடு களும் வெள்ளாடுகளும், செம்மறியாடுகளும் தேவை. அவை டெல்பியில் பலியிடப்படவேண்டும். அவற்றைக்கொண்டு வர தெஸ்ஸாலியின் பல நகரங்களுக்கும் ஆட்களை அனுப்பினன். கொழுத்த அழகான காளைக்குப் பொன்முடி ஒன்று பரிசாக வழங்கப் படுமென பறையறைவித்தான். விருந்து ஒழுங்காக நடைபெற தெஸ்ஸாலியர்களைப் போர்க் கோலத்துடன் வரும்படி கட்டளை யிட்டான். ஆம்பிகட்டியோனி கழகத்தின் உரிமைகளை இவன் அடைவதற்கான தீர்மானம் ஒன்றைக் கொண்டுவந்தான்; அங்கு நடைபெறும் போட்டிப் பந்தயங்களுக்குத் தலைமை தாங்கும் உரிமை யையும் கைப்பற்றுவதே அவன் நோக்கம். அந்தக் கோயிலின் சொத்தைக் களவாடுவது அவன் நோக்கமாகவுள்ளதென்று ஒரு வதந்தி பரவியது. கிரேக்க நாடுகளின் தலைவனுக வரவேண்டு மென விரும்புகிறவன் இவ்வித கீழான செயலுக்கு மனத்தில் இடமளித்திருக்கமாட்டான். அப்போலோ, தம் கருவூலத்தைத் தாமே பார்த்துக்கொள்ள முடியுமென்று வதந்தியால் கவலையுற்ற வர்களுக்குக் கூறினர். குருக்கள் ஜேஸனைப்பற்றிப் பயமற்றிருக்கும் காலம் வந்தது. தங்கள் நாட்டின் வழியே ஜேஸனின் படை சென்றதால் ஏற்பட்ட மனக் கசப்பை போசியர் மறக்கும்படியான சம்பவம் ஒன்று தெஸ்ஸாலியில் நடந்தது. ஜேஸன் ஒருநாள் தன்னுடைய குதிரைப் படையைப் பார்வையிட்டான். பிறகு வழக் குகளை விசாரிக்கும் நேரம் வந்தது. பல மனுக்களை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லிக்கொண்டிருந்தான். அப்போது ஏழு வாலிபர்கள் உருவிய வாட்களுடன் ஒரு வழக்கை அவன் முன் கொண்டு வந் தார்கள். வரும்போதே அவர்கள் தங்களுக்குள் போட்டியிட்டுக் கொண்டு வந்தார்கள். ஜேஸன் அமர்ந்திருந்த ஆசனத்தை நெருங்கினர். யாரும் எதிர்பாராத வகையில், தங்கள் வாட்களால் ஜேஸனைக் கொன்றனர். அவனேடு தெஸ்ஸாலியின் ஐக்கியம், அவனுடைய மனக்கோட்டை, கிரேக்க நாடுகளில் தெஸ்ஸாலிக் கிருந்த செல்வாக்கு யாவும் மடிந்தன. அவனுக்குப் பின் வந்த அவனுடைய சகோதரர்கள் அவனைப்போல் திறமை மிக்கவர்க ளல்லர். அவர்களுக்குத் திறமை இருந்தபோதிலும், அவனுடைய திட்டங்களை நிறைவேற்றி வைக்கக்கூடிய ஊக்கம் அவர்களுக்கில்லை. ஏழு வாலிபர்களுடைய கூரிய வாள் வரலாற்றின் நடையை மாற்றி விட்டதென வெளிப்படையாகக் கூறக்கூடும். மேற்கில் டயோனி ஸியஸ் சர்வாதிகாரியாக விளங்கியதைப்போல், ஜேஸன் கிழக்கு கிரீஸில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டும் பாதையில் சென்றுகொண் டிருந்தான். மாசிடோனியோவிற்காக ஒதுக்கி வைக்கப்பட்ட வேலையில் பாதியை, ஜேஸன் தலைமையில் தெஸ்ஸாலி முடித் திருக்கக்கூடுமென்று கூறுவது மிகையாகாது. அரசியல் முறைப்படி

பார்த்தால் அவன் வேலையின் குறைபாடு விளங்கும். தெஸ்ஸா லியின் ஐக்கியத்திற்காக, அவன் தகுந்த அடித்தளம் போடவில்லை. அவன் கொண்டுவந்த ஐக்கியம் படைபலத்தாலும், அவனுடைய சொந்தத் திறமையாலும் ஏற்பட்டது. தன் சொந்த வாழ்க்கையின் மீது சார்ந்திருக்கும் செய்கைகளை மேற்கொள்ளும் அரசியல் அறிஞனை நாம் புகழ்ந்து கூறமுடியாது. இந்த வகையில் ஜேஸனும் எப்பாமி-னண்டஸும் சமநிலையிலுள்ளவர்கள்.

### இதனால் தீப்ஸ் நகருக்கேற்பட்ட விளைவுகள்

வடகிரீஸில் சமீப காலத்தில் முதன்மையாக எழுந்த இரு நாடு களில் ஒன்று, ஜேஸன் மரணத்தின் காரணமாக வீழ்ச்சியடைந்தது. ஆகையால் போயிஷியா ஸ்பார்டாவின் கையிலிருந்த தீபத்தைப் பெறும் தகுதி பெற்றது.

### லூக்ட்ராவின் விளைவுகளும் தீபன்களின் பங்கும்

இது வரையில் ஸ்பார்ட்டாவும், தீப்ஸ்நகரும் புரிந்து வந்த போர்முறை லூக்ட்ரா போர்க்கள விளைவினால் மாறுதலடைந்தது. ஸ்பார்ட்டா முன்பு போயிஷியாவில் படையெடுத்து வந்ததைப் போல், இப்பொழுது தீப்ஸ் பெலபோனீஸ்மீது படையெடுத்துச் செல்லும்நிலை ஏற்பட்டது. தீப்ஸ் இப்பொழுது ஆக்கிரமிப்பு நாடாயிற்று. ஸ்பார்ட்டா தன்னுடைய சொந்த நாட்டைத் தற்காத்துக் கொள்ளும் நிலைக்கு வந்துவிட்டது. தீப்ஸ், ஏதென்ஸ் கொள்கையில் மாறுதல் விளைவித்தது. பெலப்போனிசிய நாடுகள் சிறிது விழிப்படைந்து, புது வாழ்வு வாழ ஆரம்பித்தன.

தீப்ஸ் நகரின் ஆதிக்கம், பேரரசின் உணர்ச்சியினால் அல்லது ஒரு பொருள் திட்டத்தினால் உண்டானதன்று. ஆனால் அது சில நற்பலன்களை விளைவித்தது. ஸ்பார்ட்டா தனக்குக் கிடைத்த பேராதிக்கத்தைத் தீயவழியில் கையாண்டது. தீபன்களின் உயர்வு, லாசிடாமோனியர்கள் இழைத்த கொடுங்கோன்மைக்கு மாறுபட்ட விளைவை உண்டு பண்ணிற்று. தீப்ஸ் நாட்டினருக்கு இருவித நோக்கங்கள் இருந்தன. ஒன்று ஸ்பார்ட்டா, பெலப்போனீசியாவில் மறுபடியும் தன்னுடைய பழைய நிலைமையை அடையா வண்ணம் தடுத்தல்; இரண்டாவது தெஸ்ஸாலியில் ஜேஸனுடைய அதிகாரம் புதுப்பிக்கப்படுவதைத் தடை செய்தல்.

அரசியல் அமைப்பில் ஏற்பட்ட மாறுதல்களைத் தெளிவாக எடுத்துக் சொல்லக்கூடிய அரசியல் பதிவுகள் இல்லாவிடினும், சில சான்றுகள் அதைப் பற்றிக் கூறுகின்றன. தீப்ஸ் நாட்டின் தலைவர் கள் போயிஷியக் கூட்டாட்சி அரசியலின் முறையை மாற்றி, தேசிய அரசை ஏற்படுத்தினார்கள். அட்டிகாவலில் ஏதென்ஸ் எந்நிலையில் இருந்ததோ, அதே நிலையை தீப்ஸ் நகரம் போயிஷியாவில் ஏற்படுத்

திக்கொண்டது. கொரோனே, தெஸ்ப்பியே, ஹாலியார்ட்டஸ், மற்றும் உள்ள சில நகரங்கள், தங்களுடைய நிலையை இழந்து, மாராத்தன், எலோசியஸ் போன்ற நிலைமைக்கு வந்துவிட்டன. அவற்றின் குடிமக்கள் தீப்ஸ் நகரின் சபையில் அங்கத்தினரானார்கள். புராணக் கதையில்வரும் தேஸெஸ் என்பவனுக்கொப்பாக எப்பாமினுண்டஸ் வாழ்ந்து வந்தான். புதிய அரசியலமைப்பு நிலைத்து நிற்கக் கூடிய அமைப்பைப் பெற்றிருக்கவில்லை. அவ் வமைப்பு மிகக் குறுகிய காலமே உயிர் பெற்றிருந்தது.

## 2. தென்கிரீஸிலும், ஆர்க்காடியாவிலும், மெஸேனியாவிலும் தீப்ஸின் கொள்கை

**பெலப்போனீஷியா முழுவதிலும் மக்களாட்சி முறை அரசியலுக்கான இயக்கங்கள் ; ஆர்காசில் தடியடி.**

திறந்த வெளியில் குறைந்த போர் வீரர்களைக் கொண்ட பகைவன், லாசிடோமோனியப் படைகளை வீழ்த்திய செய்திகிரேக்கர்களுக்கு அதிர்ச்சியைத் தந்தது. பயிற்சி பெற்ற பெரும் படையாலன்றி, மற்ற யாவராலும் வெல்லவொண்ணாத ஸ்பார்ட்டன் வீரர்கள் இவ்வாறு தோற்றது மனித தண்டனை யாலன்று; இயற்கையளித்தத் தண்டனையாலேயே யாகும் என எல்லோரும் நினைத்தார்கள். அச் செருக் களத்தில் கிளியோம் ப்ரோட்டஸ் மன்னன் உயிர்நீத்தது மேலும் ஓர் அதிர்ச்சியாயிருந்தது. கிரேக்க நாட்டின் வாயிலில் இறந்த ஸ்பார்ட்டன் நாட்டு அரசன் லியோனிதாஸ் ஸாவுக்குப்பின் இதுவரையில் எந்த ஸ்பார்ட்டன் மன்னனும் போர்க்களத்தில் கொல்லப்பட்டதில்லை. பெலப்போனிஸி லுள்ள ஒவ்வொரு நாட்டையும் இச் செய்தி கலக்கிற்று. மூன்று வாரங்களுக்குமுன், சமாதான உடன்படிக்கை கையெழுத்தானபோது ஸ்பார்ட்டன் கவர்னர்கள் ஆக்கிரமிப்பு நாடுகளிலிருந்து திரும்ப அழைத்துக்கொள்ளப்பட்டார்கள். இப்போது அவர்களை ஸ்பார்ட்டா நகரத்துக்கு வெளியே துரத்தியது. ஸ்பார்ட்டா ஆதரித்த ஆலிகார்க் கொள்கையினருக்கு எதிர்ப்பு எங்குமிருந்தது. குடியாட்சி முறைக் கொள்கையாளர் புரட்சியைக் கிளப்பிவிட்டார்கள். போர் வீரர்களைக் கொண்டு அக்கொள்கையை நிலைநாட்ட முனைந்தார்கள். நாடுகடத்தப்பட்ட குடியாட்சிக் கொள்கையினர் படை எங்கும் தோற்றமளித்தது. இந்த நோய் ஆர்காசிலும் பரவியது. ஆத்திரங் கொண்ட அம்மக்கள், பல குடிமக்களைத் தடிகொண்டு தாக்கினுர்கள்.

**ஆர்க்காடிய நகரங்களின் சங்கம்**

இந்தப் புரட்சியினுல் பல அரசியல் விளைவுகள் ஏற்பட்டன. லாசிடோமோனியர்கள் ஆர்க்காடியா மீது கொண்டிருந்த உரிமைக்கு

எதிர்ப்பு உணர்ச்சி அந்நாட்டில் நீண்ட நாட்களாக வளர்ந்து வந்தது. இப்போது அவ்வுணர்ச்சி சரியான வடிவைப் பெற்றது. ஒவ்வொரு நகரமும் ஸ்பார்ட்டாவின் ஆதிக்கத்திலிருந்து விடுபடும் காலத்திற்காகக் காத்திருந்தது. இப்போது கூட்டாகச் சேர்ந்து ஸ்பார்ட்டாவை எதிர்க்க ஆர்க்காடியாவிலுள்ள எல்லா நகரங்களும் ஒன்று சேர்ந்து கூட்டாட்சியை அமைத்துக் கொள்வதெனவும், கூட்டாட்சி அரசியலமைப்புக்குத் தங்களுடைய சுதந்திரத்தை விட்டுக் கொடுப்ப தென்றும் தீர்மானித்தார்கள். இந்தத் திட்டத்தை மேன்டினியன் லைக்கோமிட்ஸ் (Mantinean Lycomedes) என்பவன் கொண்டுவந்தான். லைக்கோமிட்ஸ் ஸ்பார்ட்டாவின்மீது மிக்க வெறுப்புக் கொண்டிருந்தான். ஏனென்ருல் ஸ்பார்ட்டா, மேன்டினே நாட்டை மிகவும் கொடுமையாக நடத்தி வந்தது. ஸ்பார்ட்டா வீழ்ச்சியடைந்ததால் மேன்டினே நாட்டினர் தங்க ளுடைய நகரத்தின் சுவர்களைத் திரும்ப எழுப்பவும், கிராம வாழ்க் கையை விட்டுவிட்டு நகர வாழ்க்கையில் இன்பத்தையும் பெருமை யையும் காணவும் முடிந்தது. ஆனுல் கிழவனுன எஜிஸிஸ்லாஸ் மன்னன் ஸ்பார்ட்டாவிடம் அவர்கள் அனுமதி பெருததற்காகக் கோபமுற்ருன். ஆனுல் அதே சமயத்தில் அனுமதி பெற்றே நகரத்தைப் பாதுகாக்க வேண்டுமென்று கட்டாயப் படுத்தும் சக்தியற்றிருந்தான்.

**மான்டினே நகரைப் புதுப்பித்தல், கி.மு. 370, தளிர்விடு காலம்.**

மான்டினே நகரை எஜிஸ்போலிஸ் மன்னன் கைப்பற்றிய சம் பவத்தை மான்டினேயர்கள் நினைத்துப் பார்த்தார்கள். அவர்கள் பட்டினத்திற்கு மத்தியில் ஓடும் ஒப்பிஸ் (Ophis) ஆறு நகரத்தின் வீழ்ச்சிக்குக் காரணமாக இருந்ததும், அவர்கள் நினைவிற்கு வந்தது. எதிர்காலத்தில் அப்படிப்பட்ட சம்பவத்திற்கு ஒப்பிஸ் நதி காரண மாக இருத்தல் கூடாதென்று அதன் போக்கை மாற்றிவிடத் திட்ட மிட்டார்கள். நகரின் தென்கிழக்குச் சுவருக்கருகில் வந்த ஆற்றைத் தடுத்து, அது இரண்டாகப் பிளந்தோடி மறுபடியும் அது நகரின் வட மேற்குப்பாகத்தில் ஒன்ருகச் சேரும்படி செய்தார்கள். நகரை அழிக்கக் காரணமாக இருந்த ஆறு, இப்போது நகருக்கு ஓர் அரணுக மாற்றப் பட்டு விட்டது. கருங்கற்களாலான சுவரின் அடிதளம் அந் நகரின் சுற்றளவை அறிந்துகொள்ள உதவுகிறது. கருங்கற்களின் அடித் தளத்தின் மேல், செங்கற்களால் சுவர் கட்டப்பட்டிருக்க வேண்டும். அந்நகரிலுள்ள வீடுகள் செங்கற்களாலான வீடுகள். நகரின்10 வாயில் களும் நூதனமான முறையில் அமைக்கப்பட்டிருந்தன. இரு வாயில் கள் ஒரேவிதமாக இருந்ததில்லை. திரன் (Tiryns) நகரத்தின் கோட்டையில் காணப்பட்ட கட்டடக்கலையின் கோட்பாடுகள், இந் நகரின் வாயில்களை அமைப்பதில் மேற்கொள்ளப்பட்டன. படை எடுத்து வரும் பகைவன் பாதுகாப்பற்ற வடபகுதியைத் தாக்கும்

போது, நகரைப் பாதுகாக்கும் படையினர் சுவர்களிலும், கோபுரங்களிலுமிருந்து கொண்டு எதிர்க்க, ஏற்றவகையில் கோட்டை அமைக்கப்பட்டிருந்தது. நகரின் சுவர் தொடர்ச்சியாக அமைக்கப்படவில்லை; அவை பத்துத் துண்டுகளாக அமைக்கப்பட்டன. ஒரு சுவருக்கும் மறு சுவருக்கு மிடையிலுள்ள பகுதி கதவுகளால் இணைக்கப் பட்டிருந்தது.

### மெகாலோ போலிஸ் ஆதாரம்

மேன்டினே தன்னுடைய அழிவிலிருந்து மறுபடியும் உயிர் பெற்றெழுந்ததும், தேஜே(Tegea), ஆர்க்கோ மேனஸ் (Orchomenus), ஹெராயே (Heraea) போன்ற நகரங்களைத் தவிர மற்ற நகரங்கள் யாவும் கூட்டாட்சி அரசியல் அமைப்பு ஏற்படுத்த இணங்கின. கூட்டாட்சி முறை அரசாங்கத்திற்காக ஓர் தலை நகரம் தேவை என்பதற்குப் பல காரணங்களிருந்தன. அவ்விதமான புது நகரம் ஏற்படுத்துமளவிற்கு ஆர்க்காடியாவிலுள்ள நகரங்கள் பெரியவை யல்ல. அந்நகரங்களில் ஒன்றைத் தேர்ந்தெடுத்தால் மற்றவை பொருமையடையும். ஆர்க்காடியா கூட்டமைப்பில் தீப்ஸ் புகுந்து விடக்கூடாது. புதிய தலைநகருக்காக இரு பெரிய சமவெளிக்கு மேற்கில் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்தனர். அது ஆர்க்கடியாவின் மத்தியிலிருந்தது; அது ஹெலிசன் (Helisson) ஆற்றின் குறுகிய நீண்ட கரடு முரடான கரைகளில் அமைந்திருந்தது. அந்த இடம் லைக்காயோன் மலைக்குச் (Lycaeon) சமீபத்திலிருந்தது. ஆர்க்காடியா நாட்டு மக்கள் அம்மலையைப் புனிதமாக மதித்து வந்தார்கள். அந்த மலைமேல் கட்டப்பட்ட புதிய தலை நகரில் சந்தை நடுவே சீயஸ் தெய்வத்திற்காக ஒரு கோயில் கட்டினுர்கள். பெரிய நகரம் அல்லது ''மெகாலோபோலிஸ்'' என்று அதற்குப் பெயரிட்டார்கள். உண்மை யிலேயே அது பெரிய நகரமாயிருந்தது. இரட்டைச்சுவர்களைக் கொண்ட அந் நகரத்தின் சுற்றளவு ஐந்தரை மைல். கீழ்ப்பக்கம் கருங்கற்களாலும் மேல்பக்கம் செங்கற்களாலும் கட்டப்பட்டிருந்தன. மதிற்சுவரில் இடையிடையே கோபுரங்கள் அமைத்திருந்தனர்.

மெகாலோபோலிஸ் அல்லது பெரும் பட்டினத்திற்கு இரு பண்புகளிருந்தன என்பதை மனத்தில் வைத்தல் வேண்டும். அது கூட்டாட்சி முறை அரசாங்கத்தின் தலை நகரம். ஆனுல் அதே சமயத்தில் அது கூட்டாட்சி முறையையுடைய நகரங்களில் ஒன்ருகிய ஆர்க்காடியாவிலுள்ள நகரங்களில் ஒன்ருகவுமிருந்தது. ஆர்க்காடியா நகரங்களுடன் தொடர்புடையதாக இருந்தது. தேஜே (Tegea), மான்டினே (Mantinea) என்ற இரு நகரங்கள் எப்போது ஏற்பட்ட தென்பதை உறுதியாகக் கூறமுடியாத அளவிற்கு மாறின சுற்றுப் புறங்களிலுள்ள கிராமங்களில் வாழ்ந்தவர்களை நகருக்குள் சென்று வாழுமாறு தூண்டினுர்கள். அப்பட்டினம் லாக்கோனியாவின் வட

மேற்கு எல்லையின் அருகிலிருப்பதால், அது மற்றொரு பக்கத்தில் ஸ்பார்ட்டாவிற்கு எதிரான படடினமாகவும் அமைந்து விட்டது. புதுப்பிக்கப்பட்ட மேன்டினே பட்டினத்தோடு இந்தப் புதிய பட்டினத்தை ஒப்பிடுவது இயற்கையாகும். இருபட்டினங்களும் ஒரேவகையான அரண்களையுடையன. கருங்கற்களாலும் செங்கற்களாலும் கட்டப்பட்ட இரட்டைச் சுவர்களையும், அவற்றைப் பலப்படுத்தும் கோபுரங்களையும் கொண்டவை. ஆனால் மெகாலோபோலிஸ், பெரியதாகமட்டுமின்றி நல்ல வலுவுள்ளதாகவுமிருந்தது. மேன்டினே, பள்ளத் தாக்கில் கட்டப்பட்ட நகரம். அதனுடைய பலம் செயற்கை அரண்களைச் சார்ந்திருந்தது. மெகாலோபோலிஸ், மலைச்சரிவில் கரடு முரடான பகுதியில் கட்டப்பட்டுள்ளது. குன்றுகளை இணைத்து அதைப் பலமுள்ள நகரமாக்கினார்கள். மேன்டினே நகரச் சிறிய நாடக அரங்கு கற்களால் அமைந்தது. ஆனால் மெகாலோபோலிஸ் நகரின் நாடக அவை ஒரு குன்றையே குடைந்து கட்டப்பட்டதாகும். இந்த ஓர் எடுத்துக்காட்டே, இந் நகரங்களின் வேறுபட்ட அமைப்பை நன்கு விளக்கும்.

**மைர்யோயி சபை, தாமியோர்கோயி கழகம்**

கூட்டு அரசியல், சாதாரண மக்களாட்சி முறை அரசியல் அமைப்புகளைப் போன்றது. முக்கியமான பிரச்சினைகளைப் பற்றி ஆராய, குறிப்பிட்ட காலங்களில் கூடும் மக்கள் சபை ஒன்றிருந்தது. கூட்டாட்சியில் சேர்ந்துள்ள நாடுகளின் ஒவ்வொரு குடிமகனும், இச்சபையின் அங்கத்தினன். அச் சபை பதினாயிரவர் சபையென அழைக்கப்பட்டது. இது ஏதென்ஸில் தெராமேனஸ் (Theramenes) என்பவனுடைய அரசியல் அமைப்பிலிருந்த ஐயாயிரவர் சபைக்கு ஒப்பாகும். இச்சபை ஆற்றிய பணிகளைப் பற்றி நமக்குப் போதுமான ஆதாரங்கள் கிடைக்கவில்லை. பழங்காலத்துக் கூட்டாட்சி முறை அமைப்பைக் கொண்டு, இவர்களுடைய் கூட்டாட்சி முறையைப் பெரிதும் அறிகிறோம். குடவோலை வழங்குதல், நகரங்கள் வாரியாக அளிக்கப்ப்டுகிறது. ஒவ்வொரு நகரத்தின் ஓட்டும் (குடவோலை) அங்கே கூடியுள்ள குறிப்பிட்ட பட்டினத்தின் அங்கத்தினர்களில் பெருவாரியானவர்களின் எண்ணிக்கையைப் பொறுத்திருந்தது. பதினாயிரவர் இந்தப் சபைக்குப் போர் தொடுக்கவும், சமாதானம் செய்யவும், நேச உறவு உடன்படிக்கை செய்யவும், கூட்டாட்சி அரசாங்கத்துக்கு விரோதமான குற்றம் புரிந்தவர்களை விசாரித்துத் தீர்ப்பளிக்கவும், உரிமையுண்டு. பல பட்டினங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஐம்பது பேரடங்கிய மேல் சபை அல்லது முதியோர் சபை என்று சொல்லக்கூடிய கழகம் ஒன்றிருந்தது. நிர்வாகத்தை நடத்துவதும், கலையச் செய்வதும் இதன் கடமைகளாகும்.

கூட்டாட்சிமுறை அரசாங்கக் கட்டிடத்தைத் 'தெர்சிலி' என்று அழைத்தார்கள். அது ஆற்றிற்குத் தென் புறத்திலிருந்தது.

அந்தக் கட்டடம் இரு சபைகளும் கூடுமிடமாக இருந்தது. இப்போது பாதுகாப்பில்லாமல் இருக்கிறது. கூடத்தின் உட்புறத்திலுள்ள தூண்கள் நெருங்கிக் குவிந்திருக்கின்றன. எனவே, சொற் பொழிவைக் கேட்கப் பலர் கூடிவிட்டால், பேசுபவர்களைக் கேட்கவோ பார்க்கவோ முடியாது. ஏனெனில் நாடக மேடைகளைக் அமைப்பது போல் இக்கட்டிடத்தை அமைத்திருந்தனர். நாடக அரங்கும், இச் சபை கூடும் கூடமும் ஒரே கட்டடத்தில் இருப்பதாகத் தோன்று கிறது. ஏனென்றால் தெர்சிலியோன் நாடக அரங்கைக் குடைந் தெடுத்த குன்றுக்கு அருகில் நேரெதிரே இச்சபை இருக்கிறது. கூட்டாட்சிக்கட்டடத்தின் தென்புறத்திலுள்ள முகப்பு, அரங்கி லுள்ள அவையோருக்கு எதிரிலிருக்கிறது. இசை, நடனம், நாடகம் நடைபெறும் மேடை, வட்டவடிவிலமைந்த அவையோர் ஆசனத்தி லிருந்து சபைக் கூடத்தின் முகப்புவரை விரிந்திருந்தது. ஆரம் பத்தில் அப்படிப்பட்ட ஏற்பாடுதானிருந்தது. ஆனால் சில ஆண்டு கள் கழித்து அதன் அமைப்பு மாறிவிட்டது. நாலாம் நூற்றாண்டில் கிரீஸில் கட்டப்பட்ட அரங்குகள் யாவும் நாடகமாடுவதற்கும். நாட்டு சபைகள் கூடுவதற்கும் பொருத்தமான முறையில் அமைக்கப் பட்டன.

### புலெயூட்டேரியோன் (Buleuterion), எப்பரிட்டேயக் (Eparitoi) கூட்டாட்சிப் படை

ஹெலிசோன் நதி மெகாலோபோலிஸ் பட்டினத்தை இரண்டு சமபாகங்களாகப் பிரிக்கிறது. இப் பிரிவு அதன் இரட்டைப் பண்பிற் கேற்ப அமைந்தது போலிருக்கிறது. சரியாகச் சொல்லப் போனால் மெகாலோபோலிஸ் நகரம் வடக்குப் பக்கத்தில் இருக்கிறது. ஆற்றின் கரையில் ஒரு சந்தை வெளியிருக்கிறது. அங்குள்ள ஒரு கூடத்தில் மெகாலோபோலியர் நாட்டுக் குழு கூடுவது வழக்கம். மெகாலோபோலிஸ் நகரின் தென்பாகம் கூட்டாட்சியின் நிலமாக விருந்தது. ஏனெனில் அங்குக் கூட்டாட்சிக் கூடமும், நாடக அரங்கு மிருந்தன. இத் திறந்த அரங்கு, கூட்டாட்சிக் கூட்டம் நடைபெறுமிடமாகவுமிருந்தது. கூட்டாட்சி பராமரித்துவந்த 5000 போர் வீரர்களைக் கொண்ட நிலையான படை இங்குதான் தங்கியிருந் திருக்க வேண்டும். ''பதினாயிரவர்'' சபை அங்கத்தினர்கள் தங்கும் விடுதிகள் இங்கே இருந்தன. ஆர்க்காடிய அரசியலைக் குறித்து வாக்களிக்க வரும் அங்கத்தினர்கள் இவ்விடுதிகளில் தங்குவது வழக்கம்.

### தேஜே கூட்டாட்சி அமைப்பில் சேர்தல், கி.மு. 370.

இதுகாறும் தேஜே, லோக்கானியாவின் ஒரு விதக் காவல் நிலையமாக இருந்தது. அதைக் கூட்டாட்சி அரசாங்கத்துடன்

பிணைக்க ஓர் புரட்சி தேவைப்பட்டது. மேன்டினியனிரின் உதவியைக் கொண்டு பிலோலோக்கனியன் கட்சி கவிழ்க்கப்பட்டது. அதன் காரணமாக 800 அகதிகள் ஸ்பார்ட்டாவில் தஞ்சம் புகுந்தார்கள். இதனுல் ஸ்பார்ட்டா கோபமடைந்து, உடனே செயலில் ஈடு பட்டது. ஸ்பார்ட்டா கூட்டமைப்பு நாடுகளில் நீண்ட நாட்களாக அங்கம் வகித்தும், அதன் வடக்கு எல்லையைப் பாதுகாத்து வந்ததுமான தேஜே நகரை, கலகக்காரர்களின் கையில் விட்டு வைக்க ஸ்பார்ட்டா விரும்பவில்லை. எஜிஸிஸ்லாஸ் மன்னன் ஆர்க்காடியா விற்குள் தன் படையுடன் புகுந்தான். மேன்டினேயின் வயல்களைப் பாழ்படுத்தினுன். ஆனல் அவனே, கூட்டாட்சிமுறை அரசாங்கத் தின் படையோ திறந்த வெளியிற் போரிட விரும்பவில்லை.

### கி. மு. 371 ஆம் ஆண்டின் முடிவு

ஸ்பார்ட்டா படையெடுத்ததின் காரணமாக ஆர்க்காடியர்கள் அயல் நாடுகளின் உதவியை நாடியது. லூக்ட்ரா வெற்றியினுல் ஏதென்ஸ் மகிழ்ச்சி, பொருமை என்ற இருவித உணர்ச்சிகளினுல் அதிர்ச்சியுற்றதை அறிவோம். சமீபத்தில் நடந்த சமாதான உடன்படிக்கையைப் புறக்கணித்து, பேரரசை நிலைநாட்ட ஆசை கொண்டது. ஆனுல் தீப்ஸ் நகரின் வெற்றி வரவேற்கத்தகாதது; அபாயமானது. நம்பிக்கையும் பயமும் ஒன்று சேர்ந்து புதிய முயற்சியில் அதை ஈடுபடச் செய்தது. ஹெல்லாசின் நிலைமையில் ஏற்பட்ட மாறுதலின் மகிழ்ச்சியைத் தெரிவிக்க பெலப்போனிய நகரங்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஒரு கூட்டத்தைக் கூட்டியது. அரசனுடைய சமாதானத்தை மதித்து நடக்கவும், போர்க்காலத்தில் ஒருவருக்கொருவர் உதவி செய்து கொள்ளவும், அங்கே கூடியுள்ள பிரதிநிதிகள் உறுதிப்பாடு செய்து கொள்ள வேண்டுமென்பதே அக்கூட்டத்தின் நோக்கமாகும். எலிஸ் (Elis) நகரங்கள் சுதந்திரமாக வாழ்வதை விரும்பவில்லை. ஆகையால் அது உறுதி எடுத்துக் கொள்ளவில்லை. ஆனுல் மற்ற நாடுகளின் பிரதிநிதிகள் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். அந்த ஒப்பந்தம், ஒரு பக்கத்தில் ஏதென்ஸுக்கும் அதனுடைய நேசவுறவு நாடுகளுக்கும், மறுபக்கம் ஸ்பார்ட்டாவுக்கு மிடையே ஏற்பட்ட தாகும். இந்த உடன்படிக்கையின்படியே ஏதென்ஸ், மேன்டினே, ஆர்க்காடியா என்ற நகரங்களுக்கு உதவிபுரியக் கடமைப்பட்டுள்ளது. ஸ்பார்ட்டாவை வீழ்த்துவதனுல் ஸ்பார்ட்டா வகித்து வந்த ஆதிக்கத்தை அடைய ஏதென்ஸ் விரும்பிய போதிலும், ஸ்பார்ட்டா வுடன் மீண்டும் போர்தொடுக்க அது விரும்பவில்லை. ஆனுல் கடந்த ஒன்பது அல்லது பத்து மாதங்களில் நடந்த சம்பவங்கள் அதன் மனத்தை மாற்றின. பெலப்போனிசியாவில் மக்களாட்சிக் கொள்கை இயக்கத்தின் மூர்க்கச் செயல்கள் வெறுப்பை ஏற்படுத்தி

விட்டன. ஏதென்ஸ் ஆர்க்காடியர்களுடைய விருப்பத்திற்கு இணங்க மறுத்துவிட்டது. நடுநிலைமைக் கொள்கையைக் கடைப்பிடிக்க தீர்மானித்துக் கொண்டிருந்ததாகத் தோன்றுகிறது.

ஏதென்ஸ் உதவி புரிய மறுத்துவிட்டதால் ஆர்க்காடியா தீபன்களின் உதவியைத் தேடிற்று. போயிஷியா அடைந்த வெற்றி ஆர்க்காடியாவின் ஐக்கியத்திற்கு வழி வகுத்தது. போயிஷியா ஆர்க்காடியாவிற்கு உதவி புரியத் தகுதியுள்ளதாக இருந்தது. ஸ்பார்ட்டாவைத் தலை எடுக்கவிடாமல் தடுப்பதும், அது தன்னுடைய செல்வாக்கை மீண்டும் அடைய முடியாதபடி அதை முடமாக்குவதும் தீப்ஸ் நகரின் நோக்கமாகும். அதை நிறைவேற்றிக் கொள்ள ஐக்கிய மடைந்த ஆர்க்காடியா சிறப்பான கருவியாகுமென தீபன்கள் கருதினர்கள். எனவே, தீப்ஸ் ஆர்க்காடியாவின் வேண்டுதலுக்கு இணங்கிற்று. போசியர்களும் (Phocians) ஓசோலியன் லோக்கிரியன்களும் (Ozolian Locrians) ஒப்பஸ் நதியின் லோரியர்களும், மேலியர்களும் லூக்ட்ரா யுத்தத்திற்குப் பின் அதனுடன் சேர்ந்து கொண்டார்கள். யூபோயேன்ஸ் நாட்டினர் கடைசியாக போயிஷியன் கூட்டமைப்பில் சேர்ந்து விட்டனர். மத்திய கிரீஸிலுள்ள எல்லா நாடுகளும், சித்தயேரோன் வரையில், போயிஷியா செல்வாக்கில் இருந்தது. இந்த வேண்டுகோள் சில மாதங்களுக்கு முன்பு வந்திருக்குமானல் போயிஷியா அதற்கு இணங்கியிராது. அப்பொழுது பேரேயின் ஜேஸன் உயிரோடிருந்தான். அவன் டெல்பி நகரில் தன்னுடைய படையுடன் காட்சியளித்தான். போயிஷியப் படைகள் போயிஷியாவை விட்டு வெளியே தலை நீட்டி இருக்க முடியாது.

### போயிஷியர்கள் லாக்கோனியாவின் மேல் படையெடுத்தல்

குளிர்காலத்தில் எப்பிமினுண்டஸ் தன்னுடைய போயிஷியப் படை பின் தொடர ஆர்க்காடியாவிற்குள் வந்துவிட்டான். அவன் வருவதற்கு முன்னதாகவே எஜிஸிஸ்லாஸ், விரும்பிய நாசவேலைகளைச் செய்துவிட்டுத் திரும்பிவிட்டான். எப்பாமினுண்டஸ் செய்ய வேண்டிய வேலை எதுவுமில்லாததைப்போல் தோன்றியது. ஆனல் ஆர்க்காடியர்கள் அவனை அவன் நாட்டிற்குத் திருப்பியனுப்ப விரும்பவில்லை. ஸ்பார்ட்டாவை நேரடியாகத் தாக்க வேண்டும். அதன் பெருமையைத் தரைமட்டமாகச் செய்துவிட வேண்டுமென்பதே அவர்களுடைய நோக்கம். இதுவரையில் ஸ்பார்ட்டாவின் மண்ணில் அந்நியப்படை கால் வைத்ததில்லை. ஸ்பார்ட்டாவின் படை அரண்களின் பலத்த பாதுகாப்பில் நம்பிக்கை வைத்ததில்லை. ஸ்பார்ட்டாவிற்குப் படையெடுத்துப்போக எப்பிமினுண்டஸ் உறுதி கொண்டான். அவனுடைய படை நான்கு பிரிவுகளாகப்பிரிந்து நான்கு சாலைகள் வழியே முன்னேறிக்கொண்டிருந்தன. செல்லாசியா வரையில்

வந்துவிட்ட அவர்களைத் தடுத்து நிறுத்தக்கூடிய எதிரியின் படை எதையும் அவர்கள் பார்க்கவில்லை. இவர்களுடைய கொடுமைக் காளானவர் சில அகதிகளும், சில கலப்பின மக்களுமாவர். செல் லாசியா கொளுத்திச் சாம்பலாக்கப்பட்டது. அந்தப்படை மீண்டும் ஒன்று சேர்ந்து மலையை விட்டிறங்கிச் சமவெளிக்குள் வந்தது. யூரோட்டாஸ் (Eurotas) நதி வழியிலிருந்தது. எப்பாமினுண்டஸ் ஆற்றைக்கடந்து செல்லவேண்டும். ஆறு வெள்ளப் பெருக்கால் வழிந்தோடியது. ஆற்றைக் கடக்கும் பாலத்தை அணுகினர்கள்; பாலம் பலத்த பாதுகாப்பிலிருந்தது. எப்பாமினுண்டஸ் தெற்கு நோக்கிச் சில மைல் தூரம் பிரயாணம் செய்தான். அமிகிளே (Amyclae) என்ற ஊர் ஆற்றங்கரையிலிருந்தது. அவ்விடத்தில் படகுகளின் உதவியைக்கொண்டு ஆற்றைக்கடந்தான். இப்போது ஸ்பார்ட்டாவிற்கு மீட்புவந்தது; எப்பாமினுண்டஸ் படையெடுத்து வருகிருன் என்று கேட்டவுடனே ஸ்பார்ட்டர் தூதுவர்களை பெலப்போனிசிய நகரங்களுக்கு அனுப்பினர்கள். கொரிந்தியா, சிசியோன், பிலியஸ், பெள்ளேன், ஆர்கோலி கடற்கரையிலுள்ள பட்டினங்கள் யாவும் ஸ்பார்ட்டாவுடன் இன்னும் நட்புப் பாராட்டின. அவை ஸ்பார்ட்டாவுக்கு படையுதவி அளித்தன. அவை வலது பக்கமுள்ளக் சாலையின் மூலம் ஸ்பார்ட்டாவிற்கு வர முடியவில்லை. ஏனெனில் வலதுபக்கச் சாலையை பகைவர் அடைத்து விட்டனர். இந்தப்படை லாக்கோனியாவின் கிழக்குத் துறையை அடைந்தது. பேரோன் மலையைக் கடந்துசென்று, யூரோட்டா ஆற்றில் பால முள்ள இடத்திற்கு விரைந்துவந்து சேர்ந்தது. அங்கு அவர்கள் எப்பாமினுண்டஸைக் காணவில்லை. ஸ்பார்ட்டாவிற்குள் புகுந்து ஸ்பார்ட்டாவின் பெருமையை குறைத்துவிட்டோம் என்ற மன நிறைவுடன் எப்பாமினுண்டஸ் திரும்பிவிட்டான். தீபர்கள் ஸ்பார்ட்டாவின் மனத்தைப் புண்படுத்தியதைப்போல் இது வரையில் யாரும் செய்ததில்லை. ஓர் இக்கட்டான காலத்தில் ஏற்பட்ட அப் பேரிடியின்பொழுது அவர்கள் மேற்கொண்ட செயல்களை ஸ்பார்ட் டனர் ஒருபோதும் நினைத்துப் பார்த்ததில்லை. உணர்ச்சிகளை அடக்கிக்கொள்ளப் பழக்கப்பட்ட ஸ்பார்ட்டாப் பெண்கள்கூட, மாண்டுபோன மைந்தர்களுக்காகவும், மணாளர்களுக்காகவும் அழுது புலம்பாமல் இருக்க முடியவில்லை. துக்கமும் மனமுறிவும் அவர்கள் உள்ளங்களை நிரப்பின. மற்றக் கிரேக்க நாட்டுப் பெண்கள், பகைவர் படைகளைத் தங்கள் நாடுகளில் பார்த்திருந்தனர். ஆனல் ஸ்பார்ட் டன் பெண்கள் இதற்கு முன் எக்காலத்திலும் பகைவர் படையைக் கண்ணுல் கண்டதில்லை. கிழட்டு மன்னனுகிய எஜிஸிஸ்லாஸ், எல்லோரையும்விட மிகையாகத் தீபர்களை வெறுத்தான். தற்காப்புப் படையின் தலைமை அவனுக்கு அளிக்கப்பட்டது. அவனுடைய வேலை கடினமான தாயிற்று. ஓர் புறம் அவன் பகைவர்களின் நடமாட்

டத்தைக் கவனிக்கவேண்டும். மறுபுறம் எப்பாமினுண்டஸின் படை யெடுப்பால் பாதிக்கப்பட்டவர்களை ஆற்றித்தேற்ற வேண்டும். இக்கட்டான இந்தச் சந்தர்ப்பத்தில் பணிபுரிய முன்வந்த 600. பழங்குடி மக்களுக்குச் சுதந்திரமளிக்க வாக்குக்கொடுக்கப்பட்டது. இந்த உதவி புதிய ஓர் அபாயத்தைக் கொண்டுவரக் காத் திருந்தது.

**ஸ்பார்ட்டாவில் மக்கள் தொகை குறைதல்**

இந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்பார்ட்டனர் வெளிப்படுத்திய அவர்க ளுடைய பலவீனத்திற்கு லூக்ட்ரா யுத்தத்தில் சில நூற்றுக்கணக் கான ஸ்பார்ட்டனப் போர் வீரர்கள் மடிந்துபோனது காரண மாகாது. இப்போதிருக்கும் படைத் தலைமைத்திறன் அதற்குப் பொறுப்பன்று; ஒன்று மட்டும் இச் சம்பவத்திற்குப் பொறுப்பா யிருந்தது; அதாவது கலப்பற்ற ஸ்பார்ட்டனர் தொகை குறைந்து கொண்டே வந்தது. அந்தக் குறைவே இந்தப் பலவீனத்திற்குக் காரணம். அந்தச் சந்தர்ப்பத்தில் ஸ்பார்ட்டாவிலிருந்த கலப்பற்ற ஸ்பார்ட்டனரின் தொகை 1500க்கு மிகையாகாது. அடிக்கடி யேற் பட்ட போர்கள் இதற்குக் காரணமல்ல. ஸ்பார்ட்டாவின் பொருளா தார நிலைமையும் இதற்குக் காரணமாக இருந்தது. ஸ்பார்ட்டாவில் பணப் பெருக்கம் அதிகரித்தது. நிலத்தை விற்கவும் வாங்கவும் உரிமை தருங் கூட்டங்கள் அடிக்கடி கொண்டுவரப்பட்டன. இதன் காரணமாக சிறுநிலக் கிழார்கள் பண முடையில் தங்கள் நிலங்களை விற்றுவிட்டார்கள். நிலங்கள் ஒருசிலருடைய கைகளில் சிக்கிக் கொண்டன. பெருநிலச்சுவான்கள் தோன்றினர். சமூகத்தின் பலத்தை உறிஞ்சியெடுக்கும் இந்த நோயைப்பற்றி எப்பா - மினுண்டஸ் நன்கு அறிவான். அதைத் தனக்கு ஆதாயமாக்கிக் கொண்டான்.

**மெஸ்ஸேனேயின் தோற்றம், கி.மு. 370-69.**

யூரோட்டாஸ் நதியின் கரைகளிலிருந்து டேஜிட்டஸ் மலையடி வாரத்தில் ஜித்தியோன் வரையில் சூறையிடுதல், பாழ் பண்ணுதல் முதலிய வேலைகளைச் செய்துவிட்டுப் பகைவர் ஆர்க்காடியாவிற்குத் திரும்பினர். குளிர்காலத்தின் மையம் வந்தும், அவர்களின் போர் வேலைகள் ஓய்ந்தபாடில்லை. ஸ்பார்ட்டாவிற்குப் பேரிடி ஒன்று காத்திருந்தது. எப்பாமினுண்டஸ் தன்னுடைய படைகளை ஏவினன், அவை மெஸ்ஸேனியாவிற்குள் (Messenia) புகுந்துவிட்டன. மெஸ்ஸேனியன் இனத்தைச் சேர்ந்த குடியானவர்கள், அவர்கள் வருகையினுல் விழிப்புற்றெழுந்தார்கள். அவர்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்த விடுதலையின் காலம் வந்துவிட்டதென்று மகிழ்ச்சி யடைந்தார்கள். இதோம் மலையின் (Mount Ithome) சரிவிலே புதிய

மெஸ்ஸேனே நகருக்கு எப்பாமினுண்டஸ் அடிக்கல் நாட்டினுன். பழைய வீரர்களும் வீராங்கனைகளும் புதிய பட்டினத்திற்குத் திரும்பி வரும்படி தூண்டப்பட்டார்கள். பட்டினத்தின் சுற்றளவைக் கண்டு பிடித்தனர். முதல் கல்லை வாத்தியங்களோடும், மேளங்களோடும் எடுத்துவந்தார்கள். இதோமே பாதுகாப்பரணுயிற்று; அது நகரின் ஒரு பகுதியாக அமைந்தது. அரணின் சுவர்கள் மலையிலிருந்து இறங்கிச் சமவெளியோடு இணைக்கப்பட்டுள்ளன. அந்நிய நாட்டில் அகதிகளாக வாழ்ந்துவந்த மெஸ்ஸானியர்கள் திரும்பிவந்தார்கள். சொந்தப் பட்டினத்தில் சொந்த வீட்டில் இன்ப வாழ்வைக் கண்டார்கள்.

மெகாலோபோலிஸைப்போல், மெஸ்ஸேனே பல மாகாணங்களை ஒன்று சேர்த்ததனுல் ஏற்பட்டது. அதனுடைய அரசியல் முறை மெகாலோபோலிஸ் நகரின் அரசியல் முறைக்கு மாறுபட்டது. மெஸ்ஸேனே ஒரு கூட்டாட்சி முறை அரசாங்கத்தின் தலைநகரமன்று, மெஸ்ஸேனே பல வட்டங்களைத் தன்னிடத்தில் கொண்ட ஓர் தனி அரசு. கோரோனே, மெதோன் என்ற இரு நகரங்கள் மேன்டினே, கிளிட்டார் போன்ற நகரங்களல்ல; அவை பராரோன், மாரத்தோன் போன்ற இடங்களாகும். இங்குள்ளவர்கள், மெஸ்ஸேனேயின் பெயரில் மெஸ்ஸேனேயின் குடிமக்களானுர்கள். இவர்களுடைய தொடர்பு, ஏதென்ஸுக்கும் அட்டிகாவிற்குமுள்ள தொடர்பைப் போன்றது; மெகாலோபோலிஸுக்கும் ஆர்க்காடியாவுக்கும் உள்ள உறவைப்போன்றதன்று

ஸ்பார்ட்டவிற்கு எதிராக ஸ்பார்ட்டன் மண்ணில் ஒரு புதிய கோட்டையையும் புதிய பகைவன் ஒருவனையும் ஏற்படுத்தினுன். லாக்கானியாவிற்கு மேற்கிலும், இதோமுக்கும் கடலுக்குமிடையிலுமுள்ள (அசினே, சைப்பாரிஸ்ஸியாவைத்தவிர) எல்லா நிலங்களையும் ஸ்பார்ட்டா இழந்துவிட்டது. சுய ஆட்சி இவர்களுக்கு அளிக்கப்பட்டது. எப்பாமினுண்டஸின் கொள்கை மிகப்பெரிய விளைவைக் கொண்டுவந்தது.

மெஸ்ஸேனேயின் எழுச்சி ஸ்பார்ட்டாவின் வீழ்ச்சியைத் துரிதப்படுத்தியது. நிலங்களும் குறைந்துவிட்டன; குடிமக்களும் குறைந்துவிட்டனர். இந்தச் சந்தர்ப்பத்திலாவது ஸ்பார்ட்டா தன்னுடைய அரசியல் அமைப்பை மாற்றியமைத்திருக்க வேண்டும்.

### லாக்கோனிய படையெடுப்புப் பற்றி சாட்சி பகரும் கல்

மறக்கமுடியாத லாக்கோனியப் படையெடுப்பை ஆர்க்காடியர்கள் மகிழ்ச்சியோடு கொண்டாடினுர்கள். கொள்ளைப் பொருளின் ஒரு பாகத்தைக்கொண்டு டெல்பியிலுள்ள அப்பொல்லோ தெய்வத்திற்குச் சில கற்சிலைகளை எழுப்பினுர்கள். அவற்றிற்கடியில் தங்கள் வெற்

றியைக் குறித்தனர். ஆர்க்கேடியர்கள், எதிர்காலத்தில் வருபவர்களுக்குப் படிப்பினையாக இருக்கும் முறையில் லாசிடாமோனைப் பாழ்படுத்தியதை நினைவுச் சின்னங்களில் எழுதி வைத்தார்கள். சிலைகள் மறைந்துவிட்டன. ஆனால் வாசகங்கள் மட்டும் இன்றைக்கும் நாம் காணுமளவில் அழியாமல் இருக்கின்றன.

**ஸ்பார்ட்டாவை விடுவிக்க ஏதென்ஸ் படையனுப்புகிறது; தீப்ஸ் படை வீடு திரும்புகிறது: தளிர்விடுகாலம் கி.மு. 369.**

தீப்ஸ் நாட்டின் படையினால் நெருக்கப்பட்ட ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் நாட்டிடம் படையுதவி நாடிக் கெஞ்சியது. ஏதென்ஸ் தன்னுடைய நடுநிலைமைக்கொள்கையை விட்டுவிடத் தீர்மானித்தது. கள்ளிஸ்ட்டிராட்டஸ் ஸ்ப்பார்ட்டாவிற் குதவிபுரிய வேண்டுமென்று ஆதரித்துப் பேசினான். ஏதென்ஸிலுள்ள படை முழுவதையும் எப்பிகிராட்டிஸ் தலைமையில் ஸ்ப்பார்ட்டாவிற்கு அனுப்ப முடிவு செய்துவிட்டார்கள். ஏதென்ஸ் அனுசரிக்கவேண்டிய சரியான கொள்கையிதுவே. தீப்ஸ் படையை எதிர்க்க ஸ்பார்ட்டாவின் உதவி மிக அவசிய மாயிருந்தது. பழைய பகையை ஏதென்ஸ் மறந்துவிட்டது. எப்பிகிராட்டிஸ் ஏதென்ஸ் படையுடன் புறப்பட்டான். நிலமுனையடைந்தான். கொரிந்தியா, சென்கரே (Corinth and Cenchreae) முதலியவைகளைக் கைப்பற்றினான். ஓனியோன் மலைக்குப் போகும் வழியைத் தன் ஆதிக்கத்தில் கொண்டுவந்தான். பகைவன் பெலப்போனிசியாவை விட்டுப் புறப்படுவதைத் தடுப்பது அவன் நோக்கமன்று; தன் படையின் பின் பகுதிக்குப் பாதுகாப்பு அளிப்பதே அவன் முதல் நோக்கமாயிருந்தது. பகைவனின் நாட்டிற்குள் புகுந்துவிட்டால் படை பின்புறமாகத் தாக்கப்பட்டு, திரும்பிவரும் வழி அடைபடாமல் பாதுகாத்துக் கொள்வதே அவன் முதல் வேலையாயிருந்தது. அவன் ஆர்க்காடியாவிற்குள் படையுடன் முன்னேறிச் சென்றான். தீபன்களும் அவனுடைய நேசவுறவு நாடுகளும் லாக்கோனியாவை விட்டுச் சென்றதை அறிந்தான். ஸ்பார்ட்டாவின் அபாயம் விலகிவிட்டது. ஆகையால் அவன் கொரிந்தியாவிற்குத் திரும்பினான், அவன் போயிஷியன் தலைமையை வழிமறித்துத் தாக்காவிடினும், அதற்குத் தொல்லை விளைவித்தான். ஸ்பார்ட்டாவை மீட்பது அத்தீனியப் படையெடுப்பின் நோக்கமே தவிர தீபன்களோடு போர்புரிவதில்லை. ஆனால் ஏதென்ஸ் நகரத்துப் படை, தீபன் படையை எதிர்த்துப் போரிடவேண்டும் என்பதே ஸ்பார்ட்டாவின் விருப்பம்.

**ஏதென்ஸ், ஸ்பார்டா நாடுகளின் நேச உறவு உடன்படிக்கை கி.மு. 369.**

ஸ்பார்ட்டாவின் மீட்சிக்காக வாக்களித்த சபை இப்போது ஸ்பார்ட்டாவுடன் நேச உறவு உடன்படிக்கை செய்துகொள்ளத்

தீர்மானித்துவிட்டது. ஸ்பார்ட்டாவுடன் சேர்ந்து போயிஷியா, ஆர்க்காடியா நாடுகளைத் தாக்குவது என ஏதென்ஸ் உறுதி கொண்டது. ஏதென்ஸ் தன்னுடைய பேரரசைப் பெருக்க வேண்டு மென்று ஏற்கெனவே திட்டமிட்டது. அத் திட்டத்தை நிறைவேற்றவும் பழைய நேச நாடுகளில் தேரேசியாவிலுள்ள அம்பி போலீஸ் நாட்டைத் திரும்பப் பெற்றே தீரவேண்டுமென்பதும் அதன் ஆசை. இவ்விதமானத் திட்டங்களையுடைய ஏதென்ஸ் நடுநிலைமைக் கொள் கையைக் கைவிடவேண்டியதாயிற்று. மாசிடோனியாவில் தீப்ஸ் மோதிக் கொள்ளக்கூடிய அபாயமான நிலைமை இருந்ததென்பதை நாம் பின்னுல் கவனிப்போம்.

**பெலப்போனிசியாவில் எப்பாமினன்டஸ் இரண்டாம் முறை படையெடுத்தல்**

பெலப்போனிசியாவில் ஆர்க்காடியர்களுக்கும், ஸ்பார்ட்டாவின் நேசவுறவு நாடுகளுக்கும் போர் தொடர்ந்து நடந்தது. சில நாளைக்குப்பின் எப்பாமினன்டஸ் போயிஷியன் படையுடன் பெலப் போனிசியாவுக்கு வந்தான். அவன் நாட்டில் இல்லாதிருந்தும், போயிட்டார்ச் அன்ற தலைமைப் பதவிக்கு அவனை மீண்டும் தேர்ந் தெடுத்தார்கள். ஸ்பார்ட்டனரும் அத்தீனியர்களும் ஒனியோன் சாலையைக் காவல் புரிந்து வந்தார்கள்; இச் சமயம் தீபன்களை வெளியே விரட்டியடிக்க வேண்டுமென்பதே அவர்கள் நோக்கம்; ஆனால் எப்பாமினன்டஸ் அப்படையை ஒதுக்கிவிட்டு, தன்னுடைய நேசநாடுகளின் படையுடன் சேர்ந்துகொண்டான். சிசியோனும். பெள்ளேனும் கைப்பற்றப்பட்டன. ஆனால் அவன் பிலியாசைக் கைப்பற்ற முடியவில்லை. இப்போது ஸ்பார்ட்டாவிற்கு உதவி செய்யக் கடல்கடந்து ஒரு படை வந்தது. ஸ்பார்ட்டாவிற்கு உதவி புரிய சைரகூஸ், செல்டுகளையும், ஐபீரியர்களையும் கொண்ட 2000 போர் வீரர்களை 20 கப்பல்களில் அனுப்பி வைத்திருந்தது (Celtic and Iberian). ஒரு சமயம் சைரகூஸ் இக்கட்டான நிலையிலிருந்த போது ஸ்பார்ட்டா உதவியனுப்பி அதைக் காப்பாற்றியது. சைரகூஸ் அவ்வுதவியை மறந்துவிடவில்லை. ஒன்றுக்கு மேற்பட்ட உதவியை சைரகூஸ் ஸ்பார்ட்டாவிற்கு அனுப்பியது. அப்படை யுதவியின் வருகையினால் எப்பாமினண்டஸ் தீப்ஸ் நகரத்துக்குத் திரும்ப நேரிட்டது. அவன் வாளா திரும்பிவிடவில்லை. அவன் சில நாசவேலைகளைச் செய்துவிட்டுத்தான் வந்தான். அவனுக்கு ஓர் அரசியல் விரோதி இருந்தான். அவன் மெனக்கிளிதாஸ் (Meneclidas) என்றழைக்கப்பட்டான். அவன் எப்பாமினண்டஸ் மீது அரசாங்க துரோகக் குற்றத்தைச் சுமத்த சமயம் பார்த்து வந்தான். எப்பாமினண்டஸ் போயிட்டார்ச் என்ற சிறப்பான பதவிக்கு மறுமுறையும் தேர்ந்தெடுக்கப்படா வண்ணம் செய்து விட்டான்

**தளிர் விடுகாலம், கி.மு. 368.**

தீப்ஸ் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட ஸ்பார்ட்டாவின் அடிச்சுவடுகளைப் பின்பற்றியது. சிசியோனில் ஒரு கவர்னரை நியமித்தது. போயிஷிய பட்டினங்களில் ஸ்பார்ட்டா ஹார்மோஸ்ட் என்ற கவர்னர்களை ஏற்படுத்தியதைப்போல், பெலப்போனீசிய நகரங்களில் தீப்ஸ் கவர்னர்களையும், காவல் படையினரையும் நியமித்தது. மெஸ்ஸேனியாவும் ஆர்க்காடியாவும் சுதந்திரம் பெற்ற நகரங்களாவதற்குத் தானே காரணம் என்றும், அவர்களுடைய சுதந்திரத்தைப் பாதுகாப்பது தன்னுடையப் பொறுப்பென்றும் தீப்ஸ் கருதியது. தீப்ஸ் தூரத்திலுள்ள நாடு. லாசிடோமோன் அண்மையிலுள்ள நாடு. ஆகவே லாசிடமோனிய ஏகாதிபத்தியத்தைவிட தீப்ஸ் ஏகாதிபத்தியம் சகித்துக் கொள்ளக் கூடியதுதான். எனினும், சுதந்திர ஆர்க்காடியா கூட்டாட்சி அரசாங்கம், ஒவ்வொரு செயலிலும் சுதந்திரத்தை நிலைநாட்டத் தீர்மானித்தது. ஸ்பார்ட்டா மிகவும் வலுவிழந்து காணப்பட்டதால், ஆர்க்காடியர் ஒருபுறம் மெஸ்ஸேனே, மறுபுறம் ஆர்காஸ் உதவி கொண்டு, தங்கள் சக்தியால் தம் சுதந்திரத்தைக் காக்கத் தீர்மானித்தனர். அச்சுதந்திர தாகத்தையும் ஊட்டி விட்டவன் லைக்கோமிடெஸ் (Lycomedes) என்பவனுவான். 'பெல்போனிசியாவில் நீங்கள் மட்டுமே பூர்வீகக் குடிகள். எண்ணிக்கையில் நீங்கள் அதிகமானவர்கள். நீங்கள் கிரேக்க நாட்டிலேயே மிகவும் உறுதியான மக்கள். போர்க் களத்தில் மற்றவர்கள் உங்கள் உறவை எப்போதும் நாடி வந்தபடியால் நீங்கள் வீரமுள்ளவர்களென்பது உறுதியாயிற்று. ஸ்பார்ட்டாவின் தலைமையில் அவளைப் பின்பற்றி, அவளை உண்டாக்கியது நீங்களே. இப்போது நீங்களே தலைமை தாங்காமல், தீப்ஸ் தலைமையில் தண்டு வலித்துச் செல்லுவீர்களானுல், அது ஒருவேளை இரண்டாவது ஸ்பார்ட்டாவாகத் தலைதூக்கினுலும் தூக்கலாம்.' இந்த உணர்ச்சியோடு ஆர்க்காடியர்கள் வியக்கத்தக்க செயலைப் புரிந்து பல வெற்றிகளை யடைந்தார்கள். மேற்கிலிருந்த ஹேராயோ (Heraea) என்ற நகரமும், கிழக்கிலிருந்த ஓர்க்கோமேனஸ் என்ற நகரமும், எந்த நாட்டின் விவகாரங்களிலும் தலையிடாமல் தனித்திருந்தன. இவை இப்போது ஆர்காடியன் கூட்டாட்சியில் சேரும்படியான கட்டாயம் ஏற்பட்டு விட்டது. அவை சேர்ந்ததும் ஆர்க்காடியா தன்னுடைய அகில ஆர்க்காடியக் கொள்கையை நிறைவேற்றிக் கொள்ளத் துடித்து நின்றது. லோக்கானியாவின் வடக்கிலுள்ள கிராமங்களையும் ஆர்க்காடியா, ஐக்கிய நாட்டுடன் சேர்த்துக் கொண்டது. திரிப்பீலியன் பட்டணங்கள் எலிஸ் ஆதிக்கத்திலிருந்து விடுதலை பெற ஆர்க்காடியாவின் துணையை நாடின. கூட்டாட்சிப் படைகள் ஆர்கோலிஸ், மெஸ்ஸேனியா என்ற நாடுகளுக்கு எதிராகவுள்ள பட்டினங்களைக் கூட்டாட்சியில் சேர்க்கச் சுறுசுறுப்போடு வேலை செய்தன. இந்தச்

சமயத்தில் ஸ்பார்ட்டா ஆதரவற்ற நிலையிலிருந்தது. சைரகூஸின் சர்வாதிகாரி மற்ருெரு உதவிப் படையை ஸ்பார்ட்டாவிற்கு அனுப்பினுன். ஸ்பார்ட்டா வலுவடைந்து செயலில் ஈடுபட ஆரம்பித்தது. ஸ்பார்ட்டாவின் படை மெகாலோபோலிஸ் சமவெளிக்கு அனுப்பப் பட்டது.

அந்தப் படையெடுப்புக்குத் திடீரென்று தடை ஏற்பட்டது. எனவே வறிதே காலம் கழிந்தது. சைரகூஸியப் படை முன்பே தாம் பெற்ற கட்டளைப்படி ஸிஸிலிக்குத் திரும்பிப் போக வேண்டிய நேரம் வந்து விட்டது. அப்படை ஐத்தீயனில் கப்பலேறிச் செல்ல அவர்கள் லாக்கோனியா வழியே செல்ல வேண்டும்; எனவே, மலைப் பள்ளத் தாக்குகளில் அவற்றை மடக்கி விடுவதென்று ஆர்க்காடியா எண்ண மிட்டுக் கொண்டிருந்தது. படையின் பின்னணியிலிருந்த ஆர்ச்சி டாமஸ் முன்னேறிச் சென்று ஆர்க்காடியன் கூட்டாட்சி அரசாங்கத் தைத் தாக்கினுன். ஆர்க்காடியர் பேரிழப்போடு போர்க் களத்தி லிருந்து ஓட்டமெடுத்தனர். ஸ்பார்ட்டன் படையில் ஒருவன் கூட உயிரிழக்கவில்லை. ஆகையால் அப்போரை 'கண்ணீரில்லாத போர்க் களம்' என்று அழைத்தனர். அற்ப வெற்றிக்காக அவர்கள் அடைந்த மகிழ்ச்சி ஸ்பார்ட்டனர் எவ்வளவு தாழ்ந்த நிலையினுக்கு வந்து விட்டார்கள் என்பதைக் காட்டுகிறது.

**டெல்பி காங்கிரஸ், கி.மு. 368 கோடை; சூசாவில் கிரேக்க அரசியல் தூதுவன், கி.மு. 367.**

தன் படை போரிலீடுபடுமுன் திரும்ப வேண்டுமானுல், டயோனிஸியஸ் படையுதவி அனுப்பாமல், அப்படையை சைரகூஸிலேயே வைத்திருக்கலாமே என்று நினைக்கலாம். இந்த ஐயப்பாட்டைப் போக்கப் பல காரணங்களுள்ளன. சைரகூஸ் போர் வீரர்கள் கிரீஸில் ஒரு வேலையும் செய்யாமல், நீண்ட நாட்கள் வாளாயிருந் தார்கள். அப்போது ஓர் பொதுவான சமாதான உடன்படிக்கைக் கான முயற்சிகள் எடுக்கப்பட்டன. அதில் பிரிஜியாவின் சாட்டராப் ஆன ஆரியே பார்ஸானெஸ் முதன்மையான பங்கெடுத்துக் கொண் டான். அவன் தன்னுடைய தூதுவன் ஒருவனிடம் திரண்ட செல் வத்தைக் கொடுத்து, கிரீஸுக்கு அனுப்பினுன். சமாதான உடன்படிக் கைக்கான பேச்சு ஏற்படுவதற்கு ஏதென்ஸ் காரணமாக இருந்தது. சைரகூஸின் மன்னனும் சமாதான உடன்படிக்கைக்கான பேச்சு தொடங்க ஏதென்ஸ் காரணமாக இருந்தது. அத்தீனியர்கள், டயோனிஸியஸ் மன்னனுக்கும், அவன் மக்களுக்கும் நன்றி தெரிவிப் பதை ஒரு கல்வெட்டு குறிப்பிடுகிறது. 'அத்தீனியர்களுக்கும் அதன் கூட்டு நாட்டவர்க்கும் நல்லவர்களாக யிருந்ததற்கும், அரசன் உடன்படிக்கைக்கு உதவியதற்கும்,' அவர்கள் நன்றி செலுத்தியதாக

அக் கல்வெட்டு மூலம் அறிகிறோம். டெல்பியில் கூடிய காங்கிரஸ், அரசனுடைய சமாதான உடன்படிக்கையின் அடிப்படையில் சமாதானம் செய்துகொள்வதாக முடிவு செய்தது. ஸ்பார்ட்டாவும் ஏதென்ஸும் சமாதானத்தைப்பற்றிக் கவலை கொண்டிருந்தன. ஆனால் இவை ஒவ்வொன்றும் ஒரு நிபந்தனையைக் கடைப்பிடித்தன. நோக்கங்களை மாற்றிக் கொள்ள அவை விரும்பவில்லை. மெஸ்ஸேனியாவைப் பெற்றே தீரவேண்டுமென்பது ஸ்பார்ட்டாவின் நோக்கம். அம்பிபோலிசை அடைந்தே தீரவேண்டுமென்பது ஏதென்ஸின் நோக்கம். இவர்களுடைய நிபந்தனைகளை தீப்ஸ் ஏற்க மறுத்தது. இதன் காரணமாக சமாதானத்திற்கான பேச்சு முறிந்தது. இதனால் பல கிரேக்க நாடுகள் தம் விருப்பத்திற்கேற்பத் தனித்தனியே பாரசீகத்துடன் சமாதான உடன்படிக்கை செய்து கொள்ளும் நிலை ஏற்பட்டது.

மெஸ்ஸானியாவின் சுதந்திரத்தை உறுதி செய்யப் பாரசீக மன்னனின் அனுமதி பெற பெலோப்பிடாஸ் சூசாவிற்குச் சென்றான். அத்தீனியர்கள் அம்பிபோலிஸின் மீது தங்களுக்குள்ள உரிமையைப் பேரரசனுக்கு எடுத்துச் சொல்ல அரசியல் தூதுவர்களை அனுப்பினார்கள். ஆர்க்காடியா, எலிஸ், ஆர்கோஸ் முதலிய நாடுகள் பிரதிநிதியை அனுப்பின. ஆனால் பெலோப்பிடாஸின் முயற்சி வெற்றி பெற்றது. அரசன் கிரேக்க நாடுகளுக்கு ஒரு கட்டளை பிறப்பித்தான்; அக்கட்டளையில் தீப்ஸ் நகரின் விருப்பங்களை ஏற்றுக் கொள்ள வேண்டும். மெஸ்ஸேனியாவும் அம்பிபோலிஸும் சுதந்திர நகரங்களாக இருக்கவேண்டும். அத்தீனியர்கள் தங்கள் கடற்படையை வரவழைத்துக் கொள்ளவேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தன. மேலும், திரிப்பீலியா எலிஸ் நாட்டைச் சார்ந்து வாழ்வதா என்ற பிரச்சினையில், வெற்றி எலிஸுக்குக் கிடைத்தது. அதாவது திரிப்பீலியா எலிஸ் நாட்டின்கீழ் வாழ வேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருந்தது. ஆர்க்காடியா ஏமாந்துபோயிற்று. இவ்வாறு பாரசீகத்திற்கு எதிராக முடிவு செய்ததற்கு பெலோப்பிடாஸே காரணமாயிருந்தான். ஆகவே தீப்ஸ், ஆர்க்காடியா என்ற இருநாடுகளின் உறவில் மாறுதல் ஏற்பட்டுவிட்டதென்பது தெளிவாகிறது. பொலோப்பிடாஸ், அரசனுடைய கடிதத்துடன் வந்தான். தீப்ஸ் நகரில் கூட்டப்பட்ட கிரேக்க நாடுகளின் காங்கிரஸ் சபையில் அக் கடிதம் செல்லாக் காசுபோல் ஆயிற்று. அக் கடிதம் ஒவ்வொரு நகருக்கும் அனுப்பப்பட்ட போதிலும், அங்கு அதற்குரிய மதிப்பைப் பெறவில்லை. ஆர்க்காடியா, திரிப்பீலியாவை எலிஸ் நாட்டிற்கு விட்டுவிடப் போவதில்லை. ஏற்கெனவே லைக்கோமிட்ஸ், தீப்ஸ் தலைமைக்கு எதிர்ப்புத் தெரிவித்துள்ளான்.

**எப்பாமினண்டஸ் மூன்றும் முறை பெலப்போனிஸியா மீது படையெடுத்தல், கி. மு. 366.**

தீப்ஸின் அதிகாரத்தை எதிர்க்கும் செய்கையால் பெலப்போனிஸியாவில் தீப்ஸ் படை புகுந்தது. ஓனியன் குன்றின் சாலை பாதுகாப்பிலிருந்த போதிலும், அத்துணைக் கவனத்துடன் அமையவில்லை. எனவே, ஆர்கிவ் (Argive) உதவியினால் எப்பாமினாண்டஸ் அந்தச் சாலையைக் கடந்துவிட்டான். ஸ்பார்ட்டா மிகவும் வலுவிழந்து காணப்பட்டதால் அதை மேலும் துன்புறுத்த அவன் விரும்பவில்லை. ஆர்க்காடியாவிற்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டுமென்பதே, அவன் விருப்பம் பெலப்போனிஸியாவில் புதியநேச உறவு நாடுகளை ஏற்படுத்தி, தன் அதிகாரத்தைத் தீப்ஸ் வலுப்படுத்தினால், அது ஆர்க்காடியாவிற்குப் படிப்பினையாகயிருக்குமெனக் கருதினான். அதன்படியே எப்பாமினாண்டஸ் அக்கேயாவில் நுழைந்தான். அக்கேயன் நகரங்கள் அவனுடன் நேச உறவு கொண்டன.

### அக்கேயாவைப் பிடித்தலும் அதை இழத்தலும், கி.மு. 366.

எவ்வளவு சீக்கிரம் அக்கேயாவை வென்றானோ அவ்வளவு சீக்கிரம் அதை இழந்தும் விட்டான். எப்பாமினாண்டஸின் மிதவாதக் கொள்கைக்கு மாறானது, தீபன் அரசாங்கத்தின் கொள்கை. தீபன் அரசாங்கம் ஆலிக்கார்க் அரசியலமைப்பைக் கலைத்து விடவும், ஆலிகார்க் தலைவர்களை நாடு கடத்தவும் வற்புறுத்தியது. பல நகரங்களிலுமிருந்து நாடு கடத்தப்பட்ட இந்த அகதிகள் கூட்டமாகச் சேர்ந்தார்கள். ஒவ்வொரு பட்டினமாக மீட்டுக் கொண்டார்கள். அன்று முதல் அக்கேயா ஸ்பார்ட்டாவுடன் சேர்ந்து கொண்டது.

### சிசியோன் ; யூப்ரோன் சர்வாதிகாரியாதல், கி.மு. 368.

சிசியோனில் நடந்த சம்பவம் பெலப்போனிசியாவின் அமைதியற்ற நிலையைக் காட்டுகிறது. தீபன் கவர்னர், அக்கரோபோலிஸ் என்ற பாதுகாப்பரணைத் தன் தலைமைக் காரியாலயமாக்கிக் கொண்ட பொழுது, ஆலிக்கார்க்குகள் துன்புறுத்தப்படவில்லை. அந் நகரில் யூப்ரோன் என்பவன் முதன்மையான குடி மகன். அவன் குடியாட்சி முறை அரசாங்கத்தை நிலை நாட்டினான். அவன் படைத்தலைவனாகத் தன்னைத் தேர்ந்தெடுக்கும்படி செய்தான். ஒரு கூலிப்படையை உருவாக்கினான். அவன் மெய்காப்பாளர்களை ஏற்படுத்திக் கொண்டான். நகரமும் துறைமுகமும் அவனுடைய ஆதிக்கத்தின் கீழ் வந்து விட்டன. ஆரம்பத்தில் அவன் திட்டங்களுக்கு ஆர்க்காடியர்கள் மிகவும் உதவினர். பின் அவனுடைய எதிரிகளின் சூழ்ச்சியால் ஆர்க்காடியா அவன்மீது ஐயங்கொள்ளத் தலைப்பட்டது. ஆகையால் ஆர்க்காடியர்கள், அவனால் நாடு கடத்தப்பட்டவர்கள் கையில் சிசியோனை மீண்டும் ஒப்படைத்தார்கள். யூப்ரோன், நகரை விட்டுத் துறைமுகத்திற்கு ஓடினான். துறைமுகத்தை லாசிடா

மோனியர்களிடம் ஒப்படைத்திருந்தான். ஆனால் லாசிடாமோனியர்கள் அதைத் தங்கள் பாதுகாப்பில் வைத்திருக்கத் தவறிவிட்டார்கள். சிசியோன் இன்னும் சர்வாதிகாரியிடமிருந்து விடுவிக்கப்படவில்லை. அத்தீனிய கூலிப்படை அவனை மீண்டும் பதவியில் நிறுத்தியது. போயிஷியாவின் உதவியில்லாமல் தான் இப் பதவியில் நீடித்திருக்க முடியாதென்பதை உணர்ந்து, அவன் தீப்ஸ் நகருக்குச் சென்றான். அங்கு காட்மேயிலிருந்த அரசியல் சபைக்கூடத்தில், அவனால் நாடு கடத்தப்பட்ட இரு சிசியோனியர் அவனைக் கொன்றார்கள். இதைக் குறித்து விசாரணை நடந்தது. பின் கொன்றவர் விடுதலை யடைந்தனர். ஆனால் சிசியோன் அவனை மறக்க வில்லை. அவனைத் தங்கள் நகரை இரண்டாம் முறை உருவாக்கியத் தலைவனாக வணங்கினார்கள். அவன் ஆட்சியில் மக்கள் மகிழ்ச்சியோடு வாழ்ந்தனரென்பதை இந்தச் சம்பவம் விளக்குகிறது. அவன் தாங்கிய தலைமைப்பதவி அவன் மகனுக்கு அளிக்கப்பட்டது.

### தீப்ஸ் ஒரோபஸ்ஸைக் கைப்பற்றியது, கி.மு. 360.

எப்பாமினாண்டஸ் படையெடுப்பினால் ஏற்பட்ட விளைவுகள் தீப்ஸ் நகருக்குத் தீமையாக முடிந்தன. ஆர்க்காடியாவுடன் கொண்ட உறவு மேலும் மேலும் முறிவடைந்தது. அதே ஆண்டில் தீப்ஸ் ஏதென்ஸுக்குச் சொந்தமான ஒரேராபஸ் நகரைக் கைப்பற்றி, அங்குத் தன்னுடைய காவல் படையை நிறுத்தியது. அத்தீனியர்கள் தனிமையாக தீப்ஸ் படையைச் சமாளிக்க முடியாது. ஆகையால் அது துணையைத் தேடியது. அதன் நேச நாடுகள் இவ்விக்கட்டான நேரத்தில் ஏதென்ஸைக் கைவிட்டன. ஆகையால் அது புதிய நண்பனைத் தேடவேண்டியதாயிற்று. இவ்வரிய வாய்ப்பை ஆர்க்காடியா பயன்படுத்திக் கொண்டது. லைக்கோமேடிஸ் ஏதென்ஸுக்குச் சென்று, அந்நாட்டவரைத் தம் நேசநாடுகளை விட்டு நீங்கி, தமது கூட்டாட்சியிற் சேருமாறு தூண்டினான். எனவே ஏதென்ஸ் இப்போது ஸ்பார்ட்டா, ஆர்க்காடியா ஆகிய இருநாடுகளுடன் நேசவுறவு கொள்ள நேர்ந்தது. ஏற்கெனவே ஸ்பார்ட்டாவிற்கும் ஏதென்ஸுக்கு மிடையே நட்பு நிலவியது. இப்போது ஏதென்ஸுக்கும் ஆர்க்காடிய கூட்டாட்சிக்கு மிடையே நேச உறவு ஏற்பட்டது. ஸ்பார்ட்டாவும், ஆர்க்காடியாவும் தமக்குள் போரிட்டுக்கொண்டிருந்தன. ஏதென்ஸும், தீப்ஸ் நாடும் இப்போது பகை நாடுகளாக இருந்த போதிலும், தீப்ஸின் நேச நாடான ஆர்க்காடியா ஏதென்ஸுடன் நட்புக்கொண்டது. இந்தப் புதிய உறவால் ஏற்படக் கூடிய நன்மைகளை அளவுக்கு மீறிக் கணக்கிட்ட ஆர்க்காடியாவிற்கு, அது நாசத்தையே தந்தது. அரசியல் தூதுவனாகிய லைக்கோமேடிஸ், தன் நாட்டுக்குத் திரும்பி வரும் வழியில் சில அகதிகளிடம் சிக்கித்

தவித்து இறந்தான்; ஆர்க்காடிய கூட்டாட்சி தன் தலை சிறந்த அரசியலறிஞனை இழந்து விட்டது.

### கி. மு. 366-ன் ஒரு தலையான சமாதானம்

கிரேக்க நாடுகளிடையே நிலவிய நெருங்கிய உறவில் ஏற்பட்ட மாறுதலின் காரணமாக ஒரோப்பஸ் கைப்பற்றப்பட்டது. அத்தீனியர்கள் கொரிந்தியாவைக் கைப்பற்றச் சதி செய்ததால், மற்றோர் மாறுதலையும் அது கொண்டுவந்தது. சதித் திட்டம் கண்டு பிடிக்கப்பட்டது. பெலப்போனிசியாவிற்குச் செல்லும் பாதையைத் தன் ஆதிக்கத்தில் நிலையாக வைத்திருக்க வேண்டுமென்பதே ஏதென்ஸின் நோக்கம். கொரிந்தியர்கள் அத்தீனியப் போர்வீரர்களைத் தங்கள் நாட்டை விட்டுக் கண்ணியமாக அனுப்பிவிட்டார்கள். ஆனால் கொரிந்தியா தீப்ஸ் நகரின் நெருக்கடியையும், ஆர்கோஸின் நெருக்கடியையும் தனியே நின்று சமாளிக்க இயலவில்லை. ஸ்பார்ட்டா அதற்கு உதவி புரியும் நிலையிலில்லை. ஆகையால் அந்நாடு தீப்ஸ் நகருடன் சமாதானம் செய்து கொள்ளும் நிர்ப்பந்தம் ஏற்பட்டது. அதனுடைய அண்டை நாடாகிய பிலியாஸும் (Phlius), மற்றும் ஆர்க்கோலிக்கக் கடற்படையினுள்ள நகரங்களும் கொரிந்தியாவுடன் சேர்ந்து கொண்டன. இந் நாடுகள் யாவும் முன்னால் மெஸ்ஸேனேயின் சுதந்திரத்தை அங்கீகரித்தன. ஆனால் இவை தீப்ஸ் நகருடன் எவ்வித ஒப்பந்தமும் செய்து கொள்ளவில்லை. அதனுடைய தலைமைக்குக் கீழ்ப்படிந்து நடக்க வாக்கும் அளிக்கவில்லை. அவை நடு நிலைமைக் கொள்கையுடைய நாடுகளாயின.

மெஸ்ஸேனியாவைப் பெறும் ஒரே நோக்கத்துடன் இது காறும் ஒப்பந்தத்தின் வாசகங்களை ஏற்றுக்கொள்ள மறுத்த ஸ்பார்ட்டாவிற்கு இது ஒரு பேரிடியாயிற்று, மெஸ்ஸேனியப் பிரச்சினை ஏதென்ஸின் அரசியல் ஆராய்ச்சியாயிற்று. ஸ்பார்ட்டா உரிமை கொண்டாடுவது நியாயமா? சட்ட வல்லுநரான ஐஸோகிராட்டிஸ், ஆர்ச்சிடாமஸ் மன்னன் பேசுவதைப் போன்று தயாரிக்கப்பட்ட ஒரு சொற்பொழிவால், ஸ்பார்ட்டாவின் சார்பாக வாதாடினான். நாவன்மைப் படைத்த ஆல்சிடாமாஸ் மெஸ்ஸேனியர்களுடைய உரிமையை ஆதரித்துக் கூறினான். அவன் கூறிய கோட்பாடு அக்காலத்துக் கொள்கைக்கு அப்பாற்பட்டதாகவிருந்தது.

> '' கடவுள் படைத்த மனிதர்கள் சுதந்திரமுள்ளவர்கள்
> இயற்கை எவனையும் அடிமையாக்கியதில்லை ''

என்று வருங்காலத்தில் எழும் கோட்பாட்டை முன்கூட்டியே அறிவித்தான்.

### நிலைமையின் சுருக்கம்

தென்ஹெல்லாஸின் அரசியல் உறவை இச் சகாப்தத்தில் எதிப்பிடு செய்வோமானால், தீப்ஸ் ஆர்க்காசுடன் சேர்ந்து, ஏதென்

ஸின் ஆதரவைப்பெற்ற ஸ்பார்ட்டாவுடன் போரிலீடுபட்டிருப்பதையும், அக்கேயா ஸ்பார்ட்டாவை ஆதரிப்பதையும்; எலிஸ் ஆர்க்காடியாவுடன் பகைமை கொண்டிருப்பதையும், ஏதென்ஸுடனும் தீப்ஸ் நகரத்துடனும் நேச உறவு கொண்டுள்ள ஆர்க்காடியக் கூட்டாட்சி ஸ்பார்ட்டாவுடன் போரில் ஈடுபட்டிருப்பதையும், அது தன்னுடைய ஒப்பற்றத் தலைவன் லைக்கோமிடாஸை இழந்துவிட்டதால் ஒற்றுமை குலைந்து சிதைவுறுவதையும் காண்போம்.

கொரிந்தியாவுடனும், மற்றும் போரில் ஈடுபட்ட மற்ற நாடுகளுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தின் விளைவாக, தீப்ஸ் நாட்டுத் தலைவர்களுக்கு, பெலப்போனீசியாவைப்பற்றிய கவலை நீங்கிவிடுகிறது. ஆனால் அவர்களுடைய கவனம் வேறு பக்கம் திரும்பியது. ஸ்பார்ட்டா முடமாக்கப்பட்டது. ஏதென்ஸ் தலைமைப் பதவிக்காகப் போட்டியிடுகிறது. பெலப்போனீசியாவில் சம்பவங்கள் முன்னேற்றமடைந்துகொண்டிருந்தபோது, ஏதென்ஸ் தன்னுடைய கடலாதிக்கத்தை மீண்டும் நிலைநாட்ட உலகின் வேறு பக்கங்களில் தன் கவனத்தைச் செலுத்திக்கொண்டிருந்தது. அது எவ்வாறு வெற்றியடைந்ததென்பதையும், அதைப்போலவே தீப்ஸ் வடக்கில் தன்னுடைய ஆதிக்கத்தை எப்படிப் பெருக்கிக்கொண்டிருந்ததென்பதையும், நாம் இப்பொழுது அறிந்துகொள்ள வேண்டும்.

## 3. வடகிரீஸில் தீப்ஸின் கொள்கையும் செயலும்

**அமைந்தாஸ் மரணம்.**

பேரேயின் ஜேஸன் இறந்த அதே ஆண்டில், அவனுடைய அண்டை நாட்டுக்காரனும், நேச உறவு நாட்டானுமாகிய அமைந்தாஸ் இறந்துவிட்டான். அமைந்தாஸ் சால்சியர்டியர்களோடு தன் நாட்டிற்காகப் போரிட்டதை நாம் அறிவோம். அவன் நாட்டைவிட்டுத் துரத்தப்பட்டு, பின் எவ்வாறு மீண்டும் வந்தான் என்பதையும் எவ்வாறு அவன் கூட்டமைப்பை ஸ்பார்ட்டா வீழ்த்தியதென்பதையும் நாம் அறிவோம். ஜேஸன், அமைந்தாஸ் ஆகிய இருவருக்குப்பின் அலெக்ஸாந்தர் வந்தார். பேரே நாட்டில் அதிகாரம் ஜேஸனுடைய சகோதரர்கள் கைக்கு மாறியது. அவர்களுள் முதலில் பதவிக்கு வந்தவனை, அடுத்துப் பதவிக்குவரவேண்டியவன் கொலை செய்தான். கொலை செய்தவன் நீடித்து அரசாள முடியவில்லை. ஏனென்றால் கொலையுண்டவனின் மகன். அலெக்ஸாந்தர், அவனைக் கொன்று அரசு கட்டிலேறினான். அவனுடைய ஆட்சி கொலையில் ஆரம்பித்தது. தெஸ்ஸாலிய நகரங்கள் பேரேயின் ஆதிக்கத்திற்குத் தலை வணங்க மறுத்துவிட்டன. பேரேயின் அலெக்ஸாந்தரை எதிர்க்க, மாசிடோனியன் அலெக்சாந்தர் உதவியை நாடினார்கள். மாசிடோனியா

உதவியளித்தது. லாரிஸ்ஸா (Larissa), கிரான்னேன் (Crannon) மற்றும் பல நகரங்கள் மாசிடோனிய ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டு வரப்பட்டன. ஆனால் தங்கள் நாட்டு அரசனின் ஆதிக்கத்தைவிட்டு விட்டு அந்நிய நாட்டு ஆதிக்கத்தில் சேர்ந்துவிட அவர்கள் உதவி தேடவில்லை. எனவே இரு அலெக்ஸாந்தர்களையும் ஒழித்துக்கட்ட தீப்ஸ் நாட்டின் உதவியை நாடினார்கள். அவர்கள் வேண்டுதலுக் கிணங்குவது தீப்ஸின் கொள்கையாகும். ஜேஸனுக்குப்பின் வந்த இந்த அலெக்சாந்தர் எப்படிப்பட்டவன் என்பதையறிதல் கடினம். போஷியர்களைப் பொறுத்தவரையில், தெஸ்ஸாலி ஓர் அரசனுடைய ஆட்சியின் கீழ் ஐக்கியமாவது தடுக்கப்படவேண்டிய முதல் வேலையா யிருந்தது. பெலோப்பிடாஸ் தலைமையில் ஓர் படை அனுப்பப்பட்டது வட தெஸ்ஸாலியில் லாரிசா நகரமும், மற்றும் சில நகரங்களும் தீபன் பாதுகாப்பின்கீழ்க் கொண்டு வரப்பட்டன.

### தெஸ்ஸாலியின் கூட்டமைப்பு; தெத்ரேட்ஸ்; ஆர்க்கோன்.

தெஸ்ஸாலியர்கள் தங்களுடைய நிலைமையை வலுப்படுத்த ஒரு கூட்டாட்சி தேவை என்பதை உணர்ந்தார்கள். இத்தகைய ஆட்சியை முன்பே அந் நாட்டில் பரீக்ஷை செய்து பார்த்திருந்தனர். அவர்கள் நாட்டை நான்கு பிரிவுகளாகப் பிரித்தார்கள். ஒவ்வொரு பிரிவும் ஒரு தலைவன் கீழிருந்தது. அவனிடம் குதிரைப்படை, காலாட்படைகளின் அதிகாரிகள் இருந்தார்கள். கூட்டாட்சி அரசாங்கத்திற்காக ஓர் தலைவனைத் தேர்ந்தெடுத்தார்கள். அவனை ஆயுட்காலத் தலைவனாகத் தேர்ந்தெடுக்கப்படாவிடினும், ஓராண்டிற்கு மேற்பட்ட காலத்திற்கு அவன் பதவியில் நீடித்திருக்கும் முறையைக் கொண்டுவந்தார்கள்; அவர்கள் செய்த ஏற்பாடு படைபலத்தின் மேல் சார்ந்திருந்தது. இது பழைய கூட்டுச் சேர்க்கை முறையில் அமைந்த ஏற்பாடாகும். எப்பாமினாண்டஸ் ஆர்க்காடியாவில் கூட்டாட்சி முறையை ஏற்படுத்தினான். பெலோப்பிடாஸ் அப்படிப் பட்ட வேலையொன்றும் தெஸ்ஸாலியில் செய்துவிட வில்லை. தீப்ஸ் நாடு தெஸ்ஸாலியர்கள் செய்த வேலைக்கு ஆதரவு தந்து, அதை உறுதிபடுத்த வேண்டியதாயிற்று.

### மாஸிடோனிய அலெக்ஸாந்தரின் கொலை, கி.மு. 369 – 8. பௌசானியாசின் கலகம்; எப்பிகிராட்டிஸ் தலையிடுதல்.

பெலோப்பிடாஸ் தெஸ்ஸாலியில் செய்த செயல்களுக்கு மாஸி டோனியா தடையாயிருக்கவில்லை. ஏனெனில் மாஸிடோனியாவில் உள்நாட்டுப் போராட்டம் நடந்துகொண்டிருந்தது. அலோரஸ் நாட்டு டாலமி (Ptolemy) என்ற பிரபு அரசனுக்கு விரோதமாகக் கலகம் செய்தான். இயற்கைக்கு மாறாக அரசனின் தாய் யூரிடிஸ் என்பவளே அக்கலகத்திற்கு ஆதரவாக இருந்தாள். இரு கட்சி

யினரும் அவர்களிடையே சமரசம் ஏற்பட பெலோப்பிடாஸின் உதவியை நாடினர்கள். பெலோப்பிடாஸ், அவர்களிடையே ஒரு தற்காலிகமான சமரசத்தை உண்டுபண்ணியதோடு, மாசிடோனியா வுடன் நேச உறவு உடன்படிக்கை ஒன்றைச் செய்துகொண்டான். பெலோப்பிடாஸ் திரும்பிவந்தவுடன், டாலமி அலெக்சாந்தரைக் கொன்றுவிட்டு, யூரிடிசை மணந்துகொண்டான். கொலைகாரர்களான டாலமியும், யூரிடிஸும் எதிர்பார்த்த பலனை அடைய மாட்டார்கள் போல் தோன்றிற்று. ஏனெனில் மற்றொருவன் அரசுகட்டிலுக்கு உரிமைக் கொண்டாடினன். அவன் படையைத் தயாரித்து, கால்சியன் எல்லைப் புறத்திலுள்ள நகரங்களையெல்லாம் கைப்பற்றினன். சரியான சமயத்தில், தெர்மிக் விரிகுடாவில் எப்பிகிராட்டிஸ் தலைமையில் ஓர் அத்தீனிய கடற்படை வந்து சேர்ந்தது. ராணி தன் இரு குமாரர் களாகிய பெர்டிகாஸ், பிலிப் (Prediccas and Philip) என்பவர் களுடன், தளபதி எப்பிகிராட்டிஸை சந்தித்தாள். அமைன்தாஸ் எப்பிகிராடிஸைத் தன் வளர்ப்புப்பிள்ளையாக ஏற்றுக்கொண்டதால், இளவரசர் இருவரும் எப்பிகிராட்டிஸின் சகோதரர்களானர்கள். அவ்வாபத்து நேரத்தில் தனக்கு உதவிபுரிய வேண்டுமெனப் பெரிதும் வேண்டினள். எப்பிகிராட்டிஸின் உதவியால், அரசுகட்டிலுக்குப் போட்டியிட்ட வேற்றுனைத் தள்ளிவிட்டு, பெர்டிக்காஸ், டாலமியாக முடிசூட்டிக்கொண்டான்.

**மாசிடோனியா, தெஸ்ஸாலி நாடுகளின்மேல் பெலோப்பிடாஸின் இரண்டாம் படை எடுப்பு**

கால்சிடியாவிலும், அதற்கு அடுத்த கடற்கரை நாடுகளிலும் ஏதென்ஸ் நகருக்கிருந்த நாட்டம், அதை மாசிடோனியாவில் நடை பெறும் அரசியல் சம்பவங்களைக்கூர்ந்து கவனிக்கவும், அங்கே அரசவையில் (Aegae) செல்வாக்கைத்தேடவும் செய்துவிட்டது. அந்நாட்டு அரச குடும்பத்தின் விவகாரங்களை இவ்வாறு எப்பி கிராட்டிஸ் முதலியோரைக்கொண்டு தீர்த்துவைத்துக்கொள்வது அவன் வழக்கமாயிற்று. அவன் செய்த ஏற்பாடு, பெலோப்பிடாஸ் செய்த ஏற்பாட்டைக்காட்டிலும் மேலானது. தீப்ஸ் மாஸிடோனியா விவகாரத்தில் தலையிட்டதால் அத்தீனிய கடற்படை அங்கு வந்து சேர்ந்தது. ஆனல் தீப்ஸ் மாசிடோனியா விவகாரத்தில் தொடர்ந்து தலையிட்டு அத்தீனியர்களின் செல்வாக்கை அழித்துவிடத் திட்ட மிட்டது.

பெலோப்பிடாஸ் மீண்டும் வடக்கே சென்று, தீப்ஸ் நாட்டுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளுமாறு டாலமியைக் கட்டாயப் படுத் தினன், ஒப்பந்தத்தை அது மீருதிருக்கச் சிலரைப் பணயம் வைக்கு மாறு கேட்டான். அவ்வாறு வந்த மாஸிடோனிய பிரபுக்களில், மிகவும் இளையவனன ஃபிலிப்பும் ஒருவனவான். பிற்காலத்தில்

மாஸிடோனியாவை உருவாக்கப்போகும் அவன், இப்பொழுது போயிஷியாவிலுள்ள போர் வீரர்கள் பள்ளியில், எப்பாமினுண்டஸின் நேர் பார்வையில் படைப்பயிற்சி பெற்று வந்தான்.

**பேரேயின் சர்வாதிகாரி பெலோப்பிடாஸைச் சிறைப்படுத்தல்; பெலோப்பிடாஸை மீட்கப் படையெடுத்தல்; தோற்றல்; இரண்டாம் படையெடுப்பு, கி.மு. 367; வாகை சூடல்.**

மாஸிடோனியர்களைத் தீபன் ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வந்த பிறகு, பெலொப்பிடாஸ் தன் தாயகத்திற்குத் திரும்பி வரும் வழியில் பேரேயின் சர்வாதிகாரியைச் சந்தித்தான். அலெக்சாந்தர் ஏதென்ஸின் நண்பன் என்பதை அவன் அறியான். அவர்களுடைய கூட்டுச் சேர்க்கை, தீபன் ஆதிக்கம் பெருகுவதைத் தடுப்பதற்காகவே ஏற்பட்டதென்பதையும் அறியான். ஏதென்ஸின் ஆதரவில் பெலோப்பிடாஸை அங்கிருந்து வெளியேருமல் ஓர் பணயப் பொருளாக நிறுத்தி வைத்துக் கொண்டான். அவனை விடுதலை செய்ய போயிஷியா படை எடுத்தது. 1000 போர் வீரர்கள் ஏதென்ஸிலிருந்து கடல் மூலமாக தெஸ்ஸாலிக்கு வந்தார்கள். தீபன் படைத் தலைவர்கள் திறமையற்றவர்களாக இருந்ததால் திரும்பிப் போக நேர்ந்தது. எப்பாமினுண்டஸ் ஒரு சாதாரண போர் வீரனைப்போல் அப்படையில் பணியாற்றி வந்தான். அவன் அந்த படையில் இல்லாதிருந்தால் போயிஷியப் படை அழிந்தே போயிருக்கும். போர் வீரர்கள் ஒருமனதாக அவனைப் படைத் தலைவனுகத்தேர்ந்தெடுத்தார்கள். அவன் அப்படைக்கு ஏற்பட்ட அபாயத்திலிருந்து அதனைப் பாதுகாத்து, தீப்ஸ் நகருக்குக் கொண்டு வந்தான். இந்நிகழ்ச்சி காரணமாக எப்பாமினுண்டஸ் மீண்டும் போயிட்டார்ச்சாகத் தேர்ந்தெடுக்கப் பட்டான். அவன் ஒரு பெரும் படையுடன் தன் நண்பன் பெலோப்பிடாஸை மீட்க வந்தான். சர்வாதிகாரியை மிரட்டி உருட்ட, பெலோப்பிடாஸ் விடுவிக்கப்பட்டான். இரு நாடுகளுக்குமிடையே ஒரு மாதத்திற்குத் தற்காலிக உடன்படிக்கை ஏற்பட்டது. அதே சமயத்தில் எப்பாமினுண்டஸ் சர்சலாவை பேரேயின் ஆட்சியிலிருந்து விடுவித்து விட்டான். சர்வாதிகாரியை வீழ்த்தவும், அவன் அதிகாரம் அவனுடைய நகரத்தில் மட்டும் செல்லும்படியான நிலைக்குக் கொண்டு வரவும், அவன் விரும்பவில்லை. தெஸ்ஸாலியின் மற்ற பாகங்கள் பயந்து வாழ அவனுடைய ஆட்சி தேவையாக இருந்தது. தெஸ்ஸாலியர்கள் தீபன் பாதுகாப்பை விரும்பவில்லையென்பதையும் அவன் அறிவான். பிதியோட்டிஸ் (Phthotis), மேக்னிஸியா நாடுகளிலும், பாகேசியான் குடாக்கடல் (Pagasean) கரைகளிலுள்ள நாடுகளிலும், ஸ்க்கோட்டுஸா போன்ற பக்கத்துப் பட்டினங்களிலும், அலெக்சாந்தரின் ஆதிக்கம் பரவியது.

அவனுடைய கொடுங்கோன்மையும் மிருகத்தனமான செயல்களும் விவரிக்க முடியாதவைகளாக இருந்தன. ஆனால் அவன் செய்ததாகச் சொல்லும் கொடுமையைப் பற்றிய கதைகள் நம்பக் கூடியவைகளல்ல. அவன் மனிதர்களை உயிரோடு புதைத்ததாகவும், சிலரைக் காட்டு மிருகங்களின் தோல்களில் சுற்றி, வேட்டை நாய்களால் கிழித்தெறியச் செய்தான் என்றும் கூறுவர். நண்பர்களாயிருந்த இரு நகர மக்களை படுகொலைக்குள்ளாக்கியதை நாம் படிக்கலாம். மற்றவர்கள் ஏதோ வொருதெய்வத்தை வழிபடாது இவன் தன்சிற்றப்பனைக் கொல்வதற்கு உபயோகித்த வாளை வணங்கியதாகவும் படித்தறிகிறோம். அந்த வாளை அவன் "திரு. அதிர்ஷ்டம்" ("Sri Luck") என்று அழைப்பான் என்று அவனைப் பற்றிய கதையொன்று கூறுகிறது. இது அவனிடம் காணப்பட்ட பைத்தியகாரத்தனத்தையும், அதனால் அவன் செய்யும் கொடுமையையும் விளக்கும். யூரிபிடிஸ் எழுதிய 'ட்ரோட்ஸ்' என்ற நாடகத்தை அவன் ஒரு சமயம் பார்த்தான். அந்த நாடகம் சொல்லொணாத் துன்பம் நிறைந்தது. அலெக்சாந்தர் அந் நாடகத்தைக் காணும்பொழுது ஒரு சொட்டுக் கண்ணீரும் சிந்தவில்லை. இதற்காக வருந்திய அரசன், நடிகனிடம் மன்னிப்புக்கோரி எழுதிய கடிதத்தில் தான் கண்கலங்காததற்கு, தான் உணர்ச்சியற்றிருந்ததே காரணமன்றி அவன் நடிப்பின் குறையினாலில்லை என்று குறிப்பிடு கிறார். மேலும், இரக்கமின்றிப் பலரைக் கொன்றதற்கு வெட்கிக் கண்ணீர் வடிக்கவேண்டுமேயன்றி 'ஹிக்கோபா' என்ற நாடகப் பாத்தி ரத்தின் இன்னல்களுக்காக 'வருந்தவேண்டியதில்லையெனக் குறித் துள்ளார்.

ஆம்பிபோலிசை திரும்ப அடைந்தே தீர வேண்டும் என்பது ஏதென்ஸின் ஆவல். அதைப் பெறுவதற்காக ஒரு கடற்படை எப்பாகிராட்டிஸ் தலைமையில் காத்துக் கொண்டிருந்தது. வெற்றி யடைவது மாசிடோனியாவின் நல்லெண்ணத்தின்மீது சார்ந் திருந்தது; ஆனால் டாலமி, தீப்ஸ் நகருடன் செய்து கொண்ட ஒப்பந் தத்தின் விளைவாக அதன் நம்பிக்கை குறைந்துவிட்டது. ஏதென்ஸ் மாசிடோனியாவின் ஆதரவை மட்டும் இழக்கவில்லை கால்சியா நகரங்களின் ஆதரவையும் இழந்தது. ஏனெனில் அவை இப்போது ஆம்பிபோலிஸ் நகரத்துடன் ஒப்பந்தம் செய்து கொண்டு விட்டன.

**கி.மு. 366 (367) : சிறிய ஆசியாவிற்கு டிமோத்தியுஸ் அனுப்பப் படல், கி.மு. 366. அவன் சாமோஸைக் கைப்பற்றுதல் கி.மு. 365.**

இதற்கிடையில் ஏதென்ஸ் கிழக்கு எஜியானில் நடவடிக்கை எடுத்துக்கொள்ள ஆரம்பித்தது. பிரிஜியாவின் சாட்டாரப் அரியோ பார்ன்ஸ் எழுப்பிய கலகம், ஏதென்ஸ் நகருக்கு இந்தச் சந்தர்ப்பத்தை யளித்தது. பேரரசனோடு மோதிக்கொள்ளாமல் ஏதென்ஸ் பிரிஜிய

நாட்டு சாட்டராப்புக்கு உதவி புரிய வேண்டும். ஆம்பிபோலிஸ் மீது ஏதென்ஸ் கொண்டாடும் உரிமையை, பேரரசன் ஏற்றுக்கொள்ள வேண்டியிருந்ததால் ஏதென்ஸ் அவனை நேரடியாகப் பகைத்துக் கொள்ள விரும்பவில்லை. ஆகையால் ஏதென்ஸ் முப்பது சிறிய கப்பல்களில் 8000 போர் வீரர்களைத் திமோத்தியுஸ் தலைமையில் சாட்டராப்பின் உதவிக்காக அனுப்பியது. வடக்கில் எப்பிகிராட்டிஸ் சாதிக்க முடியாத காரியங்களைக் கிழக்கில் திமோத்தியுஸ் சாதித்து விட்டான். அரசனுடைய ஒப்பந்தத்திற்கு எதிராக அவன் சாமோஸை முற்றுகையிட்டான். சாமோஸில் அப்போது பாரசீக ஆதிக்கம் இருந்தது. பத்து மாதங்களில் சாமோஸ் கைப்பற்றப்பட்டது. லீதியா, காரியா (Lydia and Caria) என்ற நாடுகளின் சாட்டராப்புகளை எதிர்த்து நின்ற ஆரியோபார்சானேட்ஸுக்கு ஏதென்ஸ் படையுதவி அனுப்பிற்று. அதற்குப் பரிசாக, ஏதென்ஸுக்கு தெரேசியன் செர்சோனேன் என்ற நாட்டிலிருந்த செஸ்ட்டாஸ், கிரித்தோட்டே (Sestos and Crithote) என்ற இரு நகரங்களை அவன் கொடுத்தான்.

ஏதென்ஸ் செஸ்ட்டாஸைப் பெறுதல்

ஏதென்ஸுக்குக் கிடைத்த நாடுகளில் ஸெஸ்ட்டாஸ் (Sestos) மிகவும் சிறப்பானது. ஸெஸ்ட்டாஸ், யூசைன் கடற்கரைகளிலிருந்து ஏதென்ஸுக்கு வரும் தானியக் கப்பல்களின்மீது ஆதிக்கம் செலுத்த வழி வகுத்தது. மேலும் அந்தத் தீபகற்பத்தில் காலூன்ற அதற்கு இடம் கிடைத்தது. அதைத் தனக்குச் சொந்தமாக வைத்துக்கொள்ள விரும்பியது. கார்டியாவிற்கு வடக்கிலுள்ள பூசந்தி வரையில் ஏதென்ஸ் தன் ஆதிக்கத்தை நிலை நாட்டியது. 'பௌண்டாரியஸ் சீயசு'க்கு அங்கே ஓர் ஆலயமிருந்தது. தென்கோடி மூலையிலிருந்த எலாயஸ் நகரை திமோத்தியுஸ் கைப்பற்றியது. இவ்விதமாக ஏதென்ஸ் தன் பேரரசைப் புதுப்பிக்க ஆரம்பித்துவிட்டது. இந்தத் திட்டத்தை சாமோஸில் வெளிப்படையாக விட்டு விட்டது. இத்தீவைத் தனக்குச் சொந்தமான இடமாகக் கருதாமல், ஏதென்ஸின் எல்லைப் புறமாகக் கருதியது. ஏதென்ஸ் நகர வாசிகள் இங்கு வந்து குடியேறினார்கள். இந்தக் கொள்கையை ஏதென்ஸ் முதல் கூட்டமைப்பில் பின்பற்றுவதில்லை என வாக்குக் கொடுத்தது. ஆனால் வாக்கைக் காற்றில் பறக்க விட்டுவிட்டது. ஒப்பந்தப்படி ஏதென்ஸ் இரண்டாவது கூட்டமைப்பின் அரசியலமைப்பை மீறவில்லை. ஆனால் உணர்ச்சிக் கொந்தளிப்பால் ஒப்பந்தம் மீறப்பட்டு விட்டது. ஏதென்ஸ் தன்னுடையப் பேரரசை மீண்டும் நிலைநாட்ட விருப்பம் கொண்டிருப்பதாகக் கருதினார்கள். இரண்டாவது கூட்டமைப்பேற்படும்போது மறைத்துவைத்திருந்த நோக்கத்தை ஏதென்ஸ் இப்போது வெளிப்படுத்திவிட்டது.

டாலமியின் கொலையும் பெரிடிகாசின் ஆதிக்கமும், கி.மு. 365; கால்டிக் பிரதேசத்தில் திமோத்தியுஸின் வெற்றிகள் (கி.மு. 364-2).

திமோத்தியுஸின் வெற்றி அத்தீனியர்களுக்கு மகிழ்ச்சியளித்தது. எப்பிகிராட்டிஸுக்குப் பதிலாக அவனை மாசிடோனிய கடற்கரையிலுள்ள அத்தீனிய கடற்படைக்கு தலைவனாக்கினர்கள். திமோத்தியுஸின் புகழ் வளர வளர, எப்பிகிராட்டிஸின் செல்வாக்குக் குறைந்தது. எப்பிகிராட்டிஸ் பயனுள்ள காரியம் ஒன்றும் செய்யமுடியாமல், அவனை டாலமியின் எதிர்ப்பு தடுத்தது. அதே நேரத்தில் திமோத்தியுஸுக்கு பிரிஜியாசாட்டராப்பின் உதவி இருந்தது. இச்சமயத்தில் டாலமியை, பெரிடிகாஸ் கொன்று, தன்னுடைய சகோதரனின் பழியைத் தீர்த்துக்கொண்டான். பின் அவன் அரசுகட்டில் ஏறினன். அதனல் அந்நாட்டு அரசியல் அமைப்பில் மாறுதல் ஏற்பட்டது. பெரிடிகாஸ் மன்னன் தீப்ஸ் நகருடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை ரத்துசெய்துவிட்டு ஏதென்ஸின் ஆதரவை நாடினன். அவனுக்கிருந்த மாசிடோனிய எதிர்ப்பு மறைந்து, அந்நாட்டு மன்னனின் ஆதரவு கிடைத்தது. அவன் இப்போது எதிர்மேயிக் விரிகுடாவின் கடற்கரையிலுள்ள நகரங்களைக் கைப்பற்றினன். மெத்தோன், பைட்ஞ என்ற இரு நாடுகளும் கூட்டமைப்பில் சேர்க்கப்பட்டன. போட்டிடேயில் அத்தீனியக் குடியேற்றம் ஏற்பட்டது. ஒலிந்தஸின் பலத்தை ஒடுக்க வேண்டுமென்பதே திமோத்தியுஸின் நோக்கம். ஒலிந்தஸ் கால்சிடிக் நகரங்களுக்குத் தலைமையாக இருந்து கொண்டு ஆம்பிபோலிஸுக்கு ஆதரவளித்து வந்தது. இப்போது ஏதென்ஸுக்கு ஆம்பி போலிஸ் நாட்டின்மீது உரிமை கொண்டாடுவதற்குப் பேரரசனின் ஆதரவும் கிடைத்தது. சாரிடேமஸ் (Charidemus) என்ற ஒரு படைத் தலைவனின் உதவியும் திமோத்தியுஸுக்குக் கிடைத்தது. அவன் ஏற்கெனவே எப்பிகிராட்டிஸின் கீழ் பணி புரிந்தவன். திமோத்தியுஸ் இருமுறை ஆம்பிபோலீஸைப் பிடிக்க முயன்று இரு முறையும் தோல்வியுற்ருன். பிராசிடாஸ் செய்து வைத்துவிட்டுச் சென்ற வேலை அழிவடையக் கூடாதென்பது விதியின் திட்டம் போலும்.

### போயிஷியன் கடற்படை, கி.மு. 364.

தீப்ஸ் தலையிட வேண்டிய நேரம் வந்துவிட்டது. திமோத்தியுஸ் தொடர்ந்து வெற்றி பெற விட்டுவிட்டால், ஏதென்ஸ் யூபோயே என்ற தீவைக் கைப்பற்றி விடும். புவியியல் முறைப்படி யூபோயே போயிஷியாவிற்கு மிகவும் அனுகூலமான தீவாயிருந்தது. தன் அண்டை நாட்டின் ஆதிக்கப் பெருக்கைத் தடுக்க, எப்பாமினண்டஸின் அறிவுரைப்படி, தீப்ஸ், கப்பல் கட்டவும், கடலாதிக்க நாடாக விளங்கவும் தீர்மானித்துவிட்டது. இது ஓர் அதிர்ச்சி தரும் செய்தியாகும். ஏதென்ஸின் நோக்கத்தைப் பாழாக்க வழி வகைகளைத் தேட வேண்டும். எப்பாமினண்டஸ் ஒரு வினடியில் அறிவுரை கொடுத்துவிட்டான். ஆனல் அதை நிறைவேற்றப் பொருளுதவி பல வழி

வகைகளிற் தேடியாக வேண்டும். இந்தக் கொள்கை தீப்ஸுக்குத் தேவையா என்பதைப்பற்றி ஆராய்ந்திருக்க கூடும். போயிஷியா வல்லரசு நாடாகவிருந்து வந்தது. அது தன்னுடைய முழுக் கவனத்தையும் தன் ஆதிக்கத்தில் செலுத்தி இருக்க வேண்டும். கடற் படைக்குப் பணம் தேவை. வணிகத்தில் ஈடுபட்டுள்ள நாடுகள் மட்டுமே கடற்படையை வைத்துப் பாதுகாக்கக் கூடும். போயிஷியாவிலுள்ள நகரங்கள் வியாபார நகரங்களல்ல. இரு முரண்பட்ட நாடுகளுக்கிடையே இருந்த இயல்பான பகையின் காரணமாக, முன்பின் யோசியாமல் போயிஷியா இந்தக் கொள்கைக்கு இடமளித்தது. அது எடுத்துக் கொண்ட முயற்சியில் வெற்றியும் கிடைத்தது. நூறு மூன்றடுக்குத் துடுப்புகளையுடைய கப்பல்கள் கட்டப்பட்டன. அவற்றை போயிட்டார்ச்சான எப்பாமினுண்டஸ் தலைமையில் பொரோபோன்டிசுக்கு அனுப்பியது.

**அத்தீனிய நேச நாடுகளின் கலகங்கள், கி.மு. 364; சியோசின் கலகங்கள் கி.மு. 364, 363.**

தீப்ஸ் நகர போர்க் கப்பல்களின் நடமாட்டம் ஏதென்ஸுக்கு ஓர் பேரடியைக் கொடுத்தது. இரு நாடுகளும் கடலில் போர் மேற்கொள்ளவில்லை. போரிடாமலே தீப்ஸ் வெற்றியடைந்தது. அத்தீனியக் கூட்டமைப்பில் சேர்ந்துள்ள நாடுகள், அதிலிருந்து வெளியேறத் துடிதுடித்துக் கொண்டிருந்தார்கள். ஏதென்ஸ் சாமோஸில் செய்த குடியேற்ற ஏற்பாடு அதனுடைய நேசவுறவு நாடுகளுக்கு அதிருப்தியையளித்தது. அவை அடிமைத் தளையிலிருந்து விடுபட தீப்ஸ் நகரின் ஆதரவைத் தேடின. பைஸான்ஷியம் வெளிப்படையாகவே கலகம்செய்தது. ரோட்சும், சியாஸும் எப்பாமினுண்டஸுடன் சமரசம் செய்துகொண்டன. அட்டிகாவுக்கு அண்மையிலுள்ள சியோஸ் ஏதென்ஸின் அதிகாரத்தை எதிர்த்தது. தீபர்களுடைய கடற்படை நாடு திரும்பியதும், சாபிரியாஸ் சியோசைத் திரும்ப வரவழைத்து, அதனுடன் ஒரு நேச உறவு உடன்படிக்கை செய்து கொண்டது. இப்புதிய ஒப்பந்தத்தின்படி, அத்தீவு அத்தீனியன் ஆதிக்கத்திலிருந்து விடுபெறுமுன், அதனுடைய இரண்டாவது கலகம் ஜீலிஸ் என்ற இடத்தில் முறியடிக்கப்பட்டது. எப்பாமினுண்டஸின் படையெடுப்பு ஏதென்ஸின் பகை நாடுகளுக்கு ஆதரவளித்தது. கார்டியாவில் ஏதென்ஸுக்கு எதிர்ப்பு ஏற்பட்டது. தெரேசிய மன்னன் கோட்டில் ஏதென்ஸை எதிர்த்தான் அவனுக்கு அவன் மருமகன் எப்பிகிராட்டிஸ் உதவியளித்தான். படைத் தலைமைப் பதவியிலிருந்து எப்பிகிராட்டிஸ் விலக்கப்பட்டு, திமோத்தியுஸ் நியமிக்கப்பட்டதால் அவன் ஏதென்ஸுக்கு திரும்பி வரத் துணியவில்லை. இப்பொழுது அவன் ஏதென்ஸின் பகைவர்களுக்கு உதவியாக இருந்தான்.

**தெஸ்ஸாலியின்மீது பெலோப்பிடாஸின் மூன்றும் படையெடுப்பு, கி.மு. 364; சூரியகிரகணம், ஜூலை 13.**

தீபன் கடற்படை ஏதென்ஸை எதிர்க்க பொரோபோன்டிஸுக்குப் போனபோது, ஒரு தீபன் படை ஏதென்ஸின் நேச நாடாகிய பேரேயின் மன்னன் அலெக்ஸாந்தர்மீதுபடையெடுத்துச் சென்றது. அலெக்ஸாந்தரிடம் வலுவுள்ள ஒரு கூலிப்படை இருந்தது. அவன் தெஸ்ஸாலியர்களுக்கு உதவிபுரிய ஒரு பெரும் படையுடன் வந்தான். அவன் புறப்படுவதற்கு முன்னே சூரியகிரகணம் ஏற்பட்டது. தீர்க்க தரிசிகள் அது ஒரு கெட்ட சகுனமென்றும், அது தீமை விளைவிக்குமென்றும் கூறினர்.

**சினேஸ்செப்பாலோ போர், பெலோப்பிடாஸின் மரணம். தெஸ்ஸாலி போயிஷியாவைச் சார்ந்து வாழ்தல், கி. மு. 363.**

பார்சாலஸில் தெஸ்ஸாலிய நேச நாடுகளின் படைகள் அவனுடன் சேர்ந்து பேரேயை எதிர்த்துச் சென்றன. அலெக்ஸாந்தர் அவனைச் சந்திக்க ஒரு பெரும் படையுடன் வந்தான். பார்சாலஸிலிருந்து பேரேயிக்குச் செல்லும் பாதையிலுள்ள 'டாக்ஸ் ஹெட்ஸ்' (Dog's Heads) என்ற குன்றின் மீதிருந்து தீபர்களின் படையைத் தடுத்து நிறுத்துவதே அவனுடைய நோக்கமாயிருந்தது. இரு படைகளும் அதே சமயத்தில், அவ்விடம் வந்தன. மலை உச்சியை அடைய ஒன்றுக்கொன்று முந்திக் கொண்டிருந்தன. தீபன் குதிரைப் படை அலெக்ஸாந்தர் குதிரைப் படையை முறியடித்தது. அதை துரத்திச் சென்றதால், தீபானியர் அருமையான நேரத்தைக் கைந்நழுவ விட்டனர். இதற்கிடையில் அலெக்சாந்தருடைய காலாட் படைமலையுச்சியை அடைந்துவிட்டது. அலெக்சாந்தரை அவ்விடத்திலிருந்து அப்புறப்படுத்துவதே தீபன்களின் நோக்கமாக இருந்தது. அடிக்கடி தன் படை பின் வாங்கும்படி செய்வதை பெலோப்பிடாஸ் அறிந்தான். காலாட்படையையும் குதிரைப் படையையும் கொண்டு ஒரே காலத்தில் தாக்கி, மலையுச்சியை வென்று விட்டான். இப்பொழுது அலெக்ஸாந்தர் பின் வாங்கினுன். தீபர்களுக்கு வெற்றி கிடைத்துக் கொண்டிருந்த போது, பெலோப்பிடாஸ் ஒரு பெருந்தவறு செய்து விட்டான். படைத்தலைவன் அலெக்சாந்தரைத் தன் கண்களால் கண்டு விட்டான். அவனுடைய சிறையில் பட்ட அவதி அவன் மனக் கண்முன் தோன்றியது. படைத்தலைவன் தன் கடமையை மறந்தான். சுயநலம் கொண்டான். தனக்குத் தீங்கிழைத்த பகைவனைத் தன் கைவாளால் வெட்டப் பேராவல் கொண்டான். பெலோப்பிடாஸ் அலெக்ஸாந்தரைக் குறிவைத்துப் பாய்ந்தான். அலெக்சாந்தர் தன்னுடைய மெய்காவலர்களின் மத்தியில் பின் வாங்கிவிட்டான். போர் வீரர்கள் அவனை நாற்புறமும் சூழ்ந்து கொன்றனர். கைக்கு

வந்த வெற்றியை ஸைரஸ் வீசி எறிந்ததைப் போல் பொலோப்பிடா ஸூம் வெற்றியை விட்டு விட்டான். பெலோப்பிடாஸின் மரணம் அவனுடைய போர் வீரர்களுக்கு அழிவைக் கொண்டு வரவில்லை. அவர்கள் பகைவனைப் பெரு நஷ்டத்தோடு புறமுதுகு காட்டியோடும் படி செய்தார்கள். அவன் மரணம் அவன் நாட்டிற்கு ஒரு பேரிடியா யிருந்தது. ஏனென்றால் தீப்ஸ் நகரை மீட்டவன் அவன். அவனே அந்நாட்டைத் தாங்கிய பலமான தூண். தெஸ்ஸாலிக்கும் அது ஒரு பேரிடியே ஆகும். ஏனெனில் அவன் தெஸ்ஸாலியின் காவலாளன். அடுத்தாண்டு பேரேக்கு எதிராக ஒரு படை அனுப்பப்பட்டது. அவர்கள் பழிக்குபழி வாங்கினர். அலெக்சாந்தர் தன்னுடைய பேரே நகரத்தைத் தவிர தெஸ்ஸாலியில் தனக்குள்ள உரிமைகள் யாவற்றையும் விட்டு விட்டான். தீப்ஸ் நகரின் தலைமையை ஏற்றுக் கொண்டான்.

ஓர்க்கோமேனஸின் அழிவு, கி.மு. 364.

மினியன் ஓர்க்கோமேனஸ் (Minyan Orchomenus) என்ற தன்னுடைய பலம் பொருந்திய பகை நாட்டை, தீப்ஸ் அழித்தது கிரேக்க நாடுகளுக்கு அதிர்ச்சியாயிருந்தது. தீபன் நாட்டு அகதிகள் அரசியலமைப்பை மாற்றியமைக்கத் தங்களோடு ஒரு சதித்திட்டத்தில் சேரும்படி ஓர்க்கோமேனஸ் குதிரை வீரர்களைத் தூண்டினார்கள். சதித் திட்டம் நிறைவேறுவதற்காகக் குறிப்பிட்ட தினத்திற்கு முந்திய தினம், திட்டத்தில் முதன்மையான பங்கெடுத்துக் கொண்டவர்கள் மனம் மாறினர். அவர்கள் போயிட்டார்ச் என்ற தீபன் அரசாங்கத் தலைவர்களுக்கு அதை வெளியிட்டு விட்டார்கள் குதிரை வீரர்கள் கைது செய்யப்பட்டுக் கொல்லப்பட்டார்கள். தீபன் சபை ஓர்க்கோ மேனஸ் நகரம் அழிக்கப்படுவதற்கும் அந் நகரவாசிகள் அடிமைகளாக் கப்படுவதற்கும் ஒரு சட்டம் கொண்டு வந்தது. தங்களுடைய பகை யைத் தீர்த்துக் கொள்ள இது ஏற்றவாய்ப்பு என்று தீபன்கள் மகிழ்ச்சியடைந்தார்கள். அதன்படியே அந்நகரம் அவர்களால் அழிக்கப்பட்டது; எதிர்த்தவர்களைக் கொன்றார்கள். மற்றவர்களை அடிமைகளாக்கினார்கள். மற்றக் கிரேக்க நாடுகள் மானக்கேடான அச் செயலுக்காக வருந்தினார்கள். எப்பாமினண்டஸ் அப்போது தீப்ஸ் நகரில் இருந்திருந்தால் இந் நிகழ்ச்சி நடைபெற்றிருக்காது.

## 4. மேன்டினே போர்க்களம்

தீப்ஸ் இப்போது தனக்குள்ள ஒரே பகை நாடகிய ஏதென்ஸுடன் போராடிக் கொண்டிருந்தபடியால், அது பெலப்போனீஷியா விவ காரங்களில் தலையிடவில்லை. ஆனால் அங்கே ஏற்பட்டுள்ள சூழ்நிலை தீப்ஸ் தலையிடும்படியான கட்டாயத்தை ஏற்படுத்தியது. எலிஸ்,

ஆர்க்காடியா என்ற இரு நகரங்களின் உறவில் ஏற்பட்ட மாறுதல் இந்நெருக்கடிக்குக் காரணமாக இருந்தது.

**திரிப்பிலியன் பிரச்சினை**

எலிஸ், திரிப்பிலியாமீது கொண்டாடிய உரிமைகளே பிரச்சினைக்கு முதன்மையான காரணமாக இருந்தது. எலிஸின் உரிமையை பாரசீகம் அங்கீகரித்திருந்தது. ஆர்க்காடியா அதை ஒப்புக் கொள்ள வில்லை. தீப்ஸ் இச்சிக்கலில் தலையிடவில்லை. ஆர்க்காடிய ஐக்கிய நாடு ஸ்பார்ட்டாவிற்கு ஏற்படுத்திய இக்கட்டான நிலைபோல்,எலிஸுக் கும் ஏற்பட்டது. எலிஸுக்கு எதிராக பிசாட்டன், திரிபிலியன் என்ற இரு நாடுகளையும் சுதந்திரநாடாக வைத்திருப்பது. லாசிடமோனியக் கொள்கையாக இருந்தது. ஸ்பார்ட்டா எலிஸின் நேச உறவைப் பெற இந்தக் கொள்கையை விட்டு விடவும், எலிஸ் நாட்டின் உரிமையை அங்கீகரிக்கவும் தயாராக இருந்தது. இரு நாடுகளும் ஒன்று சேர்ந்து மெஸ்ஸேனியாவையும் திரிப்பிலியையும் அடைய திட்டமிட்டன. இதன் காரணமாக ஸ்பார்ட்டாவிற்கு அனுகூலம் ஏற்பட்டது. ஆர்க்காடியாவுக்கு வடக்கிலும் மேற்கிலும் பகைவர்கள் எழும்பினர்கள். தீப்ஸ் இந்த விவகாரத்தில் தலையிடச் சமீபத்தில் சைரகூசின் டயோனிஸஸ் அனுப்பிய படை உதவியினல் ஸ்பார்ட்டா செல்லாசியாவைக் கைப்பற்றி மகிழ்ச்சியடைந்து வந்தது.

**எலிஸுக்கும் ஆர்க்காடியாவிற்கும் போர், கி.மு. 365. எலிஸ்மீது ஆர்க்காடியாவின் முதல் படையெடுப்பு, கி.மு. 365. இரண்டாவது ஆர்க்காடியன் படையெடுப்பு கி. மு. 364.**

திரிப்பிலியாவில் மட்டுமன்றி, எலிஸுக்கும் ஆர்க்காடியாவுக்கும் இடையிலுள்ள மலை நாட்டு எல்லையிலுள்ள சில நகரங்களின் மீதும் எலிஸ் உரிமை கொண்டாடியது. ஒலிம்பியாவுக்கு வட கிழக்கிலுள்ள போலா பீடபூமியிலிருந்த லாஸியோன் நகரம் (Lasion) அவற்றில் ஒன்ருகும். எலிஸ் அந்நகரை ஆக்கிரமித்துக் கொண்டது. உடனே ஆர்க்காடிய ஐக்கிய நாட்டுப் படை அதை விரட்டியடித்தது. பீடபூமியிலுள்ள ஆர்க்காடிய நகரங்களை விடச் சமவெளியிலுள்ள எலிஸ் நகரங்கள் தாக்குதல்களுக்கு எளிதாக இருந்தன. ஆகவே ஆர்க்காடிய ஐக்கியநாடு எலிஸ் மீது படை எடுத்தது. அந்நாட்டின் கேந்திர ஸ்தானத்தை நெருங்கி விட்டது. அடுத்த ஆண்டு வரப் போகின்ற ஒலிம்பிய பண்டிகையில், வழக்கமாக எலிஸ் நகருக் கிருந்த தலைமை தாங்கும் உரிமையை, அதற்கு அளித்தல் கூடாதென்று ஆர்க்காடியர்கள் தீர்மானித்தார்கள். அவர்கள் ஒலிம்பியாவின் மீது படை யெடுத்தார்கள். ஆல்ட்டிசை நோக்கிக் கொண்டிருக்கிற கொரோனஸ் குன்றை ஆக்ரமித்த பிறகு அதைக் கோட்டைகளாலும் அரண்களாலும் வலுவாக்கினர்கள்.

குடியாட்சிக் கட்சினருடன் சேர்ந்து இவர்கள் மதிற்சுவர்களின் பாது காப்பற்ற எலிஸ் நகரத்தை தாக்கினர்கள். அந் நகரில் புரட்சியை விளைவிக்க அவர்கள் எடுத்துக்கொண்ட முயற்சி தோல்வியுற்றது. எலிஸ்படை ஆர்க்காடியர்களைப் பின்வாங்கும்படி செய்தது. அடுத்த ஆண்டு இரண்டாம் முறையாக எலிஸ்மீது படையெடுப்பு நடந்தது. எலிஸ் நகரவாசிகள், ஸ்பார்டனரின் கவனத்தை எலிஸிலிருந்து வேறு திசைக்குத் திருப்ப வேண்டும். அதற்காக 200 போர் வீரர் களைக் கொண்ட ஸ்ப்பார்ட்டனர் படை ஆர்ச்சிடாமஸ் தலையில் கொரோம்னேன் என்ற கோட்டையை ஆக்கரமித்துக் கொண்டது. அக்கோட்டை மெகாலோபோலிஸிலிருந்து மெஸ்ஸேனியாவுக்குச் செல்லும் பாதையிலுள்ளது. இதன் விளைவாக ஆர்க்காடியர்கள் எலிஸை விட்டு வெளியேற நேர்ந்தது. ஆர்கைவ்கள் மெஸ்ஸேனி யர்கள் முதலானேர் ஆர்க்காடியர்களுடன் சேர்ந்து கொரோம்னேன் கோட்டையை முற்றுகையிட்டார்கள். அங்கிருந்த ஸ்பார்ட்டன் காவற் படை ஆர்க்காடியன் தலை நகரத்துக்கும் மெஸ்ஸேனியன் தலை நகரத்துக்கு மிடையேயிருந்த தொடர்பைத் துண்டித்து விட்டது. இப்போது அவ்விரு நகரங்களுக்கும் பீதி ஏற்பட்டது. மேலும், ஆர்க்காடியாவுக்குச் சொந்தமான வட லாக்கோனியாவைத் தாக்கு வதன் மூலம், அவர்களுடைய படையின் கவனத்தை மேலும் கலைத்துவிட முயன்ருன். இம் முயற்சி தோல்வியுற்ற போது கொரோமோன் முற்றுகையைக் கலைக்க முயன்ருன் ஆனல் அவனைப் பின்வாங்கும்படி செய்துவிட்டார்கள். அவன் இரண்டா முறை தகுந்த முறையில் முயற்சியெடுத்திருப்பானுகில் அது வெற்றியளித்திருக்கும். அவன் அதைச் செய்யவில்லை. காவற் படை முழுவதும் பகைவர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டது. பத்தாண்டுகளுக்கு முன் இச்சம்பவம் நேர்ந்திருக்குமானல், கிரேக்க நாடுகள் அதிர்ச்சியுற்றிருக்கும். இப்போது ஸ்பார்ட்டன் படையை அவர்களுடைய எதிரிகள் வெல்வது வழக்கமாகிவிட்டது.

ஒலிம்பிய பந்தயங்கள் கி.மு. 364, ஜூலை; பிஸான்டர்கள் அவ் விழாவைக் கொண்டாடியது.

ஆர்க்காடியர்களுக்கு தங்கள் திட்டங்களைத் தடையின்றி நிறை வேற்றிக் கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டது. ஒலிம்பியப் பந்தய விளையாட்டுகள் நடைபெறும் நேரம் நெருங்கி விட்டது. ஒலிம்பிய ஆலயம் முன்னுளில் பிஸா நகரவாசிகளுக்குச் சொந்தமானது. எலிஸ் திருட்டுத் தினமாக அவர்களுடைய உரிமைகளைப் பறித்து, அனுபவித்து வந்தது. அப்போது அவ் வுரிமைகள் அவர்கள் கையிலிருந்து பிடுங்கப்பட்டு பிஸா நகரவாசிகளுக்கு அளிக்கப் பட்டது. ஆகவே விழாவில் நடைபெறும் நிகழ்ச்சி நிரல்களுக் கெல்லாம் தலைமை வகிக்கும் பதவி பிஸா நகரவாசிகளுக்கு

அளிக்கப்பட்டது. பண்டிகையில் கலவரமேற்பட்டு, குருதி சிந்துமென எதிர்ப்பார்த்தார்கள். கொரோனஸ் குன்றை ஓராண்டு காலம் வரையில் ஆர்க்காடியன் படையின் பாதுகாப்பில் விட்டு வைத்திருந்தார்கள். பண்டிகை தடையின்றி நடை பெற ஆர்க்காடிய ஐக்கிய நாடுகளின் படையோடு, ஆர்கோஸிலிருந்து வந்த 2000 ஈட்டி வீரர்களும், ஏதென்ஸிலிருந்து வந்த 400 குதிரை வீரர்களும் அங்கே கூடியிருந்தார்கள். பண்டிகை கொண்டாடும் நேரம் வந்து விட்டது. விழா ஆரம்பமாயிற்று. குதிரைப் பந்தயம் வெற்றிகரமாக முடிந்தது. ஓட்டம், மல்யுத்தம், வேலெறிதல், சில்லு எறிதல், துள்ளிப் பாய்தல் போன்ற ஐவகைப் பந்தயங்கள் அடுத்து ஆரம் பித்தன. பந்தயங்களின் முதல் பிரிவாகவுள்ள ஓட்டப்பந்தயம் முடிந்து விட்டது. ஆல்ட்டிஸின் (Altis) மேற்கு எல்லையிலுள்ள கிளாடியஸ் நதி வரையில் எலிஸ் நாட்டுப் படை முன்னேறி வந்து விட்டதை அங்குக் கூடியிருந்தவர்கள் அறிந்து கொண்டார்கள். போர் வீரர்கள் எலிஸிப் படைக்கு எதிரிலுள்ள ஆற்றங்கரையில் அணிவகுத்து நின்றார்கள். ஆனால் பந்தயங்கள் மட்டும் தடை யின்றி நடந்து கொண்டிருந்தன. ஓட்டப்பந்தயத்தில் தோற்றுப் போகாதவர்கள் மல்யுத்தப் போட்டியில் கலந்து கொண்டார்கள். வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தவர்களுக்குப் போர் நடக்க விருக்கும் செய்தி தெரிந்துவிட்டது. அவர்கள் பந்தய விளையாட்டு களைப் பார்ப்பதற்குப் பதிலாகச் சண்டையைப் பார்க்க விளையாட்டு மைதானத்தை விட்டு விலகி ஆல்ட்டிஸிக்குச் சமீபத்தில் வந்து சேர்ந்தார்கள். மல்யுத்தப் போட்டி நடந்தது. மல்யுத்தம், விளையாட்டு மைதானத்திற்கும் பெரிய பலி மேடைக்குமிடையில் திறந்த வெளியிலிருந்த கோயிலின் உடைமைகள் வைக்கப்பட்டுள்ள வீட்டுக் கூரைகளின் கீழ் நடைபெற்றது. அச்சேயன் படையுதவியைக் கொண்ட எலியன்கள், தெய்வத்திற்கு ஒரு பலியிட்டுவிட்டு எதிர் பாராத வீரத்தோடு ஆற்றைக் கடந்து ஆர்க்காடியர்களையும் கைவ்களையும் புறமுதுகிட்டு ஓடச் செய்தனர். யுத்தம் ஆலயத்தின் தென் பக்கத்தில் சபைக் கூடத்திற்கும் சீயஸ் ஆலயத்திற்கு மிடையில் நடந்தது. இந்தக் கட்டடங் களின் தூண்கள் மற்றும் அதையடுத்த கட்டடங்களின் தூண்கள் முதலியன, தற்காப்பு இடங்களாக, போர் வீரர்களுக்குப் பயன்பட்டன. எலியர்களின் படைத் தலைவன் வீழ்த்தப்பட்டான். எலிஸ் படைகள் பின்வாங்கித் தன்னுடைய படை வீட்டிற்குச் சென்றன. ஆர்க்காடியர்கள், ஆல்ட்டிஸின் மேல் புறத்தில் வேடிக்கைப் பார்க்க வந்தவர்களின் கூடாரங்களைக்கொண்டு ஓர் தற்காப்பு அரணை எழுப்பினர்கள். மீண்டும் ஆர்க்காடியர்களைத் தாக்குவதில் பயனில்லை என்பதை யறிந்த எலிஸ் நாட்டுப் படை திரும்பிவிட்டது. பண்டிகை வெற்றிகரமாக நடைப்பெறுவதைத்

தடுத்துவிட்டதற்காக மனநிறைவு கொண்ட எலிஸ் நகரவாசிகள் தங்களுடைய பதிவேட்டில் இந்நிகழ்ச்சியைப் பதிவு செய்து வைத்தார்கள். பலரும் கூடும் ஒரு பொது விடத்தில் நடந்த இம் மானக் கேட்டிற்காகக் கிரேக்கர்கள் வருந்தினர்கள். கிரேக்க நாடுகள் எலிஸ் நாடுகளுக்காக அனுதாபப்பட்டன. கிரேக்க நாடுகள்எலிஸ் நாட்டினர்களுக்கு அளித்த தலைமைப்பதவி இயற்கையாக ஏற்பட்டதென்றும், ஆர்க்காடியர்கள் படை உதவிகொண்டு அதைப்பறித்து பைஸா நாட்டினருக்கு அளித்தது தவறென்றும் கூறினர்கள். மேலும் ஒலிம்பியன் ஆலய உடைமை கிரேக்கர்களின் பொதுச் சொத்து. அதைத் துர்வகையாக ஆர்க்காடியர்கள் கைப்பற்றி அதைத் தங்கள் ஐக்கிய நாடுகளின் படையை வலுப்படுத்த உபயோகிப்பது தவறென்றும் கருதினர்கள். அவர்கள் செய்த குற்றத்தைக் கோயில் சொத்தைக் கொள்ளையடித்த குற்றமாகக் கருதினர்கள். அக் குற்றத்திலிருந்து ஆர்க்காடியர்கள் தப்ப முடியாது. அக் குற்றம் ஆர்க்காடியக் கூட்டாட்சி முறைக்கு அழிவைக் கொண்டு வந்தது.

**ஆர்க்காடிய ஐக்கியத்தின் பிரிவுகள்**

ஆர்க்காடிய ஐக்கியம் ஏற்படக்காரணமாக இருந்த ஆர்க்காடிய நகரங்களின் ஆர்வம் இப்போது குறைந்துவிட்டது. அங்குள்ள நகரங்கள் தங்களிடையே இருந்த பழைய பொருமைக்கு மீண்டும் திரும்பியதால், அகில ஆர்க்காடிய கோட்பாட்டிற்கு அபாயம் நேர்ந்தது. ஆர்க்காடிய ஐக்கியம் ஏற்பட முதற் காரணமாயிருந்த மேன்டினே, தேஜே ஆகிய இரு நகரங்களும் மீண்டும் பகை நாடுகளாயின. மேன்டினே நாட்டிற்கு மெகாலோபோலிஸ் நகரின் மீது பொருமை இருந்து வந்தது. ஒலிம்பியாவிலேற்பட்ட சம்பவம் அதை ஆர்க்காடிய ஐக்கியத்தைவிட்டு பிரியும்படி செய்துவிட்டது. இப்போது மேன்டினே, ஆர்க்காடிய ஐக்கிய நாடுகளின் பகை நாடுகளாயின. எலிஸ், அச்சாயே என்ற நாடுகளுடன் ஸ்பார்ட்டா சேர்ந்துவிட்டது. தேஜே, ஸ்பார்ட்டாவிற்கு எதிராக எழுந்த இயக்கத்தில் சேர்ந்துகொண்டது. மேன்டினே நகரம் ஒரு சமயம் ஸ்பார்ட்டாவால் பாழடிக்கப்பட்டது. அதையும் மறந்து மேன்டினே ஸ்பார்ட்டாவுக்கு ஆதரவளித்தது. ஆர்க்காடியன் கூட்டாட்சி சபை, மேன்டினேயின் செய்கைக்கு எதிர்ப்பு தெரிவித்தது. அதனைத் தண்டிக்க முயன்றது. ஆனல் குடிமக்கள், போருக்காக ஒலிம்பியாவிலுள்ள கோயில் சொத்துக்களை மேலும் கொள்ளையடிக்க அனுமதிக்கவில்லை.

இந்தத் தீர்மானம் நிறைவேறியபோது அது தன்னுடைய பலவீனத்தை வெளிப்படையாகக்காட்டி விட்டது. நிலையான படைக்குச் சம்பளம் கொடுக்க நாட்டுக் கருவூலத்தில் பணமில்லை. இப்படையுதவியில்லாமல் முப்புறத்திலும் சூழ்ந்திருக்கிற பகைவனை

வெல்லுதல் இயலாது. இந்த படையுதவி தேவையில்லையென இதை விட்டுவிட்டால் தீப்ஸ் நகரத்தின் பாதுகாப்பை நம்பி வாழவேண்டியிருக்கும். தீப்ஸ் நகரின் ஆதரவைப்பெறுவதை நாட்டில் பல பாகங்களிலும் எதிர்த்தனர். செல்வந்தர்களாகிய ஆர்க்காடியர்கள் இச்சிக்கலைத் தீர்க்க முன்வந்தார்கள். ஊதியம் எதிர்பாராமல் படையில் பணிபுரிய விரும்பினர்கள். இந்த நிலைமை ஏற்படுமாயின், அவர்கள் கையில் அரசாங்கத்தின் கொள்கை சிக்கிக்கொள்ளும். ஆர்க்காடியன் உரிமைக்கு ஆபத்தாக இல்லாத ஸ்பாட்டாவுடன் இது ஒப்பந்தம் செய்துகொண்டாலும் கொள்ளலாம். அப்படிப்பட்ட அரசியல் புரட்சி தீப்ஸ் நகருக்கு அழிவைக்கொண்டுவரக்கூடும். ஏனெனில் ஆர்க்காடியாவிற்கும் ஸ்பார்ட்டாவுக்குமுள்ள தீவிரப் பகையை நம்பியிருக்கும் தீப்ஸுக்குப் பாதகமாகவும், ஸ்பார்ட்டாவுக்குச் சாதகமாகவும் இக்கொள்கையிருக்கும். மெஸ்ஸேனியாவின் சுதந்திரத்திற்கு அபாயத்தை விளைவிக்கக்கூடிய கொள்கையாகவும் இது இருந்தது.

## பெலப்போனிஸ்மீது நான்காவது தீபன் படையெடுப்பு

ஸ்பார்ட்டாவுக்கும் ஆர்க்காடியாவுக்குமிடையே ஏற்படும் ஒப்பந்தத்தினுல் தனக்கு ஏற்படும் அபாயத்தை விலக்குவதற்காகத் தீப்ஸ் பொலப்போனிஸ் மீது நான்காம் முறையாகப் படையெடுத்து வந்தது. அப்படையெடுப்பு ஆர்க்காடியாவிலுள்ள தீபன் கட்சிக்கு ஆதரவளிப்பதாகவுமிருந்தது. ஆனுல் இரு கட்சிகளும் ஒன்று சேர்ந்து எலிஸுடன் சமாதானம் செய்துகொள்வதெனவும், ஒலிம்பியாவில் அதற்குரிய உரிமையை அளித்துவிடுவதென்றும், தீர்மானித்துவிட்டன. ஒவ்வொரு நகரமும் ஒப்பந்தத்திற்கான பிரமாணம் எடுத்துக்கொண்டது. தேஜேயில் நடந்த இச் சடங்கு ஒரு நிகழ்ச்சி நடக்கக் காரணமாயிருந்தது. மற்ற விடங்களிலுள்ள ஆர்க்காடியர்கள் இந்த சமயத்தில் தேஜேயில் ஒன்று கூடினர்கள். விருந்து, களியாட்டு முதலியவற்றுடன் விழாவை கொண்டாடினர்கள். அங்கே ஏற்கெனவேயிருந்த போயிஷியன் காவற்படையின் தலைவன், நகரத்தின் வாயிற்கதவுகளை எல்லாம் அடைத்துவிடவும், தீப்ஸ் நாட்டிற்கு எதிர்ப்பான கட்சியினரைக் கைது செய்யவும் கட்டளையிட்டான். அங்கு விழாக்கொண்டாட வந்த மேன்டினியர்களில் பெரும்பாலோர் முன்னமே போய்விட்டார்கள். மிகச் சிலர் கைதிகளாகப் பிடிபட்டார்கள். மேன்டினேயின் எதிர்ப்பைக்கண்டு தீபன் கவர்னர் பயந்துவிட்டான். உடனே அவன் எல்லோரையும் விடுதலை செய்ததோடு தன் செய்கைக்காக மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். போயிஷியன் கவர்னர் தன் சொந்த விருப்பப்படி அவர்களைக் கைது செய்யவில்லை. இச் செயல் புரிவதற்கான திட்டம் முன்னமே தீட்டப்பட்டிருந்தது. அதை நிறைவேற்ற தீப்ஸ் நகர

அரசாங்கத்தின் அனுமதியையும் கவர்னர் பெற்றிருந்தான். போயிஷிய கவர்னர் செய்த அடாதகாரியத்தைப்பற்றி தீப்ஸ் அரசாங்கத்துக்கு அறிவிக்கப்பட்டது. எப்பாமினுண்டஸ், கவர்னர் செய்தது சரியென்று அங்கீகரித்தான். ஆனுல் கைது செய்தவர்களை விடுதலை செய்ததை அவன் வன்மையாகக் கண்டித்தான். தீப்ஸ் அரசாங்கத்தின் அனுமதியில்லாமல், ஆர்க்காடிய ஐக்கிய நாடுகள் எலிஸுடன் ஒப்பந்தம் செய்துகொள்ள உரிமை கிடையாதென்றும் கூறினுன். மேலும் 'ஆர்க்காடியா மீது நாம் படையெடுத்து, நம் நண்பர்களுக்கு உதவிபுரிவோம்' என முழங்கினுன்.

**ஐந்து நாடுகளின் ஒப்பந்தம், கி.மு. 362.**

அவ்வாறு எப்பாமினுண்டஸ் பயமுறுத்தியதைச் செயலில் காட்டத் தலைப்பட்டான். தீப்ஸ் நாட்டின் பகைவர்களும் ஒன்று சேர்ந்து போருக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார்கள். ஸ்பார்ட்டா, ஆர்க்காடியா ஆகிய இரு நாடுகளின் நேச உறவு நாடாகிய ஏதென்ஸ் இப்போது இரட்டைப் பணி புரிய நேரிட்டது. ஆர்க்காடியாவிற்கு அது புரிந்த உதவி ஏதென்ஸுக்கும் பயன் பட்டது. ஏதென்ஸ், மேன்டினே, எலிஸ், அச்சேயா, பிலியஸ் என்ற ஐந்து நாடுகள் தமக்குள் செய்துகொண்ட ஒப்பந்தம், அவர்கள் எவ்வளவு தூரம் தீப்ஸ் படையெடுப்பிற்கஞ்சினர் என்பதைக்காட்டும். இந்த உடன்படிக்கையின் ஒரு பாகம் சலவைக் கற்களில் பொறிக்கப் பட்டுப் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. மெகாலோபோலிஸ் நகரிலிருந்த அரசாங்கத்தோடு சேர்ந்து ஒத்துழைக்காத நாடு மேன்டினே ஆகும். ஆகையால் மேன்டினியர்கள் இந்த உடன்படிக்கையில் ஆர்க்காடியர்கள் என அழைக்கப்படுகிருர்கள். இவர்களே தங்கள் நாட்டின் உண்மையான பிரதிநிதிகளெனக்கருதினுர்கள்.

**ஸ்பார்ட்டா மீது எப்பாமினுண்டஸ் படையெடுத்தல்; அவன் தேஜேக்குத் திருப்புதல்; மேன்டினேயில் குதிரைப்படை யுத்தம்**

எப்பாமினுண்டஸ், போயிஷியப் படையின் முழு பலத்தோடும் மத்திய கிரீஸ்-நாட்டுப் படையுடனும், கீழ்ப்படிந்து நடக்கத்தெரியாத பெலப்போனீசியர்களை போயிஷியாவின் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வரப் புறப்பட்டான். போயிஷியர்கள் மட்டும் அவன்கூட வர மறுத்து விட்டார்கள். போயிஷியா தாக்கபட்டால் நேச உறவு நாடுகள் உதவி புரிய வேண்டுமென்பதே ஒப்பந்தத்தின் சாரமாகும். எப்பாமினுண்டஸ் நேமே என்ற இடத்திற்கு வந்து, தன் படையுடன் அங்கே தங்கினுன். ஏதென்ஸ், தன் நண்பர்களுக்கு அனுப்பும் படையுதவியைத் தடுப்பதே அவன் நோக்கம். அத்தீனியப் படைகள் அங்கு வரவில்லை. ஆகையால் அவன் தேஜேக்கு முன்னேறிச் சென்ருன். அந்தத் தீபகற்பத்தில் தீபன் செல்வாக்குள்ள நாடுகளில்

தேஜே முதன்மையானது. அவ்விடத்தில் ஆர்க்காடியன், ஆர்கைவ், மெஸ்ஸேனியன் படைகள், தன்னைச் சந்திக்க வேண்டுமென்பது அவன் நோக்கம். அவனுடைய விரோதிகள் மேன்டினேயில் கூடினார்கள். ஸ்பார்ட்டன் படை எஜிஸிலாஸ் தலைமையில் அங்கு வந்து சேர்வது எதிர்ப்பார்க்கப்பட்டது. ஸ்பார்ட்டனரும் அத்தீனியர்களும் அங்கு வந்து சேர்வதற்கு முன்னதாகவே மேன்டினேயைத் தாக்கி அதைப்பிடித்துவிடுவதென்ற நோக்கத்துடன் எப்பாமினுண்டஸ் மேன்டினேயை நோக்கிப் புறப்பட்டான். அங்கு மிக்க வலிமையுள்ள படை இருந்ததால் தன்னுடைய கூடாரமிருந்த தேஜே நகருக்கே திரும்பினான். எஜிஸிலாஸ் ஏற்கெனவே நகரத்தை விட்டுப் புறப்பட்டுவிட்டான். என்ற செய்தியைக்கேட்டு எப்பாமினுண்டஸ் ஸ்பார்ட்டாவைக் கைப்பற்றப் படையுடன் புறப்பட்டான். அவனுடைய திட்டத்தைப்பற்றிய செய்தியை ஒரு கிரீட்ட தூதுவன் எஜிஸிலாஸ் மன்னனுக்கு எடுத்துச் சென்றிராவிடில் எப்பாமினுண்டஸ் ஸ்பார்ட்டாவை 'இளங்குஞ்சுகளுடைய கூண்டைக்' கைப்பற்றுவதைப்போலக் கைப்பற்றியிருப்பான். எஜிஸிலாஸ் மன்னன் ஸ்பார்ட்டாவிற்குத் திரும்பினான். எப்பாமினுண்டஸ் தன்னுடைய படையை ஸ்பார்ட்டா நகரின் எல்லையில் கொண்டு நிறுத்தினான். ஸ்பார்ட்டா மிக்க வலுவுள்ள படையால் பாதுகாக்கப் பட்டிருப்பதைக் கண்டான். அது எப்பாமினுண்டஸுக்கு ஏமாற்றமளித்தது. மீண்டும் முயலுவோமென்ற தீர்மானத்துடன் எப்பாமினுண்டஸ் தேஜேக்குத் திரும்பிவந்துவிட்டான். மேன்டினே, ஸ்பார்ட்டாவிற்குத் தன்னுடைய படையை அனுப்புவதால், அது தற்காப்பற்ற நிலையிலிருக்குமென அவன் நினைத்தான். மேன்டினேமீது மின்னல் தாக்குதல் நடத்தத் தன் குதிரைப் படையை அனுப்பினான். அவன் நினைத்ததைப்போல் மேன்டினே படைகள் ஸ்பார்ட்டாவிற்குப் புறப்பட்டுவிட்டன. குடியானவர்கள் அறுவடை காலமானதால் வயலுக்குப் போய்விட்டார்கள். தீபன் குதிரைப்படை தெற்கிலிருந்து வந்துகொண்டிருந்தபோது அத்தீனியக் குதிரைப் படையொன்று மேன்டினேயிக்கு வந்து சேர்ந்தது. அவர்கள் சாப்பிட்டு அல்லது குடித்து முடித்தும் முடிக்காமலும், உடனே புறப்பட்டு, தீபன் குதிரைப் படையைத் துரத்தி விட்டுத் திரும்பி வந்தார்கள். களைத்திருந்த இரு படைகளும் களைப்பை மறந்து கடுமையாகப் போரிட்டார்கள். அப்போரில் வரலாற்று விரிவுரையாளனாகிய ஸெனப்பனின் மகன், கிரில்லஸ் இறந்துவிட்டான்.

ஸ்பார்ட்டாவிற்கு அபாயமில்லை என்பதை உணர்ந்தே நேச நாடுகளின் படைகள் மீண்டும் மான்டினேக்குத் திரும்பி வந்தன. இப்போது அவர்கள் பலம் ஸ்பார்ட்டன் அத்தீனிய படைகளின் வருகையால் அதிகரித்தது. எப்பாமினுண்டஸ் தன்னுடைய இரு

முயற்சிகளும் தோல்வியுற்றதைக் கண்டு மேன்டினேயிலுள்ள பகைவர்களின் படையைத் தாக்குவதெனத் திட்டமிட்டான். அவன் அம்முடிவிற்கு வருவதற்குப் பல காரணங்களிருந்தன. முதலாவதாக, தன்னுடைய பெரும் படைக்கு உணவளிக்க முடியாத நிலை ஏற்படுவதை அவன் உணர்ந்தான். அவனுடைய நேச நாடுகளின் படைகள் எவ்வளவு விரைவில் வீடு திரும்பவேண்டுமோ அவ்வளவு விரைவில் அவர்கள் திரும்பிப் போக ஆயத்தமாயிருந்தார்கள். இவற்றின் காரணமாகப் போரை விரைவில் முடித்துவிடுவதென எப்பாமினுண்டஸ் திட்டமிட்டான். பகைவனுடைய படை சமவெளியின் தென்பாகத்திலே ஒரு குறுகிய பாகத்தில் அணிவகுத்து நின்றது. அவர்கள் எதிரே மலையின் விளிம்புகளிருந்தன. அவர்களைத் தோற்கடித்துப் பட்டணத்தை விரைவில் கைப்பற்ற வேண்டுமென்பது எப்பாமினுண்டஸின் நோக்கம். அவன் பகைவர்களுடைய படையை நேரடியாகத் தாக்கவில்லை. அவனுடைய பகைவர்கள் குழப்பமடையும்படியான ஒரு தந்திரத்தை அவன் கடைபிடித்தான். அவன் மலையிலுள்ள திரிப்போலிட்ஸா என்ற இடத்தை அடையத் தன் படையை வடமேற்குத் திசைக்கு அழைத்துச் சென்றான். பகைவனுடைய வலப்பக்கப் படைக்கு நேராகத் தன் படையைக் கொண்டு போய் நிறுத்த அங்கிருந்து சற்று நடக்க வேண்டியதாயிற்று. அவன் அவ்விடத்தில் தங்கி, தன்னுடைய படையை அணிவகுத்து நிறுத்தினான். இந்த மறை முகத் தாக்குதலினால் பகைவர் ஏமாற்றப்பட்டனர். அவனுடைய படை மலைப்பகுதியில் சாய்ந்து கோணலாக வருவதைக் கண்டு அவனுடைய பகைவர்கள் அவன் அன்றைக்குப் போர் தொடுக்க மாட்டானென நினைத்தார்கள். அவன் தன்னுடைய திசையை மாற்றி அவர்களுக்கு எதிரில் வந்த போதுங்கூட அவர்கள் முன் போலவே தப்புக் கணக்குப் போட்டார்கள்.

### எப்பாமினுண்டஸின் நாட்டங்கள்

எப்பாமினுண்டஸ் லூக்ட்ராவில் எந்த முறையைக் கையாண்டானோ அந்த முறையை இங்கேயும் கையாண்டான். அவன் தன்னுடைய தலைமையில் போயிஷியப் படையை இடது வியூகத்தில் நெருங்கி அடர்த்தியான வரிசைகளில் நிறுத்தினான் மற்றப் படைகள் மோதிக் கொள்ளுமுன், பகைவனுடைய வலது சாரிப்படையைத் தகர்த்தெறிய வேண்டுமென்பதே அவன் நோக்கம். பகைவனை ஏமாற்ற வேண்டுமென்பதற்கே அவன் சாய்வாக முன்னேறினான். அவனுடைய இடசாரிப்படையில், வலசாரிப்படைக்கிடையேயிருந்த தூரத்தைவிட மிக அதிகமாக இருந்தது. மேன்டினியா மண்ணில் போர் நடந்ததால் மேன்டினியா மக்கள் பகைவனுடைய வல சாரிக் கோடியிலும், அவர்களுக்கு அடுத்தாற்போல் லாசிடாமோனியர்களும் நிறுத்தப்பட்டார்கள். அத்தீனியர்கள் இட சாரியில் வெகு தொலைவில் நின்றார்கள். இரு சாரிப்படைகளும் குதிரைப்படையினால் பாது

காக்கப்பட்டன. எப்பாமினுண்டஸ் தடுக்க வேண்டிய ஓர் அபாய மிருந்தது. போஷியப் படை தாக்கும்போது அத்தீனியப்படை சுற்றி வந்து பின்புறமாகத் தாக்கக் கூடுமென நினைத்தான். ஆகையால் அவன் ஒரு சிறிய குதிரைப் படையையும், ஒரு காலாட்படையையும் சற்றுத் தூரத்தில் ஒரு மேட்டின் மேல் நிறுத்தி வைத்தான். அத்தீனி யர்கள் தன் வலசாரிப் படையைப் பின் புறமாகத் தாக்கினுல் அவர் களைப் பின்னுல் நின்று தாக்க இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. லாசிடா மோனியர்கள் வேடிக்கைப் பார்த்துக் கொண்டிருந்தார்களே தவிர அவன் ஏன் இவ்விதமாக அணிவகுத்திருக்கிறுன் என்பதை உணர வில்லை. வலை விரித்தாயிற்று எப்பாமினுண்டஸ் முதலில் தாக்கினுன். அப்போதுதான் அவர்கள் அவன் செய்துள்ள படை அணிவகுப்பின் நோக்கம் புரிந்தது. அவன் திட்டப்படியே எல்லோரும் தோற்று விட்டார்கள் அவனுடைய குதிரைப்படை அவர்களுடைய குதிரைப் படையைத் துரத்திற்று. அவனுடைய காலாட்படை எதிரிலுள்ள காலாட்படையைப் பிளந்து செல்லும்போது லாசிடாமோனியர்கள் ஓட்டமெடுத்தார்கள். லூக்ட்டராவில் கண்ட இந்த யுத்தத் தந்திர முறையை லாசிடாமோனியர்கள் மறந்துவிட்டது வியக்கத்தக்கது. அச்சேயேயர்களும், எலிஸ் போர் வீரர்களும் மற்றவர்களும் லாசிடா மோனியர்கள் ஓடுவதைக் கண்டு தாமும் ஓட்ட மெடுத்தார்கள். அங்கே என்ன நடந்ததென்பது தெளிவாகத் தெரியவில்லை. தீபன் இட வியூகத்தின் தாக்குதல் வெற்றியடையாதென்பதை நிர்ணயித்து விட்டது. குதிரைப் படைகள் மட்டும் சற்றுக் கடுமையாகப் போரிட்டன. மற்ற முனைகளிலெல்லாம் போர் விறுவிறுப்பாக நடைபெறவில்லை.

### எப்பாமினுண்டஸின் மரணம்

வெற்றி தீபர்களுக்குக் கிடைத்தது. ஆனுல் அவ் வெற்றி அவர்கள் ஆதிக்கத்தைப் பெருக்க உதவி புரிவதற்குப் பதிலாக அழிவைக் கொண்டு வந்தது. எப்பாமினுண்டஸ் பின் வாங்கி ஓடும் பகைவர்களைத் தீபன் போர் வீரர்களைக் கொண்டு துரத்திச் சென்ருன். அப்பொழுது ஒரு ஈட்டி அவனுடலில் நன்ருக செருகப்பட்டது. அச் செய்தி எங்கும் பரவிற்று. பகைவர்களைத் துரத்திச் செல்வதை நிறுத்தி விட்டார்கள்; வெற்றியின் விளைவு வீணுயிற்று. அவனுடைய படை தோல்வியடைந்தவர்களைப்போல் பின் வாங்கியது. ‘போர் வீரர்கள் அவனிடம் கொண்டிருந்த பற்றையும் கவர்ச்சியையும் இவ்வளவு உறுதியாகக் காட்டியதைப் போல் இதுவரையில் காட்டியதில்லை. பல இனத்தவர்களைக் கொண்ட போர்வீரர்களெல்லோருடைய நம்பிக்கைகளும் எப்பாமினுண்டஸை மையமாகக் கொண்டிருந்தன. வெற்றியில் நம்பிக்கையும், தோல்வியிலிருந்து தம்மைக்காத்துக் கொள்வதும், அவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படிவதால் தமக்கு ஏற்படுகிறதென்ற எண்ணத்திலிருந்தனர் வீரர்கள். எனவே அந்தக் கட்டளை அவர்களை விட்டு மறைந்த பிறகு, பகைவனை அடித்து

விழ்த்தக் கூடிய அவர்களுடைய சக்தியாவும் அவர்களை விட்டு மறைந்து விட்டதாகத் தோன்றியது.[1]

அங்கே அவர்களில் அவனுக்குச் சமமானவன் யாருமில்லை. அவன் இறக்கும் தருவாயில் அவனுடைய உயிரை அழித்த ஈட்டி அவனுடைய உடலிலிருந்து எடுபடுவதற்கு முன்னால், வாரிசுகளாக நியமித்த ஐயேலேய்தாஸ், டேப்பான்தாஸ் ஆகிய இருவரையும் கூப்பிட்டான். அவர்களும் கொல்லப்பட்டார்களென்று அவனுக்கு அறிவித்தனர். அப்பொழுது அவன், 'அப்படியானால் பகைவனோடு சமாதானம் செய்து கொள்ளுங்கள்' என்றான். அப்போதிருந்த நிலையின் அடிப்படையில் சமாதானம் ஏற்பட்டது. மெகாலோபோலிஸ், மெஸ்ஸேனியே இவற்றின் உரிமைகள் அங்கீகரிக்கப்பட்டன. இந்த ஒப்பந்தத்திற்கு ஸ்பார்ட்டா ஒத்துவரவில்லை. மெஸ்ஸேனியாவின் சுதந்திரத்தை ஸ்பார்ட்டா ஏற்க மறுத்தது. ஆனால் ஸ்பார்ட்டாவுடன் நட்புக் கொண்டிருந்த நாடுகள், ஸ்பார்ட்டாவின் எதிர்ப்புக்கு இணங்கந்தரவில்லை.

எப்பாமினண்டஸின் உழைப்பின் பயன்

எப்பாமினண்டஸின் படைத் திறமை, அவனை அவனுடைய நாட்டுமக்களிலிருந்து வேறுபடுத்திக்காட்டிய அவனுடைய மனத்தின் தன்மை, நடத்தையின் உயர் பண்புகள், அவன் மெஸ்ஸேனியாவின் விடுதலைக்கும் ஆர்க்காடியாவின் ஆதரவுக்கும் செய்த சேவை முதலியவை, அவன் ஓர் நடுத்தரமான அரசியல் அறிவைப் பெற்றவனென்று சொல்வதற்குத் தடையாக இருத்தல் கூடாது. ஒரு படைத் தலைவன் தன்னுடைய அறிவுக் கூர்மையைக் கொண்டு செய்வதையே அவன் செய்தான். தன்னுடைய நாட்டைத் தலை சிறந்த நாடாக்க வேண்டுமென்று விரும்பிய இவன், ஓர் அரசியல் வாதியைப் போல், சிக்கலான அடிப்படையான அரசியல் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கத் தவறிவிட்டான். ஸ்பார்ட்டாவில் இருந்ததைப் போல, போயிஷியாவின் அயல் நாட்டு விவகாரங்களை நடத்த அடிப்படையான கொள்கைகளையுடைய சிறந்த அரசியல் நிறுவனம் தேவைப்பட்டது. போஷியாவில் அறிவுப் பஞ்சமிருந்தது. அறிவாற்றலுள்ளவர்கள் மிகச் சிலரே. அப்படிப்பட்ட ஒரு நாட்டில் அயல் நாட்டுக் கொள்கைக்காக ஒரு நிறுவனம் ஏற்படுவது மிகத் தேவையாக இருந்தது. எப்பாமினண்டஸினிடமுள்ள உயரிய பண்புகளில் ஒரு பாகத்தைக்கூட அவனுக்குப் பின்னால் வந்தவர்கள் அடைய வில்லை. கடலாதிக்கத்திற்காக ஏதென்ஸுடன் போயிஷியா போட்டியிட முடியுமா அல்லது அது விரும்பத்தக்கது தானா என்பதைப் பற்றி முடிவு கட்டுவது மிகவும் அவசியமாக இருக்கிறது. போயிஷியா போட்டியிட முடியும். அதனுடையப் போட்டி விரும்பத்

[1] க்ரோட்.

தக்கது தான் என்ற முடிவு ஏற்படுமானல், போஷியாவின் கடற் படைக்குப் பண பலம் தேவை. ஆனல் அரசாங்கத்தைப் பற்றியும் நிதி பற்றியும் எப்பாமினண்டஸ் நினைத்தும் பார்த்ததாகத் தெரிய வில்லை. அவன் பெரோபோன்டிஸுக்குக் கடற்பிரயாணம் செய்தது பயனற்ற சோதனை முறையாகும். அவன் போஸிய நாடுகளையும் போஷியாவுடன் நட்புக் கொண்டிருக்கச் செய்யத்தவறிவிட்டான். ஆம்பிக்கட்டியோனின் சங்கத்தைப் புதுப்பித்து, அதைத் தீபன் கொள்கைக்குச் சாதாரணமான கருவியாக்கிக் கொள்ள விரும்பினனே தவிர, அதை அவன் செய்யவில்லை. போயிஷியாவில் நாட்டுப் பற்றை யுண்டாக்கி, தேசிய அடிப்படையில் அங்குள்ள நகரங்களை ஒன்ருக ஐக்கியப் படும்படி செய்யவில்லை. அவன் போயிஷியாவைப் பேரரசாக்க வேண்டுமென்று விரும்பினன்; ஆனல் அதை ஒரு ஐக்கிய நாடாக்கக்கூட இதற்குமுன் ஒருவரும் முன்வரவில்லை. புராணங்களில் கூறப்படுகிற லைகர்கஸ், தீஸியஸ் போன்ருேர் ஸ்பார்ட்டாவிற்கும் ஏதென்ஸுக்கும் செய் ததைப் போல, கணக்கற்ற தீப்ஸ் நகர வீரர்களில் ஒருவரேனும் அதற்குதவி செய்ததில்லை. எப்பாமினண்டஸ், போயிஷியாவை ஐக்கியப்படுத்த முயன்றதாகத் தெரிகிறது. உறுதியான அடிப் படையில் அப்படிப்பட்ட ஒரு ஐக்கியத்தை ஏற்படுத்த அவன் அறிந்திருப்பானகில், அவன் எதிர்காலத்தில் தீப்ஸுக்கு புகழைக் கொண்டு வந்திருக்கக் கூடும். அது அவன் மரணத்திற்குப் பின் னவது ஏற்பட்டிருக்கும். தனக்காக அல்லாமல் நாட்டிற்காக அவன் கொண்ட நிராசை நிதானமற்றும், கற்பனையாகவுமிருந்தது. அவன் கொண்ட நாட்டுப் பற்று, அவனுடைய நாட்டினர் தடையின்றிப் பின் பற்றக்கூடிய கொள்கைக்கு, வழிகாட்டியாக அமையவில்லை. தீப்ஸின் வெற்றிகள் அவனுடைய அறிவினல் கிடைத்தவைகளே தவிர, படையின் திறமையினல் வந்தவைகளல்ல. அவன் தன்னுடைய நாட்டைத் தன் அறிவுத் திறன் என்ற இறக்கைகளால் சுமந்து சென்ருனேயன்றி, உடலில் அது சுயமாய்ப் பறப்பதற்கான சக்தியை அதனுடலில் புகுத்தவில்லை. எனவே அதைச் சுமந்து பறந்தவ னுடைய இருதயத்தில் ஈட்டி ஊடுருவிச் சென்றபோது, அந்நாடு கீழே மறுபடியும் எழுந்திருக்க முடியாத அளவில் விழுந்து விட்டது. எப்பாமினண்டஸ் ஒரு சிறந்த படைத் தலைவனே தவிர, ஓர் அர சியல் அறிஞனல்லன்.

## 6. எஜிஸிலாஸ் மன்னனின் கடைசிப் படையெடுப்பு

**ஸ்பார்ட்டாவில் பணமுடை, கி.மு. 365.**

தீப்ஸ் நகரின் ஆதிக்கம் எஜிஸிலாஸ் மன்னனுக்கு அளித்த வேதனையைப்போல் யாருக்கும் அளிக்கவில்லை. அம் மன்னன் ஒரு

காலத்தில் பாரசீகப் பேரரசை வீழ்த்திவிடக் கனுக் கண்டுகொண் டிருந்தான். ஆனல் தன் சொந்த நாடு, தன்னுடைய வாழ்நாளி லேயே இருமுறை அந்நியப் படையெடுப்புக்களால் அழிக்கப்பட்ட தைத் தன் சொந்தக் கண்ணுல் கண்டான். ஆனல் தீப்ஸ் நகரின் எழுச்சியையும் வீழ்ச்சியையும் கண்டு ஆறுதலடைய அவன் கொடுத்து வைத்திருந்தான். எப்பாமினுண்டஸ் மாண்டதாலேயே ஸ்பார்ட்டா மெஸ்ஸேனியாவை எளிதில் அடைந்துவிட முடியாது. ஸ்பார்ட்டா தன்னுடைய ஆதிக்கத்தை உடனே மறுபடியும் நிலை நாட்டி விடவும் முடியாது. எப்பாமினுண்டஸின் இறப்பும் ஆர்க் காடியாவின் களைப்பும், ஸ்பார்ட்டா தன் பழைய செல்வாக்கில் சிறிதளவையாவது அடைய வழி கோலியது. தன் நாடு சிறியதாக் கப்பட்டது. தேவையான போர் வீரர்களைச் சிறிய நாட்டில் எதிர் பார்க்க முடியாது. ஆகையால் கூலிப் படையின் உதவிகொண்டு ஸ்பார்ட்டா உயிர்ப்பெற்றெழ வேண்டியதாயிற்று. பணமில்லாமல் கூலிப் படை கிட்டாது. ஆகையால் ஸ்பார்ட்டாவில் பணமுடை ஏற்பட்டது. இந்தக் காலத்தில் பாரசீகப் பேரரசின் மேற்குப் பகு தியில் குடும்ப கலகங்களும், சாட்டராப் கலகங்களும் எழுந்தன. அக் கலகங்களை ஸ்பார்ட்டாவும் ஏதென்ஸும் தங்களுக்கு அனுகூல மாக்கிக்கொண்டன. ஏதென்ஸ் நாடு பிடிக்கும் ஆசையினுல் வருந்தி உழைத்து வந்தது. ஸ்பார்ட்டா பண ஆசையினுல் பேரரசனுக்கு விரோதமாக எழுந்த கலகங்களில் ஈடுபட்டது. திமோத்தியுஸ், சாமாஸ் தீவை ஏதென்ஸின் ஆதிக்கத்தில் கொண்டுவர முனைந் திருந்தபோது எஜிஸிலாஸ் மன்னன் பொன்னுக்காகச் சிறிய ஆசியா விற்குச் சென்று அரியோபார்ஸானெஸ் என்ற ஸ்பார்ட்டா வுக்கு வேண்டிய உதவிகளைப் புரிந்தான். மேன்டினே போருக்குப் பின் இவன் மீண்டும் சிறிய ஆசியாவிற்குச் சென்ருன். இப்போது அவன் பணத்துக்காக மட்டும் போர் புரியச் செல்லவில்லை; வேறு சில நோக்கங்களும் கொண்டிருந்தான்.

பாரசீகப் பேரரசில் கலகம், கி.மு. 373.

ஹெல்லஸ்பாண்டிலிருந்து, நைல் நதி வரையில் ஆசியாவின் மேற்கெல்லைகளில் பாரசீகப் பேரரசனுக்கெதிரான கலகங்கள் தொடர்ந்து எழும்பின. ஆர்ட்டாக்குஸர்ஸஸ் மன்னனுக்குத் தொல்லைக் கொடுத்த கலகங்களில் அவனுடைய சகோதரன் ஸைரஸ் எழுப்பிய கலகமே முதல் கலகமாகும். சைப்பரஸ் கலகம் எழுப்பிய தையும், அக்கலகம் அடக்கப்பட்டதையும் நாம் அறிவோம். எகிப்து இன்னும் பாரசீக மன்னனை எதிர்த்து நின்றது. எகிப்துக்கு சமீபத்தி லுள்ள நாடுகளின் ஸாட்டராப்புகள் எகிப்தைப் பின்பற்றிக் கலகம் விளைவித்தார்கள். எகிப்தியர் விஞ்ஞான முறையில் தற்காப்பு அரண் களை அமைத்துக் கொள்வதற்கு உதவி புரிந்தவன் அத்தீனிய

படைத்தலைவனான சாபிரியாஸ் என்பவன். ஆனால், ஏதென்ஸ் அரசனோடு செய்துகொண்ட ஒப்பந்தத்திற்குப் பின், அவனை எகிப்திலிருந்து திரும்ப வரவழைத்து கொண்டது. எப்பிகிராட்டிஸ் என்ற மற்றொரு படைத் தலைவன் பேரரசனுடைய படையில் சேர்ந்து பாரசீக மன்னனுடைய படைத் தலைவனுக்கு உதவியாக எகிப்தியரை எதிர்த்துப் போரிட்டு வந்தான். ஆனால் பாரசீகப் பேரரசின் படைத் தலைவன் அவனுடைய அறிவுரைகளின்படி நடந்து கொள்ளவில்லை. இதன் பிறகு ஆசியாவில் கலக மெழுந்தது. ஆரம்பத்தில் கப்பதோசியாவிலும் (Cappadocia), அதன் பிறகு பிரிஜியாவிலும் (Phrygia), அவற்றையடுத்து ஐயோனியா, காரியா லிதியாவிலும் (Ionia, Caria, and Lydia) கலகங்கள் எழும்பின. கலகங்கள் போயினிஷியா, ஸிரியா முதலிய நாடுகளுக்கும் பரவின. கலகத்தில் ஈடுபட்ட ஸாட்டாராப்புகளுக்கும், தற்சமயம் அரசு கட்டில் ஏறிய தாச்சோஸ் (Tachos) என்ற எகிப்திய மன்னனுக்குமிடையில், கலகத்தில் ஒத்துழைப்பதற்கான ஒரு திட்டம் ஏற்படுத்தப்பட்டது. ஸ்பார்ட்டா இந்தக் கூட்டமைப்புக்கு ஆதரவளித்தது. ஆனால் அத்தீனிய சாபிரியாஸ் (Chabrias) தன் விருப்படியே எகிப்திய படையில் சேர்ந்து கொண்டான்.

எகிப்தில் எஜிஸிலாஸ், கி.மு. 361.

எஜிஸிலாஸ் மன்னன் ஆயிரம் போர் வீரர்களோடும், முப்பது ஸ்பார்டனரைக் கொண்ட ஓர் ஆலோசனைக் குழுவுடனும் எகிப்து சென்றான். அவனுடைய சிறிய உருவம், முடமான கால், சாதாரண உடை முதலியவைகளைக் கொண்டு எகிப்தியர்கள் அவனுடைய படைத் திறமையைப் புரிந்து கொள்ளவில்லை. அவன் எதிர்பார்த்தபடி படைக்குத் தலைமை தாங்குதலில் அவனுக்கு முதலிடம் அளிக்கவில்லை. தாச்சோஸ் என்ற எகிப்திய மன்னன் போயினிஸியாவின் மீது படையெடுத்துச் சென்றான். தனக்கு உதவியாக எஜிஸிலாஸ் மன்னனையும், சாபிரியாஸ் என்ற அத்தீனியனையும் அழைத்துச் சென்றான். தாச்சோஸ் மன்னன், போயினிசியாவிலிருந்தபொழுது, அவனுடைய உறவினனான நெக்டானிபோஸ் (Nektanebos) கலகஞ் செய்தான். ஆகையால் தாச்சோஸ் மன்னன் படையெடுப்பை விட்டு விட்டு எகிப்துக்கு நாட்டிற்குத் திரும்ப நேரிட்டது. எப்பிகிராட்டிஸ் மன்னன் தன்னை அவமதித்த காரணத்தால் தாச்சோஸின் பகைவனுடன் சேர்ந்து கொண்டான். தாச்சோஸ், சூசாவுக்குச் சென்று பேரரசனுடன் சமாதானஞ் செய்து கொண்டான். நெக்டானிபோஸுக்கு எதிராக மற்றொருவன் கலகம் செய்தான். எஜிஸிலாஸ் மன்னன் அக்கலகத்தை அடக்கினான். இவ்வாறு எகிப்திய அரசு கட்டிலுக்காக எழுந்த போட்டிகளின் காரணமாக பாரசீக மன்னனுக்கு எதிராக ஏற்பட்ட கூட்டிணைப்பு குலைந்து விட்டது. திமோத்தியுஸின் நண்பனும், பிரிஜியாவின் ஸாட்டராப்புமாகிய அரியோபார்ஸானேஸ்,

பேரரசனின் கோபத்துக்களாகி சிலுவையிலறையுண்டான். மற்ெருரு ஸாட்டராப் கொலையுண்டான். அதைக் கண்ட மற்ற ஸாட்டராப்புகள் பேரரசனுக்குப் பணிந்து விட்டார்கள். ஓராண்டிற்குள் மேற்கு ஆசியா முழுதும் ஆர்ட்டாரஸர்ஸஸ் மன்னனுக்குக் கீழ் வந்தது.

### எஜிஸிலாஸ் மன்னனின் மரணம், கி.மு. 361-0(?)

இச்சிறிய படையெடுப்பினுல் ஸ்பார்ட்டா விரும்பியதையடைந் தது. ஸ்பார்ட்டா தன்னுடைய மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ள மெஸ்ஸேனியாவின் சுதந்திரத்தை அங்கீகரித்த பாரசீக மன்னனைத் தண்டிப்பதற்காகப் படையெடுத்துச் சென்றதாகச் சொல்லி இருக்க லாம். எல்லோரும் ஸ்பார்ட்டா பணத்திற்காக எகிப்தியப் படையில் சேர்ந்த உண்மையை அறிவார்கள். எஜிஸிலாஸ் செய்த சேவைக் காக எகிப்திய மன்னனுகிய நெக்ட்டானிபோஸ் 230 தாலந்தைப் பரிசாகக் கொடுத்தான். இதுவே வயோதிக மன்னன் எஜிஸிலாஸ் ஸ்பார்ட்டாவுக்குச் செய்த கடைசி சேவை. அவன் செரேனே நகருக்குச் சென்றுகொண்டிருந்தபோது மெனேலாஸ் துறைமுகத்தில் என்பத்து நான்காவது வயதில் மரணமடைந்தான். எண்ணெய் பூசப் பட்ட அவனுடைய பிரேதத்தை ஸ்பார்ட்டாவிற்குக் கொண்டு வந் தார்கள்.

அவன் சிறப்பான மனிதனுக இல்லாவிடினும், லைசாந்தருக்குள்ள அந்தஸ்து அவனுக்குக் கிடைக்காவிடினும், நாற்பதாண்டுக் காலம் அவன் கிரீஸில் முதன்மையானவனுக வாழ்ந்து வந்தான். வாழ்க் கையில் அவனுக்கு மனச் சோர்வு இருந்தது. அவன் பெலப் போனீஸிய யுத்தஆரம்பத்தை நினைவு கூர முடியும். அப்போரில் அவன் ஸ்பார்ட்டாவின் வெற்றியைப் பார்த்ததுண்டு. அவன் அவ னுடைய பேரரசுக் கொள்கையை முப்பதாண்டு காலம் செயல்படுத் தியவன். பின் தன் வயோதிகப் பருவத்தில் அதற்கேற்பட்ட தாழ் மையில் பங்கு கொண்டவன். பாரசீகத்தை வென்றுவிட வேண்டு மென்ற மனக் கோட்டையில் வாழ்க்கையை ஆரம்பித்தவன்; ஆனுல் அவன் அம்மனக் கோட்டையை விட்டு விடும்படியான நிலைமை ஏற் பட்டது. அவனுடைய அந்த அவா ஒரு கிரேக்க நகரின்மீது கடும் பகையாக மாறியது. என்பத்து மூன்ருவது வயதில், மீண்டும் பார சீகப் பேரரசுக்கு எதிராக நாடு பிடிக்க அல்லது புகழடையப் படை யெடுத்துச் செல்லாமல், வறுமையால் வாடும் தன்னுடைய நாட்டிற் குத் தேவையான பணத்தை எந்த வகையிலாகிலுந் தேடிக் கொடுக்க ஒரு படையுடன் சென்றவனைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

# 15. சைரகூஸன் பேரரசும், கார்த்தேஜியுடன் போராட்டமும்

மேற்கு கிரேக்கர்கள் கார்த்தேஜியுடன் செய்த போராட்டம் கிழக்கு கிரேக்கர்கள் பாரசிகத்தோடு செய்த போராட்டத்திற்கு ஒத்திருத்தல்.

சிஸிலிய படை எடுப்பின் தோல்விக்குப்பின் கிரேக்க நாடுகளில் நடந்த போர் உள்நாட்டுப்போராகயிராமல், புறச் சாதியார்களோடு புரியும் பெரும்போரின் ஒரு பாகமாக மாறியதென்பதை நாம் பார்த்தோம். இப்பொழுது நாம் கிரேக்கர்களுக்கும் புறச் சாதியாருக்கும் அதே காலத்தில் மேற்கில் ஏற்பட்ட போரைப்பற்றி ஆராய வேண்டியிருக்கிறது. ஹிமேரா வெற்றி கார்த்தேஜியரை சிஸிலியின் கடற்கரைகளிலிருந்து விரட்டியது. அதே ஆண்டு பாரசீகர் அட்டிகாவின் கடற்கரைகளிலிருந்து விரட்டப்பட்டார்கள். ஏககாலத்தில் நடைபெற்ற இச்சம்பவங்கள் வியப்பையளிக்கின்றன. ஹெல்லாஸ் அடைந்த இவ்வெற்றிகளுக்குப்பின் அமைதி நிலவிற்று. மேற்கிலும் கிழக்கிலுமுள்ள கிரேக்க நாடுகளில் போரோ, சமாதானமோ, எதுவாயிருப்பினும் அதில் கார்த்தேஜியும், பாரசீகமும் தலையிடவேயில்லை. கிழக்கிலிருந்த ஒரு பெரிய கிரேக்கப் பட்டினம், மேற்கிலிருந்த பெரிய கிரேக்கப் பட்டினத்தைத் தாக்கி, இரு நாடுகளும் போரிட்டுக் களைத்துப்போகும் வரையில், புறச் சாதிசார் அவர்களுடைய சண்டையில் தலையிடவில்லை. கடைசியில் அவர்கள் தலையிட நேர்ந்தது. சைரகூஸினுல் விளைந்த விவகாரங்களைத் தீர்க்க சிஸிலி கார்த்தேஜியை நாடியது. ஏதென்ஸினுல் நேர்ந்த விவகாரங்களைத் தீர்த்து வைக்க ஏஜியான் நாடுகள் பாரசீகத்தின் உதவிலய நாடினர். அன்னியர்களான கார்த்தேஜி மக்களும், பாரசீகர்களும் அதனுல் தங்கள் நாடுகளின் எல்லைகளைப் பெருக்கிக் கொண்டார்கள்.

# 1. ஸெல்லினஸ் ஹிமேரா நகரங்களை கார்த்தேஜி அழித்தல்

**சைரகூஸ் வெற்றியின் விளைவு; மக்களாட்சியில் முன்னேற்றம். டயோக்கிளிஸும் அவனது சீர்திருத்தங்களும்.**

ஏதென்ஸினிடம் வெற்றிபெற்ற சைரகூஸ், ஒரு ஸிஸிலியன் பேரரசை ஏற்படுத்தியதாகத் தோன்றுகிறது. காட்டேன், நாக்ஸாஸ் ஆகிய இரு நகரங்களையும் (Cotane & Naxsos) ஒழித்துக் கட்டுவதே அதன் முதல் நோக்கமாக இருந்தது. இந்தப் பணியைச் செய்து முடித்த பிறகு அது அக்ரகாஸ் (Acragas) என்ற நகரத்தின்மீது தாக்குதல் செய்திருக்கும். இதைப்போல மற்ற நகரங்களும் அதன் ஆதிக்கத்தை எதிர்க்க முடியாமல் பணிந்து நடந்திருக்கலாம். அதற்குக் கிடைத்த இந்த நல்ல வாய்ப்பை அது அனுபவிக்க முடியாதபடி அந்நியர் அதற்குத் தொல்லை கொடுக்க ஆரம்பித்தனர். ஏதென்ஸ்மீது அடைந்த வெற்றி, ஒரு பேரரசை ஏற்படுத்த வழி காட்டாவிடினும், மக்களாட்சிக் கொள்கை முன்னேற்றமடைய உதவியாக இருந்தது. ஏதென்ஸ், பாரசீகத்தின்மீது கொண்ட வெற்றி அது ஓர் பேரரசை ஏற்படுத்த உதவியாயிற்று. ஆனால் அப்படிப் பட்ட நிலைமை சைரகூஸுக்கு ஏற்படவில்லை. ஹெர்மோகிராட்டஸ் சைரகூஸில் தங்கி இருந்திருப்பானாகில் இப்பேர்பட்ட மாறுதல் ஏற் பட்டிருக்க முடியாது. எஜியானிஸ், ஸ்பார்ட்டாவுக்கு உதவியாக அனுப்பப்பட்ட உதவிப் படைக்கு அவன் தலைமை தாங்கிச் சென்று விட்டான். அப்போது மக்களாட்சி கொள்கையினர், ஹெமோ கிராட்ஸை நாடு கடத்திவிட்டார்கள். டையோக்கிளிஸ் என்பவன் ஹெமோகிராட்டிஸின் அரசியல் பகைவன்; அவன் சுத்த குடியாட்சி முறைக் கொள்கையினன். சாரோந்தாஸ் (Charondas), செலியூகஸ் (Zaleucus) என்பவர்கள் சட்டந் தொகுத்தனர். அவர்களுக்குக் கிடைத்த பெயர் டையோகிளிஸுக்கும் கிடைத்தது. ஒரே விதமான பெயர் குழப்பத்தை விளைவித்தது. பின்னால் வந்த எழுத்தாளர்கள் இப்பெயரை, மக்களாட்சியில் சீர்திருத்தம் கொண்டு வந்தவனுக் குரியது என்றார்கள். அவன் தன் அரசியல் விரோதியின் கோட்பாடு களிலிருந்த சில உயர்ந்த கருத்துக்களைத் தன் கருத்துக்களோடு சேர்த்துக் கொண்டான். நீதிபதிகளைத் தேர்ந்தெடுப்பதற்கு அத்தீ னியர்கள் ஏற்படுத்திய சீட்டு முறையை டையோக்கிளிஸ் சைரகூஸில் கொண்டு வந்தான். இதுவரையில் படைத் தலைவர்கள் இறைமையின் அதிகாரம் பெற்ற மக்கள் சபையின் தலைவர்களாக இருந்தார்கள். சபையை கலைத்துவிடக்கூடிய அதிகாரத்தையும் அவர்கள் பெற்றிருந் தார்கள். டையோக்கிளில் படைத் தலைவர்களிடமிருந்து இந்த உரிமையைப் பறித்துவிட்டான். சபைக்குப் புதிய தலைவர்களை நிய

மித்தான். அவர்களுக்குக் குறைந்த அதிகாரமே அளிக்கப்பட்டது. அதாவது, அவைத் தலைவர்கள் சபையில் ஒழுங்கற்ற முறையில் பேசுபவர்களுக்கு அபராதம் விதிக்கும் அதிகாரம் மட்டும் பெற்றிருந்தனர். அவ்வாறு பேசுவோரைத் தடுத்து நிறுத்தவோ, சபையைக் கலைக்கவோ அவர்களுக்கு அதிகாரமளிக்கப்படவில்லை.

### கார்த்தேஜி சண்டைக்குக் காரணம்

வளர்ச்சி பெற்ற மக்களாட்சிக் கொள்கை ஸிஸிலிய நகரில் மலர்ந்திருந்தது. இரண்டாமுறையாக கார்த்தேஜியர் படையெடுத்து வந்தனர். முன்பு அந்நகரின் மீட்பன் அப்போது அங்கில்லை. அவன் தொலை தூரத்திலிருந்தான். செலிநஸுக்கும், செஸ்ட்டாஸுக்கும் ஏற்பட்ட எல்லைத் தகராறுகள் முந்திய அத்தீனியப் படை எடுப்புக்குக் காரணமாக இருந்தன. அதே எல்லைத் தகராறு கார்த்தேஜியர்களின் இரண்டாம் படை எடுப்பிற்கும் காரணமாக இருந்தது. எனினும் இது அடிப்படைக் காரணமன்று. ஏதென்ஸ் தன் வணிகத்தை மேற்கு நாடுகள் வரையில் பரவச் செய்யக் கடைப்பிடித்த கொள்கை, சைரகூஸன் போரில் முடிந்தது. இப்போது கார்த்தேஜி ஸிஸிலியில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பியது. இந்த ஆதிக்கவெறியே அடிப்படைக் காரணமாகும். ஹெமிராவில் ஏற்பட்ட அவமானத்தை அவர்கள் மறக்கவில்லை. பழிக்குப்பழி வாங்க வேண்டுமென்ற உணர்ச்சி எழுபதாண்டுக் காலமாக நிலைத்து நின்றது. ஆகவே வஞ்சம் தீர்த்துக்கொள்ளவேண்டு மென்பது இரண்டாவது காரணமாகும்.

### கி.மு. 410. இரண்டாவது கார்த்தஜீனிய படை எடுப்பு. கி.மு. 409; செலிநஸ் முற்றுகை.

ஏதென்ஸின் பாதுகாப்பற்ற செகஸ்டா (Segesta) சச்சரவுக்குக் காரணமான இடங்களைக் கொடுத்துவிட்டது. அதைப் பெற்றுக் கொண்ட செலிநஸ் (Selinus) மேலும் சில இடங்களின் மீது உரிமை கொண்டாடியது. எலிமியேன் (Elymian) நகரம் கார்த்தேஜிக்கு மேல் முறையீடு செய்தது. கார்த்தேஜி ஓர் ஆலிகார்க் அரசியல் முறையைக் கொண்டநாடு. அந்நாட்டின் இரு நீதிபதிகளில் ஒருவன் ஹானிபால் (Hannibal) இவன் ஹிமேராப் (Himera) போர்க்களத்தில் கொல்லப்பட்ட ஹாமில்க்கார் (Hamilcar) என்பவனுடைய பேரன். எனவே, அவன் பழி தீர்த்துக்கொள்ள விரும்பினன். செகஸ்டாவுக்கு உதவியளித்து அதை கார்த்தஜீனிய ஆதிக்கத்தின் கீழ் கொண்டுவர வேண்டுமென்று அந்நாட்டு மேல் சபைக்கு அறிவுரை கூறி, அவர்களைத் தன் கருத்திற்கு இணங்கச் செய்தான். ஹானிபாலின் தலைமையில் ஒரு பெரும் படை புறப்பட்டுவிட்டது. அப்படை 60 போர்க்கப்பல்களும், 1500 வாகனங்களும், 100,000

காலாட் படையும், 4000 குதிரை வீரர்களையும் கொண்டது. கடற்படை தற்காப்பிற்காக அனுப்பப்பட்டது. எனவே அக்கப்பல்கள் மோத்தியா (Motya) என்ற இடத்தில், போயினிஸியன் ஸிஸிலிக்குப் பாதுகாப்பாகவும், ஆபத்து ஏற்பட்டால் அதைச் சமாளிக்கவும் நிறுத்திவைக்கப்பட்டன. படை லிலிபீயம் (Lilybaeum) என்ற இடத்தில் இறங்கி, செலிநஸ் நகரை நோக்கி முன்னேறியது. செலிநஸ் இதுவரையில் எவ்வித முற்றுகையையும் கண்டதில்லை. அந்நகரவாசிகள் பாதுகாப்பரண்களை நல்ல முறையில் வைத்திருக்கத் தவறி விட்டார்கள். அப்பொழுது அவர்கள் அப்போல்லோ தெய்வத்திற்கோ, ஒருவேளை, ஒலிம்பியன் ஜீயஸ் என்ற தெய்வத்திற்கோ ஒரு பெரிய கோவிலைக் கட்டும் வேலையில் முனைந்திருந்தார்கள். அக்கோயில் வேலை இன்னும் பூர்த்தியாகவில்லை. பெருந் தூண்கள் அங்கே இன்னும் நின்று கொண்டிருப்பதைக் காணலாம். பகைவன் படையைக் கண்டவுடனே கோவில் கட்டும் வேலையை விட்டுவிட்டு, பகைவரின் தாக்குதலை எதிர்க்கும் வேலையில் இறங்கினார்கள். நகரத்தைப் பாதுகாக்கும் அரண்களின் சுவர்களைப் பழுது பார்க்க அவர்களுக்கு நேரமில்லை. ஹானிபால் அப்பட்டினத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டான். பாதுகாப்பற்ற பழுதுள்ள சுவர் உடைத்தெறியப்பட்டது. பகைவன் நகரில் புகுந்துவிட்டான். ஒன்பது நாட்கள் வரையில் அப்பட்டினத்தைக் கைப்பற்ற அவனால் முடியவில்லை. ஏனென்றால் குறுகலான தெருக்களில் நகரவாசிகள் பகைவனை எதிர்த்துப் போரிட்டு உயிர்துறந்தார்கள். சிஸிலியிலுள்ள கிரேக்க நகரங்கள் உதவியளிக்கத் தாமதித்தனர். சைரகூஸ், டையோக்கிளிஸ் தலைமையில் தாமதித்து உதவியனுப்பிற்று. அவனும் தாமதித்து வந்தான். அவன் வருவதற்குள் அப்பட்டினம் மண்ணோடு மண்ணாகி மறைந்தது. புறச்சாதியான் கைப்பற்றிய கிரேக்க நகரங்களில் செலிநஸ் நகரம் முதல் நகரமாகும். நகரவாசிகள் இரக்கமின்றிக் கொலையுண்டார்கள். கோயில்களில் அடைக்கலம் புகுந்த சில பெண்களும் குழந்தைகளும் உயிருடன் விடப்பட்டார்கள். அவர்களும் அடிமைகளாக்கப்பட்டு அங்கிருந்து அழைத்துச் செல்லப்பட்டனர். தப்பி யோடியவர்கள் அக்ராகாஸ் (Acragas) நகரில் தஞ்சம் புகுந்தார்கள். செலிநஸ் பட்டினம் 250 ஆண்டு காலம் நிலைத்துநின்று மறைந்துவிட்டது.

### பழிவாங்கும் ஹானிபால்

கார்த்தேஜி அரசாங்கம் கொடுத்த வேலையை ஹானிபால் செய்து முடித்தான். அவன் செய்யவேண்டிய முதன்மையான வேலை ஒன்றுண்டு. அவ் வேலையை யாரும் அவனைச் செய்யும்படி கட்டளையிடவில்லை. அவ்வேலையை அவன் தானே தேர்ந்தெடுத்துக்கொண்டான். கார்த்தேஜியின் படைத் தலைவன் என்ற முறையில்

செலிநஸ் நகரை அவன் அழித்தான். ஹாமில்க்காரின் பேரன் என்ற முறையில், அவன் ஹிமேராவைப் பழிவாங்கி யாகவேண்டும். செலிநஸ் நகரம் மண்ணோடு மண்ணாய் மறைந்தது. அந் நகருக்கு அவ்விதக் கொடிய தண்டனையை ஹானிபாலின் போர் வீரர்கள் கொடுத்தார்களென்பதற்குப் பதிலாக, பூகம்பத்தின் பலனால் ஏற்பட்டதென்று சொல்வது பொருத்தமாகும்.

**ஹிமேராவின் முற்றுகை. முற்றுகையின் மூன்றாம் நாள்.**

ஹானிபால் தன் தரைப்படையைக் கொண்டு ஹிமேராவைப் பிடிக்கத் திட்டமிட்டான். ஹாமில்க்கார் அப் பட்டினத்தை முற்றுகை யிட்டபோது அவனுடன் கார்த்தேஜியின் கடற்படையுமிருந்தது. ஹானிபால் கடற்படையின் உதவி யில்லாமல் தரைப்படையோடு மட்டும் அந் நகரைத்தாக்கினான். சிஸிலியிலுள்ள கிரேக்கர்கள் இப்போது விழிப்படைந்தார்கள். தங்களுடைய முதன்மையானபட்டி னங்களில் ஒன்று மறைந்ததை அறிந்துகொண்டார்கள். ஸ்பார்ட் டாவிற்கு அனுப்பிய கடற்படை திரும்பி வந்துவிட்டது. டையோ கிளிஸ் தலைமையில் 5000 போர் வீரர்களை ஹிமேராவின் விடுதலைக்காக அனுப்பினார்கள். அவர்களில் 3000 பேர் சைரகூஸிய போர் வீரர்கள். ஆபத்திலிருந்து காப்பாற்றிக்கொள்ள அந் நகருக்குப் போதுமான நேரமிருந்தது. முற்றுகை யிட்டவர்கள் சுரங்கங்களைச் செய்து சுவரின் ஒரு பகுதியை உடைத்தார்கள். ஆனால் நகர வாசிகள் கார்த்தேஜி படையுடன் வீரத்தோடு போர் புரிந்து அவர் களைப் பின்வாங்கும்படி செய்தார்கள். அதே சமயத்தில் 25 சைரகூஸ் கப்பல்கள் ஸ்பார்ட்டாவிலிருந்து அங்குவந்து சேர்ந்தன. அதைக் கண்டு ஹானிபால் மலைத்துப்போனான். உடனே அவன் ஒரு தந்திரத்தை மேற்கொண்டான். அவன் ஹிமேராவை விட்டு, சைரக்கூஸைத் தாக்கப் புறப்பட்டு விட்டதாகப் பொய் வதந்தியைக் கிளப்பிவிட்டான். அதை டையோகிளிஸ் நம்பினான். நகரத்திலுள்ள வர்களில் பாதிக்கு மேற்பட்டவர்களைக் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு சைரக்கூஸுக்குச் சென்றான். அவர்களை மெஸ்ஸானாவில் இறக்கி விட்டு பாக்கியுள்ளவர்களை அழைத்துப்போக ஹிமேராவிற்குத் திரும்பிவந்தான். அவன் வருவதற்குள் ஹானிபால் முற்றுகையைப் பலப்படுத்தினான். டையோகிளிஸ் கப்பல்கள் துறைமுகத்தை யடைவ தற்கு முன், ஹானிபாலுடைய ஸ்பானியப் படை நகருக்குள் புகுந்து விட்டது. ஹாமில்க்கார் கொலையுண்ட இடத்தில் 3000 பேர் சித்திர வதைசெய்து கொல்லப்பட்டனர். ஹிமேரா நகரமதில் அழிந்து, அந்நகர் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது.

**பானோர்மஸில் புதிய நாணயம்; ஹிமேரா நாணயத்தில் மாறுதல்.**

ஹானிபால் தன்னுடைய நாட்டிற்கும் நாட்டுத் தெய்வங் களுக்கும் செய்யவேண்டிய பணியைச்செய்துவிட்டு ஆப்ரிக்காவிற்குத்

8

திரும்பினுன். இந்த ஆண்டில் கார்த்தேஜி, ஸிஸிலியில் அடைந்த வெற்றியையும் புதிய கொள்கையையும், செகெஸ்ட்டா, பானேர்மஸ் நகரங்களின் நாணயங்கள் வெளிப்படுத்துகின்றன. செகெஸ்ட்டா கார்த்தஜீனிய நகரமாகிவிட்டபடியால், அது நாணயங்கள் வெளி யிடும் உரிமையை இழந்தது. போயினீஷிய நாடுகளின் மீது தன் அதிகாரத்தை வலுப்படுத்தக் கார்த்தேஜி உறுதி கொண்டது. இந்த நாடுகள் இது வரையில் கிரேக்கப் பண்பாடுள்ளதும் கிரேக்க எழுத்துக்களுள்ளதுமான நாணயங்களை வழங்கி வந்ததால், கிரேக்கர் களுக்குக் கட்டுப்பட்டு நடந்துவந்தது. இப்போது கிரேக்கப் பண் பாடுள்ள பழைய நாணயங்கள் கைவிடப்பட்டு அதைப் போன்ற போயினீஸிய நாணயங்கள் வெளியிடபட்டன. கிரேக்கச் சொற்கள் இந்தப்புதிய நாணயத்தில் எழுதப்பட்டுள்ளன. இந் நாணயத்தை, படையெடுப்பிற்குச் சற்று முந்தியே வெளியிட்டார்கள். இது கிரேக்கர்களுக்கு எதிராக எழுந்த ஓர் இயக்கத்தைக் குறிப்பிடுகிறது. நாணயத்திலேற்பட்ட சீர்திருத்தம் அழிந்து போன ஹிமேராவில் முதல் முதலில் ஏற்பட்டன. அந்நாடு சேவல் உருவம் பொறித்த நாணயத்திற்குப்பதிலாக, கடற்குதிரை உருவமுள்ள நாணயத்தை, பானேர்மஸ் நகர நாணயத்தைப் பின்பற்றி வெளியிட்டது. இதைப்பார்க்கின்ற நாம், அபாயம் வருவதையறிந்த ஹிமேரா, அதை விலக்குவதற்காக போயினிஷிய நட்பை நாடிற்றென்று நாம் யூகிக்க முடியுமா ?

**ஹேர்மோகிராட்ஸ் திரும்பிவருதல், கி.மு. 408. போயினீஷிய பட்டினங்களுக்கெதிரான போர். செலிநஸை மறு முறை கைப்பற்றல்.**

சைரகூஸ் செலிநஸ் நாட்டிற்கு உதவிபுரிய முயன்றது. ஹிமேராவிற்கு அது சிறிது உதவிபுரிந்தது. அதற்குப்பின் கார்த் தேஜியின் ஆக்ரமிப்புக் கொள்கையை எதிர்ப்பதற்கு முன் வரவில்லை. இவர்கள் செய்யாமல் விட்டுவிட்ட வேலையை எடுத்துச்செய்ய ஹெர்மோகிராட்ஸ் காத்திருந்தான். நாடுகடத்தப்பட்டிருந்த அவன், பர்னபாஸஸ் என்ற பாரசீக ஸாட்டராப் அளித்த பொருளுடன் சைரகூஸிற்குத் திரும்பிவந்தான். சைரகூஸ் அரசாங்கம், அவன் மேல் விதித்த தண்டனையை ரத்துசெய்யவும், அவனை நாட் டிற்குள் அனுமதிக்கவும் மறுத்துவிட்டது. ஏனெனில் அந்நாடு, அவனை, குடியாட்சி அரசாங்கத்தின் பகைவனென்று கருதிற்று. கிரேக்கர்களின் நலனுக்காகச் சிறந்த சேவை செய்வதன் மூலம் அத் தண்டனை தானே நீங்கிவிடுமென்பதை உணர்ந்தான். அவன் மூன்றடுக்குத் துடுப்புகளையுடைய ஐந்து கப்பல்களைக் கட்டினுன். ஆயிரம் பேர்கொண்ட ஒரு கூலிப்படையைத் தயார் செய்தான். ஹிமேரிய நாட்டு அகதிகளில் 1000 போர் வீரர்கள் அவனுடன்

சேர்ந்துகொண்டார்கள். செலிநஸ் நகரமிருந்த இடத்தைத்தன் தலைமைக்காரியாலயமாக்கிக் கொண்டான். அவன் போயினீஷியர்களுக்கு எதிராக ஓர் புனித யுத்தம் செய்யத் தீர்மானித்துவிட்டான். நாட்டின் அரணை மத்தியிலிருந்த குன்றின் மேல் அமைத்து வலுப்படுத்தினன். அவனது தீரச்செயல் முன்னேற்றமடைந்தது. அவனுடைய படை 6000 மாகப் பெருகிற்று. மோட்டியா, பானோர்மஸ் என்ற நாடுகளின் நிலங்களை அழிக்க ஆரம்பித்தான். அவன் செய்கையைத் தடுக்கவந்த போயினீஷியர்களுடைய படையைப் புறமுதுகிட்டு வோடச்செய்தான். சோலஸ், புதிய காத்தஜீனியன் செகெஸ்ட்டா முதலிய நாடுகளிலும் நாசவேலையை ஆரம்பித்தான். பகைவன் இழைத்த தீமையைக்காட்டிலும், இவன் பகைவனுக்குக் கொடுத்த தொல்லை வியக்கத்தக்கது. டோரியஸ் காலத்திலிருந்து. இதுவரையில் செய்திராத செயல்களை இவன் செய்தான். போயினீஷியர்களுடைய ஸிஸிலியின் எல்லைகளுக்குள் புகுந்தான். அவனது செயல் தலைவர் பலருக்கு முன் மாதிரியாக விளங்கியது.

### ஹிமேராவில் ஹெர்மோகிரேட்ஸ், கி.மு. 407. சைரகூஸ் எலும்புகளை அனுப்புதல்; அவன் சைரகூஸில் கொலையுண்டான்.

தன் நாட்டின் நட்பைப் மீண்டும் பெற ஹெர்மோகிராட்ஸ் உறுதிகொண்டான். டையோகிளிஸூம், அவனது அரசியல் பகைவர்களும் நகரில் தொடர்ந்து செல்வாக்குள்ளவர்களாக இருந்தார்கள். அவன் ஆற்றிய அருஞ்செயல் அவர்களுடைய மனத்தை மாற்றவில்லை. தன் நாட்டு மக்களின் பரிவைப்பெற முயன்றான். அதற்காக அவன் ஓர் திட்டம் வகுத்தான். அவன் ஹிமேராவுக்குச் சென்றான். டையோகிளிஸினால் விட்டுச்செல்லப்பட்ட இறந்த போர் வீரர்களின் எலும்புகளைச்சேகரித்து அவற்றை ஓர் வாகனத்தில் வைத்து தன் நகர மக்களுக்கனுப்பினன். ஆனால் அவற்றோடு தானும் நாட்டுக்குள் பிரவேசிக்காமல் நகரின் எல்லையிலிருந்தான். அவன் தன் நாட்டு மக்களின் சமய உணர்ச்சியைத் தனக்குச் சாதமாகவும், தன் பகைவர்களுக்கு எதிராகவும் திருப்ப விரும்பினன். அவன் அனுப்பிய எலும்புகளை ஏற்றுக்கொண்ட மக்கள், டையோகிளிஸை நாடு கடத்தினார்கள். ஆனால் அவர்கள் ஹெர்மோகிராட்ஸை நாட்டிற்குத்திரும்ப அழைத்துக்கொள்ளவில்லை. விரும்பி அழைக்காதவர்களைப் படைகொண்டு வெல்ல நினைத்தான். நகரிலிருந்த அவனுடைய ஆதரவாளர்கள் படையுடன் நகருக்குள் புகுந்துவிட அவனைத் தூண்டினார்கள். அவன் படை, அச்சராடைனுவாயில் வரையில் வர அனுமதிக்கப்பட்டது. அவன் தன் மற்றப் படைகள் வரும்வரையில் அங்கே காத்திருந்தான். அவர்கள் காலம்கடந்து வந்தனர். ஹெர்மோகிராட்ஸ் நகருக்குள் இருப்பதை நகர மக்களறிந்தார்கள். அவர்கள் சந்தைவெளியை நோக்கி ஓடினார்கள். அவனுடைய சிறிய

படை முறியடிக்கப்பட்டது. அவனும் கொலையுண்டான். சைரகூஸியர்கள் உணர்ச்சிக்கு இடமளிக்கமாட்டார்கள். கொடுங்கோன்மைக்கு மிகவும் அஞ்சுவர். அவர்கள் அவனைப் புகழ்வதற்குப் பதிலாக அவனைப்பற்றி மிகவும் பயந்திருந்தார்கள். கொடுங்கோன்மை அவர்களை நோக்கி வந்துகொண்டிருந்தது. ஆனால் அது அவன் மூலமாக வரவில்லை. எதிர் காலத்தில் தங்களுக்கு வரப்போகிற தங்களுடைய அதிகாரி, ஹெர்மோகிராட்ஸின் நெருங்கிய நண்பனும், அன்று காயமுற்று உயிர்விடும் நிலையில் அங்கே விட்டுச் செல்லப்பட்டவனுமாவானென்பதை அவர்களறியவில்லை.

## 2. கார்த்தேஜினியர் அக்ரகாஸை வெல்லுதல்

### தெர்மேயில் கார்த்தேஜினியரின் குடியேற்றம், கி.மு. 407. (தெர்மினி)

ஹெர்மோகிராட்ஸ் மேற்கு ஸிஸிலியில் நடத்திய போர், கார்த்தேஜினியர்களுக்குக் கோபத்தை விளைவித்தது. இதன் காரணமாக கார்த்தேஜிலிருந்து சைரகூஸுக்கும், சைரகூஸிலிருந்து கார்த்தேஜிக்கும், அரசியல் தூதுவர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். இவர்கள் இப்போது கடைப்பிடித்த அரசியல் உறவு உள்ளீடற்று இருந்தது. ஸிஸிலியிலுள்ள நகரங்கள் யாவையும், தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டுவருவது ஆப்பிரிக்காவிலுள்ள குடியாட்சியின் நோக்கமாயிருந்தது. கார்த்தேஜி மற்றொரு படை எடுப்புக்குத் தேவையான ஆயத்தங்கள் செய்ய ஆரம்பித்தன. அப்படையெடுப்பு செலிநஸ் படை எடுப்பைவிடப் பெரியது. ஸிஸிலியில் ஒரு புதியகுடியேற்ற நாட்டை ஏற்படுத்துவதும் அதன் நோக்கமாக இருந்தது. ஹெர்மோகிராட்ஸ் உயிருடன் இருந்திருப்பானாகில் ஹிமேரா ஓரளவாவது தன் பழைய நிலையையடைந்திருக்கும். அதை அழித்தவர்களாகிய கார்த்தேஜினியர் மறைந்த பட்டினத்திற்கு அண்மையில் ஒரு புதிய நகரைக்கட்டினர். இப்புதிய பட்டினம் போயினீசிய பண்பாடுடைய நகரமன்று. கிரேக்க அகதிகள் இப் புதிய நகரில் வாழ்வதற்கு அனுமதிக்கப்பட்டார்கள். இவர்கள் விரைவில் இதை ஒரு கிரேக்க பட்டினமாக மாற்றிவிட்டார்கள். தெர்மே (Thermae) ஹிமேராவின் நினைவுச் சின்னமாக மாறியது. ஆகையால் இப் புதிய நகர மக்கள் தெர்மைட்டுகள் அல்லது ஹிமேரேயர்கள் என்று அழைக்கப்பட்டனர்.

### அக்ரகாஸின் ஆயத்தங்கள்

அக்ரகாஸ் என்றழைக்கப்படுகிற நகரம், கார்த்தேஜி நகரத்துக்கெதிரானது. கிரேக்கர்களுடைய ஸிஸிலியைக் கைப்பற்ற முயன்ற கார்த்தேஜினியர்களுடைய தாக்குதலுக்குள்ளான நகரங்களில்,

இதுவே அதற்கு முதற்பலியானது. தேரோன் (Theron) காலத்திலிருந்து இந்நகரம் ஸிஸிலியின் உள்நாட்டு சச்சரவுகளில் ஈடுபடாமல் தனித்து நின்றது. இப்போது அந்நகரம் மிகவும் செழித்தோங்கி வளர்ந்தது. சமாதானத்தோடு கூடிய ஆடம்பர வாழ்க்கைப் பிரியர்களாகிய அவர்கள், போரினால் விளையும் இடுக்கண்களைக் கண்டஞ்சினார்களென்ற போதிலும், இனத்தின் பெயரைக் கெடுத்துவிட விரும்பவில்லை. தற்காப்பிற்கென ஏற்பாடுகளைச் செய்வதிலும், தங்களுடைய சிற்றின்ப வாழ்க்கையை மாற்றிக்கொள்



The Siege of ACRAGAS, B.C. 406.

வதிலும் அவர்கள் தயங்கியதில்லை. பல சட்டங்கள் கொண்டுவரப்பட்டன. மதில் பாதுகாப்பறையிலிருந்த ஒவ்வொருவனும் ஒரு பாய், இரண்டு தலையணை, ஒரு மெத்தை இவைகளுக்குமேல் அதிகம் வைத்திருக்கக்கூடாதெனச் சட்டம் விதித்தனர். ஸ்பார்ட்டா நகரம் பின்பற்றிவந்த பலவகையான ஒழுங்குமுறைகளைப் பின்பற்ற ஆரம்பித்தனர். அப்பொழுது ஜிலாவிலிருந்த (gela) டெக்ஸிபஸ் (Dexippus) என்ற ஸ்பார்ட்டனை வரவழைத்து தங்களுடைய நகரத்தின் தற்காப்பிற்கானவற்றைச் செய்யும்படி சொன்னார்கள்,

பணம் கொடுத்துப் போர் வீரர்களைப் படையில் சேர்த்தனர். மேலும், சைரகூஸ் போன்ற மற்ற கிரேக்க நகரங்களின் ஆதரவையும் தேடினர்கள். அக்ரகாஸ் நகருக்கு ஏற்பட்ட அபாயம், தங்களுக் கேற்பட்ட அபாயமெனக் கருதுகிற ஸிஸிலியிலுள்ள கிரேக்க நாடுகள் யாவும் தமக்கு உதவிபுரியுமென எண்ணினர். அக்ரகாஸ் நகரும் நெருக்கடிக்குத் தக்கவாறு விழிப்புற்றது. தன் பழைய சோம்பல், யாருடனும் சேராமல் தனித்திருக்கும் தன்மை, முதலியவற்றை நீக்கி நடுநிலைமை வகிக்கவேண்டுமென்ற கார்த்தேஜினியர்களுடைய கட்டளையையும் மறுத்துவிட்டது. தன் சொந்த இனத்தின் மதிப்பைப் பாதுகாத்தது, டோரியர்களுக்கும் ஐயோனியர்களுக்கு முள்ள போராட்டத்தில் இது தனித்திருக்கக்கூடும். ஆனல், போயினீசியர் கிரேக்கர் எல்லோரையும் அச்சுறுத்தும் இச் சமயத்தில் அது தனித்திருக்க முடியவில்லை.

### அக்ரகாஸ் முற்றுகை; மேட்டுப் பாதை; கொள்ளை நோய்; ஹானிபால் மரணம்

கார்த்தேஜி ஒரு பெரும்படையை ஹானிபாலின் தலைமையில் அனுப்பியது. ஹானிபால் வயது முதிர்ந்த படைத்தலைவனாகையால் அவனுக்குத் துணையாக, அவனுடைய உறவினன் ஹிமில்கோ என்பவனை அவனுடன் அனுப்பினர்கள். அவர்கள் தங்கள் படை வீட்டை ஹைப்சாஸ் ஆற்றின் வலக்கரையி லமைத்தார்கள். அது நகரின் தென் மேற்கிலிருந்தது. கீழண்டைக்குன்றுக்கருகில் ஒரு சிறிய படைவீட்டை ஆற்றுக்கப்பால் அமைத்தனர். இங்கு நிறுத்தப் பட்ட போர் வீரர்கள், அக்ரகாஸ் நகரவாசிகளுக்கு மற்றக் கிரேக்க நகரங்களிலிருந்துவரும் படை உதவியைத்தடுக்கப் பயன்படுவர். மேற்கிலுள்ள முதன்மையான கோட்டைவாயிலைக் குறியாகக்கொண்டு தாக்கத் திட்டமிட்டனர். இங்கே நிலம் பள்ள மாக இருந்தபோதிலும், முற்றுகையிடுபவர்களுக்குப் பாதக மாக இருந்தது. ஆகையால் ஹானிபால் ஒரு மேட்டுப்பாதையை அமைக்கத் திட்டமிட்டான். அருகிலிருந்த நிக்ரோபாலிஸியர் கல்லறையிலுள்ள சவமேடைக் கற்களைக்கொண்டு பாதையை உயர்த்தினர்கள். தேரானுடைய சவக்குழிக்கல்லைப் பெயர்த்தெடுக்க கடப்பாரையை அதன் மீது குத்தியபோது இடிமுழக்கம் கேட்டது; பூமியதிர்ந்தது. உடனே அங்கிருந்த சமயகுருக்கள் அந்தக் கல்லறையைத் தொடக்கூடாதென்று எச்சரித்தார்கள். அப்பொழுது கார்த்தேஜினியப் படையில் கொள்ளை நோய் ஏற்பட்டுப் பலர் இறந் தனர். அந்நோய்க்கு முதல் பலியானவன் ஹானிபால். அந்நோய் கடவுளர் சாபத்தால் வந்ததென்றும், அக்கடவுளருக்குப் பலி கொடுத்து, அவர்கள் கோபத்தைத் தணிக்க வேண்டுமென்றும் சொல்லப்பட்டது. உடனே ஒரு குழியை வெட்டி, கட்டைகளை

அடுக்கி,தீமூட்டினார்கள். கொழுந்துவிட்டெரியும் தீயில் ஒரு சிறுவனை வெட்டி வீசினார்கள். இவ்வாறு ஹிமில்கோ, மோலாக் தெய்வத்திற்கு நரபலி இட்டான். மேட்டுபாதை கட்டிமுடிந்தது. மேற்கொண்டு அவர்கள் கல்லறைகளுக்குத் தீங்கிழைப்பதும் நின்றுவிட்டது.

**உதவிப்படையின் வருகை; அக்ரகானியர் படைத்தலைவர்களைக்கொல்லுதல் ; கூலிப்படையும், நேச நாடுகளின் படைகளும் அக்ரகாஸை அனாதையாகவிட்டுச் செல்லல்**

அக்ராகாஸின் உதவிக்காக 30,000 காலாட் படையும், 5000 குதிரை வீரர்களும், சைரகூஸிலிருந்தும், ஜிலாவிலிருந்தும், காமரீனாவிலிருந்தும் வந்துகொண்டிருந்தன. அவர்கள் பட்டினத்தை நெருங்கியதும், அவர்களை எதிர்ப்பதற்காகக் குன்றின் கிழக்கு பக்கத்தில் நிறுத்தப்பட்ட கார்த்தேஜினியப் படையைக் கண்டார்கள், இருவருக்கும் போர் நடந்தது. வெற்றியடைந்த கிரேக்கர்கள் அந்தச் சிறிய படையைச் சுற்றிவளைத்துக்கொண்டார்கள். அவர்களில் சிலர் போர்க்களத்திலிருந்து கார்த்தேஜினியப் பெரும் படையை நோக்கி ஓடினார்கள். அவர்களுடைய பாதை, நகரத்தின் தென் சுவரோரமாகச்சென்றது. அவர்களைப் பிடியுங்கள், வெட்டுங்கள் என்று கிரேக்கர் கர்ஜித்தனர். ஆனால் அக்ரகானியப் படைத்தலைவர்கள் அவர்களை வெட்ட மறுத்துவிட்டார்கள். நல்ல சந்தர்ப்பம் கை நழுவிப்போய்விட்டது. நகரவாசிகளுடைய உணர்ச்சியைப் படைத்தலைவர்களால் கட்டுப்படுத்த முடியவில்லை. ஆகவே அவர்கள் நகருக்கு வெளியே வெற்றிபெற்ற நேச நாடுகளின் படையை சந்திக்கப் புறப்பட்டார்கள். நகரின் வெளியே நகர மக்களின் மாபெருங் கூட்டம் நடந்தது. அங்கு, தம் கடமையினின்று தவறியதாகப் படைத்தலைவர்கள் குற்றம் சாட்டப்பட்டனர். கோபமடைந்த மக்கள் கற்களைக்கொண்டு தாக்கி, நான்கு படைத்தலைவர்களைக் கொன்றுவிட்டனர். இப்போது நகரைப் பாதுகாக்கும் பணி இரண்டாகப் பிரிக்கப்பட்டது. டெக்ஸிபஸ் நகரினுள்ளிருந்தும், டாப்நேயஸ் (Daphnaeus) நகரின் வெளியிலிருந்தும் பாதுகாப்பதென்று முடிவு செய்தார்கள். எதிரியினுடைய படை மிகப் பலமுள்ளதாக இருந்த போதிலும், அக்ரகாஸ் நகர வாசிகளுக்கே நன்மையேற்பட்டதாகத் தோன்றியது. பூயூனிக் படை (Punic) கொள்ளை நோயால் குறைந்துவிட்டது. எஞ்சியவர்களுக்கும் போதுமான உணவு கிடைக்கவில்லை. உணவு பற்றுக்குறை, கலகத்தையும் குழப்பத்தையும் விளைவித்தது. ஹிமில்கோ முற்றுகையை விட்டுவிட்டுச் செல்பவன்போல் தோன்றியது. ஹிமில்கோ சைரகூஸிலிருந்து ஆர்காசுக்கு உணவு கப்பல்கள் வருகிறதென்று கேள்விப்பட்டான்; கார்த்தேஜினிய கப்பல்கள் பானோர்மஸ், மோத்தியா என்ற இடங்களில் நின்றுகொண்

டிருந்தன. அவற்றிற்கு ஹிமில்கோ இச்செய்தியை அறிவித்தான். அங்குள்ள கடற்படைத்தலைவர்கள் 40 மூன்றடுக்குக் கப்பல்களை யனுப்பி உணவுக் கப்பல்களை வழியில் தடுத்துவிட்டார்கள். இச் செயல் தன்னுடன் சேர்ந்தவர்களைக் காப்பாற்றியதோடு அங்கிருந்த நிலைமையையும் மாற்றிவிட்டது. முற்றுகைக்குட்பட்ட நகரத்தில் பஞ்ச மேற்பட்டது. உணவு குறைய ஆரம்பித்தவுடன் அக்ரகாஸ் நகரவாசிகள் தங்களுடைய குறைபாட்டைக் காட்டிவிட்டார்கள். உணவு பற்றுக்குறை காரணமாக கூலிப்படை போர் வீரர்கள் படையிலிருந்து பணி புரிய விரும்பவில்லை. காம்பானியர்களுக்கு (Companiars) அக்ரகாஸுக்குப் பணிபுரிவதைவிட்டு, கார்த்தேஜிக் குப் பணிபுரியுமாறுத் தூண்டுதலேற்பட்டது. வெளியுலகிலுள்ள ஸ்பார்டன்சைப்போல, டெக்ஸிப்பஸ் ஹிமில்கோவிடமிருந்து 15 தாலந்து லஞ்சம் கிடைத்ததென்றும், அவன் இத்தாலியர்கள், ஸிஸிலியர்கள் முதலியோரை அக்ரகாஸுக்கு உதவி செய்வதைக் கைவிடும்படி தூண்டியதாகவும் கூறுவர். அக்ரகாஸைக் கைவிட்ட தற்கு டெக்ஸிப்பஸ் மட்டும் பொறுப்பாளியல்லன். அதற்கு வேறு காரணங்களுமிருந்தன.

அக்கரகாஸ் மக்களின் ஓட்டம், கி.மு. 406-5.

அந்நிய உதவியினால் எட்டு மாதகாலம் பாதுகாக்கப்பட்ட அக்கரகாஸ் நகரம் இப்போது அவர்களால் கைவிடப்பட்டது; இவர்கள் சிறந்த போர் வீரர்களல்லர். தன் நம்பிக்கை இழந்தனர். உயிரைக் காப்பாற்றிக்கொள்ளவும், தங்கள் வீடுவாசல் தெய்வங்கள் முதலியவற்றைக் கைவிட்டுவிடவும் முடிவு செய்தனர், இரவோடு இரவாக ஆண்களும், பெண்களும், குழந்தைகளோடு பகைவன் எதிர்ப்பின்றி ஜிலாவை நோக்கிச்சென்றனர். புறச் சாதியார் கொள்ளையடிப்பதற்காக, தங்கள் வாழ்க்கையை மகிழச்செய்த பொருள்களை விட்டுச்செல்லும்படி நேர்ந்துவிட்டது.[1] கிழவர்களும் நோயாளிகளும் நீண்ட தூரப் பிரயாணத்தை விரும்பவில்லை. அவர்கள் நகரில் பகைவர் கைகளால் இறக்கத் தங்கிவிட்டார்கள். வெளியூரில் உயிர்விட விரும்பாதவர்களும் அந்நகரில் தங்கிவிட்டார்கள். பொழுது விடிந்தது. ஹிமில்கோவின் படை பட்டினத்திற்குள் புகுந்தது. அதை நாசமாக்கும் வேலையில் ஈடுபட்டார்கள், கண்ணில் பட்டவர்களைக் கொன்றார்கள் கோயில்களைக் கொள்ளையடித்துக் கொளுத்தினார்கள். ஐரோப்பாவிலேயே மிகப்பெரிய ஒலிம்பியன் ஸியஸின் ஆலயத்தை அவர்கள் கட்டிமுடிக்கவில்லை. அரை குறை வேலையோடு விட்டுச்சென்றனர். அக்கோயிலையும் கார்த்தே ஜினியர்கள் இடித்துத்தள்ளினார்கள். ஆனால் அக்ரகாஸை, செலிநஸ் நகரை அழித்ததைப்போல் அழித்துவிடவில்லை. அது ஒரு

[1] பிலிஸ்ட்டஸ் எழுதிய டியோடோரஸ்.

கார்த்தேஜினிய நகரமாக, கார்த்தேஜினிய ஸிஸிலியில் விளங்கு தற்காகப் பாழாக்காமல் விட்டுவிட்டார்கள். அவ்விடத்தை ஹிமில்கோ தன் குளிர்கால விடுதியாக மாற்றிக்கொண்டான். தளிர் விடும் காலத்தில் ஜிலாவைத் தாக்குவதே அவன் அடுத்த நோக்கமாக இருந்தது.

## 3. டயோனிசியஸ் எழுச்சி

டயோனிசியஸ் முதன் முதலில் முன் வந்து பேசிய கடுஞ்சொல்; வரலாற்று விரிவுரையாளனுகிய பிலிஸ்ட்டஸ்; சர்வாதிகாரியின் மேம்பாடு; டயோனிசியஸ் படைத் தலைவன்.

மிகவும் இககட்டான சந்தர்ப்பத்தில் கைவிட்டுச் சென்ற சைரகூஸ் நாட்டின் படைத் தலைவர்கள், அக்கரகாஸுக்கு ஏற்பட்ட இடுக்கணுக்குப் பொறுப்பாளியாவார்கள். அக்கரகாஸ் நகர வாசிகளும் இக்குற்றத்திற்குப் பொறுப்பாவார்கள். ஸிஸிலிக்கு ஏற்பட்டுள்ள இந்த நெருக்கடியிலிருந்து அதைப் பாதுகாக்கக்கூடிய திறமை தங்கள் நாட்டு படைத்தலைவர்களுக்கில்லை என்பதை சைரகூஸியர்கள் உணர்ந்தார்கள். இந்தச் சூழ்நிலையில் தன் நிராசையைப் பூர்த்தி செய்து கொள்ளக்கூடிய ஒரு மனிதனிருந்தான். அவன்தான் டயோனிசியஸ். அவன் பிறப்பைப்பற்றித் திட்டமாக யாரும் அறியார். அவன் அரசாங்க காரியாலயத்தில் ஓர் எழுத்தாளனுக இருந்தான். அவன் ஹெர்மோகிராட்ஸின் கூட்டாளி. ஹெர்மோகிராட்ஸ் கொலை செய்யப்பட்டு வீழ்ந்த இடத்தில் இவன் படுகாயப்பட்டுக் கிடந்தான். இவன் துன்புற்றுச் சிறிது சிறிதாக உயிர்துறக்குமாறு கோபமுற்ற மக்களால் விட்டுச் செல்லப்பட்டவன். சமீபத்தில் அக்கரகாஸில் நடந்த சம்பவத்தில் இவனுமிருந்தான். இவனுடைய வீரத்தைக் கண்டு அங்கிருந்தவர்களில் பலர் இவனைப் புகழ்ந்தார்கள். இவன் தன் நாட்டில் நிலவிய மக்களாட்சியின் திறமையின்மையைக் கண்டான். இந்நெருக்கடியில் இவ்வரசைக் கவிழ்த்துவிட முடியுமென நினைத்தான். அதைக் கவிழ்க்க அவன் திட்டமிட்டான். நாட்டில் ஏற்பட்டுள்ள நிலைமையை ஆராய்ந்துப் பார்க்க ஒரு சபை கூடிற்று. டயோனியயஸ் எழுந்தான். ஆவேசத்தோடு சைரகூஸ் நகரத்தின் படைத் தலைவர்களுடைய துரோகச் செயல்களை எடுத்துக் கூறினான். தன் சொற்பொழிவைக் கேட்பவர்கள் ஆத்திரமடையக் கூடிய முறையில் அவன் பேசினன். மக்கள் எழும்பித் துரோகிகளை விசாரணையின்றிக் கொல்லுமாறு கூறினன். அவனது கடுஞ்சொற்கள் அவர்களுடைய சபையின் சட்டத்திற்கு மாருனவை. அவனை மேற்கொண்டு பேசவேண்டாமென்று சொல்லச் சபைத் தலைவர்களுக்கு அதிகாரமில்லை. அவனுக்கு அபராதம் மட்டும் விதித்தனர் அவனுக்குச் செல்வம் படைத்த நண்பனெருவன் இருந்தான். அவன் அந்த அப

ராதத் தொகையைக் கட்டினன். அதோடு அவனுக்கு விதிக்கும் அபராதங்களைக் கட்டுவதற்கு தான் தயாராக இருப்பதால், அவன் சபையில் பேசுவதை மட்டும் நிறுத்திவிடக்கூடாதென்றும் வேண்டிக் கொண்டான். படைத் தலைவர்கள் பதவியிலிருந்து விலக்கப்பட்டார் கள். புதிய குழுவொன்று ஏற்படுத்தப்பட்டது. அக்குழுவில் டயோனிசியஸும் ஒருவனாக இருந்தான். அவன் சர்வாதிகாரியாவ தற்கு முதற்படி இதுவே. அவன் அந்தப்படியைத் தாண்டிவிட்டான். நாடு கடத்தப்பட்ட ஹெர்மோகிராட்ஸின் நண்பர்களை அவன் திரும்பி வரவழைக்கவேண்டும். அவர்கள் அவனுடைய திட்டங்களை நிறைவேற்ற உதவியாக இருப்பார்களென நம்பினன். அவர்களோடு நெருங்கிப் பழகுவதால் தன்னுடைய காரியம் கெட்டுவிடுமென நினைத்து அவர்களைச் சற்றுத் தூரத்தில் வைத்திருந்தான். மக்கள் அவன்மீது நம்பிக்கை கொண்டார்கள். அவனை முதன்மையான படைத்தலைவனாக்கி இறைமையின் அதிகாரங்களை அவனுக்கு அளித் தார்கள் ஜிலோன், ஹிரோ (Gelon & Hiero) என்பவர்கள் அனு பவித்து வந்த அதிகாரங்கள் அவனுக்கு அளிக்கப்பட்டன. இவ்வதி காரங்கள் யாவும் சட்டத்திற்குட்பட்ட அதிகாரங்களாகும். அப்பதவி யும் சட்டத்தினல் அங்கீகரிக்கப்பட்ட பதவியாகும். இப்பதவி ரோமர் களின் சர்வாதிகாரப் பதவிக்கு ஒப்பிடப் படலாம். இவ்விதமாக அவன் சர்வாதிகாரக் கொள்கைக்குத் தேவையான இரண்டாம் படியைத் தாண்டிவிட்டான். மூன்ருவதாக அவன் அடைய வேண்டியது மெய் காவலர் படையாகும். இவ்வளவு அதிகாரத்தை ஒருவன் தலையில் குவித்ததற்காக வருந்திய சைரகூஸியர்கள் அவனுக்கு மெய்காவலர் படையொன்றைக் கொடுக்க விரும்புவார்களா? விரும்பமாட்டார்கள். அதை அவன் சொந்த முயற்சியால் அடைந்தாக வேண்டும். அவன் லியோன்தைனின் (Leontini) மீது படை எடுத்தான். அப்பொழுது, படைத் தலைவனாகிய தன்னைக் கொல்ல முயன்றதாகவும், தான் பாதுகாப்பான இடத்திற்கு ஓடிவிட்டதாகவும் ஒரு பொய் வதந்தியைக் கிளப்பிவிட்டான். இதைக் கேள்விப்பட்டு சைரகூஸன் குடிமக்களைக் கொண்ட ஒரு சபை கூடிற்று. அவனுக்கு 600 பேர் கொண்ட மெய் காவலர் படை வைத்துக்கொள்ளுமுரிமையளித்தது. அப்படை விரைவில் 1000 மாக உயர்த்தப்பட்டது. இந்த 1000 போர் வீரர்களோடு அவனுக்காகப் போரிடக்கூடிய கூலிப்படையுமிருந்தது.

### பெயரளவில் குடியாட்சி முறை பின்பற்றப்பட்டது

இம்மூவகை அதிகாரங்களைத்தான் 'சர்வாதிகார முன்னேற்ற' மென அழைப்பர். இவை டயோனிசியஸை அந்நாட்டின் பிரபுவும், எசமானனுமாகச் செய்துவிட்டன. முதலில் அவனுக்குப் படைத் தலைமை பதவிக் கிடைத்தது. இரண்டாவது அவனுக்குத் தனி படைத் தலைமைப் பதவியும் படையில் வரம்பில்லாத அதிகாரமும்

அளிக்கப்பட்டன. மூன்ருவது அவனுக்கு ஒரு மெய்காவல் படையும் கிடைத்தது. சைரகூஸ் மக்கள் இரு காரணத்தை முன்னிட்டு அவனுக்கு அஞ்சினர். முதலாவது அவனிடம் கூலிப் படை ஒன்றிருந்தது. இரண்டாவது கார்த்தேஜினியர்களின் படையெடுப்பு ஒரு புறமிருந்தது. குடியாட்சி முறை ஒழிக்கப்படவில்லை. அரசியலமைப்பை மாற்றக்கூடிய அளவில் அவன் எவ்விதப் பதவியும் வகிக்கவில்லை. பிஸிஸ்ட்ராட்டஸ் காலத்தில் ஏதென்ஸில் காரியங்கள் எப்படி நடந்து கொண்டிருந்ததோ அதைப் போல் சைரகூஸில் இவன் காலத்தில் நடைபெற்றது. சபை வழக்கம்போல் கூடி, சட்டமியற்றுதல் நீதிபதிகளைத் தேர்ந்தெடுத்தல் முதலிய காரியங்களைச் செய்து கொண்டிருந்தது.

**ஜிலாவின் முற்றுகை, கி.மு. 405; தாக்குதலுக்கான திட்டம்; அதன் தோல்வி; டயோனிசியஸின் நூதன நடத்தை; ஜிலாவும்: காமரீனுவும் பாலைவனமாக்கப்படுதல்.**

கார்த்தேஜினியர்களை எதிர்த்துத் தாக்குவதற்கு ஒரு திறமையுள்ள படைத் தலைவன் தேவையாக இருந்தது டயோனிஸியஸின் கூட்டாளிகள் அவனை ஜிலானுக்கு ஒப்பிட்டார்கள். கார்த்தேஜினியர்கள் ஜிலாவை முற்றுகையிட்டார்கள். அங்கு ஒரு பெரிய வெண்கல அப்பொல்லோவின் சிலை மலையிலிருந்து கடலை நோக்கியவாறு நின்று கொண்டிருந்தது. கார்த்தேஜினியர்கள் முதலில் அதைக் கைப்பற்றினுர்கள். டயோனிசியஸ் ஒரு பெரும் படையுடன் ஜிலாவிற்கு வந்தான். அவனது படை இரு பிரிவுகளாகப் பிரிந்து இரு முனைத் தாக்குதல்கள் நடத்த திட்டமிட்டான். அவனிடம் ஒரு கப்பற்படையும், இத்தாலியர்களையும் ஸிஸிலியர்களையும் கொண்ட ஒரு தரைப்படையுமிருந்தது. இத்தாலியர்கள் மேற்கிலிருந்து தாக்கித் தோல்வியுற்ருர்கள். ஸிஸிலியர்கள் ஏககாலத்தில் கிழக்கிலிருந்து கார்த்தேஜினியர்களைத் தாக்கத் தவறி விட்டார்கள். அவர்கள் தாமதித்து வந்ததே அதற்குக் காரணமாயிற்று. தாமதித்து வந்த ஸிஸிலியர்களும் கார்த்தேஜினியர்களால் முறியடிக்கப்பட்டார்கள். டயோனிஸியஸ் போட்ட திட்டம் பாழாயிற்று. இதற்காக டயோனிஸியஸைக் குறைகூறினுர்கள். டயோனிஸியஸ் டையோகிளிஸ் செய்த தவற்றையே செய்தான். அவன் ஜிலாவிலுள்ளவர்களையும், காமரீனுவிலுள்ளவர்களையும் சைரகூஸுக்குக் கொண்டு வந்து சேர்ப்பதில் முனைந்திருந்தான். அவன் கார்த்தேஜினியர்களை எதிர்த்து முழு மனத்தோடு தாக்க விரும்ப விரும்பவில்லை என்பது அவன் நகரவாசிகளை அங்கிருந்து காலி செய்யும்படி செய்ததிலிருந்து தெரிய வருகிறது.

**டயோனிஸியஸ்மீது ஐயப்பாடு; குதிரைப் படை விரர்களின் கலகம்; டயோனிஸியஸ் கலகத்தை அடக்குதல்; எட்னு.**

டயோனிஸியஸ் கார்த்தேஜினியர்களோடு சேர்ந்து கொண்டு ஜிலாவையும், காமரீனுவையும் காட்டிக் கொடுத்துவிட்டானென்று அவன்மீது ஐயுற்ருர்கள். படை சைரகூஸுக்குத் திரும்பிக் கொண்டிருந்தது. போர் நின்று விட்டதாக இத்தாலியப் போர் வீரர்கள் நினைத்தார்கள். அவர்கள் தங்கள் மன நிறைவற்ற நிலையைக் காட்டிக் கொண்டார்கள். அத்தோடு பயமும் திகிலும் அவர்களைப் பற்றிக் கொண்டது. ஸிஸிலிய குதிரைப் படை வீரர்கள் இச் சூழ்நிலையைத் தங்களுக்குச் சாதகமாக்கிக்கொண்டு கலகமெழுப்பினர்கள். அவர்கள் டயோனிஸியஸ் வீட்டைக் கொள்ளையடித்தார்கள். அவன் மனைவியை அவமானப்படுத்தினர்கள். அவன் மனைவி ஹெர்மேகிராட்ஸின் மகள். டயோனிஸியஸ் இச்செய்தியைக் கேள்வியுற்ருன். அவன் நகரத்தை நோக்கி ஒரு சிறிய படையுடன் முன்னே சென்ருன். நகரின் வாயில்கள் அடைபட்டிருந்தன. கதவுகளைத் திறந்து அவனை உள்ளே வர அனுமதிக்கவில்லை. அங்கு ஒரு நாணல் புதர் இருந்தது. காய்ந்த நாணல் புல்களைக் கொண்டுவந்து நகரத்தின் வாயிற் கதவிற்கண்டையில் அவற்றைச் சேகரித்துக் கொளுத்திவிட்டான். கதவுகள் எரிந்து சாம்பலாயின. அவன் நகருக்குள் நுழைந்து கலகக்கார்களைத் தோற்கடித்துக் கலகத்தை அடக்கினன். கலகக்காரர்களில் சிலர் எட்னுவிற்கு ஓடிவிட்டார்கள். ஏதென்ஸில் 30 பேர் கொண்ட குழு வீழ்ச்சியடைந்தபோது அவர்கள் ''எலுயூசிஸ் என்றவிடத்தில் குடியேறியதைப் போல்''[1] இவர்கள் எட்ன என்ற இடத்தில் குடியேறினர்கள்.

டயோனிஸியஸ் கொள்கை

டயோனிஸியஸ் எதற்காக கார்த்தேஜினியர்களோடு ரகசியமாக உறவுகொண்டிருந்தான்? அவன் செய்கை துரோகச்செய்கையல்லாவா எனப் பல பிரச்சினைகள் எழலாம். அவைகளுக்கு விடை காணுவது எளிது. அவன் உறுதியற்ற நிலையில் படையெடுத்துச் சென்ருன். தன் நிலையை உறுதியாக்கிக்கொள்ளும் வரையில் அவன் எதையும் சாதிக்க முடியவில்லை. அவனுடைய செல்வாக்கை கார்த்தேஜினியர்கள் அங்கீகரிக்க வேண்டுமென்பதே அவன் நோக்கம். ஸ்பார்ட்டனர் மெடிஸம் என்ற குற்றம் புரிந்ததைப் போல் இவன் பூயூனிஸமென்ற குற்றம் செய்தான்.

கார்த்தேஜினியர்களுக்கும் டயோனிஸியஸுக்கும் ஏற்பட்ட உடன்படிக்கை, கி.மு. 405; கார்த்தேஜினிய ஸிஸிலி, குடிகளும் இறை செலுத்துவோரும்

டயோனிஸியஸுக்கும் ஹிமல்கோவிற்குமிடையே ஓர் உடன்படிக்கை ஏற்பட்டது. அவ்வுடன்படிக்கையின்படி, இரு கட்சிகளும்

[1] ப்பிரிமேன்

அப்பொழுது எந்தெந்த இடங்களை வைத்திருந்தார்களோ அவை அவரவர்களிடமே இருக்கவேண்டியது. வடக்கிலும், தெற்கிலுமுள்ள கடற்கரைகளிலுள்ள கிரேக்க நகரங்களுக்கும், சிகான் (Sican) இனத்தவர்களுக்கும், கார்த்தேஜினியர்கள் தலைவராக ஏற்றுக்கொள்ளப் பட்டனர். ஆகையால் அக்கரகாஸ், டெனிலஸ், ஜிலா, காமரீனு முதலிய நாடுகள் கார்த்தேஜியின் ஆட்சிக்குட்பட்டன. ஹிமேராவில், கார்த்தேஜி ஒரு குடியேற்ற நாட்டை ஏற்படுத்தி இருந்தது. [1] இந்நகரங்களுக்கு ஒரேவிதமான அந்தஸ்து அளிக்கப்படவில்லை. அக்கரகாஸும், செலிநஸும், தெர்மேயைப்போல் அடிமை நாடுகளாக மதிக்கப்பட்டன. ஜிலாவும் சாமரீனுவும் திறை செலுத்தும் நாடாகக் கருதப்பட்டன. அவற்றைப் பாதுகாக்கச் சுவர்கள் அமைப்பதற்கு அனுமதியளிக்கப்படவில்லை. எலிமீயான் நகரங்களைப்பற்றி உடன் படிக்கையில் ஒன்றுமே கூறப்படவில்லை. செகெஸ்ட்டா, தன்னைக் கார்த்தேஜியின் அடிமை நாடாக்கிக்கொண்டது. எரிஸ் நிலைமையும், செகெஸ்ட்டாவின் நிலைமையைப்போல் மாறிவிட்டது.

**சுதந்திர நாடுகள்; லியோன்தைனின் நிலைமை; உத்தரவாத மாக்கும் பிரிவு.**

சிஸல் (Sicel) மெஸ்ஸானு (Messana) ஆகிய இரண்டும் சுதந்திர நாடுகளென உடன்படிக்கை ஏற்றுக்கொண்டது. லியோன்தைன் (Liontine) இதுவரையில் சைரகூஸின் அடிமை நாடாக இருந்தது. இந்த உடன்படிக்கை அவர்களுக்குச் சுதந்திரம் அளித்தது. சைரகூஸுக்குத் தொல்லை விளைவிக்கவே இவ்வேற்பாடு செய்யப்பட்டது. நாக்ஸாஸ் அல்லது காட்டானேயைப்பற்றி ஒன்றுமே குறிப்பிடப்பட வில்லை. எனவே இந்நாடுகளை, சைரகூஸ் தன் விருப்பப்படியே நடத்தக்கூடும். இதனுல் அது உடன்படிக்கையை மீறியதாகக் குற்றமேற்படாது. கார்த்தேஜினியாவின் இரண்டாவது படை எடுப்பிற்குப்பின் செய்யப்பட்ட முடிவு இவையே. இவ்வுடன் படிக்கை, டயோனிஸிஸை சர்வாதிகாரியாக்கிற்று. இவ்விதமான ஏற்பாட்டால் போரை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்துவிடலா மென்பது ஹிமில்கோவின் நம்பிக்கை. ஆனுல் டயோனிஸியஸ் தனக்குப் பகைவனுகி, தன் செயலின் பலனை அளித்துவிடுவா னென்பது அவனுக்குத்தெரியாது. சைரகூஸ் டயோனிஸியஸுக்கு கட்டுப்பட்டுக் கிடக்கும் என்ற வாக்குறுதியை கார்த்தேஜி அளித்தது. இந்த நிலையைப்பெறுவதற்காகவே டயோனிஸியஸ் சிஸிலியன் ஹெல்லாசைக் காட்டிக்கொடுத்தான். அவன் ஐரோப்பாவில் ஹெலனிக் நாட்டை ஒரு முதல்தரமான நாடாக்கியதால், அவன் மீதிருந்த பழி மறைந்துவிட்டது.

[1] கார்த்தேஜியின் சகோதரிகளாகிய பழைய போயினீஸியக் குடியேற்ற நாடுகள், அதன் சொந்தக் குடியேற்ற நாடுகள் போல் உடன்படிக்கையில் கூறப்படு கின்றன.

## 4. டயோனிஸியஸ் ஆட்சியின் ஆரம்ப ஆண்டுகள்

### சைரகூஸின் உயர் நிலை

ஏதன்ஸ் வீழ்ச்சிக்கு அரை நூற்றுண்டிற்குப்பின் மத்திய தரைக்கடலுக்கு மேற்கிலுள்ள ஓர் கிரேக்க நகரம் ஐரோப்பாவின் நிலைமையை நிர்ணயித்ததாகத் தோன்றுகிறது. சைரகூஸ், டயோனிஸியஸ் தலைமையில் ஒரு பெரிய வல்லரசாயிற்று. அதைப் போன்ற வல்லரசு ஐரோப்பாவில் அக்காலத்திலிருந்ததில்லை. பலத்திலும் ஆதிக்கத்திலும், செல்வாக்கிலும், வாக்குறுதியிலும் தாய் நாட்டிலுள்ள மற்ற நகரங்களைவிட சைரகூஸ் சிறந்து விளங்கிற்று. மத்தியதரைக் கடற்கரைகளிலுள்ள நாடுகளை நாம் கவனிக்கும்போது இந்த ஒரு நகரம் மற்ற நகரங்களுக்கு வழி காட்டியாக விளங்கிற்றென்பதை அறிகிறோம். கிழக்கில் பாரசீகமும், மேற்கில் சைரகூஸும், வல்லரசுகளாக விளங்கியபடியால், இவ்விரு வல்லரசுகளின் கீழ் மற்றக் கிரேக்க நாடுகள் தங்கள் சுதந்திரத்தை இழந்து நிற்கும் நிலைமை ஏற்பட்டது. என்றைக்காவது ஒரு நாள் சைரகூஸின் சர்வாதிகாரி தன் ஆதிக்கத்தை மத்தியதரைக்கடற்கரைக்குக் கிழக்கிலுள்ள நாடுகளின் மீது செலுத்துவானென்றும், கீழ் நாடுகளின் சர்வாதிகாரியாகிய பாரசீக மன்னனை அவன் எதிர்க்கக்கூடுமென்றும் எதிர்பார்க்கப்பட்டது. ஆனால் இப்படிப்பட்ட நிலை ஏற்படாமல் தடுக்கப்பட்டது. ஆசியாவை வெல்லும் வாய்ப்பு சைரகூஸின் சர்வாதிகாரிக்குக் கிடைக்காவிடினும், அதை வெல்லும் வாய்ப்பு பழைய கிரேக்க நாட்டின் எல்லையில் எழும்பிற்றென்பதை நாமுணர வேண்டும். எனினும், டயோனிஸியஸ் ஏற்படுத்திய கோனாட்சி முறை பிலிப் மன்னனும், அவனுடைய மகன் அலெக்ஸாந்தரும் ஏற்படுத்தப்போகிற கோனாட்சிக்கு முன்னோடியாக இருந்தது. பெரிய நாடுகள் சிறிய நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தவும், குடியாட்சி முறை நிறுவனங்கள் மறைந்து கோனாட்சிமுறை வளரவும், ஏற்றதான ஓர் புதிய சகாப்தம் பழைய கிரேக்க நாட்டில் ஏற்படவில்லை; அது ஸிஸிலியில் ஏற்பட்டது.

### டயோனிஸியஸின் அரசியல் சூழ்ச்சியும் அவனது நீடித்த ஆட்சியின் இரகசியமும்

டயோனிஸியஸின் சர்வாதிகாரம் அவன் மடியும் வரையில், அதாவது முப்பதாண்டுக் காலம் நிலைத்து நின்றது. படைபலத்தினாலேயே அவன் தன் ஆட்சியை நிலைநிறுத்தினான். அவ்வாறு செய்வது அரசியல் அமைப்புச் சட்டத்தை மீறி மக்களுடைய சுதந்திரத்தை அவமதித்ததாகக் கருதப்பட்டது. அரசியல் அமைப்புச் சட்டங்கள் பெயரளவில் மட்டுமிருந்தன. சபையில் மக்கள்

கூடுவதும். குடவோலையளிப்பதும் நிறுத்தப்படவில்லை. டயோனிஸியஸ் சர்வாதிகாரம் பெற்றப் படைத்தலைவனாக மக்களால் ஆண்டுக்கொரு முறை அல்லது நிலையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டான்; இவை யாவும் பெயரளவிலேயே நடைபெற்றன. அவனுக்களித்த அதிகாரங்கள் அரசியல் அமைப்பால் அங்கீகரிக்கப்பட்டவைகளல்ல. அவை அரசியலமைப்மைச் சாரமற்றதாகச் செய்துவிட்டன, குடிமக்கள் அவன் கட்டளைக்கு, கட்டாயத்தினாலன்றி மனமாரக் கீழ்ப் படியவில்லை. அவனது கூலிப்படையின் ஆதரவில் அவன் ஆதிக்கம் நடைபெற்றுவந்தது. அவனது ஆதிக்கத்திலிருந்து விடுபட ஒன்றுக்கு மேற்பட்ட பல முயற்சிகள் எடுக்கப்பட்டன. ஆனால் அம்முயற்சிகள் தோல்வியுற்றன. அதன்பிறகு அவனுடைய ஆதிக்கத்தை ஒழித்துக் கட்ட அவர்களால் முடியவில்லை. அவனது அரசியல் திறமையும் தந்திரமும், பகைவர்களின் எதிர்ப்புகளைச் சமாளிக்க உதவி புரிந்தன. மற்ற சர்வாதிகாரிகள் நீண்டநாள் நிலைத்திலிருந்து சாதிக்க முடியாத காரியத்தை இவன் சாதித்தான். படைபலத்தைக் கொண்டு மட்டும் அவன் அதைச் சாதித்து விடவில்லை. அரசியல் சூழ்ச்சித் திறனும் அவனுக்கு உதவியது. இதை நாம் அவனுடைய அரசியல் சூழ் திறனின் ரகசியமென்று கூறுகிறோம். அவன் தன் சொந்த விருப் பங்களைப் பூர்த்திச் செய்து கொள்ள மக்களை ஒடுக்கிக் கொடுமைப் படுத்தவில்லை. ஆனால் அரசியல் நோக்கங்களுக்காக அவன் மக்களை அடக்கி ஒடுக்கினான். கிரேக்க சர்வாதிகாரிகள் சுயநலனுக்காகச் செய்த கொடுமைகளை மக்கள் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. ஆகையால் அவர்கள் மக்களால் கொலையுண்டார்கள். அவர்களில் சிலர் தங்களுடைய தந்தையர்களாலும், சிலர் காதலிகளாலும் கொலை யுண்டவர்கள். ஏனென்றால் அவர்களுடைய கொடுங்கோன்மை தந்தையர்களுக்கும் காதலிகளுக்குமே சகிக்க முடியாதவைகளா யிருந்தன. டயோனிஸியஸ் இவ்விதமான இழிவான செயல் எதையும் செய்யவில்லை. அவனிழைத்த குற்றங்கள் அரசியல் சம்பந்தமானவை. அவனுடைய பகைவர்கள், அரசியல் பகைவர்கள். அவனுடைய மகன் ஒரு மணமானபெண்ணைக் கற்பழித்தான். அதற்காக டயோனிஸியஸ் அவனை மன்னித்து விடாமல் கடிந்துகொண்டான். அந்த இளைஞன் 'நீங்கள் என்னைக் கடிந்து கொள்வது நியாயமே; ஆனால் உங்கள் தந்தை உங்களுக்கு சர்வாதிகாரியாக இருந்ததில்லையே' என்று கூறினான். டயோனிஸியஸ் அதை மறுத்து 'நீ இப்படிப்பட்ட செயல்களைச் செய்து கொண்டே போனால், உன்னுடைய மகனுக்கு நீ சர்வாதிகாரியாக முடியாது' என்று உறுதியாகக் கூறினான். தனிப் பட்ட சொந்த வாழ்க்கையில் டயோனிஸியஸ் அனுசரித்த குறிப்பிடத் தக்க நடுத்தரக் கொள்கை அவனை நீண்ட நாள் சர்வாதிகாரியா கவே இருக்கும்படி செய்தது. அவன் தன்னைக் கொல்லுமளவிற்கு யாருக்கும் தன்னுடைய சுய நலனுக்காகத் தீங்கிழைத்ததில்லை.

நாட்டுப்பற்றுக் காரணமாகவே அவன் பலருக்குத் தீங்கிழைத் திருக்கலாம். அவனது ஆட்சிமுறை மற்றவர்கள் ஏற்றுக் கொள்ளுமாறு இருந்தது. அத்துடன் அப்போதிருந்த சூழ்நிலையில் நாட்டைப் பகைவர்களிடமிருந்து காப்பாற்ற அவனது ஆட்சி தேவையாக இருந்தது. அவன் நாட்டைப் பகைவர்களுடைய கையிலிருந்து பாதுகாக்கக்கூடிய திறமை பெற்றிருந்தபடியால் அவனைக் கொல்லாமல் உயிருடன் விட்டு வைத்திருந்தனர்.

### தீவிற்குப் பாதுகாப்பு அரண்களை எழுப்புதல்

ஒரு பாதுகாப்பரணைக்கட்டுவதே அவன் முதல் நோக்கமா யிருந்தது. அக்ரோபோலிஸின் பாதுகாப்பரண் குன்றின்மேல் கட்டப் படவில்லை. அது தீவில் கட்டப்பட்ட அரண். பூசந்தியின் வடக்கில் ஒரு சுவரை எழுப்பினான். அச்சுவர் பெரு நிலப்பகுதியிலிருந்து அந்தத் தீவைப் பிரித்துவிட்டது. அவன் இரு கோட்டை களைக் கட்டினான். ஒரு கோட்டை பூசந்தியிலும், மறு கோட்டை தீவின் தென் பகுதியிலும் கட்டப்பட்டன. யாராவது ஒருவன் அச்சரரடைநாவிலிருந்து, அத்தீவிற்குள் வரப் போரிட்டால், அவன் தொடர்ச்சியாகவுள்ள ஐந்து வாயில்களைக் கடக்கவேண்டும். தீவுக் கோட்டையில், டயோனியஸ் அனுமதி பெறாத எவரும் வசிக்க முடியாது. துறைமுகத்தில் கப்பல் துறைகள் கட்டப்பட்டன. துறை முகத்தின் வாயில் அடைக்கப்பட்டது. ஓர் படகு செல்லக் கூடிய இடத்தைத் தவிர மற்றப் பாகங்களைத் திட்டுகளை எழுப்பி அடைத்து விட்டான்.

அவன் கோட்டை கொத்தளங்களைக்கட்டித் தனக்குப் பாதுகாப்பை ஏற்படுத்திக் கொண்டதோடு நின்று விடவில்லை. தன்னுடைய நண்பர்களுக்கும் மற்றவர்களுக்கும் விலை மதிப்புள்ள பரிசுகளைக் கொடுத்து, அவர்களது அன்பைப் பெற்றான். விடுதலை பெற்ற அடிமைகளுக்குக் குடியுரிமையளித்தான். அவர்களும் அவன் ஆட்சியை ஆதரித்தார்கள்.

### டயோனிஸியஸை எதிர்த்துக் கலகம் செய்தல்; சைரகூஸின் முற்றுகை; காம்பானியர்கள் கலகத்தைப் பொடுக்குதல்.

டயோனிஸியஸ் பாதுகாப்பான ஏற்பாடுகளைச் செய்து முடிந்த வுடனேயே அவன் ஒரு பெருங்கலகத்தைச் சமாளிக்க வேண்டி யிருந்தது. அக்கலகம் சைரகூஸ் நகரத்தின் படை, நகருக்கு வெளியிருந்தபோது நடந்தது. அவன் ஹெர்பெர்ஸ்ஸஸ் நகரின் மீது படையெடுத்துச் செல்ல வேண்டியதாயிற்று. அப்பட்டினம் சிஸல்ஸ் நகரங்களில் ஒன்று. போர் வீரர்கள் பலவகைப்பட்ட ஆயுதங்கள் தாக்கிச் சென்றார்கள். அவர்கள் டயோனிஸியஸின் ஆட்சியைக் குறைத்துப் பேசினார்கள். அவனுடைய அதிகாரிகளில்

ஒருவன் அவர்களை அதட்ட, போர் வீரர்கள் ஆவேசம் கொண்டு அவனைக் கொன்ருர்கள். படையில் கலகம் முற்றியது. டயோனிஸியஸ் அக்கலகத்தை அடக்க முடியாமல் தன் கோட்டைக்குள் ஓடிவந்து புகுந்து கொண்டான். கலகக்காரர்கள் கோட்டையை முற்றுகை யிட்டனர். மேலும் அக் கலகத்தில் தங்களுக்கு உதவி புரிய வேண்டு மென்று மெஸ்ஸாஞ, ரேஜியம் போன்ற நகரங்களைக் கேட்டுக் கொண்டார்கள். அவ்விரு நகரங்களும் கலகக்காரர்களுக்கு உதவி புரிய 80 கப்பல்களை அனுப்பி வைத்தன. இப்போது டயோனிஸியஸ் கடல், தரை இவ்விரண்டின் மூலமாக நெருக்கப்பட்டான். அவன் தனது நம்பிக்கைக்குரிய நண்பர்களைக் கூட்டி நிலைமையை அவர் களோடு கலந்தாலோசித்தான். சிலர் துரிதமாகவோடும் குதிரை மீதேறி ஓடிவிடும்படி சொன்னுர்கள். அப்போது ஹெலோரிஸ் சொன்ன சில சொற்கள் பழமொழியாக வழங்கப்படுகின்றன. ‘இறைமையின் அதிகாரம் கப்பலிலுள்ள அழகிய ஓர் பாய்.’ டயோனி ஸியஸ், அவ்விடத்தை விட்டகலாமலிருக்க வேண்டுமென்றவர்களின் ஆலோசனையை மதித்து நடந்தான். அப்போது அவன் ஒரு சூழ்ச்சியை மேற்கொண்டான். அது வெற்றிகரமாக முடிந்தது. தன்னைச் சுற்றி வளைத்துக்கொண்டு நெருக்குகிற கலகக்காரர்களோடு ஒரு சமரசப் பேச்சு வார்த்தை நடத்தினன். அதன்படி தன் உடைமை களோடு நகரத்தை விட்டுப்புறப்பட அனுமதி கொடுக்க வேண்டுமென அவர்களைக் கேட்டான். அவர்கள் அவன் சொற்களை நம்பினர். ஐந்து கப்பல்கள் அவனுக்குக் கொடுப்பதாகவும், அவற்றில் அவன் தன் உடைமைகளை ஏற்றிச் செல்லலாமென்றும் அனுமதியளித்தனர். அதே சமயத்தில் அவர்களின் உதவிக்காக எட்ஞவிலிருந்து வந்த குதிரைப் படையை அனுப்பி விட்டனர். அதே சமயத்தில் காம்பானியாவிலிருந்த கார்த்தேஜியின் கூலிப்படையின் உதவியைக் கேட்டு இரகசியமாக ஓர் தூதுவனை காம்பானியாவிற்கு அனுப்பினன். அப்படை, சிஸிலியின் ஓர் பாகத்தில் ஹிமில்கோவால் விட்டுச் செல்லப்பட்டதாகும். டயோனிஸியஸக்கும் கார்த்தேஜிக்கு மிடையே ஏற்பட்ட ஒப்பந்தபடி, கார்த்தேஜி அவனுக்கு உதவி செய்யக் கடமைப் பட்டுள்ளது. பன்னிரண்டாயிரம் பேர்களைக் கொண்ட அப் படை டயோனிஸியஸின் உதவிக்காகப் புறப்பட்டு வந்து, எதிர்ப் பின்றி எப்பிபோலோ குன்றை ஆக்கிரமித்துக்கொண்டது. கலகக்காரர் கள் பலவீனமாக இருந்த இச் சந்தர்ப்பத்தில் டயோனிஸியஸ் இவ் வுதவியைப் பெற்ருன். அவன் உடனடியாகக் கலகக்காரர்களை நாடகக் கொட்டகைக்குச் சமீபத்தில் தாக்கி முறியடித்தான். அதிகம் இரத்தம் சிந்தாமல் வெற்றி பெற்ருன். போர்நடந்த இடம் இப்போது ‘நீபாலிஸ்’ என்றழைக்கப்படுகிறது. டயோனிஸியஸ் தான் வெற்றி யடைந்தபோதிலும், பகைவரைத் துன்புறுத்தவில்லை. கலகக்காரர் களில் பலர் எட்ஞவிற்கு ஓடிவிட்டார்கள். அவர்கள் சைரகூஸுக்குத்

திரும்பிவர மறுத்தார்கள். அவ்வாறு திரும்பி வந்தவர்களை அவன் அன்புடன் வரவேற்று ஆதரித்தான். டயோனிஸியஸுக்கு உதவி புரிய வந்த காம்பானிய கூலிப்படையினர் கார்த்தேஜிக்கு சேவை செய்ய மறுத்து விட்டார்கள். அவர்கள் என்டெல்லாவிலுள்ள சிஸ்கன் பட்டினத்தில் தங்கி விட்டார்கள். தங்களுக்குக்குடியுரிமைக் கொடுத்துத் தங்களுடைய பட்டினத்தின் குடிகளாகத் தங்களை மதிக்கும்படி கேட்டார்கள். ஒருநாள் இரவு அவர்கள் அப்பட்டினத்தில் உள்ள ஆண்களையெல்லாம் கொன்றுவிட்டு அங்கிருந்த பெண்களை மணந்து கொண்டார்கள். இவ்விதமாக இத்தாலிய பட்டினம் ஆரம்பத்தில் சிஸிலியின் மண்ணில் தோன்றிற்று.

**சிஸல்மீது டயோனிஸியஸின் திட்டங்கள்; எட்னுவை ஆக்கிரமித்தல்; காட்டானே-லியோன்தையன் ஒப்பந்தம், கி.மு. 404; துரோகச்செயல் மூலம் காட்டானேயையும் நாக்ஸாஸையும் கைப்பற்றல்**

சிஸல் நகரைப் பிடிக்க முயன்றபோது கலகம் எழும்பியதை நாம் படித்தோம். சைரகூஸன் ஆதிக்கம் விரிவடைவதற்காக ஆரம்பத்தில் கிழக்குக் கடற்கரையிலுள்ள நகரங்களையும், அண்மையிலுள்ள சிஸல் நகரங்களையும் ஒடுக்குவதே சர்வாதிகாரியின் நோக்கமாயிருந்தது. சிஸல் நகரங்கள் படிப்படியாக கிரேக்கப் பண்பாட்டைப் பின்பற்ற ஆரம்பித்துவிட்டன. டயோனிஸியஸ் ஆட்சியிலே அந்நகரங்கள் கிரேக்க மயமாயின. கிரேக்கப் பட்டினங்களில் அரசியல் கட்சிகள் வளர்ந்ததைப்போல், சிஸல் பட்டினங்களிலும் அரசியல் கட்சிகள் வளர ஆரம்பித்தன. சிஸல் பட்டினங்களைத் தாக்குவது கார்த்தேஜியுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை மீறுவதாகும். அவன் என்னுவின் மீது படை எடுத்தது உண்மை. ஆனால் அந்நகரிலுள்ள சர்வாதிகாரியை விரட்டிவிட்டு, அந்நகர வாசிகளுக்குச் சுதந்திரமளித்தான். அவன் ஹெர்பிட்டாவைத் தாக்கினுன். ஆனால் அது பலனற்ற ஒரு செயலாகிவிட்டது. அவன் வழியிலிருந்த எல்லாக் கிரேக்கப்பட்டினங்களையும் வென்றான். எட்னுவை அவன் தாக்கியபோது அங்கிருந்த சைரகூஸிய கலகக்காரர்கள் எங்குச் சென்றார்களென்பது யாருக்கும் தெரியாது. ஐயோனிய பட்டினங்களாகிய காட்டானே, நாக்ஸாஸ் என்பவற்றையும் நோக்கிச்சென்றான். இப்படிப்பட்ட சம்பவம் நேருமென்பதை ஏற்கெனவே அறிந்தகாட்டானே, லியோன்தையன் நகரோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டது. அவர்களது ஒப்பந்தத்தைப் பற்றி ஒரு வெள்ளி நாணயம் விளக்கம் கூறுகிறது. வெள்ளி நாணயத்தில் அப்பொல்லோவின் மாலை சூடிய சிரசு வரையப்பட்டிருக்கிறது. அத்துடன் அவ்விரு பட்டினங்களின் பெயரும் பொறிக்கப்பட்டுள்ளன. ஆனால் லியோன்தையன் நகரம், அவ்விரு

பட்டினங்களுக்கும் உதவியளிக்க முடியவில்லை. படையினால் அப் பட்டினங்களை வெல்வதற்குப் பதிலாக, பொன் கொடுத்து அவற்றை வென்றான். அந்நகரிலுள்ள துரோகிகள், டயோனிசியஸிட மிருந்து பொன் வாங்கிக்கொண்டு தங்கள் நகரத்தைக் காட்டிக் கொடுத்துவிட்டார்கள்.

**காட்டானே நாக்ஸாஸ் என்ற நகரங்களின் முடிவு; நாக்ஸியன் நீப்போலிஸ்; லியோன்தையன் மீட்சி.**

நாக்ஸாஸ் காட்டானே என்ற இரு பட்டினங்களையும் அவன் நடத்திய முறையைக்கொண்டு அவனை ஓர் அரக்கனென்று கூற வழியேற்பட்டது. அவ்விரு நகரவாசிகளைக் கைதிகளாக்கி, அவர்களை அடிமைகள் விற்கும் சந்தைகளில் விற்றுவிட்டான். காட்டானேயை, காம்பானிய கூலிப்படைக்குக் கொடுத்துவிட்டான். அது இத்தாலி யர்களின் இரண்டாவது நகரமாயிற்று. நாக்ஸாஸ் அந்நியர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. அந்நகரின் சுவர்களும் கட்டிடங்களும் இடித்துத் தள்ளப்பட்டன. நிலங்களை சிஸல்ஸ்களுக்குக் கொடுத்து விட்டான். இவர்கள் அங்கு ஆரம்பத்தில் வந்து குடியேறியவர்கள். கிரேக்கர்களுடைய நலனுக்காகப் போராடியவர்களில் இவன் முதன்மையானவன். இவ்விடத்தில் அவன் கிரேக்கர்களை அழிக் கின்றவர்களில் ஒருவனாகத் தோன்றுகிறான். போயினிஷியர்கள் செய்யவேண்டிய வேலையை அவன் செய்தான். எளிதில் கிரேக்கர் களைத் துன்புறுத்த அவன் எண்ணமாட்டான். அவன் இக்கொடிய செயலைப் புரிந்ததற்குக் காரணங்களுண்டு. லியோன்தையனைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டுவர வேண்டுமென்பதே இவன் நோக்கம். ஏற்கெனவே சரணடையுமாறு அவர்களைக் கேட்டுக்கொண்ட போதிலும், அவர்கள் அதை மறுத்துவிட்டார்கள். படை கொண்டு அதை கைப்பற்றுவது எளிதன்று. காலதாமதமும் பல இக்கட்டு களும் நேரிடக்கூடுமென்றஞ்சினான். அவன் நாக்ஸாஸ், காட்டானே என்ற இரு பட்டினங்களையும் படை கொண்டு நொறுக்கியபோது, லியோன்தையனையும் தாக்குவதாகத் தோன்றியது. காட்டானே, நாக்ஸாஸ் நகரங்களின் வீழ்ச்சிக்குப்பின் அவன் லியோன்தையன் நகரின் மீது படையெடுத்தான். நகரவாசிகளை ஒன்று சேர்த்து அவர்களை சைரகூஸின் குடியுரிமையையேற்றுக் கொள்ளுமாறு கூறினான். அவர்கள் எதிர்ப்பின்றி அவன் வார்த்தைக்குக் கட்டுப் பட்டனர். நாக்ஸாஸ், காட்டானே என்ற இரு நகரங்களுக்கேற்பட்ட அழிவு தங்களுக்கும் ஏற்படாவண்ணம் நடந்துகொண்டார்கள்.

அத்தீனியர்கள் சிஸிலி மீது படை எடுத்து வந்தபோது அங்குள்ள ஒவ்வொரு நகரமும் சுதந்திர நகரமாக இருந்தது. இப்போது அங்குள்ள நகரங்கள் யாவும் தங்கள் சுதந்திரத்தை இழந்துவிட்டன. மெஸ்ஸானா மட்டும் இன்னும் சுதந்திர நாடாக

விளங்கிற்று. கார்த்தேஜினியர்களும், சைரகூஸியர்களும், சிஸிலியிலிருந்தப் பட்டினங்களைத் தங்கள் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்து விட்டார்கள்.

### எப்பிபோலேயின் அரண்

லியோன்தையன் நகரை வென்றது அவன் அடைந்த வெற்றிகளிலேயே சிறந்ததொன்றாகும். அவ்வெற்றி அவனுக்கும் சைரகூஸியர்களுக்கும் மனநிறைவைக் கொடுத்தது. அவனுடைய செயல் கார்த்தேஜியை வலுச்சண்டைக்கு அழைப்பதாகத் தோன்றியது. ஒப்பந்தம் லியோன்தையன் சுதந்திரத்திற்குப் பாதுகாப்பளித்தது. கார்த்தேஜியோடு போராட்டம் நடத்த நேரிடுமென்பதை அவன் அறிவான். ஆனால் அது சீக்கிரம் வரவேண்டுமென்று விரும்பினான். பகைவர்களுடைய தாக்குதலைச் சமாளித்து முறியடிக்கக்கூடிய நிலையில் சைரகூஸ் இருக்கவேண்டுமென்பது அவன் விருப்பம். ஆகையினால் சைரகூஸை கோட்டைகொத்தளங்களால் பலப்படுத்தத் திட்டமிட்டான். தீவை அவன் பலப்படுத்தியபோது அதைத் தன் சொந்தப் பாதுகாப்பிற்காகச் செய்தான். இப்போது சைரகூஸ் நகரத்தின் பாதுகாப்பிற்கான வேலையில் அவன் ஈடுபட்டான். எப்பிபோலே குன்றைக் கோட்டை கொத்தளங்களால் பாதுகாக்க வேண்டுமென்று அத்தீனியப் படையெடுப்பு ஒரு பாடம் கற்றுக்கொடுத்தது. ஆகையால் சைரகூஸ் நகருக்கு மதிற்சுவர் எழுப்பும்போது, எப்பிபோலே குன்றையும் மதிற்சுவருக்குள் அடங்குமாறு செய்தனர். அத்தீனிய படையெடுப்பு யூரியாலோஸையும் பலப்படுத்தும்படி பாடம் கற்றுக்கொடுத்திருந்தது. இப்போது அங்கு ஒரு கோட்டையைக் கட்டினார்கள். அக்கோட்டை எப்பிபோலே, சைரகூஸ் இவற்றின் திறவுகோல் என்றழைக்கப்பட்டது.

டயோனிஸியஸ் மேற்பார்வையில் குறுகிய கால அளவில் 60,000 போர் வீரர்களைக்கொண்டு சுவர்களைக் கட்டிமுடித்து விட்டார்கள். கிரேக்க நகரங்களில் மிகவும் பலம் பொருந்திய நகரமாக சைரகூஸ். விளங்க வேண்டுமென்பதே அவர்களுடைய விருப்பம். தைச்சா (Tycha) விலிருந்து யூரியாலோஸ் வரையிலுள்ள வடக்குச் சுவர், மூன்று மைலுக்கு மேற்பட்ட தூரமாக இருந்தது. வடக்குச் சுவர் கட்டி முடிக்க இருபது நாட்களாயிற்று. பாழடைந்த யூரியாலோஸ் கோட்டையினையும் அக்கோட்டையிலிருந்த பாதாள அறைகளையும் நாம் இன்றைக்கும் காணலாம். சர்வாதிகாரியான டயோனிஸியஸ் ஆட்சியின் நினைவுச் சின்னங்களாக அவை இன்றைக்கும் விளங்குகின்றன.

### போர் முறையில் அவன் செய்த முன்னேற்றங்கள்

கோட்டைகொத்தளங்கள் அமைப்பது எளிய காரியமாகத் தோன்றவில்லை. இப்போது சைரகூஸ் மிகப் பரந்த கிரேக்க நகர

மாயிற்று. டயோனிஸியஸ் கோட்டைகொத்தளங்களைக் கட்டியதோடு மனநிறைவடைந்துவிடவில்லை. அவன் சைரகூஸ் நகரத்தின் படையை வலுவுள்ளதாக்கினான். பகைவர்களை எதிர்த்துத் தாக்குவதற்கும், சமயம் நேரிடும்போது தற்காப்பிற்காகவும் ஏற்ற படை ஒன்றை அவன் தயார் செய்தான். படையைப் புதுப்பிப்பதில் அவன் மாசிடோனியர்களுக்கு முன்னோடியாயிருந்தான். அவர்கள் பின்பற்றிய போர்முறைக்கு இவனே முதல்வனாவான். தரைப் படையும் கடற்படையும், குதிரைப்படையும் காலாட்படையும், பளுவுள்ள ஆயுதந்தாங்கிய போர் வீரர்களும் பளுவற்ற ஆயுதந் தாங்கிய போர் வீரர்களும் எல்லோரும் ஒன்று சேர்ந்து ஏககாலத்தில் பணிபுரியக்கூடிய அளவில் அவன் படையில் மாறுதலைக்கொண்டு வந்தான். உயிருள்ள பிராணி ஒரு வேலை செய்யும்போது அதன் உறுப்புக்கள் ஒன்றாகச்சேர்ந்து இயங்குவதைப்போல், போர்க் களத்தில் பல்வேறுபட்ட படைகள் தத்தமக்குரிய கடமையைச் செய்யுமளவில் படை சீர்திருத்தப்பட்டது. கல்லெறியும் பொறியொன்று தயார் செய்யப்பட்டது. பகைவன் கோட்டையை முற்றுகையிடும் போது கல்லெறியும் பொறி மிகவும் அனுகூலமாக இருந்தது. இந்தப் புதிய முறை, படையில் ஒரு புரட்சிகரமான மாறுதலையுண்டு பண்ணியது. இப்புதிய யந்திரம் இருநூறு அல்லது முந்நூறு பவுண்டு எடையுள்ள கல்லை இருநூறு அல்லது முந்நூறு கெஜ தூரம் வீசக்கூடிய வலுவுள்ளதாக இருந்தது. கடற் சண்டையிலுங்கூட அவன் ஒரு புதிய முறையை ஏற்படுத்தினான். இதுவரையில் கண்டிராத பெரிய போர்க் கப்பல்களை அவன் கட்டினான். அவை ஒவ்வொன்றிலும் ஐந்தடுக்குத் துடுப்புகளிருந்தன. அவனிடம் பெரியவையும் சிறியவையுமாக மொத்தம் 300 கப்பல்களிருந்தன.

## 5. டயோனிஸியஸின் முதல் பூயூனிக் போர்

**முதல் பூயூனிக் போர், கி.மு. 398-7; மோட்டியா முற்றுகை; அகழ்; டயரில் பேரரசன் அலெக்சாந்தரின் அகழுடன் ஒப்பிடல்.**

செய்ய வேண்டிய ஆயத்தங்களைச் செய்த பிறகு, கிரேக்கத் தலைவர்கள் யாரும் இதுவரையில் செய்திராத வேலையில் டயோனிஸியஸ் ஈடுபட்டான். அவன் உடனடியாகக் கிரேக்க நகரங்களை போயினீசியர்கள் கைகளிலிருந்து விடுதலை செய்ய மட்டும் புறப்படவில்லை. சிஸிலியிலுள்ள போயினீசிய நகரங்களை வென்று விடவும் புறப்பட்டான். தெற்குக் கடற்கரை வழியே பிரயாணஞ் செய்தான். ஜிலா, காமாரீனா, அக்கரகாஸ் முதலிய நகரங்கள் கார்த்தேஜியின் ஆட்சியிலிருந்து விடுதலையடைந்தன. வடக்குக் கரையிலிருந்த தெர்மே

விடுதலையடைந்தது. இரு எலிமியன் நகரங்கள் சேர்ந்த எரிஸ் அவனை வரவேற்றது. அதற்குப் படையுதவியளித்தான். செகெஸ்ட்டா தன்னுடைய சீமாட்டியாகிய பூயூனிக் அரசாங்கத்திற்கு விசுவாசமாகயிருந்தது. 80,000 காலாட் படையோடும், 3000 குதிரைப் படையோடும், புதிய விசைப் பொறிகளுடனும் மோட்டியாவை (Motya) நோக்கிப் புறப்பட்டான். அப்போது மோட்டியா, ஆரம்பத்தில் சைரகூஸ் எப்படி இருந்ததோ, அதேபோல் இருந்தது. மோட்டியா கடலால் சூழப்பட்ட ஒரு பட்டினம். ஒரு மேட்டுப் பாதையைச் செப்பனிட்டு அதன் மூலமாக அப்பட்டினம் பெருநிலத்தோடு சேர்க்கப்பட்டிருந்தது. அப்பட்டினம் பலமுள்ள சுவர்களால் சூழப்பட்டிருந்தது. அதன் சுவர்களில் சிலவற்றை நாம் இன்றைக்கும் காணலாம். அதனுடைய வளைகுடா ஒரு நீளமான ஒடுங்கிய நிலத்தால் பாதுகாக்கப்பட்டிருந்தது. மோட்டியாவிலுள்ளவர் தங்கள் பட்டினத்தைப் பாதுகாக்க உறுதி கொண்டார்கள். அவர்களுடைய பட்டினத்தைப் பெருநிலத்தோடு பிணைத்த மேட்டு பாதையை உடைத்தெறிந்தார்கள். டயோனிஸியஸ் தரை மார்க்கமாக நகரைத் தாக்க முடியாதபடி செய்துவிட்டனர். அவன் தன் கப்பல்களைக் கொண்டு மட்டும் மோட்டியாவைத் தாக்க முடியும். அப்படி அவன் முயன்றாலும், அவனுடைய புதிய போர்க் கருவிகள் நகரைத் தாக்கப் பயன்படாதென்பது அவர்களுடைய எண்ணம். அவர்கள் அவனது தீரச் செயல்களையும் பொறியமைப்பாளர்களின் திறமையையும் அறியாதவர்கள். டயோனிஸியஸ் தரை மூலமாகத் தாக்குதல் நடத்தவும், தன் நூதனக் கருவிகளைப் பயன்படுத்திப் பார்க்கவும் தீர்மானித்து விட்டான். மோட்டியர்கள் அழித்துவிட்ட மேட்டுப் பாதையைவிட மேம்பட்ட ஓர் பாதையை அமைக்கும்படி மாலுமிகளுக்குக் கட்டளையிட்டான். கப்பல்களைப் பயன்படுத்த அவன் விரும்பவில்லை. அவற்றை வளைகுடாவின் வடக்குக் கரைக்கு அனுப்பிவிட்டான். டயோனிஸியஸ் அமைத்த மேட்டுப் பாதையை விட மேம்பட்ட மேட்டுப் பாதைகளைக் கடலால் சூழப்பட்ட தீவுகளிலுள்ள நகரங்களைக் கைப்பற்றுவதில் பயன்படுத்தப்பட்டதை நாம் பின்னால் படிக்கப் போகிறோம்.

ஒரு மண் திட்டு மோட்டியாவையும் பெருநிலத்தையும் பிணைத்தது. டயோனிஸியஸ் மோட்டியாவைத் தாக்க ஆரம்பித்தான். அவனது படைகள் மோட்டியாவை நெருங்கிவிட்டன. சிக்கன்களைத் தன் கட்சியில் சேர்த்துக் கொண்டான். செகெஸ்ட்டா முற்றுகையிடப்பட்டது. காம்பானியன், என்டெல்லாவும் அதற்குத் தப்பவில்லை. அவ்விரு பட்டினங்களும் அவனைப் பின் வாங்கும்படி செய்தன. அவைகளை முற்றுகையிட்ட பிறகு முற்றுகையை வலுவாக்கப் போர் வீரர்களில் சிலரை அங்கு விட்டுவிட்டு மோட்டியாவிற்குத் திரும்பி வந்தான். அதே சமயத்தில் அப்பட்டினத்தை மீட்பதற்குக் கார்த்

தேஜி ஒரு படையைத் தயார் செய்தது. அதே சமயத்தில் டயோ னியஸியஸின் கவனத்தை சைரகூஸ் பக்கம் திருப்ப, கார்த்தேஜி ஒரு சிறிய கடற்படையை அனுப்பியது. பெரிய துறைமுகத்தில் நின்று கொண்டிருந்த கப்பல்களுக்கு அவை சேதம் விளைவித்தன. ஆனால் டயோனிஸியஸ் அதற்காக மனஞ் சோரவில்லை. இதை அவன் எதிர்பார்த்தே மோட்டியாவை நோக்கி வந்தான். அவர்கள் சைர கூஸைத் தாக்கியதால் பெரிய அபாயம் நேர்ந்துவிடாதென்பதை அவன் அறிந்திருந்தான். கார்த்தஜீனிய கடற்படைத் தலைவனான ஹிமில்கோ, டயோனியஸியஸ் உறுதியோடு மோட்டியாவைத் தாக்கு வதையறிந்தான். ஒரு பெரும் படையுடன் அவனும் மோட்டியாவை நோக்கிப் புறப்பட்டு வளைகுடாவை வந்தடைந்தான். சைரகூஸிய கடற்படை மோட்டியாவின் கடற்கரையோரமாக இருந்தது. அதனை அழித்து விட ஹிமில்கோ புறப்பட்டான். டயோனிஸியஸ் திடீர் தாக்குதலினால் அதிர்ச்சியுற்றதாகத் தோன்றியது. ஆனால் அவன் தன்னுடைய கப்பல்களைக் குடாவிற்குள் கொண்டுவரவில்லை. அவை கரையோரத்திலிருந்தன. ஆரம்பத்தில் தாக்குதலுக்குள்ளாகும் கப்பல்கள் எவைகளோ அவைகளில் வில்லாளிகளையும் கவண்கல் வீரர்களையும் நிறுத்தி வைத்தான். குடாவின் மேற்குக் கரையிலுள்ள தீபகற்பத்திற்குத் தன் படையைக் கொண்டு வந்தான். குறுகிய நிலப்பகுதியின் கரையில் தன்னுடைய பொறியமைப்பாளர்களை நிறுத்தி வைத்தான். கவண்கற்கள், ஹிமில்கோவின் படையை நோக்கி வீசப்பட்டன. பெருங்கற்கள் சரமாரியாகப் பகைவனுடைய கப்பல்களைத் தாக்கின. ஹிமில்கோவின் படை இந்த நூதன போர் முறையைக் கண்டதில்லை. ஆகையால் அவர்களால் அதைச் சமாளிக்க முடியவில்லை. பின் வாங்கினர். அவன் தன் கப்பல்களைத் திறமை யோடு திறந்த கடல் வெளிக்கு அனுப்பி விட்டான். அவற்றைப் பின் தொடர்ந்து போரிட ஹிமில்கோவிற்கு விருப்பமில்லை. ஆகை யால் அவன் கார்த்தேஜிக்குத் திரும்பிப் போய்விட்டான். மோட்டியா நகரவாசிகள் வேறு வழியின்றி தங்களுடைய விதியைத் தாங்களே அனுபவிக்க நேர்ந்தது. பட்டினத்தின் நிலப்பரப்பு மிகக் குறை வானது. எனவே செல்வந்தர்கள் பல அடுக்குகளையுடைய மாடி வீடுகளைக் கட்டி வாழ்ந்து வந்தனர். அவற்றைத் தாக்குவதற்காக மரத்தினால் மாடி கட்டினான் டயோனிஸியஸ். விரும்பியவிடத்திற்கு அவற்றை இழுத்துச் செல்லச் சக்கரங்களைப் பொருத்தினான். இவ்வித மாக ஆறடுக்கு மாடிகளை அமைத்தான். இவற்றை மத்திய காலத்தில் மணிக் கோபுரமென்றழைத்தார்கள் (Belfries). மணிக்கோபுரம் ஏற்படுவதற்கு இவன் முதன்வனல்லன். அவனுக்கு முன் இந்த முறை முற்றுகையின்போது பயன்படுத்தப்பட்டது. ஆனால் இவ்வளவு உயர மாக அவற்றை அமைத்தவர்களில் இவனே முதல்வன். இங்குக்கூட டயோனிஸியஸ் மாசிடோனியர்களுக்கு முன்னோடியாக விளங்கினான்.

போர் ஆகாயத்தின் மத்தியில் நடந்ததைக் காணும்போது வியப்பை பளிக்கிறது. கற்களாலான கோபுர வீடுகளில் வாழ்ந்தவர்களுக்குப்




போர் செய்வது சாத்கமாக இருந்தது. மரக்கட்டைகளாலான மணிக் கோபுரங்களைக் கொளுத்தி சாம்பலாக்க முயன்றனர். பந்தங்களையும்

தீவட்டிகளையும் அவற்றின்மீது வீசினுர்கள். அவை பெருஞ்சேதம் விளைவிக்கா வண்ணம் டயோனிஸியஸ் தடுத்து விட்டான். மாடி வீடுகளில் இருப்பவர்கள் சுவர்கள் மீது நிற்க முடியாவண்ணம் கவண்கற்கள் அவர்கள்மீது வீசப்பட்டன. அதே சமயத்தில் அரண் தகர்க்கும் யந்திரம் அரணைப் பொடி செய்து கொண்டிருந்தது. அரணில் ஒட்டை ஏற்பட்டு விட்டது. கை கலப்பு ஏற்பட்டு, உண்மை யான போராட்டம் ஆரம்பமாயிற்று. சரணடைவதில்லை என்று உறுதி கொண்ட மோட்டியா நகரவாசிகள் வீராவேசத்தோடு போரிட்டனர். ஒவ்வொரு வீட்டின் முன்னும், தெருக்களிலும் நேருக்கு நேர் கை கலந்து போரிட்டார்கள். சைரகூஸியப் படை ஒவ்வொரு அங்குலத்தைக் கைப்பற்றுவதற்கும் பெருந் தியாகம் செய்ய நேரிட்டது. பெருங்கற்கள் கிரேக்கர்களுடையு தலைகளைக் குறிப்பார்த்துப் பறந்து வந்தன. ஒவ்வொரு பெரிய வீட்டைக் கைப்பற்றச் செய்த போராட்டமும், ஒரு நகரத்தைக் கைப்பற்றுவதற் காகச் செய்யும் போராட்டத்தைப்போல் தோற்றமளித்தது. மணிக் கோபுரங்கள் நகரின் சுவர்களண்டை கொண்டு வந்து நிறுத்தப் பட்டன. அவற்றிற்கும் கற்களாலான மாடி வீட்டிற்குமிடையே பாலங்கள் கட்டப்பட்டன. கிரேக்க வீரர்கள் இந்தப் பாலங்கள் மூலமாக மோட்டியர்களது மாடி வீடுகளின்மீது தாவிச் சென்றுர்கள். நம்பிக்கை இழந்த மோட்டியர்கள் அவர்களைக் கீழே தள்ளினுர்கள். வீரர்கள் உயரத்திலிருந்து தெருக்களில் விழுந்தனர். அவர்கள் கதி என்னவாயிருந்திருக்குமென்பதை நாமறியோம். இருள் கவிழ்ந்தது. போராட்டமும் நின்றது. முற்றுகையிட்டவர்களும், முற்றுகைக் குள்ளானவர்களும் ஓய்வெடுத்துக் கொண்டார்கள். மோட்டிய நகர வாசிகள் வீரத்தோடு போரிட்ட போதிலும், இறுதியில் பெரும் எண்ணிக்கையைக் கொண்ட போர் வீரர்களால் முறியடிக்கப்பட்டார் கள். ஆனுல் போராட்டம் நின்றபாடில்லை. அது தொடர்ந்து நாள் தோறும் நடைபெற்றது. மோட்டியாவைக் கைப்பற்ற முடியவில்லை. கிரேக்கர்களுக்குப் பெரு நஷ்டமேற்பட்டது. டயோனிஸியஸ் பொறுமையையிழந்தான். அவன் மோட்டியர்களை இரவில் தாக்குவ தென்று முடிவு செய்தான். இதனை மோட்டியர்கள் எதிர்பார்க்கவே யில்லை. எனவே அவன் வெற்றி பெற்றுன்.

படையின் சிறு பகுதி, இன்னும் தற்காப்பிலிருந்த பட்டினத்தின் ஒரு பாகத்தில் ஏணிகள் மூலம் இறங்கியது. நகர வாயிலின் கதவைத் திறந்துவிட்டு மற்றவர்களை உள்ளே அனுமதித்தார்கள். அங்கே சிறிது நேரம் ஒரு தீவிரப் புரட்சி ஏற்பட்டு, கடைசியில் அது படுகொலையாக மாறிவிட்டது. கிரேக்கர்கள் நகரில் கொள்ளையடிப் பதைப்பற்றிச் சிந்திக்கவில்லை; பழி வாங்குவதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தார்கள். இப்போதுதான் முதன் முதலில் ஒரு போயினீசிய பட்டினம் அவர்கள் கையில் சிக்கியது. போயினீசி

யர்கள் கிரேக்கர்களை முன்பு நடத்தியது போல் இப்போது அவர்கள் போயினீசியர்களை நடத்த ஆரம்பித்துவிட்டனர். ஹிமேராவிற்கு ஹானிபால் இழைத்த தீமையை அவர்கள் தங்கள் ஞாபகத்திற்குக் கொண்டுவந்தார்கள். கடைசியில் கொலை செய்வதை நிறுத்தும்படி டயோனிஸியஸ் கட்டளையிட்டான். அடிமைகளின் சந்தையிலே அவர்களால் நல்ல பணம் கிடைக்க வாய்ப்பிருக்கும்போது கொன்று குவிப்பதால் ஒரு காலணுக்கூட கிடைக்காதென்ற ஞானம் அவனுக் குண்டு. வெற்றி பெற்றவர்கள் பட்டினத்தைச் சூறையாட ஆரம் பித்தார்கள். மீத மிச்சமில்லாமல் மோட்டியர்களுடைய சொத்து அவர்களுக்கு வாரி வழங்கப்பட்டது. உயிரோடிருந்த மோட்டி யர்கள் அடிமைகளின் சந்தையிலே விற்கப்பட்டனர். ஆனல் அங் கிருந்த கிரேக்கர்களை அவர்கள் அடிமைகளாக விற்கவில்லை. அவர்களெல்லோரும் சிலுவைகளில் அறையப்பட்டார்கள். மோட் டியா நகரிலே ஒரு சிசெல் (Sicel) படையை நிறுத்தி; அதை விட்டுப் புறப்பட்டார்கள்.

**டயோனியஸின் இரண்டாவதுபோர், கி. மு. 397; ஸிஸிலிக்கு கார்த்தஜீனியர்களின் படை எடுப்பு, கி.மு. 397; ஹிமில்கோ, எரிஸையும் மோட்டியாவையும் கைப்பற்றுதல்; மோட்டி யாவின் முடிவு; லில்லிபியம் உதயமாதல் (மார்ஸாலா).**

ஸிஸிலிய வரலாற்றில் இதுவரை கண்டிராத ஓர் நிகழ்ச்சியை டயோனிஸியஸ் செய்து முடித்தான். பிறகு குளிர் காலத்தைக் கழிப்பதற்காக சைரகூஸுக்குத் திரும்பி வந்துவிட்டான். தளிர்விடு காலம் ஆரம்பமாயிற்று. டயோனிஸியஸ் படையுடன் செகெஸ் டாவை நோக்கிப் புறப்பட்டான். செகெஸ்டா இன்னும் முற்றுகையி லிருந்தது. அதே சமயத்தில் கார்த்தேஜியில் மோட்டியாவின் வீழ்ச்சி பரபரப்பை யுண்டாக்கியது. விழிப்படையாவிடில் ஸிஸிலியி லுள்ள பூயூனிக் நகரங்கள் தன் கைவிட்டுப் போய்விடுமென்று கார்த்தேஜி நினைத்தது. ஒரு பெரும் படையைத் திரட்டியது; ஹிமில்கோவின் தலைமையில் ஸிஸிலிக்கு அனுப்பியது. ஹிமில்கோ மேலும் படைகளைத் திரட்டிக்கொண்டு புறப்பட்டுவிட்டான். பானோ ரோமாவிற்கு அதைப்பற்றிய செய்தியை ஹிமில்கோ அனுப்பினன். டயோனிஸியலின் சகோதரன் லெப்டைன்ஸ் என்பவன் கார்த்தேஜி யின் கடற் படையைத் தாக்கிச் சிறிது சேதம் விளைவித்தான். ஆனல் அப்படை பதனமாக ஸிஸிலிக்கு வந்து சேர்ந்தது. முதலில் ஹிமில்கோ, எரிஸைக் கைப்பற்றினன். பிறகு அவன் மோட்டியாவை நோக்கிப் புறப்பட்டான். எளிதில் அதை வென்ருன். மோட்டியாவை ஹிமில்கோ கைப்பற்றியதும் டயோனிஸியஸ் செகெஸ்டா முற்று கையைக் கைவிட்டு சைரகூஸுக்குத் திரும்பினன். எரிஸை இழந் ததைப்பற்றி அவன் கவலை கொள்ளவில்லை. அவன் யுத்தத்தைத்

தொடர்ந்து நடத்தாமல் ஏன் திரும்பி வந்தான் என்பதே ஒரு பிரச்சினையாகி விட்டது. மோட்டியாவைக் கைப்பற்ற பல தியாகங்களையும் செய்தவன். அதையும் அவன் விட்டுவிட்டான். கார்த்தஜீனியப் படை பானேரம்ஸிலிருந்து எரிஸையடைந்தது. அப்படையை அவன் தடுத்து நிறுத்தாததற்குக் காரணமென்னவாயிருக்குமென ஆராயவேண்டியுள்ளது. ஹிமில்கோவைப் பலங்கொண்டு தாக்கி, அவனுடைய முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தாமல் செகஸ்டாவின் முற்றுகையைக் கெடுபிடி செய்வதில் எவ்வித நன்மையும் ஏற்படாதென்பதை அவன் உணர்ந்தவன். இரு கட்சிகளின் படை பலத்தையும் அங்கிருந்த சூழ்நிலையையும் அறியாமல் டயோனிஸியஸின் செய்கையைப்பற்றி நாம் முடிவு காண முடியாது. போர்க் களத்தில் அனுகூலமேற்படுவதைக் கண்டாலொழிய டயோனிஸியஸ் போர்முனைக்குச் செல்லமாட்டான். முற்றுகைகள் மூலமாகவும், அரசியல் சூழ்நிலை தந்திரங்கள் மூலமாகவும் அவன் வெற்றிகளையடைந்தானே தவிர குறிப்பிட்ட போர்க்களத்தில் நேருக்கு நேர் நின்று எதிரியோடு போர் செய்து அவன் வெற்றியடைந்ததில்லை. எப்போது அவன் மோட்டியாவைப் பகைவன் கைப்பற்றிக்கொள்ள விட்டுவிட்டானே அப்போதே அவன் சைரகூஸுக்குத் திரும்பிச் செல்லும் பயணமும் ஆரம்பித்து விட்டது. அவனுடைய படை தங்குவதற்கு வசதியான இடம் அவனுக்குக் கிடைக்கவில்லை. உணவுப் பொருள்களும் குறைந்து கொண்டிருந்தது. அவன் தன் முதற் போரில் அடைந்தவைகளை எல்லாம் விட்டுவிட நேர்ந்தது. இப்போது மோட்டியா ஒரு கிரேக்க நகரமன்று; ஒரு சிசெல் நகரமன்று; போயினீஸியர்களுடைய நகரமுமன்று அது ஒரு புது நகரமாயிற்று. அதனுடைய பழைய பெயர் மறைந்துவிட்டது. மோட்டியன் வளைகுடாவிற்குத் தென் திசையிலுள்ள பெருநிலப் பகுதியின் முனையில் லில்லிபேயம் (Lilybaeum) என்ற ஒரு புதிய நகரம் எழும்பிற்று. அன்று முதல் அப் புதிய நகரம், சிஸிலித்தீவின் மேற்குப் பக்கத்தில் கார்த்தஜீனியர்களுடைய மிக வலுவுள்ள கோட்டையாக்கப்பட்டது. நகரின் இரு பக்கங்கள் கடலால் சூழப்பட்டிருந்தன. மற்ற இரு பக்கங்கள் பாறைகளிலிருந்து வெட்டப்பட்ட அகழிகளால் சூழப்பட்டிருந்தன. மோட்டியா வரலாற்றின் தொடர்ச்சியே லில்லிபேயத்தின் வரலாறு. கிரேக்கர்கள் அல்லது ரோம முற்றுகையாளர்களால் கைப்பற்ற முடியாத அளவில் அந் நகரம் கட்டப்படவில்லை.

### ஹிமில்கோ மெஸ்ஸானுவைக் கைப்பற்றி அதை அழித்தல்

டயோனிஸியஸைப் போயினீசிய சிஸிலியிலிருந்து ஹிமல்கோ விரட்டியடித்த பிறகு, ஒரு புதிய நகரத்தை எழுப்பினன். பிறகு பகைவனுடைய நாட்டில் படைகளைச் செலுத்தி, சைரகூஸைக் கைப்

பற்றத் திட்டமிட்டான். ஆனால் நேர்முகமாக சைரகூஸைத் தாக்க விரும்பவில்லை. சைரகூஸைத் தாக்குவதற்கு முன் மெஸ்ஸானாவைக் கைப்பற்றுவது அவனுக்குச் சுலபமாகத் தோன்றியது. அந் நகரத்தைக் கைப்பற்றுவதால் கிரேக்கர்களுக்கு ஒரு பலத்த அடி கொடுத்ததற்குக்கொப்பாகுமெனக் கருதினான். மோட்டியாவிற்குக் கிரேக்கர்கள் இழைத்த பழியை மெஸ்ஸானாவில் தீர்த்துக்கொள்ளலா மென்பது அவன் நோக்கம். மெஸ்ஸானா நகரின் சுவர்கள் பழுதாகி விழ்ந்துகொண்டிருந்தன. அந் நகரம் கிரேக்கர்கள் கொள்ளை யடிப்பதற்கு ஏற்றதாகத் தோன்றியது. ஆனால் அந் நகரவாசிகளில் பெரும்பாலோர் அவன் அதை முற்றுகையிடுவதற்கு முன் அதை விட்டு அருகிலுள்ள மலைகளிலிருந்த கோட்டைகளில் போய் ஒளிந்துகொண்டார்கள். ஹிமில்கோ எவ்வித எதிர்ப்புமின்றி நகருக்குள் புகுந்தான். அங்கு மனிதர்களுக்குப் பதிலாகக் கற்கள் தானிருந்தன. ஆகவே கார்த்தஜீனியப் படைத் தலைவன் தான் தீர்த்துக்கொள்ள வேண்டிய பழியை, கற்களைக் கொண்டு தீர்த்துக் கொண்டான். அதன் சுவர்களைத் தரை மட்டமாக்கினான். மாளிகை களும் தரைமட்டமாக்கப்பட்டன. நகரமிருந்த இடத்தை யாரும் காணாவண்ணம் அழித்துவிட்டான்.

### டாரோமேனியத்தின் உதயம்

ஜல சந்தியை நோக்கியவாறுஇருந்த சிஸிலிய நகரம் அழிக்கப் பட்டது கிரேக்கர்களுடைய நலனைப் பாதிக்கக்கூடிய அளவில் கொடுக்கப்பட்ட ஓர் பேரடியாகும். மற்றொரு புதிய நகரை எழுப்பு வதால் அவர்களுடைய நலனை மேற்கொண்டு பாதிக்கும்படி செய்ய ஒரு புதிய முறையைக் கையாண்டான். சிஸிலிய மக்களுக்காகப் புது நகரை அமைப்பதால் அவர்கள் நட்பைப் பெறவும், அதே சமயத்தில் அவர்கள் சைரகூஸை வெறுக்கும்படி செய்ய வேண்டுமென்பதும் அவனுடைய நோக்கமாயிருந்தது. டயோனிஸியஸ் சிஸிலியின் பழங்குடி மக்கள் நட்பைச் சம்பாதிக்க முயன்றதை நாமறிவோம். அவன் நாக்ஸாஸை அழித்தபோது அங்குள்ள நிலங்களை சிஸிலியர் களுக்குப் பகிர்ந்து கொடுத்தான். டவுரஸ் குன்றுகளின் மீது ஒரு பட்டினத்தை எழுப்பி அதைச் சிஸிலியர்களுக்குக் கொடுத்துவிட ஹிமில்கோ திட்டமிட்டான். மறைந்துபோன பழைய நாக்ஸாஸ் பட்டினத்திற்குப் பக்கத்திலிருந்த குன்றுகளில் புதிய பட்டினம் கட்டப்பட்டது. இரு குன்றுகள் அதற்குத் தற்காப்பரண்களாயின. அப் பட்டினம் சிஸிலியிலுள்ள அழகிய நகரங்களிலொன்று. அதே ஆண்டு அவன் கட்டிய நகரங்களில் இது இரண்டாவதாகும். இரு பட்டினங்களும் செழிப்புள்ளப் பட்டினங்களாயின. மோட்டி யாவைவிட லில்லிபேயம் மிகவும் கீர்த்திவாய்ந்த நகரமாயிற்று. நாக்ஸாஸைவிட டாரோமேனியம் வரலாற்றில் சிறப்பான இடத்தைப்

பெற்றிருக்கிறது. புதிய நகரங்களை அமைப்பதில் அவன் புகழ் பெற்று விளங்கினான். ஹிமில்கோவும், டயோனிஸியஸும் புதிய நகரங்களை நிர்மாணிப்பதிலும் பழைய நகரங்களை அழிப்பதிலும் புகழ்பெற்றவர்கள். போயினீசியர்களும் கிரேக்கர்களும் புதிய நகரங்களின் ஆக்க வேலைகளையும் பழைய நகரங்களின் அழித்தல் வேலைகளையும் செய்தல் அக்காலத்தின் பண்பாடாக இருந்தது.

### காட்டானேயில் கடல்யுத்தம். டயோனிஸியஸ் பின்வாங்கிச் செல்லுதல்

டயோனிஸியஸ் சைரகூஸைப் பாதுகாப்பதற்கான நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டான். அவனிடம் 200 கப்பல்கள் மட்டுமிருந்தன. அவன் தன்னுடைய சகோதரன் லெப்ட்டைன்ஸ் என்பவனைக் கடற்படைத் தலைவனாக நியமித்தான். காட்டானே கடற்கரைக்கருகில் ஒரு கடற்போர் நடந்தது. போயினீசிய கடற்படை எண்ணிக்கையில் பெரியதாக இருந்ததால் கிரேக்கக் கடற்படை பெரு நஷ்டத்தோடு தோல்வியுற்றது. அவர்கள் படைகளையும் போரில் ஈடுபடுத்தினார்கள். அத்துடன் லெப்ட்டைன்ஸ் ஒரு சிறந்த படைத் தலைவனல்லன். அவன் தன் கப்பல்களை நெருங்கிய தூரத்தில் நிறுத்தவில்லை. அப்பொழுது டயோனிஸியஸ் கரையிலிருந்துகொண்டு போர் நடப்பதைப் பார்த்துக்கொண்டிருந்தான். கடலில் ஏற்பட்ட தோல்வியைச் சரிக்கட்ட தரையில் போரிடவேண்டும். ஹிமில்கோ அவ் விடத்திற்கு உடனடியாக வரமுடியவில்லை. வழியில் எரிமலையினால் தொல்லை ஏற்பட்டது. நேர் பாதையில் அவன் வரமுடியவில்லை. அவன் போர்க்களத்திற்கு வருவதற்கு முன் டயோனிஸியஸ் அவ் விடத்தை விட்டகன்று, சைரகூஸை நோக்கிப் பின்வாங்கினான். சிஸிலியர்கள் போரிட ஆவலோடிருந்தும் அவன் சைரகூஸில் பதுங்கினான். இந் நகரில் வீழ்ச்சியுற்றால் சிஸிலியில் கிரேக்கர்கள் தலையெடுக்கவே முடியாது. ஆகையால், டயோனிஸியஸ் உதவியைக் கோரி, இத்தாலி, கொரிந்தியா, ஸ்பார்ட்டா முதலிய நாடுகளுக்குத் தூதுவர்களை அனுப்பினான்.

### சைரகூஸ் முற்றுகையின் கிலி

வெற்றபெற்ற கார்த்தஜீனியர்களுடைய கடற்படை பெரிய துறைமுகத்தில் வந்துசேர்ந்தது. தரைப்படை ஹிமில்கோவின் தலைமையில் சைரகூஸை வந்தடைந்தது. போர்வீரர்கள் அனப்பஸ் ஆற்றங்கரைகளில் கூடாரங்களில் தங்கினார்கள். போலிச்சானா மேட்டின்மேல் ஹிமில்கோ தன் கூடாரத்தை அமைத்துக்கொண்டான். சதுப்பு நிலப் பகுதிகளிலும் போர்வீரர்கள் தங்க நேரிட்டது. ஹிமில்கோவின் கூடாரம் ஒலிம்பியன் சீயஸின் ஆலயத்திற்கு அருகிலிருந்தது. அவன் அங்குக் கூடாரமமைத்துத்

தங்கியது கிரேக்கர்களுடைய சமயத்திற்குத் தீங்கிழைத்ததற்கு ஒப்பாயிற்று. அவன் மேலும் எப்பிபோலேவிற்கு வடக்கிலிருந்த டெமீட்டர், கோரே என்ற தெய்வங்களின் ஆலயங்களை இடித்துத் தள்ளினன். புறச் சாதியார்களின் படையில் கொள்ளை நோய் பரவிற்று. தேவ கோபம் கொள்ளை நோய்க்குக் காரணமெனக் கிரேக்கர்கள் நினைத்தார்கள். சைரகூஸின் தூதுவர்கள் பெலப்போனீஸிலிருந்து 30 கப்பல்கள் லாசிடாமோனியப் படைத் தலைவன்கீழ் அப்போதுதான் திரும்பிவந்தார்கள். இதற்கிடையில் தனக்கும், பாதுகாப்பாக மூன்று கோட்டைகளை ஹிமில்கோ கட்டினன். ஒரு கோட்டை போலிச்சானவில் கட்டப்பட்டது. மற்றொன்று துறைமுகத்தின் மேற்குக் கரையிலுள்ள தாஸ்கன் (Dascon) என்ற விடத்தில் கட்டப்பட்டுளது. மூன்ருவது கோட்டையை பிளிமிரியோன் என்ற விடத்தில் கட்டினர்கள். உதவிப்படை வந்த பிறகு யூயினிக்தானிய கப்பலை சைரகூஸியர்கள் கைப்பற்ற முயன்றதன் பயனாக ஒருசிறிய கடற் சண்டை சில கார்த்தஜீனிய கப்பல்களுக்கும் சைரகூஸியர்களின் கப்பல்களுக்கு மிடையே நடந்தது. சைரகூஸியர்கள் இச் சண்டையில் வெற்றியடைந்தார்கள்.

### சைரகூஸில் சர்வாதிகாரிக்கு எதிரான உணர்ச்சி

சைரகூஸ் நகரிலுள்ளவர்கள் டயோனிஸியஸையும், அவனது போர் முறையையும் வெறுத்தார்கள். அவர்கள் பெலப்போனீசியிலிருந்து வந்துள்ள போர் வீரர்களின் உதவியைக்கொண்டு டயோனிஸியஸின் அடிமைத்தளையிலிருந்து விடுதலைபெற விரும்பினர்கள். டயோனிஸியஸ் அந் நகரத்தின் சபையைக் கூட்டினன் அவர்களுடைய தோற்றங்களிலிருந்தும் அவர்களின் பேச்சுகளிலிருந்தும், அவர்களுக்குத் தன் பேரிலுள்ள வெறுப்பை யறிந்து கொண்டான். அப்போது ஒரு புரட்சி ஏற்படும்போல் தோன்றியது. பெலப்போனீசியர்கள், தாங்கள் கார்த்தஜீனியர்களுக்கெதிராகப் போர் புரியவந்ததாகவும் டயோனிஸியஸுக்கெதிராகப் போர் புரியவில்லை யென்றுங் கூறிப் புரட்சியேற்படாவண்ணம் தடுத்து விட்டனர். டயோனிஸியஸுக்கு வந்த அபாயம் நீங்கி விட்டது. ஆனல் அதை அவன் தனக்கு ஓர் எச்சரிக்கையாக எடுத்துக் கொண்டான். சைரகூஸியர்கள் தன்னிடம் பிரியம் கொள்ளும் முறையில் நடந்துகொண்டான்.

### கார்த்தஜீனியப் படையில் கொள்ளை நோய்; கார்த்தஜீனியர்களை டயோனிஸியஸ்தாக்குதல்; கார்த்தஜீனியர்களின் தோல்வி.

கோடையின் கடும் வெய்யிலில் சதுப்புநிலத்தின் கெட்ட காற்றுத் தன் நாச வேலையைச் செய்ய ஆரம்பித்துவிட்டது. ஹிமில்கோவின் படை கொள்ளை நோயால் பீடிக்கப்பட்டது.

மரித்தவர்களை அடக்கஞ்செய்ய முடியாத அளவில் போர் வீரர்கள் இறந்துகொண்டிருந்தனர். டயோனிஸியஸ் பகைவனது படையி லேற்பட்ட அழிவைக்கண்டான். தாக்குவதற்கு அதுவே தக்க சமய மென்றிருந்தான். கார்த்தஜீனியர்களைக் கடல் மூலமாகவும் தாக்கத் திட்டம் வகுத்தான். சைரகூஸிய கடற்படை, லெப்ட்டைனிஸின் தலைமையிலும் ஸ்பார்ட்டாவிலிருந்து வந்த படைத்தலைவன் தலைமை யிலும், கார்த்தஜீனிய கடற்படையைத் தாக்க ஆரம்பித்தன. கார்த்தஜீனிய கடற்படை அப்போது டாஸ்க்கன் கடற்கரை யோரமாக நின்றுகொண்டிருந்தது. டயோனிஸியஸ் தரைப்படைக்குத் தலைமைதாங்கி நின்றான். ஓரிரவு பகைவனுக்குத் தெரியாமல் தன் படையை அவன் சுற்றி வளைத்து நடத்திச் சென்றான். விடியற் காலையில் தன் படையுடன் பூயூனிக் படைக்கெதிரில் வந்து நின்றான். போர் கடுமையாக நடந்தது. குதிரை வீரர்கள் கிழக்குப் பக்கத்திற்குத் திரும்பி வந்து கார்த்தஜீனியர்களைத் தாக்கினார்கள். மேற்குப் பக்கத்தில் கூலிப்படை போரிட்டுக் கொண்டிருந்தது அவர்களை அங்கே தனிமையில் விட்டு வரவேண்டுமென்பது டயோனிஸியஸின் கட்டளை. டாஸ்க்கனிலிருந்த கோட்டையும் போலிச்சானா என்ற விடத்திலிருந்த கோட்டையும் தாக்கப்பட்டன. இவ்விடங்களில் தான் போரின் உச்சநிலையைக் காணலாம். டாஸ்க்கனைக் குதிரை வீரர்கள் தாக்கினார்கள். டயோனிஸியஸின் திட்டம் வெற்றிகரமாக முடிந்தது. ஆயிரம் கூலிப்படை வீரர்களும் அழிக்கப்பட்டார்கள். கோட்டைகள் கைப்பற்றப்பட்டன. கார்த்தஜீனியர்களுடைய கடற் படையும் தோற்கடிக்கப்பட்டது. இவ்வாறு தரையிலும் கடலிலும் டயோனிஸியஸ் வெற்றியடைந்தான். வெற்றியடைந்த போர் வீரர் கள் கடற்கரையை நோக்கி ஓடினார்கள். கரையிலிருந்த கார்த்தஜீனிய படகுகளுக்கும், கடலோரமாக நின்றுகொண்டிருந்த கப்பல்களுக்கும் தீ வைத்தார்கள். அப்போது வீசிய கடுங்காற்று அக் கப்பல்கள் பற்றி எறிவதற்குச் சாதகமாயிருந்தது. டாஸ்க்கன் வளைகுடா தீமய மாகக் காட்சியளித்தது. தீப்பற்றிய கப்பல்களிலிருந்தவர்கள் கடலில் குதித்துத் தரையை நோக்கி நீந்தி வந்துகொண்டிருந் தார்கள்.

**டயோனிஸியஸின் இரட்டைச் செயல் தொடர்பு; கார்த்தே ஜியைப்பற்றிய அவன் கொள்கை; டயோனிஸியஸின் ஒத்து ழைப்பின்பேரில் ஹிமில்கோ தப்பிச்செல்லுதல்.**

விதி கார்த்தஜீனியர்களைக் கிரேக்கர்கள் கையில் ஒப்படைத்தது. மெஸ்ஸானாவை யழித்த புறச் சாதியார்களைப் பழி வாங்குவதென்று கிரேக்கர்கள் திட்டமிட்டார்கள். டயோனிஸியஸ் தன்னை ஜிலா னுடைய சந்ததி என்று சொல்லிக்கொண்டான். டாஸ்க்கனில் கிடைத்த இரட்டை வெற்றியை ஹிமேராவில் கிடைத்த வெற்றியோடு

ஒப்பிடவேண்டும். அவன் தன்னை ஹெல்லாவின் உண்மையான தலைவனென்று நிருபிபிக்க முடியவில்லை. அவன் தன்னைச் சைரகூஸின் மீது பற்றுள்ளவனைப்போல் காட்டிக்கொள்ள முடியவில்லை. அவன் ஒரு சர்வாதிகாரியானபடியால் அவ்விதம் நடந்துகொள்ள, முடியவில்லை. அவனது அதிகாரம் மக்களின் நம்பிக்கையின் காரணமாகக் கிடைத்ததன்று. அவன் கார்த்தஜீனியர்களோடு போரிட்டது உண்மை. ஆனால் கார்த்தஜீனியர்களை சிஸிலியிலிருந்து விரட்டிவிட வேண்டுமென்ற நோக்கத்துடன் அவன் போரிடவில்லை. பூயினிக் பயம் டயோனிஸியஸின் கொடுங்கோலாட்சியை நிலைபெறச் செய்யும் ஒரு சாதனம். கார்த்தஜீனியர்களின் மேலுள்ள பயத்தின் காரணமாக சைரகூஸியர்கள் அவனுடைய சர்வாதிகார ஆட்சியைப் பொறுத்துக்கொண்டிருந்தனர். இந்த ரகசியத்தை டயோனிஸியஸ் அறிந்தவன். அதை ஹிமில்கோவும் அறிந்திருந்தான். அவர்கள் இருவருக்குமிடையே ரகசியப் பேச்சுவார்த்தை நடந்தது. இரவில் ஹிமில்கோவும், அவனுடைய கார்த்தஜீனியப் போர் வீரர்களும் கார்த்தேஜியை நோக்கிக் கடற்பிரயாணம் செய்ய டயோனிஸியஸ் அனுமதியளித்துவிட்டான். இதற்குப் பதிலாக டயோனிஸியஸ் அவனுக்கு 300 தாலந்து பொன் கொடுத்தான். டயோனிஸியஸ் தன் போர் வீரர்களைச் சண்டை செய்யாமல் ஓய்ந்திருக்குமாறு கட்டளையிட்டான். மூன்று நாள் வரையில் போர்களத்தில் அமைதி நிலவிற்று. நான்காம் நாள் இரவு ஹிமில்கோ தன் கார்த்தஜீனிய வீரர்களுடன் நாற்பது மூன்றடுக்குத் துடுப்புக் கப்பல்களுடன் கார்த்தேஜியை நோக்கிப் புறப்பட்டுவிட்டான். அவனுடைய கூலிப் படையும் அவனுடைய நேச நாடுகளுடைய படைவீரர்களும் கைவிடப் பட்டார்கள். கார்த்தஜீனிய படைத்தலைவர்கள் கூலிப்படைப் போர் வீரர்களைக் கைவிட்டோடுவது வழக்கமாகப் போய்விட்டபடியால் கூலிப்படை போர் வீரர்கள் கார்த்தஜீனியர்கள் படையில் சேர்வதற்கு விரும்பியதில்லை. ஹிமில்கோவின் படை தடையின்றிப் பிரயாணஞ்செய்ய-முடியவில்லை. துடுப்புகளின் சத்தம் கொரிந்திய மாலுமிகளைத் திடுக்கிட செய்தது. பகைவர்கள் தப்பித்துச் செல்வதை அவர்கள் அறிந்துகொண்டார்கள் டயோனிஸியஸுக்குச் செய்தி அனுப்பப்பட்டது. ஆனால் டயோனிசியஸ் அவைகளைத் தொடர்ந்து பிடிப்பதற்காக உடனடியாகக் கட்டளையிடவில்லை. அவனிடமிருந்து கட்டளை வரும்வரையில் கொரிந்தியர்கள் காத்திருக்கவில்லை. அவர்கள் தப்பிச்செல்லும் கப்பல்களைத் தாக்க ஆரம்பித்துவிட்டார்கள். ஹிமில்கோ தப்பிச்சென்றுவிட்டானென்பதைத் தெரிந்த பிறகு டயோனிஸியஸ் தப்பிச்செல்லுகிற கப்பல்களைப்பிடிக்க ஆர்வம் கொண்டவனைப்போல் காட்டிக்கொண்டான். ஹிமில்கோவின் சிஸெல் போர் வீரர்கள் தப்பித்து, தங்கள் நாட்டிற்கு ஓடிவிட்டார்கள். அவனுடைய கூலிப்படை மட்டுட் ஆபத்தில் சிக்கிக்கொண்டது.

அவர்களில் பலர் கொல்லப்பட்டிருக்கவேண்டும் அல்லது அடிமை களாக விற்கப்பட்டிருக்கவேண்டும். அவர்களில் ஐபீரியாவிலிருந்து வந்த போர் வீரர்களை டயோனிஸியஸ் தன் படையில் சேர்த்துக் கொண்டான்.

இவ்வாறு டயோனிஸியஸிஸ் கார்த்தஜீனியர்களுடன் செய்த முதல் போராட்டம் முடிந்தது. இந்த முதல் போராட்டம் கிரேக்கர் களுக்குப் பூரண வெற்றியை யளித்தது. கார்த்தஜீனியர்களுடைய நகரம் மேற்குக்கோடியிலிருந்தது. சிஸிலியின் பெரும் பகுதி சைரகூஸின் சர்வாதிகாரியின் ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப் பட்டது. கிரேக்கர்களையும் புறச்சாதியார்களையும் கொண்ட சிஸிலியில் ஒரு சிறப்பான நகரம் கட்டப்பட்டது. பழைய மோட்டியா லில்லிபீயமென்ற பெயருடன் உயிர்பெற்றெழுந்தது. மெஸ்ஸாஞ தன் அழிவிலிருந்து மறுபடியும் உயிர் பெற்றெழ வேண்டும்.

## 6 இரண்டாம் பூயூனிக் யுத்தமும் டயோனிஸியஸின் சிஸெல் வெற்றிகளும்

கார்த்தேஜி நாட்டுடன் டயோனிஸியஸ் உண்மையில் பகை கொண்டிருந்தாஞ, இல்லையா, என்ற ஐயப்பாட்டை அவன் அந்நாட்டின் மீது அடைந்த வெற்றிக்குப்பின் அவன் நடந்து கொண்ட முறை தெளிவாக வெளிப்படுத்துகிறது; கார்த்தஜீனி யர்களை சிஸிலித் தீவிலிருந்து விரட்டியடிக்கவும், சிஸிலியை அதன் கிழக்குக் கடற்கரையிலிருந்து மேற்குக் கடற்கரை வரையிலும் ஓர் கிரேக்க தீவாக மாற்றுவதற்கும் அது ஏற்ற காலமாக இருந்தது. பல நூற்றுண்டுகள் கழித்துவரும் மற்ஞெரு சந்தர்ப்பத்திற்காகக் காத்திருக்கத் தேவையில்லாத சந்தர்ப்பம் அது. கார்த்தேஜி தனது அழிக்கப்பட்ட படையைப்போன்ற ஒரு படையை உடனடியாக மறுபடியும் தயாரித்துவிட முடியாத நிலையிலிருந்தது. தன் உடல், பொருள், ஆவி யாவையும் கிரேக்க நலன் என்ற ஒரே குறிக் கோளுக்காக ஈடுபாடு செய்த தேசபக்தர், கிடைத்த வெற்றியை முழு வெற்றியாக்கிக்கொள்ள மேற்கு சிஸிலியின் மீது உடனே படை எடுக்க விரைந்திருப்பர். ஆனுல் டயோனிஸியஸ் அதைச் செய்ய வில்லை. அவன் தன் சர்வாதிகார ஆட்சி முறையைப் பாதுகாத்துக் கொள்வதில் கண்ணும் கருத்துமாயிருந்தான். சிஸிலி தீவின் ஒரு பாகத்திலுள்ள புறச்சாதியார்களின் நாட்டில் தன் ஆதிக்கத்தின் காவல் நிலையமிருப்பதைமட்டும் அவன் உணர்ந்தான்.

**டயோனிஸியஸ் சிஸல் நாட்டை வெல்லப் படையெடுத்தல் (396—393); டாவுரோமேனியத்தின் மீது பயனற்ற தாக்குதல்.**

இரண்டாவது பூயூனிக் யுத்தம் ஐந்தாண்டு கழித்து ஆரம்ப மாயிற்று. இதற்கிடையில் டயோனிஸியஸ் சிஸல் நாட்டின் மீது தன் ஆதிக்கத்தைப் பரவச் செய்வதில் முயன்று கொண்டிருந்தான். அவன் மார்கான்டைனு, செப்பலோடியோன், ஹன்னு முதலிய நகரங்களைத் தன் நாட்டுடன் சேர்த்துக்கொண்டான். அவன் அக்கிரியோன், சென்டுரிப்பாடு மற்றும் பல நாடுகளின் சர்வாதி காரிகளோடு ஒப்பந்தங்கள் செய்துகொண்டான். டாவுரோ மேனியம் கார்த்தஜினியர்களால் டாவுரஸ் குன்றின்மேல் கட்டப் பட்ட ஒரு புதிய நகரம். அந்நகரத்தைக் கைப்பற்ற டயோனிஸியஸ் திட்டமிட்டான். அவன் அந்நகரைக் குளிர்காலத்தின் மத்தியிலே முற்றுகையிட்டான். டயோனிஸியஸின் ஆட்சியிலே குளிர் காலத்தில் போர் நடவடிக்கையிலீடுபடுவது ஒரு பழக்கமாகயிருந்தது. பழைய கிரீஸில் குளிர்காலத்தில் படை எடுப்பது வழக்கமல்ல. ஆனுல் மாஸிடோனியர் குளிர்காலத்திலும் படையெடுப்பிலீடுபட்டிருந் தார்கள். ஒரு நாள் இருண்ட இரவில் டயோனிஸியஸ் தன் படை யுடன் டாவுரோமேனியம் நகரைக் கைப்பற்ற அதன் மலைமீதேறினுன். நகரின் ஓர் அரண் கைப்பற்றப்பட்டது. டயோனிஸியன் போர் வீரர்கள் அவ்வரணிற்குள் சென்ருர்கள். அப்பொழுது சைரகூஸின் படை எண்ணிக்கையில் அதிகமான போர் வீரர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்டது. சைரகூஸியர்களில் 600 பேர் கொல்லப்பட் டார்கள். மற்றவர்கள் மலையுச்சியிலிருந்து கீழே விரட்டப்பட் டார்கள். கீழே விரட்டப்பட்டவர்களில் டயோனிஸியஸும் ஒருவ னுவான். டயோனிஸியஸ் செங்குத்தான மலை விளிம்பிலிருந்து மிகச் சிரமப்பட்டுக் கீழே இறங்கினுன்.

சோலஸை வென்றது

டயோனிஸியஸ் வடக்குக் கடற்கரையிலே தன் ஆதிக்கத்தை நிலைநாட்ட முன்னேறியபோது, அவன் போயினீஸியர்களின் எல்லைவரையில் முன்னேறிச்சென்ருன். கிழக்குக்கோடியில் போயி னீஸியர்களுக்குச் சொந்தமான மூன்று பட்டினங்களிருந்தன. அவற்றில் ஒன்ருகிய சோலஸை டயோனிஸியஸ் கைப்பற்றினுன். அவன் போரிட்டு அதை வென்றுவிடவில்லை. உள் நாட்டில் ஏற்பட்ட ஒரு துரோகச்செயல் அவன் அந்த நகரை வெல்லுவதற்கு உதவி புரிந்தது. டயோனிஸியஸ் அந்நகரைக் கைப்பற்ற எவ்வித மான திட்டமும் வகுக்கவில்லை; அவன் பல தியாகங்களும் புரிய வில்லை. ஆகையால் அவன் அதை, நற்காலத்தின் பயனுல் வென்ரு னென்றே சொல்லவேண்டும். ஹிமில்கோ தோல்வியடைந்த பிறகு கார்த்தேஜிக்கும் சைரகூஸுக்குமிடையே எவ்வித ஒப்பந்தமும் ஏற்படவில்லை. ஆகையால் டயோனிஸியஸ் ஒப்பந்தத்தை மீறி விட்டானென்று சொல்வதற்கு வழியேயில்லை; அவனுடைய ஆக்கிர

மிப்பு மறைந்துபோன பகையை மறுபடியும் புதுப்பிப்பதற்கு ஒப்பாகும். இரு நாடுகளுக்குமிடையே யுத்தம் ஏற்படுவதற்கான காரணங்கள் பதிவு செய்யப்படாமையால் நாம் அவற்றை அறிந்து கொள்ள முடியவில்லை.

### இரண்டாவது பூயூனிக் யுத்தம், கி.மு. 392. டயோனிஸியஸின் வெற்றி; டயோனிஸியஸ் அகிரிஸோடு ஒப்பந்தம் செய்தல்.

இரண்டாவது பூயூனிக் யுத்த ஆரம்பத்தில் கார்த்தஜீனிய படைத் தலைவனொருவன், சிஸிலி தீவிலுள்ள போயினீஸிய படைகளுக்குத் தலைவனாக இருந்தான். அவனுக்கு ஆப்ரிக்காவிலிருந்து எவ்விதமான படை யுதவியும் அனுப்பப்படவில்லை. 'மாகோ' என்ற அப்படைத் தலைவன் முதல் பூயூனிக் யுத்தத்தில் கார்த்தஜீனிய கடற் படைக்குத் தலைவனாக இருந்தவன். டயோனிஸியஸிடமிருந்த படைகளைப்போல் இவனது படை அவ்வளவு சிறப்பானதன்று. எண்ணிக்கையிலும் தரத்திலும் மாகோவின் படை கீழ்த்தரமா யிருந்தது. கார்த்தஜீனியர்கள் மாகோவின் நிலைமையை யறிந் தார்கள். அவனுக்கு உதவிசெய்ய முன்வந்தார்கள். 80,000 பேர் கொண்ட ஒரு படையைத் திரட்டி அதை மாகோவிடம் அனுப்பி னார்கள். டயோனிஸியஸ் அகிரியம் நாட்டுச் சர்வாதிகாரியாகிய அகிரிஸ் என்பவனோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டான். சிஸிலியி லிருந்த சிஸெல்களின் நகரங்களில், அகிரியம் மிகவும் வலுவுள்ளது. இரண்டாவது பூயூனிக் யுத்தத்தில் இவ் வொப்பந்தம் ஒரு நூதனமா யிருந்தது. இந்த யுத்தத்தில் இரு ஐரோப்பிய வல்லரசுகளாகிய சிஸெலும், கிரீஸும் ஐரோப்பாவின் நலனுக்காக ஒன்று சேர்ந்து போரிட்டன. கார்த்தஜீனிய படை சிஸெல் நாடுகளுக்குள் புகுந்து, அந்நாடுகள் தன் கட்சியில் சேரும்படியான நடவடிக்கையி லீடுபட்டுக் கொண்டிருந்தன. அகிரிஸும் அவனுடைய போர் வீரர்களும் சிஸெல் நகரங்கள் கார்த்தஜீனியர்கள் வசம் சேராவண்ணம் தடை செய்தார்கள். கார்த்தஜீனியர்களுக்கு உணவுப்பொருள் கிடைக்கா வண்ணம் தடை செய்து வந்தார்கள். அகிரியஸும் அவனுடைய ஆட்களும் சிஸெல் நாடுகளின் மூலை முடுக்குகளை நன்கறிந்த படியால், இந்த வேலையை வெற்றிகரமாகச் செய்துகொண்டிருந் தார்கள். மெதுவாக நடைபெறும் இப் போராட்டத்தை சைரகூஸி யர்கள் விரும்பவில்லை. ஆனால் அது டயோனிஸியஸுக்கு மட்டும் மகிழ்ச்சியை யளித்தது. இந்தப் போராட்டத்தினால் என்ன நடந்த தென்பது தெளிவாகத் தெரியவில்லை. சைரகூஸியர்கள் படையி லிருந்து விலகி வந்துவிட்டார்கள். டயோனிஸியஸ் அதற்காகக் கவலைப்படாமல் அடிமைகளுக்குப் போராயுதங்களைக் கொடுத்து அவர்களைப் போர் வீரர்களாக்கினான். அப்பொழுது சிஸெல்களும், கிரேக்கர்களும் வெற்றிகள் சில பெற்றனர். ஆனால் அவ்வெற்றிகள்

பதிவு செய்யப்படவில்லை. எனினும் கார்த்தஜீனியர்கள் பட்டினியினால் வாடியிருக்கவேண்டுமென்பது உண்மையாகும். ஏனென்றால் மாகோ சமாதானத்தை நாடிக்கொண்டிருந்தான்.

**ஒப்பந்தத்தின் வாசகங்கள். டாவுரோமேனியத்தை டயோனிசியஸ் வெல்லுதல்.**

மாகோ, டயோனிஸியஸோடு ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டான். அவ் வொப்பந்தம் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன் டயோனிஸியஸ் கார்த்தேஜியோடு செய்துகொண்ட ஒப்பந்தத்தின் அடிப்படையில் ஏற்பட்டதாகும். ஆனால் இந்த இரண்டாவது ஒப்பந்தம் முதல் ஒப்பந்தத்திற்கு மாறுபட்டது. சிஸிலியிலுள்ள கிரேக்க இனங்கள் யாரும், நேர்முகமாக அல்லது மறைமுகமாக சைரகூஸின் ஆதிக்கத்தின் கீழிருந்தன. கார்த்தஜீனியர்களுடைய ஆதிக்கம் சிஸிலி தீவின் மேற்கு மூலையிலிருந்தது. சோலோஸைப்பற்றி ஒன்றும் சொல்லப்படவில்லை. மாகோ அதை படைகொண்டு மீட்டிராவிடில், இப்போது திருப்பி கார்த்தேஜிக்குக் கொடுத்திருக்க வேண்டும். சிஸெல் நாடுகள் டயோனிஸியஸின் ஆளுகையின் கீழ் வந்துவிட்டன. அகிரியத்தைப் பற்றி ஒப்பந்தத்தில் ஒன்றும் சொல்லப்படவில்லை. மேற்கொண்டு சர்வாதிகாரி அகிரியஸைப்பற்றி நமக்கொன்றும் தெரியாதபடியால். அவன் ஏதாவது சதிச் செயலுக்கு இலக்காகி இருப்பானோ வென்று ஐயுறநேரிடுகிறது. டாவுராமேனியத்தைப்பற்றி ஒப்பந்தத்தில் ஒரு பிரிவு சிறப்பாக் கூறுகிறது. டயோனிஸியஸ் அப் பிரிவைச் சாதகமாக்கிக் கொண்டு, அந் நகரைக் கைப்பற்றினான். அங்கிருந்த சிஸெல்களை நகரை விட்டு வெளியேற்றினான். கூலிப் படையினரை அக்கால வழக்கப்படி அங்கே குடியேற்றினான். இவ்விதமாக இரு பூயூனிக் யுத்தங்களும் முடிந்தன. அவற்றை இரு யுத்தங்களாகப் பிரித்துப்படிக்காமல், தொடர்ச்சியாய் நடவாமல், இடைவிட்டு நடந்த ஒரே யுத்தமாகவும் கருதலாம்,

## 7. டயோனிஸியஸின் பேரரசு

கிரேக்க சிஸிலிக்கு அதிகாரியான பிறகு டயோனிஸியஸின் நிராசை அதிகரித்தது. அவன் சிஸிலி தீவிற்கு அப்பாலுள்ள நாடுகளையும் வெல்ல ஆசை கொண்டான். அவன் இத்தாலியிலுள்ள கிரேக்க நாடுகளை வெல்லத் திட்டமிட்டான். இதுவரையில் சிஸிலிய நகரங்கள், இத்தாலியப் பெருநிலப் பகுதியிலுள்ள குடியேற்ற நாடுகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்த போதிலும், அவற்றை வெல்ல அல்லது ஆக்கிரமிக்க முயலவில்லை. சிஸிலியைத் தவிர மற்றெந்த நாடுகளிலும் அவை ஆக்கிரமிப்புச்

செயலில் ஈடுபடவில்லை. நாடு பிடிக்கும் ஆசைக்குத் தடை விதித்தவன் ஹெர்மோகிரேட்டெஸ். சிஸிலியிலுள்ள கிரேக்க நாடுகளின் விவகாரங்களில் மற்ற கிரேக்கநாடுகள் தலையிடகூடாதென்றும், அவன் போதித்திருந்தான். அமெரிக்காவில் மன்ரோ போதித்த கொள்கையை இங்கு நாம் நினைவு கூரவேண்டியிருக்கிறது. மற்றக் காரியங்களில் டயோனிஸியஸ் முதல்வனாக இருப்பதைப்போலவே நாடு பிடிக்கும் கொள்கைக்கும் முதல்வனாயிருந்தான், ஜலசந்தியிலுள்ள மெஸ்ஸானா, ரேஜியம் ஆகிய இரு நகரங்களோடு அவனுக்கிருந்தத் தொடர்பு, இத்தாலிய நாடுகளின் மீதுப்படையெடுக்கத் தூண்டியது.

**மெஸ்ஸானா மீண்டும் நகரமாதல், கி.மு. 396. மெஸ்ஸானியர்கள் நௌபாக்ட்டஸியிலிருந்து விரட்டப்படல், கி.மு. 401–400. டயோனிஸியஸ் டைன்டாரிக் நகரைக் கட்டுதல்.**

மெஸ்ஸானா நகரை டயோனிஸியஸ் மறுபடியும் புதுப்பித்தான், இத்தாலியிலுள்ள லோக்ரி, மெட்மா, நாடுகளின் மக்களையும், ஸ்பார்ட்டனரால் நௌபாக்ட்டஸியிலிருந்து விரட்டியடிக்கப்பட்ட மெஸ்ஸானியர்களில் 600 பேர்களையும், புதுப்பிக்கப்பட்ட மெஸ்ஸானாவில் குடியேற்றினான். மெஸ்ஸானியர்களுக்கு அளிக்கப்பட்ட இச் சலுகையை ஸ்பார்ட்டனர்கள் வெறுத்தார்கள். டயோனிஸியஸ் ஸ்பார்ட்டனர்களைத் திருப்தி செய்ய விரும்பினான். ஆகையால் மெஸ்ஸேனிய அகதிகளை மெஸ்ஸானாவிலிருந்து அனுப்பிவிட்டான். ஆனால் அவர்களுக்காக ஒரு புதிய நகரத்தைக் கட்டினான். மைலேயிக்கு மேற்கிலுள்ள குன்றில் புதிதாகக் கட்டப்பட்ட அந் நகருக்கு டைன்டாரிஸ் எனப் பெயரிட்டான். சுவர்களாலும் கோபுரங்களாலும் அதைப் பலப்படுத்தினான். அவன் எழுப்பிய சுவர்களையும் கோபுரங்களையும் இன்றும் காணலாம்.

**மைலே நகரைக் கட்டுதல், கி.மு. 394.**

மெஸ்ஸானாவைப் புதுபித்ததும், டைன்டாரிஸ் நகரைக் கட்டியதும்ஜலசந்திக்கு அப்பாலுள்ள ஐரோனியன் பட்டினத்திற்கு வெறுப்பையுண்டுபண்ணியது. ரேஜியத்திற்கு இப் புதிய நகரங்கள் சைரகூஸினால் விளைவிக்கப்பட்ட பேரிடரின் அறிகுறியாகத் தோன்றியது. டைன்ட்ாரிஸ் நகருக்கும் மெஸ்ஸானா நகருக்கும் நடுவில் ரேஜிய நகரத்தார் ஒரு புதிய நகரத்தை எழுப்பி, சைரகூஸின் திட்டத்தைத் தடுக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் காட்டானே, நாக்ஸாஸ் முதலிய நாடுகளின் அகதிகளை ஒன்று சேர்த்து அவர்களை மைலே தீபகற்பத்தில் குடியேறும்படி செய்தார்கள். அவர்கள் ஏற்படுத்திய குடியேற்றம் நீண்டநாள் நிலைத்திருக்கவில்லை. மைலே நகரை மெஸ்ஸானா நகரவாசிகள் பிடித்துக்

கொண்டு அந்நகர வாசிகளை மறுபடியும் அகதிகளாக அலைந்து திரியும்படி செய்து விட்டார்கள்.

**ரேஜியத்தை முற்றுகையிடல், கி.மு. 391. டயோனிஸியஸின் கடற்படைத் தோல்வி.**

டயோனிஸியஸ் ரேஜியம் நகரின்மீது அரசியல் பகை மட்டு மன்றி தனிப்பட்ட முறையிலும் பகை கொண்டிருந்தான். ரேஜியம் நகரின் கன்னியர்களில் ஒருத்தியைத் தனக்கு மனைவியாகக் கொடுக்க வேண்டுமென்று டயோனிஸியஸ் ரேஜியம் நாட்டினரைக் கேட்டான். கொலைபணியாளனுடைய மகளை அவனுக்கு மனைவியாகக் கொடுக்க முடியுமே தவிர ரேஜியக் குடிமக்களுடைய கன்னியர்களில் யாரையும் கொடுக்க முடியாதென்று மறுத்துவிட்டார்கள். ரேஜியத்திற்கு அண்மையிலிருந்த லோக்ரி நாடு தன்னுடைய நாட்டுக் கன்னியர் களில் ஒருத்தியை அவனுக்கு மனைவியாகக் கொடுத்தது. லோக்ரி நாடு அவனிடம் உண்மையான நட்புக் கொண்டிருந்தது. அவன் கார்த்தேஜியோடு சமாதானம் செய்துகொண்டபின், அவன் தன் இத்தாலியத் திட்டத்தை நிறைவேற்ற முன்வந்தான். அப்போது லோக்ரி அவனது படை தங்குவதங்கு முதன்மையான இடமாக்கிக் கொண்டான். ரேஜியத்தைக் கைப்பற்றுவதே அவனுடைய முதன் மையான வேலையாக இருந்தது. ரேஜியத்தைத் தாக்குவதற்கு அரசியல் பகை, தனிப்பட்ட பகை முதலியவையேயன்றி, அது ஜலசந்தியின் சிறப்பான ஓரிடத்தில் அமைந்திருந்ததும் ஒரு காரணமாகும். டயோனிஸியஸ் லோக்ரியிலிருந்து புறப்பட்டு ரேஜியத்தைத் தரை மூலமாகவும் கடல் மூலமாகவும் தாக்கினான். அப்போது இத்தாலியக் கடற்கரையிலிருந்த கூட்டமைப்பு நாடுகள் ஒன்றுசேர்ந்து, ரேஜியத்திற்கு உதவிபுரியத் தங்களுடைய கப்பல் களுடன் புறப்பட்டு வந்தன. ஜலசந்திக்குச் சமீபத்தில் இத்தாலியக் கப்பல்கள் டயோனிஸியஸின் கப்பல்களைத் தாக்கித் தோற்கடித்தன. டயோனிஸியஸ் மிகவும் முயன்று எதிரிலுள்ள கடற்கரைக்கு உயிர் தப்பிச்சென்றான்.

**டயோனிஸியஸ் லூக்கானியர்களோடு ஒப்பந்தம் செய்து கொள்ளுதல்; ஒன்று சேர்ந்து நடத்திய தாக்குதல், கி.மு. 390. லூக்கானியர்கள் தூரியர்களைத் தோற்கடித்தல்; லெப்ட் டைன்ஸ் ஒரு தற்காலிக உடன்படிக்கை செய்து கொள்ளுதல்.**

ரேஜியம் இவ்வாறு இடுக்கணிலிருந்து தப்பிப்பிழைத்தது. டயோனிஸியஸ் இப்போது தன் இத்தாலியக் கடற்கரையிலுள்ள நாடுகளைப் பகைக்க ஆரம்பித்தான். அவன் லூக்கானியர்களோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டான். இரு நாடுகளும் ஒன்று

சேர்ந்து இத்தாலிய நாடுகளைத் தாக்குவதென திட்டமிட்டார்கள். லூக்கானியர்கள் தரை மூலமாகவும் டயோனிஸியஸ் கடல் மூலமாகவும் தாக்குதல்களை நடத்துவதென, முடிவு செய்தனர். லூக்கானியர் தரை மூலமாக தூரியைத் தாக்கினார்கள். புறச் சாதியார்கள் அவர்களைத் தோற்கடித்தார்கள். தூரியர்களில் பலர் கொல்லப்பட்டார்கள். சிலர் நீந்தி, கடற்கரைக்குப்போய்ச் சேர்ந்தார்கள். சிலர் கப்பல்களை நோக்கி நீந்திச் சென்றார்கள். அங்கிருந்த கப்பல்கள் சைரகூஸியர்களின் கப்பல்கள். சர்வாதிகாரியின் தமையன் லெப்ட்டைன்ஸ் சைரகூஸ் கடற்படைத் தலைவனாக இருந்தான். அவன் அகதிகளைத் தன் கப்பல்களில் ஏற்றிக்கொண்டு கரையில் சேர்த்தான். அவர்களிடம் பணம் பெற்றுக்கொண்டு விடுதலை செய்தான். இவற்றைவிட அவன் செய்த 'மேலான 'செயல், லூக்கானியர்களுக்கும் இத்தாலியர்களுக்கும் ஓர் ஒப்பந்தம் ஏற்படுத்தியதேயாகும். இத்தாலியர்களுக்கு எதிராக லூக்கானியர்களோடு ஒத்துழைப்பதற்காக அவன் அனுப்பப்பட்டானே தவிர, அவர்களுக்கிடையில் தற்காலிக சமாதானம் செய்துவைக்க அனுப்பப்படவில்லை. அவன் தனக்குக் கொடுத்த அதிகார எல்லையை மீறிச் செய்த செயலுக்காக டயோனிஸியஸ் அவனைப் பதவியிலிருந்து விலக்கிவிட்டான்.

**டயோனிஸியஸ் கௌலோனியாவை முற்றுகையிடல். கி.மு. 380 ; எல்லியோரஸ் யுத்தகளம், கி.மு. 389. டயோனிஸியஸின் இரக்கம். இத்தாலிய நகரங்களோடு அவனுடைய ஒப்பந்தங்கள் ; ரேஜியத்தின் சரணாகதி. கௌலோனியாவைக் கைப்பற்றல், கி.மு. 389.**

அடுத்த ஆண்டு டயோனிஸியஸ் யுத்தகளத்திற்குத் தன் படையைத் தானே நடத்திச் சென்றான்: கௌலோனியாவை அவன் முற்றுகையிட்டான். அந்நகரம் லோக்ரிக்கு வடக்கிலிருந்தது. இத்தாலிய நகரங்கள் குரோட்டன் தலைமையில் (Croton) 15,000 போர் வீரர்களைக் கொண்ட ஒரு தரைப்படையையும், 2000 குதிரைகளைக் கொண்ட ஒரு குதிரைப்படையையும் தயார்செய்தன. சைரகூஸிலிருந்து நாடு கடத்தப்பட்ட ஹெலோரிஸ் (Heloris) என்ற வீரனொருவன் தலைமையில் அப்படை ஒப்படைக்கப்பட்டது. நேச நாடுகளின் படை, குரோட்டனிலிருந்து புறப்பட்டு கௌலோனியாவை விடுதலை செய்யச் சென்றது. டயோனிஸியஸ் அப்படை தன்னை நோக்கி வருவதையறிந்தான். அதைச் சந்திக்க டயோனிஸியஸ் தயாரானான். அவனிடம் 20,000போர் வீரர்களைக் கொண்ட ஒரு காலாட் படையும், 3000 குதிரைகளைக் கொண்ட ஒரு குதிரைப் படையுமிருந்தன. எண்ணிக்கையிலும் தரத்திலும் தன் படைகள் சிறப்பானவை

என்பதை டயோனிஸியஸ் உணர்ந்தான். நற்காலம் தனக்குச் சார்பாக இருப்பதையும் அவன் அறிந்துகொண்டான். கௌலோனி யாவுக்கும் குரோட்டனுக்குமிடையில் எல்லயோரஸ் நதி கடலில் கலக்குமிடத்திற்குச் சமீபத்தில், ஆற்றங்கரைக்கருகில் பகைவர்கள் தங்கிருப்பதை டயோனிஸியஸ் அறிந்தான். அங்கிருந்து ஐந்து மைல் தூரத்தில் டயோனிஸியஸ் தன் படையை அணிவகுத்து நிறுத்தினன். அவன் அங்கே அணிவகுத்து நிற்பதை ஹெலோரிஸ் சரிவர அறிந்துகொள்ளவில்லை. அவன் 500 போர் வீரர்களுடன் முன்னேறிச் சென்று கொண்டிருந்தான். டயோனிஸியஸ் தன் எதிரில் நிற்பதைக் கண்டு அவன் அதிர்ச்சியுற்ருன். ஆனால் அங் கிருந்து ஓடிவிடவில்லை. அவன் தன் படை வீரர்களை விரைந்து வரும்படி செய்தியனுப்பிவிட்டு, டயோனிஸியஸின் தாக்குதலைச் சமாளித்து நின்ருன். ஆனால் ஹெலோரிஸ் யுத்த களத்தில் கொல்லப்பட்டான். அவனுடைய படை சிறு சிறு கூட்டங்களாகப் படைவரிசையின் ஒழுங்கை மறந்து வந்து கொண்டிருந்தபடியால் டயோனிஸியஸ் அவர்களை எளிதில் தோற்கடித்து விரட்டினன். அவர்களில் 10,000 பேர் உயிர் தப்பி ஒரு குன்றின் உச்சியை நோக்கி ஓடினர். அவர்கள் அடைக்கலம் புகுந்த குன்று தற்காப் பிற்கு ஏற்றவிடமன்று. அங்கு ஓடையோ, நீரூற்ருே கிடையாது. ஆகையால் 10,000 போர் 'வீரர்களும் தற்காப்பிலிருக்க முடியவில்லை. டயோனிஸியஸின் படை குன்றைச் சுற்றிக் காவல் புரிந்துகொண்டு நின்றது. மலைமீது அடைக்கலம் புகுந்திருந்தவர்கள் டயோனி ஸியஸிடம் ஒரு தூதுவனை அனுப்பி, தங்களை விடுவிக்கவேண்டு மென்றும், அதற்கான பணம் கொடுப்பதாகவும் தெரிவித்தனர். டயோனிஸியஸ் மறுத்துவிட்டான். 'அவர்கள் ஒளிவு மறைவற்ற முறையில் சரணடைய வேண்டுமென்று கட்டளையிட்டான். மலை மீதிருந்தவர்கள் கீழே இறங்கி வந்தார்கள். அவன் தங்களைக் கொன்றுவிடுவான் அல்லது அடிமைகளாக விற்றுவிடுவானென நம்பினர்கள். ஆனல் அவன் அவர்கள் எல்லோரையும் கண்ணி யத்துடன், அவர்களிடமிருந்து எதுவும் எதிர்பாராமல் விடுதலை செய்தான். எதிர்பாராமல் அவன் அவர்களுக்குக் காட்டிய இரக்கத் திற்காக எல்லோரும் ஆச்சரியப்பட்டார்கள். அவனுடைய இரக்கச் செயல் எங்கும் பரபரப்பையுண்டுபண்ணியது. அவன் பலன் கருதாமல் அவர்களுக்கு இரக்கம் காட்டவில்லை. இச் செய்கையின் மூலமாகத் தன் புகழ் எங்கும் பரவவும், இத்தாலியக் கடற்கரை நகரங் களைத் தன் பக்கத்தில் சேர்த்துக்கொள்ளவுமே அவன் அவர்களை விடுதலை செய்தான். அவனுடைய அறிவுத்திறன் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டுப் புகழப்பட்டது. இத்தாலிய நகரங்கள் அவ னுக்கு ஒரு பொன் மகுடம் அணிவிக்க முன்வந்தன. அவை தனித் தனியே அவனிடம் ஒப்பந்தம் செய்துகொண்டன. இவ்வாறு

டயோனிஸியஸ் தன் நோக்கத்தை நிறைவேற்றிக்கொண்டான். ரேஜியம், கௌலோனியா, ஹிப்போனியோன் முதலிய நாடுகளோடு அவன் தொடர்ந்து யுத்தம் நடத்தினன். ஆனல் இந்த நாடுகள் மற்ற இத்தாலிய நாடுகளிலிருந்து பிரித்து வைக்கப் பட்டன. அதன் கூட்டமைப்பு கலைக்கப்பட்டது ரேஜியம் தன் பகையைத் தாற்காலிகமாக விட்டுவிட்டு அதனுடைய கடற் படையை டயோனிஸியஸிடம் ஒப்படைத்து விட்டது. டயோனிஸியஸ் கௌலானுவைக் கைப்பற்றி, அழித்துவிட்டான். அதன் நிலங்களை லோக்கிரி நாட்டிற்குக் கொடுத்துவிட்டான். அதைப்போலவே ஹிப்போனியோனையும் கைப்பற்றி அழித்து விட்டான். ஆனல் அழிக்கப்பட்ட இரு நகரங்களின் மக்களை அவன் சைரகூஸுக்கு மாற்றி அவர்களுக்குக் குடியுரிமையையளித்தான்.

### ரேஜியத்தைக் கைப்பற்றுதல்

ரேஜியம் இன்னும் அழிக்கப்படவில்லை. டயோனிஸியஸ் ரேஜியத்தை அழிக்க ஒரு பொய்க் குற்றத்தை அதன்மீது சுமத்தி அந் நகரை முற்றுகையிட்டான். ரேஜியத்திற்கு உதவி புரிய ஒரு நாடும் முன் வரவில்லை. அந் நாட்டின் படைத் தலைவன் பைட்டோன் (Phyton) என்பவனுக்கு இலஞ்சம் கொடுத்து ஏமாற்ற முடியவில்லை. முற்றுகை பத்து மாத காலம் நீடித்து நடந்தது. டயோனிஸியஸ் அந் நகரைப் பட்டினி போட்டே பணிய வைத்தான். பணம் கொடுத்தவர்கள் விடுதலையடைந்தார்கள். மற்றவர்கள் அடிமைகளாக விற்கப்பட்டார்கள். பைட்டோனை டயோனிஸியஸ் தனிப்பட்ட முறையில் பழி வாங்கினன். அவனைப் படை இருந்த இடங்களுக்கெல்லாம் சவுக்கினல் அடித்து இழுத்துச் சென்றூர்கள். கடைசியாக அவனையும் அவனுடைய இனத்தவர்களையும் நீரில் மூழ்கடித்துக் கொன்றான். டயோனிஸியஸ் தன்னைப் பகைத்துத் தன்னுடைய ஆதிக்கத்தை எதிர்த்த நகரை அழித்துவிட்டான். இப்போது ஜலசந்தியின் இரு கரைகளிலுமுள்ள நகரங்களுக்குத் தலைவனுகிவிட்டான். அவனுடைய கோட்டை இத்தாலியில் ஓர் வலுவுள்ள கோட்டையாக இருந்தது. எட்டாண்டுகள் கழித்து அவன் குரோட்டன் என்ற கோட்டையைப் பிடித்துக்கொண்டான். இத்தாலியில் அவனுடைய அதிகாரம் உன்னத நிலையை அடைந்து விட்டது.

### டயோனிஸியஸின் ஹாட்ரியாட்டிக் திட்டங்கள்

சைரகூஸின் சர்வாதிகாரியாகிய டயோனிஸியஸ் மற்றோர் தீரச் செயலிலீடுபட்டான். தன்னுடைய கருவூலத்தை நிரப்ப வணிகமும் உதவி செய்யக்கூடுமென நம்பினன். நாம் வணிகத்துறையையும் குடியேற்றத்தைப்பற்றியும் மறுபடியும் ஆராயவேண்டும்.

பழங்கால வரலாற்றை எழுதுபவர் வணிகம், குடியேற்றம் முதலிய வைகளைப் பற்றித் தெளிவாக எழுத மறந்துவிடுகிறார்கள். கிரேக்கர்களுடைய வியாபாரத்தைப்பற்றிய விரிவான செய்தி அவர்களுடைய வரலாற்றைத் தெளிவாய் அறிந்துகொள்வதற்கு உதவி புரிகிறது.

டயோனிஸியஸ், ஹாட்ரியாட்டிக் கடலில் மேற்குக் கரையிலும் கிழக்குக் கரையிலும் வியாபார ஸ்தலங்களை ஏற்படுத்த விரும்பினன். அவ்விடங்களில் கார்ஸிரா, ஏதென்ஸ், தாராஸ், (Corcyra, Athens, and Taras) நாடுகள் வியாபாரத் தொடர்பு கொண்டிருந்தன. ஹாட்ரியாட்டிக் கடலை சைரகூஸன் ஏரியாக மாற்றிவிட விரும்பினன். குடியேற்றங்கள் மூலமாகவும், ஒப்பந்தங்கள் மூலமாகவும், டயோனிஸியஸ் தன் விருப்பத்தை நிறைவேற்ற முயன்றான். டயோனிஸியஸ் அப்பூலியாவில் குடியேற்றங்களை ஏற்படுத்தினன். அவற்றைத் தன் நாட்டோடு சேர்த்துக்கொள்ளலாமென்று நம்பினன். அவன், இஸ்ஸா (Issa) தீவில் குடியேற்றத்தை ஏற்படுத்தி, கடற்படை நிலையத்தையும் அமைத்தான். அது காவல் நிலையமெனவும், போர்முறைக்கு ஏற்றவிடமென்றும் பின்னால் வருகிற சம்பவங்களில் பலமுறை கூறப்படுகிறது. ப்ரோஸில் குடியேற்றம் ஏற்படுத்துவதில் பாரியர்களோடு அவன் ஒத்துழைத்தான். அத்தீவு இஸ்ஸாவுக்குச் சமீபத்திலுள்ளது. ஆன்கோன் என்னுமிடத்தில் (Ancon) சைரகூஸன் குடியேற்ற நாடொன்று ஏற்படுத்தப்பட்டது. சைரகூஸியன் கப்பல்கள் வந்து தங்குவதற்கு வழி ஏற்பட்டது. இவ் வியாபாரக் கப்பல்கள் வடக்கே போ நதியின் முகத்துவாரம் வரையில் பிரயாணம் செய்ய வழியேற்பட்டுவிட்டது. அங்கு முன்பே கிரேக்கர்கள் வியாபாரச் சந்தையை ஏற்படுத்தியிருந்தார்கள். அங்கிருந்து வட ஐரோப்பாவோடு தொடர்பு வைத்துக்கொண்டிருந்தார்கள். வெனிஷியப் பட்டினம் வாய்க்கால்களும், சதுப்பு நிலங்களும் நிறைந்தது. அங்கே குடியேற்றத்தை ஏற்படுத்தியவன் டயோனிஸியஸ். ஹெலனிக் நாடுகளின் காவல் நிலையங்களில் வெனிஸும் ஒன்ருக இருந்தது. இங்கே இருந்த காவல் நிலையத்தின் படைத் தலைவனுக பிலிஸ்ட்டஸ் என்பவன் நியமிக்கப்பட்டான். அவனுடைய குறிப்பேட்டிலிருந்து வெனிஸைப் பற்றிய விவரங்கள் நமக்குத் தெரியவருகின்றன, அவன் டயோனிஸியஸால் நியமிக்கப்பட்ட படைத் தலைவன். இறுதிக் காலத்திற்குப் பின் டயோனிஸியஸ் அவனைப்பற்றி வெறுக்கவும், அவன்மீது ஐயுறவும் ஆரம்பித்தான். பிலிட்டஸ் நாடு கடத்தப்பட்டான்; டயோனிஸியஸால் நாடு கடத்தப்பட்ட பிலிட்டஸ், ஹாட்டிரியாட்டிக்கிலிருந்த ஒரு பட்டினத்தில் காலங் கழித்து வந்தான். ஒருவேளை அவன் ஹெட்ரியா என்ற நகரில் வாழ்ந்திருக்கவேண்டும். டயோனிஸியஸின் ஹாட்ரியாட்டிக் திட்டங்

களைப்பற்றி நமக்கு விவரமான செய்திகள் கிடைக்கவில்லையாயினும், மோலோசியா நட்டின் ஆல்சிட்டாஸ், டயோனிஸியஸோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்தானென்பதும், அவனுடைய நிலைமை உறுதியற்றதாக இருந்ததென்றும், அதை வலுப்படுத்திக் கொள்ள டயோனிஸியஸிடம் உதவி தேடினனென்பதும் தெளிவாகத் தெரிகிறது. இவ்வாறு டயோனிஸியஸ் ஹாட்ரியாட்டிக் வாயில்கள் வரையில் தன் செல்வாக்கை நிலை நாட்டினன்.

**சைரகூஸன் பேரரசு; அதன் பண்பு; சைரகூஸின் அண்மையிலுள்ள நாடு; அதன் ஆட்சி நிலம்; குடியேற்ற நாடுகள்; அதன் நேச நாடுகள்.**

மற்றப் பேரரசுகளைப்போல சைரகூஸன் பேரரசும் மிகவும் பெரியதாயிற்று. அதனுடைய சொந்த நாடென்றும், அதைச் சார்ந்துள்ள நாடுகளென்றும் அப் பேரரசு இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. தீவும் பெருநிலப் பகுதியும் சேர்ந்தவை அதனுடைய இயற்கையான நாடாக இருந்தது. சிஸிலியின் பெரும் பாகமும் இத்தாலிய தீபகற்பத்தில் வடக்கே கிராத்திஸ் நதி வரையிலுள்ள நிலப் பகுதியும் அதனுடைய பேரரசுக்குள் இருந்த நிலப் பகுதியாகும். இவற்றில் சைரகூஸின் பழைய குடியரசு நாடு அடங்கி இருந்தது. மற்றவை சைரகூஸ் படையின் காவல் நிலையங்கள் இருந்த இடங்களாகும். டயோனிஸியஸின் இப் பேரரசின் காவல் நிலையங்கள், ரோமப் பேரரசின் குடியேற்ற நாடுகளுக்கு ஒப்பிடப் படுகின்றது. அதன் காவல் நிலையங்களில் குரோட்டன் பெருநிலப் பகுதியிலிருந்தது. ஹென்னவும்,: மெஸ்ஸானவும் சிஸிலியிலிருந்த காவல் நிலையங்களாகும். அதனுடைய காவல் நிலையமாகிய கிஸ்ஸா ஹாட்ரியாட்டிக் கடற்கரை யிலிருந்தது. சைரகூஸின் பேரரசில் சில நகரங்கள் அதனுடைய ஆதிக்கத்திலிருந்தன. இந் நகரங்களில் இரு வகையான ஆட்சிமுறை நடைபெற்றன. ஒன்று. பொதுவான ஆட்சிமுறை; சர்வாதிகாரியின் மேற்பார்வையிலிருந்தது. உள்நாட்டு விவகாரங்களை ஒவ்வொரு நகரமும் தன் பழக்க வழக்கங்களுக்கு ஏற்ற முறையில் கவனித்துக்கொண்டது. இம் முறைக்கு எடுத்துக்காட்டாக விளங்குவன சிஸிலியிலிருந்த பழைய கிரேக்கப் பட்டினங்களாகிய ஜிலாவும், காமரினவுமாகும். புதிய குடியேற்ற நாடுகளில் டைன்டாரிஸ் குடியேற்ற நாடு இம் முறையில் சேர்க்கப் பட்டிருந்தது. சிஸெல் நாடுகளில் ஆஜிரியமும், ஹெர்பிட்டாவும் இரட்டை ஆட்சி முறைக்கு எடுத்துக்காட்டாக விளங்கின.

**சார்ந்து வாழும் நாடுகள் இத்தாலியின் தென் கோடிக்கு வேலியிடும் திட்டம்**

சைரகூஸ்பேரரசின் ஆதரவில் சில நாடுகளிருந்தன. அவற்றின் மீது சைரகூஸ் நேரடியான ஆதிக்கம் கொண்டிருந்தது. மறைமுக

ஆதிக்கத்தின் கீழும் பல நாடுகள் இருந்தன. தூரியும், மற்ற இத்தாலிய நகரங்களும் சைரகூஸ் பேரரசின் மறைமுக ஆதிக்கத்திலிருந்தன. இத்தாலி தீவின் பாதமென்று கூறப்படுமிடத்தில் வாழ்ந்து வந்த ஐயாபிஜியின் (Iapygian) இனங்கள், சைரகூஸின் பேரரசின்மீது சார்ந்து வாழ்ந்தன. ஐயோனியன் கடலுக்கு அப்பாலுள்ள மோலோஸியா (Molossia) நாடும், ஹாட்ரியாட்டிக்கடற்கரையிலுள்ள சில இல்லிரியன் நாடுகளும் சைரகூஸ் பேரரசின் நேசநாடுகளாகும். கிராத்திஸ் ஆறு அவனது பேரரசின் இருவகையான ஆட்சி முறை நாடுகளைப் பிரிக்கும் எல்லையாக அமைந்திருக்கலாம். சிஸெல்லிஷனிலிருந்து கூல் வரையில் ஒரு சுவரை எழுப்பவும், ஓர் அகழியைத் தோண்டவும், டயோனிசியஸ் விருப்பங் கொண்டான். இத்தாலியின் பெருவிரல் என்று சொல்லப்படுகிற நாட்டைச் சுவராலும் அகழியாலும் பிரித்து, அதை இரண்டாவது சிஸிலியாகச் செய்து விடுவதே டயோனிஸியஸின் நோக்கமாக இருந்தது.

டயோனிஸியஸின் நிதி

டயோனிஸியஸ் பேரரசைப் பெரிதாக்கி, அதைக் காப்பதில் பல துறைகளில் பணச் செலவிட நேர்ந்தது. கப்பல்கள், கப்பல் தங்குமிடங்கள் முதலியவைகளைக் கட்டுதல், கூலிப் படைக்குக் கூலி கொடுத்தல், சைரகூஸின் மதிற் சுவர்கள், கோட்டைகள், அரண்கள் முதலியவைகளைக் கட்டுதல் முதலியவைகளுக்கும் மற்றும் அரசாங்க செலவிற்கும் அவனுக்குப் பணம் தேவையாக இருந்தது. டயோனிஸியஸ் பணத்தைப் பலவகையில் தேடினன். கடுமையான வரிப் பளுவை சைரகூஸியர்களால் தாங்க முடியவில்லை. யுத்த வரி, கப்பல் கட்டுவதற்காக வரி, மாட்டு மந்தைகள் வரி எனப் பல வகையான வரிகளை சைரகூஸியர்கள் அரசாங்கத்திற்குச் செலுத்த நேர்ந்தது. அவர்கள் தங்கள் முதலில் 20 சதவிகிதம் அரசாங்கத்திற்கு வரி செலுத்தினர்கள். நாணயம் அச்சிடுவதிலும் அவன் சில முறைகளைப் பின்பற்றினன். நான்கு டார்ச்சுமா நாணயம் வெள்ளியில் அச்சிடுவதற்குப் பதிலாக அவன் டின் உலோகத்தில் அச்சடித்தான். அவன் அனுசரித்த முறைகளால் தேவையான பணம் கிடைக்கவில்லை. டயோனிஸியஸ் கோயில்களைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தான். அவன் குரோட்டன் நகரைக் கைப்பற்றியபோது அங்கிருந்த ஹிரா ஆலயத்தைக் கொள்ளையடித்தான். அவன் கடற் கொள்ளைக்காரனைப்போல் வேடம் பூண்டு எட்ருரியாவிற்குச் சென்ருன். அகில்லா துறைமுகத்திலிருந்த ஓர் ஆலயத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு திரும்பினன். அக் கொள்ளையின் காரணமாக அவனுக்கு 1500 தாலந்து பெறுமானமுள்ள பொருள் கிடைத்தது. புறச் சாதியார்களின் கோவில்களையும் கொள்ளையடித்தான். அவன் கிரேக்கர்களுடைய புண்ணிய தலங்களையும் கொள்ளையடிப்பதில் தயங்கியதில்லை.

டெல்பிக் ஆலயத்தையும் கொள்ளையடிக்க அவன் திட்டமிட்டான். அல்லீரியர்களும் மோலோசியர்களும் அதற்கு உடந்தையாக இருந்தார்கள். அவனது திட்டம் ஒழுங்கான முறையில் நிறைவேற்றப்படவில்லை. அவன் கோயில்களைக் கொள்ளையடிப்பவனுகையால், கிரேக்க நாட்டில் அவன் நற்புகழ் அடைய முடியவில்லை.

## 8. டயோனிஸியஸின் மரணமும் அவன் வேலையின் மதிப்பீடும்

**மூன்ருவது பூயூனிக் யுத்த ஆரம்பம். கி.மு 383; காபாலா போர்க்களம். கிரோனியோன் போர்க் களம், கி.மு. 379; சமாதானம் கி.மு. 378. ராஸ்மெல்கார்ட்**

சிறிது காலத்திற்கே சைரகூஸியர் பேரரசு தன் பரப்பில் உச்ச நிலையையடைந்திருந்தது. குரோட்டனையும் அதன் நிலங்களையும் கைப்பற்றியவுடனேயே, அவன் தன் நாட்டின் மேற்கு எல்லையை இழந்துவிட்டான். கார்த்தேஜியோடு மீண்டும் போர் மூண்டது. இப்போது போர் ஆரம்பமாவதற்கு அவன் காரணமாக இல்லாவிடினும், பகையை மூட்டியவன் அவனே. செகெஸ்ட்டா அல்லது எரிஸ் நகரத்தைப் போன்ற சில நகரங்கள் கார்த்தேஜியின் ஆதிக்கத்தின் கீழிருந்தன. இவற்ருேடு டயோனிஸியஸ் ஒப்பந்தம் செய்து கொண்டான். ஆரம்பத்தில், டயோனிஸியஸுடன் போரில் ஈடுபட்டுள்ள நாடுகளுக்கு கார்த்தேஜி உதவி புரிந்தது. அதனுல் ஏற்பட்ட யுத்தங்களின் விளைவைப்பற்றி நாமறிவோம். பிறகு, மாகோவின் தலைமையில் ஒரு கார்த்தஜீனியப் படை சிஸிலியிலிருந்ததை நாம் காண்கிருேம். காபாலாவில் ஏற்பட்ட போரில் சைரகூஸியர் வெற்றி பெற்றனர். மாகோ, போரில் கொல்லப்பட்டான். சமாதானத்திற்கான சமரசப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்தபோது, பானேர்மஸுக்கருகில் குரோனியோன் என்ற விடத்தில் மற்ெருரு போர் மூண்டது. அங்கு டயோனிஸியஸ் பெருத்த நஷ்டத்தோடு படுதோல்வியடைந்தான். அவனுக்குப் பாதகமான ஒரு சமாதான ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளும்படி அவனைக் கட்டாயப்படுத்தினர். பூயூனிக் சிஸிலிக்கு எதிராக, கிரேக்க எல்லை, மாஸாரஸ் ஆற்றிலிருந்து ஹாலிகஸ் ஆறு வரையில் நிர்ணயிக்கப்பட்டது. அதன்படி செலிநஸ், தெர்மே நகரங்கள் புறச்சாதியாருக்கு மீண்டும் கொடுக்கும்படியான நிர்பந்தம் ஏற்பட்டது. ஹாலிஹஸ் நதியின் முகத்துவாரத்தில் பழைய கிரேக்க நகரமாகிய ஹெராக்கிளே மினேவா இருந்தது. இது இப்போது கார்த்தஜீனியர்களுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டது கார்த்தஜீனியர் அதை ராஸ்மெல்கார்ட் (Rasmelkart) என அழைத்தனர். இப்போது சிஸிலியில் அது பூயூனிக் ஆதிக்கத்தின் பலமுள்ள கோட்டைகளில் ஒன்ருகிவிட்டது.

### நான்காவது பூயூனிக் யுத்தம், கி.மு. 368.

குரோனியம் போர்க்களத்தில் ஏற்பட்ட தோல்வியையும் நஷ்டத்தையும் ஈடுசெய்ய பத்தாண்டுகட்குப்பின் மீண்டும் டயோனிஸியஸ் போரைத் தொடங்கினுன். இரண்டாம் முறையாக அவன் பூயூனிக் சிஸிலியின்மீது படையெடுத்தான். செலிநசை விடுதலைச் செய்தான். காம்பானியன் என்டெல்லாவை வென்ருன் (Campanian Entella). எலிமியான் எரிசையும் (Elymian Eryx), டெரிபாஞேன் முதலிய நகரங்களையும் கைப்பற்றினுன். அவன் ஆரம்பத்தில் செய்த சுரண்டல் வேலைகளை மீண்டும் மேற்கொண்டான். மோட்டியா நகரமிருந்த இடத்தில் எழும்பிய லில்லிபேயம் நகரை முற்றுகையிட்டான். அம்முயற்சியை விட்டுவிடும்படி அவனை வற்புறுத்தினர். லில்லிபேயம் கோட்டை மிகவும் வலுவானது. அவனுடைய கடற்படை டிரிபேஞேன் (Drepanon) துறைமுகத்திலிருந்தது லில்லிபேயம் நகரிலேற்பட்ட தோல்வியின் காரணமாக, கார்த்தஜீனிய கடற்படைத் தலைவன் டெரிப்பேஞன் துறைமுகத்திலிருந்த கப்பல்களைத் தாக்கி, பலவற்றைக் கைப்பற்றிச் சென்ருன்.

### டயோனிஸியஸின் மரணம்; டயோனியஸியஸ் ஒரு துன்பியல் கவிஞன்.

சிஸிலியின் மன்னனுகிய டயோனிஸியஸின் கடைசிப் படையெடுப்பு நான்காவது பூயூனிக் யுத்தத்தோடு முடிந்தது. சமாதான ஒப்பந்தம் கையெழுத்தாகும் வரையில் அவன் உயிரோடிருக்கவில்லை. ஒப்பந்தப்படி ஹாலிகஸ் இரு நாடுகளுக்குமிடையேயுள்ள எல்லையாக நிர்ணயிக்கப்பட்டுவிட்டது. அவனுடைய பண்பின் ஒரு பகுதியை நாம் இதுவரையில் அறிந்து கொள்ளவில்லை. அப்பண்பே அவன் மரணத்திற்குக் காரணமாக இருந்தது. இலக்கிய வரலாறு அவனைப் பற்றிக் குறிப்பிடுகிறது. அவன் ஒரு நாடகக் கவிஞன். துன்பியல் நாடகங்கள் எழுதுவதில் அவன் அத்தீனியர்களோடு போட்டியிட்டதுண்டு. அவன் ஒரு சமயம் மூன்ருவது பரிசும், மற்ருெரு முறை இரண்டாவது பரிசும் பெற்றிருக்கிருன். அவன் முதற் பரிசு பெற விரும்பினுன். முதற் பரிசைப் பெறவேண்டுமென்ற அவனுடைய அவா கடைசியில் பூர்த்தியாகியது. லில்லிபீயத்தில் அவனுக்கேற்பட்ட தோல்வியும், டெரிபேஞன் என்ற துறைமுகத்தில் அவனுக்கேற்பட்ட கப்பல்களின் சேதமும், அவனுக்கு முதற்பரிசு கிடைத்துவிட்டது என்ற நற்செய்தியால் ஈடு செய்யப்பட்டன. 'பொருளீந்து ஹெக்ட்டாரை மீட்டல்' என்ற நாடகத்தை அவன் எழுதினுன். லெனேயன் என்ற பண்டிகையில் அவனுடைய நாடகம் எல்லோராலும் புகழப்பட்டபடியால், அதற்கான முதற் பரிசை அவனுக்குக் கொடுத்தார்கள். அவன் தன் மகிழ்ச்சியைக் கொண்டாடிய அன்று அளவுக்கு மீறிக் குடித்தான். அதனுல் அவனுக்குக் கொடிய காய்ச்சல் ஏற்பட்

டது அவனுக்குக் கொடுத்த மருந்தில் தூக்க மருந்தையும் கலந்து விட்டார்கள். அது அவனுக்கு மரணமாக முடிந்தது.

**டயோனிஸியஸின் காலத்தில் சிஸிலிக்குக் கிழக்கிலுள்ள நாடுகளுடன் உறவு**

டயோனிஸியஸ் கிரேக்க நாடுகளுடன் அரசியல் தொடர்பு கொள்ளாமல் தனித்து வாழ்ந்ததில்லை. அவன் ஸ்பார்ட்டாவுடன் நேச உறவுக்கொண்டிருந்தான். சைரகூஸ் முற்றுகையால் அவதியுற்றபோது, ஸ்பார்ட்டா அவனுக்குப் படையுதவியளித்தது. இக்கட்டான கட்டத்தில் உதவியளித்ததின் காரணமாக அவன் ஸ்பார்ட்டாவிற்குப் பல முறை உதவி செய்திருக்கிறான். கார்ஸிராவின் எல்லை வரையில் அவன் பேரரசு பரவி இருந்ததால், அதனுடன் நேரடியான தொடர்பு கொண்டிருந்தது அதன் மூலமாகத் தாய்நாட்டின் பல நாடுகளுடன் நேரடியான தொடர்பு கொண்டிருந்தது அவன் ஆட்சியில் இத்தகைய அரசியல் தொடர்பு சிறப்பாக இல்லை. பழைய கிரீஸின் அரசியல் விவகாரங்கள், அவன் காலத்து சைரகூஸ் அரசியல் விவகாரங்களோடு தொடர்பில்லாதது. எனினும் அதே காலத்தில் ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் நாடுகளின் அரசியல் உறவைவிட, சைரகூஸின் சில அரசியல் விவகாரங்கள், கிரீஸ், ஐரோப்பிய வரலாறுகளில் சிறப்பிடம் பெற்றிருக்கின்றன.

**வரலாற்றில் டயோனிஸியஸின் சிறப்பு; செமைட்டுகளுக்கெதிரான ஐரோப்பாவின் தலைவன்; தனிச்சிறப்பான சிஸிலிய பேரரசு. மாசிடோனிய முடியாட்சிக்கு முன்னோடி. படை திருத்தம். கடவுளாகத் தொழுதல்.**

சிஸிலியை அடைவதற்கு ஆசியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் ஏற்பட்ட போட்டியில், டயோனிஸியஸ் ஆசியாவின் தலைவர்களில் முதன்மையாக விளங்கினான். இதற்கு முன் எந்தத் தலைவனும் சாதிக்காத காரியத்தை அவன் செய்து முடித்தான். அவன் பகைவனுடைய எல்லைக்குள் போர் செய்தான். செமிட்டிக் ஆக்கிரமிப்பாளரை சிஸிலியிருந்து விரட்டுவதிலும், சிஸிலி தீவு முழுவதையும் ஐரோப்பிய மயமாக்குவதிலும், ஓர் ஐரோப்பிய பொது நல அரசாங்கம் செய்ய வேண்டியதை, அவன் செய்து காட்டினான். இரண்டாவதாக, அவன் சைரகூஸை கிரேக்க சிஸிலியில் ஓர் முதன்மையான நாடாகவும், பேரரசாகவும் மாற்றியதோடு, கடலாதிக்க நாடாகவும் மாற்றி விட்டான். இதனால் அது கிரேக்க நாடுகளில் மிக்க அதிகாரம் பெற்ற நகராகவும், ஐரோப்பாவில் மிக்க ஆதிக்கம் பொருந்திய நாடாகவும் விளங்கியது. சிஸிலி சிஸிலியர்களுக்கே என்ற கொள்கை அவனால் விசி எறியப்பட்டது. அவன் ஆக்கிரமிப்புக்கொள்கையிலீடுபட்டான். அவன் தன்னுடைய ஒரு கரத்தை இத்தாலிய தீபகற்பத்தின் மேலும்,

மற்ருெரு கரத்தை ஹாட்ரியாட்டிக் கடலுக்கு அப்பாலுள்ள நாடுகளின் மீதும் நீட்டினுன். இத்தாலிய தீபகற்பத்தின் பாகத்திலும் ஹாட்ரியாட்டிக் கடலுக்கப்பாலுள்ள நாடுகளிலும் தன் செல்வாக்கை நிலை நாட்டினுன். அவனுடைய பேரரசு கோனுட்சி முறையைக் கொண்டது. அது மாசிடோனியக் கோனுட்சி முறைக்கு முன்னேடியாக விளங்கிற்று. அது ஐரோப்பிய வரலாற்றில் ஒரு புதிய காலத்தை உண்டு பண்ணியது. போர் முறையிலும் அவன் ஒரு நூதன முறையை உண்டாக்கினுன். அம்முறை அவனுக்குப் பின் ஐம்பதாண்டு காலம் வரையில் நடைமுறைக்குக் கொண்டுவரப்படவில்லை. அவனுடைய படை முறைகளில் சில நம்மை அலெக்ஸாந்தரும், அவன் சந்ததியாரும் வாழ்ந்த காலத்திற்குக்கொண்டு போய்ச்சேர்க்கின்றன. மற்ருெரு வகையிலும் அவன் மாசிடோனிய மன்னர்களுக்கு முன் மாதிரியாக இருந்தான். டயோனிஸியஸ் என்ற தெய்வத்திற்குரிய பெயரால் அவன் அழைக்கப்பட்டான். அவனுக்குச் சிலைகள் செய்து, அவனை டயோனிஸியஸ் தெய்வமாகக் கருதும் முறையை இவன் மட்டும் ஏற்படுத்தவில்லை. ஸ்பார்ட்டாவின் அலெக்ஸாந்தரைக்கூடத் தெய்வச் சாயலாக்கியதை நாம் அறிவோம்.

**டயோனிஸியஸ் கிரேக்க தத்துவங்களைப் போதிப்பவன் அல்லன். இத்தாலிய இனம் முன்னேறுவதற்கான அறிகுறி.**

பலவகைகளில் டயோனிஸியஸ் மாசிடோனிய மன்னர்களுக்கு முன்னேடியாக இருந்த போதிலும், ஒருவகையில் அவன் அவர்களுக்கு முன்னேடியாக இருக்க முடியவில்லை. ஹெலனிக்கலையைப் பரவச் செய்வதில் அவன் விருப்பம் கொள்ளவுமில்லை. ஹெலனிக்கலையை வளர்ப்பதற்குப் பதிலாக அவன் அதை அழித்தானென்றே சொல்ல வேண்டும். அவன் கிரேக்க நகரங்களை அழித்து இத்தாலியர்களைக் குடியேற்றினுன். கால்ஸ், லூக்கானியா முதலிய நாடுகளோடு அவன் நட்புக் கொண்டிருந்தான். அவர்களை அவன் கிரேக்க மக்களுக்கு எதிராகக் கிளப்பி விட்டான். அவன் கால்ஸ் நாட்டினரையும், லூக்கானிய நாட்டினரையும், கிரேக்கர்களாக்க விரும்பவில்லை. இத்தாலியர்களை சிஸிலியில் குடியேறும்படி செய்வதே அவன் கொள்கை. அவனுக்குத் தெரியாமலேயே இத்தாலி விரிவடைவதற்கு வழியாக இருந்தது. நூருண்டிற்குப்பின் இத்தாலியர்கள் சிஸிலியை வெல்லுவதற்கு இது வழி காட்டியாக இருந்தது.

**டயோனிஸியஸ் ஏன் அதிகமாக எதையும் சாதிக்கவில்லை**

டயோனிஸியஸிடம் தலைவனுக்குரிய பண்புகளும், சிறப்புகளுமிருந்தன. அவன் செயற்கரியன செய்தானென்பது உண்மையே. ஆனுல் அவன் இன்னும் மிகப் பெரிய காரியங்களைச் சாதித்திருக்க வேண்டும். அவன் ஓர் அரசியல் ஞானி; பல கோட்பாடுகளை

அவனே உருவாக்கினவன்; சலியா ஊக்க முள்ளவன்; வாழ்க்கையில் தன்னடக்கமுள்ள பழக்கங்களையுடையவன், அவன் ஆதிக்கம் அரசிய லமைப்புச் சட்டங்களுக்கு மாறுபட்டது. அவனுடைய கொடுங் கோன்மையின் தன்மை அவன் செய்ய வேண்டிய பணியைக் கட்டுப் படுத்தியது. சட்டத்தினுல் ஏற்றுக்கொள்ளப்படாத தன் நிலைமையைப் பாதுகாப்பதில் அவன் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டுவ தாயிற்று. தான் குடிமக்களால் வெறுக்கப்படுகிற எசமானன் என்பதே அவனுல் மறந்துவிட முடியவில்லை. ஒரு காரியத்தை வெற்றியோடு முடிப்பதிலும், ஒரு பிரச்சினையைத் தீர்த்து வைப்ப திலும், அவன் இருமனத்தோடு நடந்து கொள்ள வேண்டியதா யிருந்தது. ஒன்று, அவன் தன்னுடைய நிலைமைக்கு இக்கட்டு வராமல் பார்த்துக்கொள்ள வேண்டியது. மற்றொன்று, காரியம் வெற்றியடையும்படி செய்வது. அரசியலமைப்புச் சட்டத்தினுல் அங்கீ கரிக்கப் பட்டவனுக்குள்ள உரிமை டயோனிஸியஸுக்கில்லை. அவன் கார்த்தஜீனியர்களோடு போரிலீடுபட்டிருந்தபோது கூட இவ்வித மான இரு எண்ணங்களால் அவதியுற்றுன். சைரக்கூஸியரின் மக்களாட்சி அரசாங்கம் சாதித்திருக்காத காரியங்களை அவன் சாதித்தான், அவனுடைய ஆட்சி முறையிலிருந்து நாம் அறிந்து கொள்ள வேண்டிய ஓர் உண்மையுண்டு. அதாவது சர்வதிகாரமும், குடியாட்சியும் ஒரு பேரரசுக் கொள்கைக்கு ஏற்றதல்லவென்பதை அவன் ஆட்சி விளக்குகிறது.

## 9. இளைய டயோனிஸியஸ்

**இரண்டாவது டயோனிஸியஸ், கி. மு. 367. மூத்த டயோனி ஸியஸின் மைத்துனனும் மருமகனுமாகிய டியோன்.**

வலுவுள்ள காலாட் படையையும், கடற் படையையும், பலமுள்ள கோட்டைகளையுமுடைய டயோனிஸியஸின் பேரரசுக்கு இளைய டயோனிஸியஸ் சர்வதிகாரியானுன். இளைய டயோனிஸியஸ் சலன புத்தியுள்ளவன். அவனிடம் நற் குணங்களுமிருந்தன. அவனுக்கு மற்றவர்களுடைய அறிவுரை அவசியமாயிருந்தது. ஆரம்பத்தில் அவன் டியோன் என்பவனின் அறிவுரையின் படியே நடந்து வந்தான். டியோன் இவனுக்கு அமைச்சனுகவும் கடற்படைத் தளபதியாகவுமிருந்து வந்தான். டயோனிஸியஸ் டியோனுடைய சகோதரியாகிய அரிஸ்ட்டோமாச்சே என்பவளை மணந்து கொண்டான். டயோனிஸியஸ் மூலமாகத் தன் சகோதரிக்குப் பிறந்த அரிட்டே என்ற பெண்ணைத் தான் மணந்து கொண்டான். டயோனி ஸியஸ் மறுமணம் செய்து கொண்டான். டியோன் திரண்ட செல்வம்

படைத்தவன்; மிக்க திறமையுள்ளவன். அவனுடைய நிலையில் வேறொருவன் இருந்திருந்தால் பேரரசைத் தானாவது கைப்பற்றி இருப்பான், அல்லது தன்னுடைய சகோதரியின் மைந்தர்களுக்குக் கிடைக்கும்படி செய்திருப்பான். ஹிப்பாரினஸூம் நியாஸியஸூம் டியோனுடைய சகோதரியின் மக்கள்; தன் மனைவியின் சகோதரர்கள். ஆனால் டியோன் ஒரு சாதாரண மனிதனல்லன். அவனுடைய நாட்டங்கள் உயர்ந்தவையாக இருந்தன. எவனுக்கும் கொடுங் கோன்மையைப் பாதுகாத்துக் கொடுப்பது அவனுடைய நோக்கமாக இருந்ததில்லை. கொடுங்கோன்மையை அழிப்பதே அவன் நோக்கமாக இருந்தது. கொடுங்கோலாட்சியை அவன் புரட்சியின் மூலமாக ஒழித்துவிட விரும்பவில்லை. அவன் சர்வாதிகார ஆட்சிமுறையை ஒழித்துவிட்டு, மக்களாட்சியை நிலை நாட்ட விரும்ப வில்லை. அவன் அவ்விரு ஆட்சி முறைகளும் கெடுதலானவையெனக் கருதினான். டியோன் தன்னுடைய நண்பனும் அரசியல் ஞானியுமாகிய பிளாட்டோ என்பவனின் அரசியல் போதனையின்மேல் மிக்க நம்பிக்கையுள்ளவனாக இருந்தான். பிளோட்டோவின் போதனைக் கொத்த முறையில் அரசியலமைப்பை ஏற்படுத்த வேண்டுமென்றும், அரசியல் அமைப்பு வரம்புள்ள முடியாட்சிக் கொள்கைக்கு ஒத்ததாக இருக்க வேண்டுமென்பதும் அவனுடைய விருப்பமாயிருந்தது. அவன் விருப்பிய வரம்புள்ள கோனாட்சி ஸ்பார்ட்டாவின் அரசிய லமைப்புக்கொத்த கோனாட்சியாக இருக்கவேண்டுமென்பதும் அவன் விருப்பம். இவ்வித அரசியலமைப்பை சைரகூஸியர் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ள மாட்டார்களென்பதை அவனறிவான். ஆகையால் சைரகூஸியர்கள் இந்த அரசியல் முறையை ஒப்புக்கொள்ளும்படி அவர்களை வலியுறுத்த வேண்டுமென்று அவன் விரும்பினான். மேலும் சர்வாதிகாரி தன்னுடைய வரம்பில்லா அதிகாரத்தைச் சட்டத் தின்கீழ்க் கொண்டு வருவதை அவன் ஒப்புக் கொள்ளும்படி தூண்டு தல் செய்ய வேண்டுமென்றும் அதற்குத் தேவையான அரசியல் அமைப்பை அவனைக் கொண்டு வரும்படி செய்யவேண்டு மென்றும் விரும்பினான். ‘கொடுங்கோலாட்சியுள்ள ஒரு நகரத்தை எனக்குக் கொடு. அதனுடைய கொடுங்கோலன் இளைஞனாகவும், நல்ல அறி வுள்ளவனாகவும், வீரமும், தாராள சிந்தையுமுள்ளவனாக இருக் கட்டும்; நற்காலம் அவனுக்கு ஒரு சட்ட முதல்வனை அளிக்கட்டும்'' என பிளேட்டோ சொன்னான். அப்பொழுது ஒரு நாடு நல்ல முறையில் ஆளப்படும். பிளோட்டோவிரும்பிய குணங்கள் யாவும், டயோனிஸியஸிட மிருப்பதாக டியோன் கருதினான். அவன் தன்னுடைய சகோதரியின் குமாரர்களாகிய ஹிப்பாரினஸையும் நியா ஸியஸையும் பிளோட்டோவிடம் ஒப்படைத்து அவர்களைத் திறமை சாலிகளாக்கும் வாய்ப்பை அவரிடம் விட்டு விட்டான். இளைய டயோ னிஸியஸூக்கு விசுவாசத்தோடு சேவை புரிந்தான். அவனுக்குத்

தத்துவ நூல்களின் மீது விருப்பம் ஏற்படும்படி சூழ்நிலைகளை ஏற்படுத்திக் கொடுத்தான். மேலும் இளையடயோனிஸியஸ் அரசியல் காரியங்களில் மிக்க ஊக்கம் கொள்ளும்படியும் செய்தான். மேலும் அவன் டயோனிஸியஸைத் தன்னுடைய ஆசிரியன் பிளேட்டோவிடம் அரசியல் கோட்பாடுகளைப் பற்றிக் கற்றுக் கொள்ளும்படி செய்ய விரும்பினன். பிளேட்டோ சைரகூஸுக்கு வந்து இளைய டயோனிஸியஸை ஒரு தத்துவ ஞானியாக்க வேண்டும். மூத்த டயோனிஸியஸ் காலத்தில் பிளேட்டோ சிஸிலிக்கு வந்ததுண்டு. அப்பொழுது மூத்த டயோனிஸியஸ் அவனை அன்போடும், கண்ணியத்தோடும் நடத்தவில்லை. பிளேட்டோ தனக்கு ஏற்பட்ட அவமானத்தை மறந்துவிடவில்லை. எனவே அவன் சைரகூஸுக்குச் செல்ல விரும்பவில்லை. அவன் தன் விருப்பத்திற்கு மாருக இரண்டாம் முறையாக சைரகூஸிற்குப் புறப்பட்டான்.

### உயர்ந்த குறிக்கோளுள்ள ஓர் அரசாங்கத்தை உருவாக்கும் எண்ணம்.

டியோன் எடுத்துக்கொண்ட முயற்சி கனுக் கண்டு கொண்டிருப்பவனுக்கு ஒப்பாக இருந்தது. அரசியல் ஞானமும், அனுபவமுள்ள டியோன் இவ்விதமான முயற்சியிலீடுபட்டது வியப்பையளிக்கிறது. நூற்றுக் கணக்கான சமூகங்களின் இரண்டாயிர ஆண்டு வரலாற்றை ஆராய்ந்த நமக்கு இச் செய்கை ஏமாற்றத்தை யளிக்கிறது. டியோன் டயோனிஸியஸைப் பதவியிலிருந்து விலக்கிவிடத் திட்டமிடுகிருனென்று சிலர் எண்ணினர்கள். இம் முயற்ச்சி சதித் திட்டத்தின் ஒருபாகமென்றும், யாரும் ஐயுருவண்ணம் இரகசியமாகச் சதித்திட்டம் நிறைவேறுவதற்காக எடுத்துக்கொண்ட முயற்சி இது வென்றும் சிலர் கருதினர்கள். டியோனின் நல்லெண்ணம் அவர்களுடைய ஐயப்பாட்டை விலக்கிற்று. தத்துவ நூல்களின் கோட்பாட்டின் படியே ஒரு நாட்டின் அரசாட்சி நடைபெறுவது ஒரு நூதனக் கொள்கையாக இருந்தது. தத்துவ ஞானத்தினல் ஈர்க்கப்பட்டவர், தத்துவ ஞானத்தின் அடிப்படையில் ஏற்படுத்திய நாடு நிலைபெருதென்று ஐயம் கொள்வதில்லை. தத்துவ ஞானத்தின் அடிப்படையில் அரசாங்கங்கள் ஏற்பட்டதில்லை. அக் கொள்கையின்மீது மோகங் கொண்டவர்களுக்கு ஸ்பார்ட்டன் அரசியலமைப்பு ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. ஸ்பார்ட்டா ஒரு சிறந்த நாடு. அதனுடைய அரசியலமைப்பும், அதனுடைய ஒழுங்குப் பயிற்சி முறையும், புகழ்ப்பெற்றவை. இவற்றை லைகர்கஸ் என்ற சட்ட நிபுணர் ஏற்படுத்தினர். லைகர்கஸ் லாஸிடோமோனுக்குச் செய்ததைப் போல டியோனும் டயோனிஸியஸும் பிளேட்டோவின் உதவியைக் கொண்டு சைரகூஸிற்கு நல்ல அரசியலமைப்பை ஏற்படுத்த முடியாதா? டியோன் தன்னுடைய அனுபவத்தைக்கொண்டு தத்துவக்

கோட்பாட்டின் அடிப்படையில் உருவாக்கிய அரசியலமைப்பிலுள்ள குறைபாடுகளை நீக்கிவிடக் கூடுமென நம்பினன்.

**பிளாட்டோவின் யோசனை**

பிளாட்டோ சைரகூஸிற்கு வந்துசேர்ந்தான். அவனை மரியாதையோடும் கண்ணியத்தோடும் வரவேற்ருர்கள். பிளாட்டோ தன் மாணவனுக்குத் தத்துவ ஞானத்தைப் போதிக்க ஆரம்பித்து விட்டான். அவன் ஆரம்பத்திலேயே கொடுங்கோன்மையின் கெடுதலை எடுத்துப் போதித்தான். அவன் குடியாட்சியின் மேன்மையை எடுத்து விளக்கிக்காட்டினன். இளைய டயோனிஸியஸ் சைரகூஸுக்கு அரசியலமைப்பை ஏற்படுத்துவதற்கு விருப்பங் கொண்டான். பிளாட்டோ அப்பொழுது கையாண்ட போதனை முறையை விட்டுவிட்டு வேறு போதனை முறையைப் பின்பற்றி இருந் திருந்தால் அரசியல் அமைப்பு முறையைச் செயலில் கொண்டுவர முயன்றிருப்பார்கள். அவனுடைய மாணவனுகிய டயோனிஸியஸ் ஒரு விநோதமான மனிதன். அவன் பிளாட்டோவின் போதனையை ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும் ஏற்றுக்கொண்டான். ஆனல் போதனையைச் செயலில் கொண்டுவருவதில் அவன் திறமை யற்றவன். பிளாட்டோ தன்னுடைய குடியரசில் விளக்கியுள்ள கோட்பாடுகளை அவனுக்குப் போதித்திருந்தால், டயோனிஸியஸ் தன்னுடைய நாடு தத்துவ நூலின் குறிக்கோள்களைக்கொண்ட அரசியலமைப்பைப் பெறுவதில் ஊக்கம் காட்டியிருப்பான். ஆனல் பிளாட்டோ, தன்னுடைய மாணவனுக்கு வடிவியல் விஞ்ஞானக் கலையையும், கடினமான தத்துவக் கலையையும் போதித்தான். டயோனிஸியஸ் அவனுடைய போதனையை ஏற்றுக்கொள்வதில் ஊக்கம் காண்பித்தான். வடிவியல் விஞ்ஞானக் கலை மிகவும் கடின மாக இருந்தபடியால் டயோனிஸியஸுக்கு அதன்மேல் வெறுப்பு யேற்பட்டுவிட்டது. டியோன் பிளாட்டோ என்பவர்களுடைய திட்டத்திற்கு எதிர்ப்பையுண்டுபண்ணும் சூழ்நிலை அங்கே உருவா யிற்று.

**பிலிஸ்டஸ் திரும்ப நாடுகடத்தும் தண்டனையிலிருந்து விடுபட்டு சைரகூஸிக்குத் திரும்புதல்; அவன் டியோனுடைய திட்டத்தை எதிர்த்தல்.**

இளைய டயோனிஸியஸ் பதவிக்கு வந்தவுடனேயே, பிலிஸ் டஸ் என்ற வரலாற்று விரிவுரையாளனை சைரகூஸிற்குத் திரும்ப வரவழைத்தான். அவனுக்கு டியோனுடைய திட்டங்கள் பிடிக்கவில்லை. அவன் சர்வாதிகார ஆட்சி நிலைத்திருக்கவேண்டுமென்று விரும் பினன். அரசியலில் மாறுதல் கொண்டுவர அவன் விரும்பவில்லை. டியோனை வீழ்த்தத் தன் நண்பர்களோடு திட்டமிட்டான். அவர்

களுக்குச் சாதகமாக ஒரு கடிதம் கிடைத்தது. அக்கடிதம் கார்த்தே ஜிக்கும் சைரகூஸிற்கும் சமாதான ஒப்பந்தம் எற்படுத்துவதைப் பற்றியது. அக்கடிதத்தில் டியோன் தன்னை முதலில் கலக்காமல் உடன்படிக்கையின் வாசகங்கள் எழுதப்படக் கூடாதென்று குறிப் பிட்டிருந்தான். பிலிஸ்டஸ் அக்கடிதத்தைக் கைப்பற்றினன். அக்கடிதத்தில் சதித் திட்டங்கள் அடங்கி இருப்பதாக பிலிஸ்டஸ் கூறினன். மற்றவர்கள் அதை நம்பினர்கள். ஆகையால் டியோன் நாடு கடத்தப்பட்டான். அவனுடைய சொத்து பறிமுதல் செய்யப்பட வில்லை. அவன் அந்நிய நாட்டிலிருந்துகொண்டே தன் சொத்தை அனுபவிக்க அவனுக்கு உரிமையளித்தார்கள். டயோனிஸியஸ் டியோனுக்குக் கிடைத்த புகழைக் கண்டு மனம் புழுங்கினன். டியோனைப்போலவே தானும் மற்றவர்களால் புகழப்படுவதை அவன் விரும்பினன். டியோனின் வீழ்ச்சிக்குப்பின் சைரகூஸில் தங்கி வாழ பிளாட்டோவிற்கு விருப்பமில்லை. ஆகையால் அவன் ஏதென் ஸுக்குத் திரும்பிப்போக விரும்பினன். டயோனிஸியஸ் பிளாட் டோவிற்கு ஏதென்ஸ் நகரம் செல்வதற்கு விடை கொடுத்தனுப் பினன்.

உயர்ந்த குறிக்கோளுள்ள அரசாங்கத்தை ஏற்படுத்தும் திட்டம் இவ்விதமாக அழிந்துவிட்டது. அப்படிப்பட்ட அரசாங்கம் ஏற்பட்டிருக்குமேயானல் சைரகூஸிலிருந்த கூலிப்படை கலைக்கப் பட்டிருந்திருக்கும். அதன் காரணமாக சைரகூஸின் பேரரசு வீழ்ச்சியடைந்திருக்கும். இளைய சர்வாதிகாரியை நடத்துவதில் பிளாட்டோவுக்குப் போதுமான திறமையில்லையென்று அவனைக்கேலி செய்வது எளிதாக இருக்கலாம்; அவனுக்குக் கலைஞர் மன்றத்திற்கும் அரசவைக்கும் மிடையே உள்ள வேறுபாட்டை புரிந்துகொள்ளத் தெரியவில்லை என்று அவனைக் கேலிசெய்ய வழி ஏற்பட்டிருக்கும். ஆனல் பிளாட்டோ செய்த காரியம் நியாயமானது. தன் சொந்தக் குறிக்கோளின்படியே ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கம் அவனை சிஸிலிக்குக் கொண்டுவந்தது. அவ்வரசாங்க வாழ்க்கையின் முதல் நிபந்தனை அதை ஆட்சிபுரிகின்றவன் ஓர் தத்துவ ஞானியாக இருக்கவேண்டுமென்பதே. அந்நாட்டிற்கு டயோனிஸியஸ் பேரரசானபடியால் அவன் ஓர் தத்துவ ஞானியாக இருக்க வேண்டியது அவசியமாயிற்று. சர்வாதிகாரிக்குத் தத்துவ நூல்களின் உண்மையைப் போதிப்பதில் பிளாட்டோ சாதாரணமான விருப்பம் கொள்ளவில்லை. அவன் தன்னுடைய குறிக்கோள்களுக்கு ஏற்ற முறையில் ஓர் அரசாங்கத்தை உருவாக்கவும் அதை நடத்தி செல்லுகிறவனுக்குத் தேவையான தத்துவ ஞானத்தைப் போதிப் பதிலும் கண்ணும் கருத்துமாயிருந்தான். டயோனிஸியஸ் பிளாட்டோவினுடைய கோட்பாட்டிற்கேற்ற மனிதனல்லன். அத்தகையோனைக்கொண்டு செயலாய்வு செய்வது பயனற்ற

செயலாகும். பிளாட்டோ பகுத்தறிவு முறையையே கைபற்றினன். அவன் தன்னுடைய கோட்பாட்டிற்கு உண்மையுள்ளவனுக இருந்தான்.

## 10. டியோன்

அப்படிப்பட்ட அனுபவங்களுக்குப் பிறகு பிளாட்டோ டயோனிஸியஸின் அவசர அழைப்பிற்கிணங்கி சிஸிலிக்கு மறுபடியும் திரும்பி வந்தது நூதனமாகத் தோன்றலாம். ஒரு சர்வாதிகாரியை தத்துவ ஞானியாக்குவது பற்றி மறுபடியும் அவன் கருதவில்லே. டியோனை மீண்டும் வரவழைத்து டயோனிஸியஸுடன் சமரசம் செய்து வைப்பதே அவனுடைய நோக்கமாக இருந்தது. பிளாட்டோ சிஸிலிக்குத் திரும்பிவந்தபோது, அவனை முன் போலவே மரியாதையோடும் கண்ணியத்தோடும் டயோனிஸியஸ் வரவேற்றுன். ஆனுல் பிளாட்டோவின் வருகை பயனற்றதாய் இருந்தது. டியோன் தன் செல்வத்தை சைரகூஸுக்குத் திரும்பி வருவதற்கேற்ற வழிகளில் பயன்படுத்தி அதன் மூலமாகக் கொடுங்கோன்மையை வீழ்த்திவிட நோக்கங் கொண்டிருக்கிறுன் என்று இளைய டயோனிஸியஸ் உறுதியாகக் கூறினன். ஆகையால் டியோனுடைய சொத்தைப் பறிமுதல் செய்வதில் எச்சரிக்கையாக இருந்தான். பிளாட்டோ எவ்வளவு விரைவில் ஏதென்ஸுக்குத் திரும்ப வேண்டுமோ அவ்வளவு விரைவில் திரும்பிவிட்டான். டியோனும் பழைய கிரேக்க நாட்டிற்குத் திரும்பி வந்து, அதனைத் தன் தலைமைக் காரியாலயமாக்கிக் கொண்டான். அப்பொழுது சர்வாதிகாரி, டியோன் குடும்பத்தினரை வீணுகக் கொடுமை செய்தான். அவன் டியோனுடைய மனைவி ஆர்ட்டே என்பவளை வேருெருவனை மணந்துகொள்ளும்படி வற்புறுத்தினன். கடைசியாக டியோன் தான் செயலில் இறங்க வேண்டிய நேரம் வந்துவிட்டதென்று கருதினன். டயோனிஸியஸுடைய பெரும் படையைப் போர்க் களத்தில் சந்திக்க ஒரு சிறிய படையை ஐந்துக்குக் குறைவான வியாபாரக் கப்பல்களில் ஏற்றிக் கொண்டு டியோன் ஸ்ஸாஸிந்தாஸிலிருந்து புறப்பட்டான். அவனுடைய வருகை சைரகூஸில் எதிர்பார்க்கப்பட்டது. கடற்படைத் தளபதியாகிய பிலிஸ்டஸ், இத்தாலியக் கடல்களில் சைரகூஸின் கடற்படையோடு டியோனை வழிமறித்துத் தாக்கக் காத்திருந்தான். டியோன் திறந்த கடல் வெளியில் பாச்சினஸுக்குச் சென்றுன். மேற்கு சிஸிலியில் இறங்கி, தன்னுல் முடிந்த படைகளைத் திரட்டிக் கொண்டு, அவற்ருேடு சைரகூஸுக்குச் செல்ல திட்டமிட்டிருந்தான். அவனுடைய இந்த முயற்சி வீரமிக்கது. டியோன் சர்வாதிகாரியின் கோழைத்தன்மையையும், சைரகூஸியர்கள் அவனுடைய கொடுங்கோன்மையிலிருந்து விடுதலையடைய ஆவல் கொண்டிருந்ததையும் அறிந்திருந்தான். அப்பொழுது அவன் கப்பல்கள் புயலால்

தாக்கப்பட்டு லிபியன் (Libyan) கடற்கரைக்கு இழுத்துச் செல்லப் பட்டன. பிறகு தெற்கு சிஸிலியிலிருந்த கார்த்தேஜிக்குச் சொந்தமான ஹிராக்ளியேமினேவா துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தான். இங்கே அவர்கள் வந்தபோது டயோனிஸியஸ் எண்பது கப்பல்களுடன் இத்தாலியை நோக்கிப் போய்விட்டா னென்று கேள்விப்பட்டான். காலத்தை வீணுக்காமல் வழியில் கிடைத்த கிரேக்க, சிசெல் நாடுகளின் போர் வீரர்களைச் சேர்த்துக் கொண்டு டியோன் சைரகூஸை நோக்கிப் புறப்பட்டான். எப்பிபோலேயைக் காவல் புரிந்த காம்பானியக் கூலிப் படையை ஒரு சூழ்ச்சியின் மூலம் அவ்விடத்திலிருந்து அப்புறப்படுத்தி னர்கள். ஓர்நாள் இரவு டியோனும் அவனுடைய படையும் ஆக்ரே (Acrae) யிலிருந்து புறப்பட்டு சைரகூஸ் நகருக்குள் வந்துவிட் டார்கள். அங்கிருந்த குடிமக்கள் அவர்களை ஆரவாரத்தோடு ஏற்றுக்கொண்டார்கள். சைரகூஸின் மக்கள்சபை, நாட்டின் அர சாங்கத்தை டியோன் உள்பட இருபது படைத் தலைவர்களிடம் ஒப்படைத்தார்கள். டியோன் எப்பிபோலே என்ற கோட்டையைக் கைப்பற்றினன். தீவைத் தவிர சைரகூஸ் நகரிலுள்ள எல்லாப் பாகங்களையும் கைப்பற்றினன். தீவிலிருந்து பெருநிலப் பகுதியி லுள்ள சைரகூஸை யாரும் தாக்காவண்ணம் டியோன் ஒரு சுவரை எழுப்பினன். அச் சுவர் பெரிய துறைமுகத்திலிருந்து, சிறிய துறைமுகம் வரையில் நீண்டிருந்தது. டயோனிஸியஸ் ஏழு நாட்கள் கழித்து சைரகூஸுக்குத் திரும்பினன்.

### ஹெராக்லிடஸ், பிலிஸ்டஸின் மரணம்

சைரகூஸியர்கள் தங்களுடைய மீட்புக்காக உற்சாகமடைந் திருந்தார்கள். டியோன், குடிமக்களின் செல்வாக்குப் பெற்ற ஓர் தலைவனுகிவிட்டான். ஆனல் டயோனிஸியஸ் மக்களுடைய அன் புக்குத் தகுதியுள்ளவனல்லன். அவன் அகந்தையினல் பலரை நாட்டை விட்டுத் துரத்திவிட்டான். மேலும், சைரகூஸியர் தங்களுக்குக் கிடைத்த சுதந்திரத்தை எவ்வகையில் பயன்படுத்த வேண்டுமென்று டியோன் கற்றுக்கொடுக்க ஆரம்பித்துவிட்டான். டயோனிஸியஸ் தீவில் அடைபட்டுக் கிடந்தான். அவன் அங்கி ருந்துகொண்டே டியோன்மீது மக்கள் ஐயங்கொள்ளும் காரியங் களைச் செய்து வந்தான். டியோனுக்கு எதிராக ஒருவன் எழும்பினன். ஹெராக்கிளிடஸ் என்ற டியோனுடைய பகைவனுக்கு மக்களிடத்தில் மிக்க செல்வாக்கிருந்தது. இந்த ஹெராக்கிளிடஸைத்தான் டயோனிஸியஸ் நாடுகடத்தியிருந்தான். இவன் போர் வீரர்களையும் போர்க் கருவிகளையும் கொண்ட கடற்படையுடன் திரும்பி வந்தான். சைரகூஸ் நாட்டின் சபை அவனைக் கடற்படைத் தளபதியாகத் தேர்ந்தெடுத்தது. மக்கள் சபை டியோனுடைய அனுமதியில்லாமல்

செய்த தேர்வை அவன் தள்ளிவிட்டான். பிறகு டியோன் தன் விருப்பப்படியே ஹெராக்கிளிடஸைப் படைத் தலைவனாக்கினான். அவனுடைய நடத்தையைக் கண்டு சைரகூஸியர் வெறுப்படைந்தார்கள். தங்களுக்கு மற்றுமோர் சர்வாதிகாரி எழும்புவதை அவர்கள் விரும்பவில்லை. பிலிஸ்டஸ் கடற்படையுடன் திரும்பி வந்தான் அவனுக்கும் ஹெராக்கிளிடஸுக்குமிடையே நடந்த கடற்படைப் போரில் பிலிஸ்டஸ் தோல்வியடைந்தான். பின் அவன் கைதியாக்கப் பட்டுக் கோரமாகக் கொல்லப்பட்டான். இவ்வாறு டயோனிஸியஸ் தன்னுடைய சிறந்த ஆதரவாளனை இழந்ததால், அத் தீவிலிருந்து தப்பியோடிவிட்டான். அவன் அவ்விடத்தை விட்டுத் தன் கடற்படையோடு செல்லும்போது, ஒரு சிறிய படையைத் தன்னுடைய மகன் அப்போல்லோகிராட்ஸ் தலைமையில் விட்டுச் சென்றான்.

### டியோன் லியோன்தைனுக்குப் பின்வாங்குதல்

டியோனுடைய செல்வாக்கு குறைந்துவிட்டது. சைரகூஸியர் அவனைப் படைத் தலைமையிலிருந்து விலக்கிவிட்டனர். இப்போது அவர்கள் இருபத்தைந்து படைத் தலைவர்களை நியமித்தார்கள். அவர்களில் ஹெராக்கிளிடஸும் ஒருவனாக இருந்தான். டியோனுடன் வந்த பெலப்போனீசியப் படைக்குக் கூலி கொடுக்க சைரகூஸியர்கள் மறுத்துவிட்டார்கள். டியோன் அனுமதி கொடுத்திருந்தால் பெலப்போனியர்கள் சைரகூஸியர்களுக்கு எதிராகத் திரும்பியிருப்பார்கள். அவன் பெலப்போனீசியர்களைக் கொண்டு, தன் சொந்த நகரமாகிய சைரகூஸைத் தாக்க விரும்பவில்லை. ஆகையால் 3000 போர் வீரர்களுடன் டியோன் லியோன்தைனுக்குப் போய்விட்டான்.

### நிப்ஸியஸின் வருகை (நும்ஸியஸ்); டியோனைத் திரும்ப வரவழைத்தல்; டியோன் சைரகூஸை விடுவித்தல்.

சைரகூஸியர், தீவிலிருந்த கோட்டையை முற்றுகையிட்டார்கள். அவர்கள் கோட்டையைப் பாதுகாத்துக் கொண்டிருந்த சேனையை நெருக்கினார்கள். காவற்படை சரணடைவதற்குத் தயாராய்விட்டது. தங்களுடைய தீர்மானத்தைத் தெரிவிக்கத் தூதுவரை அனுப்பினார்கள். சரணடைவதற்காகக் குறிப்பிட்ட அன்று அதிகாலையில் உதவிப் படையும் உணவுப் பொருள்களும் வந்து சேர்ந்தன. அவற்றை நிப்ஸியஸ் என்ற பெயருள்ள நேப்பிள்ஸ் நாட்டிலுள்ள காம்பானிய வீரன் கொண்டுவந்தான். அவன் பகைவர்களுக்குத் தெரியாமல் பெரிய துறைமுகத்துக்குள் புகுந்து, கொண்டுவந்த உதவிப் படையையும் உணவுப் பொருள்களையும் தீவிலுள்ள கோட்டைக்குக் கொண்டுபோய்ச் சேர்த்தான். அங்குள்ள நிலைமையில் மாறுதல் ஏற்பட்டது. சமரசப் பேச்சு வார்த்தைகள் முறிந்து

விட்டன. ஆரம்பத்தில் நற்காலப் பயன் சைரகூஸியர்களின் பக்க மிருந்தது. ஹெராக்கிளிடஸ் இரண்டாவது முறையாகக் கடற் சண்டையில் வெற்றியடைந்தான். டயோனிஸியஸால் அல்லது நிப்ஸியஸால் கைவிடப்பட்ட போர்க் கப்பல்களில் சிலவற்றை ஹெராக்கிளிடஸ் மூழ்கடித்தான்; சிலவற்றைக் கைப்பற்றினுன். வெற்றியின் மகிழ்ச்சியில் நகர மாந்தர்கள் மூழ்கியிருந்தார்கள். அன்றிரவைக் குடிப்பதிலும் களியாட்டத்திலும் கழித்தார்கள். குடி போதையில் அயர்ந்து தூங்கிவிட்டார்கள். பொழுது புலர்வதற்கு முன் நிப்ஸியஸும் அவனுடைய பண்டையும் தீவைவிட்டு வெளியேறி ஞர்கள். டியோன் கட்டிய குறுக்குச் சுவரை ஏணிகளைக்கொண்டு கடந்துவிட்டார்கள். காவல் புரிந்தவர்களைக் கொன்று கீழ் அச்சார் டினுவையும் அகோராவையும் (Lower Achrādina and the Agora) கைப்பற்றினுர்கள். நகரின் இந்தப் பகுதிகள் தாக்கப்பட்டு அழிக் கப்பட்டன. கூலிப்படை வீரர்கள் அவர்களுடைய விருப்பப்படியே நடந்துகொள்ள அனுமதி அளிக்கப்பட்டது. அவர்கள், பெண்க ளையும், குழந்தைகளையும் கைக்கெட்டிய பொருள்களையும் கைப்பற்றி ஞர்கள். எப்பிபோலேயிலும் மேல் அச்சார்டினுவிலும் அடைக்கலம் புகுந்தவர் புறச் சாதியார் இழைக்கும் கொடுமைகளைக் கண்டு கண்ணீர் விட்டனர். டியோன் ஒருவனே தங்களைக் காப் பாற்றக்கூடுமென எண்ணினுர்கள். அவனை மறுபடியும் திரும்பி வரவழைக்க வேண்டுமென்று எல்லோரும் ஒரே மனதாக வாக்களித்தார்கள். அவனிடம் தூதுவர்களை அனுப்பி ஞர்கள். அவர்கள் டியோன் தங்கியிருந்த லியோன்தைன் நகருக்கு மாலையில் வந்துசேர்ந்தார்கள். அவன் அவர்களை நாடகமேடைக்கு அழைத்துச் சென்றுன். அங்கே கூடியிருந்தவர்கள் முன்னிலையில் தூதுவர்கள் சைரகூஸின் நிலைமையை விளக்கிக் கூறியதோடு பெலப் போனீசியர்கள் சைரகூஸியர்களின் நன்றிகேட்டை மறந்துவிட வேண்டுமென்றும், தங்களுக்கு உதவிபுரிய வேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள். டியோன், எல்லோர் மனமும் இளகும் படியாக ஓர் சொற்பொழிவாற்றினுன். என்ன நேரிட்டாலும் தான் அங்குப் போய்ச்சேர வேண்டுமென்றும், சைரகூஸை மீட்க முடியா விடில் அங்கேயே தன் உயிரைவிட ஆயத்தமாக இருப்பதாகவும் கூறினுன். ஆரம்பத்தில் பெலப்பொனீஸியர்கள் அவனுடைய வார்த்தைக்குக் கட்டுபடவில்லை. சைரகூஸ் மீட்கப்பட்டே தீரவேண்டு மென டியோன் உறுதியோடு கூறி, பெலப்போனிசியர்களை அழைத்துக்கொண்டு சைரகூஸை நோக்கிப் புறப்பட்டான். அவர்கள் இரவில் பிரயாணம் செய்து சைரகூஸுக்கு ஆறு மைல் தூரமுள்ள மொராவிற்கு விடியற்காலை வந்து சேர்ந்தார்கள். நிப்ஸியஸ் இதனைக் கேள்வியுற்றுத் தன்னுடைய படையை நகரின் மீது ஏவினுன். நடு இரவில் புறச் சாதியார்களைக் கொண்ட

அவனுடைய படை கொள்ளையடிப்பதைக் கைவிட்டு கொலை செய்வதிலும், தீ வைத்தலிலுமீடுபட்டார்கள். டியோன் அச்செய்தியைக் கேள்விப்பட்டான். விரைவில் சைரகூஸுக்கு வந்தான். வடக்கிலுள்ள ஹெக்ஸபைலோன் வழியாக நகருள் புகுந்தான். வழியிலுள்ள பகைவர்களை முறியடித்துகொண்டே அச்சராடினு வழியாகச் சென்று அவன் எழுப்பிய குறுக்குச் சுவரை அடைந்தான். குறுக்குச் சுவர் இடித்துத் தள்ளப்பட்டது. அழிந்துபோன சுவருக்குப் பின்னுல் நிப்ஸியஸ் கூலிப்படை ஒன்றை நிறுத்திவைத்திருந்தான். அங்கே இறுதிப் போராட்டம் நடைபெற்றது. பகைவர்கள் தோற்கடிக்கப்பட்டு, ஓர்ட்டிஜியா கோட்டைக்கு விரட்டியடிக்கப்பட்டார்கள்.

டியோனுடைய பகைவர்கள் நகரைவிட்டு ஓடிவிடவில்லை. ஹெராக்கிளிடஸ் டியோனிடம் மன்னிப்புக் கோரினுன். அவனைக் கொல்லாமல் விட்டதற்காக மக்கள் டியோன் மீது குற்றம் சுமத்தினர். அவனுடைய இப் பெருந்தன்மை மடமையானதெனக் கூறினர். தரைப்படைக்கு டியோனையும், கடற்படைக்கு ஹெராக்கிளிடஸையும் படைத்தலைவர்களாக்கினுர்கள். அவர்களுக்கிடையே மீண்டும் பகை மூண்டது. அப்பொழுது கேயஸிலஸ் அவர்களிருவரையும் சமரசம் செய்துகொள்ளுப்படி செய்தான். மேலும் ஹெராக்கிளிடஸ் டியோனுக்கெதிராக எதையும் செய்வதில்லை என்று ஆணையிட்டான்.

### தீவு சரணடைதல்

நிப்ஸியஸ் அங்கிருந்து ஓடிவிட்டதாகத் தோன்றுகிறது. அப்பொழுது டயோனிஸியஸின் மகன் சரணடைய விருப்பங் கொண்டான். இவ்வளவு நெருக்கடியிலும் டியோனுடைய சகோதரி அரிஸ்ட்டோமேச்சே என்பவளும், அவனுடைய மனைவி ஆர்ட்டே என்பவளும் முற்றுகையிலிருந்த தீவிலுள்ள கோட்டையிலிருந்தார்கள். டியோன் தன்னுடைய மனைவியை மறுபடியும் ஏற்றுக் கொண்டான்.

### டியோனின் அரசியல் நோக்கம்; சீர்திருத்தப்பட்ட உயர் குடிமக்களாட்சி; டியோன் சர்வாதிகாரியாதல்.

டியோன் தன்னுடைய அரசியல் நோக்கத்தை வெளிப்படுத்தும் நேரம் வந்துவிட்டது. அவன் சைரகூஸுக்கு விடுதலையளிக்க வந்தவன். ஆனுல் சைரகூஸியர் எதிர்பார்த்த விடுதலையை அளிக்க வரவில்லை. சைரகூஸியர் மக்களாட்சி மறுபடியும் புதுப்பிக்கப்படுமென நம்பினுர்கள். டியோனுக்கு மக்களாட்சியின் மீதும், கொடுங்கோன்மையின்மீதும் நம்பிக்கை கிடையாது. அவன் பிளாட்டோ விரும்பிய அரசியல் முறையையும் கைவிட்டு விட்டான்.

அவனுக்கு உயர் குடிமக்களாட்சியின்மீது நம்பிக்கையேற்பட்டது. அவ்வாட்சியில் மக்களாட்சியின் கோட்பாட்டிலுள்ள சில விதிகளையும் சேர்த்துக்கொண்டான். ஸ்பார்ட்டாவைப்போல் ஒன்று அல்லது பல அரசர்களை நியமிக்கவும் டியோன் விரும்பினான். கொரிந்தியாவிலிருந்து அறிவுரையாளரை வரவழைக்க விரும்பி அங்கு ஆட்களை அனுப்பினான். கடைசியாக, கொரிந்தியாவிலுள்ள ஆலிகார்க் அரசாங்கத்தைப்போன்ற ஓர் அரசாங்கத்தை ஏற்படுத்த விரும்பினான். கொரிந்திய நாணயமாகிய பெகாஸி (Pegāsi) போல், பறக்கும் குதிரை உருவம் பொறித்த நாணயம் சைரகூஸில் வெளியிடப்பட்டது. சிறு குழுவினரின் ஆட்சியாகிய ஆலிகார்க் ஆட்சியை அவன் ஏற்படுத்த விரும்பிய போதிலும், அதை உடனடியாக நடைமுறைக்குகொண்டுவந்து, தன்னை அதிகாரத்தை விரும்புகிறான். சர்வாதிகாரியாக ஆசைப்படுகிறானென்று குடிமக்கள் ஐயுறுவண்ணம் நடந்துகொண்டிருக்க வேண்டியது. சர்வாதிகாரியினுடைய கோட்டை இடிக்கப்படவேண்டுமென்று குடி மக்கள் விரும்பினார்கள். டியோன் அவர்கள் விருப்பத்தை நிறைவேற்றி, அவர்களுடைய செல்வாக்கையும் நம்பிக்கையும் பெற வழிசெய்திருக்க வேண்டியது. டியோன் கோட்டையில் வசிக்கவில்லை. அதே சமயத்தில் கோட்டையை இடித்துத் தள்ளவுமில்லை. அக்கோட்டை நிலைத்திருந்தபடியால் அவன் சர்வாதிகாரியாக விரும்புகிறானென்று குடிமக்கள் எண்ணினார்கள். சைரகூஸியர்கள் தங்கள் அரசியல் விவகாரங்களைத் தாங்களே தீர்த்துக்கொள்வதை அவன் விரும்பவில்லை. அதிகாரப் பித்து அவனுடைய மதியைக் கெடுத்துவிட்டது. அவனுடைய அதிகாரம் கூட்டுப்படைத் தலைமை ஒன்றால் மட்டும் தடைபடுத்தப்பட்டிருந்தது. கூட்டுப்படைத் தலைமையையும் வரம்புள்ள அதிகாரத்தையும் அவன் விரும்பவில்லை. ஆகவே ஹெராக்கிளிடஸ் கொல்லப்படுவதற்கு அவன் இணங்கினான். ஹெராக்கிளிடஸ் கொல்லப்பட்டான். டியோன் பேச்சளவில் சர்வாதிகாரத்தை வெறுத்தபோதிலும் செயலளவில் அதை நிலைநாட்ட விருப்பங்கொண்டான்.

**கள்ளிப்பஸின் சதி; அவனுடைய சூளுரை; டியோனின் கொலை, ஜூன், கி. மு. 354.**

பழைய கிரீஸிலிருந்து டியோனுடன் வந்தவர்களில் கள்ளிப்பஸ் (Callippus) என்பவன் ஒருவனாவான். அவன் பிளாட்டோவின் மாணவன்; டியோனின் உத்தம நண்பன். அவன் டியோனை ஒழித்துக் கட்டத் திட்டமிட்டான். டியோனின் சகோதரி அரிஸ்ட்டோமேச்சே என்பவளும், அவனுடைய மனைவி ஆர்ட்டே என்பவளும் கள்ளிப்பஸுடைய செய்கையின் மீது ஐயுற்றார்கள். அவனைத் துரோகி என்றும் டியோனுக்கு எதிராகத் துரோகச் செயலில் ஈடுபட்டிருக்கிறா

னென்றும் வெளிப்படையாகக் குற்றஞ்சாட்டினுர்கள். அவனே தன்னை நிரபராதியென்று நிரூபிக்க, டெமிட்டர், பெர்ஸிப்போன் என்ற தெய்வங்களின் ஆலயத்தில் ஆணையிட்டு உறுதிசெய்ய முன் வந்தான். அப்பொழுது ஆலயத்தில் பணிசெய்யும் பெண் குருக்கள் அவனைப் பாதாள உலகங்களின் ராணியின் ஆடையால் போர்த்தி, அவன் கையில் ஓர் தீபத்தைக் கொடுத்தார்கள். இந்தக் கோலத்தில் அவன் டியோனுக்கு விரோதமான செயலில் தான் ஈடு பட்டதில்லையென்று ஆணையிட்டான். அவனுடைய இந்தத் தீரச் செயல் அவனுக்குச் சமயங்களில் நம்பிக்கையில்லையென்பதை விளக்குகிறது. தேவியின் சன்னிதிக்கு எதிரில் ஆணையிட்ட அடுத்த விடிையே டியோனைக் கொல்ல வேண்டிய நாழிகையையும் நாளையும் கணித்துவிட்டான். கன்னியரின் (Maiden) பண்டிகையில் டியோனைக் கொல்லத் திட்டமிட்டான். அவனுக்கு அப் பணியைச் செய்துகொடுக்க ஸ்சாஸிந்தஸ் நாட்டினரில் சிலர் தயாராக இருந் தார்கள். டியோன் கொலையுண்டான். சர்வாதிகாரம் கள்ளிப்பஸின் கைக்கு மாறிவிட்டது.

**கள்ளிப்பஸின் கொடுங்கோலாட்சி; கி.மு. 354-3. ஹிப்பாரினஸின் கொடுங்கோன்மை, கி.மு. 353-1; நைஸேயஸின் கொடுங்கோன்மை, கி.மு. 351-46.**

கள்ளிப்பஸின் கொடுங்கோலாட்சி ஓராண்டு காலம் நிலைத் திருந்தது. அவன் காட்டானே நகரைத் தாக்கிக்கொண்டிருந்த போது மூத்த டயோனிஸியஸின் இரண்டாந்தாரத்தின் இரு குமாரர்களாகிய ஹிப்பாரினஸ்ஸும் நைஸேயஸும் சைரகூஸுக்கு வந்தார்கள். அவர்கள் ஆர்ட்டிஜியாவைக் கைப்பற்றினுர்கள். அவர்களிருவரும் பயனற்றவர்கள்; குடிகாரர்கள்; ஒழுக்கங்கெட்டவர்கள். ஹிப்பாரினஸ் ஆர்ட்டிஜியாவை ஈராண்டு ஆட்சிபுரிந் தான். அவன் குடிபோதையிலிருந்தபோது கொல்லப்பட்டான். அவனுக்குப் பின் அவனுடைய சகோதரன், நைஸேயஸ் ஆர்ட்டி ஜியாவை ஐந்தாண்டு ஆட்சி புரிந்தான். அவர்கள் இருவரும் தீவிலிருந்தவாறே தீவுக்கு வெளியிலுள்ள சைரகூஸினின் மீது எவ்வாறு ஆட்சிச்செலுத்தினுர்களென்பது தெரியவில்லை.

**டயோனிஸியஸின் இரண்டாவது கொடுங்கோலாட்சி, கி. மு. 346. அவனுடைய மனைவி மகள்களின்கதி.**

சைரகூஸில் பல சம்பவங்கள் நடந்த காலங்களில் டயோனி ஸியஸ் தன்னுடைய தாயின் நாடாகிய லோக்ரியில் வாழ்ந்து வந்தான். அவன் அங்கே கொடுங்கோலாட்சியை நடத்தினுன். அவனுடைய கொடுங்கோன்மையின் கொடூரச் செயல்களும், அந்நாட்டுக் கன்னியர்களுக்கு இழைத்த அவமரியாதையும் அவனை

அந்நாட்டினர் பகைக்கும்படி செய்தது. அந்நாட்டிலுள்ளவர்கள் எல்லோரும் அவனை வெறுத்தனர். சைரகூஸை மீண்டும் பெறும் படியான ஒரு வாய்ப்பு அவனுக்குக் கிடைத்தது. அவன் தன்னுடைய மனைவியையும், மகள்களையும் ஒரு சிறு படையின் பாதுகாப்பில் விட்டு விட்டு, சைரகூஸை நோக்கிப் புறப்பட்டான். அவன் ஆர்ட்டிஜியாற்குச் சென்று நைஸேயஸை விரட்டிவிட்டான். அவன் லோக்கிரியை விட்டுப் புறப்பட்டவுடனேயே லோக்கிரியர் கலகம் விளைவித்து, டயோனிஸியஸின் படையை எளிதில் வென்று விட்டார்கள். டயோனிஸியஸின் மனைவியையும் மகள்களையும் பழி வாங்க ஆரம்பித்தார்கள். எவ்வாறு இரந்து வேண்டியும், குறுக் கிட்டுப் பரிந்து பேசியும், பொருள் தந்தும் அவர்களுடைய தீர்மானத்தை மாற்ற முடியவில்லை. அவனுடைய மனைவியையும் மகள்களையும் மானபங்கம் செய்தார்கள்; சித்திரவதைச் செய்தார்கள்; கடைசியாக கழுத்தை நெரித்துக் கொன்றுவிட்டார்கள். அவர் களுடைய பிரதேங்களைக் நெருப்பிலிட்டுக் கொளுத்திச் சாம்பலைக் கடலில் வீசி எறிந்தார்கள்.

## 11. திமோலியோன்

**ஹிகேட்டாஸ்; கொரிந்தியாவிற்கு சிஸிலியர்களின் விண்ணப்பம்.**

இந்தக் காலத்தில் சிஸிலியில் கொடுங்கோலாட்சி நிலைத் திருந்தது. சைரகூஸ், மெஸ்ஸானா, லியோன்தைன், காட்டானே முதலிய நாடுகளும் மற்ற சிசெல் பட்டினங்களும் சர்வாதிகாரிகளின் ஆளுகையிலிருந்தன. சைரகூஸ் நகரத்தில் மட்டும் மக்களுக்குச் சிறிது சுதந்திர மிருந்தது. டயோனிஸியஸ் ஆர்ட்டிஜியா தீவை மட்டும் ஆண்டுவந்தான். எனவே, கொடுங்கோன்மையை எதிர்த்து சைரகூஸியர் செய்யும் போராட்டத்தில், அவர்களை முன்னின்று நடத்த அவர்களுக்குச் சரியான தலைவனில்லை. ஆகையால் அவர்கள் லியோன்தைன் நாட்டுத் தலைவனுடைய உதவியை நாடினார்கள். ஹிகேட்டாஸ் என்ற அத்தலைவன் ஒரு காலத்தில் டியோனுடைய நண்பனாக இருந்தான். டியோனுடைய மரணத் திற்குப்பின் அவனுடைய மனைவியும் சகோதரியும் பெலப்போனியா விற்குப் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, கடலில் மூழ்கி இறந்துபோகும்படி செய்தான். ஹிகேட்டாஸ் சைரகூஸின் கொடுங்கோலனாவதற்குத் திட்டமிட்டான். அவன் தன்னுடைய நோக்கத்தைக் கார்த்தேஜியின் உதவியைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்ளவிரும்பினான். அவன் தன்னுடைய நோக்கத்தை விளக்கிக் காட்டிக்கொள்ளாமல் மறைத்து வைத்திருந்தான். சிஸிலியன் கிரேக்கர்கள் கொரிந்தியாவிடம் நாடிய உதவிக்கு இவன் ஆதரவு கொடுத்தான். சிஸிலிலுள்ள கொடுங்கோன்மை ஒழியவும், கார்த்

தேஜியின் படையெடுப்பின் பயம் தீரவும், அவர்கள் கொரிந்தியாவின் உதவியை நாடினர்கள். அப்பொழுது கார்த்தஜீனியர்கள் சிஸிலியின் மீது படை எடுக்கத் திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். சைரகூஸியர் ஹிகேட்டாஸை தங்களுடைய படைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர்.

#### கொரிந்தியாவின் பதில்; திமோலியோன்.

கொரிந்தியா தன்னுடைய குடியேற்ற நாடுகளுக்கு உதவி புரிவதில் எப்போதும் தயாராக இருந்தது. இப்போது சைரகூஸுக்கு ஓர் படைத் தலைவனைத் தேர்ந்தெடுப்பது அதற்குக் கடினமாகத் தோன்றியது. சபையில் ஒருவன் உணர்ச்சி வசப்பட்டுப் படைத் தலைமையைத் திமோடேமஸ் என்பவனின் மகன் திமோலியோன் என்பவனுக்குக் கொடுக்கவேண்டு மென்று சொன்னன். அவன் ஓர் உயர் குடியைச் சேர்ந்தவன். அவனுடைய சிறந்த பண்புகளுக்காக எல்லோரும் அவனைப் புகழ்ந்தார்கள். அவன் ஓர் நூதன சூழ்நிலையில் வாழ்ந்துவந்தான். அவனுடைய சிறந்த பண்புகளைப் பலர் புகழ்ந்தார்கள். சிலர் அவனை இகழ்ந்து கூறினர்கள். அவனுடைய சகோதரன் யுத்தகளத்தில் ஓர் இக்கட்டான நிலையில் சிக்கிக் கொண்டான். அப்பொழுது அவன் தன்னுடைய உயிரைப் பொருட்படுத்தாமல் தன்னுடைய சகோதரனுடைய உயிரைப் பாதுகாத்தான். மற்றோர் சமயம் அவனுடைய சகோதரன் சர்வாதிகாரியாவதற்காகத் திட்டமிட்டுச் சதிசெய்தான். திமோலியோனல் அதைச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவன் தன் நண்பர் சிலருடன் சேர்ந்து, அவனுடைய சகோதரர்களைக் கொலைச்செய்தான். சகோதரனுடைய இரத்தத்தைச் சிந்தியவனெனப் பலரால் அவன் இகழ்ந்து கூறப்பட்டான், மற்றவர்கள் அவனுடைய கடமை யுணர்ச்சிக்காக அவனைப் புகழ்ந்தார்கள். அவன் தன்னுடைய சகோதரனுடைய மரணத்திற்குப்பின், பொது வாழ்க்கையிலிருந்து விலகித் தனித்து வாழ்ந்தான். அவனுடைய பெயர் சபையில் கொண்டுவந்தபோது சபை அதை ஆதரித்தது. அப்பொழுது செல்வாக்குப் பெற்ற தெலிகிளீட்ஸ் அவனைப் பற்றிய கருத்தைச் சபையில் வெளிப் படுத்தும் முகமாக, ‘அவன் வெற்றி பெற்ருல் ஒரு கொடுங்கோலனைக் கொன்ருனென்றும், தோல்வியடைந்தால் அவன் தன்னுடைய சகோதரனைக் கொன்ருனென்றும், நாம் கொள்வோம்’ என்று கூறினன்.

#### திமோலியோனின் பிரயாணம், கி.மு. 444.

பத்துப் போர்க் கப்பல்களோடும், சில குடிமக்களோடும், 1000 கூலிப்படை வீரர்களோடும், திமோலியோன் (Timolieon), சிஸிலிய தேவதைகளாகிய டெமீட்டர், பெர்ஸியோன் என்பவை

களின் சின்னமாகிய எரியும் விளக்கு வெளிச்சம் வழிகாட்ட, ஐயோனியக் கடலைக் கடந்தானென்று கூறப்படுகிறது. அப்பொழுது ரேஜியம் மக்களாட்சி நாடாக இருந்தது. திமோலியோனுக்கு அந்நாடு வரவேற்பளித்தது. அவனுக்காக ஓர் கார்த்தஜீனியக் கடற்படை காத்திருப்பதை யறிந்தான். ஹிகேட்டாஸிடமிருந்து அரசியல் தூதுவர்கள் திமோலியனிடம் வந்தார்கள்.

கார்த்தஜீனியர்கள் கொரிந்திய கப்பல்கள் அங்குள்ள நீர்நிலை களில் சுற்றுவதற்கு அனுமதிக்கமாட்டாராகையால் திமோலியோன் தன் கப்பல்களையும், போர்வீரர்களையும் கொரிந்தியாவிற்கு அனுப்பிவிட வேண்டுமென்று கேட்டுக் கொண்டனர். திமோலியோ னின் உதவியையும் மதியுரையையும் விரும்புவதாக ஹிகேட்டாஸ் கூறினன். அதைக் கேட்ட திமோலியோன் அவனுடைய விருப் பத்திற் கிணங்கும் எண்ணமில்லாதிருந்தான். ஹிகேட்டாஸின் ஆட்சியை, சைரகூஸில் நிலைக்கும்படி செய்யத் தான் சிஸிலிக்கு வரவில்லை யென்பதையும், அவன் உணர்ந்தான். மேலும் அவன் ஹெல்லாஸுடைய பகைவர்களின் மதியுரைக்கு இணங்கிப்போக வரவில்லை என்றும் கூறினன். அவன் எப்படி கார்த்தஜீனிய கப்பல்களுக்குத் தப்பிச் செல்வதென்ற பிரச்சினை எழும்பிற்று. அப்போது அவன் முன் யோசனையோடும், தந்திரத்தோடும் நடந்துகொண்டான். அவன் ஹிகேட்டாஸின் விருப்பதற்கு இணங்குவதாகப் பாசாங்கு செய்தான். ஆனல் ஹிகேட்டாஸ் கூறியவற்றை ரேஜியம் நாட்டின் மக்கள் சபையில் பேசி முடிவு கட்டவேண்டுமென்பதைத் தெரிவித்தான். ரேஜியம் மக்களின் தந்திரத்தின்படியே காலம் கடத்தப்பட்டது. கார்த்தஜீனியர்களும், ஹிகேட்டாஸின் அரசியல் தூதுவர்களும் அங்கு நீண்ட நேரம் தங்கி இருக்கும்படி செய்துவிட்டார்கள். இதற்கிடையில் கொரிந்தியக் கடற்படை கார்த்தஜீனியர்களுடைய கடற்படையின் பிடியிலிருந்து தப்பிச் சென்றன. திமோலியனும் சபையில் யாரும் அறியா வண்ணம் புறப்பட்டுச் சென்று, கடைசிக் கப்பலில் ஏறிக்கொண்டு, நேரே டாவுராமேனியத்திற்குச் சென்ருன்.

**திமோலியோன் டாவுராமோனியத்திற்கு வருதல். நாக்ஸியன்ஸ் குடியேற்றம்; ஆண்ட்ரோமாச்சஸ்; ஹாட்ரானம் யுத்தகளம்.**

டாவுராமோனியம் ஹிமில்கோவினல் ஏற்படுத்தப் பட்ட குடி யேற்றமென்றும். அதை டயோனிஸியஸ் கைப்பற்றி, தன்னுடைய கூலிப் படையினர் வாழ்வதற்குக் கொடுத்துவிட்டான் என்பதையும் நாம் நினைவு கூர வேண்டும். சர்வாதிகாரியாகிய டயோனிஸியஸ் இறந்த பிறகு சைரகூஸில் ஏற்பட்ட குழப்பங்களின் காரணமாக டாவுராமேனியம் விடுதலையடைந்தது. அந் நகரத்தின் குடி மக்களில் ஒருவனுகிய ஆண்டரோமேச்சஸ் என்பவன் அரசியல் விவகாரங்களில்

சிறப்புற்று விளங்கினுன். நாக்ஸியர்களுடைய பெற்ருேர்களே டயோனிஸியஸ் அகதிகளாக்கி விட்டான். வீடுவாசலின்றித் தவித்தவர்களுக்கு ஆண்டரோமேச்சஸ் தங்க இடமளித்தான். நாக்ஸியர்கள் அழிந்துபோன தங்களுடைய பட்டினத்துக்கருகி லிருந்த குன்றிற்கு வந்தார்கள். டாவுராமேனியத்தில் அவர்கள் மீண்டும் செழித்து வாழத் தலேப்பட்டனர். பழைய கிரீஸிலிருந்து வந்த தங்கள் மீட்பாளே இவர்களே முதன் முதலில் வரவேற்ருர்கள். ஹாட்ரானஸ் (Hadranus) என்பது சிசிலியர்களுடைய அக்கினி தேவதையாகும். அத்தேவதையின் முதன்மையான ஆலய மிருந்த இடத்தை ஹாட்ரானம் என்றழைத்தார்கள். சிஸெல் நகரங்களில் ஒன்ருகிய ஹாட்ரானத்தில் திமோலியோன் தன்னுடைய ஆரம்ப வெற்றியை யடைந்தான். அந்நரவாசிகளுக்கிடையில் இரு கட்சிகள் இருந்தன. சிலர் ஹிகேட்டாஸை வரவேற்ருர்கள். சிலர் திமோலி யோளே வரவேற்ருர்கள். இருவரும் அந் நகருக்கு வந்தார்கள். ஹாட்ரானம் நகரைப் பெறுவதில் இருவரும் போட்டியிட்டார்கள். ஹிகேட்டாஸ் ஹாட்ரானம் நகருக்கு முதலில் வந்துவிட்டான். திமோலியோன் பிந்தி வந்தான். பகைவர்கள் நகருக்கு வெளியி லிருந்தபோது திமோலியோன் ஓர் திடீர்த்தாக்குதல் செய்தான். பகை வர்கள் எண்ணிக்கையில் மேம்பட்டவர்கள்; திமோலியோனுடைய போர் வீரர்களேவிட அவர்கள் ஐம்பது மடங்கு அதிகமானவர்கள். திமோலியோன் அவர்களேத் தோற்கடித்தான். நகரின் கதவுகள் திமோலியோனுக்குத் திறந்து விடப்பட்டது. அந் நகர் அவனுக்கு தலேமைக் காரியாலயமாயிற்று. திமோலியோனேக் கொலே செய்ய ஹிகேட்டாஸ் இரு கொலேபாதகர்களே நியமித்தான். கடைசி நேரத் தில் சதித்திட்டம் வெளியாயிற்று. திமோலியோளே ஓர் தெய்வ சக்தி காப்பாற்றி வருவதாக மக்கள் நம்பினுர்கள். ஹாட்ராம் நகரின் சிறப்புத் தெய்வமாகிய ஹாட்ரானஸ் திமோலியோனின் தீரச்செயலே ஆதரிப்பதற்கு அடையாளமாகப் பலவித காட்சிகளேயளித்தது. இதர நகரங்களும் திமோலியோனுடன் நட்புக் கொண்டன. இதற்கிடை யில் இளேய டயோனிஸியஸ் திமோலியோனிடம் ஒரு தூதுவனே யனுப்பினுன். தூதுவன் டயோனிஸியஸ் தான் தங்கியுள்ள தீவைத் திமோலியோனிடம் விட்டுவிட விரும்புவதாகவும், அதற்கு மாருகத் தான் கொரிந்தியாவிற்கு இக்கட்டில்லாமல் தன்னுடைய சொந்தச் சொத்துகளுடன் போய்ச் சேருவதற்கு உறுதியளிக்க வேண்டு மென் றும் தெரிவித்தான். திமோலியோன் அவனுடைய வேண்டுகோளுக் கிணங்கினுன். தீவிலுள்ள கோட்டையும், அதைக் காவல் புரிந்தவர் களும், அவர்களுடைய போராயுதங்களும், திமோலியோனிடம் ஒப்ப டைக்கப் பட்டன. டயோனிஸியஸ் தன்னுடைய சொத்துகளுடன் கொரிந்தியாவிற்குச்சென்று, இறுதிவரை அங்கு வாழ்ந்து வந்தான். அவனுடைய செயல்களேப் பற்றியும் அவனுடைய அறிவுத்திறனேப்

பற்றியும் பல கதைகள் கூறப்படுகின்றன. ஒருவன் அவனுடைய நற்கால வினையை அவனுடைய தகப்பனின் நற்கால வினையுடன் ஒப்பிட்டான். அப்போது அவன் கூறியதாவது: என்னுடைய தந்தை குடி மக்கள் மக்களாட்சியின் மீது வெறுப்புற்றிருந்தபோது சர்வாதிகாரியாக வந்தான்; நானே சர்வாதிகாரத்தைக்கண்டு மக்கள் பொருமை கொண்டுள்ள காலத்தில் சர்வாதிகாரியாக விளங்கினேன்.''

**கார்த்தஜீனியர்கள் ஹிகேட்டாஸுக்கு சைரகூஸில் ஆதரவளித்தல்**

திமோலியோன் ஆர்டிஜியாவை எதிர்ப்பார்த்ததைவிட மிகவும் எளிதில் வென்று விட்டான். அவன் ஹிகேகட்டாஸின் வசமிருந்த சைரகூஸின் மற்றப் பாகங்களையும் வெல்ல வேண்டியிருந்தது. ஹிகேட்டாஸுக்குச் சிறப்பான பக்க பல மிருந்தது. அவன் கார்த்தஜீனியர்களுடன் நட்புக்கொண்டிருந்தான். கார்த்தஜீனியர்கள் 100 போர்க் கப்பல்களை மாகோ தலைமையில் சைரகூஸுக்கு அனுப்பினர்கள். கார்த்தஜீனியர்களுடைய போர்க் கப்பல்கள் பெரிய துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தன. கார்த்தஜீனியப் படை சைரகூஸுக்குள் அனுமதிக்கப்பட்டன. இது வரையில் திமோலியோன், ஹாட்ரானம் என்ற நகரில் தங்கி இருந்தான். அப்பொழுது ஹிகேட்டாஸும் மாகோவும், காட்டானே நகரை முற்றுகையிட்டார்கள். நியோன் ஆச்சராடைனுவைக் கைப்பற்றினன். அப்பொழுது கார்த்தஜீனியர்களால் காலதாமதம் செய்யப்பட்ட கொரிந்தியாவின் உதவிப்படை சிஸிலிக்கு வந்து சேர்ந்தது. திமோலியோன் சைரகூஸுக்கு வர அது ஏற்ற நேரமாக இருந்தது. அவன் தன்னுடைய படை வீட்டை சைரகூஸின் தென்புறத்திலுள்ள அனுப்பஸ் ஆற்றின் கரைமீது அமைத்துக் கொண்டான். அப்பொழுது அவனுக்கு ஓர் நல்வாய்ப்பு ஏற்பட்டது. திமோலியோனுடைய கிரேக்கக் கூலிப்படை வீரர்களும் ஹிகேட்டாஸின் கிரேக்கக் கூலிப்படை வீரர்களும் விலாங்கு மீன் பிடிப்பதில் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் சச்சரவு செய்து கொள்வதற்கான காரணங்கள் எதுவும் அவர்களுக் இல்லாமலிருந்தது. ஆனல் சம்பளத்திற்காக ஒருவரோடு ஒருவர் போரிட்டுமடியத் தயாராக இருந்தார்கள். அவர்கள் சமாதானத்தோடு பேசிப்பழகிக் கொண்டிருந்தார்கள். கிரேக்கர்கள் ஒன்று சேர்ந்து புறச்சாதியார்களைத் தாக்க வேண்டுமென்று கிரேக்கர்கள்பேசிக் கொண்டிருந்ததைத் திமோலியோனுடைய போர் வீரர்களில் ஒருவன் கவனித்தான். அச்செய்தியை மாகோ கேள்வியுற்றான். அவன் கிரேக்கப் போர் வீரர்களின் மீதும் ஹிகேட்டாஸின் மீதும் ஐயுற்றான். ஆகையால் அவன் தன்னுடைய கப்பல்களுடன் கார்த்தேஜியை நோக்கிப் புறப்பட்டுவிட்டான். அவன் கார்த்தேஜிக்குப் போய்ச் சேர்ந்ததும் அங்கு அவன் தற்கொலை செய்து கொணடான். அவனு

டைய நாட்டினர் அவனுடைய போர்வீரர்களைச் சிலுவையிலறைந்து கொன்றனர். இந்தக் கதையினுல் மகோவினுடைய நூதன நடத்தையை விளக்கிக்காட்ட இயலவில்லை.

**சைரகூஸில் மக்கள் மீண்டும் குடியேறுதல் ; மக்களாட்சி.**

சக்தி வரய்ந்த பகைவனிடமிருந்து விடுதலை பெற்ற திமோலியோன் எளிதில் ஹிகேட்டாஸை எப்பிபோலேயிலிருந்து விரட்டிவிட்டான். இப்போது சைரகூஸ் பூரண விடுதலை யடைந்து விட்டது. சைரகூஸுக்கு ஓர் மீட்பன் கிடைத்தான். அவன் டியோனைப்போல் அதிகாரப் பித்தனல்ல. டயோனிஸியஸின் கோட்டையைத் திமோலியோன் இடித்துத் தள்ளினுன். திமோலியனின் இந்தச் தீரச் செயல் அவன் மீது சைரகூஸியர்கள் நம்பிக்கை கொள்ளும்படி செய்தது. ஆனுல் நாடு காடாகக் காட்சியளித்தது. அந்நகரவாசிகளில் பலர் உயிரிழந்தார்கள்; பலர் நாட்டைவிட்டு ஓடி விட்டார்கள். சந்தை வெளியில் புல் பூண்டுகள் முளைத்திருந்தன. புதிய குடி மக்களைக் கொண்டுவந்து குடியேற்றுவது திமோலியோனின் முதல் வேலையிற்று. பழைய கிரீஸின் பண்டிகைகளில் கொரிந்தியர்கள் சைரகூஸுக்குப்போய் குடியேறுகிறவர்களுக்கு ஆதரவளிக்கப்படுமெனக் கொரிந்தியா அறிக்கையிட்டுக் கொண்டிருந்தது. கொடுங்கோலர்களால் நாடு கடத்தப்பட்டவர்கள் ஒன்று சேர்ந்து சைரக்கூஸை நோக்கிப் புறப்பட்டார்கள். இவ்விதமாக 60,000 பேர், ஆண்கள், பெண்கள், குழந்தைகள் உட்பட சைரகூஸுக்குச் சென்று குடியேறினுர்கள். இப்போது நகருக்குத் தேவையான மக்கள் தொகை வந்து விட்டது. டயோகிளிஸி (Diocles) னுடைய சட்டங்கள் புதுப்பிக்கப் பட்டன. மக்களாட்சி முறை மீண்டும் கொண்டுவரப்பட்டது. அரசியலமைப்பின் சில பாகங்கள் மாற்றியமைக்கப்பட்டன. அந்நகரின் தலைமை நீதிபதி பதவிக்கு ஒலிம்பியன் ஸீயஸின் குருவைத் தேர்ந்தெடுப்ப தென்று முடிவு கட்டினுர்கள். தலைமை நீதிபதி ஆண்டுக்கொருமுறைத் தேர்ந்தெடுக்கப்படுவதென்பதும், அவரை அந்நகரின் மூன்று கோத்திரங்களிலுமிருந்து திருவுளச்சீட்டு மூலமாகத் தேர்ந்தெடுப்பதும் வழக்கமாயிற்று. நீதிபதிக்கு அவனை நீதிபதியாகத் தேர்ந்தெடுத்த ஆண்டின் பெயரைக் கொடுப்பது வழக்கமாயிற்று. திருவுளச் சீட்டு மூலமாக நீதிபதியாகத் தேர்ந்தெடுக்கும் முறை மக்களாட்சி முறையின் அதிகாரத்தைக் குறைக்கும் ஒரு பழக்கமாயிற்று. அவர்கள் தங்களுடைய சுதந்திரத்தை நினைவு கூரப் புதிய நாணயத்தை அச்சடித்தார்கள். அப் புதிய நாணயத்தில் கடிவாளமற்ற குதிரையின் சின்னம் பொறித்தனர்.

**ஸிஸிலியில் கொடுங்கோன்மை அழிதல்; ஸிஸிலி மீது கார்த்தஜீனியப் படை எடுப்பு, கி.மு. 339.**

சிஸிலியில் கொடுங்கோலாட்சியை ஒழித்துவிட்டதைப்போலவே மற்ற நாடுகளிலும் கொடுங்கோலாட்சியை ஒழித்துக்கட்ட திமோ லியோன் புறப்பட்டான். லியோன்தைனுக்குச் சென்ற ஹிகேட்டாஸ் உள்பட சிஸிலியிலுள்ள எல்லா நகரங்களிலுமுள்ள சர்வாதி காரிகள் திமோலியோனுக்குச் சரணடைந்தார்கள். கார்த்தஜீனியர் களை எதிர்த்துச் செய்யவேண்டிய பணிகளும் அவனுக்கிருந்தன. ஏனென்றால் கார்த்தஜீனியர்கள் கிரேக்கர்களை சிஸிலியிலிருந்து விரட்டியடிக்க மீண்டும் ஒரு முயற்சியிலீடுபட்டிருந்தார்கள். சிஸிலி தீவில் திமோலியோன் இறங்கி ஐந்தாண்டுகள் கழிந்துவிட்டன. அப்பொழுது கார்த்தேஜீ, லில்லிபீயத்திற்கு 200 கப்பல்களையும் 1000 போக்குவரத்துக் கப்பல்களையும் அனுப்பியது. அவர்கள் 10,000 குதிரை வீரர்களையும் தேர்ப் படையையும் அனுப்பினர். 70,000 போர் வீரர்களைக்கொண்ட தரைப்படையும் அனுப்பப்பட்டது. அவர்களுடைய படையில் 2500 கார்த்தஜீனியக் குடியுரிமைப் பெற்ற படை வீரர்களிருந்தனர். அதைப் புனிதக் குழு என்றழைத்தனர். அவர்கள் உயர் குடியில் பிறந்தவர்கள். செல்வந்தர்கள். ஹாமில் கார், ஹாஸ்டுருபால் என்ற இரு கார்த்தஜீனீய படைத்தலைவர்கள் சைரகூஸின் மீது படையெடுத்துச் செல்வதென்று தீர்மானித் தார்கள். திமோலியோன் அவர்களை அங்கே சந்திக்க விரும்ப வில்லை. அவன் அவர்களை ஹாலிகஸுக்கு (Halycus) மேற்கில் சந்திப்பதென்று உறுதிகொண்டான். அந்நகரம் பூயூனிக் எல்லையி லிருக்கிறது. திமோலியோன் 10,000 போர் வீரர்களுடன் புறப் பட்டான். அவனுடைய படையிலிருந்து 100 கூலிப்படையினர் ஓடிவிட்டார்கள். ஏனென்றால் அவர்கள் சம்பளத்தைப்பற்றியும் எண்ணிக்கையில் மிகையாகவுள்ள ஓர் படையை எதிர்த்துச்செல் வதைப் பற்றியும் குறைகூறினார்கள். ஓடியவர்கள் போக மீதமுள்ள போர் வீரர்களுடன் திமோலியோன் கார்த்தஜீனியர்களை எதிர்த்துச் சென்றான். கார்த்தஜீனியர்கள் கிரிமிஸஸ் நதியின் (The Crimisus) மேற்குக் கரையில் தங்கியிருந்தார்கள். கிரிமிஸஸ், ஹைப்ஸாஸ் (Hypsas) ஆற்றின் ஒரு கிளை நதியாகும். அது செனிலஸ் நாட்டின் எல்லை வழியாக ஓடிக்கொண்டிருந்தது. இப்பொழுது காம்பானியர்கள் வசமிருந்த என்டெல்லா நகரம் கிரிமிஸஸ் ஆற்றின் கரையிலிருந்தது. அந்நகரைக் கைப்பற்றிவிட பூயூனிக் படை திட்டமிட்டது. ஆகையினால் அவர்களுடைய படை ஆற்றங்கரையில் தங்கிவிட்டது.

### கிரிமிஸஸ் யுத்தகளம் (ஜூன்)

கிரேக்கர்களும் போயினீசியர்களும் கிரிமிஸஸ் நதிக்கரையில் போரிட்ட இடம் இன்றுவரை யாருக்கும் தெரியவில்லை. அதி காலையில் கிரேக்கர்கள் மலைமீது ஏறினார்கள். அவர்களுக்கும்

போயினீசியர்களுக்குமிடையில் கிரிமிஸஸ் நதி இருந்தது. வழியில் கல்லறைகளிலுள்ள சலவைக் கற்களை அலங்கரிக்கும் செடிகளை ஏற்றிச் செல்லும் கோவரிக் கழுதைகளைக் கண்டார்கள். அதைக் கண்ணுற்ற போர் வீரர்கள் அதைத் துர்ச்சகுனமாகக் கருதி மனஞ்சோர்ந்து. விட்டார்கள். இங்கே சவக்குழிகளை அலங்கரிக்கும் மூலிகைச் செடிகள், இஸ்த்மியான் (Isthmian) விளையாட்டுப் பந்தயங்களில் வெற்றிபெற்றவர்கள் அணியும் கிரீடங்கள் செய்யப் பயன்படுத்தப் பட்டன. திமோலியோன் அந்தக் காட்சியை வெற்றியின் அறிகுறி என்று நிரூபித்துக்காட்ட விரும்பினன். அவன் அக்கொடிகளைத் தன்னுடைய தலையில் கிரீடமாக அணிந்துகொண்டான். அவனுடைய போர் வீரர்களில் பலர் தங்களுடைய சிரசுகளிலும் மூலிகைச் செடியினுல் கிரீடங்களைச்செய்து அணிந்துகொண்டார்கள். அப்பொழுது ஆகாயத்தில் இரண்டு கழுகுகள் காணப்பட்டன. ஒன்று ஒரு பாம்பை வாயில் கௌவிக்கொண்டிருந்தது. மற்ருென்று நற்காலத்தைக் காட்டும் பறவையாகக் காட்சியளித்தது. மலை பனிக் கட்டிகளால் மூடப்பட்டிருந்தது. பனிக்கட்டிகளை அப்புறப்படுத்தப் போர் வீரர்கள் அங்கே தங்கினுர்கள். பனி உருகிற்று. பிரயாணத் திற்குப் பாதைத் தகுதியுள்ளதாயிற்று. அப்பொழுது கார்த்த ஜீனியர்கள் ஆற்றைக் கடப்பதைத் திமோலியோன் கவனித்தான். முதலில் தங்கள் ஆற்றைக் கடந்தன. அவற்றையடுத்து புனித குழு என்றழைக்கப்படுகிற படை ஆற்றைக்கடக்க முயன்றது. பகைவர் களுடைய முழுப்படையும் ஆற்றைக்கடப்பதற்கு முன் அதைத் தாக்கி முறியடிக்க திமோலியோன் திட்டமிட்டான். ஆற்றைக் கடந்து கொண்டிருக்கிற பகைவர்களைத் தாக்க திமோலியோன் தன் குதிரைப் படையை அனுப்பி, தானும் அப்படையின் பின் நடந்து சென்ருன். புனிதகுழு என்ற படை ஆற்றைக்கடப்பது, பகைவர்களுடைய குதிரை வீரர்கள் அறியாவண்ணம், போர் ரதங்கள் குதிரை வீரர்களைத் தடுத்தன. திமோலியோன் ஒதுங்கி நின்று பக்கவாட்டில் பகைவர் களைத் தாக்கவும் மத்திய பகுதியைத் தன்னுடைய காலாட் படைக்கு விட்டுவிடவும் கட்டளையிட்டான். அவனுடைய குதிரைப்படை, பகைவனுடைய ரதங்களை விரட்டியடித்த வரலாறு குறிப்பிடப்பட வில்லை. ஆனுல் அவர்கள் புனித குழு என்ற படையை எதிர்த்து நெருங்கிவிட்டார்கள். கார்த்தஜீனியர்கள் தங்களுடைய கேடயங் களைக்கொண்டு ஓர் தடுப்புச்சுவர் செய்துகொண்டு திமோலியோன் படையின் ஈட்டிகளின் தாக்குதல்களைச் சமாளித்தார்கள். கிரேக் கர்கள் தங்களுடைய முயற்சி தோல்வியடைவதைக்கண்டு ஈட்டிகளை வீசி எறிந்துவிட்டு வாள்களை யுருவிக்கொண்டு பகைவர்களைத் தாக்கி ஞர்கள். பளுவற்ற ஆயுதமணிந்த போர் வீரர்களின் வாட்போரைச் சமாளிக்க பளுவுள்ள ஆயுதமணிந்த கார்த்தஜீனியரால் முடிய வில்லை. கிரேக்கர்கள் எண்ணிக்கையில் குறைந்திருந்தபோதிலும்

தரத்தில் உயர்ந்தவர்கள். ஆகையால் கார்த்தஜீனியர்களுடைய புனித குழுவை வென்று படையைப் படுதோல்வியடையச்செய்தார்கள். கார்த்தஜீனியப் படையில் சிறப்பாக விளங்கிய பட்டாளம் அழிக்கப் போட்ட போதிலும் அவர்களுடைய எண்ணிக்கை குறையவில்லை. அவர்கள் ஆற்றைக் கடந்துவிட்டார்கள். அப்பொழுது வானத்தில் கார்மேகங்கள் சூழ்ந்துகொண்டன. இடி மின்னல் காற்றுகளினூடே பெருமழைப் பெய்தது. காற்றும் மழையும் கார்த்தஜீனியர்களை எதிர்த்துப் போராடியது. ஆற்றில் வெள்ளப்பெருக்கேற்பட்டது; நிலம் சேறும் சகதியுமாற்று; பளுவான ஆயுதமணிந்த கார்த்த ஜீனிய போர்வீரர்கள் மிகவும் அவதியுற்றார்கள். பளுவற்ற கிரேக்கப் போர்வீரர்கள் அவர்களை எதிர்த்துத் தாக்கினர். கார்த்த ஜீனியர்கள் அத்தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் யுத்தகளத்தை விட்டு ஓட ஆரம்பித்தார்கள். கிரேக்கர்கள் அவர்களைத் துரத்தித் தாக்கினர். அங்கு நடந்த யுத்தத்தில் 15,000 கார்த்தஜீனியப் போர்வீரர்கள் கைதிகளாகப் பிடிபட்டனர். 10,000 பேர் கொல்லப் பட்டார்கள். ஆற்றின் வெள்ளத்தினால் கொல்லப்பட்டவர்களின் எண்ணிக்கை இவ்வளவென்று அறிந்துகொள்ள முடியவில்லை. யுத்தகளத்தில் கிரேக்கர்களுக்குப் பொன், வெள்ளி, மற்றும் பல பொருள்கள் கிடைத்தன. அவற்றில் பொறுக்கி எடுத்தச் சில பொருள்களைப் பூசந்தியிலுள்ள போஸிடான் ஆலயத்திற்கு அனுப் பினார்கள்.

**கொடுங்கோலாட்சி மீண்டும் தலைதூக்குதலும், அதை அழித் தலும்.**

திமோலியோனுடைய வெற்றி, ஜிலான் ஹிமேராவில் அடைந்த வெற்றிக்கு ஒப்பிடப்படுகிறது திமோலியோன் கிரிமிஸஸ் ஆற்றங்கரையிலடைந்த வெற்றியோடு மனநிறைவு யடைந்தான். மேற்கொண்டு வெற்றியடைய விரும்பவில்லை. அவன் ஸிஸிலியி லுள்ள போயினீஸியக் குடியேற்ற நாடுகளைக் கைப்பற்ற விரும்ப வில்லை. காட்டானே நாட்டு சர்வாதிகாரி திமோலியோனின் பகைவனாக மாறிவிட்டான். ஹிகேட்டாஸ் லியோன்தைன் நாட்டை மறுபடியும் கைப்பற்றி சர்வாதிகார ஆட்சியைக் கைப்பற்றினான். மேமர்கஸ் என்ற சர்வாதிகாரியும், ஹிகேட்டாஸ் என்ற சர்வாதிகாரியும் கார்த்தஜீனியர்களின் உதவிபெற்று திமோலி யோனை எதிர்த்தார்கள். திமோலியோன் அவர்களை எளிதில் வென்று அவர்களிருவரையும் கைது செய்தான். சைரகூஸியர்கள், அவர்களிரு வரையும் கொன்றுவிட்டார்கள். ஹிகேட்டாஸ் டியோனின் மனைவிக்கும் சகோதரிக்குமிழைத்த கொடுமையை மக்கள் மறந்துவிட வில்லை. ஆகையால் அவனுடைய மனைவியையும் மகளையும் கொன்றுவிட்டார்கள். மெஸ்ஸானியர்கள் தங்களுக்குத் தொல்லை விளைவித்த ஹிப்போன் என்ற சர்வாதிகாரியைச் சித்திரவதை

செய்து கொன்ருர்கள். கொடுங்கோலாட்சியால் அவதியுற்ற மற்ற நகரங்களும் விடுதலையடைந்தன. அக்ரகாஸ், ஜிலா என்ற நகரங்கள் குடிமக்களின்றி பாழடைந்திருந்தன. அங்கு மீண்டும் குடியேற்றம் நடைபெற்றது. இருபதாண்டுக் காலத்திற்குப்பின் சிஸிலியில் அமைதி நிலவிற்று. கார்த்தேஜி இப்போது கிரேக்கர் களோடு ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டது. மீண்டும் ஹாலிகஸ் நதி, கிரேக்கர்களுக்கும் கார்த்தஜீனியர்களுக்கும் பொதுவான எல்லையாயிற்று. சிஸிலியிலுள்ள கிரேக்க நகரங்களில் சர்வாதி காரிகளுக்கு ஆதரவு அளிக்கும் பணியிலிருந்து கார்த்தேஜி விலகி நின்றது.

திமோலியோன் சிஸிலியை உள்நாட்டுச் சர்வாதிகாரிகளின் தொல்லைகளிலிருந்தும், வெளி நாட்டுப் பகைவர்களிடமிருந்தும் விடுதலை செய்தான். அவனுடைய பணி முடிந்தவுடன் அவன் தனக்கு அளிக்கப்பட்ட அதிகாரத்தை வேண்டாமென்று ஒப்படைத்து விட்டான். கிரேக்க நாட்டு வரலாற்றில் வருகிற சிறப்பான மனிதர் களில் இவன் தலை சிறந்தவனுக விளங்குகிருன். ஏனெனில் அவன் நிராசையினுல் உந்தப்பட்டு அல்லது நாட்டுப் பற்றின் உணர்ச்சி யினுல் தூண்டப்பட்டு அப் பெரும் பணியைச் செய்யவில்லை. அவன் தனக்காக எந்த அதிகாரத்தையும் தேடிக்கொள்ளவில்லை. அவன் ஓர் அந்நிய நாட்டில் அந்நியர்களின் விடுதலைக்காகப் பாடுபட்டான். அவன் தன்னுடைய சொந்த நாட்டிற்காகப் பாடுபடவில்லை. கிரேக்கர்களுக்காக, போயினீசியர்களோடு பல போர்களைச் செய்தான். ‘என் கடன் பணிசெய்து கிடைப்பதே’ என்பதை அவன் தன்னுடைய வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டவன். சைரகூஸியர்கள் தங்களுடைய நகருக்கருகில் அவனுக்கு நிலம் கொடுத்தார்கள். அவன் இறக்குமளவும் அங்கேயே தங்கி விட்டான். அவன் அடிக்கடி சைரகூஸ் நகருக்குப் போவதில்லை. அவனுடைய மதியுரையைச் சைரகூஸியர்கள் நாடிய போதெல்லாம் அவன் சைரகூஸ் நகரிலுள்ள சபையில் காணப்பட்டான். ஆனல் அவன் பார்வையை இழந்தபின் இவ்வாறு வருதல் அரிதாகி விட்டது. அவன் மரணத்தைக் கேட்டுக் கிரேக்க சிஸிலி துக்கக் கடலில் மூழ்கியது. அவன் நினைவின் நிழலாக சைரகூஸிலுள்ள பல அரசாங்கக் கட்டிடங்கள் அவனுடைய பெயரால் அழைக்கப்பட்டன.

திமோலியோன் இறந்து இருபது ஆண்டுக் காலம் வரையில் அமைதி நிலவிற்று. அதன் பிறகு ஒரு சர்வாதிகாரி எழும்பி ஞன். அவன் மூத்த டயோனிஸியஸை விட மிகவும் கொடியவன். அவனுடைய சர்வாதிகார ஆட்சியின் கீழ் சிஸிலி அவதியுற்றது. அகோதகிளிஸ் (Agathocles) என்றழைக்கப்படுகிற இந்தச் சர்வாதி காரியின் வரலாறு நூலில் கூறப்படுவதில்லை.

# 12. பெரிய கிரீஸில் நடந்த சம்பவங்கள்

**பிரிட்டியன் கழகம், கி.மு. 356. ஆர்ச்சிடாமஸ் மன்னன் இத்தாலிக்குப் புறப்படுதல், கி.மு. 343. மாண்டோனியா போர்க்களம், கி.மு. 338.**

இக்காலத்தில் இத்தாலியிலுள்ள கிரேக்கர்களுக்கு அவர்களுடைய சகோதர நாடாகிய சிஸிலியினுல் துன்பம் ஏற்பட வில்லே. பகைவர்கள் பெருநிலப் பகுதியில் தோன்றி, கிரேக்கர்களே இத்தாலியிலிருந்து விரட்டிவிடுவதென்று முடிவு செய்தார்கள். போயினீசியர்களும் இத்தாலிய கூலிப் படையினரும் கிரேக்கர்களே விரட்ட முயன்றனர். இப்போது இத்தாலியிலுள்ள பல இனத்தவர் ஒன்று சேர்ந்து கிரேக்கர்களே எதிர்த்தார்கள். மூத்த டயோனிஸியஸ் உயிரோடிருந்த காலத்தில் லூக்கானியர்களும், மெஸ்ஸாப்பியர்களும், இப்பிஜியர்களும் மற்ற இத்தாலிய இனத்தவர்களும், அடங்கி இருந்தார்கள். மூத்த டயோனிஸியஸின் மகனே டியோன் தாக்கியபோது சைரகூஸிய பேராதிக்கத்திற்கு அழிவு ஏற்பட்டது. இத்தாலிய இனத்தினர் அஞ்சிவாழக்கூடிய பேராதிக்கம் கிரேக்க நாட்டில் இல்லாதபடியால், அவர்கள் கடற்கரையோரமாவுள்ள கிரேக்க மக்களேத் தாக்க ஆரம்பித்தார்கள். இத்தாலிய விரல் என்றழைக்கப்படுகிற இத்தாலிய தீபகற்பத்தின் ஒரு பகுதியில் பல இனத்தவர் வாழ்ந்து வந்தனர். அவர்கள் எல்லோரும் ஒன்று சேர்ந்து தங்களுக்குள் ஒரு கூட்டாட்சியை ஏற்படுத்திக் கொண்டார்கள். அவர்களுடைய தலேமைக்காரியாலயம் கான்சென்ஸியா என்ற இடத்திலிருந்தது. பிரிட்டியன் கூட்டமைப்பென்ற இக் கூட்டமைப்பு கிரேக்க நகரங்களேத் தங்களுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரத் தீர்மானித்து விட்டது. டெரினு (Terina) ஹிப்போனியோன் (Hipponion) புதிய ஸ்பாரிஸ் (New sybaris) என்ற நகரங்களும் மற்றும் பல நகரங்களும் கைப்பற்றப் பட்டன. மேற்கு கிரிஸிக்கு ஏற்பட்ட இக்கட்டை மற்றக் கிரேக்க நாடுகள் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லே. புறச் சாதியார் கொடுக்கும் தொல்லேயைக் கண்டு கிரேக்கர்கள் அதிர்ச்சியுற்ருர்கள். கிரேக்க சிஸிலியிலிருந்து புறச் சாதியைச் சேர்ந்த கூலிப் படையினரை விரட்டி யடிப்பது, பிளாட்டோ, டியோன் என்பவர்களின் நோக்கங்களில் ஒன்ருக இருந்தது. இத்தாலியில் கிரேக்கர்களுக்கு இக்கட்டு அதிகரித்து விட்டது. அங்குள்ள கிரேக்கர்கள் மற்றக் கிரேக்க நாடு நாடுகளின் உதவியில்லாமல் வாழ முடியாது என்ற நிலே வந்தது. சைரகூஸ் தன்னுடைய தாய் நாடகிய கொரிந்தியாவிடம் உதவி கோரியதும், கொரிந்தியா திமோலியோனே அனுப்பியதையும், தாராஸ் (Taras) நாட்டு மக்கள் நினேத்துப் பார்த்தனர். அவர்கள் தங்களுடைய தாய்நாடாகிய ஸ்பார்ட்டாவிடம் உதவியை நாடினுர்கள்.

அவர்கள் உதவி கோரிய காலம் ஒரு நற்காலம் ஆகும். ஏனெனில் அப்பொழுது உள்நாட்டில் எவ்வித அரசியல் திட்டமும் மேற் கொள்ள முடியாமலிருந்தது. எனவே ஸ்பார்ட்டன் மன்னனுகிய ஆர்ச்சிடாமஸ் (Archidamus) இத்தாலிக்குச் செல்லலாம். புறச் சாதி யர்களின் கையிலிருந்து கிரேக்கர்களை விடுவிக்கவும் விருப்பங் கொண்டான். அவனுடைய தந்தையாகிய எஜிஸிலாஸ் மன்னன் கிழக்கு நாடுகளில் அறுபது ஆண்டுகளுக்குமுன் புறச்சாதியர்களை எதிர்த்துப் போர் புரிந்ததுண்டு. ஆர்ச்சிடாமஸ் போஸியர்களைக் கொண்ட ஓர் கூலிப்படையைத் தயாரித்தான். அவன் தன்னுடைய கூலிப்படையோடு இத்தாலியை நோக்கிப் புறப்பட்டு விட்டான். நான்கு அல்லது ஐந்தாண்டுகள் வரையில் அவன் புறச் சாதியார்களை பல போர்க்களங்களில் எதிர்த்துப் போரிட்டான். பல வெற்றிகளும் அடைந்தான். ஆனுல் அவன் முடிவான பெரும் வெற்றியை புறச் சாதியார்களிடம் அடையமுடியவில்லை. கடைசியாக அவன் மான்டோ னியா யுத்தகளத்தில் லூக்கானியர்களால் கொல்லப்பட்டான். ஆர்ச்சி டாமஸின் போர்த்திறமை திமோலியோனின் போர்த்திறமையோடு ஒப்பிட்டுப் பார்ப்பது அவசியமாயிற்று. ஆனுல் தாராஸ் நாட்டினர் ஆர்ச்சிடமாஸின் மீது தங்களுக்குள்ள நன்றியை வெளிப்படுத்து வதற்காகப் புதிய நாணயங்களை அச்சடித்தார்கள். குழந்தை தாராஸின் உருவமும், போஸிடானின் உருவமும் நாணயத்தில் செதுக்கப்பட்டன. அவர்கள் வேறு சில நாணயங்களையம் அச் சிட்டார்கள். இந்தப் புதிய நாணயத்தில் தாராஸ் ஒரு மீன்மீது ஏறிக்கொண்டு செல்லுகையில், அவன் ஒரு தலைக்கவசத்தைத் துக்கத் தோடு உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதைப் போல் ஓர் உருவம் செதுக்கப்பட்டிருக்கிறது. இந்தத்தலைக்கவசம் போர்க்களத்தில் மாண்டுபோன ஸ்பார்ட்டன் மன்னன் ஆர்ச்சிடாமஸின் தலைச் சீராவாக இருக்கிறது. இந் நாணயங்கள் கிரேக்கர்களின் கலைத் திறமையின் உச்ச நிலையை விளக்கிக் காட்டுகின்றன.

**ஈப்பிரஸ் அலெக்ஸாந்தரின் படையெடுப்பு, கி.மு. 334; பாண்டோ ஸியா போர்க்களம், கி.மு. 331–30; அலெக்ஸாந்தரின் மரணம்.**

தாராஸ் ஒரு புதிய தலைவனைத் தேடும் படியான நெருக்கடியி லிருந்தது. அது பேரரசன் அலெக்சாந்தருடைய மாமனும், மோலோசியாவின் மன்னனுமாகிய அலெக்ஸாந்தரை வரவழைத்தது. அலெக்ஸாந்தர் ஒரு சிறந்த போர் வீரன். அவன் போரில் தோல்வியைச் சுவைத்ததில்லை. அவன் மேற்கில் ஒரு பேரரசை ஏற்படுத்த ஆவல் கொண்டிருந்தான். எனவே இவ்வரிய வாய்ப்பைத் தனக்கு ஆதாரமாக்கிக் கொள்ள அவன் விரும்பினுன். இத்தாலியின் கிழக்குக் கரையில் மெஸ்ஸாப்பியர்களை எதிர்த்து வெற்றி பெற்ருன். அவன் அவர்களை வடக்கே ஸ்போன்டம் வரையில் துரத்தியடித்தான்

கடைசியாக ஸ்போன்டம் நகரைக் கைப்பற்றினன். அவன் பிர்ட்டியன் கூட்டாட்சி நாடுகளை எதிர்த்துத் தோற்கடித்தான். அவர்களுடைய தலைநகராகிய கான்ஸென்ஸியாவைப் பிடித்துக் கொண்டான். டெரினு விடுவிக்கப்பட்டது. ரோமர்கள் அவனுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளக் கூடிய அளவுக்கு அவனுடைய செல்வாக்கு தெற்கில் உயர்ந்திருந்தது. அவனுடைய திட்டங்களை சிஸிலியி லுள்ளவர்கள் அறிந்து கொண்டார்கள். தாராஸ் அவனுக்கு வரவேற் பளித்தது. அந் நாட்டின் நாணயத்தின் மூலமாக நாம் அவர் களுடைய வரவேற்பைப் பற்றித் தெரிந்து கொள்கிறோம். டோடோனு கழுகின்மீது உட்கார்ந்திருப்பதைப் போலவும், சீயஸின் இடி முழக்கம் அவன் பக்கத்திலிருப்பதைப்போலவும், நாணயத்தில் ஓர் உருவம் வரையப்பட்டிருக்கிறது. தாராஸ் அலெக்ஸாந்தருடைய வருகையினல் தன்னுடைய சுதந்திரம் பாதிக்கப்பட்டு விட்டதென்று அறிந்து கொண்டது. அலெக்ஸாந்தருடன் தனக்கிருந்த உறவை முறித்துக் கொண்டு விட்டது. தாராஸுக்கும் அலெக்ஸாந்தருக்கு மிடையே போர் ஏற்பட்டது. புறச்சாதியார்களுக்கு இந்தப் போர் சாதகமாக இருந்தது. பாண்டோஸியாவில் போர் நடந்தது. அப் போது டாரன்டைன் படையிலிருந்த ஓர் லூக்கானிய அகதி அலெக்ஸாந்தரை வாளால் முதுகில் குத்தி வீழ்த்தினன். பேரரசை ஏற்படுத்த வேண்டுமென்ற ஆசை அவன் மரணத்தோடு அழிந்து விட்டது. கௌகமேலா போர்க்களத்தில் பாரசீகப் பேரரசு வீழ்ச்சி யுற்ற சிறிது காலத்தில் இச்சம்பவம் ஏற்பட்டது. ஆனுல் அலெக்ஸாந்தரின் பணி பயனற்றுப் போய் விடவில்லை. அன்று முதல் தாராஸ் தனக்கருகிலிருந்த இத்தாலிய நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தியது.

# 16. மாசிடோனிய எழுச்சி

மான்டினே யுத்த களத்திற்குப் பின், தீப்ஸ் தன் ஆக்கிரமிப்புக் கொள்கையைக் கைவிட்டதும், பழைய கிரீஸில் ஏதென்ஸ் முதன்மையான நாடாக விளங்கிற்று. வடக்கு எஜியான் கடற்கரை நாடுகளிலும், போன்டிக் நீர்நிலைக்கருகிலும், ஏதென்ஸ் மீண்டும் தன்னுடைய ஆதிக்கத்தை முழு பலத்தையும் கொண்டு நிலைநாட்டும் பணியில் முற்பட்டது. எதிர்பாராத வகையில் இரு நாடுகள் அதனுடைய அலுவல்களில் குறுக்கிட்டிராவிடில், ஏதென்ஸ் தன்னுடைய முயற்சியில் வெற்றி பெற்றிருக்கக் கூடும். ஏதென்ஸ் தன் வேலையைச் செய்ய முடியாதபடி காரியாவும், மாசிடோனியாவும் தடை செய்துவிட்டன. இரு நாடுகளும் கோனுட்சி முறை அரசாங்கத்தையுடையன. இவை முழு கிரேக்க நாடுகளல்ல. மாஸிடோனியா தரை ஆதிக்க நாடாகவும், காரியா தரை, கடல் இரண்டிலும் ஆதிக்கமுள்ள நாடாகவும் விளங்கின. காரியா கடலாதிக்க நாடாக இருந்தபடியால், அது ஏதென்ஸுக்கு சக்தி வாய்ந்த பகை நாடாக இருந்தது. மாசிடோனியா, காரியாவாகிய இரு நாடுகளையும் நாம் கவனிக்கும்போது காரியா கிரேக்கர்களுக்கு எதிர்காலத்திலும் துன்பம் விளைவிக்கும் நாடாகவும், மாசிடோனியா ஏதென்ஸுக்கு உடனடியாக இன்னல் விளைவிக்கும் நாடாகவுமிருந்தன. நாகரிகமடைந்துள்ள நாடுகள் மாசிடோனியாவைப்பற்றிப் பெரிதாக மதிக்கவில்லை. ஏதென்ஸ் அந் நாட்டை எளிதில் சமாளித்துவிடலாமென நம்பியிருந்தது. காரியா முப்பதாண்டுகளுக்குள் அழிந்து மறைந்துவிடுமென்றும், எதிர்காலத்தில் அதன் புகழை எடுத்துச் சொல்ல அந்நாட்டு அரசனின் கல்லறையொன்று மட்டும் நிலைபெற்றிருக்குமென்றும், மாசிடோனியா கிரேக்க நாடுகளின் கலையையும் ஞானத்தையும் உலகத்தின் கடைசி எல்லை வரையில் சுமந்து .செல்லுமென்றும் துணிந்து எடுத்துக் கூற, அப்பொழுதிருந்த தீர்க்கதரிசிகளில் ஒருவனும் முன்வரவில்லை.

## 1. ஏதென்ஸ், செர்ஸோனேஸையும் யூபோயே நாட்டையும் திரும்பப் பெறுதல்

### ஏதென்ஸின் தெஸ்ஸாலிய கூட்டுறவு

ஏதென்ஸ் தன் பகைவனுகிய எப்பாமினுண்டஸ் இறந்ததும் விடுதலையடைந்தது. ஆனுல் அவன் அதற்கு எதிர்ப்பாக வடக்கில் எழுப்பிவிட்ட கிளர்ச்சி அவனுடைய மரணத்திற்குப் பின் பலன ளித்தது. பேரேயின் அலெக்ஸாந்தர், தீப்ஸ் நாட்டினரோடு நட்புக் கொண்டான். அவன் பேபாரேத்தஸ் (Peparethus) என்ற தீவைக் கடற் கொள்ளைக்காரர்களைக் கொண்டு கைப்பற்றியதோடு, லேயோஸ்த்தேனேஸ் (Leosthenes) தலைமையில் அத்தீனியக் கடற் படையை முறியடித்தான். அவன் ஸ்பார்ட்டன் தெலேயூட்டியாஸ் (Teleutias) செய்ததைப் போல, ஏதென்ஸ் துறைமுகப் பட்டின மாகிய பிரேயஸுக்குள் (Piraeus) துணிகரமாகப் புகுந்து, அங்குள்ள கடைகளைக் கொள்ளையடித்துத் திரும்பினுன். ஏதென்ஸ் அவ னுடைய செயலுக்குப் பதில் கூறும் வகையில் தெஸ்ஸாலியக் கூட்டாட்சி நாட்டுடன் தற்காப்புக்காகவும்; எதிர்த் தாக்குதலுக் காகவும், ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டது. அவ்வொப்பந்தம் ஓர் கல்லில் எழுதப்பட்டுள்ளது. அக்கல் இந்நாள் வரையில் பாது காக்கப்பட்டிருக்கிறது. இந்த ஒப்பந்தத்தில் இரு நாடுகளின் நேச வுறவு நாடுகளும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. அத்தினீயர்கள் தெஸ்ஸாலிய கூட்டாட்சி அரசாங்கத்தின் தலைவனுடைய (Archon) அனுமதியில்லாமலும், தெஸ்ஸாலி ஏதென்ஸின் அனுமதி யில்லாமலும், அலெக்ஸாந்தரோடு சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ளக் கூடாதென்று ஒப்பந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஏதென்ஸ் அலெக்ஸாந்தரோடு செய்துகொண்ட ஒப்பந்தம் ஓர் எஃகுப் பட்டயத்தில் எழுதப்பட்டிருந்தது. அப்பட்டயத்தி யத்திலிருந்த எழுத்துக்கள் யாவும் அழிக்கப்பட்டுவிட்டன.

### கள்ளிஸ்ட்ராட்டஸின்மீது குற்றஞ் சுமத்தி அவனை நாடு கடத் துதல்

அத்தீனியர்களின் சீற்றம் அவர்களுடைய அரசாங்க அலு வலர்களின்மீது திரும்பிற்று. ஒரோப்பஸைக் கைப்பற்றியதிலிருந்து அரசாங்க அலுவல்கள் ஒழுங்கான முறையில் நடைபெறவில்லை என்ற அதிருப்தி உள்ளூர இருந்து வந்தது. ஒரோப்பஸ் சம் பந்தமாக, கள்ளிஸ்ராட்டஸ்மீது குற்றம் சுமத்தப்பட்டது. விசா ரணைக்குப்பின் அவன் குற்றவாளியல்லன் என்று தீர்ப்புக் கூறி னர்கள். அவனுடைய புகழுக்குப் பங்கம் ஏற்படக்கூடிய நிகழ்ச்சி நடந்தது. அலெக்ஸாந்தர் பிரேயஸ் துறைமுக நகரைக் கொள்ளை யடித்ததினுல் ஏதென்ஸ் மக்கள் கள்ளிஸ்ராட்டஸின்மீது கோபங்

கொண்டார்கள். அவனுக்கு மரண தண்டனையளித்தார்கள். ஆனால் கள்ளிஸ்ராட்டஸ் ஏதென்ஸ் நகரைவிட்டு ஓடிவிட்டான். இவ்வாறு நான்காம் நூற்றாண்டிலிருந்த அரசியல் அறிஞனாகிய கள்ளிஸ்-ராட்டஸ் ஏதென்ஸை விட்டு மறைந்தான். அத்தினீயர்கள் அவனுக்காக அனுதாபப்படவில்லை. அவன் மாசிடோனியாவில் ஓர் அகதியாகச் சிலகாலம் வாழ்ந்து வந்தான். அவன் சில ஆண்டுகள் கழித்து, தன்னுடைய நாட்டு மக்கள் தன்மீது கொண்டுள்ள கோபத்தை மறந்திருப்பார்களென்று கருதி ஏதென்ஸுக்குத் திரும்பி வந்தான். அவன் ஏதென்ஸின் பன்னிரண்டு தெய்வங் களின் ஆலயத்தில் அடைக்கலம் புகுந்தான். அப்பொழுது அவனைக் காப்பாற்ற எவரும் துணிந்து வரவில்லை. கொலைபாத கர்கள் அவனைப் பிடித்துக் கொன்றனர். அத்தீனியர்கள் எப் போதும் தங்களுடைய அரசாங்க அலுவலர்களின்மீது கண்டிப்பான எசமானர்களாகவே இருந்துவந்தார்கள். அத்தீனியத் தலைவர்கள் சபையின் அங்கத்தினர்கள் எல்லோரையும் கூட்டி அவர்கள் முன் னிலையில் நெருக்கடியான பிரச்சினைகளைக் கலந்தாலோசிப்பதில்லை யென்பதை இச் சம்பவம் விளக்கிக் காட்டுகிறது.

**தெரேஸியர்களுடைய செர்சோனேசே. கோட்டிஸுடைய மரணம், கி. மு. 360–59. செர்சோபிளிப்டஸும் அவனுடைய சகோதரர்களும்; கோட்டிய்ஸுக்குப்பின் வந்த வாரிசுகள்.**

பேரேயின் சர்வாதிகாரி கொல்லப்பட்டான். பொது சனங்கள் அவன் கொலையுண்டதைக் குறித்துச் சீற்றம் கொண்டிருந் தார்கள். தெரேஸிலிருந்து வந்த துர்ச்செய்திகள் அவர்களுடைய கோபத்தை அதிகரித்தன. ஒடிரிஸியன் ஆதிகத்தைப் புதுப்பித்த கோட்டிஸ் மன்னன் செஸ்ட்டாஸைக் கைப்பற்றினான். பொரோ போன்டிஸைக் காவல் புரிந்து வந்த தீபகற்பத்தின் பெரும் பகுதி யையும் அவன் வென்றுவிட்டான். அத்தீனியக் கடற்படை அவனு டைய நடவடிக்கையைத் தடுக்க முடியவில்லை. சில நாட்களில் வயோதியனாகிய கோட்டிஸ் மன்னன் கொலையுண்டான். அவனு டைய நாட்டை அவன் மூன்று குமாரகளும் பகிர்ந்துகொண்டார்கள். இந்த மாறுதல் ஏதென்ஸுக்குச் சாதகமாயிருந்தது. ஏனென்றால் ஏதென்ஸ் இந்த மூன்று அரசர்களும் ஒருவரையொருவர் பகைத்துக் கொள்ளும்படியான சூழ்நிலையை யுண்டுபண்ண ஆரம்பித்து விட்டது. பொரோபோன்டிஸுக்குப் பக்கத்திலிருந்த நாடு செர்சோபிளிடஸுக்குக் கிடைத்தது. அவன் யூபோயேன் நாட்டு சாரிடேமஸ் (Euboean Charidemus) என்பவனுடைய ஆதரவைப் பெற்றவன். அவன் ஒரு கூலிப் படையின் தலைவன். அவன் அத்தீனியர்களுக்கு அடிக்கடி பணிபுரிந்துவந்தான். எப்பிகிராட்

டிஸைப் போல, அவனும் தெரேசியன் நாட்டு மன்னனின் மகள் ஒருத்தியை மணந்து கொண்டான். கார்டியா (cardia) வைத் தவிர செர்சோனேசே முழுவதையும் ஏதென் ஸுக்குக் கிடைக்கும்படி செர்சோபிளிப்டஸ் (Cersobleptes) முயன் ருன். அவனுடைய முயற்சி வெற்றி பெற்றது. கார்டியா மட்டும் ஒரு சுதந்தர நாடாக இருந்துவந்தது. கார்டியா எப்போதும் 'ஏதென்ஸின் பகை நாடாகவே' இருந்து வந்தது. ஆனல் உடனடியாகக் கைப்பற்றுவதற்கு அத்தீனியக் கடற்படை அனுப்பப் படவில்லை. காலங்கழித்து ஏதென்ஸ் ஒரு கடற்படையை அனுப்பியது. சாரிடேமஸ் (Charidemus) அப்படையைத் தோற்கடித்தான். கடைசியாக ஏதென்ஸ் சாரேஸ் என்ற கடற்படைத் தலைவனை அனுப் பியது. அவன் ஆரேஸ் (Ares) என்பவனுடைய வீரமகன். சிறந்த அனுபவமுள்ளவன். ஆனல் ஒழுக்கக் குறைவுடையவன். அவன் செஸ்டாஸை உடனே கைப்பற்றினன். அங்கு வாழ்ந்த வர்களை இரக்கமின்றிக் கொன்ருன். சாரஸின் கொடிய செயலைக் கண்ட செர்சோபிளிப்ட்டஸ் தன்னுடைய மனத்தை மாற்றிக் கொண்டு ஏதென்ஸுக்குக் கொடுத்த தீபகற்பத்தைப் பிடுங்கிக் கொண்டான். அத்தீனியர்கள் சாமோஸில் எம்முறையைப் பின்பற் றினர்களோ, அம் முறைப்படி செர்சோனேஸில் குடியேறுவதற்கு ஆண்களை அனுப்பினர்கள். அதே ஆண்டில் யூபோயே அத்தீனியக் கூட்டமைப்பில் சேர்ந்துவிட்டது. நீண்ட நாட்களாக இழந்திருந்த ஆம்பிபோலிஸ், ஏதென்ஸுக்கு மீண்டும் கிடைத்தது. அத்தீனியர் அளவிலா மகிழ்ச்சி யடைந்தனர். ஆம்பிபோலிஸுக்கு எதிரான அவர்களுடைய புதிய திட்டம் கிரேக்க நாட்டு வரலாற்றில் ஓர் தனி அத்தியாயத்தில் விளக்கப்படுகிறது.

## 2. மாசிடோனியாவின் இரண்டாம் பிலிப்

மாசிடோனியா நீண்ட நாளாக எதிர்பார்த்த மனிதன் வந்து விட்டான். அந்நாட்டு அரசர்களைப்பற்றி நாம் அடிக்கடி படித்து வந்திருக்கிருேம். அவர்கள் ஹெலனிக் நாட்டு அரசர்கள். எனினும், அவர்களை அக்காலத்தில் முழு ஹெலனிக் அரசர்களாகக் கருதியதில்லை. பிளாட்டியாவில் அலெக்ஸாந்தர் இரட்டை நாடகம் நடத்தினனென்பதையும், ஏதென்ஸுக்கும் ஸ்பார்ட்டாவுக்கும் நடந்த சண்டையில் பெரிடிக்காஸ் மன்னனும் இரட்டை நாடகம் நடத்தினன் என்பதையும் நாமறிவோம். இப்போது மாசிடோனியா விற்கு நற்காலம் வந்துவிட்டது. இப்போது நாம் கிரேக்க நாட்டின் வரலாற்றையும் கிழக்கு நாடுகளின் வரலாற்றையும் மாற்றியமைத்த மாசிடோனிய ஆதிக்கத்தின் ஆரம்பத்தை ஆராய வேண்டியிருக் கிறது.

### மாசிடோனியா

தெர்மேயிக் விரிகுடாவின் வட கரையிலும் மேல் கரையிலுமுள்ள நிலப்பாகம் மாசிடோனியா வென்றழைக்கப்பட்டது. ஏகே (Aegae) என்ற அவர்களுடைய கோட்டை மிகவும் பலமுள்ளது. மாசிடோனிய மன்னர்கள் அக்கோட்டையைத் தலைநகரமாகக் கொண்டு வரம்பில்லா ஆதிக்கத்துடன் மாசிடோனியாவை ஆட்சி புரிந்து வந்தார்கள். மாசிடோனியர்களும், அவர்களுடைய மன்னர்களும் கிரேக்க இனத்தைச் சேர்ந்தவர்கள். அவர்களுடைய பாரம்பரியங்களும், அவர்களுடைய மொழியும் அவர்கள் கிரேக்கர்களென்பதற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. மாசிடோனியர்கள் யுத்தப் பிரியர்கள். நாளடைவில் அவர்கள் தங்களுடைய ஆதிக்கத்தை மேற்கிலும் வடக்கிலும் விரிவடையும்படி செய்தார்கள். மேற்கே இல்லீரியாவின் எல்லைவரையிலும், வடக்கே போனியர்கள் நாடுகள் வரையிலும் அவர்கள் தங்களுடைய அதிகாரத்தை நிலைநாட்டினுர்கள். ஓரேஸ்ட்டியர் (Orestians) களாகிய மலைவாசிகளும், லின்செஸ்ட்டியன்மலை (Lyncestians) மலைவாசிகளும், மற்றவர்களும் இல்லீரிய இனத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் மாசிடோனிய மன்னர்களின் ஆதிக்கத்திலிருந்து விடுதலையடையும் நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். இல்லீரியா நாட்டினருக்கும், பேயோனியா நாட்டினருக்கும் நேசவுறவு நாடுகளிருந்தன. இவர்கள் மாசிடோனியாவை எதிர்த்துக் கலகம் செய்யும்போது உதவிபுரிவதாக அவர்களுடைய நேச நாட்டினர் உறுதிமொழி கொடுத்திருந்தனர். யுத்தப் பிரியர்களாகிய பகைவர்களோடும், அரைகுறையாக அடிமைபடுத்திய நாடுகளும், மாசிடோனியாவிற்கு அடிக்கடி தொல்லை விளைவித்து வந்தன. ஆகையால் மாசிடோனியா கிரேக்க நாடுகளின் விவகாரங்களில் சிறப்பான பங்கெடுத்துக்கொள்ள முடியாதிருந்தது.

### ஆர்ச்சேலாஸ் மன்னன்

இவ்வாறு, மாசிடோனிய அரசாங்கத்தில் இருவகையான இனத்தினர் இருந்தனர். அந்நாட்டு மன்னர்களிடம் இருவகையான பண்புகளிருந்தன. கடற்கரையிலுள்ள கிரேக்க மாசிடோனியர்கள் அந்நாட்டு மன்னர்களின் சொந்த இனத்தினர்கள் ; நண்பர்கள். இல்லீரிய இனத்தவர்களுக்கு மாசிடோனிய மன்னர்கள் மேலாட்சியாளர்களாக இருந்தார்கள். ஒவ்வொரு இல்லீரிய இனத்திற்கும் ஒரு தலைவனுண்டு. அத்தலைவர்கள் கட்டுக்கடங்காதவர்களாக இருந்தார்கள். இத் தலைவர்களை மாசிடோனிய மன்னர்கள் அடக்கி அவர்களைத் தங்களுடைய நேரடியான ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டு வரும் வரையில், அல்லது அவர்களுக்குச் சரியான ஒரு பாடம் கற்றுக் கொடுக்கும் வரையில், மாசிடோனியா ஓர் வல்லரசாக எழும்ப முடியா

திருந்தது. மாசிடோனியாவை வல்லரசாக்க வந்தவனுக்கு இவ்வளவு வேலைகளும் காத்துக் கொண்டிருந்தன. மாசிடோனிய மன்னர்கள் கிரேக்கப் பண்பாட்டை இந்நாடுகளில் பரவச் செய்ய பலவித முயற்சிகள் எடுத்துக்கொண்டார்கள். பெர்டிக்காஸுக்குப் பின்வந்த ஆர்ச்சேலாஸ், சாலைகள் அமைப்பதிலும், கட்டடங்கள் எழுப்புவதிலும் ஆர்வங்கொண்டிருந்தான். அவன் கிரேக்க சர்வாதி காரிகளின் அடிச்சுவட்டைப் பின்பற்றித் தன்னுடைய அரசவையில் கவிஞர்களுக்கும் கலைஞர்களுக்கும் ஆதரவளித்தான். துன்பியல் நாடகக் கவிஞனாகிய யூரிபீடியஸும், சங்கீதக் கலையில் சிறந்தவனான திமோத்தியுஸும், ஓவியக் கலைஞனாகிய செயூஸியஸும், மற்றும் பல கலைஞர்களும் மாசிடோனியத் தலைநகரான பெல்லாவிலுள்ள அரசவையில் சிறப்புற்றிருந்தார்கள். அங்கே அரசியலில் பங்கெடுத்துக் கொள்ளும் தொல்லை அவர்களுக்கிருக்கவில்லை. அவர்கள் பண்பாடு மிகுந்த தெற்கிலுள்ள நகரங்களை விட்டு, மகிழ்ச்சிதரும் சூழ்நிலையிலுள்ள பெல்லாவில் வாழ்ந்து வந்தார்கள். சில சமயங்களில் மாசிடோனியா இன்னும் ஹோமர் காலத்தில் வாழ்ந்து வருகிறதே தவிர புதிய காலத்தைப் பின்பற்றவில்லை யெனக் கூறப்பட்டதுண்டு. அவர்கள் கூறியதிலும் ஓர் உண்மை இருக்கிறது. ஹோமர் காலத்து மன்னர்களுடைய நிலைமைக்கும், மாசிடோனிய மன்னர்களின் நிலைமைக்குமிடையே மாறுதலுண்டு. மாசிடோனிய மன்னர்கள் சட்டத்திற்குக் கட்டுப்பட்டவர்களல்லர். எந்தச் சட்டமும் அவர்களைக் கட்டுபடுத்தவில்லை. அவர்களுடைய விருப்பம் குடிமக்களின் சட்டமாக இருந்தது. மன்னர்களுடைய அதிகாரங்கள் ஒரு காரியத்தில் மட்டும் கட்டுப்பட்டிருந்தது. அந்நாட்டு மன்னர்கள் கொடுக்கின்ற மரணதண்டனையை அந்நாட்டுப் பொதுச் சபை அங்கீகரித்தாக வேண்டியிருந்தது. பொது சபையின் அங்கீகாரம் பெருமல் அரசன் குடிமகன் எவனுக்கும் மரண தண்டனை கொடுக்கமுடியாது. இப்பழக்கம் ஒன்றுதான் அவர்களுக்கு உரிமைச் சாசனமாக விளங்கிற்று. போரிடுதலும், வேட்டையாடுவதும் மாசிடோனியர்களின் முதன்மையான தொழில்க ளாக இருந்தன. தன்னுடைய பகைவனைக் கொல்ல முடியாத மாசிடோனியன், அதற்கறிகுறியாகத் தன்னுடைய இடுப்பில் ஓர் கயிற்றைக் கட்டிக்கொள்வது வழக்கமாக இருந்தது. அவன் ஓர் காட்டுப் பன்றியைக்கொல்லும் வரையில் சம பந்தியில் உட்கார முடிவதில்லை. திரேஸியர்களைப்போலவே இவர்களும் குடிப்பதில் பேர்போனவர்கள்; மது அரக்கனின் (Bacchic) அற்புத மர்மப் பழக் கங்கள் இந்நாட்டிலும் பரவிற்று. யூரிப்பைடிஸ் தன்னுடைய பேச்சேய் என்ற நூலை எழுதுவதற்கான உள்ளுயிரை லூடியாஸ் ஏரிக்கரையில் (Lake Ludias) அடைந்தான் என்பது போன்ற செய்திகள் மாசிடோனியாவில் பரவின.

**பெர்டிக்காஸ் மன்னன், கி.மு. 365, அவன் கி.மு. 359-ல் கொல்லப்பட்டான். பிலிப் அமின்தாசின் பாதுகாவலன், கி.மு. 359. பிலிப் மாசிடோனியாவிற்குத் திரும்புதல், கி.மு. 364.**

பெர்டிக்காஸ் தன்னுடைய பாதுகாவலனும், மாற்றுந்தகப்பனுமாகிய டாலமி (Ptolemy) என்பவனைக் கொன்று தன்னுட்சியை ஏற்படுத்தியதை நாமறிவோம். ஆருண்டு கழித்து இல்லீரிய மலைச் மலைச்சாதியினர் மாசிடோனியாவைத் தாக்கினுர்கள். பெர்டிக்காஸ் போர்க்களத்தில் கொல்லப்பட்டான். அப்பொழுது மாசிடோனியா இடுக்கண்களால் சூழப்பட்டிருந்தது. பேயோனியர்கள் வடக்கிலிருந்து பயமுறுத்தினுர்கள். தெரேசியர்கள் மாசிடோனிய அரசு கட்டிலில் ஒருவனை அமர்த்துவதற்காகத் தெற்கிலிருந்து படை எடுத்துவந்தார்கள். யுத்தகளத்தில் கொல்லப்பட்ட பெர்டிக்காஸின் மகன் அமின்தாஸே அரசுகட்டிலுக்குரியவன். ஆனுல் அவன் அப்பொழுது குழந்தையாக இருந்தான். இப்படிப்பட்ட சூழ்நிலையில் நாட்டையும் அமின்தாஸையும் பாதுகாக்கும் பொறுப்பு பிலிப் என்பவனுக்கேற்பட்டது. பிலிப் அமின்தாஸின் சிற்றப்பன். அவன் அரசாங்கத்தைக் கைப்பற்றினுன். அமின்தாஸுக்கு பாதுகாப்பாளனுனன். பிலிப் தீபஸ் நாட்டிற்குக் கொண்டுபோன பிணையாட்களில் ஒருவனுக இருந்தானென்பதை நாம் ஏற்கெனவே பார்த்தோம். அவன் தீப்ஸ் நகரில் சில காலம் தங்கி இருந்தான். அங்கே அவன் எப்பாமினுண்டஸ், பெலோப்பிடாஸ் என்பவர்களின் படை முறை, அரசியல் திறன் முதலியவைகளை நேரில் பார்த்துக் கற்றுக்கொண்டான். டாலமி இறந்தவுடனே அவன் தன் தாயகமாகிய மாசிடோனியாவிற்கு அனுப்பப்பட்டதின் காரணத்தை நாமறியோம். ஒரு வேளை அவன் தீப்ஸ் நகரின் தலைவர்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரவானுக இருந்திருக்க வேண்டும். ஆகையால் அவர்கள் தங்களுடைய நாட்டின் நலனைக் கருதியே அவனை மாசிடோனியாவிற்குத் திருப்பியனுப்பி இருக்கவேண்டும்.,

**அரசு கட்டிலுக்காக உரிமை கொண்டாடியவர்களை பிலிப் ஒழித்துக்கட்டுதல், கி.மு. 369.**

பிலிப் தன்னுடைய நாட்டைக் காப்பாற்றவும் தன்னுடைய அரச குடும்பத்தை அழிவிலிருந்து பாதுகாக்கவும் முன் வந்தபோது, அவன் இருபத்துநான்கு வயதுள்ளவனுக இருந்தான். அப்பொழுது அவனுக்குப் பகைவர்கள் பலர் இருந்தனர். அவன் அயல் நாட்டுப் படை எடுப்புகளைச் சமாளிக்க வேண்டியதாயிற்று. உள் நாட்டில் அரசு கட்டிலுக்காக உரிமை கொண்டாடியவர்களை ஒழித்துக் கட்டியாக வேண்டும். அயல் நாடுகளின் ஆதரவுபெற்ற உரிமையாளர்களாலுண்டான அபாயத்தைச் சமாளித்தாக் வேண்டும்.

அத்தீனியர்கள் ஆர்கேயஸ் (Argaeus) என்பவனை மாசிடோனிய மன்னனுக்க முயன்றுன். அவனை அரசு கட்டிலில் அமர்த்துவதற்காக பெரியதோர் கடற்படையை அனுப்பினர்கள். பிலிப் அப்படையை முறியடித்தான். இருந்த போதிலும் அவன் ஏதென்ஸுடன் நட்பு பாராட்ட விரும்பினன். கைதிகளாக்கப்பட்ட அத்தீனியர்களைப் பண மின்றி விடுதலை செய்தான் ஆம்பிபோலிஸ் மாசிடோனியாவின் ஆதிக்கத்திலிருந்தது. அங்கு ஓர் மாசிடோனியப் படை நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. பிலிப் ஆம்பிபோலிஸை ஏதென்ஸுக்குத் திருப்பிக்கொடுத்து விட்டான். தனக்கு அந்நாட்டின் மீதுள்ள உரிமைகளை விட்டுவிட்டான். தெரேசியர்களுக்குத் திரண்ட பொன் கொடுத்து அவர்களை விலக்கிவிட்டான். அவர்கள் மாசிடோனிய அரசு கட்டிலுக்காக ஏற்படுத்திய உரிமையாளனைக் கைவிட்டார் கள்.

**பேயோனியர்களைத் தோற்கடித்தல், கி.மு. 358 (துளிர் விடு காலம்). இல்லிரியர்கள், கி.மு. 358.**

பேயோனியர்கள் சிறிது காலம் அமைதியாக இருந்தார்கள். இல்லிரியர்கள் மாசிடோனிய நகரங்களைத் தாக்கிக்கொண்டிருந் தார்கள். பிலிப் இவர்களை முறியடித்து மாசிடோனிய ஆதிக்கத்தை நிலைநாட்டிவிடுவதென்று முடிவுசெய்தான். பிலிப் தன்னுடைய படையைப் புதிய யுத்த முறைப்படி மாற்றியமைக்க விருப்பங் கொண்டான். குளிர் காலம் முழுவதையும் படையைச் சீர்திருத்து வதிலும், அதற்குப் பயிற்சியளிப்பதிலும் கழித்தான். துளிர்விடு காலம் வந்துவிட்டது. அப்பொழுது அவனிடம் நன்ருகப் பயிற்சி பெற்ற 10,000 போர்வீரர்களைக் கொண்ட காலாட் படையும் 600 குதிரைகளைக்கொண்ட ஓர் குதிரைப் படையுமிருந்தது. அவன் இந்தப் படையோடு பேயோனியர்களை எதிர்த்தான். அவர்களைப் படுதோல்வியடையும்படி செய்தான். அவன் இல்லீரியர்களை எதிர்த்துச்சென்றுன். அவர்கள் லின்செஸ்ஸியனிஸிலிருந்த நகரங் களை விட்டுச் செல்வதற்கு மனமில்லாதிருந்தார்கள். ஓர் பெரிய போர் நடந்தது. அந்தப் போரில் பிலிப் தன்னுடைய நூதன முறையை பின்பற்றிப் போர் புரிந்தான். யுத்தகளத்தில் 700 இல்லீரி யர்கள் கொல்லப்பட்டார்கள். படை எடுத்துவந்த இல்லீரியர் களுக்கு ஆதரவளித்த பிரபுக்கள் நிபந்தனையின்றிச் சரணடைந் தார்கள்.

**கிரினிடேஸில் தேஸியர்களுடைய குடியேற்றம், கி. மு. 359; பிலிப் ஏதென்ஸுடன் செய்துகொண்ட ஒப்பந்தம், கி.மு. 357.**

பிலிப் தன்னுடைய பகைவர்களை ஒளித்துவிட்டுத் தன்னுடைய அதிகாரத்தை நிலைநாட்டிய பிறகு தெரேஸ்மீது படை எடுத்துச்

சென்ருன். தேரேஸிலிருந்த பொற்குவியலைக் கொள்ளையடிக்கவே அவன் அந்நாட்டின் மீது படையெடுத்தான். பணமில்லாமல் அவன் தன்னுடைய நாட்டை முன்னேறச் செய்யவும், தன்னுடைய திட்டங்களை நிறைவேற்றி வைக்கவும் முடியாதிருந்தது. மாசிடோனியர்களுக்கு வியாபாரம் செய்யத்தெரியாது. ஆகவே அவன் பொன், வெள்ளி முதலியவைகளின் கனிச் சுரங்கங்களுள்ள நாடுகளைத் தேடவேண்டியதாயிற்று. அவனுடைய நாட்டின் கிழக் கெல்லையிலிருந்த பாங்கேயஸ் மலையில் பொற்கனிச் சுரங்கங்களிருந்தன. தேஸாஸ் தீவிலுள்ளவர்கள் பூமிக்கடியிலுள்ள பொன், வெள்ளி, இரும்பு முதலிய உலோகங்களை வெட்டி யெடுப்பதில் வல்லவர்கள். அவர்களை பாங்கேயஸ் மலையிலுள்ள கிரேனிடேஸ் என்ற இடத்திற்குவந்து குடியேறும்படி பிலிப் மன்னன் ஊக்கமளித்தான். புதிய கனிச் சுரங்கங்களைத் தன்னுடைய ஆதிக்கத்தில் வைத்திருக்க சித்திரிமோன் (Strymon) கோட்டையைக் கைப்பற்றியாக வேண்டும், அக்கோட்டை ஆம்பிபோலிஸுக்குச் சொந்தமானது. பிலிப் சித்திரமோன் கோட்டையைக் கைப்பற்றக்கொண்ட விருப்பம், ஏதென்ஸின் விருப்பத்திற்கு முரணுனதாகத் தொன்றியது. இங்குதான் பிலிப் தன்னுடைய அரசியல் சூழ்திறனை வெளிப்படுத்திஞன். அவன் அத்தீனியக் கைதிகளை விடுதலை செய்தபோது, ஆம்பிபோலிஸின் மீது எவ்வித பாத்தியமும் கொண்டாடுவதில்லையென வாக்களித்தான். அந்த அடிப்படையில் ஏதென்ஸுக்கும் பிலிப்புக்கும் சமாதான உடன்படிக்கைக்கான பேச்சுவார்த்தைகள் நடந்தன. சமாதான உடன்படிக்கையில் அவன் தனிப் பிரிவு ஒன்றைச் சேர்த்தான். அப்பிரிவின்படி பிலிப், ஏதென்ஸுக்குப் பதிலாக ஆம்பிபோலீஸைப் பிடித்துவிடுவதென்றும், அதைத் திரும்ப ஏதென்ஸுக்கு விட்டுவிடுவதென்றும், உடன்படிக்கையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதற்குப்பதிலாக ஏதென்ஸ், பிட்னுவை (Pydna) பிலிப்பினிடம் ஒப்படைத்துவிடுவதென்று முடிவாயிற்று. பிலிப் ஆம்பிபோலீஸைத் தாக்கிஞன். ஆம்பிபோலியர்கள் ஏதென்ஸின் ஆதிக்கத்தின் கீழ் வாழ விரும்பிஞர்களே தவிர மாசிடோனிய ஆதிக்கத்தை அவர்கள் விரும்பவில்லை. ஆகையால் அவர்கள் அத்தீனியர்களிடம் படை உதவி கோரிஞர்கள். அப்பொழுது அத்தீனியப்படை செர்சோனேசேயில் முழு மூச்சுடன் போராடிக்கொண்டிருந்தது. ஆகையால் ஏதென்ஸ், ஆம்பிபோலிஸுக்குப் படையுதவி அனுப்ப முடியவில்லை. அங்கு ஏற்பட்டுள்ள நிலையைப்பற்றி ஏதென்ஸ் புரிந்துகொள்ளவில்லை. அது பிலிப் மன்னனின் வார்த்தையில் முழு நம்பிக்கை கொண்டிருந்தது. உண்மையில் பிலிப் ஏதென்ஸை ஏமாற்றி விட்டான். ஏதென்ஸை அவன் ஏமாற்றியது தகுதியானதே. பிட்னுவை மாசிடோனியாவுக்கு ஒப்படைத்துவிடுவதென்று ஏதென்ஸ் முடிவுகட்டியது ஒரு பெரிய துரோகச் செயலாகும். ஆகவே ஏதென்ஸ்

ஏமாற்றப்பட்டது. அதனுடைய துரோகச் செயலுக்காக அதற்குக் கிடைத்த தண்டனையாக இது இருந்தது. அத்தீனியப் பேச்சாளர்கள் மாசிடோனியா வஞ்சகம் செய்துவிட்டதென்று கூச்சலிட்டார்கள். பிலிப்பை அத்தீனியர்கள் தங்களுடைய திட்டங்களை நிறைவேற்றிக் கொள்வதற்கான ஓர் கருவியாகப் பயன்படுத்திக்கொள்ளலாமெனக் கருதினர்கள். ஆனல் பிலிப், அத்தீனியர்கள் தன்னை ஏமாற்ற முடியாதென்றும், அரசியல் சூழ்திறனில் தன்னை அவர்கள் வெல்ல முடியாதென்றும் நிரூபித்துக் காட்டினன்.

### பிலிப் பிட்னவையும் ,போட்டிடேயையும் கைப்பற்றியது, கி.மு. 356.

பிலிப் ஆம்பிபோலிஸைக் கைப்பற்றினன். தேசியர்கள் குடியேறிய கிரீனிடேஸை ஒரு கோட்டையாக மாற்றிவிட்டான். அக் கோட்டைக்கு 'பிலிப்பி' என்று பெயரிட்டான். பாங்கேயஸ் மலையைத் தன் ஆதிக்கத்தின் கீழ் வைத்திருக்க இப்போது அவனிடம் இரு கோட்டைகளிருந்தன. பொற்கனிச் சுரங்கத்திலிருந்து அவனுக்கு ஆண்டுதோறும் 1000 தாலந்து கிடைத்தது. அவனுடைய நாட்டைப்போல் அவ்வளவு செல்வம் படைத்த நாடு கிரீஸில் அப்போதிருந்ததில்லை. பழைய தலைநகராகிய எகேயி அல்லது எடிஸா இப்பொழுது கைவிடப்பட்டது. ஆர்ச்செலாஸ் மன்னனுக்கு விருப்பமான பெல்லா இப்போது தலைநகரமாயிற்று. எகேயிலிருந்து பெல்லாவுக்குத் தலைநகரம் மாற்றப்பட்டதிலிருந்து மாசிடோனியாவின் புதிய வரலாற்றுக்காலம் ஆரம்பமாயிற்று.

### ஒலிந்தஸோடு ஒப்பந்தம்

பிலிப், பிட்னவைப் பிடித்துக்கொண்டான். அவன் ஆம்பிபோலிஸைக் கைப்பற்றியது, ஏதென்ஸுக்கிழைத்த ஒரு தீங்காகக் கருதினர்கள். அவன் பிட்னவைக் கைப்பற்றியது, ஏதென்ஸை அவமதித்ததாகக்கருதப்பட்டது. பிலிப் போட்டிடேயைக் கைப்பற்றி, ஒலிந்தியர்களுக்குக் கொடுத்துவிட்டான். அவன் ஆன்தேமஸ் பட்டினத்தையும் ஒலிந்தியர்களுக்கே கொடுத்துவிட்டான். பிலிப், சித்ரிமோனைக் கைப்பற்றியபோது ஒலியந்தியர்கள் ஏதென்ஸிடம் படை உதவி நாடினர்கள். இரு நாடுகளும் ஒன்று சேர்ந்து மாசிடோனியாவை எதிர்க்க வேண்டுமென்று ஒலிந்தியர்கள் ஏதென்ஸுக்கு அறிவித்தார்கள். ஏதென்ஸ் பிலிப் மன்னனின் வார்த்தையை நம்பியபடியால் ஒலிந்தியர்களுடைய விருப்பத்திற்கிணங்கி வரமறுத்துவிட்டது. இப்போது பிலிப் மன்னனல் ஏமாற்றமடைந்ததைக்கண்ட ஏதென்ஸ் ஒலிந்தியர்களின் கூட்டுறவை நாடிற்று. அவ்விரு நாடுகளும் ஒன்று சேராமல் தடுப்பதற்காகவே பிலிப் மன்னன் ஒலியந்தியர்களுக்குச் சில சலுகைகளைக் கொடுத்தான். பின்னல் அதை விழுங்கி

விடவும் திட்டமிட்டிருந்தான். மெத்தோன் ஒன்றைத்தவிர தெர் மேயிக் விரிகுடாவில் அத்தீனியர்கள் காலடி எடுத்துவைக்க ஒரு சிறிய பகுதியைக்கூட விட்டுவைக்காமல் எல்லாவற்றையும் அவன் பிடித்துவிட்டான்.

### இல்லிரியர்களின் தோல்வி கி.மு. 356. இலையுதிர்காலம்.

தெரேஸியர்கள் மாசிடோனியர்கள் கிரினிடேஸைக் கைப்பற்றி யதைக் கண்டு கோபமுற்றார்கள்.[1] பேயோனியர்களின் மன்னனும், இல்லிரியர்களின் அரசனும் தங்களுக்கேற்பட்ட தோல்விக்காக வருத்தமுற்றிருந்தார்கள். ஏதென்ஸ், தெரேஸியர்களோடும், பேயோனியர்களோடும், இல்லிரியர்களோடும் சேர்ந்து மாசி டோனியாவை எதிர்க்கும் முயற்சியிலீடுபட்டது. ஆனால் பிலிப், அவர்கள் ஒன்று சேர்ந்து தன்னைத் தாக்காவண்ணம் அவர்களுடைய முயற்சியைத் தடுத்துவிட்டான். பேயோனியர்கள் தனக்குக் கட்டு பட்டு நடக்கும்படி செய்துவிட்டான். அவனுடைய படைத்தலைவன் பார்மோனியோன் இல்லிரியர்களை முறியடித்தான். தெரேஸியர் களுக்கு மறுபடியும் பொன் கொடுத்து அவர்களைத் தன் ப்க்கம் சேர்த்துக்கொண்டான். அவர்கள் பாங்கேயஸ் மலைமீது தங்களுக் கிருந்த உரிமையை விட்டுவிட்டார்கள்.

### மாசிடோனியாவைப் புதுப்பித்தல்

பிலிப் பல வெற்றிகளை எளிய செலவில் பெற்றுவிட்டான். அவன் ஓர் மன்னனாக முடிசூடிக்கொண்டான். அமைந்தாஸ் அரசு கட்டிலுக்கு உரிமை கொண்டாடா வண்ணம் செய்துவிட்டான். பிறகு தன்னுடைய நாட்டை வலுப்படுத்துவதிலும், தன் நாட்டுப் படையைப் பெருக்குவதிலும், தன்னுடைய முழுக் கவனத்தையும் செலுத்தினான். கடற்கரையோரங்களில் குடியிருந்த மாசிடோனியர் களையும் மலைவாசிகளையும் ஒரே இனமாக்கிவிட விருப்பங்கொண் டான். படை அமைப்புமுறையின் மூலமாகத் தன்னுடைய நோக் கத்தை நிறைவேற்றினான். மலைவாசிகளைத் தன்னுடைய படையில் சேர்த்துக்கொண்டு அவர்களுக்குச் சம்பளமளித்தான். அவர்களை எப்போதும் போர்க்கோலம் பூண்டிருக்கும்படி செய்தான். இப்போது அவர்களுக்குப் படையில் பணிபுரிவதினால் நல்ல சம்பளம் கிடைத்தது. ஆகையால் அவர்கள் தங்களிடமிருந்த வேற்றுமையை மறந்தார்கள். தங்களை ஒரீஸியர்கள் என்றும், லின்ஸிஸெஸ்யர்களென்றும் அழைக் கப்பட விரும்பவில்லை. அவர்கள் எல்லோரும் தங்களை மாசிடோனி

[1] கி.மு. 356 கோடையில் ஏதென்ஸ், தெரேஸியர்களுடைய அரசனாகிய சித்ரிபோரிஸ் அவனுடைய சகோதர்கள் முதலியவர்களோடு ஏற்படுத்திய ஒப்பந்தம். (இவர்கள் செர்சோபிளிப்டஸ் மன்னனுடைய சகோதரனுடைய மைந்தர்கள். இவர்கள் மேற்கு தெரேஸில் ஆட்சி புரிந்தனர்.)

யர்கள் என்றழைக்கப்படுவதில் பெருமை கொண்டார்கள். மற்றவர் களுக்கு இப்படிப்பட்ட ஒரு வேலையைச்செய்துமுடிக்கப் பல ஆண்டுகள் தேவையாக இருந்திருக்கலாம். ஆனால் பிலிப் இந்தத் திட்டத்தை தன்னுடைய மனத்தில் உருவாக்கினன். அதை நடைமுறையில் காட்டிவிட்டான். 'போர் புரிவதே வாழ்க்கையின் தொழிலாகக் கொண்டுள்ள நாட்டுப்பற்றுள்ளவர்கடங்கிய படையை உண் டாக்குவதே அவனுடைய புதிய குறிக்கோளாக இருந்தது.'' காலாட் படையும் குதிரைப்படையும் அவரவர்களுடைய நாட்டின் இனத் திற்குத் தக்கவாறு பிரிக்கப்பட்டிருந்தது. பொதுவான பெருமை, உத்தியோக உயர்வில் பொதுவான விருப்பம், வெற்றியில் பொது நம்பிக்கை முதலியன அவர்களிடமிருந்த வேறுபாட்டை ஒழித்துக் கட்டின. பிலிப்பரசனுடைய மைந்தனின் காலத்தில் அவர்களுக்குள் எவ்விதமான வேற்றுமையையும் காண்பதரிதாயிற்று. பளுவுள்ள ஆயுதங்கள் தாங்கிய குதிரைப்படையினர் அரசனுடைய 'நண்பர் கள்' என்றழைக்கப்பட்டார்கள். தரைப்படையைவிட அவர்களுக்கு மிகுந்த செல்வாக்கிருந்தது. தரைப்படையில் 'அரசனுடைய காவல் வீரர்கள்'' என ஓர் பிரிவு இருந்தது. இந்தப் பிரிவிலிருந்த வீரர் களுக்கு வெள்ளிக் கேடயங்கள் அளிக்கப்பட்டன. அவர்கள் ஹைப் பாஸ் பிஸ்ட்டே (Hypas-pistae) என்று அழைக்கப்பட்டார்கள்.

பிலிப் ஏற்படுத்திய மாசிடோனிய பாலான்ஸ் என்ற படை கிரேக் கர்களுக்குப் புதியதன்று. அவர்களுடைய படையில் ஈட்டிகளைக் கொண்டு தாக்கும் போர்வீரர்களின் போர் முறையில் பிலிப் சில மாறு தல்களை ஏற்படுத்தினன். அவர்கள் நீண்டஈட்டிகளைக்கொண்டு போர் புரியப் பழக்கப்பட்டவர்கள். இந்தப் படைவீரர்களை வரிசை வரிசை யாக அணிவகுத்து நிறுத்தி வைப்பார்கள். அவர்கள் தாராளமாகச் சுழன்று எதிரியைத் தாக்குவர். எதிரில் நெருக்கித்தள்ளும் பெரும் படை முறியடிக்கும் வகையில் இவர்கள் ஆயுதங்களைத் திறமையுடன் பயன்படுத்தப் பழகியுள்ளனர். எதிரியின் முன்னணியை இவர்கள் தடுத்து நிறுத்தவும், அவர்களைப் பின்வாங்கிப்போகும்படி செய்யவும் நன்கு அறிந்திருந்தார்கள். பாலான்ஸ் படையின் இரு பக்கங் களிலும் குதிரைப்படைகளை நிறுத்திவைப்பது வழக்கமாக இருந்தது. இவை பகைவர்களின் இரு பக்கங்களையும் பக்கவாட்டில் தாக்குவ தற்குப் பயிற்சியளிக்கப்பட்டிருந்தன. இந்த முறையைப் பின் பற்றி பிலிப் இல்லிரியர்களை வென்றன்.

### அலெக்ஸாந்தரின் பிறப்பு, அக்டோபர், கி.மு. 356.

பிலிப் மன்னனின் செயல்களைக் கண்டு கிரேக்கர்கள் அதிர்ச்சி யடையவில்லை. அத்தீனியர்கள், இல்லிரியர்களையும் பேயோனியர் களையும், பிலிப் மன்னனுக்கு எதிராகக் கலகம் செய்யும்படி தூண்டி விட்டார்கள். அவர்கள் அவனை பாங்கேயஸ் மலைப் பிரதேசத்தி

லிருந்து விரட்டியடிக்க, தெரேஸியர்களைத் தூண்டிவிட்டனர். ஆனால் பிலிப் பகைவர்கள் எல்லோரையும் வென்று வெற்றிமாலை சூடினான். எனினும், அத்தீனியர்கள் தங்களுடைய நம்பிக்கையைக் கைவிடவில்லை. கோட்டியாஸ், செர்சோபிளிப்டஸ் என்ற மன்னர்களைப் போலவே அவர்கள் பிலிப் மன்னனையும் நினைத்தார்களே தவிர அவனுடைய உண்மையான ஆற்றலை அவர்கள் புரிந்து கொள்ளவில்லை. அத்தீனியர்கள் நூற்றுண்டு காலமாக மாசிடோனியர்களை அறிவார்கள். எளிதில் அவர்களை வென்றுமிருக்கிறார்கள். இப்போது சந்தர்ப்பம் கிடைக்கும்போது மாசிடோனியாவைப் பணியவைக்கும் ஆற்றல் தங்களுக்கிருப்பதாக அவர்கள் நம்பினார்கள். பிலிப் மன்னன், ஈப்பிராட் (Epirot) நாட்டுத் தலைவனுடைய மகள் ஒலிம்பியாவை மனந்துகொண்டான். அவனுடைய திருமணம் கிரேக்க நாட்டில் எவ்விதமான பரபரப்பையுமுண்டு பண்ணவில்லை. ஓராண்டு கழித்து அவனுக்கு ஒரு மகன் பிறந்தான். அவனுடைய மகன் பிறந்தற்காக நாட்டில் யாரும் மகிழ்ச்சியடையவில்லை. யார் அச்சிறு குழந்தை ஒரு காலத்தில் உலகத்தை வெல்லுவானென்று எதிர்பார்க்கக்கூடும் ? அக் குழந்தை குளிர் காலத்தில் பிறந்தது. அந்தக் குளிர் காலத்தில் உலக வரலாற்றைப் புதிய வழியில் திருப்பிவிடக் கூடிய ஓர் சக்தி பிறந்திருக்கிறதென்று மனிதர்களுக்கு வெளிப்படுத்தப்பட்டிருக்குமானால் அவர்கள் தங்கள் பார்வையை, பெல்லா நகர்ப் பக்கம் செலுத்தி இருக்கமாட்டார்கள் ; அவர்கள் தங்கள் கவனத்தை ஹாலிகார்னஸ்ஸஸ் பக்கம் திருப்பி யிருப்பார்கள்.

## 3. காரியாவின் மாவுசோலஸ்

**ஹெக்ட்டோம்னஸ், கி.மு. 395-90 to 377. காரியன் சர்வாதி காரிகளுடைய அரசியலமைப்பு நிலை.**

மாசிடோனியாவைப் போலவே காரியாவிலும் இரு இன மக்கள் வாழ்ந்து வந்தார்கள். காரியர்கள் அந்நாட்டின் பூர்விகக் குடிகளாவார்கள். கிரேக்கர்கள் அந்நாட்டின் கடற்கரையோரமாக வாழ்ந்து வந்தார்கள். கிரேக்கர்களைப் போலவே இல்லீரியர்கள் இண்டோ ஜெர்மானிய மொழியைப் பேசி வந்தார்கள். ஏஜியான் பிரதேசத்தில் கிரேக்கர்களும் இல்லீரியர்களும் வருவதற்கு முன் காரியன் இனத்தினர் அங்குக் குடியேறி ஆண்டு வந்தனர். எனினும், மாசிடோனிய கிரேக்கர்களைவிடக் காரியான் இனத்தினர், கிரேக்கர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள். காரியர்கள் கிரேக்க கலாசாரத்தைக் கிரேக்கர்களைப் போலவே பின்பற்றியவர்கள். அவர்கள் தங்களுடைய நாட்டின் பூர்வீகக் குடிகளைத் தங்களுடைய இனத்தோடு சேர்த்துக்கொண்டு அவர்களுக்குக் கிரேக்கப்

பண்பாட்டைக் கற்றுக் கொடுத்தார்கள். திரால்லெல்ஸ் (Tralles) மைலஸா (Mylasa) என்ற இரு பட்டினங்களும் கிரேக்கப்பட்டினங் களைப் போலவே தோற்றமளித்தன. அந் நாட்டில் கிரேக்க மொழிதான் சிறந்த மொழியாக இருந்தது. காரியா பாரசீகப் பேரரசின் ஒரு மா நிலமாக இருந்த போதிலும், அதற்கும் சிறிதளவு சுதந்திர மிருந்தது. ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தில் சேர்ந்துள்ள நகரங்களில் காரியாவும் ஓர் நகரமாக இருந்தது. அக் கழகம் லாஜினுவிலுள்ள (Lagina) சீயஸ் ஆலயத்தில் கூடுவது வழக்கமாக இருந்தது. அக் கழகம் சமயச் சார்பானதாக இருந்த போதிலும் சில சமயங்களில் அரசியல் நோக்கத்திற்கும் பயனுள்ளதாக விளங் கிற்று. காரியா, அரசியல் ஐக்கியத்தை கூட்டாட்சியின் மூலம் பெற்றது. திஸ்ஸாபர்னேஸின் மரணத்திற்குப்பின், மைலாஸா நாட்டின் குடிமகனுகிய ஹெக்ட்டோம்னஸ் அங்கே தன்னுடைய ஆதிக்கத்தை நிலை நாட்டினுன். பேரரசன் அவனைத் தன்னுடைய சிற்றரசனுக (Satrap) அங்கீகரித்தான். ஹெக்ட்டோம்னஸும் அவனுடைய மகன் மாவுசோலஸும் பேரரசனுக்கு ஒழுங்காக வரி செலுத்திவந்தார்கள். அவர்கள் பேரரசனுக்குக் கட்டுப்பட்டு நடந்து வந்தார்கள். பாரசீகப் பேரரசின் மேற்குப் பாகத்திலுள்ள சிற்றர சர்கள் அடிக்கடி பேரரசனை எதிர்த்துக் கலகங்கள் செய்வது வழக்கமாக இருந்தது. காரியா, ஒரேவொரு சமயம் மட்டும் கலகத்திலீடுபட்ட துண்டு. அவர்கள் ஓர் அரசனுக்குரிய பட்டங்களைச் சூட்டிக்கொண்ட தில்லை. காரியா நகரங்களின் அரசியல் அமைப்பு விவகாரங்களில் இவர்கள் தலையிட்டதில்லை. தங்களுடைய இறைமையின் அதிகாரத்தை அந் நகரங்களில் நிலைநாட்டியதில்லை. அவர்களுடைய சொந்த நகர மாகிய மைலாஸாவில் கூடச் சட்டங்களை மக்கள் சபையே இயற்றின. இயற்றப்பட்ட சட்டங்களுக்கு அங்கீகார மளித்தல் அரசனுடைய கடமையன்று. அக் கடமை அந் நகரத்தின் மூன்று கோத்திரங்களுக் கும் அளிக்கப்பட்டது. அவர்களுடையமேல் சபையில் உயர்குடி மக்கள் அங்கத்தினர்களாக இருந்தார்கள். ஆகவே சட்டத்திற்கு அங்கீகாரம் அளிக்க உயர்குடி மக்களைக்கொண்ட மேல்சபைக்கு மட்டும் அதிகார மிருந்தது. ஒரு காலத்தில் ஏதென்ஸில் பிஸிஸ்ட் ராட்டஸும் அவனுடைய மைந்தர்களும் எந்த நிலையிலிருந்தார்களோ அதே நிலையில் ஹெக்ட்டோம்னஸும் அவனுடைய மகன் மாவு சோலஸும் காரியாவிலிருந்தார்கள். நடை முறையில் அவர்களே ஆட்சியாளர்கள். அவர்கள் பாரசீகப் பேரரசனின் சாட்டராப்புகள் (Satraps) என்ற உத்தியோகப் பட்டம் பெற்றவர்கள். அதே சமயத்தில் சுதந்திரமாக வாழ்ந்த பல நகரங்களின் கொடுங்கோலர் களாவுமிருந்ததார்கள்.

இவர்கள் கிரேக்க கடற்கரையிலுள்ள ஹாலிகார்னஸிஸ், ஐயாஸிஸ், சினிடஸ், மிலிட்டஸ் போன்ற நகரங்களைத் தங்களுடைய

ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவந்தார்கள். மாவுசோலஸ் லேசியா நாட்டையும் கைப்பற்றினன். இவ்விதமாக பிலிப் மன்னன் அரசு கட்டில் ஏறியபோது செல்வமும் நிராசையும் கொண்ட ஒரு கோனாட்சி ஏஜியான் கடலின் தென்கிழக்குக் கரையில் வலுபெற்று விளங்கிற்று. தன்னுடைய கடற்கரையோரமாகவுள்ள தீவுகளை வென்று தன்னுடைய சாட்டராப்பியோடு சேர்த்துக்கொள்ள மாவுசோலஸ் விரும்பினன். அண்மையிலுள்ள தீவுகளை வெல்வதற்கு அவனுக்கு ஓர் கடற்படை தேவையாக இருந்தது. அவன் தன்னுடைய தலைநகரை உள்நாட்டுப் பட்டினமாகிய மைலாஸாவிலிருந்து ஹாலிகார்னஸுக்கு மாற்றிவிட விரும்பினன். காரியா ஓர் கடலாதிக்க நாடாகவேண்டிய நிலைமை ஏற்பட்டுவிட்டது.

தன்னுடைய நகருக்குக் அண்மையிலுள்ள மாவுசோலஸ் சேப்பிரியோன் என்ற ஓர் சிறிய தீவில் தனக்காகப் பலமுள்ள ஒரு கோட்டையைக் கட்டினன். அவன் வணிகக் கப்பல்கள் தங்குவதற்காக ஒரு துறைமுகத்தையும், யுத்த கப்பல்கள் தங்குவதற்காக ஒரு துறைமுகத்தையும் கட்டினன்.

### சியோஸ், கோஸ், ரோட்ஸ் முதலிய தீவுகளின் கலகங்கள், கி.மு. 357.

பெரிய தீவுகளாகிய ரோட்ஸ், கோஸ், சியோஸ் முதலிய தீவுகளைத் தன்னுடைய நாட்டுடன் சேர்த்துக்கொள்ள மாவுசோலஸ் விரும்பினன். ஆனல் அத்தீவுகள் ஏதென்ஸின் நட்பைப் பெற்றிருந்தன. அத்தீனிய ஆதிக்கத்தின்மீது அத்தீவுகளுக்கு மனக் குறைவிருந்தது. அவர்களுடைய மனக்குறைவுக்குப் பல காரணங்களுமிருந்தன. அத்தீனியர்கள் சாமோஸ் தீவிலும், போட்டிடேயிலும் குடியேற ஆரம்பித்தார்கள். அவர்களுடைய குடியேற்றக் கொள்கை மற்ற நேச நாடுகளுக்கு அச்சத்தை யுண்டு பண்ணிற்று. ஏதென்ஸ் பொறுப்பற்ற கூலிப்படை ஒன்றை வைத்திருந்தது. ஏதென்ஸ் கூலிப்படைப் போர் வீரர்களுக்கு ஒழுங்கான முறையில் சம்பளமளிப்பதில்லை. அப் போர் வீரர்களைப் பற்றிய பல முறையீடுகளிருந்தன. இந் நாடுகளில் சிறு குழுவினரின் ஆட்சியிருந்தது. ஆலிகார்க்குகள் என்றழைக்கப் படுகிற இச் சிறு குழுவினர் ஏதென்ஸோடு தங்களுக்கிருந்த உறவை ரத்து செய்து கொள்ள விரும்பினர்கள். காரியா நாட்டுத் தலைவன் முதலில் இத் தீவுகளுக்கும் ஏதென்ஸுக்கு முள்ள உறவை அழித்துவிடவும், பிறகு அவற்றைத் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரவும் விரும்பினன். அவன் அத்தீவுகள் ஏதென்ஸ் மீது கொண்டிருந்த உள்ள நிறைவின்மைக்கு ஆதரவளித்தான். மூன்று தீவுகளும் ஒன்று சேர்ந்து ஏதென்ஸை எதிர்த்துக் கலகம்

செய்தன. அவர்களுடைய கலகத்திற்குப் பைஸான்ஷியம் ஆதர வளித்தான்.

### சியோஸ்மீது அந்நியர் தாக்குதல்; சாபிரியாஸின் மரணம், கி.மு. 357 கி.மு. 356. எம்பேட்டா போர்க்களம்.

கலகத்தை அடக்குவதற்காக ஏதென்ஸ் சாபிரியாஸ் சாரெஸ் என்பவர்களின் தலைமையில் ஒரு கடற்படையையும், சியாஸுக்கு அனுப்பியது. அவர்களிருவரும் அவ்வாண்டின் படைத் தலைவர்களாக இருந்தார்கள். சியோஸ் நகரத்தை அவர்கள் தரை மூலமாகவும், கடல் மூலமாகவும் தாக்கினார்கள். துறைமுகத்துக்குப் போய்ச் சேர, சாபிரியாஸ் முயன்றான். பகைவர்கள் அவனைச் சூழ்ந்து கொண்டு தாக்கினார்கள். அவன் அங்கு நடந்த யுத்தத்தில் கொலையுண்டான். இவ்விதமாக ஏதென்ஸ் தன்னுடைய போர் வீரர்களில் தலைசிறந்த வனை இழந்துவிட்டது. சாபிரியாஸ் ஓர் சிறந்த வீரன். அவன் தன்னுடைய போர் வீரர்களைக் காப்பாற்றுவதில் கண்ணுங் கருத்துமா யிருந்தானே தவிர தன்னுயிரைப் பாதுகாப்பதில் அவன் முந்திக் கொண்டதில்லை. ஏதென்ஸ் சியாஸைத் தாக்கும் வேலையைக் கைவிட்டது. இந்த வெற்றியினால் சீயர்கள் பெருமையடைந்தார்கள். அவர்கள் 100 கப்பல்களுடன் ஏதென்ஸுடன் ஆக்கிரமிப்பு யுத்தத் திலிடுபட்டார்கள். ஏதென்ஸின் குடியேற்ற நாடுகளிலுள்ளவர்களை அங்கிருந்து விரட்டியடிக்க முன் வந்தது. அது 100 கப்பல்களுடன் சாமோஸ் தீவுக்குச் சென்று அதை முற்றுகையிட்டது. சாரேஸ் அறுபது கப்பல்களைக் கொண்டு சியாஸ் கடற்படையை எதிர்க்க முடிய வில்லை. ஏதென்ஸ் சாரேஸுக்கு படையுதவியனுப்பிற்று. அவர்க ளுடைய உதவிப் படை திமோத்தியுஸ், எப்பிகிராடிஸ் என்பவர் களுடைய தலைமையில் அனுப்பப்பட்டது. மூன்று படைத் தலைவர் களும் பெரிய காரியத்தைச் சாதித்து விடுவார்களென்று ஏதென்ஸ் எதிர்பார்த்தது. அவர்கள் சாமோஸை விடுவித்தார்கள். பைஸான் டியத்தைக் கைப்பற்றி விடலாமென்ற நம்பிக்கையோடு பொரோ போன்டிஸை நோக்கிச் சென்றார்கள். ஆனால் அவர்களுடைய முயற்சி தோல்வியடைந்தது. பிறகு அவர்கள் சியோஸை நோக்கிச் சென் றார்கள். அதைத் தாக்கத் திட்டமிட்டார்கள். புயலின் காரணமாக எப்பிகிராட்டிஸும், திமோத்தியுஸும் அத்தீவைத் தாக்க விரும்ப வில்லை. சாரேஸ் அவர்களுடைய மதியுரையைக் கேட்கவில்லை. அவன் சியோஸைத் தாக்கினான். மற்ற இருபடைத் தலைவர்களும் அவனுக்கு உதவியளிக்கவில்லை. ஆகையால் அவன் பெருநஷ்டத் துடன் பின்வாங்க நேர்ந்தது.

### திமோத்தியுஸ் எப்பிகிராட்டிஸ் என்பவர்களின் விசாரணை, கி.மு. 355. (?)

ஏதென்ஸுக்கு எப்பிகிராட்டிஸ் திமோத்தியுஸ் என்பவர்களுடை சேவை பெரும் ஏமாற்றத்தையளித்தது. போதுமான கடற்படையிருந்தும் அவர்களிருவரும் தங்களுடைய கடமையை ஒழுங்காகச் செய்யவில்லையென்ற குற்றம் அவர்களிருவர்களின்மீதும் சுமத்தப்பட்டது. சாரெஸ் அவர்களிருவரின்மீதும் கோபம் கொண்டான். அவர்கள்மீது துரோகக் குற்றத்தைச் சுமத்தினான். அரிஸ்ட்டோபோன் என்ற பேச்சாளன் சாரெஸுக்கு ஆதரவாகப் பேசினான். திமோத்தியுஸும் எப்பிகிராட்டிஸும் சாரெஸ்மீது பழி சுமத்தினார்கள். ஆனால் அத்தீனியர்கள் சாரெஸ்மீது சுமத்திய குற்றத்தைத் தள்ளிவிட்டார்கள். அவனுடைய வீரத்திற்காக அவர்கள் அவனைப் புகழ்ந்தார்கள். எப்பிகிராட்டிஸுக்குப் பகைவர்கள் அதிகமில்லை. ஏதென்ஸ் நகரவாசிகளைச் சாந்தப்படுத்தும் முறை அவனுக்குத் தெரிந்திருந்தது. ஆகையால் அவன்மீது சுமத்தப்பட்ட குற்றம் தள்ளுபடியாயிற்று. திமோத்தியுஸ் தானென்ற செருக்குள்ளவனாக இருந்தான். அவனுக்கு மக்களிடத்தில செல்வாக்கு கிடையாது. அரிஸ்ட்டோபோன் திமோத்தியுஸ் குற்றவாளியெனத் தீர்மானித்துவிட்டான். அவனுடைய குற்றத்திற்காக அவனுக்கு 100 தாலந்து அபராதம் தண்டனையளித்தார்கள். திமோத்தியுஸ் 100 தாலந்து அபராதத் தொகையைக் கட்ட இயலாத நிலைமையிலிருந்தபடியால் அவன் சால்ஸிஸுக்கு (Chalcis) ஓடிவிட்டான். சின்னாட்களில் அவன் அங்கேயே இறந்துவிட்டான். பன்னிரண்டு மாதங்களுக்குள்ளாக அத்தீனியர்கள் தங்களுடைய இரண்டாவது பேரரசைக் கட்டிய இரு பெருந் தலைவர்களை இழந்துவிட்டார்கள். அத்தீனியர்கள் கொஞ்ச காலத்திற்குப் பிறகு, தாங்கள் திமோத்தியுஸுக்கு அளித்த தண்டனை கொடியதென்பதை உணர்ந்தார்கள். அவனுடைய மகன் மீதும் அதே குற்றத்தைச் சுமத்தி விசாரணை நடத்தி, 100 தாலந்து அபராதத் தண்டனையளித்தார்கள். இப்போது அவனுக்களித்த தண்டனையைக் குறைத்து 100 தாலந்துக்குப் பதிலாகப் பத்து தாலந்து அபராதத் தொகையைக் கட்ட அனுமதியளித்தார்கள்.

**சின்ன ஆசியாவில் சாரேஸ், கி.மு. 355. சிம்மோரிக்ஸ் மீது டெமாஸ்த்தனிஸின் சொற்பொழிவு. சமாதானத்தைப்பற்றி ஐஸோ கிராட்டிஸ், கி.மு. 355.**

ஏதென்ஸ் ஒப்பந்தத்தை மீறிய நேச நாடுகளாகிய சிமோசியஸ், ரோட்ஸ்கோஸ் முதலியவற்றோடு போரைத் தொடர்ந்து நடத்த சாரெஸைப் படைத் தலைவனாக்கிற்று. அவன் ஓர் பெரும் படையுடன் புறப்பட்டான். ஆனால் போர் வீரர்களுக்குச் சம்பளமளிக்க அவனுக்குப் பண உதவி அளிக்கப்படவில்லை. போர் வீரர்களுக்குச் சம்பளம் கொடுக்கவும் மற்ற யுத்தச் செலவை ஈடு கட்டவும் சாரெஸ் பணத்தைத் தேடியாக வேண்டும். சின்ன ஆசியாவுக்குச் சென்றால் பணம் கிடைக்குமென்று எண்ணிப் புறப்பட்டான். அப்பொழுது ஹெல்லஸ்

பான்டையின் பிரிஜியாவிற்கு, ஆர்ட்டாபாஸஸ் (Artabazus) சாட்ட ராப்புவாக இருந்தான். அவன் பாரசீகப் பேரரசனை எதிர்த்துக் கலகம் விளைவித்தான். ஆனால் அவனிடம் போதுமான போர் வீரர்களில்லை. எனவே வலுவற்றிருந்தான். சாரெஸ் அவனுக்கு உதவியளிக்கச் சென்றான். சாரெஸ் பேரரசனுடைய மாற்ற சாட்டராப்புகளின் படைகளை எதிர்த்துப் போரிட்டு வெற்றியடைந்தான். ஆர்ட்டா பாஸஸ் கொடுத்த பணத்தைக் கொண்டு சாரெஸ் தன்னுடைய போர் வீரர்களுக்குச் சம்பளம் கொடுக்கவும் போரைத் தொடர்ந்து நடத்த வும் முடிந்தது. சாரெஸ் அடைந்த வெற்றியையும் அவனுக்குக் கிடைத்த பண உதவியையும் கேட்டு ஏதென்ஸ் நகரவாசிகள் மகிழ்ச்சியடைந்தார்கள். பேரரசன் ஆர்ட்டாக் ஸெர்ஸஸ் ஏதென்ஸ் மீது அடங்காக் கோபமடைந்தான். பேரரசன் ஏதென்ஸுக்கு விரோத மாகப் போர்தொடுக்கப் போகிறானென்றும் அவனுடைய படை சிரியாவிலும், சிலிஸியாவிலும் குவிக்கப்பட்டிருக்கிறதென்றும் கேட்டு ஏதென்ஸ் அதிர்ச்சியுற்றது. இச்செய்தி உண்மையான செய்தியா அல்லது, பொய் வதந்தியாஎன்று அத்தீனியர்கள் ஆராய்ந்து பார்க்க வில்லை. நாவன்மைப் படைத்த பேச்சாளர்கள் தங்களுடைய திறமை யைக் காட்ட முன்வந்தார்கள். பலர் நாட்டுப் பற்றினால் உந்தப் பட்டார்கள். பலர் ஐசோகிராட்டிஸ் போதித்து வந்த அகில கிரேக்க ஐக்கியத்தைப் பற்றியும் பாரசீகப் பேரரசை வென்றுவிட வேண்டிய அவசியத்தைப் பற்றியும் பேச ஆரம்பித்து விட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் டெமாஸ்த்தனிஸ் சிறந்த சொற்பொழிவுகளாற்றி னான். அவன் தன்னுடைய சொற்பொழிவில், ஏதென்ஸ் அஞ்சத் தேவையில்லையென்றும், படையுதவிக்காகக் கிரேக்க நகரங்களை நாடு வது மடமையென்றும் குறிப்பிட்டான்; 'உங்களுடைய அரசியல் தூதுவர்கள் களிப்புப் பாடல்களைப் பாடிக் கொண்டு சுற்றித்திரிபவர் களைவிட அதிகம் சாதித்துவிட மாட்டார்கள்' என்றான். அந்தச் சந்தர்ப்பத்தில் ஏதென்ஸ் ஒரு பெரிய போரில் ஈடுபடக்கூடாதென் பதுதான் அவனுடைய சொற்பொழிவின் சாரமாக இருந்தது. ஏனென்றால் போரைத் தொடர்ந்து நடத்த ஏதென்ஸுக்குப் போது மான படையும் பொருளுமில்லை. ஐஸோகிராட்டிஸ்கூட சமா தானத்தை விரும்பினான். அவன் ஒரு சிறு புத்தகத்தை வெளியிட் டான். அப்புத்தகத்தில் தன்னுடைய சிறந்த கருத்துக்களை வெளி யிட்டான். அப்புத்தகம் பேரரசுக் கொள்கையைக் குறை கூறிப் பேசுகிறது. ஏதென்ஸ் தன்னுடைய பேரரசுக் கொள்கையைக் கைவிட்டுவிட வேண்டுமென்றும், அப்போதுதான் அது நலனடையு மென்றும் குறிப்பிட்டான். 'பேரரசுக் கொள்கை நம்மை இந்த நிலைக் குக் கொண்டு வந்திருக்கிறது. பேரரசு கொள்கை நம்முடைய மக்க ளாட்சி முறையை வீழ்த்தியது' என்றும் அச்சிறு புத்தகத்தில் அவன் வற்புறுத்திக் கூறி இருக்கிறான்.

ஏதென்ஸ், ஸ்பார்ட்டா என்ற இரு நாடுகளும் பேரரசுக் கொள்கையின் காரணமாகத் தங்களுக்கும் கிரேக்க நாட்டிற்கும் கொண்டு வந்த கெடுதல்களையும் எடுத்துக்காட்டி இருக்கிறான். பாரசீகத்தைத் தாக்கக் கூடிய சந்தர்ப்பம் நேரிடுமென்று அவனுக்குத் தெரிந்த போதிலும், அதை அந்தச் சூழ்நிலையில் அப்போது செய்ய வேண்டுமென்று அவன் அறிவுறுத்தவில்லை. வீடு வாசலின்றி அலைந்து திரிகிற கிரேக்கர்களுக்கு, இடந்தேடித்தர தெரேஷியினால் முடியுமே யன்றி பாரசீகப் பேராசையினால் முடியாதென்பதையும் குறிப்பிட்டிருக்கிறான்.

**சமாதானம், கி.மு. 354.**

முடிவில் அத்தீனியர்கள் முன்யோசனையுடன் நடந்து கொண்டார்கள். சாரெஸைத் திரும்பி வரவழைத்துக் கொண்டார்கள். கலகத்திலிறங்கிய நாடுகளுடன் சமாதானத்திற்கான பேச்சு வார்த்தைகள் ஆரம்பமாயிற்று. முடிவில் சமாதான ஒப்பந்தம் ஏற்பட்டது.[1] சியோஸ், கோஸ், ரோடஸ், பைஸான்ஷியம் நகரங்களின் சுதந்திரத்தை ஏதென்ஸ் ஒப்புக் கொண்டது. அவை சுதந்தர நாடுகளாக விளங்க வேண்டுமென முடிவாயிற்று. சில நாட்களில் லெஸ்போஸ் நகரமும் அத்தீனியர்களின் உறவிலிருந்து விலகிச் சுதந்திர மடைந்தது. இவ்விதமாக ஏஜியான் கடலிலுள்ள சிறப்பான தீவுகள் அத்தீனிய ஆதிக்கத்திலிருந்து விடுதலை யடைந்தன. மேற்கிலிருந்த கார்சிராவும் ஏதென்ஸை விட்டுப் பிரிந்து விட்டது.

**மாசோலாஸின் மரணம், கி.மு. 353.**

மாசோலாஸ் எதிர்பார்த்தபடியே யாவும் நடைபெற்றன. குடியாட்சி முறை அரசாங்கங்களை ஒழித்துக்கட்டுவதில் இவன் ஆலிக்கார்க் கொள்கையினருக்கு ஆதரவளித்து வந்தான். அவன் அவர்களுக்குக்காரியன்காவற்படைகளைக் கொடுத்து உதவிபுரிந்தான். ஆனால் தான் உயிரோடிருந்து தன் பேரரசை வளர்க்கும் வாய்ப்பு அவனுக்குக் கிடைக்கவில்லை. ஏதென்ஸுக்கு எதிராக அவன் எடுத்துக் கொண்ட கொள்கை வெற்றி பெற்ற சிறிது காலத்திற்குள் அவன் இறந்து விட்டான. அவன் இறக்கும்போது தன்னுடைய மனைவியைத் தன் வாரிசாக நியமித்து விட்டிறந்தான். அவனுடைய மனைவி ஆர்ட்டெமிஸியா அரசுகட்டில் ஏறினாள். அப்போது ரோட்ஸிலுள்ள குடியாட்சி முறைக் கொள்கையினர் விடுதலை

[1] மொழிபெயர்ப்பினால் ஏற்பட்ட தவறுதலின் காரணமாக இந்த யுத்தம் சமூக யுத்தமென அழைக்கப்படுகிறது. வரலாறுகளில், லத்தின் மொழி பெயர்ப்பினாலுண்டாகும் தவறுதல்கள் மறையக் கூடும்.

பெற விரும்பி ஏதென்ஸின் உதவியை நாடினார்கள். அப்பொழுது அத்தீனிய சபையில் சமாதானத்தை விரும்பும் அரசியல் அறிஞர் களிருந்தார்கள். அவர்களின் அறிவுரையின் காரணமாக ஏதென்ஸ் ரோட்ஸுக்கு உதவிபுரிய மறுத்து விட்டது. ஆனால் அத்தீனிய சபையில் டெமாஸ்த்தனிஸ் ஒருவன் மட்டும் ரோட்ஸுக்கு உதவி புரிய வேண்டுமென்று கூறினான். குடியாட்சி முறைக் கொள்கையைச் ஆலிக்கார்க் முறை அரசியல் கொள்கையிலிருந்து பாதுகாக்கச் சந்தர்ப்பம் ஏற்படும்போது அதை மறுத்துவிடக் கூடாதென்று அவன் வற்புறுத்திப் பேசினான். சிறிது காலத்தில் ஆர்ட்டெமிஸியா ரோட்டஸ் தீவைத் தன் ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வந்து விட்டாள்.

**பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் மாசோலஸ் சிலையும் ஆர்ட்டெமிஸியாவின் சிலையும்; மாசோலஸின் கல்லறை; பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் சிற்பக்கலை; மசோலியத்தின் ஆரம்பம்.**

ஹெக்காட்டோம்னஸ் குடும்பத்தினர் காரியாவை இருபதாண்டு காலம் ஆண்டு வந்தார்கள். கடைசியில் அலெக்ஸாந்தர் அந் நாட்டைக் கைப்பற்றினான். மாசோல மன்னன் சிறப்பான நிர்வாகத்தில் காரியாவின் ஆதிக்கம் பரவ ஆரம்பித்தது. ஆனால் அதனுடைய பேரரசு விரிவடையவில்லை. மாசோலாஸ் மன்னனுடைய தனிப்பட்ட பண்பைப் பற்றி நாம் அறிந்து கொள்ள முடியா விட்டாலும், அவனுடைய வெளித்தோற்றத்தையாவது நாம் தெரிந்துகொள்ள ஆதாரமிருக்கிறது. அவனுடைய உருவச்சிலையும் சிரசற்ற அவனுடைய மனைவியின் உருவச் சிலையும் பிரிட்டிஷ் பொருட்காட்சி சாலையில் பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. அவனுடைய உருவச் சிலை மிகப் பெரிய உருவச் சிலையாக இருக்கிறது. அவன் மரணத்திற்குப் பின் அது செய்யப்பட்டது. அவ்வுருவச்சிலை அவனை ஒரு காரியனென்றும் கிரேக்கனல்லனென்றும் குறிப்பிடுகிறது. அவனுடைய நீண்ட தலைமுடி நெற்றியிலிருந்து கழுத்து வரையில் நன்ருகக் கோதிக்களைந்து விடப்பட்டிருக்கிறது. இந்த உருவச்சிலை அவனுடைய கல்லறையில் நிறுத்தப் பட்டிருந்தது. அக்கல்லறையை அவன் உயிரோடிருக்கும்போதே கட்ட ஆரம்பித்தான். அவனுடைய மரணத்திற்குப் பின் அவன் மனைவி அவ்வேலையைப் பூர்த்தி செய்தாள். அவனுடைய கல்லறை வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்லுகிறது. அக்கல்லறை லெலிஜெஸ் குடும்பத்தினரின் கல்லறைக்கு ஒப்பாக இருக்கிறது. லெலிஜெஸ் குடும்ப கல்லறை வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காலத்தில் கட்டப்பட்டதாகும். மாசோலஸத்தின் கல்லறையின் முறை வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காலத்து முறை திரும்ப உயிர்

பெற்றெழுந்ததாகத் தோற்ற மளிக்கிறது. அக் கல்லறை ஹாலிகார்னஸியஸ் தீபகற்பத்திலிருக்கிறது. துறைமுகத்திற்கு மேலே அது கட்டப்பட்டுள்ளது. கடலிலிருந்து கரையை நோக்கிப் பார்ப்பவர்கள் அக் கல்லறையையும் பார்க்கக்கூடும். கல்லறைக்கு மேலே கல்லாலான ஓர் ரதம் நிறுத்தப்பட்டிருந்தது. அக்காலத்தில் வாழ்ந்த நான்கு சிற்பிகள் அக் கல்லறையைத் தங்களுடைய கலைத் திறனால் அலங்கரித்துள்ளார்கள். ஸ்க்கோப்பாஸ் (Scopas) என்பவன் அந் நான்கு சிற்பிகளில் ஒருவனாக இருந்தான். சிறப்பு வய்ந்த தங்கள் கலையின் சிதைவுகளே காரியர்கள் மனித இனத்திற்கு விட்டுச் சென்ற செல்வங்களாகும். இப்புராதனச் சிதைவுளோடு ஒரு புதிய சொல்லையும் அவர்கள் நமக்கு அளித்துள்ளார்கள். ஐரோப்பிய மொழிகளில் 'மாசோலியம்' என்ற சொல் அவர்கள் மூலமாகக் கிடைத்ததாகும்.

## 4. போஸியர்களும் புனித போரும்

வடக்குகிரீஸில் போஸிஸ் என்ற நாடு இக்காலத்தில் ஓர் வல்லரசு நாடாக விளங்கிற்று. அதனுடைய எழுச்சி ஓர் மின்னலைப் போல் தோன்றி மறைந்தது. அவ்வல்லரசு அற்பாயுளையுடையதாக யிருந்தது. பேரே வல்லரசாவதற்கு ஜேஸன் காரணமாகயிருந்தான். எப்பாமினான்டஸ் தலைமையில் தீப்ஸ் வல்லரசாக விளங்கிற்று. அவர்களைப் போலவே ஓனோமார்ச்சஸ் என்பவன் போஸிஸ் நாட்டை ஒரு வல்லரசு நாடாக்கினான்.

### போஸிஸ் நாட்டின் நிலைமை

போஸிஸ், ஒரு வல்லரசு நாடாவதற்கு அதன் நிராசைக் காரணமாக இருக்கவில்லை. அந்நாடு பகைவர்களால் சூழப்பட்டு நெருக்குண்டபடியால், அந்நாடு உயிருக்காகப் போராடிக் கொண்டிருந்தது. நீண்டநாள் போராட்டம் அந் நாட்டு மக்களை வலுவுள்ளவர்களாக்கிற்று. போஸியர்கள் போயிஷியன் கூட்டமைப்பில் சேர்ந்து உயிர் வாழ விரும்பியலலை. லூக்ட்ராயுத்தகளத்திற்குப் பின் போஸிஸ் போயிஷியன் கூட்டமைப்பில் வலுக் கட்டாமாகச் சேர்க்கப்பட்டது. எப்பாமினாண்டஸ் மரணத்திற்குப் பின் போஸிஸ் போயிஷியன் கூட்டமைப்பிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டது. போஸிஸ் நாட்டின் சுதந்திரம் தீப்ஸ் நாட்டிற்கு ஓர் இக்கட்டாக யிருந்தது. கிரேக்க நாட்டின் மேற்குப் பாகத்திலுள்ள நாட்டினர் அடிக்கடி போஸிஸ் நாட்டிற்கு வருவதும் அவர்களுடைய சுதந்திரத் திற்கு ஆதரவளிப்பதுமாயிருந்தது. ஆகவே தீப்ஸ் நகர வாசிகள் மேற்கத்திய கிரேக்க நாடுகளுக்கு ஓர் பாடம் கற்றுக் கொடுக்க விரும்பினார்கள் அவர்கள் வடக்கிலுள்ள கிரேக்க நகரங்களை ஆம்பிக்ட்டி

யோனிக் கழகத்தின் மூலமாக ஐக்கியப் படுத்தினர்கள். இந்தக் கழகம் நூருண்டு காலமாக மறைந்து கிடைந்தது. இப்போது அதற்குப் புத்துயிர் அளிக்கப்பட்டது. லூக்ட்ரா யுத்தகளத்தற்குப் பின் இக்கழகத்தின் கூட்டமொன்று நடந்தது. அக் கூட்டத்தில், சமாதான காலத்தில் ஸ்பார்ட்டா காட்மேயைக் கைப்பற்றியது ஓர் பெரும் குற்றமெனத் தீப்ஸ்நகர வாசிகள் எடுத்துக்கூறினர்கள். அக் கழகத்தார் ஸ்பார்ட்டாவிற்கு 500 தாலந்து அபராதத் தண்டனையளித் தார்கள். ஆனல் ஸ்பார்ட்டாவிடமிருந்து 500 தாலந்தையும் அவர் களால் வசூலிக்க முடியவில்லை. ஆனல் டெல்பிக் ஆலயத்தின் சங்கத்திலிருந்து ஸ்பார்ட்டாவை ஒதுக்கி விட்டார்கள். தெஸ்ஸா லியரும், லோக்கிரியரும், போஸிஸ் நாட்டின் பகைவர்கள். அவர்கள் போஸிஸ் நாட்டிற்கும் அதே தண்டனையைக் கொடுக்க வேண்டு மென்று வற்புறுத்திக் கூறினர்கள். தண்டனை விதிக்கப்பட்டது. அபராதத் தொகையை போஸிஸ் நாட்டிலுள்ள செல்வந்தர்களிடம் வசூலிக்க ஆரம்பித்து விட்டார்கள். அபராதத் தொகை கட்ட முடியாதவர்களின் நிலங்கள் பறிமுதல் செய்யப்பட வேண்டு மென்றும், அவற்றை டெல்பியன் தெய்வத்திற்குச் சொந்தமாக்கி விட வேண்டுமென்றும் தீர்மானமாயிற்று. அவர்களுடைய இந்தத் தீர்மானம் ஓர் கற்பலகையில் எழுதப்பட்டு டெல்பியன் ஆலயத்தில் பதிக்கப்பட்டது.

**பிலோமேலஸ், கி.மு. 450; போஸியர்கள் டெல்பியைக் கைப் பற்றுதல்.**

குற்றவாளிகளின் பட்டியலில் சேர்க்கப்பட்ட போஸியத் தலைவர்கள் தீப்ஸ் விதித்த தண்டனையை எதிர்க்க ஆரம்பித்தார்கள். போஸிய நகரங்கள் ஒன்றுசேர்ந்து தங்களுக்கு ஏற்பட்ட பொதுவான ஆபத்திலிருந்து பாதுகாத்துக்கொள்ளும் வழியைத்தேட வேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. அவர்கள், தங்களையும், தங்களுடைய உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ள முற்பட்டார்கள்; போஸிய நகரங்களை ஐக்கியப் படுத்த முன் வந்து தலைவர்களில் பிலோமேலஸ் என்பவன் சிறந்தவனுவான். அவன் லேடோன் (Ledon) நகரத்தில் செல்வந்தனுக இருந்தான். கூலிப்படையின் உதவியைக் கொண்டு பேஸியாவைக் காப்பாற்ற வேண்டு மெனத் திட்டமிட்டான். போஸியர், லோக்கியர், தெஸ்ஸாலியர், ஆகியோர் போஸியாவின் பகைவர்களாக இருந்தார்கள். டெல்பியிலுள்ள ஆலயத்தின் பொன்னும், வெள்ளியும், பகைவர்களால் தங்களை ஒடுக்குவதற்குப் பயன்படுத்தப் படுவதால் டெல்பியைக் கைப்பற்ற வேண்டுமென்று பிலோமேலஸ் (Philomelus) கூறினன். டெல்பியைக் கைப்பற்று வதின் உண்மையான காரணத்தையும் அவன் வெளிப்படையாகக் கூறவில்லை. மலைப் பிரதேசமாகிய பைதோ மீது போஸியர்க்குள்ள

உரிமையை விளங்குவதே இதற்குப் போதுமானதாக இருந்தது. ஹோமருடைய புனித புத்தகத்தில் பைதோ (Pytho) நகரம் போஸியர்களுக்குச் சொந்தமென்று குறிப்பிட்டிருக்கிறது.[1] பிலோமேலஸ் அதைச் சுட்டிக்காட்டினான். டெல்பியர்களை ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தில் சிக்கவைக்கப்பட்டுள்ளதையும், அவன் குறிப்பிட்டான். பிலோமேலஸ் கொண்டு வந்த தீர்மானத்தை எல்லோரும் அங்கீகரித்தார்கள். அவனைப் படைத் தலைவனாக்கி, முழு அதிகாரமும் கொடுத்தார்கள். அவன் ஸ்பார்ட்டாவுக்குச் சென்றான். ஸ்பார்ட்டா போஸியாவைப் போலவே தீப்ஸின் பகை நாடாக இருந்தது. ஸ்பார்ட்டாவிற்கு விதித்த 500 தாலந்து அபராதத் தொகையை, தீப்ஸ் போஸியாவிற்கும் விதித்திருந்தது. ஸ்பார்ட்டா போஸியாவைப்போல் சமநிலையி லுள்ள நாடானபடியால் பிலோமேலஸ் முதலில் ஸ்பார்ட்டாவிற்குச் சென்றான். ஆர்ச்சிடாமஸ் மன்னன் போஸியர்களுடைய திட்டத்தை வரவேற்றான். ஆனால் ஸ்பார்ட்டா இப்போது இருதலைக்கொள்ளி எறும்பைப் போலாயிற்று. இதுவரையில் ஸ்பார்ட்டா டெல்பியை ஆதரித்த நாடாக விளங்கிற்று. பெரிக்கிளிஸ் காலத்தில் போஸி யர்கள் அத்தீனியர்களின் உதவிப்பெற்று டெல்பியைக் கைப்பற்றி னார்கள். அப்போது ஸ்பார்ட்டா குறுக்கிட்டு போஸியர்களை விரட்டியடித்து அங்குள்ள ஆலயத்தை டெல்பியர்கள் கையில் ஒப்படைத்தது. ஆகவே நேரடியாக போஸியாவின் கொள்கையை ஆதரிக்க ஸ்பார்ட்டா முன்வர வில்லை. ஆனால் மறைமுகமாக பிலோமேலஸுக்கு ஸ்பார்ட்டா ஆதரவளித்தது. ஸ்பார்ட்டன் மன்னன் ஆர்ச்சிடாமஸ் பிலோமேலஸுக்குப் பதினைந்து தாலந்து பண உதவியளித்தான். பிலோமேலஸ், மேற்கொண்டு தன் சொந்தப் பணத்தினின்று பதினைந்து தாலந்து சேர்த்து ஒரு படையைத் தயாரித்தான். அப் படையைக்கொண்டு அவன் டெல்பியைக் கைப்பற்றினான். டெல்பி ஆம்பிஸ்ஸா (Amphissa) விலுள்ள லோக்கிரியர்களைப் படை உதவி கேட்டிருந்தது. லோக்கிரி யர்களின் உதவி தாமதித்துவந்தது. அதற்குள் டெல்பி போஸியர் களால் கைப்பற்றப்பட்டது. பிலோமேலஸ், லோக்கிரியரின் படை யைத்தோற்கடித்துப் பின் வாங்கும்படி செய்தான். பிலோமேலஸ் டெல்பி நகரவாசிகளுக்கு எவ்விதமான தீங்கும் செய்யவில்லை. ஆனால் போஸியர்களுடைய பகைவர்களாகிய தொராஸிடே (Thracidae) இனத்தவர்களை (clan) மட்டும் ஆண் பெண் எனப் பாராமல் எல்லோரையும் கொன்றான்.

பிலோமேலஸ் தன்னுடைய செய்கையை மற்ற கிரேக்க நாடுகள் ஆதரிக்கவேண்டுமென விரும்பினான். அவன் ரகசியமாக

[1] ஹோமருடைய பட்டியலில் பைதோ நகரம் இரு போஸியத் தலைவர்களுக்குச் சொந்தமெனக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஸ்பார்ட்டாவிடம் அனுதாபம் கொண்டிருந்தான். அவன் ஏதென் ஸின் நட்பைப்பெற விரும்பினான். ஏதென்ஸ் எப்பொழுதும் போஸியாவுடன் நட்புகொண்டிருந்தது. இப்போது அது தீப்ஸின் பகை நாடாக விளங்கிற்று. பிலோமேலஸ் அரசியல் தூதுவர்களை ஸ்பார்ட்டா, ஏதென்ஸ், தீப்ஸ் முதலிய நாடுகளுக்கு அனுப்பினான். டெல்பி போஸியாவிற்குச் சொந்தமென்றும் அதைப் பகைவர்களின் சூழ்ச்சியின் காரணமாக இழந்துவிட்டதாகவும், மறுபடியும் தன்னுடைய உரிமையை நிலைநாட்ட அதைக் கைப்பற்றியதாகவும், அரசியல் தூதுவர்கள் தாங்கள் சென்ற நாடுகளிலெல்லாம் கூறினார்கள். மேலும் அவர்கள் டெல்பியின் உடைமையை அபகரிப்பது போஸியர்களின் எண்ணமன்றென்றும், ஆலயத்தின் உடைமைகள் நிறுத்தும் எண்ணியும் கணக்கிடப்படுமென்றும் அவ்வுடைமைகளைப் பாதுக்கும் பொறுப்பைத்தவிர அவற்றை அனுப பவிக்கும் உரிமை போஸியாவிற்கில்லை என்றும் அறிவித்தார்கள். அகில கிரேக்கர்களின் ஆலயத்தை நிர்வகிக்கும் முறையில் போஸியர்கள் கிரேக்கர்களுக்குப் பொறுப்பு வாய்ந்தவர்களென்றும் கூறினார்கள். ஸ்பார்ட்டா ஒதுங்கி இருக்கும் பழக்கத்தை விட்டு, போஸியாவிற்கு உதவிபுரிய முன்வந்தது. ஏதென்ஸும் சில சிறிய நாடுகளும் போஸியாவிற்கு உதவிபுரிவதாக வாக்களித்தன. தீப்ஸ் நாட்டினரும் அதனுடைய ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தினரும் ஒன்று சேர்ந்து போஸியாவின் மீது போர் தொடுக்க ஆரம்பித் தனர்.

**பிலோ மேலஸ், டெல்பிக்கு அரண் அமைத்தல்; லோக்ரியர் களைத் தோல்வியுறச்செய்தல்.**

பிலோமேலஸ் டெல்பியிலுள்ள ஆலயத்தைச் சுற்றிலும் பாது காப்பான மதிற்சுவர் ஒன்றை எழுப்பினான். அவன் ஐயாயிரம் போர் வீரர்களைக்கொண்ட ஒரு படையைத் தயாரித்தான். அவன் இந்தப் படையைக்கொண்டு பகைவர்களைச் சாமாளித்துவிடக் கூடுமென எண்ணினான். அப்பொல்லோ தெய்வத்தின் வாக்கைக் கோரி வருகின்ற பழக்கம் தொடர்ந்து நடைபெறுமாறு செய்தான். அப்பொல்லோ தெய்வம் தன்னுடைய செய்கையை ஏற்றுக்கொண் டுள்ளதாவென்பதையும் தெரிந்துகொள்ள விரும்பினான். ஆனால் குறிசொல்லுகிற பெண் அவனுடைய விருப்பத்திற்கிணங்க மறுத்து விட்டாள். சூலத்தின் மீது உட்கார்ந்து சாம்பிராணிப் புகையைச் சுவாசித்தவுடனே, அவள் அப்பொல்லோ தெய்வத்தினால் ஆட்கொள்ளப்படுகிறாளென்றும், அந்நிலையில் அவள் பேசும் சொற்கள் அவளுக்குச் சொந்தமானவையல்லவென்றும், அவை அப்பொல்லோவின் வார்த்தைகள் என்றும் கிரேக்கர்கள் நம்பி வந்தார்கள். பிலோமேலஸ் தெய்வ மொழியை நாடினான். பூசாரிப்

பெண் தெய்வ வாக்களிக்க மறுத்தாள். சூலத்தின் மீது அவளை உட்காரவைக்கும்படி அவன் ஆணையிட்டான். அதற்கஞ்சிய அவள் அவன் என்ன செய்ய விரும்புகிருனே அதைச்செய்யட்டும் என்று கூற, இவ் வார்த்தைகளை அவன் தெய்வ மொழியென்றும், தான் செய்வதற்கெல்லாம் அப்பொல்லோவின் ஆதரவு இருக்கிறதென்றும் நம்பினுன். அவன் தன் பணியைச் செவ்வனே ஆற்றுதற்கும், போர்வீரர்களுக்கு ஊதியம் கொடுக்கவும் பணமின்றித் தவித்தான். தன்னுல் முடிந்தமட்டும் கோயில் சொத்தில் கைவைப்பதைவிட்டு விட்டான். டெல்பியிலுள்ள செல்வந்தர்களிடம் அவன் பணம் வசூலித்தான். அவனுக்கும், லோக்கிரியர்களுக்கும், பேட்ரியாட் மலையுச்சிக்கருகில், கடும்போர் நடைபெற்றது. பிலோமேலஸ் லோக்கிரியர்களைத் தோற்கடித்தான். லோக்கிரியர்களுக்குப் பலத்த உயிர்ச்சேதம் ஏற்பட்டது. சிலர் மலையின் விளிம்பிற்கு விரட்டப் பட்டு, பின் அங்கிருந்து கீழே உருண்டு விழுந்து இறந் தனர்.

**தீப்ஸ் நாட்டினர் போருக்கு ஆயத்தமாதல்; நெயோன் போர்க் களம், கி.மு. 354. பிலோமேலஸின் மரணம்.**

பிலோமேலஸ் அடைந்த வெற்றியைக் கண்ட தீப்ஸ் நாட்டு மக்கள் உடனடியாக போஸியர்கள் மீது யுத்தம் தொடுக்கத் தீர்மானித்துவிட்டார்கள். ஆம்பிக்ட்டியோனிக் கழகம் தெர்மா பைலேயில் கூடிற்று. ஆம்பிக்ட் டியோனிக்கழகத்தின் படை போஸியர் களைத் தாக்கி டெல்பிக் ஆலயத்தை அவர்களிடமிருந்து மீட்டு விடுவதென்று தீர்மானித்துவிட்டது. பிலோமேலஸிடமிருந்த படை, லோக்கிரியர்களை மட்டும் சமாளிக்கப் போதுமானதாக இருந்ததே தவிர கழகத்தின் படையைச் சமாளிக்கக்கூடிய தாக இல்லை. போஸியாவைக் காப்பாற்ற இருவழிகள் மட்டு மிருந்தன. ஒன்று ஏதென்ஸ் அல்லது ஸ்பார்ட்டாவின் உதவி அல்லது இரு நாடுகளின் படையுதவி மட்டும் போஸியாவைக் காப்பாற்றக்கூடும். மற்றென்று கூலிப்படையினரைப் பெருவாரி யாகச் சேர்த்துக்கொள்வதன் மூலம் போஸியாவைக் காப்பாற்றக் கூடும். ஏதென்ஸ் அல்லது ஸ்ப்பார்டா அவனுக்கு உடனடியாக உதவியளிக்க முன்வருவதாகத் தோன்றவில்லை. ஆகையால் அவன் அந் நாடுகளை நம்புவதில் பயனில்லை என்பதை உணர்ந்தான். அவன் இரண்டாவது வழியைப் பின்பற்றுவதென்று தீர்மானித்து விட்டான். ஆனுல் அதற்குப் பெருந்தொகை தேவையாக இருந்தது. அப் பெருந்தொகையை, போஸிய நகரங்கள் கொடுத் தாகவேண்டும் அல்லது டெல்பியிலுள்ள செல்வந்தர்கள் கொடுத் தாக வேண்டும். அவ்விரண்டு வழிகளிலுமிருந்து தேவையான பணம் கிடைக்கவில்லை. கோயில் சொத்து ஒன்றுமட்டும் அவனுடைய பண நெருக்கடியைத் தீர்க்கக்கூடும். கோயில்

சொத்தில் கைவைப்பதில் அவன் ஆரம்பத்தில் அஞ்சினுன். நெருக் கடியைச் சமாளிக்கப் போதுமான பணத்தை அப்பொல்லோ தெய்வத் தினிடமிருந்து கடனுகப் பெற்றுக்கொண்டான். கடன் தொகையும் போதாமலிருந்தது. பணநெருக்கடி அதிகரித்தது. கோயில் சொத்தைக் களவாடக் கூடாதென்ற அவனுடைய உணர்ச்சியும் மழுங்கிவிட்டது. இப்போது அவன் கோயில் சொத்தை, தன்னுடைய சொந்தச் சொத்தைப்போல் தாராளமாக உபயோகிக்க ஆரம்பித்துவிட்டான். புனித பாத்திரங்களும் விலையுயர்ந்த பொருள்களும் போர் நெருக்கடிக்காக உபயோகிக்கப்பட்டன. அவனுடைய படையிலுள்ள போர் வீரர்களுக்குச் சம்பளம் அதிக மாகக் கொடுக்கப்பட்டது. ஆகையால் பலர் அவனுடைய படையில் சேர்ந்தார்கள். இப்போது அவன் 10,000 போர் வீரர்களுக்குப் படைத் தலைவனுகிவிட்டான். போர் வீரர்களோ பணத்திற்காகக் கவலைப்பட்டார்களே தவிர, அது எங்கிருந்து எப்படி வந்த தென்பதைப் பற்றிக் கவலைப்படவில்லை. முடிவில்லாப் போர் ஏற் பட்டது. முடிவில் பார்னுஸஸ் மலையின் வட பகுதியில் நடந்த போரில் போஸியர்கள் படு தோல்வியடைந்தார்கள். பிலோ மேலஸ் மெய்ம்மறந்து சண்டை செய்தபடியால் அவனுக்கு உடலெல் லாம் காயங்கள் ஏற்பட்டன. பகைவர் தன்னைக் கைது செய்வதை அவன் விரும்பவில்லை. அவன் தற்கொலை செய்து கொள்வதின் மூலமாகத் தன்மானத்தைக் காப்பாற்றிக்கொள்ள விரும்பினுன். ஆகையால் மலையின் உச்சியிலிருந்து கீழேவிழுந்து தன் உயிரை மாய்த்துக்கொண்டான்.

### ஓனே மார்ச்சஸ் பிலோமேமேலஸுக்குப் பின் தலைவனுதல்

பிலோமேலஸ் மாண்டதால் போஸியர்கள் அழிந்துவிட்டதாகத் தீபானியர் நினைத்தார்கள். வெற்றியடையந்த கர்வத்தின் காரண மாக அவர்கள் ஓய்வெடுத்துக் கொண்டார்கள். ஆனுல் அவர்கள் நினைத்ததைப்போல் ஒன்றும் நடக்கவில்லை, எலேட்டே நாட்டா னுகிய ஓனே மார்ச்சஸ் என்பவன் பிலோமேலஸுடன் போர்க் களங்களில் ஒத்துழைத்தவன். பிலோமேலஸைப் போலவே இவனும் ஒரு சிறந்தப் படைத் தலைவன். பகைவர்கள் யுத்தத்தைத் தொடர்ந்து நடத்தாமல் திரும்பிப்போய்க் கொண்டிருந்தது அவனுக்கு ஓர் நல்ல வாய்ப்பையளித்தது. அவ்வாய்ப்பைப் பயன் படுத்தி அவன் தன்னுடைய படையைச் சீர் செய்தான். புதிய படையைத் திரட்டினுன். அவன் கோயிலிலிருந்த தங்க ஆபர ணங்கள் வெள்ளி ஆபரணங்கள், தங்கப் பாத்திரங்கள், வெள்ளிப் பாத்திரங்கள் முதலியவைகளை உருக்கி நாணயங்களாக்கினுன். செம்பு, பித்தளை, இரும்புப் பாத்திரங்களைக் கொண்டு போர்க்கருவி களைச் செய்தான். அவன் மேற்கிலுள்ள ஆம்பிஸ்ஸா லோக்கிரியர்

களைத் தாக்கிச் சரணடையும்படி செய்தான். வடக்கிலிருந்த டோரிஸுக்கள் அவனிடம் சரணமடைந்தார்கள். அவன் ஓயட்டா மலையின் கணவாய்களைக் கடந்து தெர்மாபைலேயைக் கைப்பற்றினான். கணவாயின் கிழக்கு வாயிலண்டையிருந்த லோக்கிரியான் தோரோனியோனை வென்றான். கிழக்கிலிருந்த ஓர்க்கோமேனஸ் (Orchomenus) நகரைக் கைப்பற்றி, அதைப் பத்தாண்டுகளுக்கு முன் தீபானியரால் நாடு கடத்தப்பட்ட அந் நகரவாசிகளுக்குக் கொடுத்தான்.

இக் காலத்தில் தீபானியர்களுக்குப் பணநெருக்கடி ஏற்பட்டது. பிலிப் மன்னனுக்குக் கிடைத்தைப்போல் பொன்சுரங்கம் இவர்களுக்குக் கிடைக்கவில்லை. போஸியர்களுக்குச் செல்வம் நிறைந்த ஓர் ஆலயம் கிடைத்ததைப்போல் இவர்களுக்கு ஓர் ஆலயமும் கிடைக்கவில்லை. ஆகையால் புதிய முறையில் பொருளீட்ட ஆரம்பித்தார்கள். அவர்கள் தங்களுடைய படையை அந்நிய நாட்டிற்கு அனுப்பி, அவர்களுக்குப் பணி செய்வதின் மூலம் கிடைக்கும் பொருளைக்கொண்டு தங்களுடைய கருவூலத்தை நிரப்பத் தீர்மானித்தனர். இம்முறையின்மூலம் ஏதென்ஸும், ஸ்பார்ட்டாவும் ஏற்கெனவே பொருள்தேட ஆரம்பித்து விட்டன. அத்தீனிய சாரெஸ், ஆர்ட்டாபாஸஸுக்கு வெற்றியைக் கொண்டு வந்தான். அதேபோல் பாம்மேனஸ் தலைமையில் சென்ற தீபன் படையும் ஆர்ட்பாஸஸுக்கு வெற்றிதேடித் தந்தது. ஆனால் ஆர்ட்டாபாஸஸ் பாம்மேனஸின் மீது (Pammenes) ஐயங்கொண்டு அவனைச் சிறையிலடைத்தான்.

ஓனோமார்ச்சஸ் டெல்பியின் பொன்னைக் கொண்டு பல அரிய காரியங்களைச் செய்தான். போரைத் தொடர்ந்து நடத்தக் கோயில் சொத்து அவனுக்கு அனுகூலமாக இருந்தது. பேரேயின் சர்வாதிகாரிகளின் நட்பை விலை கொடுத்து வாங்கவும் அது அனுகூலமாக இருந்தது. இக் கொள்கையின் காரணமாக அவன் தெஸ்ஸாலியிலிருந்த ஒற்றுமையைக் குலைத்து, அதை இரண்டாகப் பிரித்தான். இப்போது தெஸ்ஸாலிக்கும் பேரே நாட்டிற்கும் பகை ஏற்பட்டது. இந்நிலையில் தெஸ்ஸாலி தீபஸ் நகருடன் சேர்ந்து போஸியாவைத் தாக்குவதில் ஒத்துழைக்க முடியவில்லை. மேலும் தெஸ்ஸாலி கடினமாக நெருக்கப்பட்டது. ஆகையால் தெஸ்ஸாலி வடக்கிலுள்ள மாசிடோனியா நாட்டின் உதவியை நாடிற்று. பிலிப் மன்னன் ஒலிம்பஸ் மலைக்குத் தெற்கிலுள்ள நாடுகளின் விவகாரங்களில் தலையிட்டதால் புனித யுத்தத்தின் போக்கில் மாறுதல் ஏற்பட்டது.

**பிலிப் மெதோனைக் கைப்பற்றுதல்; கி.மு. 353; அவன் தெஸ்ஸாலியில் புகுதல்; போஸியன் படையை முறியடித்தல்; பிலிப் இரண்டு போர்க் களங்களில் தோல்வியடைதல்; ஓனோமார்ச்சஸ் தெஸ்ஸாலியிலிருந்து அவனை வாட்டியடித்தல்.**

பிலிப், தெர்மேயிக் குடாவிலிருந்த மெதோனை வென்றதினுல் ஏதென்ஸ் அங்கே தனக்குக் கடைசியாகயிருந்த நேச நாட்டை இழக்க நேரிட்டது. மெதோனைக் காப்பாற்ற ஏதென்ஸ் அனுப்பிய படையுதவி பிந்தி வந்தமையால் மெதோன் வீழ்ச்சியுற்றது. தெஸ்ஸாலியர் தங்கள் படைக்குத் தலைமைத் தாங்க வேண்டுமென பிலிப் மன்னனைக் கேட்டனர். அதற்கு உடனே அவன் இணங்கினுன். பிலிப் மன்னன் தன் ஆதிக்கத்தைத் தெற்கில் பரவச் செய்யவும், கிரீஸில் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட அடிக்கல் நாட்டவும் அச்சூழ்நிலை அவனுக்கு ஒரு சிறந்தவாய்ப்பாக இருந்தது. தெஸ்ஸாலியக் கூட்டமைப்பு நாடுகளின் படைகளுக்கு பிலிப் மன்னன் தலைமை தாங்கிச் சென்ருன். பேரே நாட்டு லைக்கோப்ரோனுக்கு பிலிப் மன்னனை எதிர்த்துப் போரிடும் ஆற்றலில்லை. போஸியர்கள் முன்பு பொன் கொடுத்து அவனுடைய நட்பை விலைக்கு வாங்கினுர்கள். இப்பொது அவனுக்கு அவர்கள் படையுதவியளிக்க நேர்ந்தது. போஸியர்கள் இப்போது அவனுக்கு உதவியளித்தே தீர வேண்டும். ஓனோமார்ச்சஸ் அவனுக்கு உதவி புரிய 7000 பேர் கொண்ட படைக்கு அவன் சகோதரன் பேயல்லஸ் தலைமை தாங்கிச் சென்ருன். பிலிப் மன்னன் பேயல்லஸைத் தோற்கடித்து தெஸ்ஸாலியிலிருந்து துரத்தி விட்டான். அப்பொழுது ஓனோமார்ச்சஸ் 20,000 போர் வீரர்களுடன் பிலிப் மன்னனை தெஸ்ஸாலிய போர்க்களத்தில் சந்திக்கப் புறப்பட்டான். அவன் மாசிடோனியப் படையை இரண்டு களங்களில் தோற்கடித்து, மிகுந்த உயிர்ச் சேதத்தை விளைவித்தான். பிலிப் மன்னன் வேறுவழியின்றி மாசிடோனியாவிற்குத் திரும்பிச்செல்லும் படியான நிலையேற்பட்டது. ஓனோமார்ச்சஸ், தெஸ்ஸாலியை லைக்கோபோரோனிடம் ஒப்படைத்துவிட்டுத் திரும்பினுன்.

### போஸிய பேராதிக்கத்தின் உச்ச நிலை, கி.மு. 353-2. கோரோனியா.

இப்போது போஸியர்களின் ஆதிக்கம் உச்சநிலையை யடைந்தது. அவர்களுடைய அதிகாரம் கொரிந்திய விரிகுடாவின் கடற்கரைகளிலிருந்து ஒலிம்பஸ் மலைச் சரிவு வரையில் பரவியது. தெர்மாபைலே கணவாய் போஸியர்களிடமிருந்தது. அவர்களுக்கு மேற்குப் போயிஷியாவில் இரண்டு காவல் நிலையங்களிருந்தன. ஓர்க்கோமேனஸும் அவர்களிடமிருந்தது. தெஸ்ஸாலிய படை எடுப்பிற்குப்பின் கோரோனியாவை அவர்கள் வென்ருர்கள். இவை யாவும் போஸியர்களுக்கு வேரெருரு காலத்தில் கிடைத்திருக்குமேயானுல், போஸியோவின் வல்லரசு நீண்டநாள் நிலைத்திருக்கும். அவர்கள் தலைவனுடைய பெயரும் அழியாதிருந்திருக்கும். ஆனுல் ஓனோமார்ச்சஸுக்கு போராத காலம் வந்துவிட்டது. அவனும் அவன் நாட்டினரும் இதைவிடப் பெரிய நாட்டினராலும், அவர்க

ளுடைய தலைவனாலும் தோற்கடிப்பட்டார்கள். மீண்டும் அவர்கள் தலைதூக்க முடியாத நிலைமை ஏற்பட்டுவிட்டது.

### பிலிப் போஸியர்களை தெஸ்ஸாலியிலிருந்து விரட்டியடித்தல்

போஸியர்களால் ஏற்பட்ட அவமானத்தைத் துடைத்தெறியப் பிலிப் மன்னன் தெஸ்ஸாலிமீது படை எடுத்து வந்தான். ஓனோமார்ச்சஸ் லைக்கோப்ரோனுக்கு உதவி செய்ய தெஸ்ஸாலிக்கு மீண்டும் புறப்பட்டான். பிலிப் மன்னன் பாகாசாயே (Pagasae) துறைமுகத்தைக் கைப்பற்றினான். அங்கு அவன் மாசிடோனிய காவற்படை ஒன்றை நிறுத்திவைத்தான். அத்துறைமுகத்தை பிலிப்பினிடமிருந்து கைப்பற்றுவது பேரே நாட்டினருக்கேயன்றி, ஏதென்ஸுக்கும் அவசியமாகத் தோன்றியது சாரஸ் தலைமையில் ஓர் அத்தீனிய கடற்படைப் போஸியர்களுக்கு உதவிபுரிய வந்தது. பாகாசாயேன் விரிகுடாவிற்கருகில் இறுதிப் போர் நடந்தது. போர்க்களத்தில் இரு கட்சிகளின் தரைப்படைகளும் எண்ணிக்கையில் சமமாக யிருந்தன. ஆனால் பிலிப் மன்னனின் குதிரைப்படை மிகவும் திறமை வாய்ந்தது. பிலிப் மன்னன் போர் முறைகளின் நுணுக்கங்களை நன்கறிந்தவன். போஸியர்களுடைய படையில் மூன்றிலொரு பங்கு அழிந்துவிட்டது. ஓனோமார்ச்சஸ் கொல்லப் பட்டான். பிலிப் பேரேயைக் கைப்பற்றினான். லைக்கோப்ரோன் நாட்டைவிட்டு விரட்டப்பட்டான். இவ்வாறு பிலிப் தெஸ்ஸா லியைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க்கொண்டு வந்தான். டெல்பியைப் போஸியர்களுடைய கையிலிருந்து விடுவிக்கும் நோக்கத்துடன் தெஸ்ஸாலியிலிருந்து தெற்கு நோக்கிப் புறப்பட்டான்.

### போஸியாவை ஈயூபூலா மீட்டது

போஸியர்களுக் கேற்பட்ட நெருக்கடியை யுணர்ந்த ஸ்பார்ட்டா அச்சேயே, ஏதென்ஸ் ஆகிய மூன்று நாடுகளும் அதற்கு உதவி செய்ய முன்வந்தன. மாசிடோனியனை தெர்மாபைலேயைக் கடக்க விடாமல் தடுப்பதே அவர்களுடைய திட்டமாக இருந்தது. ஏதென்ஸில் எபுலஸ் மக்களின் மதிப்புக்குரிய அரசியல் அறிஞனாக இருந்தான். அவன் சமாதனப் பிரியன். அவனும் மாசிடோனி யனைத் தடுத்து நிறுத்துவதில் ஊக்கம் காட்டினான். அவன் தெர்மாபைலே கணவாயைப் பாதுகாக்க ஒருபெரும் படையை நௌஸி கிளிஸ் (Nausicles) தலைமையில் அனுப்பினான். பிலிப் மன்னன் போரின் நிலைமையை நன்குணர்ந்தான். அத்தீனியர், ஸ்பார்ட் டனர் அச்சேயர்களுடைய உதவிபெற்ற போஸியர்களை இப்போது தாக்குவது மதியீனமென்பதை உணர்ந்தான். ஆகவே அவன் பகைவர்களை எதிர்த்துப் போரிடாமல் மாசிடோனியாவிற்கே திரும் பினான். பகைவர்களை எப்போது தாக்குவது. அவர்களுக்காகக்

காத்திருப்பதென்பதை பிலிப் மன்னன் நன்கறிந்தவனுனபடியால், அச் சந்தர்ப்பத்தில் போஸியர்களைத் தாக்கவில்லை. போஸியா இப்போது காப்பாற்றப்பட்டது. தனக்குத் தக்க சமயத்தில் படையுதவி யளித்த ஸ்பார்ட்டாவிற்கும், அச்சேயாவுக்கும், ஏதென்ஸுக்கும் போஸியா கடமைப்பட்டிருந்தது.

**மெகாலோபோலிஸ் ஏதென்ஸின் உதவியை நாடியது. கி.மு. 353; டெமெஸ்த்தனிஸ் மெகாலோபாலிட்டர்களுக்காக ஆற்றிய சொற்பொழிவு ; பெலப்போனிஸஸில் போர், கி.மு. 352.**

ஸ்பார்ட்டா மனத்தில் பல நோக்கங்களைக் செறித்துக்கொண்டு தான் போஸிஸுக்கு உதவியளித்தது. அது, மெஸ்ஸானியாவைத் திரும்பப் பெறவும், மெகாலோபோலிஸை அழித்துவிடவும் விரும்பியது. தன்னுடைய திட்டம் நிறைவேற தீபர்கள் தடையாக இருக்கக் கூடாதென்பதற்காகவே போஸியாவை தீப்ஸின் பகை நாடாக இருப்பதில் ஆதரவளித்து வந்தது. தெஸ்ஸாலியில் ஓனேமார்ச்சஸ் அடைந்த முதல் வெற்றி ஸ்பார்ட்டனருக்கு ஊக்கமளித்தது. அவர்கள் மெஸ்ஸானியாவைக் கைப்பற்றும் முயற்சியிலிடுபட்டுவிட்டார்கள். ஸ்பார்ட்டா போருக்கு ஆயத்தமாவதையுணர்ந்த மெகாலாபோலிஸ் ஏதென்ஸிடம் படையுதவி நாடிற்று. இக்காலத்தில் ஏதென்ஸும் ஸ்பார்ட்டாவும் சமாதானமாக வாழ்ந்து வந்தன. ஸ்ப்பார்ட்டா மிகவும் ஒடுக்கப்பட்டிருந்தது. அதன் போர் முயற்சிகள் ஏதென்ஸின் நலனைப் பாதிக்காது. ஆகவே யூபூலஸ், மெகாலாபோலிஸின் விருப்பத்திற்கிணங்க மறுத்து விட்டான். டெமெஸ்த்தனிஸைப் போன்ற நாவன்மை மிக்க சொற்பொழிவாளர், யூபூலஸின் கொள்கையை எதிர்த்தார்கள். ஸ்பார்ட்டா எப்பொழுதும் வலுவற்ற ஒரு நாடாக இருக்கவேண்டுமென்ற பழைய ஏதென்ஸ் கொள்கையை வற்புறுத்திப் பேசினர்கள். பெலப்போனீஸிய விவகாரங்களில் இப்போது தலையிடுவது சரியன்றென்று ஏதென்ஸ் உணர்ந்தது. ஸ்பார்ட்டாவுடன் தொடர்ந்து நட்பு பாராட்டியது.

பிலிப் மன்னன் தெர்மாபைலேயிலிருந்து மாசிடோனியாவிற்குத் திரும்பிச் சென்றவுடன், பெலப்போனீஸில் போர் ஆரம்பமாயிற்று. இந்த யுத்தத்தில் ஏதென்ஸ் ஒதுங்கியிருந்தது. அச்சேயா, எலிஸின் பிலியஸ், மான்டினே முதலிய நாடுகள் ஸ்பார்ட்டாவிற்குப் படையுதவியளித்தன. போஸியர்கள் ஸ்பார்ட்டாவுக்கு 3000 போர் வீரர்களை அனுப்பினர்கள். இவர்களுடைய படை மெகாலோபோலிஸின் படையைவிட எண்ணிக்கையில் சிறியதாக இருந்தது. மெஸ்ஸானியர்கள், ஆர்க்காடியர்கள், ஆர்க்கைவ்வுகள் யாவரும்

ஒன்று சேர்ந்து ஸ்பார்ட்டாவை எதிர்த்தார்கள். வெற்றி தோல்வியை, உறுதிப்படுத்தாத போர்கள் நடந்தன. அவை மெஸ்ஸானியாவையும் ஆர்க்காடியன் தலைநகரையும் காப்பாற்றின. லாசிடாமோனியர்களின் திட்டங்களை முறியடித்தன.

பாயில்லஸ், கி.மு. 350 ; பாலேகஸ்.

ஓனோமார்ச்சஸின் மரணத்திற்குப்பின் அவனுடைய சகோதரன் பாயில்லஸ் போஸியர்களின் தலைவனானான். ஆரம்பத்தில் போஸியர்கள் மேற்கு போஷியாவிலிருந்து தங்களுடைய காவல் நிலையங்களைப் பாதுகாத்து வந்தார்கள் அவர்கள் பெலப்போனிஸஸுக்கனுப்பிய காவற்படை திரும்பிவந்தது. அவர்கள் மீண்டும் ஆக்கிரமிப்பு வேலையிலீடுபட்டு,எப்பிக்னேமீடியன் லோக்ரிஸ் நாட்டைக் கைப்பற்றினார்கள். அவர்கள் நாரிஸை முற்றுகையிட்டுப் பிடித்துக்கொண்டனர். இவ்விதமாக பாயில்லஸ் ஈராண்டுக் காலம் போஸியர்களின் ஆதிக்கம் நிலைத்து நிற்கும்படி செய்தான். பிறகு கொடிய நோய் ஒன்றிற்குப் பலியானான். அவனுக்குப்பின் அவன் சகோதரன், ஓனோமார்ச்சஸுடைய மகன் பாலேகஸ், தலைவனானான். இவன் காலத்தில் போஷியர்களுடைய ஆதிக்கம் அழிய ஆரம்பித்தது. போஸியர்களுக்கும் தீபர்களுக்கும் போர் தொடர்ந்து நடந்தது. அப் போர்கள் சிறப்பு வாய்ந்தவையல்ல. ஆனால் தீபர்களுடைய அதிகாரம் மட்டும் மேலோங்கிக் கொண்டு வந்தது. அவர்கள் போஸிஸைப் பாழாக்கினர். ஆனால் போஸியர்கள் மேற்கு போயிஷியாவிலிருந்த ஆதிக்கத்தை இழந்து விடாமல் பாதுகாத்து வந்தார்கள்.

போஸிஸின் நிலைமையும் கொள்கையும்

போஸிஸ் ஓர் வல்லரசாவதற்கு இரு காரணங்களிருந்தன. டெல்பி ஆலயத்தின் செல்வமும் பணத்திற்காகப் பட்டாளத்தில் சேரும் போர் வீரர்களும், போஸிஸை ஓர் வல்லரசாக்கின. நான்காம் நூற்றாண்டிற்கு முன் கூலிக்காகப் படையில் சேரும் போர் வீரர்கள் அரிதாக இருந்ததால் போஸிஸ் அக்காலத்தில் தலை எடுத்திருக்க முடியாது. டெல்பியின் சொத்தை விரைய மாக்கியதும், கூலிப்படையைக் கொண்டு ஆதிக்கத்தை நிலைநாட்டியதும் அதற்கு இழிவைத் தேடித்தந்தது. வரலாற்று ஆசிரியர்கள் போஸியாவின் பகைவர்களுடைய வசைமாரிகளைப் பதிவு செய்துள்ளார்கள். அப்பொல்லோவின் ஆலயம் போஸியர்கள் வசமிருந்தது. கோயிலிலுள்ள புனித பொருள்கள் நடத்தை கெட்ட படைத் தலைவர்களுக்குச் சன்மானமாக அளிக்கப்பட்டன. பிலோமேலஸ் கோயிலிலுள்ள பொன்மாலையொன்றை ஒரு நடனமாதுக்குக் கொடுத்தானென்றும், பாயில்லஸ் வெள்ளிக் கோப்பை ஒன்றை ஒரு குழலூதுகிறவனுக்குக் கொடுத்தானென்றும், பல வதந்திகள்

கிளம்பின. அவர்களைப் பற்றிய வதந்திகள் மெய்யாக அல்லது பொய்யாக இருந்திருக்கலாம். இவை உண்மையாக இருக்குமானல், அக்காலப் படைத் தலைவர்களின் சிறுமையை இவற்றின் மூலமறியலாம். ஆனல் அப்பொல்லோவின் புனித ஆலயம் அவர்களுக்குச் சொந்தமானதே. இதை அவர்கள் புரானச் சான்றுகளுடன் நிரூபிக்க முடியும். அகில கிரேக்க மதிப்பைக் காப்பாற்றிக் கொள்ள அவர்கள் விரும்பினர்கள். ஆலயத்தின் பணிகள் சிறந்த முறையில் நடைபெறுவதை அவர்கள் ஆதரித்தார்கள். தெய்வ மொழியைக் கேட்கவரும் மற்றக் கிரேக்க நாட்டினருக்கு அவர்கள் தடைவிதித்ததில்லை. அவர்கள் டெல்பியைக் கிரேக்க ஆலயமாக மட்டும் கருதாமல் போஸியரின் தேச ஆலயமாகவும் கருதினர்கள். அத்தினியர்கள் தங்களுடைய நாட்டின் நலனுக்காகத் தங்களுடைய கோயில் சொத்தை வாரிவழங்கியதுண்டு. அதைப்போலவே இவர்களும் தங்களுடைய நாட்டின் நலனுக்காகக் கோயில் சொத்தைப் பயன் படுத்தினர். அவர்கள் கோயிலிலிருந்து எடுத்துக்கொள்ளப் பட்ட பொருள்களைக் கடனகக்கருதினர்கள். நாட்டில் அமைதி நிலை பெற்றதும் கோயிலிலிருந்து எடுத்த பொருட்களைத் திருப்பிக் கொடுத்து விடுவதே அவர்களுடைய நோக்கமாக இருந்தது. அதனைக் குறித்து பலர் அறியுமாறு பறை சாற்றி வந்தார்கள்.

**போஸியர் டெல்பியைக் கைபற்றிய காலத்தில் அப்பொல்லோவின் ஆலயத்திருப்பணி தடை பெறுதிருத்தல்; டெல்பியின் இரண்டாவது ஆலயம் அழிக்கப்படல்.**

ஒனேமார்ச்சஸஃம் பாயில்லஸஃம் கள்வர் அல்லரென்பதைக் காட்டக் கூடிய கல்வெட்டுக்கள் டெல்பியன் ஆலயத்தில் பதனம் பண்ணப்பட்டிருக்கின்றன. ஆல்க்மேயோனிட்ஸ் கட்டிய அப்பொல்லோவின் ஆலயம் இருபதாண்டுகளுக்கு முன் ஏற்பட்ட பூகம்பத்தின் காரணமாக இடிந்து விழுந்துவிட்டது. அதைப் புதுப்பிக்கும் வேலை உடனே ஆரம்பித்துவிட்டது. ஆனல் கோயிலை அவர்கள் உடனடியாகக் கட்டி முடிக்கவில்லை. கோயில்வேலை மெதுவாக நடந்துகொண்டிருந்தது. பிலோமேலஸ், டெல்பியின் ஆலயத்தைக் கைப்பற்றியபோது கோயிலின் வேலை முற்றுபெற வில்லை. ஆலயம் கட்டும் பணி அதற்காக நியமித்த ஒரு குழுவின் மேற்பார்வையில் நடந்து வந்தது. அக் குழுவில் ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் அங்கத்தினர்களாக இருந்தார்கள். இக் குழுவினர் ஆலயம் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்ட நிதியைக் கண்காணித்து வந்தார்கள். போஸியர்கள் டெல்பிக் ஆலயத்தை ஆக்கிரமித்துக்கொண்ட போதுகூட, ஆலயவேலையிலீடுபட்ட கழகத்தினர் தங்களுடைய பணியைத்தொடர்ந்து நடத்தி வந்தார்கள். சமாதான காலத்தில் அவர்கள் பணியாற்றியதைப் போலவே இப்போதும் பணியாற்றி வந்தார்கள்.

திறமை மிக்க கொரிந்திய சிற்பக் கலைஞர்கள் ஆலயம் கட்டுவதற்கான கற்களைத் தேர்ந்தெடுத்து அதை டெல்பிக்கு அனுப்பி வந்தார்கள். வேலையாட்களுக்கு ஒதுக்கப்பட்ட நிதியிலிருந்து வழக்கம்போல் ஊதியமளிக்கப்பட்டு வந்தது. கணக்குகள் ஒழுங்காகக் குறித்து வைக்கப்பட்டன. அவற்றில் சில இப்போதும் நமக்குக் கிடைத்திருக்கின்றன. கோயில் கட்டுகிற கழகத்தில் தீப்ஸ், தெஸ்ஸாலி போன்ற நாட்டினர் அங்கத்தினர்களாகச் சேர்ந்திருக்கவில்லை.[1] கழகக் கூட்டங்களில் டெல்பி பட்டினத்துப் பிரதிநிதிகள் தவறாமல் பங்கெடுத்து வந்தார்கள். மேயல்லஸ் லோக்ரிஸை வென்று விட்ட பின்னும், அந் நாட்டினரின் கழகக் கூட்டங்களில் பங்கெடுத்துக் கொள்வதில் தவறியதில்லை. இவ்விதமாக, போஸியர்கள் டெல்பி ஆலயத்தை ஆக்கிரமித்துக் கொண்டபோதும் கோயில் கட்டும் பணி தடையின்றி நடைபெற்றது. டோரிய நாடுகளும், ஐயோனிய நாடுகளும் ஆலயத்தின் கட்டடம் எழும்புவதை மேற்பார்வையிடுவதைத் தொடர்ந்து நடத்தி வந்தார்கள். போஸியர்களின் ஆக்கிரமிப்பு அதற்குத் தடையாக இருக்கவில்லை.

## 5. மாசிடோனிய முன்னேற்றம்

### அரிஸ்ட்டோகிராட்டிஸுக்கு எதிரான டெமெஸ்தனிஸின் சொற்பொழிவு, கி.மு. 352.

தெர்மேயிக் விரிகுடா நாடுகள், சித்திரிமோன் நதியின் முகத்துவாரத்துக்கருகிலுள்ள நாடுகள், பகாசே நதியின் பள்ளத்தாக்குகளிலுள்ள நாடுகள் முதலியன மாசிடோனிய மன்னனின் ஆதிக்கத்திலிருந்தன. அவன் இப்போது தனக்காக ஒரு கடற் படையைக் கட்டி முடித்தான். அவனுடைய கடற்படை ஏஜியான் கடலில் ஏதென்ஸுக்கு எதிரான நடவடிக்கைகளிலீடுபட்டது. ஏதென்ஸின் தானிய கப்பல்களைக் கைப்பற்றுவதில் முழுமுயற்சியோடிருந்தது. லெம்னோஸ், இம்பரோஸ், யூபோயோ முதலிய நாடுகள் ஏதென்ஸுக்கு அனுப்பிய தானியக் கப்பல்களை, மாசிடோனியா வேட்டையாடிப் பிடித்தது. அது ஒரு சமயம் அட்டிகாவின் கடற்கரை நாடுகளையும் தாக்கிற்று. ஏதென்ஸின் கவனம், ஹெல்லஸ் பாண்டையும், பொரோபோன்டிஸையும் சுற்றிலுமுள்ள நாடுகளின் மேலிருந்தது. மாசிடோனியர்கள் தெரேஸ் நாட்டை நோக்கி முன்னேறுவண்ணம்

[1] கி. மு. 351—50 டெல்பியின் ஆலயம் கட்டும் குழுவில் அங்கத்தினர்களாக இருந்தவர்கள் :—டெல்பியன், ஸிஸியோனியன், கொரிந்தியன், இரு ஆர்கைவ்கள். கி.மு. 349—348ல் அதன் அங்கத்தினர்கள் ஒரு டெல்பியன், ஒரு அத்தினியன், இரு லோக்ரியர்கள், ஒரு மெகாரியன், ஒரு எப்பிடவுரியன், ஒரு லாஸிடா மோனியன், ஒரு கொரிந்தியன், இரு போஸியர்கள்.

தடுக்க, ஏதென்ஸூம் தெரேஸூம் ஒன்று சேர்ந்தன. தெரேஸின் மன்னன் செர்ஸோ பிளிப்ட்டஸ் ஏதென்ஸின் நண்பனுக இருந்தான். சாரிடேமஸ் என்பவன் செர்ஸோபிளிப்ட்டஸின் மருமகனும் அமைச்சனுமாக இருந்தான். அவனுக்குச் சார்பாக ஏதென்ஸில் அரிஸ்ட்டோகிராட்டிஸ் ஒரு தீர்மானம் கொண்டு வந்தான். அத்தீர்மானம் சட்டத்திற்கு விரோதமானதென்று டெமெஸ்த்தனிஸூம், அவன் நண்பர்களும் கூறினர். டெமெஸ்த்தனிஸின் சொற்பொழிவில் ஓர் அரசியல் உண்மை அடங்கி இருந்தது. ஏதென்ஸ், தன்னுடன் நட்புப் பாராட்டும் நாட்டைப் பகைத்துக் கொள்ளக் கூடாதென்ற ஒரு முடிவிற்கு வந்துவிட்டது.

### தெரேஸில் பிலிப், கி.மு. 352, இலையுதிர்காலம்; பிலிப்புவிடம் செர்சோபிளிப்ட்டஸ் சரணடைதல்.

பிலிப் மன்னன் தெஸ்ஸாலியிலிருந்து வந்தவுடன் தெரேஸின் மீது படையெடுத்தான். அவனுக்கு தெரேஸ் நாட்டின் அரசுகட்டிலுக்காக உரிமை கொண்டாடிய அரச குடும்பத்தினரில் ஒருவனுடைய ஆதரவு கிடைத்தது. பைஸான்ஷியன் நகரமும் பெரின்தஸ் நகரமும் அவனுக்கு ஆதரவளித்தன. அவன் பொரோபோன்டிஸை நோக்கி முன்னேறினன். அவன் செர்ஸோபிளிப்ட்டஸின் தலை நகரமாகிய ஹெரேயோன் - தெயிச்சோஸ் நகரை முற்றுகையிட்டான். அவன் செர்ஸோபிளிப்ட்டஸை மாசிடோனியாவின் மேலாதிக்கத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்தான். பிலிப் மன்னன் மின்னல்வேகத்தில் நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டதால் ஏதென்ஸ், தெரேஸ் நாட்டிற்குத் தக்க சமயத்தில் உதவியளிக்க முடியவில்லை. பிலிப் மன்னன் தெரேஸை வென்று விட்டானென்ற செய்தியைக் கேட்டு ஏதென்ஸ் அதிர்ச்சியடைந்தது. செர்சோனேசேயிக்கு உதவி புரியப் படையை அனுப்புவதென்று ஏதென்ஸ் முடிவு செய்துவிட்டது. அப்பொழுது பிலிப் மன்னன் நோயுற்றனென்ற செய்தி எங்கும் பரவிற்று. அதையடுத்து அவன் இறந்து விட்டானென்ற வதந்தியும் பரவிற்று ஏதென்ஸ் செர்சோனேசேயிக்குப் படையுதவி அனுப்பும் தன்னுடைய முயற்சியைக் கைவிட்டுவிட்டது. பிலிப் மன்னன் உண்மையில் நோயுற்றிருந்தான். அவ்வியாதியினல் அவன் மேற்கொண்டு யுத்தத்தைத் தொடர்ந்து நடத்த முடியவில்லை. செர்சோனேஸ் அவனுடைய படையெடுப்பிலிருந்து தப்பித்துக் கொண்டது.

### கி.மு. 352-ன் முடிவில் பிலிப் மன்னனின் நிலைமை; அவனுடைய ஹெலனிக் கோட்பாடு

பிலிப் மன்னன் அரசு கட்டிலேறி எட்டு ஆண்டுகளுக்குள்ளாக கிரேக்க நாட்டின் சமநிலைக் கொள்கை மாறுதலடைந்தது. அவன் கிரேக்க நாடுகளின் எதிர்கால வாழ்க்கையை மாற்றியமைத்தான்.

அவனிடம் ஒரு வலுவுள்ள படையும், அதைப் பாதுகாக்க வருவாயு மிருந்தது. அவன் தெர்மாபைலே பள்ளத்தாக்கிலிருந்து பொரோ போன்டிஸ் கடற்கரை வரையிலுமுள்ள வடக்கு எஜியான் கடற்கரைப் பாகத்தில் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்டினுன். அப்பகுதியில் செர்சோனேஸஸும், சால்சிடியன் கழகமும், நேரடியாகவோ, மறை முகமாகவோ, அவனுடைய ஆதிக்கத்தின்கீழ் கொண்டு வரப்பட வில்லை. பிலிப் மன்னன் கிரேக்க நாடுகள் முழுவதிலும் தன்னுடைய ஆதிக்கத்தை நிலைநாட்ட விரும்பினுன். ஏதென்ஸ், ஸ்பார்ட்டா தீப்ஸ் நாடுகள் ஒரு காலத்தில் வல்லரசு நாடுகளாக இருந்ததைப் போல, மாஸிடோனியாவும் வல்லரசு நாடாக விளங்கவேண்டுமென்று அவன் விரும்பினுன். ஏதென்ஸ் நகரம் டிலாஸ் என்ற கூட்டமைப்பை ஏற்படுத்தியதைப்போல, தானும் ஒரு கூட்டமைப்பை ஏற்படுத்த விரும்பினுன். அவன் பாரசீகப் பேரரசின்மீது படையெடுக்கத் திட்ட மிட்டுள்ளான் என்ற வதந்தி எங்கும் பரவிற்று. பேரேயின் ஜேஸன் திட்டமிட்டதைப் போலவே இவனும் பாரசீகப் பேரரசை ஒழித்துக் கட்டத் திட்டமிட்டிருப்பதாக வதந்தி கிளம்பிற்று. பிலிப் கிரேக்க இனத் தைச் சேர்ந்தவனல்லனென கிரேக்கர்கள் கருதினுர்கள். ஏனென்ருல் மாசிடோனியா இதுவரையில் கிரேக்க நாட்டின் விவகாரங்களில் தலை யிடாமல் தனித்து நின்றது. மேலும், மாசிடோனியா வரம்பில்லா முடியாட்சிக் கொள்கையையுடைய நாடாக விளங்கிற்று. ஆனுல் பிலிப், மாசிடோனியாவும் கிரேக்க நாடுகளில் ஒன்று என்ற எண்ணத் தைக் கிரேக்கர்களின் உள்ளங்களில் பதிய வைப்பதற்காகப் பாடு பட்டான். மாசிடோனியர்கள் மற்றக் கிரேக்கர்களைப் போலவே, பண் பாட்டில் சிறந்து விளங்குவதற்காகவும் பிலிப் மன்னன் பாடுபட்டு வந்தான். அவன் வாழ்நாள் முழுவதும் ஏதென்ஸை மதித்து வந் தான். அவன் அந்நாட்டு நட்பை விரும்பினுன். ஆனுல் அந்நாடு அவனை ஒரு பகைவனுகவே கருதி வந்தது. அவன் முரட்டு மனிதர் களாகிய தன்னுடைய நாட்டினரோடு நெருங்கி வாழ்ந்த போதிலும், அவர்களோடு சேர்ந்து நன்ருகக் குடித்துப் பழகிய போதிலும், கிரேக்க நாட்டு தத்துவ ஞானிகளையும் சிறந்த எழுத்தாளர்களையும் கண்ணியத்தோடும், காருணியத்தோடும் நடத்தி வந்தான். அவன் அவர்களுடைய கூட்டுறவை விரும்பினுன். சகல கலைகளிலும் வல்லவ னுகிய ஸ்ட்டாஜிரா நாட்டு அரிஸ்ட்டாட்டிலை, தன்னுடைய மகன் அலெக்ஸாந்தருக்கு ஆசிரியனுக அமர்த்தினுன். இவை யாவும் அவன் கிரேக்கக் கலை வளர்ச்சிக்காகப் பாடுபட்டானென்பதை அறிவிக் கின்றன.

### ஏதென்ஸின் நிலைமை

மாசிடோனியாவின் எழுச்சியைக் கண்டு கிரேக்க நாடுகள் அதிர்ச்சியுற்றன. அதனுடைய எழுச்சியினுல் ஏதென்ஸ் ஒன்றே

நேர்முகமாகப் பாதிக்கப்பட்டது. இப்போது ஏதென்ஸ் மாசிடோனியாவை எதிர்ப்பதற்காக எடுத்துக் கொள்ளும் முயற்சி வீணுனதாகும். ஏனென்ருல் பிலிப் மன்னன் அக்காலத்தில் ஒரு சிறந்த படைத் தலைவனுகவும், அரசியல் சூழ் திறனுள்ளவனுகவுமிருந்தான். அவனுக்குச் சமமான படைத்தலைவன் அக் காலத்தில் யாருமேயில்லை. அவனுடைய படை நன்ருகப் பயிற்சிப் பெற்ற தேசியப் படையாக விளங்கிற்று. பிலிப் மன்னனுக்கு நல்ல பண வசதியுமிருந்தது. சகல வசதிகளுமுடைய ஓர் அரசனை எதிர்க்க ஏதென்ஸ் தகுதியற்றிருந்தது. பிலிப் மன்னன் இறந்து விட்டால், ஏதென்ஸ் மீண்டும் தலைதூக்க வாய்ப்பு ஏற்படும். ஆனுல் அத்தீனியர்கள் இந்த உண்மையைப் புரிந்து கொள்ளாதிருந்தார்கள். அவர்கள் ஆம்பிபோலிஸை மீண்டும் கைப்பற்றுவதிலேயே கவனம்செலுத்தினுர்கள். ஆனுல் மாசிடோனியாவுடன் சமாதானம் செய்து கொண்டு அதனுடன் நட்பு பாராட்டுவது ஒன்றுதான் அது பின்பற்ற வேண்டிய சிறந்த கொள்கையாகும். ஏதென்ஸ் அவனுடைய நட்பை விரும்பி இருந்தால், தானியக் கப்பல்கள் ஏதென்ஸக்குத் தங்கு தடையின்றிச் சென்றிருக்கக் கூடும்; செர்சோனேஸே அதற்குக் கிடைத்திருக்கும்; செர்ஸோனேஸை அவன் தன்னுடைய ஆதிக்கத்தில் வைத்திருப்பதால் அவனுக்கு எவ்விதமான பயனுமில்லை. ஆகவே அதை எளிதில் ஏதென்ஸுக்கு அவன் கொடுத்து விடக் கூடும்.

### யூபூலஸ் தியோரிக் நிதியின் பொறுப்பாளியாயிருத்தல்

இக்காலத்தில் ஏதென்ஸ் அரசியலில் சிறந்த அறிவு படைத்த யூபூலஸின் செல்வாக்கின் கீழிருந்தது. அவன் ஏதென்ஸுக்குச் சிறந்த வழிகாட்டியாக விளங்கினுன். அவனை தியோரிக் நிதிக்குத் தலைவனுக நியமித்திருந்தார்கள். நான்காண்டு காலமாக அவன் அந்நிதியின் தலைவனுக இருந்து வந்தான். அதனுல் நாட்டு வருவாய் மீது இவனுக்குப் பொதுவான ஆதிக்கமிருந்தது. அவன் சமாதானக் கொள்கையைப் பின்பற்றினுன். ஏதென்ஸ், பிலிப் மன்னனை தெர்மாபைலேயில் தடுத்து, அவனை மாசிடோனியாவுக்குத் திரும்பி போகச் செய்ததற்கும் இவனே காரணமாக இருந்தான். ஏதென்ஸ் அநாவசியமாக பெலப்போனீஸியாவிலும், சிறிய ஆசியாவிலும் யுத்தத்திலீடுபடவிருந்த சமயத்தில் அதைத் தடுத்து சமாதானக் கொள்கையைப் பின்பற்றும்படி செய்தவனும் இவனே. இவன் அரசாங்கத்தின் நிர்வாகம் பணமுடையின்றி நடைபெறும்படி செய்தான். பிலிப் மன்னனுடைய தெரேஸ் யுத்தத்தின் காரணமாக மக்களுக்கு இவன் மீது மனக்குறை ஏற்பட்டது. ஹெல்லஸ் பான்டையன் நாடுகளில் ஏதென்ஸின் நலனை இவன் ஒழுங்காகக் கவனிக்கவில்லை என்று அத்தீனியர்கள் இவன்மீது குறை கூறினுர்கள். இவனுடைய குற்றத்தை இவனுடைய பகைவர்கள் மிகைப்படுத்திப் பேசினுர்கள்.

**கி.மு. 384-ல் டெமொஸ்த்தனிஸ் பிறப்பு; அவனுடைய ஆரம்ப பிலிப்பிக்.**

யூபூலஸின் எதிர்ப்பாளர்களில் முதன்மையாக இருந்தவன் டெமெஸ்த்தனிஸ் என்பவன். அவன் அத்தீனிய சபையில் சிறந்த சொற்பொழிவாளன் என்று பெயரெடுத்தான். அவனுடைய தந்தை ஒரு தொழிலாளி. டெமெஸ்த்தனிஸ் சிறு குழந்தையாக இருந்த போது அவன் தந்தை இறந்துவிட்டான். அவனுடையதாய் சித்தியன் இனத்தைச் சேர்ந்தவள். அவனுடைய தந்தை இவனுக்குப் போதுமான சொத்தை விட்டுச்சென்ருன். ஆனுல் இவனுடைய முதுகஞளர்கள் அதைத் தவருன முறையில் கையாண்டார்கள். அவனுக்குத் தக்க வயது வந்தபோது அச்சொத்தைத் திரும்பப்பெற வேண்டுமென்று விரும்பினுன். அதற்காக அவன் நாவன்மைப்படைத்த ஐஸாயஸ் என்பவன் மேற்பார்வையில் சட்டத்தையும் சொற்கோப்புக்கலையையும் கற்றுக்கொண்டான். அவனுடைய தந்தை விட்டுச்சென்ற செல்வத்தில் ஒரு சிறிய பாகம் மட்டும் இவனுக்குக் கிடைத்தது. ஆனுல் ஐஸோகிராட்டிஸின் கல்விக் கழகத்தின் மூலமாக அடைய முடியாத அறிவை, இவன் ஐஸாயஸின் கீழ்க் கற்றுக்கொண்டான். அவன் சொற்பொழி வாற்றும் திறனைக் கற்றுக்கொண்ட முறையையும், அதற்குத் தடையாக இருந்த குறைபாடுகளையும் அடிக்கடி கூறுவான். நிலைக் கண்ணுடி முன்னின்று சொற்பொழிவாற்றிப் பயிற்சி பெற்ருன். சொற்பொழிவாற்றும்போது கைகால்களை அசைக்கும் முறைகளை நிலைக்கண்ணுடிமுன் நின்று கற்றுக்கொண்டான். வார்த்தைகள் நாவில் சரமாரியாக வருவதற்காகக் கூழாங்கற்களை வாயில் அடக்கிக் கொண்டு பேசிப்பழகினுன். ஆகையால் சொற்பொழிவாற்றும்போது நாக்குழறுதல் குற்றம் நீக்கப்பட்டது. இவ்விதமாக அவன் ஒரு சிறந்த பேச்சாளஞகிவிட்டான். ஒரே ஒரு குற்றத்தை மட்டும் அவனுல் போக்கிக்கொள்ள முடியவில்லை. அதாவது அவன் பேசும் போது பேசியதை நடித்துக் காட்டிவிடுவான். அவனுடைய ஆரம்ப சொற்பொழிவுகள் அவ்வளவு சிறப்பானவையல்ல. அவன் யூபூலஸின் கொள்கையை எப்போதும் எதிர்த்துவந்தான். ரோட்ஸ் ஏதென்ஸின் உதவியை நாடியபோது, அதற்கு உதவி செய்தே தீரவேண்டுமென்று இவன் பேசியதை நாமறிவோம். அதைப் போலவே மெகாலோபோலிஸ் ஏதென்ஸின் உதவியை நாடியபோது யூபூலஸ் அதற்கு உதவியளிக்க அது தருணமன்று என்ருன். டெமெஸ்த்தனிஸ் மெகாலாபோலிஸிக்கு உதவியளிக்க அதுவே ஏற்றத் தருணமென்று வாதாடியதையும் நாம் அறிவோம் பொரோபோன்டிஸில் பிலிப் மன்னனின் ஆக்ரமிப்பு டெமெஸ்த்தனிஸுக்கு ஒரு நல்ல வாய்ப்பையளித்தது. அச்சமயத்தில் அவன் செய்த முதல் சொற்பொழிவு 'பிலிப்பிக்' என்றழைக்கப்படுகிறது.

அச் சொற்பொழிவை எல்லோரும் புகழ்ந்தனர். அச்சொற்பொழிவில், அத்தீனியர்கள் பிலிப் மன்னனுக்கு எதிராக எழும்பி, அவனுடைய நடவடிக்கைகளைத் தடுக்க வேண்டுமென்று வற்புறுத்துகிறான். அவன் தன்னுடைய நாட்டு மக்களின் அலட்சிய நிலையையும், பிலிப் மன்னனின் விடா முயற்சியையும் ஒப்பிட்டுப் பேசுகிறான். 'பிலிப் மன்னன் கிடைத்த மட்டில் திருப்தியடையாமல் மேலும் மேலும் நாடுகளைப் பிடிப்பதில் ஊக்கங்கொண்டிருக்கிறான். நாமோ ஒன்றும் செய்யாமல் வீட்டில் உட்கார்ந்துகொண்டிருக்கிறோம்' என்று தன்னுடைய சொற்பொழிவில் குறிப்பிட்டிருக்கிறான். மேலும் அவன், 'பிலிப் இறந்து விட்டானா? இல்லை, அவன் நோயுற்றிருக்கிறான். அதனால் உங்களுக்கேற்படும் பயன் என்ன? இந்த பிலிப் இறந்துவிட்டால் உங்களுடைய அசட்டுத் தன்மை இன்னொரு பிலிப்பை ஏற்படுத்திவிடும்' என்று கூறினான். நகரத்தின் படைபலத்தைப் பெருக்க அவன் ஒரு திட்டம் கொண்டு வந்தான். அத்திட்டத்தில் தெரேஸுக்கு ஒரு படையை அனுப்ப வேண்டுமென்றும், அறிவுள்ள வீரர்களில் கால்பாகமாவது குடிமக்களாக இருக்க வேண்டுமென்றும், அதனுடைய அதிகாரிகள் குடிமக்களிடமிருந்து குடிமக்களால் நியமிக்கப்பட்டவர்களாக இருக்க வேண்டுமென்றும் வலியுறுத்தப்பட்டிருக்கின்றன. அச்சமயத்தில் படை அதிகாரிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள் வெளிநாடுகளுக்கனுப்பப்படவில்லை. அவர்களை உள்நாட்டுச் சேவைக்காக ஏதென்ஸில் நிறுத்திவைத்திருந்தார்கள். 'நீங்கள் உங்களுடைய படைத் தலைவர்களைப் போரிடுவதற்காகத் தேர்ந்தெடுக்கவில்லை. ஆனால், சந்தை வெளியிலே பொம்மைக் கடைகளில் பொம்மைகளைப் பகட்டுக்காக வைத்திருப்பதைபோல், இவர்களையும் பகட்டுப் பொருள்களாகத் தேர்ந்தெடுத்திருக்கிறீர்கள்,' என்றான்.

ஏதென்ஸ் நகரவாசிகள் அவனைப் புகழ்ந்தார்களே தவிர அவனுடைய அறிவுரையின்படி அவர்கள் ஒன்றும் செய்யவில்லை. ஏதென்ஸ் பெரிக்கிளிஸ் காலத்திலிருந்த நிலைமைக்குவர வேண்டுமென்பதே அவனுடைய குறிக்கோள். ஆனால் அவன் யூபூலஸ் காலத்து ஏதென்ஸில் வாழ்ந்துவந்தான். நான்காம் நூற்றாண்டில், அத்தீனியர்கள், தங்கள் பகைவர்களோடும் நண்பர்களோடும் தங்களுக்குள்ள கருத்தை மாற்றாமல் வாழுமியல்புடையவர்களாகயிருந்தார்கள். இவ்விதமாக அவர்கள் ஸ்பார்ட்டனரோடும், தீப்ஸ் நாட்டினரோடும், ஏஜியான் தீவிலுள்ள மற்றவர்களுடனும் கூடிவாழ்ந்து வந்தார்கள். எப்பிகிராட்டிஸ், சாரெஸ் போன்ற படைத்தலைவர்கள், பணத்திற்காகப் போரிடும் கூலிப்படை, முதலியவர்களைக்கொண்டு தங்களுடைய நிலைமையைப் பாதுகாத்துக்கொண்டிருந்தார்கள். தங்களுடைய நாட்டை முதல்தரமான வல்லரசு நாடாகக் கருதினார்கள். ஆனால் வலுவுள்ள ஒரு பெரிய

தரைப்படைக்குமுன் அவர்களுடைய நிலைமை இரங்கத் தக்கதாக இருந்தது. அவர்களுடைய பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் அத்தீனியர்கள் யாவரும் அமைதியில் நாட்ட முடையவர்களாகிவிட்டார்கள்; யுத்தத்தைக் கண்டு பயந்தனர். பேரரசை மீண்டும் உருவாக்க வேண்டுமென்ற எண்ணம் அவர்களுடைய மனத்திலிருந்து மறைந்துவிட்டது. அவர்களுடைய கடந்தகாலப் புகழ்பெற்ற வாழ்க்கையைப் பற்றி அவர்கள் சிந்திக்க வேண்டுமென்று முயன்றான். ஆனால் அவனுடைய முயற்சி வீணாயிற்று. அவனுடைய உணர்ச்சி ததும்பும் சொற்பொழிவுகள் அவர்களிடம் மனமாற்றத்தை உண்டுபண்ணவில்லை; அவர்களைச் செயலிலீடுபடச் செய்யவுமில்லை. செவிடன் காதில் சங்கூதுவதைப்போல், டெமெஸ்த்தனிஸின் வீரச்சுவை நிரம்பிய சொற்பொழிவுகள் பயனற்ற வெறும் வார்த்தைகளாயின. அவனால் அவர்களுடைய பண்பை மாற்றிவிட முடியவில்லை. பேரரசிற்காகப் பெரிய முயற்சியிலீடுபடுவது தகுதியன்றென்பதையும் அத்தீனியர்கள் உணர்ந்தார்கள். யூபூலஸின் எதிரியாகிய டெமெஸ்த்தனிஸ் சித்திரித்துக் காட்டியதைப்போல், ஏதென்ஸின் நிலைமை அவ்வளவு மோசமாக இருக்கவில்லை. யூபூலஸின் நிர்வாகத்தின் கீழ் கடற்படை பெருகிற்று. புதிய கட்டடங்கள் பல எழுப்பப்பட்டன. கப்பல்கள் தங்குவதற்கான புதிய கொட்டகைகள் கட்டப்பட்டன. ஏதென்ஸின் படையில் பல முன்னேற்றங்கள் கொண்டுவரப்பட்டன. ஏஜியானில் இன்றுங்கூட ஏதென்ஸ் கடலாதிக்கம் பெற்றிருந்தது. அது தன்னுடைய வணிக நலனைப் பாதுகாத்துக் கொள்ளும் வலிமையும் பெற்றிருந்தது.

**சால்ஸிடியக்கழகம் ஏதென்ஸுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளுதல், கி.மு. 352; சால்சிடிசை பிலிப் சரணடையச் செய்தல், கி.மு. 349.**

பிலிப் மன்னன் நோயிலிருந்து குணமான பிறகு சால்ஸிடியாவின் மீது படையெடுத்தான். ஒலிந்தியர்கள் பிலிப் மன்னனைக் கண்ணியத்தோடு நடத்தியிருந்தால் அவர்கள் சுதந்திரமாக மாசிடோனிய ஆதிக்கத்தின்கீழ் வாழ வழி ஏற்பட்டிருந்திருக்கும். அவர்கள் பிலிப் மன்னனையும், மாசிடோனியாவையும் மோசமாக நடத்தினார்கள். ஆரம்பத்தில் அவர்கள் பிலிப் மன்னனோடு நட்பு பாராட்டினர். பிலிப் ஆன்தேமஸ், போட்டிடேயா என்ற இரு நகரங்களையும் ஒலிந்தியர்களுக்குக் கொடுத்தான். உடனே அவர்கள் பிலிப் மன்னனிடமிருந்த நட்பை முறித்துக்கொண்டு ஏதென்ஸோடு நட்புக்கொண்டார்கள். அப்பொழுது பிலிப் மன்னன் ஏதென்ஸின் பகைவனாயிருந்தான். அவன் ஏதென்ஸுடன் போரிட்டுக் கொண்டிருந்தான். ஒலிந்தியர்கள் ஏதென்ஸ் ஆம்பிபோலிஸின்மீது கொண்டாடிய உரிமைக்கு ஒலிந்தியர்கள் ஆதரவளித்து

வந்தார்கள். அப்பொழுது பிலிப் வேறொரு காரியத்திலீடுபட்டிருந்ததால், ஒலிந்தியர்களுக்குப் பாடம் கற்பிக்க அவன் விருப்பங் கொள்ளவில்லை. மூன்றாண்டுகள் கழித்து அவன் ஒலிந்தியர்கள் மீது நடவடிக்கையை யெடுக்க ஆரம்பித்தான். அவனுக்கு மாற்றாஞ் சகோதரனொருவனிருந்தான். அவன் மாசிடோனிய அரசுகட்டிலுக்காக உரிமை கொண்டாடி வந்தான். அவனுக்கு ஒலிந்தியர்கள் அடைக்கலமளித்திருந்தார்கள். பிலிப் மன்னன் அவனைத் தன்னிடம் ஒப்படைக்குமாறு ஒலிந்தியர்களைக் கேட்டுக் கொண்டான். ஆனால் அவர்கள் அவனுடைய வேண்டுகோளுக்கிணங்க மறுத்து விட்டார்கள். ஆகையால் பிலிப் சாலிஸிடிக்கு எதிராகப் படையெடுத்துச் சென்றான். ஒலிந்தியர்களுடைய நகரங்கள் ஒன்றன் பின்னொன்றாய் அவனிடம் சரணடைந்தன. ஸ்ட்டாஜிராவைப்போல சரணடைய மறுத்த நகரங்கள் வலுவந்தமாகப் பிடிபட்டன.

**ஏதென்ஸ் ஒலிந்தியர்களோடு ஒப்பந் செய்து கொள்ளல்; யுபோயாவின் கலகம்; அதன் மீது படையெடுத்தல்; அது சுதந்தர நாடாதல் :**

ஒலிந்தஸுக்கு யுத்த பயம் ஏற்பட்டது. அது ஏதென்ஸுடன் ஒரு நேச வுறவு ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்பியது. அத்தீனிய சபையிலுள்ள கட்சிகளின் தலைவர்களும், டெமெஸ்த்தனிஸும், இப்போது ஒற்றுமையோடு ஒலிந்தஸுக்கு உதவி செய்ய முன்வந்தார்கள். சபையில் நிலைமையைப் பற்றி விவாதம் நடைபெற்ற போது, டெமெஸ்த்தனிஸ் சிறந்த சொற்பொழிவுகள் செய்தான். அவை அவனுடைய 'பிலிப்பிக்' சொற்பொழிகளைப் போலவே வீர உணர்ச்சி நிரம்பியவையாக இருந்தன. இப்போது அத்தீனியர்கள் அவனுடைய அறிவுரைக்குச் செவி சாய்த்தார்கள். அவர்கள் தங்களுடைய அசட்டுத்தனத்தை விட்டுவிட்டுச் செயலிலீடுபட முன்வந்தார்கள். அப்பொழுது சிலர், தியோரிக் நிதியைப் போர் வீரர்களுக்காகச் செலவழிக்கப்பட வேண்டுமென்ற தீர்மானம்கொண்டு வந்தார்கள். டெமெஸ்த்தனிஸ் அதை ஒப்புக்கொள்ளவில்லை. இப்போதுகூட அவன் குடிமக்களைக் கொண்ட படையைச் சிறப்பித்துக் கூறினான். ஒலிந்தியர்களுக்கும் அத்தீனியர்களுக்குமிடையே ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. செர்சோபிளிப்ட்டஸின் படையிலிருந்து திரும்பி வந்த சாரிடேமஸும், சாரெஸும் சால்சிடியாவிற்கு அனுப்பப்பட்ட படையின் தலைவர்களாக நியமிக்கப்பட்டார்கள். ஒலிந்தியர்களுக்கு ஏதென்ஸ், மேற்கொண்டு படையுதவி அனுப்ப முடியா வண்ணம் இவன் செய்துவிட்டான். ஒலிந்தியர்களுடைய படையும், அத்தீனியர்களுடைய படையும் ஒன்று சேர்ந்துவிட்டால், அதை வெல்லுவதில் இடுக்கண்ணிருப்பதை யுணர்ந்த பிலிப் ஏதென்ஸின் கவனத்தை வேறு திசைக்குத்

திருப்பிவிட்டான். அவன் அவர்களுடைய பலத்தை ஒடுக்கி விட்டான். அவன் யுபோயாவுடன் சேர்ந்து ஒரு சதித்திட்டத்தை உருவாக்கினன். எரிட்டிரியா (Eretria) ஏதென்ஸுக்கு விரோத மான கலகத்திலிறங்கியது. ஏதென்ஸின் கையாளான புளூட்டார்க் (Plutarch) என்ற சர்வாதிகாரியை அங்கிருந்து அது விரட்டி விட்டது. சால்ஸிஸ் நகரமும், ஓரியோஸ் நகரமும் (Chalcis & Oreos) கலகம் விளைவித்தன. யுபோயாவும் கலகம் செய்தது. ஏதென்ஸ் யுபோயாவின் கலகத்தை யடக்கும் வேலையிலீடுபடாமல், தன்னுடைய முழுப் படையையும் சால்டிஸுக்கு அனுப்பியிருந்திருந் தால், அது ஒரு வேளை ஒலிந்தியர்களைக் காப்பாற்றியிருந்திருக்கும். இப்போது ஏதென்ஸ் தன்னுடைய படையின் ஒரு பாதியை யுபோயாவிற் கனுப்ப முன்வந்தது. டெமெஸ்த்தனிஸ் அதை எதிர்த் தான். யுபோயாவின் காரியத்தில் அப்போது தலையிட வேண்டாமென எச்சரித்தான். ஆனல் அத்தீனியர்கள் அவன் பேச்சைக் கேட்க வில்லை. யுபோயாவுக்குப் பாதிப்படையை, போஸியோன் தலைமையில் அனுப்பிற்று. போஸியோன் யுபோயா நாட்டினரை தாம்யனே (Tamynae) என்ற விடத்தில் தோற்கடித்தான். அவன் அங்குள்ள நகரங்களில் ஒன்றையும் கைப்பற்ருமல் ஏதென்ஸுக்குத் திரும்பி வந்துவிட்டான். யுபோயர்கள் பல அத்தீனியர்களைச் சிறைப்படுத் தினர்கள். அவர்களை மீட்க ஏதென்ஸ் 50 தாலந்து பகைவர் களுக்குக் கொடுக்க நேர்ந்தது. ஏதென்ஸ் யுபோயாவின் சுதந் திரத்தை அங்கீகரித்தது. ஆனல் காரிஸ்ட்டஸ் மட்டும் ஏதென் ஸுக்கு விசுவாசமாகக் கடைசிவரையிலிருந்தது.

ஒலிந்தஸின் வீழ்ச்சி, கி.மு. 348.

பிலிப் மன்னன் ஒலிந்தியர்களைத் தோற்கடித்து ஒடுக்கினன். ஒலிந்தியர்கள் படை உதவியனுப்பும்படி ஏதென்ஸைக் கேட்டுக் கொண்டார்கள். அப்பொழுது ஏதென்ஸ் 2000 பேர்கொண்ட ஒரு தேசியப் படையை யனுப்பியது. அப்படை தாமதித்து வந்தது. அப்படை வருவதற்கு முன் பிலிப் ஒலிந்தஸை வென்று விட்டான். ஆனல் ஒலிந்தஸ் நகருக்கு அவன் எவ்விதமான இரக்கமும் காட்ட வில்லை. பட்டினம் அழிக்கப்பட்டுவிட்டது. அதனுடைய நகர வாசிகள் சிதறுண்டு மாசிடோனியாவின் பல நாடுகளுக்கும் ஓடிவிட் டார்கள். சிலர் அரசனுடைய பண்ணையில் அடிமைகளாகப் பணி புரிந்து வந்தார்கள். சால்சிடியக் கூட்டமைப்பிலிருந்த மற்ற நகரங்கள் மாசிடோனியாவுடன் சேர்த்துக்கொள்ளப்பட்டன. அவை அழிக்கப்படவில்லை. தங்களுடைய நிர்வாகத்தைத் தாங்களே கவனித்துக் கொள்ளும் உரிமை அவர்களுக்கு அளிக்கப்பட்டது. அவற்றை அழிப்பதற்கான பிரச்சினை எதுவும் எழும்பவில்லை.

**மைடியாஸ், டெமெஸ்த்தனிஸை அவமதித்தல்**

ஏதென்ஸ் யுபோயாவின் மீது படை எடுத்ததை டெமெஸ்த்தனிஸ் எதிர்த்தான். அதற்கு அவன் இணங்கி வரவில்லை. இச் சம்பவத்தைப் பற்றி ஒரு கதையுண்டு. டெமெஸ்த்தனிஸுக்கு மைடியாஸ் என்ற ஒரு செல்வந்தன் பகைவனயிருந்தான். அவன் யூபூலஸின் நண்பனகவுமிருந்தான். யுபோயன் பிரச்சினையைப் பற்றிச் சபையில் விவாதம் நடந்தபோது, அவர்களுடைய பகை மீண்டும் உயிர்ப்பெற்றெழுந்தது. மைடியாஸ் டெமெஸ்த்தனிஸை அவமானப்படுத்தத் தீர்மானித்திருந்தான். டயோனிஸியாக் பண்டிகை நெருங்கிவிட்டது. அப் பண்டிகையில் பலர் கூடிப் பாடுகின்ற ஒரு பாட்டை டெமெஸ்த்தனிஸ் தயாரித்தான். பண்டிகைக் கொண்டாட்டத்தில் பாடல் குழு பாட ஆரம்பித்தது. அப்போது டெமெஸ்த்தனிஸ் புனித உடையில் காட்சியளித்தான். அப்போது மைடியாஸ் அவனைக் கன்னத்தில் ஓங்கி யறைந்தான். சமயச் சார்பான பண்டிகையில் மைடியாஸ் அவ்வாறு செய்தது. ஒரு பெருங் குற்றமாகக் கருதப்பட்டது. டெமெஸ்த்தனிஸ் தன்னை அவமான படுத்தியவன்மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ள ஆரம்பித்தான். டெமெஸ்த்தனிஸ் தயாரித்த சொற்பொழிவில் புண்படுத்தும்படியான வசைமாரிச் சொற்களடங்கி இருந்தன. அச் சொற்பொழிவு அக்காலத்துக் கிரேக்கர்களின் பண்பாட்டை வெளிப்படுத்துகிறது. டெமெஸ்த்தனிஸ் மைடியாஸ் தன்னுடைய செல்வத்தை வினியோகிக்கும் முறையைப் பற்றி அச் சொற்ப்பொழிவில் குறிப்பிட்டிருக்கிருன். அவனுடைய திரண்ட செல்வங்கள் எங்கே இருக்கின்றன ? என்னைப் பொறுத்தமட்டில் நான் அதைப் பார்க்க முடியாது. ஒருவேளை அவன் செல்வம் இந்த நிலையிலிருந்திருக்கலாம். எலூசியத்தில் அண்மையிலுள்ள வீடுகளை மறைக்ககூடிய அளவிற்குத் தன் செல்வத்தைக் கொண்டு அவன் ஒரு பெரிய மாளிகையைக் கட்டியிருந்திருப்பான். சிஸியோன் நாட்டு இரு வெண்மையான குதிரைகளை அவன் வைத்திருப்பான். ஒன்று அவனுக்கும் மற்ருென்று அவனுடைய மனைவிக்குமாக இருந்திருக்கும். அவளைக் குதிரை மீது ஏற்றிக்கொண்டு இரகசியமான விடங்களுக்கு அழைத்துச் செல்வான். அல்லது அவன் மனம் நாடுமிடத்திற் கெல்லாம் அவளைக் கூட்டிக்கொண்டு போயிருப்பான். சந்தை வெளிக்கு மூன்று அல்லது நான்கு குற்றேவல் புரிகிறவர்களுடன் செல்வது அவனுடைய வழக்கமாக இருந்திருக்கலாம். அவ்வழியே கடந்து செல்லுகிறவர்களின் செவியில் விழும்படியாக பலவிதமான உணவுகளையும், மதுபானங்களையும் பற்றி இரைந்து பேசுவான்.[1] கோர்ட்டில் வழக்கு விசாரணைக்கு எடுத்துக்கொள்

[1] பேராசிரியர் புச்சரின் மொழி பெயர்ப்பு.

வதற்கு முன் இருவரும் சமரசம் செய்து கொண்டார்கள். மைடியாஸ் அதற்காக டெமெஸ்த்தனிஸுக்கு ஒரு சிறிது பணம் கொடுத்தான். அரசியல் நோக்கத்தின் காரணமாகவே டெமெஸ்த்தனிஸ் சமரசத்திற்கு வர இசைந்தான். ஒலிந்தஸ் கைப்பற்றப் பட்ட பிறகு அங்குள்ள பல கட்சியினரும் ஒன்று சேர்ந்து ஒத்துழைக்க முன்வந்தார்கள். இந்தப் புதிய முறையான அரசியல் இணைப்பு, டெமெஸ்த்தனிஸ் மைடியாஸின் மீது கொண்டுள்ள பகையை விட்டுவிட உதவியளித்தது.

## 6. பிலோகிராட்டஸின் சமாதானம்

போர் காரணமாக ஏதென்ஸின் கருவூலம் வரண்டு கிடைந்தது. நீதிபதிகளுக்கு ஊதியம் கொடுக்கக் கருவூலத்தில் பணம் இல்லாதிருந்தது. சமாதானம் செய்துகொள்வது ஏதென்ஸுக்கு மிகவும் அவசியமாகத் தோன்றியது. இந்த உண்மையை யூபூலஸ் நன்கு உணர்ந்திருக்க வேண்டும். ஒலிந்தஸ் வீழ்ச்சி யடைந்திருந்ததால் மக்கள் கோபமுற்றிருந்தார்கள். அத்தீனியர்களில் பலர் போர்க் கைதிகளாக இருந்தார்கள். ஆகையால் அத்தீனியர்கள் பிலிப் மன்னனோடு சமாதானம் செய்துகொள்ள விரும்பவில்லை. போரைத் தொடர்ந்து நடத்த அவர்களுக்கு மற்றக் கிரேக்க நாடுகளின் உதவி தேவையாக இருந்தது. ஆகையால் அவர்கள் படை உதவியை நாடி பெலப்போனிஸிய நாடுகளுக்கு அரசியல் தூதுவர்களை அனுப்பினார்கள். ஒலிந்தஸை அழித்துவிட்ட பிலிப் மன்னனை, கிரேக்க நாடுகளின் படை கூட்டாகச் சேர்ந்து தாக்க வேண்டுமென்று அரசியல் தூதுவர்கள் சொன்னார்கள். யூபூலஸ் பிலிப் மன்னனை எதிர்த்து அவனுடைய முன்னேற்றத்தைத் தடைசெய்யத் தீர்மானித்து விட்டான். பிலிப் மன்னனை எதிர்க்க வேண்டிய அவசியத்தை டெமெஸ்த்தனிஸ் முன்னமே போதித்து வந்திருக்கிறான். இந்தத் திட்டம் தோல்வியுறுவதின் உண்மையை யூபூலஸ் திட்டமாக அறிந்திருந்தானென்ற போதிலும், இத் திட்டத்திற்கு அவன் மறுப்புக் கூறவில்லை. ஏனென்றால் அவன் பிலிப் மன்னனோடு நட்பு பாராட்டுவதாக ஒரு பொய்யான வதந்தி ஏதென்ஸில் பரவியிருந்தது. அத்தீனியர்கள் தன் மீது கொண்டுள்ள ஐயப்பாட்டை நீக்குவதற்காக அவன் பிலிப் மன்னனோடு போர் தொடுக்கும் திட்டத்திற்கு ஆதரவளித்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் எஸ்ச்சினேஸ் (Aeschines) என்ற சொற்பொழிவுக் கலையில் வல்லவனை ஒருவனை நாம் ஏதென்ஸின் பொது வாழ்க்கையில் காண்கிறோம். இவன் டெமெஸ்த்தனிஸின் அரசியல் பகைவன். இவனுடைய தந்தை ஒரு பள்ளி ஆசிரியன். இவன் தன்னுடைய தந்தையின் பள்ளியிலே கட்டியங் கூறும் பணியாற்றி வந்தான். இவன் துன்பவியல் நாடகங்களில் ஒரு நடிகனாக

இருந்தான். பிறகு அதை விட்டுவிட்டு அரசாங்கத்தில் ஒரு கணக்காளராக அமர்ந்து பணிபுரிந்து வந்தான். பெலப்போனிஸியர்கள் மாசிடோனியாவை எதிர்க்கும் வகையில் அவர்களுக்கு உணர்ச்சியூட்ட அரசியல் தூதுவனுகப் பெலப்போனிஸியாவிற்கு அனுப்பப்பட்டான். அவன் மெகாலோபோலிஸுக்குச் சென்ருன். அந் நாட்டு சபையில் பிலிப் மன்னனின் ஆக்கிரமிப்புச் செயலைக் கண்டித்துப் பேசினுன். ஆனுல் அந் நாட்டு மக்கள் அவனுடைய சொற்பொழிவினுல் ஊக்கமடைய வில்லை. அவர்கள் அத்தீனியர்மீது இப்போது ஐயுற்ருர்கள். ஏனென்ருல் மெகாலோ போலிஸ் நெருக்கடியில் இருந்தபோது அதற்கு உதவி செய்ய ஏதென்ஸ் முன்பு மறுத்துவிட்டது. அதை அவர்கள் மறந்துவிட வில்லை. அதே சமயத்தில் டெமெஸ்த்தனிஸும், மற்ற அரசியல் வாதிகளும் பிலிப் மன்னனேடு சமாதானம் செய்து கொள்ளும் பணியிலீடுபட்டிருந்தார்கள்.

**தீப்ஸ் நகரவாசிகள் பிலிப் மன்னனின் உதவியை நாடல்; பாலேகஸின் குழப்ப நிலை.**

பிலிப், ஏதென்ஸுடன் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்வதையும், ஆம்பிக்டியோனிக் கழகத்தின் ஓர் அங்கத்தினனுவதையும் விரும்பினுன். அவ்வாறு கழகத்தின் அங்கத்தினனுவதற்கு அவனுக்கு ஒரு வாய்ப்புக் கிடைத்தது. தீபர்கள் வலியச் சென்று அவனுக்கு இந்த வாய்ப்பை யளித்தார்கள். அவர்கள் போஸியர்களை ஒழித்துக் கட்டிவிட விரும்பினுர்கள். அதற்கு பிலிப் மன்னனினுதவி அவர்களுக்குத் தேவையாக இருந்தது. இக்காலத்தில் போஸிஸ் நாடு குழப்பத்திலாழ்ந்து கிடைந்தது. பாலேகஸ் படைத் தலைமைப் பதவியிலிருந்து நீக்கப்பட்டுவிட்டான். ஆனுல் அவனை ஆதரிக்கும் கட்சி போஸியாவிலிருந்தது. மேலும் தெர்மாபைலே கணவாயும் சில காவல் நிலையங்களும் அவனுடைய ஆதிக்கத்திலிருந்தன. பிலிப் மன்னன் தெர்மாபைலேயை நோக்கிப் படையெடுத்து வருகிருன் என்ற செய்தியைக் கேட்டு, போஸியர்கள் அதிர்ச்சியுற்ருர்கள். ஏதென்ஸையும் ஸ்பார்ட்டாவையும் படையுதவியளிக்க வேண்டுமென்று, கேட்டார்கள். கிரேக்க நாடுகளின் வாயிலாக விளங்கும் தெர்மாபைலேயைப் பாதுகாப்பதற்காக ஸ்பார்ட்டாவும் ஏதென்ஸும் போஸியர்களுடைய விருப்பத்திற்கு இணங்கிவிட்டன. படை உதவியை, பாலேகஸ் நாடவில்லை. அதை நாடியவர்கள் அவனுடைய அரசியல் விரோதிகளாக இருந்தபடியால், அவன் ஸ்பார்ட்டா, ஏதென்ஸ் என்ற இரு நாடுகளின் உதவியைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டான். அவை தெர்மாபைலேயில் அடியெடுத்து வைக்க அவன் அனுமதிதரவில்லை. மேலும் ஏதென்ஸ் யுபோயாவுடன் போர் தொடுத்த போது பாலேகஸ் யுபோயா நாட்டினருக்கு ஆதரவாக

இருந்தான். ஆகையால் ஏதென்ஸ் அவன் மீது ஐயங்கொண்டது. அவன் தெர்மாபைலே கணவாயை பிலிப் மன்னனிடம் ஒப்படைத்து விடக் கூடுமென்று பயந்தது. ஆகையால் ஏதென்ஸ் பிலிப் மன்னனோடு சமாதானம் செய்து கொள்ள விரும்பியது.

## பிலிப்மன்னனிட மனுப்பிய முதல் தூதுக்குழு, கி.மு. 347 (Halonnesus)

ஏதென்ஸ் வலியச் சென்று சமாதானப் பேச்சு வார்த்தைகளை ஆரம்பித்தது. சமாதானப் பேச்சு வார்த்தைகளை நடத்த பதினொரு பேர்களைக்கொண்ட ஒரு குழு மாஸிடோனியாவிற்கு அனுப்பப்பட்டது. அக் குழுவில் பத்து அத்தீனியர்களும், ஒரு சினேடிரியோன் நாட்டினருமிருந்தார்கள். பத்து அத்தீனியர்களில் தூதுக்குழு அனுப்புவதற்காகத் தீர்மானம் கொண்டு வந்த பிலோகிராட்டஸ் ஒருவனுவான். அவனுடன் எஸ்ச்சினேஸஉம், டெமெஸ்த்தனிஸஉம் மாசிடோனியாவிற்குச் சென்றார்கள். சமாதான உடன்படிக்கை ஏற்பட்ட சமயத்தில் பிலிப் ஆக்கிரமித்துள்ள நாடுகள் அவன்வசமே இருக்க வேண்டு மென்றும், ஏதென்ஸ் வசமுள்ள நாடுகளை ஏதென்ஸ் வைத்துக் கொள்வதென்றும் சமாதான ஒப்பந்தத்தில் சேர்த்துவிட்டார்கள். இரு நாடுகளும் உடன்படிக்கைக்கான விசுவாசபிரமாணம் எடுத்துக்கொண்டபிறகே அது செல்லுபடியாகும் என்றும் முடிவு செய்தார்கள். இரு நாடுகளுடைய நேச உறவு நாடுகளும் ஒப்பந்தத்தில் கட்டுப்படுத்தப்பட்டன. ஆனால் தெஸ்ஸாலியிலுள்ள ஹாலுஸ் நாட்டையும் போஸியாவையும் ஒப்பந்தத்தில் சேர்க்க பிலிப் மறுத்து விட்டான். ஹாலுஸ் நாட்டை அவன் சமீபத்தில் தாக்கியதுண்டு. போஸியாவை அழித்துவிட அவன் திட்டமிட்டிருந்தான்.

உடன்படிக்கையின் வாசகத்தின்படி, ஏதென்ஸ் ஆம்பிபோலிஸின் மீது தனக்குள்ள உரிமையை விட்டுவிடவேண்டுமென்பது தெளிவாகத்தெரிகிறது. அவ்விதமே செர்சோனிசேமீது ஏதென்ஸஉக்குள்ள உரிமையை மாசிடோனியா அங்கீகரித்தது. ஹாலுஸ் ஒரு சிறிய நாடு. அதைப்பற்றி யாரும் கவலை கொண்டதில்லை. ஆனால் மாசிடோனியப் படை ஹாலுஸ் வழியாகப் போஸிஸ் நாட்டிற்கு எளிதில் செல்ல வசதியாக இருந்தது. ஆகவே பிலிப் ஹாலுஸை மாசிடோனியாவுடன் இணைத்து விட்டான். அத்தீனிய சமாதானக் குழுவினரை பிலிப் கண்ணியமாக நடத்தினுன். போயிஸியாவை அழித்துவிடத்தனக்கு விருப்பமில்லையென்பதை அவர்களிடம் தனிமையில் இரகசியமாகச் சொன்னுன். சமாதானக் குழுவினரில் சிலர் அவன் கொடுத்த உறுதி மொழியில் ஏதோ ஓர் இரகஸியம் இருப்பதாக நம்பினர்கள். போஸிஸஉக்கு ஏற்பட்டுள்ள இடுக்கண்ணை

நினைத்து அவர்களில் சிலர் வருந்தினார்கள். டெமெஸ்த்தனிஸைப் போன்ற சிலர் தீப்ஸ் நகரை நினைத்து வருத்தப்பட்டார்கள். தீப்ஸ் நகருடனிருந்த உறவில் சிறிது மாறுதல் ஏற்பட்டபோதிலும், புறத்தே அந்நாட்டுடன் நட்புக் கொண்டிருப்பதாக நடித்தார்கள். யூபூலஸ் அல்லது டெமெஸ்த்தனிஸ் சமாதான உடன்படிக்கையை மீறவும், மாசிடோனியாவின் பகை நாட்டிற்கு உதவி புரியவும் விரும்பவில்லை.

**சமாதான ஒப்பந்தம் ஏற்றுக் கொள்ளப்படல்; ஏதென்ஸில் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ளல், கி.மு. 346.**

செர்ஸோபிளிப்ட்டஸுக்குச் சொந்தமான சில கோட்டைகள் தெரேஸிலிருந்தன. சமாதான உடன்படிக்கையேற்படுவதற்கு முன் அதைக் கைப்பற்றிவிட பிலிப் மன்னன் விரும்பினான். சமாதானக் குழுவினர் பெல்லாவை விட்டுப் புறப்பட்டவுடனே பிலிப் தெரேஸின் மீது படையெடுத்துச் சென்றான். செர்சோனேசேமீது கைவைப்ப தில்லை என அவன் ஏற்கெனவே வாக்களித்திருந்தான். பிலிப் அத்தீனியர்களுக்குக் கொடுத்த கடிதத்துடன் தூதுக் குழுவினர் ஏதென்ஸுக்கு வந்தார்கள். அவர்கள் ஏதென்ஸுக்கு வந்த சிறிது நாளைக்குள் மூன்று மாசிடோனியப் பிரதிநிதிகள் ஏதென்ஸுக்கு வந்தார்கள். சமாதான உடன்படிக்கையின்மீது விசுவாசப் பிரமாணம் வாங்குவதற்காக பிலிப் மன்னன் அவர்களை ஏதென்ஸுக்கு அனுப்பினான். ஏதென்ஸ் நாட்டினரும் அதனுடைய நேச நாடுகளும் விசுவாசப் பிரமாணம் எடுத்தாகவேண்டும். பிலிப் அனுப்பிய பிரதிநிதிகளில் பார்மேனியோவும் ஆன்டிபேட்டரும் மிகவும் சிறப்பானவர்கள். அவர்களை ஏதென்ஸுக்கு அனுப்பியதால் பிலிப் சமாதான ஒப்பந்தத்தின்மீது எவ்வளவு கரிசனம் கொண்டிருந்தானென்பது தெளிவாகிறது. பிலிப் மன்னனின் தீர்மானப்படியே அத்தீனிய குடிமக்கள் உடன்படிக்கையையேற்றுக் கொண்டு விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். சிலர் ஹாலுஸும் போஸியாவும் ஒப்பந்தத்தில் சேர்க்கப்படாமைக்காக முணுமுணுத்தார்கள். யூபூலஸ் அவர்களை வன்மையாகக் கண்டித்தான். ஒப்பந்தத்தை ஏற்றுக் கொள்ளாவிடில் யுத்தம் தொடர்ந்து நடக்குமென அவர்களை எச்சரித்தான். மாசிடோனியாவிலிருந்து திரும்பிய சிலர் பிலிப் மன்னன் தங்களுக்குத் தனிமையில் போஸியாவைப் பற்றிக் கூறியதை எடுத்துச் சொன்னார்கள். பிலிப் மன்னனுக்குப் போஸியாவை அழித்துவிடும் நோக்கமில்லை என்பதை வலியுறுத்திக் கூறினார்கள். மேலும் யுபோயா நாட்டையும், ஒரோப்பஸ் நாட்டையும், அத்தீனியர்களுக்குக் கொடுப்பதாக பிலிப் கொடுத்த வாக்குறுதியைப் பற்றியும் பேசினார்கள். போஸிஸ் உடன்படிக்கையில் சேர்க்கப்படவில்லை. மறைமுகமாக

போயிஸ் ஒதுக்கப்பட்டிருக்கிறதென்றும், அது வெளிப்படையாக ஒதுக்கப்படவில்லையென்றும் சுட்டிக் காட்டப்பட்டது.[1]

**பிலிப் மன்னனிடம் ஏதென்ஸ் இரண்டாம் முறை தூதுவர்களை அனுப்பியது, கி. மு. 346, ஏப்ரல் மாதம்.**

அத்தீனியர்களும் அவர்களுடைய நேச நாடுகளும் ஒப்பந்தத்தை ஏற்றுக் கொண்டு விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். பிலிப் மன்னனும், அவனைச் சேர்ந்த நாடுகளும் இன்னும் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்ளவில்லை. ஆகையால் உடன்படிக்கை பாதி மட்டும் பூர்த்தியடைந்திருக்கிறது. மறு பாதி எவ்வளவு சீக்கிரம் பூர்த்தி பண்ண படவேண்டுமோ அவ்வளவு சீக்கிரம் பூர்த்தி செய்யப்பட வேண்டும். பிலிப் மன்னனின் விசுவாசப் பிரமாணம் ஒன்றுதான் அதைப் பூரணமாக்கக்கூடும். அவன் அந்தச் சடங்கைச் செய்யாமலிருக்கும் வரையில் மேற்கொண்டு நாடுகளை ஆக்கிரமித்துக் கொண்டிருப்பானென்று அத்தீனியர்கள் பயந்தார்கள். ஆகையால் முன்பு மாசிடோனியாவுக்கு அனுப்பப்பட்ட அரசியல் தூதுவர்கள் மீண்டும் அங்கே அனுப்பப்பட்டார்கள்.

அதே சமயத்தில் பிலிப் தெரேஸியன் கோட்டைகளைக் கைப்பற்றி விட்டான். செர்சோபிளிப்ட்டஸ் அவனிடம் சரணடைந்தான். அவன் பெல்லாவுக்குத் திரும்பியபோது அங்கே தனக்காக அத்தீனிய அரசியல் தூதுவர்களும் மற்றக் கிரேக்க நாடுகளின் அரசியல் தூதுவர்களும் காத்துக் கொண்டிருப்பதைக் கண்டான். வடக்கு ஹெல்லாஸ் நாடுகளுக்கு அவன் ஒரு நடுவனாக விளங்கினான்.

சமாதான ஒப்பந்தத்தைப் பொறுத்தமட்டில் அவர்களுக்குள் எவ்விதமான சிக்கலும் ஏற்படவில்லை. ஆனால் அத்தீனிய அரசியல் தூதுவர்கள் போசியாவைப் பற்றியும் வடக்குக் கிரீஸைப் பற்றியும் புதிய பிரச்சினைகளை எழுப்பி விட்டார்கள். அவர்கள் செய்து கொண்ட உடன்படிக்கை ஒரு சாதாரண உடன்படிக்கையன்று. 'சமாதானமும் நேச உறவும்,' என்ற கருத்தைக் கொண்ட ஒப்பந்தமாக அது இருந்தது. ஏதென்ஸுக்கும் மாசிடோனியாவிற்குமிடையே நட்பும் ஒத்துழைப்பும் ஏற்பட வேண்டுமென்பதே அரசியல் தூதுவர்களின் கருத்தாக இருந்தது. இந்த நோக்கத்தையொட்டியே யூபூலஸ் எச்சரிக்கையாக நடந்து கொண்டான். ஆம்பிக்ட்டியோனிக் கழக நாடுகளின் விவகாரங்களைத் தீர்த்து வைப்பதில், ஏதென்ஸ் இப்போது மாசிடோனியாவுடன் சேர்ந்து ஒரு கூட்டு நடுவன நாடாயிற்று தீப்ஸ் நாட்டின் ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டுவதில் ஏதென்ஸுக்கும் பிலிப் மன்னனுக்கும் பொதுவான நாட்டமிருந்தது. போஸிஸ் அடியோடு

[1] வெளிப்படையாக ஒதுக்குவது தேவையில்லை. போஸிஸ் அத்தீனியக் கூட்டமைப்பு நாடுகளில் ஒன்றாக இருந்ததில்லை. அத்தீனியக் கூட்டமைப்பு நாடுகளின் சபையில் அதற்கு எவ்விதமான உரிமையும் அளிக்கப்படவில்லை.

அழிந்து விடக்கூடாதென்பது ஏதென்ஸின் விருப்பமாக இருந்தது. தனிப்பட்ட முறையில் பிலிப் மன்னனுக்கு போஸியாவின்மீது எவ்வித மான விரோதமுமிருந்ததில்லை. ஏனென்றால் போஸிஸ் சமீபத்தில் நடந்த யுத்தங்களின் காரணமாக மிகவும் ஒடுக்கப்பட்டிருந்தது. போஸிஸ் டெல்பியின் ஆலயத்திற்கிழைத்த அநீதியை ஆதாரமாக வைத்துக் கொண்டு அந்நாட்டின்மீது எந்த நேரத்திலும் போர் தொடுக்க வாய்ப்பிருந்தது. பொதுவான திட்டங்களைப்பற்றி ஏதென் ஸின் அரசியல் தூதுவர்களும் பிலிப் மன்னனும் பேசினார்கள். போஸியாவை இரக்கத்தோடு நடத்தவேண்டுமென்பதும், போயிஷிய நகரங்களின் சுதந்திரத்தை அங்கீகரிக்கத் தீப்ஸ் நகரைக் கட்டாயப் படுத்த வேண்டுமென்பதும், அவர்களுடைய திட்டத்தின் அடிப்படைக் கருத்துகளாக இருந்தன. அவர்களுடைய திட்டத்தில் பிளாட்டியா மறுபடியும் உயிர்ப் பெற்றெழ வேண்டுமென்பதும் குறிப்பிடப்பட்டது. யுபோயாவையும், ஒரோபஸையும் பிலிப் மன்னன் ஏதென்ஸுக்கு கொடுத்துவிட ஒப்புக்கொண்டான். அவர்கள் அவனை ஆம்பிக்ட்டி யோனிக் கழகத்தில் ஓர் அங்கத்தினனாகச் சேர்த்துவிட ஒப்புக் கொண் டார்கள். யூபூலஸின் திட்டங்களை, தெளிவாக எஸ்ச்சினேஸ் எடுத்துச் சொன்னான். மாசிடோனியாவுடன் நெருங்கி நேச உறவு வைத்துக் கொள்வதை டெமெஸ்த்தனிஸ் விரும்பவில்லை. அத்தீனிய சபையில் டெமெஸ்த்தனிஸுக்கு மிகுந்த செல்வாக்கிருந்தது. அத் தீனிய அரசியல் தூதுவர்களுக்குள்ளிருந்த அபிப்பிராய பேதத்தை பிலிப் மன்னன் தெளிவாகப் புரிந்து கொண்டான். ஆகையால் அவன் அரசியல் தூதுவர்களோடு ஒரு திடமான உடன்படிக்கை செய்துகொள்ள விரும்பவில்லை. சாதாரண சமாதான ஒப்பந்தத் திற்குச் சம்மதமளித்தான். அதற்கான விசுவாசப் பிரமாணமும் எடுத்துக் கொண்டான். போஸியர்களைக் கைவிட்டு விட்டு, தீப்ஸ் நகரோடு நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டுமென்பது டெமெஸ்த்தனிஸின் கொள்கையாக இருந்தது. பண நெருக்கடியால் அவதியுறும் ஏதென்ஸின் செல்வநிலை ஒரு சமயம் உயரக் கூடுமென் றும், அப்போது ஏதென்ஸ் தீப்ஸ் நாட்டுடன் சேர்ந்து மாசிடோனி யாவைத் தாக்க வேண்டுமென்பதும் அவனுடைய கருத்தாக இருந் தது. அரசியல் தூதுவர்களுக்குள்ளிருந்த சச்சரவின் காரணமாக பிலிப் மன்னன் விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொள்வதைத் தவிர வேறு எதையும் செய்ய முன் வரவில்லை. அவர்கள் பிலிப் மன்ன னோடு தெஸ்ஸாலிக்குச் சென்றார்கள். பாரே நகரத்தில் தெஸ்ஸாலி யர்கள் சமாதான ஒப்பந்தத்திற்கான விசுவாசப் பிரமாணம் எடுத்துக் கொண்டார்கள். காலோனேஸஸ் நாட்டுடன் ஒரு சமாதான ஒப்பந் தம் ஏற்படுத்தப்பட்டது. பிலிப் மன்னனை அவன் விருப்பம்போல் நடக்கும்படி விட்டு விட்டு அத்தீனிய அரசியல் தூதுவர்கள் ஏதென் ஸுக்குத் திரும்பி வந்தார்கள்.

மாசிடோனியாவுடன் ஒத்துழைக்கக்கூடிய பகுத்தறிவுக் கொள்கையின் பாதையில் யூபூலஸ் ஏதென்ஸுக்கு வழிகாட்டிச் செல்வதா அல்லது அவன் டெமெஸ்த்தனிஸின் நாவன்மையின் காரணமாகத் தோற்கடிக்கப்படுவதா வென்பதைப்பொறுத்திருந்து பார்க்க வேண்டியதாயிற்று. பிலிப் மன்னனுடைய செயல்களின் நடைமுறை அத்தீனிய சபையின் முடிவான தீர்மானத்தைச் சார்ந்திருந்தது.

நெருக்கடி நிறைந்த இந்தக் காலத்தில் அத்தீனியர்களை நற்பாதையில் நடத்தக்கூடிய செல்வாக்குள்ள தலைவன் எவனும் அந்நாட்டிலில்லை. அத்தீனிய சபை இரு தலைவர்கள் கையில் சிக்கிக்கொண்டு தவித்தது. டெமெஸ்த்தனிஸ் தன்னுடைய நாவன்மையின் காரணமாக அத்தீனியர்கள் உண்மையான நிலைமையையுணர முடியாதபடி செய்துவிட்டான். யூபூலஸ் எட்டாண்டு காலமாக அதைத் தன்னுடைய விருப்பப்படியே ஆட்டிவைத்தான். இவர்கள் இருவரின் கட்சிகள் ஒன்றோடொன்று எதிர்த்துச் சொற்போர் நடத்திவந்தன. அரசியல் தூதுவர்கள் திரும்பிவந்தார்கள். டெமெஸ்த்தனிஸ் அவர்கள்மீது துரோகக் குற்றம் சாட்டினான். அவர்கள் பிலிப் மன்னனுக்குத் தங்கள் நாட்டைக் காட்டிக்கொடுத்துவிட்டார்களென்று வசைமாரி பொழிந்தான். சபை அவனுடைய வார்த்தையை நம்பியது. வழக்கமாக அரசியல் தூதுவர்களுக்கு நன்றி கூறும் சடங்கைச் சிறிது நாளைக்கு ஒத்திவைத்து விட்டார்கள். எஸ்ச்சினேஸும் அவனுடைய கட்சியினரும் தங்களுடைய கொள்கைதான் சரியான கொள்கையெனக் காரணம் காட்டிப் பேசினார்கள். கடைசியாக ஏதென்ஸ் மக்கள் இவர்களை நம்பினார்கள். அவர்கள் பிலிப் மன்னனோடு கலந்து பேசிய திட்டங்களை எடுத்துக் கூறினார்கள். ஏதென்ஸ் மக்கள் அவர்கள் கூறியவற்றைக்கேட்டு மனநிறைவடைந்தார்கள். பிலிப் மன்னனோடு ஒரு சமாதான ஒப்பந்தமும், ஒரு நேச உறவு ஒப்பந்தமும் செய்துகொள்வதென அச் சபை சட்டமியற்றியது. மேலும் போஸியர்கள் டெல்பியின் மீது தங்களுக்குரிய உரிமைகளை விட்டுவிட வேண்டுமென வற்புறுத்தியது. டெல்பியை ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தினிடம் ஒப்படைக்கபோஸியா மறுத்தால், படைபலத்தைக்கொண்டு அதை இணங்கச்செய்ய வேண்டுமென ஒரு தீர்மானம் நிறைவேறியது. போஸியர்களுக்கெதிராக எடுத்துக்கொண்ட இந்தத் திட்டத்தை டெமெஸ்த்தனிஸ் எதிர்க்கவில்லை. மேலும் பிலிப் மன்னனோடு சேர்ந்து ஒத்துழைக்க வேண்டுமென்ற பிரச்சினையின் உண்மையையுணர ஆரம்பித்துவிட்டார்கள்.

இக்காலத்தில் பிலிப் தெற்கு நோக்கிப் படையெடுத்து வந்தான். அப்பொழுது தெர்மாபைலே கணவாயை பாலேகஸ் காவல் புரிந்து வந்தான். அவனுக்கு ஸ்பார்ட்டா படையுதவி அளித்துவந்தது.

ஆனால் சில மாதங்களுக்கு முன்பு பாலேகஸ், பெல்லாவோடு சாமாதானத்திற்கான சமரசப் பேச்சுவார்த்தைகளை ரகசியமாக நடத்தி வந்தான். ஏதென்ஸ் அவனுக்கு எதிராக அளித்த ஓட்டின் காரணமாக அவன் சரணடைய நேரிட்டது. தடையின்றி அவன் விரும்பிய இடத்திற்குப்போக அனுமதிதர வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் அவன் சரணடைய ஒப்புக்கொண்டான்.

### தெர்மாபைலேயை பிலிப் கைப்பற்றுதல்

பிலிப் மன்னன் தெர்மாபைலேயை அடைவதற்குமுன் நேச மனப்பான்மையுள்ள இரு கடிதங்களை ஏதென்ஸுக்கு அனுப்பினான். அக்கடிதத்தில் போஸிஸ் போயிஷியா என்ற இரு நாடுகளின் விவகாரங்களைத் தீர்த்துவைக்க ஒரு படை அனுப்பும்படி கேட்டிருந்தான். பிலிப் அத்தீனியப் போர்வீரர்களைப் பணயப் பொருள்களாக நிறுத்திவைத்துக் கொள்ளக்கூடுமென டெமெஸ்த்தனீஸ் கூறினான். அத்தீனியர்கள் அவனுடைய வார்த்தையை நம்பி, தங்களுடைய படையை யனுப்பப் பயந்தார்கள். அவர்கள் அரசியல் தூதுவர்களை மட்டும் பிலிப்புவிடமனுப்பினர்கள். தூதுக் குழுவில் டெமஸ்த்தனீஸின் பெயரையும் சேர்த்தார்கள். டெமெஸ்த்தனிஸ் தூதுக் குழுவில் ஒருவனாகச்செல்ல மறுத்துவிட்டான். போஸியாவிற்கு எதிராக (அத்தீனிய சபை) ஏற்படுத்திய தீர்மானத்தை, பிலிப் மன்னனுக்கு எடுத்துச் சொல்லும்படி தூதுவர் கூறப்பட்டனர். இவ்விதமாக அத்தீனியர்கள், யூபூலஸ், டெமெஸ்த்தனிஸ் என்ற இரு தலைவர்களினால் ஆட்டிவைக்கப்பட்டுப் பெரிய காரியத்தைச் சாதித்திருக்க வேண்டும். அல்லது ஒன்றுமே செய்யாதிருந்திருக்க வேண்டும். அவர்கள் போஸியாவைக் கைவிட்டு விட்டார்கள். வடக்கு கிரீஸின் அரசியலில் பங்கு பெறும் உரிமையையும் அவர்கள் இழந்து விட்டார்கள்.

### போஸியர்களின் முடிவு

பிலிப் ஏதென்ஸை நம்பவில்லை யென்பது தெளிவாயிற்று. டெமெஸ்த்தனிஸின் கொள்கையின் காரணமாக அவன் ஏதென்ஸுடன் நட்பு பாராட்டுவதை விட்டுவிட்டான். இப்போது அவன் தீப்ஸுடன் சேர்ந்துகொண்டான். மேற்கு போயிஷியாவில் போஸியர்களுடைய ஆதிக்கத்திலிருந்த நகரங்களுக்கு விடுதலையளித்து,அவற்றைப் போயிஷியக் கூட்டமைப்பு நாடுகளுடன்சேர்த்து விட்டான். ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தின் கூட்டம் இப்போது கூடியது. அக் கூட்டத்தில் போஸியாவின் முடிவு தீர்மானிக்கப் பட்டது. அங்கத்தினர்களில் சிலர் போர்க்களத்திற்குச் செல்லத் தகுதிவாய்ந்த ஆண்களைச் செங்குத்தான பாறைகளுக்கு அழைத்துச்

சென்று, அங்கிருந்து கீழே தள்ளிக்கொன்றுவிட வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவந்தார்கள் ஆனல் பிலிப் மன்னன் அவர்களுடைய தீர்மானத்தை யேற்றுக்கொள்ளவில்லை. போஸியர்களுக்கு எளிதான தண்டனையளிக்க வேண்டுமென்று தீர்மானித்தான். போஸியர்கள் ஆம்பிக்ட்டியோனிக் கழகத்திலிருந்து விலக்கப்பட்டார்கள். அவர்களுடைய நகரங்களைக் கிராமங்களாக மாற்றினர்கள். பிலிப் மன்னன் எதிர்காலத்தில் டெல்பியன் ஆலயத்திற்கு போஸியர்களால் எவ்விதமான இடையூறும் ஏற்படாவண்ணம் அவர்களுடைய நகரங்களை அழித்துவிட்டான். போஸியர்கள் டெல்பி ஆலயத்தின் சொத்தைக் கையாண்டதற்காகவும் தண்டனை கொடுக்கப்பட்டது. அவர்களால் அழிக்கப்பட்ட கோயில் சொத்தின் மதிப்பைக் கணக்கிட்டார்கள். அதை அவர்கள் ஆண்டுக்கு 60 தாலந்து வீதம் தவணைகளாகத் திருப்பிக்கொடுத்துவிட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. லாசிடாமோனியர்கள் போஸியர்களின் ஆணவச் செயலுக்கு உடந்தையாக இருந்ததால் அவர்களையும் ஆம்பிக்ட்டியோனிக் கழகத்திலிருந்து விலக்கிவிட்டார்கள். பிலிப் டெல்பியன் ஆலயத்திற்குச் செய்த இந்தச் சேவைக்காக, கழகத்தில் காலியான அங்கத்தினர் பதவியை மாசிடோனியாவிற்குக் கொடுத்தார்கள்.

அத்தீனியர்கள் போஸியாவுக்கு எதிரான நடவடிக்கைகளிலீடுபட முன்னமேயே தீர்மானித்திருந்ததால், அவர்களுக்கு ஸ்பார்ட்டாவிற்கு அளித்ததைப்போன்ற தண்டனையளிக்கப்படவில்லை. இது அத்தீனியர்களுக்கு ஆறுதலளித்தது. எனினும் இப்போது அவர்கள் தங்களுடைய முன் யோசனையற்ற செய்கைக்காக வருந்தினர்கள். அவர்களடையவேண்டிய அனுகூலங்கள் போஸியாவிற்குக் கிடைத்துவிட்டதால் அவர்கள் மனம் புழுங்கினர்கள். தங்களுடைய நாட்டு அரசியல்வாதிகள் திறமையற்றவர்களென்று குறைகூறினர்கள். அவர்களுடைய தோல்விக்குக் காரணமாக இருந்தவன் டெமெஸ்த்தனிஸ். யூபூலஸின் திட்டங்கள் நிறைவேரு வண்ணம் அவன் தடை செய்து வந்ததுண்டு. இப்போது அவனும் அவனுடைய கட்சியினரும் குடிமக்களின் நம்பிக்கையையிழந்தார்கள்.

அவன் பிலிப் மன்னன் அட்டிகாவின்மீது படையெடுத்து வரப்போகிருனென்ற பயத்தைக் கிளப்பிவிட்டான். அத்தீனியர்கள் பிலிப் மன்னன் மீதிருந்த பயத்தின் காரணமாக அவர்கள் தங்களுடைய குடும்பங்களையும், எடுத்துவரக்கூடிய சொத்துக்களையும் கிராமங்களிலிருந்து நகரத்திற்குக் கொண்டுவந்து சேர்த்தார்கள். பிலிப் மன்னன் அவர்களுக்கு எழுதிய கடிதம் அவர்களுடைய பயத்தைப் போக்கிற்று.

**பிலிப் தலைமையில் பிதியன் போட்டிப் பந்தயங்கள், கி.மு. 346 ஏதென்ஸின் முரண்பாடு; சமாதான ஒப்பந்தத்தைப்பற்றி டெமெஸ்த்தனிஸின் சொற்பொழிவு.**

பிலிப் மன்னனுக்கு கிரேக்க நாட்டில் தன்னுடைய முயற்சியின் காரணமாகப் பெற்ற சிறந்த நிலையை அகில கிரேக்கர்களும் கூடியிருந்த கூட்டத்தில் காட்டுவதற்கான வாய்ப்பேற்பட்டது. சமாதான ஒப்பந்தம் செய்துகொண்ட ஆண்டில் பிதியன் போட்டிப் பந்தயங்கள் நடைபெறும் நாள் வந்தது. பேரேயின் சர்வாதிகாரி டெல்பிக்கு வரவும், டெல்பியின் பிதியன் விருந்தில் தலைமை தாங்கவும் செய்த முயற்சியையும், அவன் கொலைபாதகர்களால் தாக்குண்டதையும், நாம் நினைவுகூரவேண்டியிருக்கிறது. பேரேயின் நிராசையும் திட்டங்களும் இப்போது பெல்லாவைப் பிடித்துக்கொண்டன. அன்று கிரீஸ் பேரேயின் ஜேஸனுக்குப் பயந்தது; இபபோது மாசிடோனிய மன்னனை மண்டியிட்டு வணங்கிற்று. ஏதென்ஸ் மட்டும் ஒதுங்கி நின்றது. பிலிப் மன்னனைத் தலைவனாகத் தேர்ந்தெடுத்த ஆரம்பிக்ட்டியோனிக் கழகத்தின் கூட்டத்திற்கு ஏதென்ஸ் தன்னுடைய பிரதிநிதியை அனுப்பவில்லை; பண்டிகை விழாவில் கலந்து கொள்வதற்காகவும் யாரையும் ஏதென்ஸ் அனுப்பவில்லை. மாசிடோனியாவைக் கழகத்தில் சேர்த்துக்கொண்டதற்காகவே ஏதென்ஸ் அவ்வாறு ஒதுங்கி நின்றிருக்கிற தென்பதை பிலிப் மன்னன் நன்ருகப் புரிந்து கொண்டான். ஆனல் அதற்காக அவன் ஏதென்ஸுடன் சண்டையிட விரும்பவில்லை. அவன் ஏதென்ஸின் நல்லெண்ணத்தைப் பெறமுடியுமென்று நம்பினுன். அவன் அட்டிகாவின் மீது உடனே படையெடுத்துச் செல்ல விரும்பவில்லை. அவன் அட்டிகாவைத் தாக்கவேண்டு மென்று அவனுடைய நண்பர்களாகிய தெஸ்ஸாலியர்களும் தீபர்களும் விரும்பினுர்கள். அவன் ஏதென்ஸுக்கு ஓர் அரசியல் தூதுவனை அனுப்பி, தன்னை ஆம்பிக்ட்டியோனிக் கழகம் அதனுடைய தலைவனுக்கியதை ஏதென்ஸ் அங்கீகரிக்க வேண்டுமென்று கூறச் சொன்னுன். அவன் அனுப்பிய வரவேற்பு ஓர் இறுதி எச்சரிக்கையாக இருந்தது. டெமெஸ்த்தனிஸ் மாசிடோனியர்களை விரோதிக்கும்படியான பகையுணர்ச்சியை ஏதென்ஸ் மக்களின் உள்ளங்களில் உருவாக்கி யிருந்தான். ஆகையால் யூபூலஸும் அவனுடைய கட்சியினரும் ஏதென்ஸ் மக்களுக்குச் சொன்ன அறிவுரையை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை. ஏதென்ஸ் மக்கள் மாசிடோனியாமீது கொண்டுள்ள எதிர்ப்பு உணர்ச்சிகளைச் சமாளிக்க டெமெஸ்த்தனிஸாலும் முடியவில்லை. பிலிப் மன்னன் அனுப்பிய இறுதி எச்சரிக்கையை எதிர்த்து நிற்க ஏதென்ஸ் சபை தயாராக இருந்தது. டெமெஸ்த்தனிஸ் அவர்களுக்குச் சிறிது ஊக்கமளித்திருந்தால் ஆம்பிக்ட்டியோனிக்

கழகத்தின் முடிவை அவர்கள் எதிர்த்திருக்கக்கூடும். ஏதென்ஸ் நகரை பிலிப் மன்னனுடைய படை எடுப்பிலிருந்து காப்பாற்ற வேண்டிய பொறுப்பு டெமெஸ்த்தனிஸுக்கு ஏற்பட்டுவிட்டது. ஏனென்றால் அத்தீனியர்கள் தவறான வழிக்குச் செல்வதற்கு அவன் காரணமாக இருந்தான். இப்போது அவன் மாசிடோனியாவுடன் போரிலிறங்குவது தவறு எனப் பேச ஆரம்பித்து விட்டான். ஏதென்ஸின் வரலாற்றில் அந்நாடு இவ்வளவு கேவலமான நிலைமையில் ஒருபோது மிருந்ததில்லை.

## ஐசோகிராட்டிஸின் உள்நோக்கும் முன்னறிவும்

நாவன்மைப்படைத்த டெமெஸ்த்தனிஸும் நிதி நிபுணனான யூபூலஸும் ஏதென்ஸின் எதிர்காலத்தைப்பற்றிச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை. கிரீஸில் மாசிடோனியாவின் நிலைமையையும் உலகத்தில் கிரீஸின் நிலைமையையும் நன்குணர்ந்தவன், தொண்ணூறு வயதுடைய ஐஸோகிராட்டிஸ் என்பவனாவான். கட்சிகளின் அரசியல் போராட்டத்தில் அவன் கலந்து கொள்ளவில்லை. தன்னுடைய கருத்துக்களை அவர்களுக்கு அவன் எடுத்துச் சொல்லவுமில்லை. அப்படி அவன் தன்னுடைய கருத்துக்களை எடுத்துக்கூறிய போதிலும், அதைச் செவிகொடுத்துக் கேட்பாருமில்லை. அவன் ஏதாவது அறிவுரை கூறவிரும்பினால் அவனைப் புத்தகப் புழுவென்றும், உலக அனுபவமற்றவனென்றும் கூறக்கூடியவர்கள் பலரிருந்தார்கள். சூழ்நிலைகள் மாறிக் கொண்டு வருவதையும், எதிர்காலம் எத்தன்மையதாக இருக்குமென்பதையும் ஐஸோகிராட்டிஸ் நன்கறிந்திருந்தான். அவன் தன்னுடைய கருத்துக்களை பிலிப் மன்னனுக்கு ஒரு கடிதத்தின்மூலம் அறிவித்திருந்தான். கிரேக்கநாடுகளில் நடந்த பல சம்பவங்கள் அவன் ஞாபகத்திலிருந்தன. சிறிய நாடுகள் ஒன்று சேர்ந்து வல்லரசாக விரும்பியதையும், கடைசியில் அவை தங்களுக்குள் போரிட்டுக் கொண்டு அழிந்ததையும் அவன் அறிந்திருந்தான். கிரேக்க நாடுகளை ஒன்றாக இணைக்கும் காலம் வந்துவிட்டதென்று அவன் கருதினான். அவற்றை ஐக்கியப்படுத்தத் தேவையான அறிவும், ஆற்றலும் பணவசதியும் படைத்த ஒருவன் எழும்பவேண்டும். அவன் ஐக்கியப்பட்ட அகில கிரேக்க நாடுகளின் நடுநாயகமாக விளங்கவேண்டும். கிரேக்க நகர நாடுகள் தங்களுடைய இறைமையை இழந்துவிடாமல் சுதந்திர நாடுகளாகவே அவன் தலைமையில் வாழவேண்டுமென்றும் ஐசோகிராட்டிஸ் கருதினான். அவைகள் ஒரு மந்தையின் ஆடுகளைப்போலப் பொது நம்பிக்கைக்காகவும் பொது நேச உறவுக்காகவும் ஒரு பொதுவான தலைவனின் கீழ் சேர்ந்து வாழுமென்றும் அவன் அறிந்திருந்தான். பிலிப் மன்னனைப் போன்ற அவ்வளவு சிறப்பு வாய்ந்த தலைவனின்

கீழ் கிரேக்கநாடு நிறைவேற்றவேண்டிய பெரிய திட்டமிருந்தது. அத் திட்டம் நிராசையினுல் ஏற்பட்ட திட்டமாயிராமல் சமுதாயத்திற்கு ஏற்பட்டிருக்கும் நெருக்கடியைச் சமாளிக்கக் கூடிய திட்டமாயிருந்தது. கிரேக்க நாட்டில் மக்கள் தொகை பெருகியதையும், வாலிபர்கள் வயிறு வளர்ப்பதற்காக அந்நியர்களின் படைகளில் போர் வீரர்களாக அமர்ந்ததையும் நாம் ஏற்கெனவே அறிந்திருக்கிறோம். அவர்கள் சமூகத்திற்கு அபாயம் விளைவிப்பவர்களாகக் காணப்பட்டார்கள். ஐஸோகிராட்டிஸுக்குத் தெரிந்தமட்டில் மக்கள் தொகை பெருகுவதைச் சமாளிக்க குடியேற்ற நாடு தேவையாக இருந்தது. புதிய குடியேற்ற நாட்டை அந்நியர்களிடமிருந்துதான் அடையவேண்டும். பாரசீகத்தைத் தாக்கும் நாள் வந்துவிட்டது. பிலிப் மன்னன் வீரமிக்க இந்த முயற்சியில் கிரேக்க நாடுகளின் போர் வீரர்களுக்குத் படைத் தலைவனுகும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. அவன் பாரசீகப் பேரரசு முழுவதையும் வெல்ல முடியாவிட்டாலும், சிறிய ஆசியாவை சிலிசியாவிலிருந்து சினேப்பே வரையில் வென்று, அதைக் கிரேக்கர்களின் குடியேற்றத்திற்குக் கொடுத்துவிடுவானென்றும், அதனுல் மக்கள் தொகைப் பெருக்கத்தினுல் ஏற்பட்ட அபாயம் நீங்குமென்றும் ஐசோகிராட்டிஸ் எண்ணினுன்.

ஐஸோகிராட்டிஸ் பத்தாண்டுகளுக்குமுன் பிலிப் மன்னனுக்குக் கூறிய திட்டம் நிறைவேற ஆரம்பித்தது. திட்டத்தை நிறைவேறும்படி செய்யக் காரணமாக இருந்தவன் பிலிப் மன்னனல்லன். அவனுடைய மகனும் வாரிசு மாகிய அலெக்ஸாந்தர் இந்தத் திட்டத்தை நிறைவேற்ற ஆரம்பித்தான். அத்தீனியர்கள் எதிர் பார்த்ததைவிட மேலான முறையில் இத்திட்டம் நிறைவேறியதை நாமறிந்து கொள்ளக்கூடும். காலங்களின் அடையாளங்களையும் வரலாற்றின் அடிப்படை நோக்கத்தையும் ஐஸோகிராட்டிஸ் அறிந்திருந்தா னென்பதை நாம் உற்று நோக்கவேண்டி யிருக்கிறது. ட்ரோஜன் போர் முதல் ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கு மிடையே நடந்துவந்த போர்கள் ஒரே நிலையிலுள்ளதாக ஐஸோகிராட்டிஸ் அறிந்திருருந்தான். அந்த நீண்ட நாள் போர் ஒரு முடிவுக்கு வருமென்பதையும் அவன் முன்கூட்டித் தெரிந்துகொண்டான். அவன் தன்னுடைய நீண்டநாள் வாழ்க்கையின் பிற்பகுதியில் அந்த நாளின் வருகைக்காகக் காத்திருந்தான். சைரஸின் படைஎடுப்பும் எஜிஸிலாஸின் போர்களும் சிறப்புவாய்ந்த அத்திருநாளின் முன்னேடிகளாக இருந்தன. பேரேயின் ஜேஸன், அகமெம்னேன், சிமான் என்பவர்களுடைய வாரிசென்று ஒரு சமயம் கருதப்பட்டது. கடைசியாக எதிர்பார்த்தநாள் வந்துவிட்டது. எதிர்பார்த்த காரியத்தை நிறைவேற்றும் வாய்ப்பு இப்போது மாசிடோனிய மனிதனுக்குக் கிடைத்துவிட்டது. கிரீஸின் படையெடுப்பினுல் கிரேக்க

நாட்டில் ஏற்பட்ட நெருக்கடியைச் சமாளிக்க முடியுமென்று ஐஸோ கிராட்டிஸ் நம்பினான். நடைமுறை பகுத்தறிவுக் கேற்ற, ஐசோ கிராட்டிஸின் கோட்பாட்டை அவன் காலத்தில் வாழ்ந்தவர்களின் பழைமையில் தோய்ந்த கோட்பாட்டுடன் ஒப்பிடவேண்டிய தாயிற்று. பழைமையைச் சிறப்பித்துக் கூறியவர்களில் டெமெஸ்த் தனிஸ் முதல்வனாக இருந்தான். அத்தீனியர்கள் பெரிக்கிளிஸ் காலத்திலிருந்த கோட்பாட்டிற்குத் திரும்பவேண்டுமென்று அவன் அடிக்கடி கூறிவந்தான். அக்காலத்தைப் புதுப்பிக்கும் திறமை டெமெஸ்த்தனிஸ் காலத்திலிருந்த அத்தீனியர்களுக்கில்லை. காலம் மாறிவிட்டது. அத்தீனியர்களின் குணமும் பண்பும் மாறிவிட்டன. இப்போது அவர்கள் கற்பனை உலகில் வாழவிரும்பினார்களே தவிர உலகுடன் ஒன்றி வாழக் கற்றுக்கொள்ளவில்லை. சிறந்த அரசியல் வாதிகளையும் ஆழ்ந்து சிந்திப்பவர்களையும் தவறான வழிக்கு இழுத்துச் செல்லும்படியாக டெமெஸ்த்தனிஸின் கொள்கை யிருந்தது. ஆனால் ஐஸோகிராட்டிஸை அது தப்பான வழியில் இழுத்துச்செல்ல முடியவில்லை. அவன் வரலாற்றின் போக்கைப் புகழ்ந்துரைத்தான். கிரேக்கர்களின் முன்னேற்றத்துக்காக உலகம் வழி வகுத்துள்ளதையும் அவன் அறிந்துகொள்ள முடிந்தது.

## 7. சமாதானத்தின் இடைவேளையும் யுத்தத்திற் கான ஆயத்தங்களும்

### பிலிப்பை தெஸ்ஸாலிய நகரங்கள் தலைவனாகத் தேர்ந்தெடுத்தல்

கிரேக்க சமயத்தின் கழகத்தில் மாசிடோனியாவும் ஓர் உறுப்பு நாடாகிவிட்டது. பிலிப் மன்னன் அடுத்த ஓராண்டு அல்லது ஈராண்டை மாசிடோனியக் கடற்படையை வலுவாக்குவதில் கழித்து வந்தான். அவன் தெஸ்ஸாலியாவின் நிர்வாகத்தைச் சீரமைப் பதிலும் பெலப்போனிஸியாவில் தன்னுடைய செல்வாக்கை நிலை நாட்டுவதிலும் கழித்துவந்தான். தெஸ்ஸாலி இப்போது மாஸிடோ னியாவுடன் சேர்ந்துவிட்டது. தெஸ்ஸாலிய நகரங்கள் இப்போது மாசிடோனிய மன்னனைத் தங்களுடைய ‘ ஆர்க்கன் ’ என்றழைக்கப் படுகிற தலைவனாக்கிற்று. தலைவனை ‘தாகஸ்’ என்றழைக்கப்படும் பழைய பெயரை அடியோடு தள்ளிவிட்டது. அவன் தெஸ்ஸாலியை நான்கு பிரிவுகளாகப் பிரித்து ஒவ்வொரு பிரிவிலும் ஒரு கவர்னரை நியமித்தான். கொரிந்திய பூசந்திக்குத் தெற்கில் தீபஸ் நாடு கடைப்பிடித்து வந்தக் கொள்கையைப் பின்பற்றினான். ஸ்பார்ட்டாவை எதிர்த்து நிற்பதற்கு அங்குள்ள நாடுகளுக்கு ஒரு நண்பன் தேவையாக இருந்தான். பிலிப் மன்னனை அந்நாடுகள் தங்க ளுடைய நண்பனாக ஏற்றுக்கொண்டன. மெஸ்ஸேனியா, மெகாலோ

போலிஸ், எலிஸ், ஆர்கோஸ் முதலிய நாடுகளுக்கு அவன் ஓர் நண்பனுகிவிட்டான். வெண்கலத்தாலான அவனுடைய உருவச் சிலையை மெகாலாபோலிஸில் நிறுத்திவைத்தார்கள். ஆர்காஸ் தனிப்பட்ட முறையில் மாசிடோனியாவுடன் நட்புக் கொண்டாடியது. ஆர்கோஸிலுள்ளவர், மாசிடோனியாவைத் தங்களுடைய பூர்வீக நாடு என்று உரிமை கொண்டாடினுர்கள்.

### ஏதென்ஸில் சமாதான ஒப்பந்தம்

ஏதென்ஸுடன் சமரசம் செய்துகொள்ள வேண்டுமென்ற நம்பிக்கையை பிலிப் மன்னன் கைவிட்டுவிடவில்லை. லஞ்சம் கொடுத்து ஆட்களை வசப்படுத்துவதில் அவனை மிஞ்சியவர்கள் அக்காலத்தில் யாருமே இருந்ததில்லை. தன்னுடைய அத்தீனிய ஆதரவாளர்களுக்குப் பொன்கொடுத்து அவர்களைத் தன்மீது நம்பிக்கை கொள்ளும்படி செய்தான். அத்தீனியர்களும் கொடும் போரைவிட சமாதானத்தையே நாடினுர்கள். பிலிப் மன்னனேடு நட்புபாராட்டிய அரசியல் கட்சி இன்னும் வலுவுள்ளதாகவே இருந்தது. அக்காட்சியில் யூபூலஸ் செலவாக்குப் படைத்தவனு யிருந்தான். அவன் அரசியல் வாழ்க்கையிலிருந்து விலகிவிட்டான். எஸ்ச்சினேஸும் பிலோகிராட்டிஸும் சமாதானம் செய்து கொள்வ தற்கான பேச்சு வார்த்தைகளிலீடுபட்டிருந்தார்கள், நடுநிலை தவருத போஸியோனும் அக்கட்சியிலிருந்தான். அவன் ஓர் சிறந்த போர் வீரனுகவும், அரசியல்வாதியாகவும் விளங்காவிடினும் அந்நாட்டில் தனிச்சிறப்புற்றிருந்தான். ஏதென்ஸிஸ் அவன் காலத்தில் வாழ்ந்த தலைவர்களில் கண்ணியமுள்ளவனுக இருந் தான். பணம் அவனை நடுநிலைமையிலிருந்து பிரித்துவிடவில்லை. அத்தீனியர் அவனுடைய சிறப்பான பண்புகளைக் கண்டு அவனிடம் நம்பிக்கை கொண்டார்கள். அவன் ஓர் சிறந்த படைத்தலைவனுக இல்லாவிடினும், அத்தீனியர்கள் அவனை நாற்பத்தைந்து தடவை நாட்டின் தலைவனுகத் தேர்ந்தெடுத்ததுண்டு. அவனுடைய சிறப் பான பொது அறிவும், நாணயமும், அவன் கட்சியில் ஒரு பயனுள்ள உறுப்பினனுக்கின.

### கொடும்போரை ஆதரிக்கும் கட்சி

சமாதான உடன்படிக்கை நிலையான உடன்படிக்கையாக விளங்கக் கூடாதென்று உழைத்து வந்தவன் டெமெஸ்த்தனிஸ் ஒருவன்தான். அவனுக்கு ஹைப்பரைட்ஸ், லைகர்கஸ், மற்றும் பலர் ஆதரவாக இருந்தார்கள். பிலிப்பிற்கு எதிராக ஏதென்ஸ் மக்கள் கொதித்தெழுவதற்கான வேலையில் அவன் முனைந்திருந்தான். மேலும் எதிர்கட்சித் தலைவர்களை அழித்துவிடும் திட்டத்திலும் ஈடுபட்டான். இக்காலம், சமாதானத்தை விரும்பும் கட்சியின

ருக்கும். போரை விரும்பும் கட்சியினருக்கும் நடந்த போராட்ட ஆண்டுகளாக விளங்கின. டெமெஸ்த்தனிஸின் செல்வாக்கு அவனுக்கு வெற்றியின்மேல் வெற்றியைக் கொண்டுவந்து கொடுத்தது.

**டெமெஸ்த்தனிஸ் எஸ்ச்சினேஸின்மீது துரோகக் குற்றம் சாட்டுதல், கி.மு. 346-5.**

பிலிப் மன்னன் ஆம்பிக்ட்டியோனிக் கழக அங்கத்தினனான நாள் முதல் டெமெஸ்த்தனிஸ் எதிர்கட்சித் தலைவர்களை ஒழித்துக் கட்டுவதில் கண்ணும் கருத்துமாக இருந்தான். மாசிடோனியாவின் அரசனிடமிருந்து எஸ்ச்சினேஸ் பணம் பெற்றுக்கொண்டு, சமாதானம் செய்துகொள்வதற்காக நடத்திய பேச்சுக்களைத் தடை செய்ததின் மூலம் நாட்டைக் காட்டிக்கொடுத்து விட்டான் என்ற ஓர் துரோகக் குற்றத்தை அவன் மீதுக் கொண்டுவந்தான். தீபர்கள் அடைந்த வெற்றியைக் கண்டு அத்தீனியர்கள் எரிச்சலடைந்திருந்தார்கள். டெமெஸ்த்தனிஸ் ஒரு பெருங் குற்றத்தைச் செய்திராமலிருந்திருந்தால் அவன் எஸச்சினேஸை எளிதில் ஒழித்துக்கட்டியிருக்கக்கூடும். எஸ்ச்சினேஸ், டிமார்ச்சஸ் (Timarchus) என்பவன் மீது ஓர் பெரும் பழியைச் சுமத்தினான். அப்பழிச் செயலுக்கு டெமெஸ்த்தனிஸும் ஒரு காலத்தில் உடந்தையாக இருந்தான். டிமார்ச்சஸின் தனிப்பட்ட வாழ்க்கை தீயவழியிலிருந்தது. அதனால் அவன் குடிஉரிமையை இழந்திருந்தான். அவனுடைய குற்றங்கள் வெளிப்படுமானால் அவை டெமெஸ்த்தனிஸையும் பாதித்திருந்திருக்கும். ஆகையால் டெமெஸ்த்தனிஸ் எஸ்ச்சினேஸை ஒழித்துக் கட்டும் முயற்சியை விட்டுவிட்டான்.

**பெலப்போனிஸில் டெமெஸ்த்தனிஸ், கி.மு. 344; இரண்டாவது பிலிபிக்.**

பெலப்போனிஸியாவில் பிலிப் மன்னனுக்கிருந்த செல்வாக்கை அழிக்க, டெமெஸ்த்தனிஸை பெலப்போனிஸியாவிற்கு அனுப்பினார்கள். அவன் தன்னுடைய நாவன்மையின் மூலம் பெலப்போனீஸிய நகரங்களில் பிலிப் மன்னனுக்கு எதிர்ப்பை யுண்டுபண்ணும் வேலையைச் செய்துவந்தான். ஆனால் அவனுக்குச் செவி சாய்ப்பவர்கள் அந்நகரங்களில் ஒருவருமில்லை. பிலிப் மன்னன் ஏதென்ஸின் மீது குறைகூற வழி ஏற்பட்டது. பிலிப் ஏதென்ஸுக்கு ஓர் அரசியல் தூதுவனை அனுப்பி, அவன் மூலமாக அத்தீனியர்களின் தவறான எண்ணங்களை எடுத்துக் காட்டினான். டெமெஸ்த்தனிஸ் மேலும் மாசிடோனியாவைத் தாக்கிப் பேசி வந்தான், ஏதென்ஸை அழித்துவிடுவது பிலிப் மன்னனின் நோக்கமென்று பொய் வதந்திகளைக் கிளப்பினான். ஆனால் அவன் பேசியவைகளுக்கு எவ்விதமான ஆதாரங்களு மிருக்கவில்லை.

ஹாலுஸ்

பிலிப் மன்னன் ஏதென்ஸைப் பற்றிக் கூறிய குறைபாடுகளுக்கு அதனுடைய மறுமொழி என்னவென்பதைப் பற்றி நாம் அறிந்து கொள்வதற்கு ஆதாரங்களில்லை. சமீபத்தில் ஏற்பட்ட சமாதான ஒப்பந்தம் நியாயமற்றதென்றும், ஹாலுஸைப் பற்றிய பிரச்சினையை தீர்த்துவைப்பதில் தனக்கும் உரிமையுண்டென்றும் ஏதென்ஸ் மறுமொழி கூறிஇருக்கக்கூடும். தெஸ்ஸாலியின் கடற்கரையோரமாகவுள்ள ஹாலுஸ்தீவு ஒரு சமயம் அத்தீனியக் கூட்டமைப்பிலிருந்தது. அதைப் பின் கடற்கொள்ளைக்காரர்கள் கைப்பற்றி, அங்கிருந்த பிலிப்புவினுடைய போர் வீரர்களை விரட்டிவிட்டார்கள். சமாதான ஒப்பந்தத்திலுள்ள பிழைகளைப் புரிந்துகொள்வதற்காக பிலிப் ஓர் அரசியல் தூதுவனை ஏதென்ஸுக்கு அனுப்பினன். ஏதென்ஸுக்கு ஹாலோனேஸ் நாட்டைக் கொடுத்துவிடுவதாகவும் சொன்னன். ஹாலுஸ்தீவு ஏதென்ஸுக்கோ அல்லது மற்ற நாடுகளுக்கோ எவ்வகையிலும் பயனற்ற தீவாக இருந்தது. ஆனல் இப்போது அரசியல் தொடர்பான போராட்டத்தில் ஒரு சிறப்புள்ள நாடாகக் கருதப்பட்டது. டெமெஸ்த்தனிஸ், ஹாலோனேஸை மாசிடோனியர்கள் விரும்பி இலவசமாகக் கொடுப்பதை மறுத்துவிட வேண்டுமென்று தூண்டினன். ஏனென்றல் ஹாலோனேஸ் அத்தீனியர்களுக்குச் சொந்தமென்றும், அதை அவர்கள் மீண்டும் அடைய உரிமை யுள்ளவர்களென்றும் காட்டினன். பயனற்ற ஹாலோனேஸ் தீவை, திரும்பப் பெறுவதோடு சமாதான ஒப்பந்தத்தில் மாறுதலையும் ஏற்படுத்த வேண்டுமென்று ஏதென்ஸ் கோரியது. சமாதான ஒப்பந்தத்தில் அவரவர்கள் வசமிருந்த நாடுகளை அவரவர்கள் வைத்துக் கொள்வதென்று எழுதப்பட்ட வாசகத்தை மாற்றி, இரு நாடுகளுக்கும் சட்டப்படி சொந்தமான நாடுகளைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டுமென்று மாற்றி எழுதவேண்டுமென்று வற்புறுத்தினர்கள். இப்போது அத்தீனியர்கள் எழுப்பிய பிரச்சினை பகுத்தறிவுக்கு மாறுன பிரச்சினையாக இருந்தது. இவ்விதமான அடிப்படையில் சமாதான ஒப்பந்தம் ஏற்படுவது மிகவும் கடினம். ஒப்பந்தம் ஏற்பட்டபிறகே பிலிப் தெரேஸிலுள்ள கோட்டையைப் பிடித்துக்கொண்டான். ஏதென்ஸ் அதைபற்றியும் குறைகூறியது. பிலிப் இப் பிரச்சினையைப் பொறுத்த மட்டில் ஒழுங்காக நடந்துகொண்டான். இச் சிக்கலை நடுவர்களுடைய தீர்ப்புக்கு விடவேண்டுமென்று பிலிப் மன்னன் கூறினன். தகுதிவாய்ந்த நடுவர்கள் கிடைப்பது அரிதென்றும், நடுவர்களின் தீர்புக்கு இணங்க முடியாதென்றும் ஏதென்ஸ் மறுத்துவிட்டது. இவ்விதமாக ஏதென்ஸ் தன்னை ஓர் உண்மையற்ற நாடாகக் காட்டிக் கொண்டது. அதனுடைய இந்தத் திட்டம் ஓர் விளையாட்டுத் தனமான திட்டமாக இருந்தது. ஏதென்ஸ் இவ்விதமான முரண்

பாடுள்ள நோக்கம் கொள்வதற்கு டெமெஸ்த்தனிஸ் பொறுப்புள்ளவனுக இருந்தான். ஏதென்ஸ் மாசிடோனியாவுடன் முரண்பாடு கொண்டிருக்கும்படி செய்வதும் அது மாசிடோனியாவுடன் சமரசமாக வாழாதிருப்பதைத் தடுப்பதும் டெமெஸ்த்தனிஸின் முதன்மையான நோக்கமாக இருந்தது.

**பிலோகிராட்டிஸின் மீது குற்றச்சாட்டு; அவன் நாட்டைவிட்டு ஓடிவிடுதல், கி.மு. 343; எஸ்ச்சினேஸின் மீதுக் குற்றச்சாட்டு.**

ஏதென்ஸில், டெமெஸ்த்தனிஸ், அவனுடைய கூட்டாளிகள் முதலியவர்களின் செல்வாக்கு உயர்ந்திருந்தது. இப்போது அவர்கள் தங்களுடைய எதிர்க்கட்சிக்காரர்களைத் தாக்க ஆரம்பித்து விட்டார்கள். அது பிலிப் மன்னனையும் பாதித்துவிட்டது. சமாதான ஒப்பந்தம் ஏற்படுவதற்கு பிலோகிராட்டிஸ் உடந்தையாக இருந்தான். அவன் மீது ஹைபெரைட்ஸ் ஒரு துரோகக் குற்றத்தைக் கொண்டுவந்தான். வழக்கு விசாரணை ஆரம்பமாயிற்று. பிலோகிராட்டிஸ் நீதிமன்றத்திற்கு வராமல் ஓடிவிட்டான். ஆகையால் அவனுக்கு நீதிமன்றத்தை அவமதித்த பெருங்குற்றத்திற்காக மரண தண்டனையளிக்கப்பட்டது. பிலோகிராட்டிஸின் அறிவைக்கண்டு டெமெஸ்த்தனிஸ் மகிழ்ச்சியடைந்தான். அவன் எஸ்ச்சினேஸை அடுத்தபடியாகத் தீர்த்துகட்டிவிடத் தீர்மானித்து, அவன் மீதும் துரோகக் குற்றம் சுமத்தினன். எஸ்ச்சினேஸ் டெமெஸ்த்தனிஸுக்குப் பயந்து கொண்டு ஓடிவிடவில்லை. அவனை எதிர்த்து நின்று தன்மீது சாட்டப்பட்ட குற்றம் ஆதாரமற்றதென்று நிருபிக்கத் துணிந்து நின்றான். அத்தீனியர்களுக்குப் பழங்காலத்தில் நடந்த அரசியல் சம்பந்தமான விசாரணைகளில் ஒன்ருகிய இந்த விசாரணையை நேருக்குநேர் பார்த்துச் சாட்சி பகரும் வாய்ப்புக்கிடைத்தது. விசாரணையில் இரு கட்சியினரும் ஒருவரையொருவர் தாக்கிப் பேசி நீதிபதிகளைத் திணறவைத்ததை இன்றும் நாமறிந்துகொள்ள முடிகிறது. விசாரணை முடிந்தவுடன் இருவரும் தங்களுடைய சொற்பொழிவுகளை வெளியிட்டனர். அவ்வெளியீடுகள் எதிர் காலத்திலுள்ளவர்களுக்குப் போதனையாக இருக்கின்றன. பொய்யும் புரட்டும் நிரம்பியதும், அரசியல் பகையின் உணர்ச்சியுள்ளதுமான அவர்களுடைய சொற்பொழிவுகளிலிருந்து, பிலோகிராட்டிஸ் சமாதான ஒப்பந்தம் ஏற்படுவதற்கு வகுத்த வழிவகைகளை வரலாற்று ஆசிரியர்கள் அறிந்துகொள்கிருர்கள்.

**டெமெஸ்த்தனிஸ் சமாதானத் தூதுக்குழுவினர் மீதுச் சுமத்திய குற்றம்; எஸ்ச்சினேஸ் விடுதலையடைதல்.**

டெமெஸ்த்தனிஸின் சொற்பொழிவு பசப்புரைக் கலையில் வெற்றியடைந்தது. அரசியல் சம்பவங்களைப்பற்றிய ஞாபகசக்தி பொதுமக்களுக்கு மிகவும் குறைவானதென்பதை நன்கறிந்தவர்களில் டெமெஸ்த்தனிஸைப்போல் யாருமிருந்ததில்லை. சமாதான ஒப்பந்தம் ஏற்படுவதற்காக உழைத்துவந்தவர்களின் நினைவாற்றலை இப்போது டெமெஸ்த்தனிஸ் ஆராய ஆரம்பித்துவிட்டான். ஒப்பந்தம் ஏற்பட்டு நான்கு ஆண்டுகளே ஆகின்றன. டெமெஸ்த்தனிஸ் தான் பேசுவதைக் கேட்பவர்களின் ஞாபகப்படுத்துவது பலவீனமானதென்பதையறிந்து, ஒப்பந்தம் ஏற்படுவதற்குத் தான் பொறுப்பாளியாக இருந்தும் அதை மறுத்தான். போசியாவைக் கைவிட்ட பொறுப்பு எஸ்ச்சினேஸைச் சாருமென்றும் கூறினான். எஸ்ச்சினேஸைக் குறைகூற எவ்வித ஆதாரமுமில்லை. அவன் அதற்காகப் பொருள் பெற்றானென்பதை நிரூபிக்க வழியுமில்லை. டெமெஸ்த்தனிஸ் தன் மீது சுமத்திய குற்றச்சாட்டிற்கு எஸ்ச்சினேஸ் தக்க பதிலுரைத்தான். அவனுடைய சொற்பொழிவு டெமெஸ்த்தனிஸுடைய சொற்பொழிவிற்குத் தாழ்ந்ததன்று. சிறந்த பண்புகளுள்ள யூபூலஸும் போஸியோனும் எஸ்ச்சினேஸை ஆதரித்துப் பேசினார்கள். எனினும், பிலிப்புவுக்கு எதிரான மனப்பான்மையுடைய பொதுமக்களின் தீர்ப்பிலிருந்து விடுதலையடைவது எஸ்ச்சினேஸுக்கு மிகவும் கடினமாயிற்று.

எஸ்ச்சினேஸும் மற்றவர்களும் பிலிப் மன்னனிடமிருந்து பொருள் வாங்கியது உண்மையென நாம் நம்பலாம். எனினும் பணம் வாங்கியதற்கும், நாட்டைக் காட்டிக்கொடுப்பதற்கும், இந்தச் சந்தர்ப்பத்தில் சம்பந்தமேயில்லை. ஓர் அரசியல் தலைவன் பணம் வாங்கிக்கொண்டு நாட்டைக் காட்டிக்கொடுத்துவிட்டானென்ற உண்மை வெளிப்படுத்தப்பட வேண்டும். பொதுப் பணியிலீடுபட்டிருப்பவர் அந்நியர்களிடமிருந்து பணம் பெற்றுக்கொள்வதைக் கிரேக்கர்கள் பெருங்குற்றமாகக் கருதியதில்லை. ஆனால் கீழான முறையில் பொருள் பெறுதவர்களை அவர்கள் தெய்வமாகக் கொண்டாடினார்கள். டெமெஸ்த்தனிஸ் தன்னுடைய அரசில் வாழ்க்கையில் எந்த அந்நியனிடமிருந்தும் லஞ்சம் வாங்கியதில்லை. ஆகையால் அவனுக்கு மக்களுடைய செல்வாக்குக் கிடைத்தது. பிலிப் பொன் கொடுத்து பல நாடுகளுடன் நட்பு கொண்டாடியதுண்டு. அத்தீனியத் தூதுக் குழுவினரின் அரசியல் நோக்கம் தன்னுடைய நோக்கத்திற்கு ஒத்திருந்தபடியால் அவன் அவர்களுக்குப் பொன் கொடுத்ததில் எவ்விதமான ஐயப்பாடும் எழவில்லை. எஸ்ச்சினேஸும் அவனுடைய நிலையிலுள்ளவர்களும் செல்வந்தர்களல்லர். அவர்கள் தங்களுடைய முழுநேரத்தையும் அரசியலிலீடுபடுத்த அவர்களுக்குப் பணம் தேவையாக இருந்தது. பிலிப் மன்னன் அவர்களுடைய தேவையைப் பூர்த்தி செய்திருக்கக்கூடும்.

**மெகாரா, சால்சிஸ் நாடுகளுடன் ஏதென்ஸின் நேச உறவு கி.மு. 343-2. யுபோயாவில் மாசிடோனிய ஆலிகார்க்குகள்.**

பிலிப் அரசன், அட்டிகாவின் மேற்கிலும் வட கிழக்கிலுமுள்ள நாடுகளில், ஏதென்ஸுக்கு எதிரான பணியிலிறங்கினன். அட்டிகா விற்கு வடக்கிலுள்ள மெகரா, பிலிப் மன்னனுடைய தூண்டுதலுக்கு இணங்கவில்லை. அந்நாடு ஏதென்ஸுடன் பழைய பகையை மறந்து நட்புகொண்டது. யுபோயா மாசிடோனியாவின் வலையில் விழுந்து விட்டது. எரிட்டிரியாவிலும், ஒரேயஸிலும் ஆலிகார்க் ஆட்சி முறை ஏற்பட்டது. அவை பிலிப் மன்னனின் ஆதரவிலிருந்தன. சால்சிஸ், மாசிடோனியாவுடன் சேர்ந்து ஆலிக்கார்க் ஆட்சிமுறை யைக் கொண்டுவர மறுத்துவிட்டது. அது இப்போது ஏதென் ஸுடன் சேர்ந்து கொண்டது. அந்நாட்டினர் மக்களாட்சி முறையில் மோகம் கொண்டவர்கள்.

**இப்பிரஸில் பிலிப்**

கிரீஸில் பல சிறிய நாடுகள் ஏதென்ஸின் நட்பை நாடி அதனுடன் சேர்ந்துகொண்டன. டெமெஸ்த்தனிஸ் விரும்பியதைப் போலவே மாசிடோனியாவிற்கு எதிராக ஒரு கூட்டமைப்பு ஏற்பட வாய்ப்புண்டாயிற்று. பிலிப் ஈப்பிராட்டின் இளவரசியை மணந்து கொண்டான். அவளுடைய தந்தை இறந்துவிட்டார். அப்போது அரசுகட்டிலுக்காகப் போட்டி ஏற்பட்டது. அப்போட்டியில் பிலிப் தலையிட வழியுண்டாயிற்று. போட்டி அவனுடைய மனைவியின் சகோதரன் அலெக்ஸாந்தருக்கும், சிற்றப்பன் ஆறிப்பாஸுக்கு மிடையே ஏற்பட்டது. பிலிப் அவளுடைய சகோதரனுக்கு ஆதர வளித்தான். அவனை அரசுகட்டிலில் அமரச்செய்தான். அந் நாட்டில் தன்னுடைய செல்வாக்கை நிலைபெறச் செய்தான். அந்நாட்டிலிருந்து கொரிந்திய விரிகுடாவிற்குச் செல்வதற்கான பாதை இருப்பதை பிலிப் தெரிந்துகொண்டான். கிரீஸுக்கு ஈப்பிராட்டிலிருந்து மேற்குப் பக்கமாகச் செல்லும் மார்க்கத்தையும் அவன் அறிய நேர்ந்தது. ஆச்செரோன் நதிக்கும் ஒரோபஸ் நதிக்குமிடையிலிருந்த காஸோப்பியா (Cassopia) நாட்டை வென்று, ஈப்பிராட் கூட்டமைப்பிற்குக் கொடுத்துவிட்டான். அவனுடைய மைத்துனன் அக்கூட்டமைப்பின் தலைவனுக இருந்தான். ஈப்பிரஸ் தெற்கு நோக்கி முன்னேறுவதற்கு ஆம்பரேஸியா தடையாக இருந்தது. பிலிப் அந்நாட்டைக் கைப்பற்றத் திட்டமிட்டான். அவன் கைப்பற்ற விரும்பிய நாடுகளில் நௌபாக்ட்டஸ் முதன்மை யாக இருந்தது. இக்காலத்தில் நௌபாக்ட்டஸ் அச்சேயர்களிட மிருந்தது. அவனுடைய திட்டங்களுக்கு எட்டோலியர்கள் உதவி யாக இருந்தார்கள். அவர்களும் நௌபாக்ட்டஸ் தங்களுக்குக் கிடைக்க வேண்டுமென்று விரும்பினுர்கள். ஆம்ரேசியோட்

மக்களும், ஆகார்ஞனியர்களும், எயிட்டோலி நாட்டின் பகைவர்கள். ஆம்பரேசியோட்டினரையும், ஆகார்ஞனியர்களையும் ஈப்பிரஸ் நாட்டின் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர பிலிப் விரும்பினுன். அவனுடைய திட்டத்தையறிந்த இந்நாடுகளின் மக்கள் அதிர்ச்சியடைந்தார்கள். ஆகவே ஆம்பரேஸியா, ஆகார்ஞனியா, அச்சேயா, கார்ஸிரா முதலிய நாடுகள் ஏதென்ஸின் நட்பை நாடின.

**பிலிப்பின் தெரேஸியப் படையெடுப்பு, கோடை கி. மு. 342; வசந்தம் கி.மு. 341.**

பிலிப் படையெடுப்பதற்குத் தக்க காலம் நோக்கியிருந்தான். செர்ஸோபிளிப்ட்டஸின் நடவடிக்கைகள் பிலிப் மன்னனைபோரிலிறங்கும்படி செய்தது. அவன் தெரேஸைக் கைப்பற்றத் தீர்மானித்தான். பாரசீகப் பேரரசனை ஐரோப்பாவிலிருந்து விரட்டிய கால முதல், தெரேஸ், அந்நாட்டு அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களின் ஆட்சியின் கீழிருந்தது. தெரேஸ், சிட்டால்செஸ், கோட்டிஸ் என்ற அரசர்கள் சித்தரமோனிலிருந்து டானியூப் முகத்துவாரம் வரையிலுள்ள நாடுகளை ஆண்டுவந்தார்கள். மறுபடியும் தெரேஸ் அந்நியர்களின் ஆட்சியின் கீழ்க் கொண்டுவரப்பட்டது. இவர்கள் ஆசியா நாட்டுப்புறச் சாதியார்களாயிராமல் ஐரோப்பியர்களாக இருந்தார்கள். இவர்கள் தெரேஸ் நாட்டுப் போர் வீரர்களையும் ஆசியாவின் மீது எடுக்கப்போகும் படையெடுப்பில் அழைத்துச் சென்று, பாரசீகர்களைப் பழிக்குப்பழி வாங்குவர். டாரியஸின் திரேஸ் படையெடுப்பைப் பற்றி நமக்கு எவ்வளவு தெரியுமோ, அவ்வளவுதான் பிலிப் மன்னனின் தெரேஸ் படையெடுப்பைப் பற்றியும் நமக்குத் தெரிகிறது. டாரியஸ் வடக்கிலுள்ள ஆறுகளைக் கடந்து சித்தியன் நாடு வரையில் படை எடுத்துச்சென்ருன். பிலிப் அவ்விதமான முயற்சிகளில் ஈடுபடவில்லை. அவன் தன்னுடைய யுத்தங்களைப் பத்து மாதங்களுக்குள் முடித்துக்கொண்டான். அந்தக் குளிர் பிரதேசத்தில் குளிர்காலம் முழுவதையும் போர்க்களத்திலேயே கழித்தான் எனவே, அவன் குளிர் சுரத்தால் அவதிப்பட்டான். அவன் எத்தகைய இடையூறும், துன்பமும் வரினும் அவற்றைப் பொருட்படுத்தாமல் கடினமாக உழைப்பவன். டெமெஸ்த்தனிஸ் பிலிப் மன்னனைப்பற்றிப் புகழ்ந்து பேசி இருக்கிருனென்ருல் அவனுடைய விடாமுயற்சியும் சலியாஉழைப்பும் மிகச் சிறந்தவையாக இருந்திருக்கவேண்டும். அவன் பிலிப் மன்னனைப்பற்றிக் கூறுவதாவது. 'பேரரசை ஏற்படுத்தவும், அதிகாரத்தை நிலைநாட்டவும் மேற்கொண்ட போரில் அவனுடைய கண்களில் ஒன்று தோண்டி எடுக்கப்பட்டது. அவனுடைய கழுத்துப்பட்டை எலும்பில் ஒன்று முறிக்கப்பட்டது. அவனுடைய ஒரு கையும் ஒரு காலும் முடமாக்கப் பட்டன. அதிர்ஷ்ட தேவதை அவனுடைய உடலில் எந்தப் பாகத்தை

விரும்பினுலும் அவன் அதை எடுத்துக்கொள்ளும்படி விட்டு விட்டான். அவள் எடுத்துக்கொண்டது போகப் பாக்கியுள்ள அவயவங்கள் நற்பேற்றையும் புகழையும் அடைய வேண்டுமென்பதே அவனுடைய நோக்கம்.''

### பிலிப்போபோலிஸ் ஏற்பட்டது

தெரேஸிய மன்னன் தன் அரசை இழந்தான். அவனுடைய நாடு மாசிடோனியாவின் மாநிலங்களில் ஒன்ருகிவிட்டது. பிலிப்பின் பெயரை நினைவூட்டும் நகரம் இன்றும் அங்கே இருக்கிறது. தெரேஸில் ஹெர்பஸ் ஆற்றின் கரையிலிருக்கிற பிலிப்போபோலிஸ் அவன் ஏற்படுத்திய நகரங்களிலொன்று.

### செர்சோனேசே மீது டெமெஸ்த்தனிஸின் சொற்பொழிவு, கி.மு. 341; மூன்ருவது பிலிப்பிக்.

பிலிப் தெரேஸை வென்றது, சமாதான ஒப்பந்தத்தை மீறியக் குற்றத்தைச் சாராது. ஒப்பந்தத்தில் செர்சோபிளிப்ட்டஸ் ஏதென்ஸின் நேச நாடாகச் சேர்க்கப்படவில்லை. பிலிப் ஏதென்ஸை ஆக்கிரமித்ததால், கருங்கடலின் வாயிலண்டை ஏதென்ஸுக்கு இந்தச்செல்வாக்கு பாதிக்கப்பட்டது. மாசிடோனியாவின் எல்லை செர்சோனேயின் எல்லைவரையில் விரிவடைந்து விட்டது. பிலிப்பின் ஆக்கிரமிப்பிலிருந்து செர்ஸோனேஸைக் காப்பாற்றக் கூடிய தெரேஸின் மன்னர்கள் இப்போது தங்களுடைய நாடுகளை இழந்துவிட்டார்கள். பிலிப்பும் ஏதென்ஸும் ஒருவரையொருவர் பகைத்துக்கொள்வதை விரும்பாவிடினும், டெமெஸ்த்தனிஸ ஒருவன் மட்டும் பிலிப்போடு போர் தொடுப்பதை விரும்பினுன். டெமெஸ்த்தனிஸ் செர்ஸோனேஸேயில் ஏதென்ஸின் நலனைப் பாதுகாக்க, சில போர்க்கப்பல்களையும் கூலிப்படையினரையும், டியோபைத்தேஸ் என்ற பெயருள்ள ஒரு முரடனின் தலைமையில் அனுப்பவேண்டுமென்று ஏதென்ஸைத் தூண்டிவிட்டான். கார்டியாவுடன் அத்தீனியக் குடியேற்ற நாட்டு மக்களைப்பற்றிய சச்சரவு ஏற்பட்டது. டியோபைத்தேஸ் கார்டியாவைத் தாக்கினுன். சமாதான ஒப்பந்தத்தில் கார்டியா மாசிடோனியாவின் நேச நாடென ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது. எனவே டியோபைத்தேஸின் செயல், ஒப்பந்தத்தை மீறிய குற்றமாகக் கருதப்பட்டது. அவன் மேற்கொண்டு தெரேஸில் பிலிப் மன்னனுக்குச் சொந்தமான சில நாடுகளை ஆக்கிரமித்தான். பிலிப், ஏதென்ஸின் ஆக்ரமிப்புச்செயலைக் கண்டித்துப் பேசினுன் கடற்படைத் தலைவனுகிய டியோபைத்தோஸ் ஏதென்ஸின் அனுமதியின்றி இவ்விதமான அடாத செயலைச் செய்தபடியால், ஏதென்ஸ் அதை ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டது. ஆனுல் டெமெஸ்த்தனிஸ் அவனைக் கைவிடவில்லை. அவனைப் பதவியிலிருந்து விலக்கிவிட

வேண்டாமென்று டெமெஸ்த்தனிஸ் அத்தீனியர்களைக் கேட்டுக் கொண்டான். இப்போது அவன் செர்ஸோனேஸே பிரச்சினையைப் பற்றி ஒரு சொற்பொழிவாற்றினன். அச் சொற்பொழிவின் இறுதியில் பிலிப் மன்னனேடு ஏன் போர்தொடுக்க வேண்டுமென் பதற்குக் காரணம் காட்டி முடித்தான். அவனுடைய இந்தச் சொற் பொழிவு மூன்ருவது பிலிப்பிக் என்றழைக்கப்படுகிறது. பிலிப், ஏதென்ஸைப் பகைக்கிருனென்றும், ஏதென்ஸை அழித்துவிடுவது அவனுடைய திட்டமென்றும் சமாதானத்தைப்பற்றிப் பேசிக் கொண்டே ஆக்கிரமிப்புக் செயலைச் செய்கிருனென்றும், டெமெஸ்த் தனிஸ் தன்னுடைய சொற்பொழிவுகளில் குறிப்பிட்டுப் பேசி வந்தான். பிலிப் மன்னனேடு போர் தொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை என்றும் அவன் அடிக்கடி கூறினன். போருக்கு ஆயத் தங்கள் செய்யவேண்டும், சொஸோனேசேயிக்குப் படைகளையனுப்ப வேண்டும், ‘மாசிடோனிய இழிஞனுக்கு’ எதிராகப் பல நாடுக ளுடன் கூட்டுச்சேர வேண்டுமென்பதே டெமெஸ்த்தனிஸின் தீர்மானமாக இருந்தது.

**பைஸான்ஷியத்தில் டெமெஸ்த்தனிஸ், கி.மு. 341; யூபோயிக் கூட்டமைப்பு, கி.மு. 341.**

போர் மூள்வதைப்பற்றி அறிவிக்க அரசியல் தூதுவர்கள் பல ஊர்களுக்கும் அனுப்பப்பட்டனர். டெமெஸ்த்தனிஸ் பொரோ போன்டிஸுக்குச் சென்ருன். அவன் பைசான்ஷியத்தையும், பெரின்தஸையும் மாசிடோனியா நேச உறவிலிருந்து பிரித்துவிடு வதில் வெற்றி பெற்ருன். அதே சமயத்தில் அத்தீனியப் படைகள் யுபோயேவிற்கு அனுப்பப்பட்டன. ஒரேயஸ் எரிட்ரியா நாடுகளில் ஆலிகார்க் அரசாங்கங்கள் அழிக்கப்பட்டன. இந்த நகரங்கள் ஒன்று சேர்ந்து யூபேயிக் கூட்டமைப்பு என்ற ஒரு கூட்டமைப்பை ஏற்படுத்திக்கொண்டன. அதனுடைய சினேட், சால்சிஸில் கூடிற்று. மாசிடோனியாவிடமிருந்து விடுதலைபெற்ற அந் நாடுகள் ஏதென்ஸுடன் சேராமல் சுதந்திரமாக வாழ்ந்தன.

**பிலிப் பெரின்தஸை முற்றுகையிடல், கி.மு. 340; பைஸான்ஷியம்; டெமெஸ்த்தனிஸின் கடற்படைச் சீர்திருத்தம்.**

இது வரையில் ஏதென்ஸும் மாசிடோனியாவும் சமாதான ஒப்பந்தம் பாதிக்கப்படாத அளவில் ஆக்கிரமிப்புச் செயலில் ஈடுபட் டிருந்தன. ஆனல் பெரின்தஸும் பைஸான்ஷியமும் தன்னுடைய ஆதிக்கத்திலிருந்து பிரிந்துபோனதை அவன் பார்த்துக்கொண் டிருக்க முடியவில்லை. தெரேஸின் விவகாரங்களை அவன் முடித்த பிறகு, பெரின்தஸைத், தரைமூலமாகவும் கடல்மூலமாகவும் முற்றுகை யிட்டான். அத்தீனியக் கடற்படை ஹெல்லஸ்பாண்டில் இருந்தது.

மாசிடோனியாவின் கடற்படை பெரின்தஸுக்குச் செல்வதை இது தடை படுத்தியது. ஆனால் பிலிப், செர்ஸோனேஸில் தன் படையை இறக்கி, அத்தீனியக் கடற்படையின் கவனத்தை குஸர்ஸேனீஸ் பக்கம் திருப்பிவிட்டான். இவ்விதமான, படை முறைச் சூழ்திறனின் மூலமாக, அவன் பெரின்தஸை முற்றுகையிட முடிந்தது. சிஸிலி தீவில் கோட்டைகளை முற்றுகையிட்டுப் பிடிக்கும் முறை, கிழக்கு கிரேக்க நாடுகளில் பெரின்தஸ் முற்றுகை மூலம் பரவியது. பெரின்தஸ் ஓர் செங்குத்தான பாறையின் உச்சியில் கட்டப்பட்டிருந்ததால் பிலிப் மன்னனுடைய இயந்திரப் பொறிகள், கோபுரங்கள், சுரங்கக் குழி முதலியவை பயனற்றுப்போயின. கடற் பக்கமுள்ள நகரத்தை அவனால் திறம்பட முற்றுகையிட முடியவில்லை. ஆகையால் அவ் வழியே பெரின்தஸ் உணவுப் பொருள்களையும் ஆட்களையும் பைஸான்ஷியத்திலிருந்து பெற்றுவந்தது. அத்தீனியர்கள் நேர்முகமாகப் போரிலீடுபடாமல் தனித்து நின்றார்கள். பிலிப் செர்ஸோனீசைத் தாக்கியதையும், அவர்களுடைய கப்பல்களில் சிலவற்றைக் கைப்பற்றியதையும், சுட்டிக்காட்டி குறை கூறினார்கள். பிலிப் மன்னன், அத்தீனியர்கள் தனக்கு விரோதமாகச் செய்து வந்தகாரியங்களில் ஒன்றையும் விடாமல் ஒரு கடிதத்தில் எழுதி அவர்களுக்கு அனுப்பினான். அவன் திடீரென்று பெரின்தஸின் முற்றுகையைக் கைவிட்டுவிட்டு பைஸான்ஷியத்தை முற்றுகை யிட்டான். பைசான்ஷிய நாட்டினர் எதிர்பாராவண்ணம் பிலிப் அவர்களுடைய நாட்டின்மீது படையெடுத்தான். அத்தீனியர்கள் தங்களுக்கு ஒரு திறவுகோல் போலுள்ள பாஸ்போரஸை இழந்துவிட விரும்பவில்லை. சமாதான ஒப்பந்தம் எழுதப்பட்ட சலவைக் கல்லைப் பிடுங்கி எறிந்தார்கள். போர் முரசு முழக்கினர். பைஸான்ஷியத்திற்கு உதவிசெய்ய ஒரு கடற்படையை சாரெஸின் தலைமையிலனுப்பினார்கள். போசியோன் இரண்டாவது கடற்படைக்குத் தலைமைத்தாங்கி சாரெஸைப் பின்தொடர்ந்து சென்றான். அத்தீனியர்களுக்கு ரோட்ஸிலிருந்தும் சீபோஸிலிருந்தும் படையுதவிகள் வந்தன. பிலிப் மன்னன் பைசான்ஷிய முற்றுகையைக் கைவிட்டுவிட்டுத் தெரேஸுக்குப் பின்வாங்கிச் சென்றான். அவனுடைய இரு முற்றுகைகளும் தோல்வியுற்றன. இதுவே டெமெஸ்த்தனிஸின் முதல் வெற்றியாக இருந்தது. அதற்காக அத்தீனியர்கள் அவனுக்கு நன்றி தெரிவித்தனர்.

### டெமெஸ்த்தனிஸின் கடற்படைச் சீர்திருத்தம்

அத்தீனியர்களின் கடற்படை உடனடியாகத் தன்னுடைய வலுவைக்காட்ட முன்வராதது ஆச்சரியத்திற்குரியது. மாசிடோனியக் கடற்படை மிகவும் சிறியதாக இருந்தது. அதனால் வியாபாரக் கப்பல்களைத் தாக்கி சேதம் விளைவிக்கவும், கடற்கரைப்

படடினங்களைத் தாக்கவும் வலிமை பெற்றிருந்தது. ஆனால் அது கடலாதிக்கத்தை நிலைநாட்டக்கூடிய வன்மையற்றிருந்தது. இந்தச் சமயத்தில் அத்தீனியர்களிடம் 300 போர்க் கப்பல்களிருந்தன. அது வடக்கு ஏஜியான் கடலில் ஆதிக்கம் பெற்றிருந்தது. இந்த நெருக்கடி நேரத்தில் ஏதென்ஸ் ஹெல்லஸ் பாண்டில் வலுவுள்ள ஒரு கடற்படையை நிலையாக நிறுத்திவைக்க முடியவில்லை. ஏதென்ஸ் கடற்படையைப் பெருக்குவதில் தன்னுடைய முயற்சியைக் கைவிடவில்லை. யூபூலஸ் புதிய போர்க் கப்பல்கள் கட்டுவதற்கான முயற்சிகளைச் செய்தான். அவ்வேலை சியே (Zea) துறைமுகத்திற்குச் சமீபத்தில் நடைபெற்றது. பாய்மரம் கட்டுதல் முதலிய வேலைகள் மும்மரமாக நடந்தன. ஆனால் திறமையற்ற கடற்படைக்கு உயர்ந்த சாதனங்களைச் சேகரித்துக் கொடுப்பதில் பயனில்லை யென்பதை உணர்ந்தார்கள். குழு முறையில் நடந்து வந்த கடற்படை வேலை கெடுதலான தென்பதை ஏதென்ஸ் உணர ஆரம்பித்துவிட்டது. பதினேழு ஆண்டுகளாக நடைமுறையிலிருந்து வந்த இந்தத் திட்டத்தை மாற்றியமைக்க டெமெஸ்த்தனிஸ் விரும்பினான். ஏதென்ஸில் 1200 செல்வந்தர்கள் கப்பல் நிர்வாகத்திற்கான செலவைக் கொடுத்துவந்தார்கள். இவர்கள் தங்களுடைய சொத்து விகிதத்திற்கேற்ப இந்தச் சேவையைச் செய்து வரவில்லை. போர்க்கலன்கள் அதிகமாகத் தேவைப்பட்டதால் பல இடுக்கண்கள் ஏற்பட்டன. சற்று ஏழ்மை நிலையிலுள்ள செல்வர்கள் தங்களுக்குரிய கட்டணத்தைச் செலுத்துவதில் மிகவும் துன்புற்றனர். குறிப்பிட்ட காலத்தில் அவர்கள் தங்கள் தொகையைக் கொடுக்க முடியவில்லை. ஆகவே டெமெஸ்த்தனிஸ் ஒரு புதிய சட்டம் கொண்டுவந்தான். அதன்படி, செல்வர்கள் சொத்தின் விகிதத்திற்கேற்ப, கப்பல்கள் கட்டவும், அவற்றைப் பாதுகாக்கவும் பொறுப்பேற்றுக்கொள்ளவேண்டி யிருந்தது. இச் சட்டத்தின்படியே 30 தாலந்து முதலுடையவர்கள். முன்பு ஐந்தில் ஒரு பாகம் அல்லது பதினைந்தில் ஒரு பாகம் ஒரு கப்பலின் நிர்வாகத்திற்குக் கொடுப்பதற்குப் பதிலாக, இப்போது மூன்றடுக்கு துடுப்புகளையுடைய கப்பல்கள் மூன்று, ஒரு படகு ஆகியவற்றிற்கான செலவைக் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. செல்வந்தர்கள் இச் சட்டத்தின் காரணமாக டெமெஸ்த்தனிஸை எதிர்த்தார்கள்.

யுபோயாவிலும், பைஸான்ஷியத்திலும் அடைந்த வெற்றியின் காரணமாக டெமெஸ்த்தனிஸின் செல்வாக்கு உயர்ந்தது. இப்போது அவன் பெரிய காரியங்களையும் சாதிக்கக்கூடிய செல்வாக்குள்ளவனானான். ஓராண்டிற்குப்பின், திருவிழாவிற்காக ஒதுக்கப்பட்டுள்ள நிதியிலிருந்து கடற்படைக்காகப் பணம் செலவழிக்கப்பட வேண்டுமென்று தன்னுடைய சொற்பொழிவில் குறிப்பிட்டிருக்

கிறன். இப்போது அவன் அந்த முறையைப் பின்பற்றவேண்டு மென்று வலியுறுத்தினன். செலவைக் குறைக்க, பாய்மர வேலை களும், கப்பல் கொட்டகை வேலைகளும் ஒத்திவைக்கும்படி செய்து விட்டான்.

**தேரேஸில் பிலிப், கி. மு. 340-339**

டானியூப் நதி முகத்துவாரத்திலிருந்த சித்தியர்கள் இப்போது பிலிப் மன்னனை எதிர்த்துக் கலகம் செய்தார்கள். அவன் அவர்களை அடக்குவதற்காகப் பால்கன் மலையைக் கடந்து சென்றான். கலகத்தை அடக்கிவிட்டுத் திரும்பும்போது, அவன் திரிபள்ளி நாட்டின் வழியே பிரயாணம் செய்ய நேர்ந்தது. வழியில் அவன் கடும்போர் ஒன்று செய்ய நேரிட்டது. அவன் அப்போரில் வெற்றிபெற்ற போதிலும், அவனுடைய காலில் கொடிய புண் ஏற்பட்டது. தெரேஸில் அமைதியை நிலைநாட்டிய பிறகு அவன் தன்னுடைய கவனத்தைக் கிரேக்க நாடுகளின் மீது செலுத்தினன்.

## 8. சாரோநேயா போர்க்களம்

**ஏதென்ஸுடன் போர்தொடுக்கத் தீர்மானித்தல்**

பிலோகிராட்டிஸின் சமாதான ஒப்பந்தத்திற்கு முன்னும், அதன் பிறகும், பிலிப் ஏதென்ஸுடன் சமாதானமாக வாழ முடியுமென்று நம்பினன். ஆனல் அவனுடைய நம்பிக்கை பாழாகிவிட்டது. நாவன்மை படைத்த டெமஸ்த்தனிஸின் செல்வாக்கு வெற்றி பெற்றது. டெமெஸ்த்தனிஸ் தொடர்ந்து மாசிடோனியாவிற்கு விரோதம் செய்து வந்தான். அதில் அவன் வெற்றியு மடைந்தான். எனவே மாசிடோனியாவிற்கு இப்போது ஒரு பலமான எதிர்ப்பு ஏற்பட்டுவிட்டது. ஆகையால் மாசிடோனியா, போர் தொடுக்கவும் அதனுடைய குதிரைப்படையின் வன்மையை ஏதென்ஸ் புரிந்து கொள்ளும்படி செய்யவும் நேரிட்டது. இரு முனைகளில் ஏதென்ஸைத் தாக்க மாசிடோனியா திட்டமிட்டது. ஒரு பக்கம் மாசிடோனியர் ஏதென்ஸை முற்றுகையிட வேண்டும்; மற்றொரு பக்கம் யூக்ஸையின் வாயில்களில் தன்னுடைய படையை நிறுத்தி ஏதென்ஸுக்கு உணவுப் பொருட்கள் கிடைக்காமல் செய்துவிட வேண்டும். மாசி டோனியா, கடற்படையின் உதவியில்லாமல் பொரோபோன்டிஸில் வாகைகாண முடியாத நிலையிலிருந்தது. அதனுடைய நேசநாடுகள் போர்க்கப்பல்களை யனுப்பி உதவி புரியாவிட்டால் மாசிடோனியா விற்குப் பொரோபோன்டிஸில் வெற்றி கிடைப்பது அரிதாக இருந் திருக்கும். பிலிப் பெரின்தஸ், பைஸான்ஷியம் என்ற நாடுகளை முற்றுகையிட்டபோது, இந்த உண்மையை அவன் நன்கறிந்

திருந்தான். பிலிப் அங்கே அத்தீனியக் கடற்படையையும், ஆசிய நாட்டுத் தீவுகளாகிய ரோட்ஸ், கோஸ், சீயோஸ் நாடுகளின் கடற் படையையும் சமாளித்தாக வேண்டியதாயிற்று. பிலிப் மன்னன், இவற்றின் கடற்படைகளை முறியடித்த பிறகு இரு கண்டங்களுக்கு மிடையிலுள்ள வழியைத்தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவருவானுகில், அந் நாடுகளின் வியாபாரங்களுக்கு வரிவிதிப்பதோடு ஆசியாவின் மீது படையெடுத்துச் செல்லவும் வழியேற் பட்டுவிடு மென்பதை யுணர்ந்தான். அப்போது அவர்களுடைய கடற்படை, பிலிப் மன்னன் கடற்படையோடு சேர்ந்து பணிபுரிய வழியேற்படு மென்பதையும் உணர்ந்தான். இப்போது ஏதெஸ் தன் சோம்பலை நீக்கிச் சுறுசுறுப்படைய ஆரம்பித்தது. மாசிடோனியா ஏதென்ஸை எதிர்க்கவேண்டுமானுல், அதற்கு அட்டிகாவைத் தாக்கும் ஒரேவழி தான் இருக்கிறது.

### ஏதென்ஸின் இக்கட்டான நிலைமை

ஏதென்ஸ் இது சாறும் போரை எளிதாக எண்ணி வந்தது. போரினுல் ஏற்படக் கூடிய செலவை அது நினைத்துப் பார்க்கவில்லை. போரைத் தொடர்ந்து நடத்த அதற்கு எவ்விதமான திட்டமும் கிடையாது. அத்தீனியர்களும் போரை விரும்பவில்லை. பேரரசை மீண்டும் ஏற்படுத்த வேண்டு மென்ற எண்ணமும் அதற்கில்லை. டெமாஸ்த்தனிஸும் அவனுடைய கட்சியினரும் விடாமல் ஆற்றிய சொற்பொழிவுகள், படிப்படியாக ஏதென்ஸைப் போர்க்களத்திற்கு இழுத்துச் சென்றன. அவர்களிடம் இயற்கையாகக் காணப்பட்ட பொறுப்பு உணர்ச்சி, அச்சொற்பொழிவுகளால், மாசிடோனியாவைப் பகைக்கும் அளவிற்கு வலுப்பெற்றுவிட்டது. அத்தீனியர்கள் பிலிப் மன்னனின் பண்பு, நோக்கம், படைபலம் முதலியவற்றை அறிந்து கொள்ள முடியவில்லை. ஏனெனில் டெமெஸ்த்தனிஸின் நாவன்மை அவர்களுடைய பகுத்தறிவை மழுங்கும்படி செய்துவிட்டது. போர் தொடங்கியது. போரை நடத்த அவர்களின் திட்டமென்ன ? ஏதென்ஸைப் போரில் முன்னின்று நடத்த அதனிடம் சிறந்தபடைத் தலைவனில்லை. அதனிடம் கடலாதிக்கமிருந்தது. யூபோயா, மாசிடோனியா ஆதிக்கத்திலிருந்தது விடுபட்டதைப் பெரிதாகக் கருதிவிட முடியாது. போயிஷியாவை சாப்ஸிஸிலிருந்து ஏதென்ஸ் தாக்கவும், தெஸ்ஸாலியக் கடற்கரை நாடுகளைத் தாக்கவும், பாகேசே குடாவில் செயல்புரியவும், ஏதென்ஸுக்கு வாய்ப்பிருந்தது. பிலிப் தன் படையுடன் தெற்கு நோக்கிப் பயணம் மேற்கொண்டு தெர்மாபைலேயைக் கடந்து விட்டான். பிலிப்பின் போக்குவரத்துக்கள் தரை மூலமாகவே நடைபெற்றபடியால் அத்தீனியக் கடற் படை பயனற்று விட்டது. பிலிப் நேரடியாக அட்டிகாவை நோக்கிச் சென்றிருந்தால் அவனை ஏதென்ஸ் தடுத்து நிறுத்திராது. தெமிஸ்ட்

டோகிளிஸ் அத்தீனியர்களைக் கப்பல்களில் ஏற்றி வேறிடத்திற்குக் கொண்டுபோகச் செய்த நடவடிக்கையைப்போல், இப்போது அவர்களைக் கப்பல்களில் ஏற்றிவிட்டு நாட்டை வெறு நிலமாக்க டெமெஸ்த் தனிஸுக்கு வாய்ப்பில்லை. அட்டிகாவின் மீது படையெடுத்து வருவானென்றும், ஏதென்ஸை அழித்து விடுவானென்றும், டெமெஸ்த் தனிஸ் அடிக்கடி பேசிவந்தான். அவன் முன்னறிவித்தவாறே எல்லாம் நடந்திருக்குமானால் அவர்களுடைய நாடு அழிக்கப்படுவதையும், நகரம் முற்றுகையால் சூழப்படுவதையும் பார்க்க முடிந் திருக்கும். ஆனால் இந்த இக்கட்டு எப்படிச் சமாளிக்கப்பட்டது? அத்தீனியர்கள் தனிமையில் விடப்பட்டார்கள். ஆசியா நாட்டி லிருந்து உதவிபெற அவர்களுக்கு வழியில்லை. பிலிப்பின் போர் வீரர்களுக்கு முன்பாக அவர்களுடைய நேச உறவுகளாகிய மெகாரியர்களும், கொரிந்தியர்களும் ஆம்பரோஸியர்களும், அச்சேயர்களும் என்ன செய்துவிட முடியும்? 'ஆ நாங்கள் தீவுகளில் வாழ்ந் திருக்கக் கூடாதா?' என்று இந்த இக்கட்டான நேரத்தில் அத்தீனியர்களில் பலர் ஆயாசத்தோடு முணுமுணுத்தார்கள். ஹாலண்டு ஐரோப்பிய கண்டத்தோடு சேர்ந்திருந்ததால் பலவிதஇக்கட்டுகளுக்கு ஆளாயிற்று. அதைப்போலவே அட்டிகா கிரீஸின் பெருநிலப்பாகத் தோடு சேர்ந்திருந்தத படியால் அதற்கு அக்காலத்தில் பலவித நெருக்கடி நெருங்கிவிட்டது. அத்தீனியர்களுடைய அரசியல் கொள்கை எவ்வளவு மோசமாகி விட்டதென்று அது காட்டுகிறது. ஏதென்ஸ் மாசிடோனியாவின் நட்பை ஏற்றுக் கொண்டு பொரோபோன்டிஸில் நிலையான ஒரு கடற்படையை நிறுத்திவைத்திருந்தால் அதற்கு எவ்விதமான இக்கட்டும் ஏற்பட்டிருக்காது. அதனுடைய வலுவுள்ள கப்பற்படையின் நடமாட்டம் பல வெற்றிகளுக்குச் சமமாக இருந்திருக்கும். இக்காலத்தில் அத்தீனியக் கடற்படையின் நடமாட்டத்தைப்பற்றி நாம் அதிகமாக அறியமுடியாவிட்டாலும், அப்படை மிகவும் பலவீனமான நிலையிலிருந்த தென்பதை நாம் சந்தேக மின்றி உணர முடிகிறது.

### டெமெஸ்த்தனிஸ் தீபர்களின் உதவியை நாடியது.

பைஸான்ஷிய முற்றுகைக்காலம் வரையில் ஏதென்ஸில் டெமஸ்த்தனிஸின் செல்வாக்கு சிறப்பாக இல்லை. அவன் மாசிடோனியாவிற்கு எதிரான சாற்பொழிவுகளை மட்டும் செய்ய முடிந்தது. பைஸான்ஷிய முற்றுகைக்குப்பின் அவனுடைய செல்வாக்கு வளர ஆரம்பித்து விட்டது. இப்போது அவன் அத்தீனியர்களின் அரசியல் கொள்கைக்கு வழிகாட்டுபவனாகிவிட்டான். எந்த நம்பிக்கையின்மீது இவன் அத்தீனியர்கள் மாசிடோனியாவைப் பகைக்கும்படி செய்தான், அவர்களுடைய படையை ஏதென்ஸின் வாயிலண்டை கொண்டு வந்தான், — என

நமக்குள் ஒருவினு எழுகிறது. அதற்கு விடையைக் கீழ்வருமாறு கூறலாம். அவனுடைய வாழ்க்கையின் ஆரம்ப முதல் அவனுக்குத் தீப்ஸ் நகரின் மீது நம்பிக்கை இருந்தது. அவன் பிறப்பால் தீபனுகப் பிறந்திருக்க வேண்டும். ஏதென்ஸ் நகரவாசிகள் தீபர்களை வெறுத்தார்கள். ஆகையால் டெமெஸ்த்தனிஸ் தீபர்களைப் பற்றிப் பேசும்போதெல்லாம் மிகவும் கவனத்தோடு பேசினுன். அவன் போஸியர்களின் கதியைப் பற்றிப் பேசிய போதெல்லாம் கண்ணீர் வடித்தான் அத்தீனியர்கள் தீபர்களோடு நேச உறவு கொள்வதே அவனுடைய நோக்கமாக இருந்தது இரு நாடுகளுக்குமிடையே நேச உறவு ஏற்படுவது கடினமான காரியமாக இருந்தது. மாசிடோனியர்களுக்கு எதிராக தீப்ஸைத் தூண்டி விடமுடியுமா? மாசிடோனியாவின் உதவியால் தீப்ஸ் போயிஷியாவில் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டியது. தீப்ஸ், அட்டிகாவிற்குச் சமீபத்தில் இருப்பதால், அதனைத் தாக்க மாசிடோனியா தீப்ஸைப் பயன்படுத்திக்கொண்டது. ஆகவே தீப்ஸுக்கு மாசிடோனியா ஆதரவளித்து வந்தது. இப்படிப்பட்ட சூழ்நிலையில் ஏதென்ஸை தீப்ஸ் நகருடன் நேச உறவு கொள்ளும்படி செய்வது டெமெஸ்த்தனிஸுக்குக் கடினமாக இருந்தது. தீபஸ் பிலிப்புடன் சேர்ந்து கொண்டால் அல்லது போயிஷியா வழியாகப் பிலிப் படையெடுத்துச் செல்வதற்கு அந்நாடு அனுமதித்தால் அட்டிகாவின் நிலைமை மோசமாகி விடக்கூடும். தீப்ஸை பிலிப்போடு சேராமல் தடுத்து அதை ஏதென்ஸ்ஸிடன் சேரும்படி செய்து விட்டால், பிலிப் அட்டகாவின்மீது படை எடுக்கா வண்ணம் தடுத்துவிடலாம். ஏனென்றுல் தீபஸில் பயிற்சி பெற்ற போர் வீரர்களிருந்தார்கள்.

**ஆம்பிக்ட்டியோனிக் கழகக் கூட்டம். இலையுதிர் காலம் கி.மு. 340; ஆஸ்ச்சனேஸின் சொற்பொழிவு; லோக்கியர்கள் சமயத்துக் கிழைத்த குற்றத்தைச் சுட்டிக் காட்டுதல்.**

படையெடுப்புத் தாமதப்படவில்லை. ஆனுல் நூதனமான முறையில் ஏற்பட்டது. பிளாட்டியா யுத்தத்தில் ஏதென்ஸ் வெற்றிப் பெற்றது. அப்போது ஏதென்ஸ் தங்கக் கேடயங்களை டெல்பியன் ஆலயத்திற்குக் காணிக்கைப் பொருளாகக் கொடுத்தது. 'கிரேக்கர்களை எதிர்த்துப் போராடிய தீபர்களிடத்திலும், பாரசீகர்களிடத்திலுமிருந்து கைப்பற்றிய கொள்ளைப் பொருள்களிலிருந்து அடைந்தவை' எனக் கேடயங்களில் எழுதப்பட்டிருந்தன. சமீபத்தில் நடந்த புனித யுத்தத்திற்குப்பின் கேடயங்களை மீண்டும் செப்பனிட்டு வைத்தார்கள். சமயத்தை இழித்துக்கூறும் கள்வர்களாகிய போஸியர்களிடம் டெல்பியின் ஆலயம் இருந்தபோது, ஏதென்ஸ் கேடயங்களை மீண்டும் சுத்தம் செய்து புனிதப்படுத்தியது ஒரு குற்றமாகக் கருதப்பட்டது. கேடயங்களிலிருந்த வாசகங்கள் தீபர்களுக்கு வெறுப்பைத் தந்தன.

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன் தீப்ஸ் இழைத்த குற்றத்தை ஞாபகமூட்டும் அவ்வாசகத்திற்காக, தீப்ஸ் ஏதென்ஸைப் பழி வாங்கத் தீர்மானித்து விட்டது. ஆம்பிக்ட்டியோனிக் கழகக் கூட்டம் இலையுதிர் காலத்தில் ஆரம்பமாயிற்று. தீபஸ் ஏதென்ஸ்மீது குற்றம் சுமத்த முன்வராமல் அதனுடைய நட்பு நாடாகிய லோக்கிரியாவைத் தூண்டி விட்டது. லோக்கிரியா ஏதென்ஸைக் குற்றவாளியென்று கூறி, அதன்மீது 50 தாலந்து அபராதம் விதித்தது. ஆம்பிக்ட்டியோனிக் கழகக் கூட்டத்தில் பல நாடுகளின் பிரதிநிதிகளிருந்தார்கள். ஏதென்ஸின் பிரதிநிதிகளில் எஸ்ச்சினேஸும் இருந்தான். அவனால் தன் நகருக்கெதிராக எழுப்பிய குற்றச்சாட்டைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியவில்லை. திறமை மிக்க அவன் குற்றச்சாட்டை வேற்றுநாடுகளின்மீது திருப்பிவிட முயன்றான். ஏதென்ஸின்மீது சமயச் சார்பான குற்றத்தைச் சுமத்தியவர்கள் அதே குற்றத்தைப் புரிந்தவர்களாக இருந்தார்கள். அதாவது, ஒருகாலத்தில் கிரிசியா (Crisa) வின் ஒரு பகுதி சாபக்கேடான நிலமாக்கப்பட்டது. அத்தகைய நிலத்தில் எவரும் குடியேறவோ, விவசாயம் செய்யவோ கூடாது. லோக்கிரியர்கள் சமய சம்பந்தமான இச்சட்டத்தைமீறிச் சபிக்கப்பட்ட நிலத்தில் விவசாயம் செய்தனர். எஸ்ச்சினேஸ் சபையில் எழுந்து நின்று, கேட்பவர்கள் மனத்தில் நன்கு பதியும்படியாக அவர்களுடைய குற்றத்தைத் தன் சொற்பொழிவில் குறிப்பிட்டான். பொழுது விடியும் போது ஆம்பிக்ட்டியோனிக் கழக அங்கத்தினர்களும் டெல்பியர்களும் யுத்த கோடாரிகளுடன் சென்று, மலையடிவாரத்திலிருந்த அந்த நிலங்களைப் பாழ் செய்தனர். அவர்கள் இந்நாச வேலையில் ஈடுபட்டிருந்தபோது, ஆம்பிஸியர்கள் அவர்களைத் தாக்கினார்கள். லோக்கிரியர்கள் சமயத்தின் சட்டத்திற்கு மாறான குற்றம் புரிந்ததுமல்லாமல், ஆம்பிக்ட்டியோனிக் கழக அங்கத்தினர்களையும் தாக்கியதால் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கக் கழகக் கூட்டம் தெர்மாபைலேயில் கூடுவதென முடிவு செய்யப்பட்டது.

ஏதென்ஸ் எஸ்ச்சினேஸை ஆதரிக்கவில்லை. இடமும் காலமும் அறிந்து செயலாற்றிய தன்மையாலும், தன் நாவன்மையினாலும் எஸ்ச்சினேஸ் வெற்றியடைந்தான். ஏதென்ஸ்மீது சுமத்தப்பட்ட குற்றத்தை ஆம்பிஸ், தீப்ஸ் என்ற நாடுகளின்மீது திருப்பி விட்டு விட்டான். ஏதென்ஸ் 50 தாலந்து அபராதத் தொகை கட்டத் தவறி இருந்தால் ஆம்பிக்ட்டியோனிக் கழகம் ஏதென்ஸின்மீது போர் தொடுத்திருக்கும். அவர்களுக்கு மாசிடோனியாவின் ஆதரவு கிடைத்திருக்கும். இப்போது ஏதென்ஸ் ஆம்பிஸாமீது போர் தொடுக்க முன்வந்துள்ளது. இப்போது பிலிப் மன்னனோடு சமாதான ஒப்பந்தம் செய்து கொள்ள ஏதென்ஸுக்கு வாய்ப்பு ஏற்பட்டது. முன்பு பிலிப் மன்னனும் தீப்ஸ் நாடும் சேர்ந்து ஏதென்ஸ்மீது போர் தொடுக்க ஆயத்தமாக இருந்தன. இப்போது பிலிப் மன்னனும்

ஏதென்ஸும் ஒன்று சேர்ந்து தீப்ஸ்மீது யுத்தம் தொடுக்கும் நிலை ஏற்பட்டு விட்டது. எஸ்ச்சினேஸ் கொண்டு வந்த இந்த நல்ல வாய்ப்பை டெமெஸ்த்தனிஸ் ஏற்றுக்கொள்ள மாட்டானென்பது எதிர்பார்க்கப்பட்டதே. தீப்ஸை பகைத்துக் கொள்வது டெமெஸ்த் தனிஸின் நோக்கமாக இருக்கவில்லை. ஆகையால் அவன், தெர்மா பைலேயில் கூடவிருந்த ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தின் சிறப்புக் கூட்டத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பவேண்டாமென்றும், ஆம்பிஸா விற்கு விரோதமாக எடுத்துக்கொள்ளும் நடவடிக்கைகளில் கலந்து கொள்ளக்கூடாதென்றும் அத்தீனியர்களுக்குப் போதித்தான். 'ஓர் ஆம்பிக்ட்டியோனிக் போரை அட்டிகாமீது கொண்டுவர,' முயன்றா னென்று டெமெஸ்த்தனிஸ் எஸ்ச்சினேஸ்மீது குற்றம் சுமத்தினான். ஏதென்ஸ்மீது ஆம்பிக்ட்டியோனிக் கழகம் தொடுக்கவிருந்த போரை தடுத்துவிட்ட எஸ்ச்சினேஸுக்கு இவ்விழி மொழியே பரிசாகக் கிடைத்தது.

**ஆம்பிக்ட்டியோனியர்கள் ஆம்பிஸாவிற்கு எதிராகப் போர் தொடுத்தல், கி.மு. 339. அவர்கள், பிலிப் மன்னனையும் அழைத் தல், கி.மு. 338. தளிர்விடுகாலம்.**

தீபர்களுடைய தூண்டுதலின் பேரில் ஏதென்ஸைத் தாக்குவதற் கான முயற்சிகள் நடந்தபோதிலும், டெமெஸ்த்தனிஸின் கொள்கை யின் காரணமாக நிலைமை மாறிவிட்டது. தீபர்களும் அத்தீனியர் களும் இப்போது ஒன்றாகச் சேர்ந்து கொண்டார்கள். இருநாடுகளும் சிறப்புக் கூட்டத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பவில்லை. கூட்டத்தின் தீர்மானப்படியே ஆம்பிக்ட்டியோனிக் கழகத்தினர் ஆம்பிஸாவை எதிர்த்துச் சென்றார்கள். ஆனால் அவர்களிடமிருந்து அபராதத் தொகையை வசூலிக்கும் வன்மையற்றிருந்தார்கள். அடுத்த ஆண்டு இலையுதிர் காலத்தில் கூடவிருந்த கழகக் கூட்டத்திற்கு பிலிப் மன்னனை அழைப்பதென்றும், புனித யுத்தத்திற்குத் தலைமை தாங்க அவனைக் கேட்டுக் கொள்வதென்றும் முடிவு செய்தார்கள்.

பிலிப் மன்னன் ஒரு நிமிடம்கூடத் தாமதிக்கவில்லை. ஏதென் ஸும் தீப்ஸும் ஒன்று சேராமல் ஒதுங்கிவிட்ட ஆம்பிக்ட்டி யோனிக் யுத்தம் ஆழ்ந்த ஆராய்ச்சிக்குரியதாயிற்று. பிலிப் தெர்மாபைலே கணவாய்க்குச் சென்றபோது, சாலைமீதிருந்த சிட்டினியோன் (Cytinion) என்ற ஒரு சிறியப் பட்டினத்தைக் கைப்பற்ற ஒரு படையை மலையினூடே டோரிஸிலிருந்து ஆம்பிசா விற்குச் செல்லும் வழியாக அனுப்பினான். எஞ்சிய படையுடன் தான் தெர்மாபைலேயின் கணவாய் வழியாக முன்னேறி வடக்குப் போஸிஸுக்குச் சென்றான். சிதைவுற்றிருந்த எலாட்டே என்ற நகரைக் கைப்பற்றி அதைப் பலப்படுத்தினான். தன்னைப் பின்புறத் தில் போயிஷியாவிற்கு எதிராகப் பாதுகாத்துக்கொள்ளவும்,

ஆம்பிஸாவை எதிர்த்துப் போரிடும்போது தெர்மாபைலேக்குச் செல்லும் மார்க்கம் துண்டித்துவிடாதபடி காக்கவும், அவன் செய்தான். அவன் எலாட்டேயிலிருந்தபோது தீபர்களின் எண்ணத்தை அறிந்துவர ஆட்களை அனுப்பினன். அவன் அட்டிகாவின்மீது படையெடுக்கப் போவதாகப் பறையறைவித்தான். இந்தப் படையெடுப்பில் தீபர்களைக் கலந்து கொள்ளுமாறு கேட்டுக் கொண்டான். தீபர்கள் ஏதென்ஸோடு நடக்கவிருக்கும் போரில், கலந்துகொள்ள விரும்பவில்லையானல், போயிஷியாவின் வழியே தன் படை செல்வதற்கு வழிவிடுமாறு கேட்டுக்கொண்டான். தீப்ஸ் வலிய தன் கருத்தைத் தெரிவிக்கச் செய்த ஓர் அரசியல் சூழ்திறனுக இது விளங்கிற்று. இதனல் பிலிப்புக்கு அட்டிகாவை எதிர்த்து முன்னேறும் நோக்கம் இருந்ததென்று கூற முடியாது. அத்தகைய எண்ணம் அவன் கொண்டிருக்கவில்லை என்பதே அவனுடைய பிந்திய நடவடிக்கைகள் நிரூபிக்கின்றன.

### ஏதென்ஸில் அதிர்ச்சி

மாசிடோனியப் படை எலாட்டேயிலிருந்ததென்பதைக் கேட்ட அத்தீனியர்களுக்கு மரண பயம் ஏற்பட்டது. மற்றவர்கள் எதிர்ப்பார்ப்பதைவிட அவனுடைய படை மத்திய கிரீஸில் மிக விரைவில் வந்துவிடுமென்று எண்ண நேர்ந்தது. அவனுடைய வருகையைத் தீப்ஸ் மூலமாக அறிந்தார்கள். அவன் ஏதென்ஸின் மீது படையெடுத்து வருகிருனென்ற ஒரு பொய் வதந்தியும் பரவிவிட்டது. அத்தீனியர்கள் எலாட்டேயை பிலிப் கைப்பற்றியதையும், அவன் தங்களுடைய நாட்டின்மீது படையெடுத்து வருகிருனென்ற பொய் வதந்தியையும் இணைத்துப் பார்த்தார்கள். எலாட்டியா தெர்மாபைலேயைப்போல் ஏதென்ஸுக்கு நெருங்கிய தொடர்புள்ள நாடாக இருந்ததில்லை. இரவு பகலாக ஏதென்ஸ் நகர வாசிகள் மரண பயத்தை அனுபவித்தார்கள். இப்படிப்பட்ட அனுபவம் அவர்களுக்கு எந்நாளுமிருந்ததில்லை. அவர்களுடைய நிலைமையைப் படம் எழுதுவதைப்போல் டெமெஸ்த்தனிஸ் விளக்கிக் காட்டி இருக்கிருன். அவர்களுடைய தோற்றம் உணர்ச்சி முதலியவற்றை அவனைப்போல் எந்தப் பேச்சாளனும் விளக்கி இருக்க முடியாது; எழுதியிருக்கவும் முடியாது.

### ஏதென்ஸ் பத்து அரசியல் தூதுவர்களைத் தீப்ஸுக்கு அனுப்புதல்

டெமெஸ்த்தனிஸின் அறிவுரையின்படியே அத்தீனியாகள் பத்து அரசியல் தூதுவர்களைத் தீப்ஸுக்கு அனுப்பினர்கள். எல்லாம் மாசிடோனியாவின் நட்பிலிருந்து தீப்ஸ் பிரிந்து விடுவதைச் சார்ந்திருந்தது. கடைசியாக மாசிடோனியாவின் நட்பிலிருந்து

தீப்ஸைப் பிரித்துவிடவும் வழி ஏற்பட்டது. சிலர் ஏதென்ஸுடன் நட்பு பாரரட்ட விரும்பிய போதிலும், பலர் மாசிடோனியாவைப் பகைத்து வந்தார்கள். தெர்மாபைலே கணவாய்க்குச் சமீபத்தி லிருந்த நிர்காயே நகரை பிலிப் பிடித்துக்கொண்டதைத் தீபர்களில் பலர் வெறுத்தார்கள். அங்கு முன்பு தீப்ஸ் நகரக் காவற் படை வீரர்களிருந்தார்கள். பிலிப் அவர்களை நீக்கிவிட்டு, அங்கு தெஸ்ஸாலியக் காவற் படை போர் வீரர்களை நிறுத்தியிருந்தான். ஏதென்ஸிலிருந்து தீப்ஸுக்குச் சென்ற அரசியல் தூதுவர்கள் பதின்மரில் டெமெஸ்த்தனிஸும் ஒருவனுக இருந்தான். அவர் கள் தீப்ஸிடமிருந்து சில சலுகைகளைப் பெற விரும்பினுர்கள். ஆனுல் அவர்கள் ஒரு சலுகையைகூடப் பெற முடியவில்லை.

ஏதென்ஸின் அரசியல் தூதுவர்களும் மாசிடோனிய அர சியல் தூதுவர்களும், போயிஷியாவின் தலைநகரில் கூடினுர்கள். தீபர்களுடைய சபை அவர்கள் கொண்டுவந்த நற்செய்தியை ஒரு வர்பின் ஒருவராகப் பேசக் கேட்டுக்கொண்டிருந்தது. கிரீஸின் ஊழ்வலி இந்தச் சபையின் அமைதியான தீர்மானத்தைப் பொறுத்திருந்தென்று சொல்வது மிகையாகும். தீபர்களுடைய விதியை அவர்களுடைய ஓட்டுத் தீர்மானித்ததோடு, கிரீஸில் நடை பெறவிருக்கும் பெரிய சம்பவத்திற்கும் அது உருக்கொடுத்தது.

### தீப்ஸின் நிலைமை

மாசிடோனிய எழுச்சி ஏற்படுத்திய நிலைமை குறித்துச் சிந்திப் பதில் இதுவரையில் நாம் பெல்லாவையும் ஏதென்ஸையும் நோக்கி இருந்தோம். இப்போது தீப்ஸில் என்ன நடந்ததென்பதைப் பார்ப்போம். ஏதென்ஸுக்கும் தீப்ஸுக்குமிருந்த பகையும் போட் டியும் இப்போது விலகிவிட, ஏதென்ஸுக்கு இக்கட்டு நேராதிருப் பதற்கும் வாய்ப்பு ஏற்பட்டது. தன்னுடைய பழைய பகை நாட் டைப் பலவீனப்படுத்துவதின் மூலமாக, தன்னை இக்கட்டுக்குள் ளாக்கிக் கொள்ளக் கூடுமென்பதைத் தெரிந்துகொள்ள தீப்ஸுக்கு ஆழ்ந்த முன்யோசனை தேவையில்லை. ஏதென்ஸ் வலுவுள்ள பகை நாடாக இருக்கும் வரையில், மாசிடோனியா தீப்ஸ் நாட்டைக் கண்ணியத்தோடு நடத்தக்கூடும். ஏதென்ஸ் வீழ்ச்சியடைந்தால் தீப்ஸ், மாசிடோனியாவின் கைப் பொம்மையாகிவிடும். அதற்கு மாசிடோனியா கொடுத்துவந்த மரியாதை ஏதென்ஸின் வீழ்ச்சிக் குப்பின் குறைந்துபோகும். மாசிடோனிய மன்னன் தீப்ஸின் ஆதிக்கத்திலுள்ள நகரங்களை ஒவ்வொன்ருக விடுதலை செய்து விடுவான். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானுல் ஏதென்ஸ் வலு வுள்ள நாடாக இருக்கும் வரையில் மாசிடோனியா; தீப்ஸை மதித்து நடக்கும். இவ்விதமாக தீப்ஸின் நிலைமையும் ஏதென்ஸின்

நிலைமையும் குறிப்பிடத்தக்க முறையில் மாறுபாடாக இருந்தன. ஏதென்ஸ் பிலிப்பின் பகை நாடாக இருக்கும் வரையில் பிலிப் தீப்ஸைத் தன்னுடைய நேச நாடாகக் கருத வாய்ப்பிருந்தது. இவற்றிற்கிடையிலிருந்த இவ் வேறுபாட்டிற்குக் காரணம் ஏதென்ஸ் கடலாதிக்க நாடாக இருந்ததே ஆகும்.

**தீப்ஸ் பிலிப்பிற்கு விரோதமாக ஏதென்ஸுடன் கூட்டு சேருதல்**

முன்னேறியுள்ள தீபன் அரசியல் ஞானி எவரும் ஏதென்ஸின் வீழ்ச்சியால் தீப்ஸும் வீழ்ச்சியடையக்கூடுமென்பதை உணராதிருக்க முடியாது. ஆகையால் பிலிப்பைக் குறித்தெழுந்த பொதுவான எதிர்ப்பில் தீபஸ் கலந்துகொள்வதற்கான வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்திருப்பான். டெமெஸ்த்தனிஸின் நாவன்மையும் ஏதென்ஸ் அளித்த சலுகைகளும் தீபனர்களை ஏதென்ஸுடன் கூட்டு சேரும்படி செய்துவிட்டது. அத்தீனியர்கள் போர்ச் செலவில் மூன்றில் இரண்டு பங்கை ஏற்றுக் கொள்வதாகவும், ஒரோபஸ் மீது தங்களுக்குள்ள உரிமையை விட்டுவிடுவதாகவும் கூறினர். அவர்கள் தீபர்களின் போயிஷியா ஆதிக்கத்தையும் அங்கீகரித்தார்கள். முன்பு ஏதென்ஸ் தீபர்களுக்குப் போயிஷியா மீதுள்ள ஆதிக்கத்தை வன்மையாகக் கண்டித்து வந்தார்கள். ஹெலனிக் உரிமையைப் பாதுகாப்பவர்களென்று டெமெஸ்த்தனிஸின் மூலம் சொல்லிக் கொண்டிருந்த அத்தீனியர்கள், சில போஷிய நகரங்களின் உரிமைகளைத் தங்களுடைய சொந்த நலனுக்காகத் தியாகம் செய்ய முற்பட்டு விட்டார்கள். ஏதென்ஸ் தீப்ஸுக்குப் பல சலுகைகள் அளித்ததன்மூலம் அதன் உறவைத் பெற்றது. டெமெஸ்த்தனிஸின் அரசியல் சூழ்ச்சி வெற்றியடைந்து விட்டது. எந்தவொரு நோக்கத்திற்காக இத்தனை ஆண்டுகள் பாடுபட்டானோ அதனை இப்பொழுது பெற்றான்.

**பிலிப் ஆம்பிஸாவைக் கைப்பற்றியது, கோடை, கி.மு. 338.**

ஆம்பிக்ட்டியோனிக்கழக உறுப்பினர் கட்டளையிட்ட வேலையை முடித்து வைப்பது பிலிப் மன்னனின் முதற் கடமையாக இருந்தது. இந்தப்போரில் அவனைப்பற்றி நாம் விவரமாக அறிந்துகொள்ள முடியவில்லை. அவன் கழக உறுப்பினர் படையுடன் போயிஸியாவிற்குச் சென்றதையும் இரண்டு போர்க் களங்களில் சில அனுகூலங்களடைந்ததையும், கடைசியாக அவன் ஆம்பிஸாவைக் கைப்பற்றியதையுமே அறிகிறோம். மேலும் அவன் ஏதென்ஸ் அனுப்பிய கூலிப்படையினரைக் கொன்று குவித்ததையும். நவபாக்ட்டஸை அவன் வென்றுவிட்டதால் பெலப்போனிசியாவிற்குச் செல்ல அவன் பாதை தயாரானதையும் நாம் காண்கிறோம். அவன் போயிஷியாவில் போர் புரியத் திரும்பிச் சென்றான். அவன் அந்நாட்டில் சாரோ

னேக்குச் சமீபத்திலுள்ள வாயிலே நெருங்கியபோது, தீப்ஸுக்குச் செல்லும் பாதையில் நேச நாடுகளின் படை அணிவகுத்து நிற்பதைக் கண்டான். அப்படையோடு போர்செய்யத் தயாராஞன். அவனிடம் 30,000 காலாட் படையினரும், 2000 குதிரை வீரர்களுமிருந்தார்கள். அவன் படை பகைவர்களுடையதைவிட எண்ணிக்கையில் சற்று அதிகமாக இருந்தது.

**சாரோனே போர்க்களம், ஆகஸ்டு, கி. மு. 338.**

அவர்களுடைய படை மூன்றரை மைல் நீளத்திற்கு நிறுத்தப் பட்டிருந்தது. அதனுடைய இடது வியூகம் சாரோனேயையும், வலது வியூகம் செபிஸஸ் ஆற்றையும் தொட்டுக்கொண்டிருந்தன. தீபர்களுடைய ஹாப்லைட் போர் வீரர்கள், தியாஜேனஸ் தலைமையில் வலது வியூகத்தில் நிறுத்தப் பட்டிருந்தனர். அதை மதிப்பிற்குரிய இடமாகக் கருதினர்கள். எப்பாமினுண்டஸ் இந்தப் படையைக் கொண்டு லூக்ட்ராவிலும் மான்டினேயிலும் வெற்றிமாலை சூடினன். 'புனித குழி' என்ற படை முன் வரிசையில் நிறுத்தப்பட்டிருந்தது. மத்திய வியூகத்தில் அச்சேயர்கள், கொரிந்தியர்கள், போஸியர்கள்' மற்றும் பல சிறிய நாடுகளின் படைகள் அணிவகுத்து நின்றன. ஹெலனிக் உரிமைக்காகப் போரிட வந்தவர்களென்று மத்திய வியூகத்திலிருப்பவர்களை டெமெஸ்த்தனிஸ் பெருமையாகப் பேசிய துண்டு. அத்தீனியப் படை இடது வியூகத்தில் சாரெஸ், லைசிக்கிள்ஸ், ஸ்ட்ராட்டோக்கிள்ஸ் என்ற மூன்று தலைவர்களின் கீழ் பணிபுரிந்தது. அவர்கள் மூவரில் சாரெஸ் மதிப்புக்குரியவன். அனுபவம் வாய்ந்தவன்; ஆனல் அறிவாற்றல் அற்றவன். மற்ற இருவரும் திறமையற்றவர்களாக இருந்தார்கள். டெமெஸ்த்தனிஸ் ஒரு ஹாப்லைட் போர் வீரனுகப் பணியாற்றினன்.

கிரேக்க வரலாற்றில் சிறப்பு வாய்ந்த போர்களில் ஒன்ருகிய இதனைக் குறித்து அறிந்துகொள்வது மிகவும் குறைவாக இருக்கிறது. ஆனல் பிலிப் மன்னனுடைய போர்ச் சூழ்ச்சிகளைப் பற்றி இதன் மூலம் பொதுவாக அறியலாம். பிலிப் மன்னனை எதிர்த்து நின்ற படையில் தீப்ஸ் நகரின் காலாட் படை மிகவும் வலுவுள்ளது. எனவே அதற்கு எதிராக, பிலிப் தன் இடது வியூகத்தில் தன்னுடைய பாலான்ஸ் படையை நிறுத்தினன். அவர்கள் நீண்ட வேலாயுதங் களைத் தாங்கி நின்றனர். மிகவும் பழைமையானதும் கிரேக்கர் களுடைய ஹாப்லைட்ஸ் என்று அழைக்கப்படுகிற காலாட் படையுடன் இப்புதிய பாலான்ஸ் படையின் சக்தியைப் பரிசோதிக்க விரும்பினன். இந்த இடது வியூகத்தின் பக்கவாட்டில் தன்னுடைய குதிரைப் படையை நிறுத்தினன். பாலான்ஸ் படை தீபர்களைக் களைப்புறச் செய்த பிறகு குதிரைப் படையைக் கொண்டு அதைத் தாக்க விரும்பினன். குதிரைப் படைக்கு பிலிப்பின் பதினெட்டு வயதுடைய

மகன் அலெக்ஸாந்தர், தலைமை தாங்கினான். யுத்தம் நடந்த ஆற்றங் கரையில் ஒரு மரம் நிற்கிறது. பல நூற்றாண்டுகள் கழிந்து விட்ட போதிலும் அலெக்ஸாந்தருடைய குதிரைப்படை தங்கிய ஓக்மரம் அங்கே நின்று கொண்டிருப்பதை மக்கள் காணலாம். வலது சாரிப் படை வலுவற்றிருந்தது. அத்தீனியர்களை அவர்களுடைய நேச உறவு நாடுகளின் படையிலிருந்து பிரித்து வெளியே கொண்டு வருவதே பிலிப்பின் நோக்கமாக இருந்தது. இந்தத் திட்டம் எப்பா மினாண்டஸின் யுத்த தந்திரத்தை நமக்கு நினைவூட்டுகிறது. போராட்டத்தில் இறுதி வெற்றியைக் கொண்டுவருவது குதிரைப் படையாக இருப்பது, பிலிப் மன்னனின் போர் முறைத் தந்திரமாக இருந்து வந்தது.

அத்தீனியர்கள் பிலிப் மன்னனின் படையை நெருக்கிப் பின் னுக்குத் தள்ளினார்கள். பிலிப் மன்னன் பின்வாங்கிச் செல்வதைத் தங்களுக்குக் கிடைக்கப் போகும் வெற்றியாக அவர்கள் கருதினார்கள். வெற்றியுணர்ச்சியினால் உந்தப்பட்டு 'மாசிடோனியர்களை நோக்கி முன்னேறுங்களெ'ன அத்தீனிய ஸ்ட்ராட்டோகிளிஸ் ஆணையிட் டான். அந்நேரத்தில் அலெக்ஸாந்தர் தீபர்களைத் தாக்கி அவர்க ளுடைய படைத் தலைவனைக் கொன்று போர் வீரர்களைப் பின் வாங்கி யோடும்படி செய்தான். புனித லோகஸின் நண்பர்கள் நின்ற இடத்தை விட்டுப் பின் வாங்காமல் எதிர்த்து நின்றார்கள். இப் பொழுது பிலிப் காலாட் படையினரில் சிலரை அத்தீனியர்களைப் பக்க வாட்டிலும் பின்புறத்திலும் தாக்கும்படி அனுப்பினான். பயிற்சி பெற்ற போர் வீரர்களின் தாக்குதலை இவர்களால் சமாளிக்க முடிய வில்லை. ஓராயிரம் அத்தீனியர்கள் கொல்லப்பட்டனர். இரண்டாயிரம் வீரர்களைக் கைதாக்கினான். மற்றவர்கள் போர்க் களத்தை விட்டு ஓடிக் கொண்டிருந்தார்கள். புறமுதுகிட்டு ஓடுபவர்களில் முந்திக் கொண்டவன் டெமெஸ்த்தனிஸாக இருந்தான். ஆனால் புனித குழுப் போர் வீரர்கள் ஓட மறுத்து விட்டார்கள். அவர்கள் போரிட்டு வீர மரணமடைந்தனர். சாரோனே செருக்களத்தில் அவர்கள் வெளிப்படுத்திய வீரவுணர்ச்சியே அவர்கள் தங்கள் உரிமைக்காக விடுதலைக்காகப் போராடினார்களென்பதைக் காட்டிற்று. போசிஸி லிருந்து தீப்ஸுக்குச் செல்லும் பிரயாணி சாரோனேயைக் கடந்து செல்லும் வழியில் போர்க் களத்தில் மாண்டவர்களின் சமாதியைக் காணலாம். கல்லறைகுள்ளிருக்கின்ற எலும்புக் கூண்டுகளைக் காவல் புரிய நிறுத்தப்பட்ட சிங்கத்தின் சிலை உடைந்து கிடைப்பதையும் பார்க்கக் கூடும்.

### சாரோனே செருக்களத்தின் சிறப்புகள்: 1. படை.

செருக் களத்தில் மாண்ட அத்தீனியர்களைச் சிறப்பிக்கும் முறை யில் நடப்பட்டநடு கல்லில் எழுதப்பட்ட வாசகம் நமக்கு ஆறுதல்

அளிக்கிறது. 'கடவுள் ஒருவரே வெற்றி வேந்தராக இருக்கிருர். மனிதர்கள் வீழ்ச்சியடைவதற்கு எப்போதும் ஆயத்தமாக இருக்க வேண்டும்,' என்று அதில் பொறிக்கப்பட்டுள்ளது. இதுதான் உண்மை. ஆனுல் தோல்வி வெற்றியைக் கொண்டு வராது என்று எண்ணவே கூடாது. நேச நாடுகளின் கூட்டம் போரைத் தொடங்கியபோது அவர்களுடைய நிலைமை மோசமாக இருக்கவில்லை. அவர்களுக்குத் தகுதி வாய்ந்த ஒரு படைத் தலைவன் மட்டும் இருந்திருப்பானுகில், அவர்கள் மாசிடோனியர்களைப் போசியாவின் பள்ளத்தாக்குகளிலும் லோக்ரிஸ் குன்றுகளிலும் தலைவிரிகோலமாக ஓடும்படி செய்திருப்பார்கள். அவர்கள் சார்பில் சாரேஸ் ஒருவனே பிலிப்பை எதிர்க்கும் திறமையுடையவனுகயிருந்தான். அத்தீனிய படைத் தலைவர்களும் தீப்ஸ் படைத் தலைவர்களும் திறமையற்றிருந்தார்கள். ஆகையால் போரின் போக்கு லோக்ரிஸில் தீர்மானமாகிவிட்டது. போயிஷியாவில் அவர்கள் செய்த தவறு தோல்விக்குக் காரணமாக இருந்தது. அவர்கள் பகைவனை நேருக்கு நேர் செருக்களத்தில் சந்தித்ததால் அவர்களடைந்த லாபம் தோல்வி ஒன்றுதான். திறந்த வெளியிலிருந்த போர்க்களத்தில், மிக்க சிறப்பு வாய்ந்த படைத்தலைவனைச் சந்தித்து வெற்றி பெறுவது இயலாததொன்ருகும். எனவே அவர்களோடொத்த தகுதி வாய்ந்த தலைவன் தங்களுக்கில்லையானுல், மக்கள் தோல்வியடைவதற்குத் தயாராக இருக்க வேண்டும்.

## 2. அரசியல்

சாரோனே யுத்தம், வரலாற்றுப் புகழ்பெற்ற எகோஸ்பொட்டாமி, லூக்ட்டராயுத்தங்களைப்போல் சிறப்பு வாய்ந்ததாக இருந்தது. பேராதிக்கம் அல்லது கிரேக்க நாடுகளில் முதன்மையாக விளங்கிய நிலைமை, ஏதென்ஸிடமிருந்து ஸ்பார்ட்டாவிற்கு மாறியது. பிறகு தீப்ஸ் கிரீஸில் தலைமையான நாடாக விளங்கிற்று. இப்போது பேராதிக்கம் மாசிடோனியாவிற்குக் கிடைத்தது. சாரேனேயில் கிரேக்கர்களின் சுதந்திரம் அழிந்தது என்பது. லூட்ரா, கோட்ஸ் நதி முதலிய போர்களில் அவர்களின் சுதந்திரம் அழிந்தது எவ்வளவு தூரம் உண்மையோ, அதனேடு ஒப்பிடப்படும். கிரீஸில் ஒரு நாடு செல்வாக்கடையும் போது மற்ற நாடுகளின் செல்வாக்கு மறைந்து விட்டது. வேறு நாடுகள் செல்வாக்கடைந்த நாட்டைச் சார்ந்து வாழ்ந்து வந்தன. ஏதென்ஸ் ஓர் இரண்டாந்தரமான நாடாகி விட்டது. தீப்ஸின் நிலைமை அதைவிட மோசமாகி விட்டது. ஸ்பார்ட்டா முதன்மையான நாடானபோது ஏதென்ஸ் தன்னுடைய செல்வாக்கை இழந்து விட்டது. தீப்ஸின் நிலை பரிதாபமாகி விட்டது. ஸ்பார்ட்டா செல்வாக்குள்ள நாடாக இருந்தபோது அது ஏதென்ஸை நடத்திய முறையை நாமறிவோம். தீப்ஸ் ஏதென்ஸை அழித்து விடவகுத்த பல திட்டங்களையும் நாம் அறிவோம். முந்திய காலத்து ஆதிக்க நாடு

களைப் போலல்லாமல் மாசிடோனியா தனிப்பட்ட ஓர் ஆதிக்க நாடாக விளங்கியது.

**மாசிடோனியாவைப்பற்றிய கிரேக்கர்களின் உணர்ச்சி**

கிரிஸில், மாசிடோனியா ஒரு கிரேக்க நாடாகக் கருதப்படவில்லை. ஜேஸன் தெற்கு கிரேக்க நாடுகளைத் தன் படைகொண்டு அச்சுறுத்தியபோது அவர்கள் தெஸ்ஸாலிய நாட்டைக் கிரேக்க நாடாகக் கருதவில்லை. தெஸ்ஸாலியையவிட மாசிடோனியோ, அரசியலிலும், வரலாற்று முறையிலும், புவியியல் முறையிலும் மாறுபட்ட நாடாக இருந்தது. தெஸ்ஸாலி கிரேக்க நாடுகளின் அரசியல் முறைக்கு ஒத்திருந்தது. மாசிடோனியாவின் அரசியல் முறை அவற்றிற்கு ஏற்றதாக இருந்ததில்லை. ஏதென்ஸ், ஸ்பார்ட்டா, கொரிந்தியா, ஆர்கோஸ், தீப்ஸ் முதலியன பழங்கால ஆதிக்க நாடுகளாகும். அவை ஒன்றுக்கொன்று பகைவர்களாகவோ, நண்பர்களாகவோ பாவித்து வாழ்ந்து வந்தன. அவற்றின் வரலாறு பொதுவானதாக விளங்கிற்று. மாசிடோனியாவின் ஆதிக்கத்தை அவர்களால் அங்கீகரிக்க முடியவில்லை. ஓர் இழிவான நாடு திடீரென்று உயர்ந்து விட்டதைப் போலவே அவர்கள் மாசிடோனியாவைக் கருதினார்கள். மாசிடோனியாவின் ஆதிக்கம் வரம்பில்லாக் கோனாட்சி முறையைக் கொண்டது. மாசிடோனியாவிற்குக்கட்டுப்பட்டு நடப்பது, மாசிடோனியக் கொடுங்கோலனுக்குக் கட்டுபட்டு அடிமைகளாக இருப்பதைப் போன்றதாகுமெனக் கருதினார்கள். ஸ்பார்ட்டாவில் இறைமை மக்களிடமிருந்தது. ஏதென்ஸில் இறைமை மக்களிடமிருந்தது. ஆகையால் கிரேக்கர்கள் மக்களாட்சிக்குத் தலை வணங்கத் தாமதித்ததில்லை. அவர்கள் கொடுங்கோலர்களின் இறைமைக்கு ஒருபோதும் தலைவணங்கியதில்லை. ஆகையால் சாரோனேயாவில் ஏற்பட்ட தோல்வி கிரேக்க நாடுகள் முழுவதும் பரவிற்று. கிரேக்கர்களிடம் புதிய அச்சம் குடிகொண்டது. பிலிப் மன்னனின் வெற்றி தலைசிறந்த வெற்றியாக இருந்தது. இனி பழைய கிரேக்க நாடுகளில் எதுவும் முதல் தரமான நாடாக வழி இல்லாமல் போயிற்று.

## 9. அகில கிரேக்கர்களின் சபை; பிலிப்பின் மரணம்.

சாரோனே செருக்கள நிகழ்ச்சிகளைப் பற்றிக் கேட்கும் வாய்ப்பு ஐஸோகிராட்டிஸுக்குக் கிடைத்தது. அவன் தன்னுடைய நாட்டினராகிய அத்தீனியர்களுடைய வீழ்ச்சியையும், கிரேக்க நாடுகள் ஐக்கியப்படும் என்பதையு மறிந்து ஆறுதலடைந்து விட்டான். ஆனால் அவன் எதிர்ப்பார்த்த கிரேக்க ஐக்கியம் ஏற்படவில்லை.

மாசிடோனியாவின் பேராதிக்கம், கிரேக்க நாடுகளை ஐக்கியப் படுத்தவோ, தனித்து வாழ்கின்ற மனபான்மையை துடைத் தெறியவோ இல்லை. ஏதென்ஸும் ஸ்பார்ட்டாவும் என்ன செய்தனவோ அதையே மாசிடோனியா செய்தது. பிலிப் எவ் வகையில் தன்னுடைய வெற்றியைப் பயன்படுத்தினன் என்பதை இனி நாம் கவனிப்போம்.

**பிலிப் தீபர்களிடம் இரக்கமற்றிருந்தான்; ஆனால் ஏதென்ஸிடம் கருணை காட்டினன். டெமேடிஸ்.**

போயிபிடாஸ் தீப்ஸ் நகரின் அரசன்மீது திடீர்த் தாக்குதல் நடத்தியபோது ஸ்ப்பார்ட்டா தீப்ஸை எம்முறையில் நடத்திற்றோ அதே விதமாக பிலிப் தீப்ஸை நடத்தினன். அவன் தீப்ஸ் நகரின் அரணில் ஒரு மாசிடோனியக் காவற் படையை நிறுத்தி வைத்தான். போயிஷியன் கூட்டமைப்பைக் கலைத்துவிட்டான். கூட்டமைப்பி லிருந்த நகரங்களுக்கு விடுதலையளித்தான். அழிந்துபோன ஆர்கோ மேனஸ், பிளாட்டியா நாடுகள் புத்துயிர் பெற்றெழ ஊக்கமளித் தான். அவன் தீப்ஸைக் கடுமையாகத் தண்டித்தபோதிலும், ஏதென் ஸிடம் இரக்கம் காட்டினன். ஏதென்ஸ் தற்காப்பற்ற நிர்ப்பந்த நிலை யில் அவனிடம் சரணடைய வில்லையென்ற உண்மையை நாம் உணர வேண்டும். அவன் அட்டிகாவின்மீது படையெடுத்து அதனுடைய பயிர் பச்சைகளை நாசமாக்கலாம். ஆனால் ஏதென்ஸ் அல்லது பைரேஸை அவனால் தாக்கி எளிதில் வென்றுவிட முடியாது. பெரின்தஸ் முற்றுகையிலும், பைஸான்ஷியம் முற்றுகையிலும், நல்ல பாடத்தைப் படித்திருந்தான். அது அவன் மனத்தைவிட்டு மறையவில்லை. ஏதென்ஸின் கடலாதிக்கம் அந்நாட்டைப் பாதுகாத்தது. மேலும் ஏதென்ஸ் அறிவுவளர்ச்சியுள்ள நாடென்று கருதி, அதை மதித்து வந்தான். அவன் அதன் ஆதரவைப் பலவகைகளிலும் நாடினன். ஆகவே அந்நாட்டிற்குத் தனிச் சலுகையளித்தான். இப்போது ஏதென்ஸ் நகரவாசிகள் சமாதானத்தை நாடும் கட்சியை ஆதரிக்கத் தயாராக இருந்தார்கள். டெமெஸ்த்தனிஸின் கொள்கை வீழ்ச்சி யடைந்தது. அத்தீனியர்கள் 2000 கைதிகளை மீட்கவும், அட்டிகாவின் மீது ஏற்படக் கூடிய படை எடுப்பைத் தடுக்கவும் விரும்பினர்கள். ஏதென்ஸில் 150,000 அடிமைகளிருந்தார்கள். அவர்களுக்கு விடுதலை யளிக்கவும், அவர்களைக் குடிமக்களின் படையில் சேர்த்துக்கொள்ளவும் ஒருதிட்டம்கொண்டுவந்தான், ஹைபெரிடிஸ் என்பவன். அவனுடைய திட்டத்திற்கு மிகச் சிலர் செவி சாய்த்தனர். பிலிப் மன்னனல் கைது செய்யப்பட்டவர்களில் நாவன்மை படைத்த டெமேடஸும் ஒருவனாக இருந்தான். அவன் சமாதானத்தை விரும்பும் கட்சியைச் சேர்ந் தவன். அவன் மாசிடோனியாவின் ஆத்க்கத்தைத் தடுக்க முடியா தென்ற உண்மையை யுணர்ந்திருந்தான். அவனைப்பற்றிய ஒரு

சிறு கதை மக்களிடையே உலாவிவந்தது. அதாவது யுத்தம் முடிந்த அன்றிரவு பிலிப் மன்னன் நன்ருகக் குடித்திருந்ததாகவும், அவன் கைதிகளிலிருந்த விடத்திற்குச் சென்று, டெமெஸ்த்தனிஸ் ஓடிய ஓட்டத்தைப் பற்றிக் கேலி செய்ததாகவும் ஒரு கதையுண்டு. அப்போது டெமேடெஸ், 'ஓ அரசனே! நற்காலம் உனக்கு அகமெம்னனுடைய சிறப்பை அளித்திருக்கிறது, நீயோ தெர்சிட்டைஸை (Thersites) ப்போல நடந்துகொள்கிருய்!' என்று அவனைக் கடிந்துரைத்தான். இந்த வார்த்தைகளைக் கேட்டு பிலிப் வருந்தினுன். அவன் தான் அணிந்திருந்த மாலைகளையும், கையிலிருந்த மதுபான பாத்திரங்களையும் வீசியெறிந்துவிட்டு, டெமேடெஸுக்கு விடுதலையளித்தான். இந்தக் கதை உண்மையோ, பொய்யோ; அதை நாம் அறியோம். ஆனல் அவன் டெமேடஸை விடுதலை செய்து சமாதானப் பேச்சுவார்த்தைகளைத் தொடங்க அவனை ஏதென்ஸுக்கு அனுப்பினுன்.

### ஏதென்ஸுக்கும் மாசிடோனியாவிற்குமிடையே சமாதான ஒப்பந்தம்

பிலிப் கைதிகளைப் பணமின்றி விடுதலைசெய்வதாகவும், அட்டிகாவின்மீது படையெடுத்து வருவதில்லையென்றும் ஒப்புக்கொண்டான். அத்தீனியர்கள் தங்களுடைய கூட்டமைப்பைக் கலைத்துவிட்டு, பிலிப் திட்டமிட்டுள்ள அகில கிரேக்கர்களின் சங்கத்தில் சேர்ந்துவிட ஒப்புக்கொண்டனர். அவரவர்களுடைய எல்லையைப் பொறுத்தமட்டில் ஒரோப்பஸ் ஏதென்ஸுக்குக் கொடுக்கப்பட்டது. செர்சோனேசஸ் மாசிடோனியாவிடம் ஒப்படைக்கப்பட்டது. இந்த நிபந்தனைகளின் பேரில் சமாதான ஒப்பந்தத்தை உருவாக்கி, இரு கட்சியினரும் ஏற்றுக்கொண்டனர். இதனல் ஏதென்ஸுக்கு மன நிறைவு ஏற்பட்டது. பிலிப் தன்னுடைய மகனையும் தன்னுடைய அரசாங்க அலுவலர்களில் இருவரையும் ஏதென்ஸுக்கு அனுப்பினுன். அவர்கள் போரில் இறந்த அத்தீனியர்களின் பிரேதங்களை ஏதென்ஸுக்கு எடுத்துச்சென்ருர்கள். அத்தீனியர்கள் அவர்களை மரியாதையோடும் கண்ணியத்தோடும் வரவேற்ருர்கள். அவர்கள் தங்களுடைய நன்றியைக் காட்ட பிலிப் மன்னனின் உருவச்சிலையைத் தங்களுடைய சந்தைவெளியில் நிறுத்தினுர்கள். இறுதியில் டெமெஸ்த்தனிஸும் பிலிப் மன்னன் அருளுள்ளம் கொண்டவனென்பதை ஒப்புக்கொண்டான்.

### பெலப்போனீசியாவில் பிலிப்; முதல் கிரேக்க சங்கம்.

ஸ்பார்ட்டாவை மாசிடோனியா தன்னுடைய ஆதிக்கத்தை ஒப்புக்கொள்ளும்படி செய்ய வேண்டிய அவசியமேற்பட்டது. பிலிப் பெலப்போனீசிய நாட்டின் மீது படை எடுத்துச்சென்ருன். அவனை

பெலப்போனீஸிய நாடுகள் எதிர்க்கவில்லை. ஸ்பார்ட்டாவைத் தவிர மற்றப் பெலப்போனீஸிய நாடுகள் அவனுடைய ஆதிக்கத்தை ஏற்றுக் கொண்டன. ஸ்பார்ட்டாவின் அரசியல் முறை அவனுக்கு நூதனமாகத் தோன்றியது. அதனுடைய கோனாட்சிமுறை இருண்ட காலங்களின் சின்னமாக அவனுக்குத் தோன்றியது. அவன் ஸ்பார்ட்டாவின் அரசியல் அமைப்பை மாற்றியமைக்க விரும்பினான். ஆனால் அவன் அதை அப்போது செய்ய விரும்பவில்லை. அக்காலத்தில் சிறுவனாகயிருந்த எப்பிடவுரஸ் என்ற கவிஞன், பிற்காலத்தில், ஆஸ்கிளிப்பியோஸ் (Asklepios) தெய்வம் ஸ்பார்ட்டாவைக் காப்பாற்றியது எனக் கூறினான். ஸ்பார்ட்டாவின் முடியாட்சியை ஒழித்துவிட, பிலிப் ஸ்பார்ட்டாவிற்கு வந்தானென்று அவன் கூறுகிறான். ஸ்பார்ட்டாவின் கோனாட்சி முறை காப்பாற்றப்பட்டது. ஆனால் எப்பாமினாண்டஸின் கையில் எப்படி அவதியுற்றதோ அதே விதமாக இப்போது அது அவதியுற்றது. இப்போது லோகோனிய நாடு பாழாக்கப்பட்டது. அதன் எல்லை சிறியதாகிவிட்டது. அதனுடைய எல்லைகளிலிருந்த நிலங்கள் அதனிடமிருந்து கைப்பற்றப்பட்டு ஆர்கோஸ், தேசே, மெகாலோபோலிஸ், மெஸ்ஸேனியா என்ற நாடுகளுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டன. இவ்விதமாக பிலிப் தன் படைத்திறனையும் ஆற்றலையும் தெற்கிலுள்ள கிரேக்கர்கள் உணரும்படி செய்தான். பிறகு அவன் தெர்மாபைலேயில் அகில கிரேக்க சங்கத்தைக்கூட்டினான். ஸ்பார்ட்டாவைத் தவிர மற்றக் கிரேக்க நாடுகள் அச் சங்கத்திற்குப் பிரதிநிதிகளை அனுப்பின.

**கொரிந்தியாவில் இரண்டாவது சங்கம், கி.மு. 337.**

அகில கிரேக்க இரண்டாவது காங்கிரஸ் கொரிந்தியாவில் கூடிற்று. அதற்கு மாசிடோனியா தலைமை தாங்கிற்று முதல் காங்கிரஸ் கூட்டத்திலிருந்து அதனுடைய நோக்கங்களை நாம் அறிந்துகொள்ளக்கூடும், இரண்டாவது காங்கிரஸ் கூட்டத்தில் பிலிப் தன்னுடைய திட்டத்தை அறிவித்தான். அப்போது அவன் பாரசிகத்தின் மீது படையெடுத்துச்செல்ல வேண்டியதின் நோக்கத்தை அவர்களுக்கு எடுத்துக்கூறினான் கிரீஸின் சார்பாகவும், அதனுடைய தெய்வங்களின் சார்பாகவும், ஆசியாவிலுள்ள கிரேக்கப் பட்டினங்களுக்கு விடுதலையைத் தேடிக்கொடுக்கவும், ஸெர்ஸஸ் காலத்தில் தங்களுடைய முன்னோர்களுக்கும் அவர்கள் வணங்கிய தெய்வங்களுக்கும் செய்த தீமைக்குப் பழி வாங்கவும், பாரசீகத்தின் மீது படையெடுக்க வேண்டுமென்று இராஜ சிங்கமாகிய பிலிப் கர்ஜனை செய்தான். ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கும் நடைபெறவிருந்த போராட்டம் ஆரம்பமாகும் தருணம் வந்துவிட்டது. இப்போது ஐரோப்பாவிற்கு ஓர் தலைவன் கிடைத்துவிட்டான்.

ஆகவே பாரசீகப் பேரரசு ஐரோப்பாவிற்கு இழைத்த தீமைக்குத் தீமை செய்யும் வாய்ப்பு ஏற்பட்டுவிட்டது. சங்கத்தில் கூடி இருந் தவர் போரை ஆதரித்தனர். பிலிப்பைப் படைத்தலைவனுகத் தேர்ந் தெடுத்தார்கள். அகில கிரேக்கப் படைக்குப் போர் வீரர்களையும், போர்க்கப்பல்களையும் கொடுக்க ஒவ்வொரு நாடும் ஒப்புக்கொண்டது. ஏதென்ஸ் தன் கடற்படையின் பெரும்பகுதியைக் கொடுக்க ஒப்புக் கொண்டது.

**கி.மு. 480-ல் கூடிய அகில கிரேக்க சங்கம், கி.மு. 338-ல் கூடிய சங்கத்தோடு ஒப்பிடப்படுதல்.**

மாசிடோனியாவின் தலைமையில் கூடிய சங்கத்தின் முன் போரைக்குறித்த திட்டத்தை பிலிப் சமர்ப்பித்தான். அத்திட்டம் ஒரு பொது நோக்குள்ளதாக இருந்தது. பொதுவான அச்சத்தின் காரணமாக தெமிஸ்ட்டோகிளிஸ் கிரேக்கர்களை ஐக்கியப்படுத்தத் துன்புற்றிருப்பானுகில், இப்போது பொது நம்பிக்கைக்காக பிலிப் அவர்களை ஐக்கியப்படுத்த அதைவிடப் பன்மடங்கு துன்புற வேண்டி யிருக்கும். மாசிடோனியாவின் திட்டம், அகில கிரேக்கர்களுக்கும் பொதுவான திட்டமாகக் கருதப்படவில்லை. ஆகையால் அத்திட்டத் தினுல் அங்கத்தினர் குறிப்பிடத்தக்க ஊக்கமடையவில்லை. பூசந் தியில் 480 கி.மு. வில் கூடிய காங்கிரஸுக்கு, 380-கி.மு. வில் கூடிய சங்கம், எல்லாவகையிலும் ஒத்திருந்தது. அப்போது பாரசீகத்தின் பெரும் படை கிரேக்க நாடுகளை விழுங்கிவிடுவதற்காக வந்தது. அப்போது வாழ்ந்த கிரேக்கர்கள், பாரசீகப் படையைக் கண்டு நடுங் கினுர்கள். நாளடைவில் அந்நடுக்கம் நீங்கியது. அதைக் கிரேக் கர்கள் மறந்தும் போயினர். இப்போது அவர்களைப் பழிவாங்க ஏற்பட்ட இந்தச் சந்தர்ப்பத்திலேயே பழைய காலத்தின் சம்பவத்தை நினைத்துப்பார்க்கும் வாய்ப்பு அவர்களுக்கு ஏற்பட்டது. காலசக்கரம் சுழன்றது. ஓட்டத்தின் காரணமாக அவர்கள் பூசந்தியில் மறு படியும் கூடவும், பயத்தின் காரணமாக ஏற்பட்ட நடுக்கத்தை மறுபடியும் நினைவு கூரவும், அதற்காகப் பழிவாங்கும் செயலிலீடு படவும், நல்ல வாய்ப்பும் ஏற்பட்டது. இந்தப் புதிய சங்கம் ஐஸோ கிராட்டிஸ் எதிர்பார்த்த முறையில் கூடவில்லை. அகில கிரேக்க ஐக்கியத்திற்கான வழியைத் தேடவுமில்லை. மாசிடோனியாவைச் சார்ந்து வாழும் நிலைமை மட்டும் ஏற்பட்டது. ஆனுல் அதன் திட்டங்களை ஆதரிப்பதற்கான நிலையான ஊக்கமேற்படவில்லை. ஒவ்வொரு நாடும் தன்னுடைய சொந்த வேலையைக் கவனிக்க ஆரம் பித்துவிட்டது. எப்போதும்போலவே அவை இப்போதும் ஒதுங்கி நின்றன. இவ்வித மனபான்மையையுடைய சங்க அங்கத்தினர்களை ஒன்று சேரும்படி செய்வது கடினமான வேலையாகயிருந்தது. இவர் களோடு செய்துகொண்ட ஒப்பந்தம் நீடித்திருக்கும்படி செய்வது

அதைவிடக் கடினமாக இருந்தது. அவர்களுடைய நாடுகளின் மத்தியில் காவல் நிலையங்களை ஏற்படுத்தி, போர் வீரர்களை அவற்றில் நிறுத்தி, அவர்கள் மூலமாக ஒப்பந்தம் நிலைத்திருக்கும்படியான சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. பிலிப் மூன்று முதன்மையான இடங்களில் மாசிடோனியப்படையை நிறுத்திவைத்தான். மேற்கிலுள்ள நாடுகளைக் கண்காணிக்க ஆம்பரேஸியாவில் ஒரு படையையும், பெலப்போனீஸியர்கள் கலகம் விளைவிக்காவண்ணம் கொரிந்தியாவில் ஒரு படையையும், வடகிழக்குக் கிரேக்க நாடுகளைக் கண்காணிக்க சால்சியாவில் ஒரு படையையும் அவன் நிறுத்திவைத்தான்.

### சிறிய ஆசியாவின் மீது பார்மேனியோ, அமைன்தாஸ், அட்டாலஸ் ஆகிய மூவரும் படையெடுத்தல், கி.மு. 336.

சிறிய ஆசியாவை வெல்லுவது பிலிப் மன்னனின் நோக்கமாக இருந்தது. அதற்கு அப்பால் படையெடுக்க அவன் திட்டம் வகுக்கவில்லை. இந்தப் படையெடுப்பை அவன் தன்னுடைய தலைமையில் செய்ய வாய்ப்பேற்படவில்லை. தளிர்விடு காலத்தில் அகில கிரேக்கர்களின் காங்கிரஸ் கூட்டத்திற்குப்பின் படையெடுப்பிற்கான ஆயத்தங்கள் பூர்த்தியாகிவிட்டன. பார்மேனியோ இன்னும் மற்றத் தலைவர்களின்கீழ் ஒரு படையை ஹெல்லஸ்பாண்டைக் கைப்பற்றவும், படை தங்குவதற்கு டுரோட் (Troad) பிதினியா (Bithiynia) என்ற இடங்களைக் கைப்பற்றுவதற்கும் அனுப்பினான். எஞ்சிய படை அவன் தலைமையில் செல்வதற்காக நிறுத்தி வைக்கப்பட்டது.

### பிலிப் ஒலிம்பியாஸை விலக்கிவிட்டு, கிளியோபாட்ராவை மணந்து கொள்ளல்

பிலிப்பின் குடும்ப வாழ்க்கையில் பிரிவினையும், மனக்கசப்புமிருந்ததைப்பற்றி அவனுடைய கொரிந்திய நண்பன் அவனுக்குத் திறந்து சொன்னான். ஒரு மாசிடோனிய அரசன் தன்னுடைய மனைவியிடம் விசுவாசமாக நடந்து கொள்வதை எதிர்பார்க்கவே முடியாது. பெருமையும், ஆத்திரமும் கொண்ட அவனுடைய மனைவியால் அவன் நடத்தையைக் கண்டுச் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவளுடைய நடத்தையைப் பற்றியும் மற்றவர்களுக்கு ஐயம் ஏற்பட்டது. அலெக்ஸாந்தர் பிலிப்பின் மகனல்லன் என்று வதந்திகள் கிளம்பின. அட்டாலஸுக்கு நெருங்கிய உறவினளான கிளியோபாட்ராவின்மீது பிலிப் காதல் கொண்டான். அவன் தன்னுடைய முதல் மனைவி ஒலிம்பியாஸை ஒதுக்கிவிட்டு, கிளியோபாட்ராவை மணந்து கொண்டான். திருமணவிருந்தில் அட்டாலஸ் நன்றாகக் குடித்திருந்தான். குடிபோதையில் பிலிப் மன்னனுக்குச் சட்ட

பூர்வமாக ஒரு குழந்தைப் பிறக்க வேண்டுமென்று எல்லோரும் இறைவனை இறைஞ்ச வேண்டுமெனக் கேட்டுக்கொண்டான். இதைக் கேட்ட அலெக்ஸாந்தர் சீறியெழுந்தான். பானம் அருந்திக்கொண்டிருந்த அவன், தன் கையிலிருந்த கோப்பையைத் தன்னுடைய தாயைப்பற்றிக் குறைகூறி இழிவு செய்தவன்மீது வீசினான். இதனைக் கண்ட பிலிப் சீற்றம் கொண்டு தன் வாளை உருவி தன் மகனை வெட்டி வீழ்த்தப் பாய்ந்தான். ஆனால் அவன் சுருண்டு கீழே விழுந்தான். அலெக்ஸாந்தர் தகப்பனுடைய செயலைக் கண்டு கேலி செய்தான். 'ஐரோப்பாவிலிருந்து ஆசியாவிற்குப் போகக் கூடிய மனிதனைப் பாருங்கள், அவன் படுக்கைக்குப் படுக்கை தாவிச் செல்வதையும் கவனியுங்கள்' என்று கூறினான். பெல்லாவில் தங்கியிருக்க அலெக்சாந்தர் விரும்பவில்லை. பிலிப் மன்னனால் கைவிடப்பட்டப் பட்டத்தரசியை அழைத்துக் கொண்டு அவன் ஈப்பிரஸுக்குச் சென்றான். பிலிப் மன்னன் அவனைத் திரும்ப அழைக்கும் வரையில் அவன் லின்செட்டிஸ் குன்றுகளில் வாழ்ந்து வந்தான். தீங்கிழைக்கப்பட்ட தாயைப்பற்றிய பொய் வதந்திகள் பரவிக் கொண்டிருந்தன. கிளியோபாட்ராவிற்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தையின் காரணமாக அலெக்சாந்தருக்கு அரசுகட்டிலைக் குறித்து அச்சம் ஏற்பட்டது. ஈப்பிரஸ் நாட்டு மன்னன் செல்வாக்குள்ளவன். ஒலிம்பியாஸ் அவனுடைய சகோதரியாவாள். ஆகையால் பிலிப்பிற்கு ஈப்பிரஸ் மன்னனைப் பற்றிய பயம் ஏற்பட்டது. பிலிப் மன்னன் அவனோடு நண்பனாயிருக்க விரும்பினான். தன்னுடைய மகளை அவனுக்கு மணமுடித்து வைக்கத் திட்டமிட்டான். அவர்களுடைய திருமணத்தை அவன் ஆசியாவின்மீது படையெடுத்துச் செல்லும் தினத்தன்று சிறப்பான முறையில் பெல்லாவில் செய்து வைக்க விரும்பினான். அவன் ஆசியாவிற்குச் செல்லக் கூடாதென்பது தெய்வத்தின் திட்டமாக இருந்தது. ஒலிம்பியாஸ் தீமை செய்ய அஞ்சாதவள். அவளுக்கிழைக்கப்பட்ட தீங்கிற்குப் பழிக்குப் பழி வாங்கவும், அவளுடைய மகனுக்கு அரசுகட்டிலை அளிக்கவும், ஒரு திட்டம் உருவாக்கினாள். பௌசானியாஸ் என்பவனுக்கு அட்டலாஸ் தீங்கிழைத்திருந்தான். அவனுக்கிழைத்த தீமைக்குப் பிலிப் மன்னன் சரியான நீதியளிக்கவில்லை. எனவே பௌசானியாஸ் பிலிப் மன்னனின்மீது சீற்றம் கொண்டான். திருமணத்தன்று, பிலிப், விருந்தினர்களுடன் நாடக மேடைக்குச் சென்றான். அவ்வாறு செல்லும் போது மெய்காப்பாளர்கள் அவன்பின் வந்து கொண்டிருந்தனர். பௌசானியாஸ் எல்லோரையும் ஒதுக்கித் தள்ளிக்கொண்டு அரசனுக்கு எதிரே பாய்ந்து வந்து, கெல்டுகள் உபயோகிக்கும் ஈட்டியினால் அவனைக் குத்தி கீழே சாய்த்து விட்டான். பிலிப் மன்னன் அதே இடத்தில் உயிரிழந்தான். சுற்றிலுமிருந்த மெய்காப்பாளர்கள் பௌசானியாஸைத் துண்டு துண்டாக வெட்டி வீழ்த்தினர். அவன்

கொல்லப்படுவதற்குக் காணமாக இருந்தவள் ஒலிம்பியாஸ் ஆகும். அக் கொலேயினல் ஏற்பட்ட பலன் அலெக்ஸாந்தருக்குக் கிடைத்தது. அந்தச் சதித் திட்டத்தைப்பற்றி அவனுக்கு ஒன்றுமே தெரியாதென்று நாம் மனமார நம்புகிறோம். பெருந்தன்மையைத் தன் இயல்பாகக் கொண்ட அலெக்ஸாந்தர் தந்தையின் கொலைக்குக் காரணமாக இருந்திருக்க முடியாது. அவனே கொலைக்குக் காரணமாக இருந்தானென்ற பொய் வதந்தியைத் தவிர, அவன்மீது குற்றம் காண எவ்விதமான ஆதாரமுமில்லை. அவன் பிலிப்பின் கொலையைப்பற்றி ஒன்றுந் தெரியாதவன் என அவசரப்பட்டுச் சொல்லிவிட முடியாது.

## அவன் வழிவந்த சந்ததியார் பிலிப்பிற்களித்த நீதி

உலகில் தோன்றிய மன்னர்களில், பிலிப் அடைந்த அநீதியைப் போல் வரலாற்றில் வேறெந்த மன்னனும் அடையவில்லை. வரலாறு அவனைப் புகழாததற்கு இரண்டு அல்லது மூன்று காரணங்களுண்டு. பிலிப்பைவிட மிக்கப் புகழ் வாய்ந்த அவன் மகனுடைய கீர்த்தி பிலிப்பின் புகழை மங்க வைத்தது. பிலிப் தன் வாழ்நாள் முழுவதிலும் பாடுபட்டாலொழிய தன் மகன் சாதித்த காரியங்களைப்போல் செய்ய முடியாது. இரண்டாவதாக அத்தீனிய நாவன்மையாளர்கள், சிறப்பாக டெமெஸ்த்தனிஸ், பிலிப்பின் சிறந்த குணங்களை மற்றவர்கள் அறியாவண்ணம் குறை கூறிப் பொய் பிரசாரங்கள் செய்து வந்தார்கள். மூன்ருவதாக மிகவும் கடினமானதும், பெரியதுமாகிய அவனுடைய தெரேசியன் படையெடுப்பைப்பற்றிய ஆதாரங்கள் ஒன்றும் நமக்குக் கிடைக்கவில்லை. அவனுடைய சொந்தச் செயல்களின் விளைவின் காரணமாகவும், சந்தர்ப்பத்தின் காரணமாகவும், அவனுடைய பகைவர்களின் சொற்பொழிவுகளின் காரணமாகவும், மாசிடோனியாவை உண்டாக்கி விரிவடையச் செய்தவனும், தெரேஸ் கிரீஸ் நாடுகளை வென்றவனுமாகிய பிலிப்பைப்பற்றி எதிர்காலச் சந்ததியார் புகழாவண்ணம் வரலாறு எழுதப்பட்டிருக்கிறது. அவனுடைய மகனின் தீரச் செயல்களை ஒழுங்கான முறையில் படித்தாலொழிய, பிலிப் மன்னனுடைய அரிய சேவையின் பலனைத் தெரிந்து கொள்வது கடினமாகும். தன் மகன் புகழடைவதற்கான திட்டங்களையும் வழி வகைகளையும் பிலிப் செய்து வைத்தான். அலெக்சாந்தரின் சேவை பிலிப் திட்டமிட்டு ஆரம்பித்து வைத்த வேலையின் பயனாக இருக்கிறது.

## தியோபோம்பஸின் பிலிப் வரலாறுகள்

மாசிடோனிய மன்னனின் சிறப்பான குணங்களைப்பற்றிப் புகழ்ந்து கூறும் தன்மையுள்ள ஒரு குறிப்பிடத்தக்க மனிதனிருந்தான். தியோபோம்பஸ் என்று அழைக்கப்பட்ட அவன், சியோஸ் தீவைச் சேர்ந்தவன். ஐஸோகிராட்டிஸின் மாணவன். அவன் தன்

சொந்தத் தீவின் அரசியல் விவகாரங்களில் சிறிதுகாலம் பங்கெடுத்துக் கொண்டிருந்தான். பிலிப் மன்னனுடைய தீரச் செயல்கள் அவனை அக்காலத்தைப்பற்றிய வரலாற்றை எழுதுமாறு தூண்டின. அவன் பிலிப்பரசனை அக்காலத்தின் நடுநாயகமாகக் கொண்டு ஒரு வரலாற்றை எழுதினான். அவ்விரிவான வரலாற்றில் பிலிப் மன்னனுடைய குறைபாடுகளையும், அவனுடைய தவறான செயல்களையும் விவரித்துக் கூறியுள்ளான். அவன் அமைந்தாசின் மைந்தன் பிலிப்பைப் போன்று ஒரு சிறந்த அரசனை ஐரோப்பாவில் எக் காலத்திலும் எழும்பியதில்லையென்று முடிவான தீர்ப்பு கூறியுள்ளான்.

### டெமெஸ்த்தனிஸ் ஒரு சொற்பொழிவாளன்

பிலிப்பின் காலத்துக் கிரேக்க நாட்டு வரலாறு விரிவாக எழுதப்படவில்லை. அது பெரும்பாலும் டெமெஸ்த்தனிஸின் சுய வாழ்க்கை வரலாறு போன்றுள்ளது. இவ்வாறு அக்காலத்தின் சிறப்பான நிகழ்ச்சிகளைச் சிறப்பற்ற சாதாரண முறையில் எழுதியிருப்பது பிலிப் மன்னனுக்கு விரும்பி இழைத்த தீமையாகக் கருதப்படுகிறது. டெமெஸ்த்தனிஸ் நாவன்மை படைத்தவன், நாட்டுப் பற்றுள்ளவன் என்பதை அவனுடைய அரசியல் பகைவர்களே மறுக்கக் கூடும். அவனுடைய சொற்பொழிவுகளிலுள்ள கருத்துக்கள் யாவும் கிரேக்க நாட்டிற்கு ஏற்பட்ட சாபக் கேடுகளின் ஒரு பகுதியாகக் கருதப்படுகின்றன. சுதந்திரமாகவுள்ள பொதுநல நாட்டில் குடிமக்களுக்கு ஊக்கந்தரும் சொற்பொழிவு ஒரு சிறந்த கலையாகவும், இன்றியமையாததொன்றாகவும் கருதப்படுகிறது. பெரிக்கிளிஸ், கிளியோன், ஸெனப்பனைப் போன்ற அரசியலறிஞர் அல்லது படைத் தலைவருக்கு அது மிகவும் சிறப்பானதும், உபயோகமானதுமான ஒரு கருவியாக இருக்கிறது. ஆனால் ஓர் உபயோகமான கருவியாகயிருத்தலினின்று நீங்கும்பொழுது அது மிகவும் அபாயகரமானதும் தீங்கை விளைவிக்கிறதுமான ஒரு கருவியாக மாறிவிடுகிறது. இதே நிலைதான் ஏதென்ஸில் ஏற்பட்டது. ஏதென்ஸில் வாக்கு சாதுரியக் கலை முழுப் பக்குவமடைந்திருந்தது. அதனுடைய முழு நிறைவின் காரணமாக வாலிபர்கள் அக்கலையைக் கற்றுக்கொள்வதற்கு விருப்பங்கொண்டார்கள். அக்கலையில் பயிற்சி பெற்றவர்கள் பொது வாழ்க்கையில் முழுமை பெற்ற பேச்சாளர்களாக விளங்கினார்கள். ஆனால் அவர்கள் சிறந்த அரசியல்வாதிகளாக விளங்கவில்லை. சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் நாவன்மை படைத்த திறமை மிக்க பேச்சாளர் அரசியல்வாதிகளாக விளங்கினார்கள். அதற்கு எடுத்துக்காட்டாக டெமெஸ்த்தனிஸ் விளக்குகிறான். அவர்கள் எல்லோரும் அரசியல் ஞானத்தை சொல்லலங்காரங்களில் விளக்கிக் காட்டினார்கள். ஆனால் இவர்களுடைய அரசியல் ஞானம் மாசிடோனிய அரசியல்வாதிகளின் அறிவின் முன் நிற்க முடியவில்லை. சொற்கோப்புத் திறனுடையார்,

அரும் பெரும் செயல்களை ஆற்றுவோர் கைகளில் குழந்தைகள்போல் காட்சியளிக்கின்றனர். அத்தீனியர்கள் தங்களுடைய பேச்சாளர் களின் நீண்ட சொற்பொழிவைக் கேட்பதிலும், குற்றங் கண்டு பிடிப் பதிலும், தனிப்பட்ட இன்பமடைந்தார்கள். டெமெஸ்த்தனிஸின் சொல்லாற்றல் மற்றவர்களால் புகழப்பட்ட போதிலும், அவனைப் போன்ற நாவன்மை மிக்கோரால் அவன் புகழப்படவில்லை. வருங்கால சந்ததியிடம் அது ஏற்படுத்திய விளைவை அவன் காலத்தில் அவனைப் போலுள்ளவர்களிடம் உண்டாக்கவில்லை. பொது அறிவு படைத்த சாதாரண மனிதன்கூட அவனுடைய சொற்பொழிவிலுள்ள குற்றங் குறைகளை எடுத்துக்காட்ட முடிந்தது.

### டெமெஸ்த்தனிஸின் கொள்கை

டெமெஸ்த்தனிஸ் தனக்குக் கிடைத்த வரமாகிய நாவன் மையைத் தன் நாட்டின் சேவைக்காகவே பயன் படுத்தினன். குருட்டுத் தனமான நாட்டுப் பற்றின் காரணமாகத் தன் வரத்தைப் பழிக்கஞ்சாது பயன்படுத்தினன். அவன் பிலிப் அரசனை ஒருபுறச் சாதியான் என்றும், ஹெல்லாஸையும் அதன் தெய்வங்களையும் அச் சுறுத்திக் கொண்டிருக்கிறனென்றும் போதித்து வந்தான். உலக வரலாற்றின் முறைப்படி அவனுடைய கொள்கையை ஆராய்ந்து பார்க்கும் போது, அது மிகவும் பிற்போக்கானதும், இடைஞ்சல் பல செய்யக் கூடியது மாகும் என்பது விளங்கும். மாஸிடோனியா விரிவடையும் நாள் வந்து விட்டதை அவன் அறியாதிருந்ததற்காக அவனை நாம் குறைகூற முடியாது. அல்லது அக்காலத்திலிருந்த கிரேக்கப் பொது நல நாடுகளில் ஒன்றும் தன்னுடைய ஆதிக்கத்தைப் பெருக்கிக் கொள்ளத் தகுதியற்றிருந்த தென்பதை அவன் உணர வில்லை என்பதற்காகவும் நாம் அவன் மீது குறைகூற முடியாது. மாஸிடோனியாவின் ஆதிக்கப் பெருக்கம் அல்லது இதர கிரேக்க நாட்டின் ஆதிக்கப் பெருக்கத்தினல் அதற்கு ஏற்படும் நன்மையைப் பற்றி அவன் கவலை கொள்ளவில்லை. மாஸிடோனியாவின் ஆதிக்கப் பெருக்கினல் ஏதென்ஸின் செல்வாக்கு குறைந்து விடுகிறதே என்று அவன் கவலைப் பட்டான். அவனுடைய நீண்ட நாள் அரசியல் வாழ்க்கை தடுக்க முடியாத மாசிடோனியாவின் முன்னேற் றத்திற்கு எதிராக ஏற்பட்ட ஒரு கிளர்ச்சியாக இருந்தது. டெமெஸ்த் தனிஸ் மாசிடோனியாவின் முன்னேற்றத்தைத் தடுக்க நாள்தோறும் மாதந்தோறும் இடைவிடாமல் தொடர்ச்சியாகத் திட்டவட்டமின்றிக் கிளர்ச்சி செய்து வந்தான். அக்கிளர்ச்சி விருவிருப்பானதும், பெருந்திறமை வாய்ந்ததுமாக இருந்ததே தவிரப் பயன் விளைவிக்கக் கூடிய கிளர்ச்சியாக இருக்கவில்லை. அனலான நாட்டுப் பற்றுள்ள வன் ஓர் சிறந்த அரசியல் வாதியாக இருக்கவே முடியாது. டெமெஸ்த்தனிஸ் சிறப்பான அரசியல் துறைகளில் சீர்திருத்தங்கள்

கொண்டு வந்திருக்கலாம். காலத்துக் கேற்றவாறு தன் நாட்டுக் குடி மக்கள் நடந்து கொள்ள வேண்டுமென்று அவன் கண்டித் திருக்கக் கூடும். ஆனால் அவன் அக்காலத்திலிருந்த புதிய பிரச்சினைகளில் சிக்கிக் கொள்ளவில்லை. அவன் புதிய அரசியல் கோட்பாடு எதையும் உருவாக்கவில்லை. அறிவுத் திறன் படைத்த ஓர் அரசியல்வாதி, ஏதென்ஸில் உற்சாகமுள்ள புதிய வாழ்க்கையை ஏற்படுத்தி, அந் நாட்டு மக்களை அரசியல் அமைப்பில் தீவிரமான மாறுதல்களை மேற் கொள்ளுமாறு செய்து, புதிய அரசியல் வாழ்க்கையை வகுத்துக் கொடுத்திருக்கலாம். ஆனால் அப்படிப்பட்ட ஓர் அரசியல் அறிஞன் அந்நாட்டில் அக்காலத்தில் எழும்பவில்லை. ஏனென்றால் ஏதென்ஸ் அப்படிப்பட்ட அரசியல் வாழ்க்கையை வாழ்ந்து முடித்து விட்டது. டெமெஸ்த்தனிஸ் காலத்திலிருந்த அத்தீனியர்கள் திருத்த முடியா தவர்களாக இருந்தார்களெனக் கூறப்படுகிறது. அவர்களை டெமெஸ்த் தனிஸினால் நிச்சயமாகத் திருத்த முடியாது. ஏனென்றால் டெமெஸ்த் தனிஸ் அவர்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாக விளங்கினான். அதாவது அவன் யாராலும் திருத்த முடியாத அத்தீனியனாக இருந்தான்.

# 17. பாரசீகத்தை வென்று கைக்கொளல்

## 1. கிரேக்க நாடுகளின்மீது அலெக்ஸாந்தரின் முதல் படை யெடுப்பு

**அலெக்ஸாந்தர் பகைவர்களால் சூழப் பட்டிருத்தல்; பிலிப் முறைகளோடு மாறுபடுதல்.**

அலெக்ஸாந்தர் அரசுகட்டிலேறிய பொழுது அவன் பகைவர்களால் சூழப்பட்டிருப்பதை யுணர்ந்தான். பிலிப் இறந்தானென்ற செய்தியைக் கேட்டு, கொரிந்தியக் கூட்டமைப்பிலுள்ள நாட்டினரும், தெரேஸ் நாட்டினரும், இல்லீரியர்களும் மகிழ்ச்சி அடைந்தார்கள். அது அவனுடைய திட்டத்தைச் சீர்குலையச் செய்வதற்கு அரிய வாய்ப்பளித்தது. அதை அவர்கள் இழந்து விட விரும்பவில்லை. ஆசியாவில் கிளியோபாட்ராவின் தந்தை அட்டாலஸ் (Attalus) அவளுடைய குழந்தையின் உரிமைக்கு ஆதரவளித்தான். அவன் தந்தை அவனுடைய வாழ்க்கையின் ஆரம்பத்தில் பலவித இடுக்கண்களால் சூழப்பட்டிருந்ததைப் போலவே, அலெக்ஸாந்தரும் பலவித இடுக்கண்களால் சூழப்பட்டிருந்தான். இக்கட்டுகளிலிருந்து விடுபடத் தந்தையும் மகனும் பின் பற்றிய முறை, இவர்களின் குண வேறுபாட்டைக் காட்டும். தந்தையின் முறை நிதானமும், உறுதியும் வாய்ந்தது. அலெக்ஸாந்தர் அவற்றைப் பின்பற்றி இருப்பானுகில், வடக்கிலுள்ள புறச் சாதியர்களைத் தன் விருப்பத்திற்கிசைய வைத்திருக்கலாம்; அட்டலாஸுடன் சமாதானம் செய்து கொண்டிருக்கலாம்; கிரேக்க நாடுகளின் சிக்கலைத் தன் நிலைமை வலுவாகும் வரை ஒத்திப் போட்டிருக்கலாம். அவன் தந்தையின் அரசைப் படிப்படியாகக் கைப்பற்றி இருப்பான். ஆனுல் முன்னெச்சரிக்கையோடு திட்டப் படியே நடப்பது, பிலிப் மகனுகிய அலெக்சாந்தருடைய அறிவாற்றலுக்கும், வீரத்துக்கும் ஒத்து வரவில்லை. தன் பகைவர்களிடம் விட்டு கொடுத்தலை மறுத்து விட்டான். இடுக்கண்களை ஒன்றன் பின் ஒன்ருகக் களைந்து அவை யாவற்றையும் வென்று விட்டான்.

அலெக்ஸாந்தர் கிரேக்க நாடுகளின் அபாயம் பெரிதென்று கண்டு முதன் முதலில் அதை விலக்க முயன்றான். பிலிப் இறந்து விட்டா னென்று ஏதென்ஸ் ஒளிவுமறைவின்றி மகிழ்ச்சி அடைந்தது. பிலிப்பைக் கொன்றவனை நினைவு கூர, ஒரு நாள் ஒதுக்கப்பட வேண்டு மென்று டெமெஸ்த்தனிஸ் ஒரு சட்டம் கொண்டு வந்தான். போரின் எக்காளம் எங்கும் கேட்டது. அரசியல் தூதுவர்கள் அட்டலாஸ் அரசவைக்கும், பாரசீக மன்னனின் அரசவைக்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள். மாசிடோனிய அடிமைத் தளையை அறுத்தெறிய கிரேக்க நாடுகள் ஆரவாரம் செய்தன. அம்பரேஸியாவிலுள்ள மாஸிடோனியப் படை விரட்டியடிக்கப்பட்டது. தீப்ஸ் தன் நகரிலுள்ள மாஸிடோனியப் படையைத் துரத்த முயன்றது.

### தெஸ்ஸாலியின் பெருமை

தென் கிரேக்க நாடுகளின் எதிர்ப்புகளைவிடத் தெஸ்ஸாலியில் எழும்பிய கலகங்கள் குறிப்பிடத் தக்கன. ஏனெனில் மாசிடோனியப் படையில் தெஸ்ஸாலி நாட்டின் குதிரைப் படை மிகவும் சிறப்பானது. மாசிடோனிய மன்னன் கொரிந்திய நேச நாடுகளின் படைத் தலைவனாகயிருப்பது அவனுக்கு நன்மையாகத் தோன்றியது. ஆகையால் அலெக்ஸாந்தர், தெஸ்ஸாலி கலகத்தின் காரணமாக முதலில் கையை விட்டுப் போவதற்கு முன்பு அதைத் தன் ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவர வேண்டும். கிரேக்கநாடு தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ள வேண்டு மென்பது அவனுடைய விருப்பமாக இருந்தது. கலகம் முற்றிக் கேடு விளைவிப்பதின் காரணமாக மக்கள் கடுமையாகத் தண்டிக்கப்படும் நிலைமை ஏற்படுவதற்கு முன்பு அங்கே அமைதியை நிலைநாட்டுவது அலெக்சாந்தரின் பொறுப்பாயிற்று. அவன் கிரீஸின் தென்பாகத்தை நோக்கிப் பிரயாணம் செய்வது, அங்குள்ளவர்களைத் தண்டிக்கவோ அல்லது குற்றவாளியென்று நியாயந் தீர்க்கவோ அன்று. அவர்களைச் சாந்தப்படுத்தவும், கொரிந்தியாவின் கூட்டமைப்பு நாடுகளும், டெல்பியின் கூட்டமைப்பும், தன்னைத் தன் தந்தையின் வாரிசாக ஏற்றுக் கொள்ளுமாறு செய்யவுமே அவன் அங்குப் புறப்பட்டான்.

### கி.மு. 336 கோடையின் பிற்பகுதி.

அலெக்சாந்தர் டெம்பே (Tempe) பள்ளத்தாக்கில் படையுடன் வந்திறங்கினான். அவன் தெஸ்ஸாலியர்கள் அவ்விடத்தை உறுதியோடு பாதுகாத்து நிற்பதைக் கண்டான். அவன் அவர்களை அங்கே தாக்கவில்லை. அவன் தன்னுடைய படையை அங்கிருந்து கடற்கரையோரமாகத் தெற்கில் வெகுதூரத்துக் கழைத்துச் சென்றான். ஒஸ்ஸா (Ossa) மலையில் படிக் கட்டுகளை வெட்டி, ஒரு பாதையைத் தயாரித்தான். அப்பாதையின் மூலமாக மலை மீதேறிப் பிறகு அங்கி

ருந்து பீனஸ் (Penens) சமவெளியில், தன் படையுடன் பகைவர்களின் பின்புறத்திலிறக்கினுன். அவன் அவர்களோடு போரிடவில்லே. ஓர் துளி இரத்தங்கூட சிந்தவில்லே. தெஸ்ஸாலி நாட்டின் சபை கூடிற்று. அலேக்சாந்தரை அப்படை அந்நாட்டின் தலேவனுக ஏற்றுக் கொண்டது. அலேக்சாந்தர் அவர்களுடைய நிலங்களேயும், உரிமை களேயும், தனிச் சலுகைகளேயும், அவன் தந்தையின் காலத்தில் உரிமை பாராட்டியது போலவே அவர்கள் உரிமை கொண்டாடலா மென அவர்களுக்கு உறுதிமொழி கொடுத்தான். மாலிஸ் Malis) டோலோப்பியா (Dolopia) நாடுகளும் அவனிடம் சரணடைந்தன. அவன் தெர்மாபைலேயிலிருந்தபோது, கிரேக்க நாடுகள் அவனே மன்னனுக ஏற்றுக் கொண்டன. அவன் அங்கிருந்து தெற்கு நோக்கிப் பயணமானுன். தெற்கில் சென்ற விடங்களில் எங்கும் எவ்வித எதிர்ப்பு மேறபடவில்லே. மின்னல் வேகத்தில் அவனுடைய படை ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்குப் பெயர்ந்து சென்றமை யால் எந்நாடும் அவனே எதிர்ப்பதற்கான முயற்சியிலீடுபட முடியா மல் போயிற்று. அத்தீனியர்கள் அவனிடம் ஓர் அரசியல் தூதுவனே யனுப்பி, தங்களுடைய செய்கைக்காக மன்னிப்புக் கோரினுர்கள். அவன் அத் தூதுவனிடம் தன் தந்தையின் கொலேக்கு அவர்கள் காரணமாயிருந்ததைக் குறித்துக் குற்றம் சாட்டவில்லே. அப்போது கொரிந்தியக் கூட்டமைப்பு நாடுகளின் பிரதிநிதிகள் ஒன்றுகூடி, அலேக்ஸாந்தரை அவன் தந்தைக்குப் பதிலாகப் படைத் தலேவனுகத் தேர்ந்தெடுத்தார்கள்.

கிரேக்க நாடுகளின் பிரதிநிதிகள் அலேக்ஸாந்தரை அவர்களுடைய தேர்ந்தெடுக்கப்பட்ட தலேவனுகக் கொண்டனர். ஆனுல், அவன் மாசிடோனிய மன்னன் என்ற முறையில் பாரசீகத்தின்மீது படை யெடுக்க விரும்பவில்லே. அவன், ஆச்சில்லெஸின் வழியில் வந்த கிரேக்கத் தலேவன் என்ற முறையிலேயே பாரசீகத்தின்மேல் படை யெடுக்க விரும்பினுன். கொரிந்தியாவில் கூடிய கிரேக்க நாடுகளின் பிரதிநிதிகள் அலேக்ஸாந்தரைக் கிரீஸின் படைத் தலேவனுகத் தேர்ந் தெடுத்தது வரலாற்று சிறப்பு வாய்ந்ததே தவிர, அரசியல் சிறப்பு வாய்ந்ததன்று. கிரேக்கர் அவனுக்களித்த படையுதவி மிகவும் சொற்பம். மேலும் அப்படை யெடுப்பு அவர்களிடம் தேசப்பற்றைத் தூண்டவில்லே. குறை மனத்தோடும், வேண்டா வெறுப்போடும் கொரிந்தியாவில் அலேக்ஸாந்தர் வரவேற்கப்பட்ட போதிலும், அவனே அங்குக் கிரேக்கத் தலேவனுகத் தேர்ந்தெடுத்த செயல், கிரேக்க நாடு ஒரு பேரரசாகவும், அதன் கலாச்சாரம் வெளி நாடுகளில் பரவவும் வகை செய்யும் முன்னேடியாகவும் இருந்தது. இதனேச் செய்து முடிக்க விதி அலேக்ஸாந்தரைத் தேர்ந்தெடுத்தது. கிரேக்க நாட்டு அத் தலேவனேச் சூழ்ந்து கொண்டு, உற்றுக் கவனித்தவர்களிலும், காதுக்கினிய வார்த்தைகளால் முகமன் கூறியவர்களிலும் சிலர் அவன்

பல நாடுகளையும் வென்று வாகை சூடுவான் என்பதை முன்கூட்டியே அறிந்திருக்கலாம். ஆனால் அவர்களில் ஒருவன்கூட அவனுடைய படையெடுப்பினால் உலகம் மாறுதலடையும் என்பதை நினைத்தும் பார்க்கவில்லை. ஆனால் சிலர் மட்டும், உலகம் மாறுதலடைவதற்காக காத்துக் கொண்டிருக்கிறதென்பதை அறிந்தார்கள். அலெக்ஸாந்தர் கொரிந்திய நகரின் வாயிலுக்கு வெளியே, மெய்ப் பொருளறிஞனாகிய டயோஜெனிஸ் (Diogenes) என்பவனைச் சந்தித்ததைப் பற்றிய சிறந்த கதையொன்றுண்டு. டயோஜெனஸ் ஒரு பீப்பாவைத் தன் வீடாக அமைத்துக்கொண்டு அதில் வசித்துவந்தான். அலெக்ஸாந்தர் அவனைக் கண்டு அவனுக்கு என்ன வேண்டுமென்று கேட்டான். 'சூரியனை மறைக்காதே' என்று அவன் சுருக்கமாகப் பதிலளித்தான். அப்பொழுது அவன் தன்னுடன் வந்தவர்களிடம், 'நான் மட்டும் அலெக்ஸாந்தராக இருந்திராவிடில் டயோஜெனிஸைப்போல் வாழ விரும்புவேன்' என்று கூறினான். இந்தச் சம்பவம் நடைபெருதிருந்திருக்கலாம். ஆனால் இச்சிறு கதை, தனியாள் உரிமைத் தத்துவத்தை, சுதந்திரத்தின் விளிம்பு வரையில் சுமந்து சென்ற டயோஜெனிஸையும், உலகத்தை வென்று தன் ஆட்சியை நிலைநாட்ட எண்ணிய அலெக்ஸாந்தரையும் நேருக்குநேர் சந்திக்கச் செய்துவிட்டது. டயோஜெனிஸ் போதித்த தனியாள் உரிமைத் தத்துவம் உலகக் குடியுரிமைத் தத்துவத்தின் உள்ளுயிராக இருந்தது. இந்த உலகக் குடிவுரிமைத் தத்துவத்தையே அலெக்ஸாந்தரின் பேரரசு மேம்படச் செய்ய வேண்டியிருந்தது.

அலெக்ஸாந்தருக்கு அவன் சொந்த வீட்டில் ஏற்பட்டிருந்த சில அபாயங்களும் அதே சமயத்தில் விலகி விட்டன. அவனுடைய சிறிய தாயார், அவள் தந்தை, அவள் குழந்தை மூவரும் கொலையுண்டார்கள். அலெக்ஸாந்தருடைய கட்டளையின்படி அட்டாலஸ் கொலையுண்டான். ஆனால் கிளியோப்பாட்ராவின் மரணத்திற்கும் அவளுடைய குழந்தையின் மரணத்திற்கும் அலெக்ஸாந்தர் பொறுப்பாளி இல்லை. அவர்களுடைய மரணத்திற்கு ஒலிம்பியாவே பொறுப்பாளி ஆவாள். கிளியோப்பாட்ராவைப் பழிவாங்க ஆர்வங்கொண்டுள்ள ஒலிம்பியா, தாயின் மடியிலேயே அக் குழந்தையைக் கொலை செய்யுமாறு செய்து, கிளியோப்பாட்ராவை அவள் இடுப்பிலணிந்திருந்த கயிற்றினாலேயே தூக்கிட்டுக் கொள்ளுமாறும் செய்தாள்.

## 2. இல்லீரியாவிலும், தெரேஸிலும் அலெக்ஸாந்தரின் போர்கள்

**திரிபள்ளிக்கு எதிராக அலெக்ஸாந்தர் படையெடுத்து வருதல், கி.மு. 335; ஷிப்க்கா கணவாய்; டானியூப் நதிக்கரை, மே மாதம்.**

தெரேஸில் கலகம் ஏற்படுவதற்கான அறிகுறிகள் தோன்றின. இல்லீரியாவிலும் கலகந் தோன்றும் போலிருந்தது. தெரேஸையும் இல்லீரியாவையும் பணிய வைக்காமல் ஆசியாவின் மீதுப் படையெடுத்துச்செல்ல அலெக்ஸாந்தருக்கு மனமில்லை. தெரேஸ் அவன் ஆசியாவிற்குப் புறப்பட்ட பிறகு கலகம் செய்யத் தயாராக இருந்தது. அவ்வாறே இல்லீரியாவும் மாசிடோனியாவின்மீது படையெடுக்கத் தயாராக இருந்தது. அலெக்ஸாந்தர் தெரேஸியர்களுக்கு, சிறப்பாக திரிபள்ளி (Triballi) நாட்டு மக்களுக்கு ஓர் பாடம் கற்பித்தாக வேண்டியதாயிற்று. திரிபள்ளி நாட்டினர் பிலிப் மன்னனை ஏற்கெனவே எதிர்த்துப் போரிட்டவர்கள். அதற்காக அவர்கள் இன்னும் தண்டிக்கப்படவில்லை. இப்போது அவர்கள் தங்களுடைய குற்றத்தை உணரும்படி செய்யவேண்டும். திரிப்பள்ளி நாடு ஹேமஸ் மலைக்குப் பின்னாலிருந்தது. அலெக்ஸாந்தர் ரோடோப்பே மலையைக் கடந்து. ஹேமஸ் மலையின் மேற்கிலுள்ள கணவாய்களில் ஒன்றின் அடிவாரத்தில் வந்து நின்றான். அங்கே செங்குத்தான மலைப் பள்ளத்தாக்கில் அந்நாட்டினர் தங்கள் நாட்டைக் காத்து நிற்பதைக் கண்டான். கணவாயின் உச்சியில் அவர்கள் தங்கள் போர்க் கருவிகளை ஒன்றாகத் திரட்டி வைத்திருந்தார்கள். மாசிடோனியர் கணவாயைக் கடக்க முயன்றபோது, தேர்களை அவர்கள் மீது உருட்டிவிட்டு அவர்கள் படையில் குழப்பத்தை யுண்டு பண்ணவும், குழப்பத்தினால் படை வரிசையில் ஒழுங்கின்மை ஏற்படுவதைப் பயன் படுத்திக் கொண்டு தாக்குதலை நடத்தவும் திட்டமிட்டிருந்தார்கள். மலையைக் கடக்க வேறு வழியில்லை. ஆனால் அதைக் கடந்தே தீரவேண்டும். தெம்பே (Tempe) என்ற இடத்தைப் பிடிப்பதற்கு என்ன முறையைக் கையாண்டானோ அம்முறையை இங்கேயும் பின்பற்ற வேண்டியதாயிற்று. அவன் ஒரு பொருளை அடைய விரும்பினால் அதை எப்பாடுபட்டாலும் அடைந்தே தீருவது அவன் இயல்பாகும். கணவாயைக் கடப்பதற்குத் தன்னுடைய காலாட் படைக்குக் கட்டளை யிட்டான். அவர்கள் கடந்து செல்லும் போது, தங்களை நோக்கி விழும் தேர் உருண்டு ஓடும்படி, இடைவெளி யிட்டு முன்னேறுமாறு கட்டளையிட்டான். இவ்விதம் மலையைக் கடப்பது இயலா தென்பதை உணர்ந்ததும், பாதுகாப்புப் படையினரை மண்டியிடச் செய்து அவர்களுடைய கேடயங்களை ஒன்றோடொன்றை நெருக்கமாகப் பொருத்தி ஒரு சரிவான கூரைபோல் செய்தான். இதனால் தேர்கள் அவர்கள் தலையில் விழாது, அவ்வாயுதக் கூரை மீது விழுந்து சரிந்து செல்லக் கூடும். எனவே போர் வீரர்கள் மலையடிவாரத்தை நோக்கி முன்னேறினர்: இந்தத் திட்டம் வெற்றிபெற்றது. திரிபள்ளி நாட்டின் போர் வீரர்கள் தேர்களை மாசிடோனியப் போர் வீரர்களை நோக்கி உருட்டி விட்டார்கள். அவை கேடயங்களோடு மோதி ஒரு பேரிரைச்சலை எழுப்பிக்கொண்டு பக்கங்களில் விழுந்து அழிந்தன. ஆனால்

மாசிடோனியர்களுக்கு எவ்விதமான உயிர்ச்சேதமும் ஏற்படவில்லை. அந்நாட்டினர் அவர்களிடமிருந்த தேர்கள் எல்லாவற்றையும் உருட்டிவிட்டனர். ஆனால் அவர்களுடைய முயற்சி வீணாயிற்று. இப்போது அலெக்ஸாந்தரும் அவனுடைய போர் வீரர்களும் கணவாயைக் கடந்து பகைவர்களுடைய நாட்டினுள் வந்துவிட்டரர்கள். அலெக்ஸாந்தர் நெருங்கிவிட்டதை யறிந்த அந் நாட்டினர், தங்கள் மனைவிமக்களை டானியூப் நதியிலுள்ள பேவுசே (Peuce) என்ற தீவுற்கு அனுப்பி விட்டார்கள். அவன் தங்களுடைய நாட்டில் முன்னேறி வரும் வரையில் காத்திருந்தார்கள். அவன் நாட்டிற்குள் வந்தவுடனே பின்னுக்குச் சென்று கணவாயை அடைத்துவிட முயன்றார்கள். அலெக்ஸாந்தர் அவர்களுடைய நோக்கத்தை அறிந்திருந்தான். தன்னுடைய படையைப் பின்னால் கொண்டு வந்தான். அப்போது அவர்கள் போரிடும் படியான கட்டாயம் ஏற்பட்டது. பேரிழப்புடன் அவர்களைச் சிதறடித்தான். அலெக்ஸாந்தர் டான்யூப் நதிக்கரையை நோக்கிப் பிரயாணம் செய்தான். அந் நதியின் வடகரையிலுள்ளவர்களுக்கு அச்சத்தை உண்டாக்கவே அவன் அவர்களை நோக்கி முன்னேறினான். டாரியஸ் தெரெஸ்மீது படையெடுத்தபோது கையாண்ட முறைகளை, அலெக்ஸாந்தரும் பின்பற்றினான். வைஸான்ஸி நாடு இவனுடைய நேச உறவு நாடு. அங்கிருந்து தனக்குதவியாகச் சில கப்பல்களை அனுப்பச் சொன்னான். கப்பல்களின் உதவியைக்கொண்டு ஆற்றின் எதிராகப் பல மைல்கள் தூரம் பிரயாணம் செய்யவும், அதனிரு கரைகளிலுமுள்ள நாடுகளின் மக்களை அச்சுறுத்தி வைக்கவும், நோக்கங்கொண்டான். யேவுஸ் தீவில் ஒரு காலாட் படை இருந்தது. அதற்கு சித்தியர்களின் ஆதரவிருந்தது. சித்தியன் கடற்கரையை வெல்லுவதற்கு முன் பேஸ் தீவைத் தாக்குவது முறையன்று என்றெண்ணினான். அவனிடம் போதுமான படையுமில்லை. பகைவனுக்குத் தெரியாமல் தன்னுடைய படை எதிர்க் கரைக்குச் செல்லவேண்டும். எனவே அவன் நள்ளிரவில் இவ்வேலையை மேற்கொள்ள வேண்டும். மேலும் அவனிடம் போதுமான மரக்கலங்களில்லை. எனவே அவன் அருகிலுள்ள ஊர்களிலுள்ளவர்களிடமிருந்த மீன் பிடிக்கும் படகுகளை யெல்லாம் சேகரித்தான், கூடாரங்களின் தோல்களில் வைக்கோலை நிரப்பி அவற்றை நன்றாக இறுகக்கட்டி அவற்றின் குறுக்கே தொங்கவிட்டான். அவன் படை அக் கரைக்குப்போய்ச் சேர்ந்துவிட்டது. வயல்களில் பயிர்கள் ஓங்கி வளர்ந்திருந்தன. அவற்றின் மறைவில் அலெக்ஸாந்தர் தன் படையை அழைத்துச் சென்றான். பொழுதுவிடிந்தது. புறச்சாதியார் மாசிடோனியப் படை தங்களை நோக்கி வருவதை யறிந்தார்கள். அதனால் அதிர்ச்சியுற்ற மக்கள் தங்களுடையபாதுகாப்பான பட்டினங்களை நோக்கி ஓடினார்கள்.

அவர்களுடைய பட்டினங்களின் அரண்கள் அவ்வளவு பலமுள்ளவை களல்ல. அலெக்ஸாந்தர் தன் குதிரைப் படையோடு அவர்களைப் பின் தொடர்ந்து சென்றான். அவர்கள் தங்களுக்குரிய பொருள்களை யெல்லாம் தங்கள் குதிரைகளில் ஏற்றிக்கொண்டு வடக்கிலுள்ள வனாந்திரத்தை நோக்கி ஓடிவிட்டார்கள். அலெக்ஸாந்தர் தன் பேரரசை டானியூப் நதியின் வடக்கில் ஏற்படுத்த விரும்பாததால், அவர்களைத் தொடர்ந்து பிடிக்கும் வேலையை விட்டுவிட்டான். அலெக்ஸாந்தர் வடக்கில் தான் அடைந்த வெற்றிக்காக டான்யூப் நதிக்கரையில் சீயஸ் ஸோட்டர், ஹிராக்கிளிஸ், டான்யூப் நதியின் தெய்வம் முதலியவற்றிற்குப் பலி செலுத்தி வழிபட்டான்.

**செல்ட் நாடுகளின் அரசியல் தூதுக்குழு; காலத்தியாவில் செல்டு களின் குடியேற்றம்.**

அலெக்ஸாந்தருடைய இப்படையெடுப்பைக் கவனித்து வந்த டான்யூப் நதியிலிருந்த தீவிலுள்ள திரிபள்ளி மக்களும், மற்றும் ஆற்றின் தென்கரையிலுள்ள பல இனத்தவர்களும் அவனிடம் வலிய வந்து சரணடைந்தார்கள். பருத்த அவயவங்களும் சுயநம்பிக்கை யுடையவர்களுமான செல்டுகள் என்ற இனத்தினர் டான்யூப் நதியின் மேற்குப் பாகத்தில் யாரும் அறியாத நாட்டில் வாழ்ந்து வந்தார்கள். ஒருவேளை அவர்கள் டால்மேஷியா மலையில் வாழ்ந்தவர்களாக இருக்கலாம். அவர்கள் அலெக்ஸாந்தரிடம் ஓர் அரசியல் தூதுக் குழுவை அனுப்பினார்கள். அவர்கள் அலெக்ஸாந்தரைப் பற்றிக் கேள்விப்பட்டு, அவன் நட்பை நாடினர். மிகவும் தூரமான நாட்டில் வாழுகிறவர்களாகிய அவர்கள் அலெக்ஸாந்தருடைய நட்பைத் தேடியது வியப்பளிக்கிறது. அலெக்சாந்தர் அவர்களுடைய அரசியல் தூதுவரைக் கண்டு அவர்களுக்கேற்பட்ட அச்சம் என்ன வென்று வினவினான். 'வானமிடிந்து விழுவதைத் தவிர வேறொன்றுக்கும் நாங்கள் அஞ்சவில்லை' என்றனர். 'தற்புகழ்ச்சிக்காரர்கள்' என்று அலெக்ஸாந்தர் பிறகு அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கிறான். இரண்டு தலை முறைகளுக்குப்பின் வலுவுள்ள உறுப்புக்களும் உறுதி யான சொற்களையுமுடைய இதே இனத்தவர்கள், கிரேக்க நாட்டிலும் ஆசியாவிலும் கூட்டம் கூட்டமாக வந்து, அலெக்ஸாந்தர் வென்ற விடங்களில் சில பாகங்களில் குடியேறினார்கள்.

**இல்லீரிய அபாயம்; பெலியோனுக்கு அலெக்ஸாந்தர் படை எடுத்தல்; மாசிடோனியப் படை சிக்கலிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ளுதல்; மாசிடோனிய வெற்றி.**

அலெக்ஸாந்தர் தெரேஸில் வெற்றியடைந்து வீடு திரும்பினான் வழியில், மாசிடோனியாமீது இல்லீரியர்களின் படையெடுப்பைக் குறித்துக் கேள்விப்பட்டான். அலெக்ஸாந்தர் தன் நாட்டைப் படை

யெடுப்பிலிருந்து பாதுகாப்பதில் ஒரு விநாடிகூட வீணாக்கக் கூடா தென்பதையறிந்தான். பிலிப் மன்னன் மாசிடோனிய எல்லையை இல்லீரியர்களுடைய தாக்குதலிலிருந்து பாதுகாக்க, ஹாலியாக்மான் (Haliacmon) அப்ஸஸ் (Apsus) என்ற ஆறுகளின் கரைகளில் வலுவுள்ள பல கோட்டைகளைக் கட்டியிருந்தான். அங்குள்ள கோட்டைகளில் மிகவும் பல முள்ளது. பெலியோன் கோட்டை யாகும். அக்கோட்டை மலைவாயிலுள்ள ஒரு திறவுகோல் போன்றது. இப்பொழுது அக்கோட்டையை இல்லீரியன் நாட்டுத் தலைவனாகிய கிளிட்டஸ் (Clitus) என்பவன் கைப்பற்றிவிட்டான். டாவுலான் டைன் (Taulantines) இனத்தவர்கள் கிளிட்டஸுடன் நட்புகொண்டிருந் தார்கள். அவர்கள் கிளிட்டஸுக்கு படையுதவி அனுப்புவதற்குமுன் அலெக்ஸாந்தர் பெலியோன் கோட்டையைப் பகைவன் கையிலிருந்து மீட்டுவிட விரும்பினான். அவனுடைய பயணம் ஆட்டாரி பட்ஸ் என்ற இனத்தவர்களால் தடை ஏற்படக் கூடிய நிலையிலிருந்தது. ஆட்டாரியட்ஸ் கிளிட்டஸுடன் நட்பு கொண்டிருந்தார்கள். கிளிட்டஸ் அலெக்சாந்தரை வழி மறித்துத் தாக்கும்படி அவர்களிடம் சொல்லியிருந்தான். இந்த அபாயத்தை அக்ரியானேஸ் இனத்தவர் களின் அரசன் விலக்கினான். இவன் அலெக்சாந்தரின் நண்பன் அவன் ஆட்டாரியட்ஸினர் நாட்டின்மீது படையெடுத்துச் சென்றான். அவர்களுடைய கவனம் அலெக்ஸாந்தர்மீது செல்லாவண்ணம் அவர்களைப் போரிலீடுபடுமாறு செய்தான். அலெக்ஸாந்தர் எரிகோனஸ் (Erigonus) பள்ளத்தாக்கு வரையில் படையெடுத்து வந்து, பெலியோன் கோட்டைக்கருகில் தங்கினான். மலையுச்சி களில் இல்லீரியர்கள்இருந்தார்கள். போர் தொடுப்பதற்கு முன் பலியிட்டுத் தெய்வ வழிபாடு செய்வது அவர்களுடைய வழக்கம். கிளிட்டஸ் மூன்று சிறுவர்களையும் மூன்று கன்னியர்களையும் மூன்று கருமையான செம்மறியாட்டுக் கடாக்களையும் பலியிட்டான். ஆனால் போர் ஆரம்பமாவதற்கு முன், இல்லீரியர்கள் தங்கள் வீரத்தை யிழந் தார்கள். அவர்கள் தங்கள் வழிபாட்டையும் முடிக்காமல், தங்களுக்குக் கிடைத்த வாய்ப்பையும் விட்டுவிட்டு, தங்களுடைய அரண்களுக்குப் போய்விட்டார்கள். அலெக்ஸாந்தர் கோட்டையை அடுத்த நாள் முற்றுகையிட்டுச் சூழ்ந்து கொள்ளத் திட்டமிட்டிருந் தான். அப்பொழுது ட்ராவுலான்டைனேஸ் இனத்தைச் சேர்ந்த எண்ணிக்கையில் மிகையான போர் வீரர்கள் அங்கு கிளிட்டஸுக்கு உதவிப் புரிய வந்தார்கள். அலெக்சாந்தருடைய போர்வீரர்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவானவர்கள். அலெக்சாந்தர் பாது காப்பரணற்ற ஓரிடத்தில் ஓர் பெரிய படையை எதிர்த்து நிற்பது முறையன்று என்பதை யுணர்ந்தான். அவனிடமுள்ள உணவுப் பொருள்களும் குறைந்துவிட்டன. நீண்ட நாள் முற்றுகைக்கு உணவுப் பொருட்கள் தேவையாயிருந்தன. ஆகவே அவன் பின்

வாங்கவேண்டிய அவசியமேற்பட்டது. ஆனால் அவனுக்குப் பின்புறத்தில் பெரிலியோன் கோட்டை பகைவர்களிடமிருந்தது. டாவுலான்டைன் இனத்தவர் மலைச்சரிவுகளிலும், உச்சிகளிலும் இருந்தனர். ஆகையால் ஒழுக்கமான வழிகளில் அவன் பின் வாங்கிப் போவதிலும் பலவித அபாயங்களிருந்தன. பயிற்சி பெற்ற மாசிடோனியப் போர்வீரர்கள் இவ்வளவு இக்கட்டுகளையும் சமாளித்துக்கொண்டு வேகமாகப் பின்வாங்கித் திரும்பிவிட்டார்கள். பங்கவாட்டத்திலிருந்த பகைவர்கள் விரட்டியடிக்கப்பட்டார்கள். அவனுடைய படை உயிர்ச்சேதம் எதுவுமின்றிப் பெரிதும் முயன்று ஆற்றைக் கடந்து விட்டது. ஆற்றின் அக்கரையில் அலெக்ஸாந்தரிருந்தான். இப்போது அவனுக்கு வேண்டிய உணவுப் பொருட்கள், படையுதவி முதலியன தடையின்றி வந்து சேருவதற்கான போக்குவரத்து சாதன வசதிகளேற்பட்டன. அவன் பகைவனை எதிர்த்துத் தாக்குவதற்கான சந்தர்ப்பத்தை நோக்கிக் காத்துக் கொண்டிருந்தான். அந்தச் சந்தர்ப்பமும் அவனுக்கு விரைவில் கிடைத்தது. அலெக்ஸாந்தர் பின்வாங்கிப் போவதைப் பகைவர் பார்த்துவிட்டனர். அவன் பயந்துகொண்டு ஓடுவதாக அவர்கள் நினைத்தார்கள். ஆகையால் அவர்கள் விழிப்புடன் இருக்கவேண்டியதை மறந்து, தங்களுடைய தற்காப்புக்கானவற்றை அசட்டை செய்தார்கள். அவர்கள் காவல் நிலையங்களை அமைக்கவில்லை; பாதுகாப்பரண்கள் ஏற்படுத்தவில்லை; அவர்கள் திறந்த வெளியில் கோட்டையின் வாயிலண்டையில் கூடியிருந்தார்கள். அன்றிரவு பகைவர்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருந்தார்கள், அலெக்ஸாந்தர் அப்போது ஒரு சிறிய படையுடன் அவர்களை நோக்கிப் புறப்பட்டான். மற்றவர்கள் பின்னால் வந்துகொண்டிருந்தார்கள். அலெக்ஸாந்தர் தூங்கிக் கொண்டிருந்த பகைவர்களைத் தாக்கினான். பலர் கொல்லப்பட்டார்கள். பலர் அலங்கோலமாக ஓடினார்கள். மாசிடோனியர்கள் அவர்களை டாவுலான்டையன் மலைவரையில் துரத்திச் சென்றார்கள். கிளிட்டஸ் விழித்துக்கொண்டான். கோட்டையினுள் புகுந்தான். கோட்டைக்குத் தீ வைத்துவிட்டு ஓடுகிறவர்களோடு சேர்ந்து கொண்டான்.

அலெக்ஸாந்தர் தெரேஸில் செய்த தீரச் செயலைவிட இல்லீரியர்களை எதிர்த்துச் செய்த தீரச் செயல் சிறப்பானது. அது அவனுடைய திறமையை எடுத்துக் காட்டுகிறது. அலெக்ஸாந்தர் இந்த மாதங்களில் செய்த சலியாத உழைப்பின் காரணமாகச் சிறிது காலம் ஓய்வெடுத்துக்கொள்ள வேண்டியதாயிற்று. அவன் ஓர் இளைஞன். அவனுக்கு ஓய்வு தேவையில்லை. அவன் தெரேஸை விட்டுப் புறப்படுவதற்குமுன் இல்லீரியர்களால் விளைந்த அபாயம் அவன் காதுக்கெட்டிற்று. அவன் பெலியோன் கோட்டையில் வெற்றியடைந்தபோது தீப்ஸ் நகர மக்களெழுப்பிய கலகத்தைப்

பற்றி கேள்விப்பட்டான். இப்போது அவன் கிரேக்க நாட்டை நோக்கி விரைந்து செல்லவேண்டியதாயிற்று. கலகம் முற்றுவதற்கு முன் அதை அடக்கி விடுவது மிகவும் அவசியமாக அவனுக்குத் தோன்றியது.

## 3. இரண்டாம் முறையாக அலெக்ஸாந்தர் கிரேக்க நாட்டிற்கு வருதல்

**மாசிடோனியாவிற்கு விரோதமாகக் கிரேக்க நகரங்கள் பாரசீகத்தோடு ஒப்பந்தம் செய்தல்.**

கடந்த ஆண்டில் மாசிடோனியாவிற்கெதிராக கிரேக்க நகரங்களில் எழும்பிய கலகம் நின்றபாடில்லை. இப்போது பாரசீகப் பேரரசனுடைய பொன்னும் அவன் கொடுத்த ஆதரவும் அந்நகரங்களிலேற்பட்ட கலகங்கள் உச்ச நிலையை அடையும்படி செய்தன. ஐந்தாண்டுகளுக்கு முன் மாசிடோனியா கிரேக்கப்பட்டினங்களின் மீது போர் தொடுத்தது. அப்போது ஏதென்ஸ் சூசாவிற்கு அரசியல் தூதுவர்களை அனுப்பி ஆர்ட்டாக்ஸெர்ஸஸ் மன்னனிடம் படை திரட்டப் பண உதவி கேட்டுக் கெஞ்சியது. ஆர்ட்டாக்ஸெர்ஸஸ் பேரரசன்; பிலிப் மன்னனை பகைத்துக்கொள்ள விரும்பவில்லை. அகந்தையும், அவமரியாதையுமுள்ள ஓர் கடிதத்தின் மூலம் ஏதென்ஸுக்குத் தன் கருத்தைத் தெரிவித்து விட்டான். பெரின்தஸ் (Perinthus) நகரம் இக்கட்டிலிருந்தபோது பிரிஜியன் சாட்ட்ராப் தன்னுடைய சொந்தப் பொறுப்பில் அதற்குப் பயனுள்ள உதவியளித்தான். நாளடைவில் பாரசீகப் பேரரசு, மாசிடோனியாவை ஆபத்தை விளைவிக்கக்கூடிய ஒரு நாடாகக் கருதிற்று. புதிய பேரரசனாகிய டாரியஸ், அலெக்ஸாந்தர் ஆசியாவிற்குள் பிரவேசிப்பதைத் தடுக்கலாம். அவனை ஐரோப்பாவிலேயே நிறுத்தி விடவும் முயன்றான். ஏனெனில் பார்மெனியோ, மாசிடோனியப் படையுடன் அவனருகிலிருப்பது அவனுக்கு அச்சத்தை விளைவித்தது. ஆகையால் கிரேக்க நாடுகளுக்குப் பணவுதவி செய்து, அவற்றைப் போரிடத் தூண்டினான். கிரீஸிலிருந்த அநேக நகரங்கள் மகிழ்ச்சியோடு பேரரசன் அனுப்பிய உதவியைப் பெற்றுக்கொண்டன. அவற்றில் தீப்ஸ் நாடு முதன்மையாக விளங்கிற்று. பாரசீகப் பேரரசு 300 தாலந்துகள் ஏதென்ஸுக்குக் கொடுக்க முன் வந்தது. ஏதென்ஸ் அதைப் பெற்றுக்கொள்ள மறுத்துவிட்டது. ஆனால் டெமெஸ்த்தனிஸ் தனிப்பட்ட முறையில் 300 தாலந்துகளையும் வாங்கிக்கொண்டு, அதைப் பேரரசனின் நலனுக்காகச் செலவு செய்ய எண்ணங் கொண்டான். கிரேக்க நாடுகளில் எதுவும் பாரசீகத்தோடு தனிப்பட்ட ஒப்பந்தம் எதையும் செய்து கொள்ளவில்லை. அவர்கள் இப்போது செய்துகொண்ட ஒப்பந்தம்

ஐம்பதாண்டுகளுக்கு முன் மேற்கொண்ட அவனுடைய சமாதான ஒப்பந்தத்தின் அடிப்படையிலேற்பட்டது. அவ்வொப்பந்தப்படியே கிரேக்க நாடுகள், ஆசியாவிலுள்ள கிரேக்க நாடுகளின்மேல் பேரரசனுக்குரிய உரிமைகளை ஏற்றுக்கொண்டன. அந்நாடுகள் பலவித உணர்ச்சிகளோடு மாசிடோனியாவிலிருந்துவரும் மீட்பனுக்காகக் காத்திருந்தன.

### அலெக்ஸாந்தர் இறந்துபோனுனென்னும் செய்தி; தீபர்கள் காட்மேயை முற்றுகையிடல்

கிரீஸில் நாட்டுப் பற்றுள்ளவர்கள் பிலிப் மன்னன் ஒழிந்து போக வேண்டுமென்று அவர்களுடைய தெய்வங்களை நோக்கி வேண்டிக்கொண்டார்கள். அவன் அழிந்துவிட்டான். இப்போது அவனுடைய மகனுகிய அலெக்ஸாந்தருடைய மரணத்திற்காக வேண்டிக்கொண்டார்கள். அலெக்ஸாந்தர் இறந்துவிட்டால் மாசிடோனியாவும் அழிந்துவிடும். அதே சமயத்தில் அவர்களுடைய வேண்டுதல் நிறைவேறின என்ற பொய் வதந்தி எங்கும் பரவிற்று. தெரேஸில், அலெக்ஸாந்தர் கொல்லப்பட்டானென்ற பொய் வதந்தியைக் கிளப்பி விட்டார்கள். அவன் இருந்ததைப் பார்த்ததாகச் சொல்லக்கூடிய ஒருவனை டெமெஸ்த்தனிஸ் எல்லோர் முன்னிலையிலும் நிறுத்தினுன். அப்போது ஏதென்ஸிலிருந்த தீப்ஸ் நாட்டின் அகதிகள் தங்களுடைய சொந்த நாட்டிற்குப் போய்ச் சேர்ந்தார்கள். மாசிடோனியா, அடிமைத் தனத்திலிருந்து விடுபடும் நாள் வந்துவிட்டதென்று பறைசாற்றினுர்கள். அப்போது மாசிடோனியப் படைத்தலைவர்கள் இருவர் காட்மேயிக்கு வெளியில் நின்று கொண்டிருந்தார்கள். தீப்ஸ் பட்டினத்தார் அவர்களைத் தாக்கிக் கொன்றனர். தீப்ஸ் நகர வாசிகள் பாதுகாப்பரணை முற்றுகையிட்டார்கள். முற்றுகையைப் பலப்படுத்த அரணின் தென்புறத்தில் இரு மதிற் சுவர்களை யெழுப்பினுர்கள். ஏனெனில் நகரத்துக்குப் பாதுகாப்பாக அங்கே அதற்கு முன் சுவர்கள் எதுவுமில்லை. டெமெஸ்த்தனிஸ், லைகர்கஸ் மற்றும் பலரால் தூண்டிவிடப்பட்ட இக்கலகத்திற்கு தீப்ஸ் முதன்மையாக இருந்தது. எல்லிஸிலும் எட்டோலியாவிலும் கலகங்கள் எழும்பின. ஆர்க்காடியர்கள் பூசந்தியை நோக்கிப் புறப்பட்டுவிட்டார்கள். அத்தீனியர்கள் தீப்ஸ் நாட்டினருக்குப் போர்க் கருவிகளைக் கொடுத்தார்களே தவிர, போர் வீரர்களை அனுப்பவில்லை. தேசபக்தர்களுடைய நம்பிக்கைகள் உச்சமடைந்தன. காட்மே கோட்டையின் வீழ்ச்சி தவிர்க்க முடியாததாயிற்று.

### ஆன்செஸ்டஸில் அலெக்ஸாந்தர்

சிறிது தூரத்திலுள்ள ஆன்செஸ்ட்டஸில் மாசிடோனியப் படை இறங்கி இருக்கின்ற செய்தி தீப்ஸ் நாடு முழுவதும்

பரவிற்று. மக்கள் அதிர்ச்சியுற்ருர்கள். அவர்கள் படைக்குத் தலைமை தாங்கியிருப்பவன் அலெக்ஸாந்தரல்லனென்றும், ஆன்டி பேட்டர் என்பவன் படைத்தலைவனாக வந்துள்ளானென்றும் தீப்ஸ் நகரத் தலைவர்கள் கூறினர். சில தூதுவர்கள் திரும்பி வந்து, வந்துள்ளவன் அலெக்ஸாந்தரைத் தவிர வேறல்லன் என்று உறுதி கூறினர்கள். ஆனால் நகரத்தின் தலைவர்கள் அதை மறுத்தார்கள். அலெக்ஸாந்தர் மன்னன் இறந்துவிட்டான்; அங்கு வந்துள்ளவன் லின்செஸ்டிஸ் (Lyncestis) நாட்டு அலெக்ஸாந்தரென்று மறுத்தனர்.

**தீப்ஸை வெல்லுதல், செப்டம்பர் மாத ஆரம்பம், கி. மு. 335. அகழ்வழி, தீப்ஸ் நகரின் அழிவு.**

அங்கு வந்துள்ளவன் அலெக்சாந்தர் மன்னனைத் தவிர வேறு யாருமில்லை அவன் பெரியோனிலிருந்து ஆன்செஸ்ட்டஸுக்கு வந்து சேரச் சுமார் இரண்டு வாரங்களாயிற்று. அடுத்த நாள் அவன் தீப்ஸ் நகரத்தின் சுவர்களுக்கெதிரில் வந்து நின்ருன். நகரத்தின் வடக்கில், ஐயோலாஸ் (Iolaus) ஆலயத்திற்குப் பக்கத்தில் வந்து தங்கினன். நகர வாசிகள் சரணடைவதற்குப் போதுமான நேரம் கொடுத்தான். அவர்கள் அவனிடம் பணிந்துவர மனமின்றியிருந்தார்கள். தீப்ஸ் நகரத்திலுள்ள பளுவற்ற ஆயுதங்களைத் தாங்கிய போர் வீரர்களில் சிலர் நகர வாயிலை விட்டு வெளியேறி ஓரிடத்திலிருந்த மாசிடோனியக் கூடாரத்தைத் தாக்கினர்கள். அடுத்த நாள் அலெக்சாந்தர் தன் படையைத் தீப்ஸ் நகரின் தென் புறத்திற்கு மாற்றிவிட்டான். அந்த நகரம் சரணடையுமென்ற நம்பிக்கையினல், அலெக்சாந்தர் அதைத் தாக்காமல் காட்மேயிக்குச் சமீபத்தில் தங்கியிருந்தான். அவனுடைய படைத் தலைவர்களில் பெர்டிகாஸ் என்பவன் செய்கை தீபஸ் நகரின் கதியை நிர்ணயித்து விட்டது. அவன் காட்மே பக்கத்திலிருந்த மாசிடோனியப் படையைக் காவல் புரிந்து வந்தான். தீபர்கள் மண்ணால் எழுப்பிய சுவரின் அருகில் அவனிருந்தான். அலெக்ஸாந்தரின் உத்தரவில்லாமல் காவல் புரிந்த தீபர்களைத் தாக்கினன். அவன் செயலுக்கு மற்றொரு படைத்தலைவனும் உதவியாகவிருந்தான். அதைக் கண்ட அலெக்ஸாந்தர் அவர்களிருவருக்கும் உதவியாக பளுவற்ற ஆயுதங்கள் தாங்கிய போர் வீரர்களையும் சில வில் வீரர்களையும் அனுப்பினன். இதற்கிடையில் தீப்ஸ் நகர வாசிகள் மதிற் சுவர்களின்மீது போர் வீரர்களை நிறுத்தி, மாசிடோனியர்கள் சுவரின் மூலமாக நகருக்குள் வருவதைத் தடுக்க முயன்றனர். ஆனல் மாசிடோனியர்கள் அவர்களை அங்கிருந்து விரட்டியடித்தார்கள் விரட்டப்பட்டவர்கள் சுவர்களுக்கருகிலிருந்த அகழியில் குதித்து விட்டார்கள். அவ்வகழி காட்மேயிக்குக் கிழக்குப் பக்கமாகச் சென்ற அரண்களுக்கு வெளியே யுள்ள ஹிராக்கிளிஸ் ஆலயத்தைக் கடந்துசெல்லுகிறது. அவர்கள்

ஹிராக்கிளிஸ் ஆலயம் வரையில் ஓடினார்கள். மாசிடோனிய வீரர்கள் அவர்களைத் துரத்திச் சென்றார்கள். தீபர்கள் ஹிராக்கிளிஸ் ஆலயத்துக்கு வந்ததும் ஓடுவதை நிறுத்திவிட்டு, அவர்கள் ஒன்று




சேர்ந்து துரத்திக் கொண்டு வந்த வீரர்களைத் திரும்பித் தாக்கி, அவர்களைப் பின்வாங்கி ஓடும்படி செய்தார்கள். அத்துடன் அவர்கள் நின்று விடாமல் தொடர்ந்து அவர்களை விரட்டிச் சென்றார்கள்.

ஆனல் அணிவகுப்பின்றி அலங்கோலமாக ஓடிக்கொண்டு துரத்தி ஞர்கள். இவற்றையெல்லாம் சிறிது நேரம் பார்த்துக் கொண்டிருந்த அலெக்ஸாந்தர், தன்னுடைய பாலான்ஸ் என்ற படையை அவ் வலங்கோலக் கூட்டத்தினர்மீது ஏவினன். தீப்ஸ் போர் வீரர்கள் எலக்ட்ரான் வாயில் வழியே நகருக்குள் ஓடினர். ஓடியவர்களுக்கு வாயில் கதவை மூடித் தாளிட நேரமில்லை. இமைப்பொழுதில் சில மாசிடோனிய போர் வீரர்கள் தப்பியோடுகின்றவர்களையும் இழுத்துக் கொண்டு நகருக்குள் புகுந்து விட்டார்கள். சுவர்களின்மீது நின்று, மாசிடோனியர்களை அம்புகளால் தாக்கி வீழ்த்துவதற்கு அங்கு ஒரு வனுமில்லை. ஏனெனில் ஆண்களெல்லோரும் அரணை முற்றுகை யிடுவதில் முனைந்திருந்தார்கள். நகருக்குள் புகுந்தவிட்ட மாசிடோ னியர்கள் காட்மேயை நோக்கிச் சென்று, அங்கிருந்த கிரேக்க காவற் படையுடன் சேர்ந்து கொண்டார்கள். காட்மே கோட்டைக்குச் சமீபத்திலுள்ள ஆம்பியோன் என்றவிடத்தில் தீப்ஸ் போர் வீரர்கள் அணிவகுத்து நின்ருர்கள். காவற்படை வீரர்களும் அவர்களுக்கு உதவியாக வந்தவர்களும் ஒன்றுசேர்ந்து தீப்ஸ் நகர வாசிகளைத் தாக்கினுர்கள். மற்ற மாசிடோனியப் போர் வீரர்கள் சுவர்களையும், கோட்டை கொத்தளங்களையும் கடந்து நகரினுள்ளிருந்த சந்தை வெளிக்கு வந்து விட்டார்கள். தீப்ஸ் நகரின் சுற்றிலுமுள்ள வாயில் களின் கதவுகள் திறந்து விடப்பட்டன. மாசிடோனியப் படை நகரை ஆக்கிரமித்துக் கொண்டது. அலெக்ஸாந்தர் நகருக்குள் அங்குமிங்கு மாக ஓடிப் போர் வீரர்களுக்கு ஊக்கமூட்டினன். தீப்ஸ் நகரின் குதிரைப் படையை முறியடித்து விட்டார்கள். குதிரை வீரர்கள் நகரைக் கடந்து, சமவெளியை நோக்கி ஓடிவிட்டார்கள். தங்களால் முடிந்த வரையில் தரைப்படை வீரர்கள் தங்களுயிரைப் பாதுகாத்துக் கொண்டார்கள். அப்பொழுது இரக்கமற்ற கொலைகள் ஆரம்ப மாயிற்று. ஈவிரக்கமின்றி செய்யப்படும் கொலைகளில் மாசிடோ னியர்கள் ஈடுபடவில்லை. அக்கொடிய கொலைகளுக்குப் பொறுப்பான வர்கள் தீப்ஸ் நகரின் பழைய பகையாளிகளான போஸியர்களும், பிளாட்டியர்களும், மற்ற போயிஷியர்களுமே யாவார்கள். பல தலைமுறைகளாகத் தீப்ஸ் நகர வாசிகள் தங்களுக்கிழைத்த அவமானங்கள், தீமைகள் எல்லாவற்றிற்குமாகச் சேர்த்து ஏழு பரதுகாப்புள்ள சுவர்களையுடைய தீப்ஸ் நகரைப் பழிவாங்கி விட்டார்கள். அலெக்ஸாந்தர் கொலை செய்வதை நிறுத்துமாறு கட்டளையிடுமுன் 6000 பேர்கள் கொல்லப்பட்டனர். அடுத்த நாள் அலெக்ஸாந்தர், கலகம் விளைவித்த நகரத்திற்கு அளிக்க வேண்டிய தண்டனையைப்பற்றிக் கலந்தாலோசிக்க கொரிந்தியக் கூட்டமைப்பு நாடுகளின் பிரதிநிதிகளை வரவழைத்தான். அவர்கள் தீப்ஸ் நகரம் ஒருசமயம் ஏதென்ஸுக்கு என்ன தண்டனை கொடுக்க நினைத்ததோ, அதே தண்டனையை இப்போது தீப்ஸுக்கு கொடுக்கவேண்டுமென்று

தீர்ப்புக் கூறினர்கள். அதாவது 'தீப்ஸ் பட்டினத்தை இடித்து மண்ணோடு மண்ணாக்கி விடவேண்டும்; அதன் நிலங்களை கொரிந்தியக் கூட்டமைப்பு நாடுகள் தங்களுக்குள் பகிர்ந்துகொள்ள வேண்டும்; உயிரோடிருக்கின்ற தீப்ஸ் நகர வாசிகளான ஆண்களையும் பெண்களையும், குழந்தைகளையும் அடிமைகளாக விற்றுவிட வேண்டும்; ஆனல் கோவில்களின் குருக்கள், அவற்றில் பணிபுரியும் பணிப் பெண்கள், மாசிடோனிய குடும்பத்துடன் தொடர்புடையவர்கள், ஆகியவர்களை ஒன்றும் செய்யாமல் விட்டுவிட வேண்டும்; காட்மே அரணில் ஒரு காவற்படையை நிறுத்திவைக்க வேண்டும்' என்பதே அவர்கள் முடிவாகும். அந்நகருக் களித்த கொடிய தண்டனையின் வாயிலாக அதன்மேல் இதர கிரேக்க நாடுகள் கொண்டுள்ள பகைமையையும், வெறுப்பையும் அறிய முடிகிறது. தீர்ப்பின் வாசகங்கள் நிறைவேற்றப்பட்டன. அழிந்துபோன அந்நகரில் ஒரே ஒரு வீடு மட்டும் அழிக்கப்படாமல் நிலைத்திருந்தது. அது கவிஞன் பின்டாரின் விடாகும். அதை அழிக்கக் கூடாதென்று அலெக்ஸாந்தர் கண்டிப்பான உத்தரவிட்டிருந்தான்.

### தீப்ஸ் நகரத்தின் விழ்ச்சிக்காக ஏதென்ஸ் அலெக்ஸாந்தரை வாழ்த்தல்

போயிஷிய நகரங்கள் தங்களுடைய அடிமைத்தனத்திலிருந்து விடுபட்டுச் சுதந்திரமடைந்தன. பிளாட்டியாவும், ஆர்க்கோமெனசும் (Orchomenus) தம் அழிவிலிருந்து உயிர் பெற்றெழுந்தன. கிரீஸில், தீப்ஸ் நகர வீழ்ச்சி இனிக் கலகங்கள் எழுவதைத் தடுத்துவிட்டது. ஆர்க்காடியர்கள் தங்களுடைய படையைப் பூசந்தியிலிருந்து திரும்ப வரவழைத்துக் கொண்டார்கள், எலிஸும் எட்டோலியாவும் பகை மனப்பான்மைகளை விட்டொழித்து நன்னிலையடைந்தன. ஏதென்ஸில் மிஸ்ட்டரிஸ் (Mysteries) என்ற பண்டிகை நடந்து கொண்டிருந்தபோது, தீப்ஸ் அழிக்கப்பட்ட செய்தியை அந்நாட்டினர் கேள்விப்பட்டார்கள். அப்போது பண்டிகையின் புனிதத் தன்மைக்குத் தடை ஏற்பட்டது. ஏதென்ஸ் நகர வாசிகள் தங்களுடைய சபையைக் கூட்டினர்கள். அலெக்ஸாந்தரிடம் ஒரு தூதுக் குழுவையனுப்ப வேண்டுமென்று டெமேடஸ் கொண்டு வந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அலெக்ஸாந்தர் வடக்கில் வெற்றியடைந்து திரும்பியதற்காக அவனை வரவேற்கவும், அவன் தீப்ஸ் நகரை அழித்ததற்காக வாழ்த்துரை கூறவும், தூதுக்குழுவினரை அவனிடம் அனுப்பினர்கள். அதே சபை சில நாட்களுக்கு முன், தீப்ஸ் நகருக்கு படையுதவி அனுப்ப வேண்டுமென்று டெமெஸ்தனிஸ் கொண்டுவந்த தீர்மானத்தை ஏற்றுக்கொண்டது. தீப்ஸ் நகரின் அழிவுக்குக் காரணமாகவும், மாசிடோனியாவிற்கு எதிராகப் படையை வளர்க்க உதவியாகவும் இருந்தவர்களுமான டெமெஸ்த்

தனிஸ், லைகர்ஸுடன், மற்ற உடந்தையாளர்களையும் தன்னிடம் ஒப்படைத்து விடும்படி ஏதென்ஸிடம் அலெக்ஸாந்தர் கேட்டான். அவன் கோரிக்கை நியாயமானதே. அலெக்ஸாந்தரின் கோரிக்கை ஏதென்ஸ் சபையில் அறிவிக்கப்பட்டது. அப்பொழுது டெமெஸ்த் தனிஸ் பொருள் செறிந்த சுருக்கமான ஒரு சொற்பொழிவின் மூலம் நிலைமையை விளக்கிக் காட்டி, 'ஏதென்ஸின் காவல் நாய்களை மாசிடோனிய ஓநாய்களிடம் அனுப்பக் கூடாதென்று' கூறினன். சபையிலுள்ள போசியோன் (Phocion) என்பவன் 'அலெக்ஸாந் தரை எப்படியாகிலும் சாந்தப்படுத்தியாக வேண்டுமென்றும், அவனல் குறிப்பிடப்பட்ட மக்கள் தங்களுடைய தன்னலமற்ற தியாகத்தின் மூலமாகத் தங்கள் நாட்டுப்பற்றைக் காண்பிக்க வேண்டும்' என்றும் கேட்டுக்கொண்டான். அப்பொழுது டெமெஸ்த் தனிஸ், அலெக்ஸாந்தரிடம் மற்ரெரு தூதுக்குழுவை அனுப்பி, அவனல் கோரப்பட்டவர்களுக்கு அத்தீனிய சபை நியாயந் தீர்க்க உரிமை அளிக்கும்படி அவனிடம் கேட்க வேண்டுமென்று கூறினன். அக்குழுவுடன் தானும் செல்லச் சம்மதித்தான். அலெக்ஸாந்தர் ஏதென்ஸைப் பொறுத்தமட்டில் அதற்குத் தனிச் சலுகை யளித்து வந்தான். தன்னுடைய கோரிக்கையை ரத்து செய்தான். ஆனல் தெரேஸில் கெட்டபெயர் வாங்கிய சாரிடேமஸ் ஒருவனை மட்டும் நாடு கடத்தி விடுமாறு கேட்டுக்கொண்டான்.

தீப்ஸ் நகர வீழ்ச்சிக்குப் பின் அவனுடைய ஐரோப்பியப் போர் முடிந்து விட்டது. அதற்குப் பின் அவனுடைய வாழ்க்கை முழுவதும் ஆசியாவில் கழிந்தது. அவன் தன் ஐரோப்பியப் போர்களை ஓராண்டிற்குள் முடித்துவிட்டான். அவனுடைய ஆசிய நாடுகளின் போர்களுடன் அவற்றை ஒப்பிடும்போது அவை மிகச் சாதாரணமானவையாகத் தோன்றலாம். எனினும், எந்தவொரு தளபதியும் சரித்திரப் புகழ் பெறுமளவிற்கு அவனுடைய ஐரோப்பியப் போர்கள் சிறப்புமிக்கு விளங்கின. இரு முறை அவன் வடக்கி லிருந்து தெற்கு நோக்கிவந்தான். முதல்முறை அவன் கிரேக்க நாடு களுடன் சமரசம் செய்துகொள்ளவும், இரண்டாம் முறை தீப்ஸ் நாட்டை அழிக்கவும், வந்தான். அவனுடைய அவ்விரு படை யெடுப்புகளும், டானியூப் நதிப் பள்ளத்தாக்குப் படையெடுப்பும். அவனுடைய இல்லிரிய யுத்தமும், அவனது தனிப்பட்ட திறமைக்கும், சுய கருத்துக்களுக்கும், மன உறுதிக்கும், மின்னல் வேகத் தாக்குதலுக்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. இவற்றோடு இவனிடமிருந்த மற்ற அரிய பண்புகளும், உலகத்தின் கிழக்குப் பாகத்தில் யாருமறியாத நாடுகளில் அவன் சென்றபோது அவனை இன்னும் அதிகமாகப் பெருமைப்படுத்திக் காட்டின.

# 4. அலெக்ஸாந்தரின் பாரசீகப் படை யெடுப்புக்கான ஆயத்தங்கள் : பாரசீகத்தின் நிலைமை

அலெக்ஸாந்தரின் படை யெடுப்புத் திட்டங்கள்; கடற்படை இல்லாக் குறை.

அலெக்ஸாந்தர் அக் குளிர் காலத்தைப் படை யெடுப்பிற்கு வேண்டியவற்றைத் தயாரிப்பதிலும், தான் நாட்டில் இல்லாதபோது அரசாங்கத்தைச் செம்மையான முறையில் நடைபெறச் செய்வதற்கான ஒழுங்கு முறைத் திட்டங்களைத் தீட்டுவதிலும் கழித்தான். இளவேனில் காலத்தில் ஆசியாவை வெல்லப் புறப்பட்டான். ஆனால் படையெடுப்பிற்கான அவனுடைய திட்டங்களைப்பற்றியும், ஒழுங்கு முறைகளைப்பற்றியும் அறிந்துகொள்ளப் போதுமான ஆதாரங்களில்லை. எனினும் சிறப்பான திட்டங்களோடும், ஆயத்தங்களோடும், அவன் புறப்பட்டிருந்திருக்க வேண்டுமென எண்ணலாம். அவன் வழியில் கிடைப்பவற்றைச் சுருட்டிச் செல்லும் வீரர்களைப்போல் இருந்திராமல் ஓர் ஒப்பற்ற படைத் தலைவன் போல் சென்றிருக்கக் கூடும். படையெடுப்பிற்காக அலெக்ஸாந்தர் வகுத்த ஆரம்பத் திட்டம் அவனுடைய இரண்டாவது பெரிய திட்டத்தோடு இணைந்துவிட்டது. அவனுக்கு மத்திய ஆசியாவின் புவியியலைப்பற்றி எதுவும் தெரியாது. பாரசீகப் பேரரசை வென்றுவிடவும், அதன் பேரரசனைப் பதவியை இழக்கச் செய்து, இராஜ்யத்தைத் தன் வசப்படுத்திக் கொள்ள வேண்டுமென்பதும் அவனுடைய முதன்மையான நோக்கமாகும். அத்துடன் பாரசீகப் பேரரசு, ஸெர்ஸஸ் தலைமையில் மாசிடோனியாவிற்கும், ஹெல்லாஸுக்கும் இழைத்த தீமைகளுக்காக அதைப் பழிவாங்குவதும் அவனுடைய நோக்கமாயிருந்தது. இந்தத் திட்டத்தை வெற்றிகரமாக முடிப்பதற்கு அவன் தெரேஸைப் பணியச் செய்துவிட வேண்டும். அதையும் அவன் முன்னதாகவே செய்துவிட்டான். அவனுடைய படையெடுப்பில் மூன்று முக்கிய கட்டங்களிருந்தன. முதல் கட்டத்தில் சிறிய ஆசியாவை வென்றுவிடவேண்டும். இரண்டாம் கட்டத்தில் சிரியாவும் எகிப்தும் தன் கைக்கு வரவேண்டும். இவ்விரு கட்டங்களின் வெற்றி அவன் பாபிலோன் மீதும், சூசாவின்மீதும் படையெடுத்துப் போவதற்கு வழி வகுத்துவிடும். அவை செழுமையான நாடுகளைக் கொண்டுவருவதோடு, மேற்கொண்டு பல நாடுகளின்மீது படையெடுத்துச் செல்ல ஆதாரமாயிருக்கும். அவன் படையில் கடற்படை யில்லாதிருப்பது ஒரு குறையாக இருந்தது. பாரசீகர்களிடம் 400 போர்க்கப்பல்கள் இருந்தன. அவனுக்குக் கடற்படை ஒன்றை ஏற்படுத்திக்கொடுக்கக்

கொரிந்தியாவின் கூட்டமைப்பு நாடுகள் முன்வந்தன. ஏதென்ஸ் 200 கப்பல்கள் தருவதாக வாக்களித்தது. அலெக்ஸாந்தர் ஏதென்ஸை, மற்றக் கிரேக்க நாடுகளும் கொடுத்த உதவியைப் பெற்றுக் கொண்டான். நல்லெண்ணத்துடன் உதவியளிக்கப் படுவதை அவன் விரும்பினான். கப்பல்களுக்காகவும், பணத்திற் காகவும், அவன் கிரேக்க நாடுகளைக் கட்டாயப்படுத்தியதில்லை. கொரிந்தியக் கூட்டமைப்பு நாடுகள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை யுள்ள படையை அவனுக்குக் கொடுப்பதாக வாக்களித்திருந்தது. அலெக்ஸாந்தர் அவர்கள் தனக்குக் கொடுத்த வாக்கின்படியே நடக்க வேண்டுமென்று அவர்களை வற்புறுத்தவில்லை.

**மாசிடோனியா அரசாங்க முன்னேற்பாடு**

அலெக்ஸாந்தர் தன் தேசியப்படையின் ஒரு பகுதியைத் தான் இல்லாத காலத்தில் ஏற்படும் படையெடுப்பு, கலகம் முதலிய வற்றைச் சமாளிக்க மாசிடோனியாவில் நிறுத்திவைத்தான். அரசாங்கத்தின் பொறுப்பை அவன் தந்தையின் அமைச்சனான ஆன்டிபேட்டரிடம் ஒப்படைத்தான். அவன் புறப்படுவதற்கு விடைபெற்றபோது திரும்பிவராதவன் காட்டக்கூடிய மன நிலையோடு காணப்பட்டதாகக் கூறப்படுகிறது. அவன் தனக்குச் சொந்தமான நிலங்கள், காடுகள், அவற்றினால் கிடைக்கும் வருமானம் முதலியவற்றைத் தன் நண்பர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தான். பெரிடிக்காஸ், அலெக்ஸாந்தரின் பங்கு எது என்று அவனைக் கேட்டபொழுது 'நம்பிக்கை', என்று அவன் பதிலுரைத்தான். அப்போது பெர்டிக்காஸ் தனக்காக அலெக்ஸாந்தர் ஒதுக்கிய பங்கையும் வேண்டாமென்று மறுத்துவிட்டான். 'உன்னுடன் சேர்ந்து போருக்குப் புறப்பட்ட நாங்கள், உன் நம்பிக்கையில் மட்டும் பங்கு பெறவேண்டும்' என்று கூறி முடித்தான். இந்தச் சிறுகதை அலெக்ஸாந்தர் தன்னுடைய நண்பர் களுக்கும், அரசாங்க அலுவலர்களுக்கும், தீரச்செயலின் தொடக் கத்தில் கொடுத்த உற்சாகத்தை விளக்குகிறது.

**பாரசீகத்தின் நிலைமை ; ஒச்சஸ் பேரரசனாதல்; அவன் எகிப்தை வெல்லுதல் ; ஒச்சஸ் மன்னன் கொலை. டாரியஸ் அரசு கட்டில் ஏறுதல்.**

பாரசீகப் பேரரசு வலுவற்றும், நன்முறையில் ஐக்கியப்படாமலும் இருந்தது. இக்காலத்தில் அதன் பேரரசன் மிகவும் திறமையற்று விளங்கினான் ஸெனப்பனும் அவனுடைய கூட்டாளிகளான 10.000 போர் வீரர்களும் அதன் அவல நிலையை உலகோர்க்கு எடுத்துக்காட்டி, இப்போது இரண்டு தலைமுறைகளாகிவிட்டன. அந்நாள் முதல் அப் பேரரசன் மேற்குப்பாகம், அடிக்கடி ஏற்பட்ட

கலகங்களின் காரணமாக மிகவும் பலவீனமடைந்துவிட்டது. ஆர்ட்டாஸெர்ஸஸ் ஒச்சஸ் என்பவன் பேரரசனானான். அவன் தன் முன்னோர்களைவிடத் திறமையுள்ளவனாக இருந்தான். அவன் சிறிய ஆசியாவில் தன்னுடைய ஆதிக்கத்தை மீண்டும் நிலைநாட்டினான். அவன் போயினிஸியாவிலும் சைப்பரஸிலும் நடந்த கலகங்களை அடக்கினான். பாரசீகப் பேரரசர்களால் மறுபடியும் கைப்பற்ற முடியாத எகிப்தை அவன் வென்றான். அவன் எகிப்து நாட்டு மன்னனாகிய நெக்ட்டானிபோஸ் (Nektanebos) என்பவனைத் தோற்கடித்து, பெலுசியத்திலிருந்து மெம்பிஸுக்கும், பிறகு மெம்பிஸிலிருந்து (Memphis) எத்தியோப்பாவிற்கும் விரட்டியடித்தான். பேரரசன் அன்பினால் நைல் நதிப் பள்ளத்தாக்கை ஆளக் கருதவில்லை. அவன் நெருப்பை வழிபடுகிறவன். எகிப்தியர்களுடைய உருவ வழிபாட்டை அவன் வெறுத்தான். எகிப்தியர்கள் காளைமாட்டை வழிபட்டார்கள். அவன் அப்பிஸ் (Apis) என்ற காளை மாட்டு உருவத்தைத் தண்ணீருக்குள் வீசி எறிந்தான். அக்காளை மாட்டு உருவத்திற்குப் பதிலாக, கழுதை உருவத்தை ஆலயத்தில் வைத்து அதை எகிப்தியர்களுடைய புனித தெய்வமாக்கினான். அவன் எகிப்தியரின் சமயத்திற்கு மூடத்தனமாக இழைத்த பேரவமதிப்பு பாரசீகப் பேரரசை அவர்கள் வெறுக்கும்படி செய்தது. அரண்மனையிலுள்ள சதிகாரகள் பேரரசன் ஒச்சஸைக் கொன்றனர். இரண்டு அல்லது மூன்றாண்டுகள் வரையில் அரண்மனை ஒரே குழப்பத்திலிருந்தது. அரியணை காலியாகக் கிடந்தது. இறுதியில் ஆச்சேமேனிட் (Achaemenid) குடும்பத்தைச் சேர்ந்த டாரியஸ் கோடோமானஸ் (Darius Codomannus) என்பவன் அரசுகட்டில் ஏறினான். பெயரளவில் பேரரசர்களாக வாழ்ந்தவர்களில் அவனே கடைசியானவன். அவன் சாந்தமும் நற்பண்புகளுமுள்ளவன் ; எல்லோராலும் நேசிக்கப்பட்டவன். ஆனால் அவன் அறிவும் ஆற்றலுமற்ற ஒரு கோழை. அவன் வாழ்ந்த காலத்தில் அவன் கோழையாக இருக்கவேண்டுமென்பது இயற்கை விதித்த சட்டம்போலும்.

### வரும் போராட்டத்தினால் பாரசீகத்துக்கு வரும் நன்மைகள் ; பாரசீகத்தின் பயங்கர இறுதிக்காலம் :

டாரியஸ் திறமையுள்ளவனாகவும், போர் முறையில் அனுபவம் வாய்ந்தவனாகவும், போர்க்களத்தில் படைத்தலைவர்களை நடத்தத் தெரிந்தவனாகவும் இருந்திருப்பானாகில் அவனுக்கு மிகுந்த நன்மை ஏற்பட்டிருக்கு மென்பதை யாராலும் மறுத்துக் கூறமுடியாது. முதலாவதாக அவனிடம் எண்ணிக்கையில் மிகுதியான போர் வீரர்கள் இருந்தார்கள். இவன் இவர்களை முப்பது பேர் அடங்கிய சிறு குழுவாகப் பிரித்து, இவ் ஒவ்வொரு பிரிவிற்கும் அலெக்ஸாந்தரின் படைவீரன் ஒருவன், பானம் கொடுப்பவனாக அமைக்கப்

பட்டால், இத்தகைய பிரிவு பலவற்றிற்குப் பானம் கொடுப்பவன் இல்லாது போய்விடும். அத்துணை ஆட்பலம் இவனிடமிருந்தது. இரண்டாவதாக, பெல்லாவிலிருந்த அலெக்ஸாந்தருடைய கருவூலம் அவன் அதைவிட்டுப் புறப்பட்டபோது காலியாக்கப்பட்டது. ஆனால் சூசாவிலுள்ள டாரியஸின் கருவூலம் பொன்னால் நிரம்பியிருந்தது. பெர்ஸி போலிஸிலுள்ள கருவூலத்தில் அளவிட முடியாத பொற்கட்டிகள் குவிக்கப்பட்டிருந்தன. மூன்றாவதாக, டாரியஸிடம் பலமுள்ள ஒரு கடற்படையும் இருந்தது. அவன் அவற்றைக் கொண்டு சிறிய ஆசியா, சிரியா, எகிப்து போன்ற நாடுகளின் மீது ஆதிக்கம் செலுத்தக்கூடும். மேலும் கடல் பலமில்லாத ஓர் ஆக்ரமிப்பாளன் ஆசியாவுக்குள் புகாவண்ணம் தடுத்துவிடவும் வசதியிருந்தது. பாரசீகப் பேரரசில் ஐக்கியமோ, கூட்டுப் பொறுப்போ இல்லை என்பது உண்மை. எனினும் அம் மாநில மக்களிடம் நாட்டுபற்றுக் குறையவில்லை. எகிப்து ஒன்றைத் தவிர மற்ற மாநிலங்களில் ஏற்பட்ட கலகங்கள் நாட்டுப்பற்றுக் காரணமாக எழுந்த கலகங்களல்ல. மாநிலங்களில் கலகங்கள் ஏற்படுவதற்குக் காரணமாயிருந்தவர்கள் விசுவாசமற்ற நிராசையுள்ள சாட்டராப்புக்களே யாவார்கள். பாரசீக மன்னனைக் குடிமக்கள் நேசிக்காதபோதிலும், அவர்கள் அவனைப் பகைக்கவில்லை. கிழக்கில் நீண்டதூரம் வரையில் கிர்க்கானியா (Hyrcania) அல்லது ஆக்ஸஸ் நதிக்கரைகளிலுள்ள யுத்தப் பிரியர்களாகிய புறச்சாதியர்கள், அவன்பின் செல்ல எப்போதும் தயாராக இருந்தார்கள். அவனுக்காகப் போரிடவும் விரும்பினர். மாநிலங்களிலுள்ள மக்களைக் கொண்டே பேரரசைத் தற்காத்துக்கொள்ளும் வாய்ப்பிருந்தது. இவ்வளவு வாய்ப்புகளையும் பயன்படுத்தக்கூடிய திடசித்தமும், மன உறுதியையும் படைத்த பேரரசன் அங்கில்லை. தலைவனில்லாத கூட்டம் பயனற்றது. பணம் அறிவுபடைத்தவனை உருவாக்க முடியாது. போர்க் கலையில் பாரசீகம் ஒரு பிற்போக்கான நாடு. ஐம்பது ஆண்டு காலமாக அக் கலை கிரீஸில் வளர்ந்துகொண்டு வந்தது. பாரசீகம் கிரேக்க நாடுகளுக்குச் சமமாகப் படைமுறைப் பயிற்சியிலும், யுத்தக் கலையிலும் முன்னேறவில்லை. பாரசீகம் பணங்கொடுத்து கிரேக்க வீரர்களைத் தன் படையில் வைத்திருந்தது. பாரசீகப்படையில் கிரேக்கக் கூலிப்படையே சிறந்து விளங்கிற்று. இவர்களிடம் காணப்பட்ட யுத்த தந்திரத்தையும், திறமையையும் கிழக்குநாட்டுப் போர் வீரர்கள் கற்றுக்கொள்ளவில்லை. பாரசீகப் படைத் தலைவர்கள் கிரேக்கர்களுடைய யுத்த தந்திரங்களை யறிந்து அவற்றைச் சமாளிக்கக்கூடிய புதிய முறைகளை கண்டுபிடிக்கவில்லை. அவர்கள் சொந்த அறிவைக்கொண்டு படைமுறைத் திறனுள்ள திட்டங்கள் வகுக்கத் தெரியாதவர்கள். அவர்கள் பகைவனுடைய படைப் பயிற்சிக்காகக் காத்திருப்பவர்கள். அவர்கள் போர்

வீரர்களின் எண்ணிக்கையில் கருத்தைச் செலுத்தினரேயன்றி, அவர்களுடைய திறமையைப்பற்றிக் கவலைப்படவில்லை. அவர்கள் தனிப்பட்ட போர் வீரனின் வீரத்தில் நம்பிக்கையுள்ளவர்கள். கூட்டாகச் சேர்ந்து வீரத்தோடு போர்புரியும் வழியறியாதவர்கள். கடைசியாக, அவர்கள் தேர்ப்படையின் மீதும் நம்பிக்கை வைத்திருந்தார்கள். கிரேக்கப் போர் வீரர்களைப் படையில் கூலிக்குச் சேர்த்துக் கொள்ளுகிற ஒரு பாடத்தைமட்டும் அவர்கள் குனுஸ்ஸா போர்க்களத்தில் படித்திருந்தார்கள்.

**அலெக்ஸாந்தரின் படை ; பளுவுள்ள ஆயுதந் தாங்கிய தரைப் படை ; பளுவற்ற ஆயுதந் தாங்கிய மாசிடோனியப்படை ; குதிரைப்படை.**

அலெக்ஸாந்தர் பாரசீகப் பேரரசை வெல்ல 30,000 காலாட்படையையும் 5000 குதிரைப்படையையும் அழைத்துச் சென்றான். அவனுடைய படையில் குதிரைப்படை சிறந்து விளங்கிற்று. அவன் தந்தை பிலிப் மன்னன், குதிரைப் படைக்கு முக்கியத்துவம் அளித்தது அக்காலத்தில் ஒரு நூதன முறையாக இருந்தது. பளுவுள்ள ஆயுதந் தாங்கிய தரைப்படை (Phalanx) பளுவற்ற ஆயுதந் தாங்கிய தரைப்படை (Hypaspists), பளுவுள்ள ஆயுதந் தாங்கிய குதிரைப்படையென பிலிப் மன்னன் தன் படையைப் பலவகையாகப் பிரித்திருந்தான். பளுவற்ற ஆயுதந்தாங்கிய படையைச் சுறுசுறுப்புடன் போர்க்களத்தின் பல பகுதிகளுக்கும் எடுத்துச்செல்ல வசதியாயிருந்தது. அலெக்ஸாந்தர் ஆறு பிரிவு பாலான்ஸ் படையை ஆசியாவிற்கு அழைத்துச் சென்றான். இந்தப் படை செருக்களத்தில் அவனுக்கு வெற்றியைக் கொண்டுவந்தது. அவன் படையைப் போர்க்களத்தில் அணிவகுத்து நிறுத்தும்போது, பாலான்ஸ் படையை மத்திய வியூகத்தின் மத்தியில் நிறுத்துவது வழக்கமாக இருந்தது. இவற்றிற்கு ஆதரவாக, கிரேக்கக் கூலிப் படை, கிரேக்க நேசநாடுகளுடைய ஹாப்லைட்ஸ் என்ற பளுவுள்ள ஆயுதந்தாங்கிய போர் வீரர்களை நிறுத்திவைப்பதும் அவனுடைய வழக்கமாகும். கிரேக்க மெர்ஸினரி (Mercenary) என்ற கூலிப்படை மினண்டரின் (Menander) தலைமையிலிருந்தது. கிரேக்க நேச நாடுகளின் படை ஆண்டிகோனஸின் (Antigonus) தலைமையிலிருந்தது. பளுவற்ற ஆயுதந் தாங்கிய படைக்குப் (Hypaspists) பார்மேனியோவின் மகன், நிக்கானேர் (Nicanor) படைத் தலைவனாயிருந்தான். இப்படை போர்க்களத்தில் வலது வியூகத்தில் பணிபுரிவது வழக்கமாக இருந்தது. இந்தப்படையின் முன்னணியில் 'எஜிமா' என்ற அரசனுடைய பாதுகாப்புப்படை நிறுத்திவைக்கப்படுவது வழக்கம். பளுவுள்ள ஆயுதந்தாங்கிய குதிரைப்படை எட்டுப் பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பார்மேனி

யோவின் மற்றொரு மகன் இவற்றிற்குப் படைத் தலைவனாயிருந்தான். இவற்றில் ஒன்று, அரசனுடைய குதிரைப்படையாகும். இதற்கு கிளிட்டஸ் படைத் தலைவனாயிருந்தான். எஜிமா (Agema) என்ற இந்தக் குதிரைப்படை அரசனுடைய பாதுகாப்புப்படை என்ற தரைப்படைக்கு ஒத்திருந்தது. மாசிடோனியக் குதிரைப்படை போர்க் களத்தில் எப்போதும் வலது வியூகத்தில் நிறுத்தப்படுவது வழக்கம். இடது வியூகத்தில் தெஸ்ஸாலிய குதிரைப்படையும், மற்றக் கிரேக்க நாடுகளின் குதிரைப்படையும், கள்ளாஸ் (Callas) தலைமையில் நிறுத்தப்படுவது முறையாக இருந்தது. வலது வியூகமும் இடது வியூகமும் பளுவற்ற ஆயுதந்தாங்கிய தரைப்படைகளாலும், குதிரைப் படைகளாலும் பலப்படுத்தப்பட்டன. தெரேஸிலும், பேயோனி யாவிலும், இல்லிரியன் தீபகற்பத்தின் இதர பாகங்களிலுமிருந்த போர் வீரர்கள் அவரவர்களுடைய நாட்டின் வழக்கப்படி அணிவகுத்து நிறுத்தப்படுவது முறையாக இருந்தது.

## 5. சிறிய ஆசியாவை வெல்லல்

**பார்மேனியோவின் வெற்றி, கி. மு. 335.**

அலெக்ஸாந்தர் ஐரோப்பாவிலிருந்தபோது பார்மேனியோவின் தலைமையில் அவனுடைய படைகள் ஆசியாவில் போர்ப் பணியில் ஈடுபட்டன. எயோலிஸ் (Aeolis) என்ற இடத்திலும், மைஸியா (Mysia) என்ற இடத்திலும், படை தங்கியிருப்பதற்காக அவர்கள் போராட்டத்தை நடத்திக்கொண்டிருந்தார்கள். பார்மேனியோ மேற் கொண்டு முன்னேற பொரோபோன்டிஸில் ஒரு பாடிவீடமைக்கவும் முயன்று கொண்டிருந்தான். ரோட்ஸ் (Rhodes) நாட்டானாகிய மெம்னோன் (Memnon) என்பவன் அக்காலத்தில்ஓர் சிறந்த படைத் தலைவனாக விளங்கினான். அவன் பேரரசன் கூலிப் படையில் ஒரு தலைவனாக இருந்தான். பேரரசன், மாசிடோனியப் படையெடுப்பை வழியிலேயே தடுத்து நிறுத்த மெம்னோனுக்கு அதிகார மளித்திருந் தான். சிஸிகஸ் (Cyzicus) பார்மேனியோவின் ஆதிக்கத்திலிருந்தது. பாரசீகர் அதை மீண்டும் கைப்பற்ற வேண்டியதாயிற்று. மெம்னோன் அதைப் பிடிக்க எடுத்துக்கொண்ட முயற்சி தோல்வியுற்றதெனினும் அவன் லாம்ப்ஸாகஸை (Lampsacus) வென்ற பிறகு, மாசிடோனி யர்களை பிட்டானே (Pitane) முற்றுகையைக் கைவிடும்படி செய்தான். அவன் மாசிடோனியர்களை ஹெல்லஸ்பான்டு கடற்கரைக்குத் திரும்பிப்போகுமாறு செய்தான். தனக்குக் கிடைத்த இந்த அரிய வாய்ப்பைச் சாதகமாக்கிக்கொண்டு, அவர்களை மேலும் நெருக்கி விரட்டிவிட அவனால் முடியவில்லை. அல்லது முடியும்படி அவன் செய்யவில்லை. அலெக்ஸாந்தர் தன்னுடைய மாசிடோனியப் படை யுடன் வந்து தங்கவேண்டிய கடற்கரை பாதுகாப்பானதாக இருந்தது.

**அவன் ஹெல்லஸ் பாண்டைக் கடத்தல், கி. மு. 334; டிராயில் (Troy) அலெக்ஸாந்தர்.**

அலெக்ஸாந்தரின் கடற்படை அவனுடைய தரைப்படையை செஸ்ட்டஸிலிருந்து (Sestus) அபிடஸுக்குக் (Abydus) கொண்டு போய்ச் சேர்த்தது. அலெக்ஸாந்தர் டுரோஜன் போரில் முதல் முதலில் ஆசியாவின் கடற்கரையிலிறங்கியவனும், முதற்பலியானுவனுமாகிய புரோட்டேஸிலாஸ் என்பவனுடைய கல்லறை இருந்த எலேயஸுக்குச் (Elaeus) சென்ருன். அவன் அக் கல்லறைக்குப் பலி செலுத்தி வழிபாடு செய்கையில், புரோட்டேஸிலாஸை விடத் தான் பாக்கிய சாலியாக விளங்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அங்கிருந்து அவன் அச்சேயன்ஸ் துறைமுகத்திற்கு (Harbour of Achaeans) கடற் பிரயாணஞ் செய்தான். அவன் ஜலசந்தியின் மத்தியில் வந்தபோது போஸிடோன் தெய்வத்திற்கும், நேரேயிட்ஸ் தெய்வத்திற்கும், ஒரு தங்கத் தட்டில் மதுபான நைவேத்திய மளித்தான். அலெக்ஸாந்தர் முதன் முதலில் மைசியான் கரையில் காலடி யெடுத்து வைத்தான். அங்கிருந்து டிராய் சமவெளியைக் கடந்து இலியோன் குன்றுக்குச் சென்ருன். அங்கே அத்தேனு (Athena) ஆலயமிருந்தது. அவ்வாலயமிருந்தவிடம் ஓர் ஏழ்மையான பட்டினமாயிருந்தது. அப் பட்டினம் வரலாற்றுக் காலத்திற்கு முந்திய காலத்தில் செழித்திருந்து பின்னுல் அழிந்துபோன ஆறு பட்டினங்களில் அது ஒன்ருகும். அலெக்ஸாந்தர் அத்தேனு தெய்வத்திற்குப் பலி செலுத்தி வழிபாடு செய்தான். அவன் தன்னுடைய கவசத்தை அக்கோயிலுக்குக் கொடுத்துவிட்டு, பிரியாம் (Priam) அகமெம்னுேன் செய்த போரின் நினைவுச் சின்னமாக அங்கே பாதுகாத்து வைக்கப் பட்ட சில கவசங்களை எடுத்துக்கொண்டான். நியோட்டாலிமஸ் (Neoptolemus) இனத்தைச் சேர்ந்த ஒருவனிடமிருந்த கோபத்தை பிரியாம் மன்னித்துவிட வேண்டுமென்று வேண்டிக்கொண்டு அவனுக்கும் பலி செலுத்தினுன். மூதாதையாகிய அக்கில்லஸின் கல்லறைக்கு மலர்வளையம் வைத்து வழிபட்டான். அலெக்ஸாந்தருடைய உயிர்த்தோழனுகிய ஹெப்பேயஸ்ட்டியோன் (Hephaestion) அக்கில்லஸுக்குப் பிரியமான பேட்டரோகிளஸின் சமாதிக்குப் பூமாலை சூட்டினுன். இலியன் பட்டினம் தன் அழிவிலிருந்து மீண்டும் உயிர்ப் பெற்றெழவேண்டு மென்று கட்டளையிட்டான். அதை ஒரு சுதந்திர முள்ள பட்டினமாக்கினுன். அது திறை செலுத்தி வரும் பழக்கத்தை நிறுத்தி விட்டான். டிராஸ் பட்டினத்தின் குன்றின்மேல் இளம் மன்னன் செய்த சடங்குகளும் வழிபாடுகளும் அவன் தன்னுடைய தீரமுயற்சியில் சுமந்து சென்ற உள்ளுயிர் இன்னதென்பதை வெளிப்படுத்துகின்றன. அவை அவன் எவ்வளவுக்கு கிரேக்க நூல்களையும் பாரம்பரியங்களையும் தன் மனத்திற் பதிய வைத்திருந்தா னென்பதைக் காட்டுகின்றன.

அவை அவன் அக்கில்லஸ் மரபில் வந்தவன் என்பதை அவன் செயலிலும் ஊக்கத்திலும் காட்டினனென்று அறிவிக்கின்றன. நாடகத்தின் முதல் காண்டத்தில் புகழப்பெற்ற அவனுடைய மூதாதையாகிய அக்கில்லஸின் தீரச் செயல்கள் விவரிக்கப்பட்டு விட்டதாகவும், அதனுடைய மற்ருேர் காவியத்திற்குத் தான் தேர்ந் தெடுக்கப்பட்டிருப்பதாகவும் அவன் தன்னைப் பற்றி நினைத்துக் கொண்டான் என்பதையும் இது காட்டுகிறது.

**பாரசிகப் படை கிரேனிகஸுக்கு முன்னேறிச் செல்லல்; அலெக்ஸாந்தர் முன்னேறுதல்.**

அலெக்ஸாந்தர் டிராய் சமவெளியிலிருந்தபோது பேரரசனின் சாட்டடராப்புகள் சிறிய ஆசியாவைப் பாதுகாக்க 40,000 போர் வீரர்களைக் கொண்ட ஒரு படையைக் கொண்டுவந்து நிறுத்தினர்கள். அப்படையை ரோடியன் மெம்னேன் பொறுப்பில் விடப்பட்டிருக்கு மானல், அது பயனுள்ள காரியத்தைச் சாதித்திருக்கும். ஆனல் அப் படை ஒருவன் பொறுப்பில் விடப்படவில்லை. பல படைத் தலைவர்கள் கையில் விடப்பட்டது. அவர்களில் மெம்னேனும் மற்ற மேற்கு மாநிலங்களின் சாட்டராப்புகளும் இருந்தார்கள். பேரரசன் தன்னுடைய படைக்குத் தலைமை தாங்குவதைப் பலரிடம் ஒப்படைத்த தால், ஆரம்பத்திலேயே ஒரு பெரும் தவறைச் செய்துவிட்டான். பாரசீகச் சாட்டராப்புகள் மெம்னேனிடம் பொருமை கொண்டிருந் தார்கள். ஆகையால் அவர்கள் அவனுடைய அறிவுரையை ஏற்றுக் கொள்ள மறுத்துவிட்டார்கள். அலெக்ஸாந்தரை உடனே எதிர்த்துப் போரிடவேண்டாமென்று மெம்னேன் அறிவுறுத்தினன். ஆனல் அவர்கள் அதை ஏற்றுக்கொள்ளவில்லை; அதற்கு மாருனதையே செய்தார்கள். அவர்கள் சீலேயாவிலிருந்து புறப்பட்டு முன்னேறி ஆதராஸ்டேயா சமவெளியில் வந்து தங்கினர்கள். கிரேனிகஸ் ஆறு அச்சமவெளியின் வழியே சென்று புரோபோன்டிஸில் சங்கம மாகிறது. அவற்றின் செங்குத்தான இடது கரையில் அவர்கள் அணி வகுத்து நின்ருர்கள். அலெக்ஸாந்தார் கிரேனிகஸ் ஆற்றைக் கடக்க விடக்கூடாதென்பது அவர்களுடைய நோக்கமாயிருந்தது. அலெக் ஸாந்தரும் அவனுடைய படையும் அபிடஸிலிருந்து கிழக்கு நோக்கி முன்னேறின. வழியிலிருந்த லாம்புஸாகஸ் நகரமும் கிரேனிகஸ் நதியின் முகத்துவாரத்திற்கு சமீபத்திலுள்ள பிரியாப்பஸ் நகரமும் அவனிடம் சரணடைந்தன. பாரசீகர்கள் விரும்பிய செருக்களத்தைத் தவிர்ப்பதற்கு அவனல் முடியவில்லை. அவர்களைத் தனக்குப் பின்னல் விட்டுவிட்டுத் தெற்கு நோக்கிப் பயணஞ் செய்வதும் அவனுக்கு பயனுள்ளதாகத் தோன்றவில்லை. ஆகையால் அவர்களோடு போர் செய்தே தீரவேண்டுமென்ற ஒரு முடிவிற்கு அவன் வந்துவிட்டான். ஏனென்ருல் அவன் செல்லுமிடங்களில் உணவுப்பொருள்கள்

கிடைக்காதபடி அவர்கள் உணவுப் பொருள்களை அழித்துக் கொண்டிருந்தார்கள்.

### படைகளின் நிலைமை

அலெக்ஸாந்தரின் காலாட்படை இரு பிரிவுகளாகப் பிரிந்து பயணம் செய்தது. அதன் வலப் புறத்திலும் இடப் புறத்திலும் குதிரைப்படைகளிருந்தன. அலெக்ஸாந்தர் ஆட்ராஸ்த்தீன் சம வெளிக்கு வந்தான். பாரசீகர்கள் தங்களுடைய குதிரைப் படைகளை ஆற்றங்கரைகளின் மேல் நிறுத்தி வைத்திருந்தார்கள். அவர்களுடைய கிரேக்கப் படை கரைகளின் சரிவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தன. தாக்குதலில் பெரும் குதிரைப் படைக்கு, தற்காப்பிலுள்ள குதிரைப் படையை விட அனுகூல முண்டென்பது அலெக்ஸாந்தருக்குத் தெரியும். ஆகையால் வெற்றி அவன் பக்க மிருப்பதை அவன் தெரிந்து கொண்டான். தன் சொந்தப் படையைக்கொண்டு பாரசீகர் களுடைய படையைத் தாக்கப் புறப்பட்டான். பார்மேனியோ அவனைத் தடுத்து, அடுத்த நாள் விடியற்காலை வரையில் காத்திருக்க வேண்டு மென்றும், பகைவர்கள் அணி வகுத்து நிற்பதற்குள் அதிகாலையில் ஆற்றைக் கடந்து விட வேண்டு மென்றும் ஆலோசனை கூறினான். அதற்கு அலெக்ஸாந்தர், 'ஹெல்லஸ் பான்டைக் கடந்து வந்த நாம் ஹெர்னிகஸைப் போன்ற ஒரு கேவலமான நதியைக் கண்டு மலைப்பது எனக்கு மானக் கேடாக இருக்கிறது,' என்று பதிலளித்தான். உண்மையான நிலையை விளக்கிக் கூறாமல் முன் மதியில்லாதவன் பேசுவதைப் போல் அவன் பேசினான்.

### ஹிரானிகஸ் போர்க் களம், கி.மு. 334, மே - ஜூன்.

அலெக்ஸாந்தர் தன் வழக்கமான முறையில் தன் படையை அணி வகுத்து நிறுத்தினான். பாலான்ஸ் என்ற படையை ஆறு துண்டுகளாக அணி வகுத்து அதை மத்திய வியூகத்தில் நிறுத்தினான். இடது வியூகம் பார்மேனியாவின் தலைமையி லிருந்தது. வலது வியூ கத்தை அலெக்ஸாந்தர் நடத்திச் சென்றான். ஆரம்பத்தில் பளுவற்ற ஆயுதந் தாங்கிய குதிரைப் படையை ஆற்றைக் கடக்குமாறு செய்து, பகைவனுடைய இடது வியூகத்தின் கோடியைத் தாக்கும்படி கட்டளை யிட்டான். அதன் பிறகு பளுவுள்ள ஆயுதந் தாங்கிய மாசிடோனியக் குதிரைப் படையுடன் பாரசிகப் படையின் மத்திய வியூகத்தைத் தாக்கினான். போர் கடுமையாக நிகழும் இடத்தின் மத்தியில் அலெக் ஸாந்தர் நின்று போரிட்டான். செங்குத்தான ஆற்றின் கரையில் கடுமையான சண்டைக்குப் பின் பாரசிகப் படையில் பிளவு ஏற்பட்டது. பாரசிகக் குதிரை வீரர்கள் ஓட்டமெடுத்தார்கள். பாலான்ஸ் என்ற பளுவுள்ள ஆயுதந் தாங்கிய தரைப் படை ஆற்றைக் கடந்து, பின் பக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்த கிரேக்க ஹாப்லைட் என்ற பளுவுள்ள

ஆயுதந்தாங்கிய படையைத் தாக்கிற்று. அப்பொழுது வெற்றி யடைந்த மாசிடோனியக் குதிரைப் படை அதைப் பக்கவாட்டில் தாக் கிற்று.

இப் போரில் மாசிடோனியப் படைக்கு ஏற்பட்ட உயிர்ச் சேதம் மிகவும் சொற்பமானது. சிறிய ஆசியாவில் அவனை எதிர்த்த படை அது ஒன்றுதான். அவனைத் தடுத்து நிறுத்த அங்கு வேறுபடை யில்லை. ஆகவே அவன் செல்லும் பாதை சுத்தமாக்கப்பட்டுவிட்டது. ஆனால் கிரேனிகஸ் வெற்றி, சிறிய ஆசியாவை அவன் காலடியில் கொண்டு வந்து சேர்க்கவில்லை. அவன் ஒன்றன்பின் ஒன்றாய் வெல்ல வேண்டிய பலமுள்ள பலவிடங்கள் அங்கிருந்தன. அவற்றில் பல பாரசீகக் கடற் படையின் ஆதரவு பெற்ற கடற்கரைப் பட்டினங்க ளாகவும் இருந்தன. இப்படிப்பட்ட இந்தச் சமயத்தில் ஏதென்ஸு டைய கடற்படையின் உதவி அவனுக்கு மிகவுந் தேவையாக இருந் தது. எனினும் அவன் மனம் சோரவில்லை. செருக் களத்தில் கிடைத்த கொள்ளைப் பொருள்களை அவன் தன்னுடன் வந்தவர்களுக் குப் பகிர்ந்து கொடுக்கும் போது, ஏதென்ஸை மறந்து விடவில்லை. ஏதென்ஸில் அக்ரோபோலிஸிலுள்ள அத்தேனுவுக்கு 300 பாரசீகக் கவசங்களையும் அதனுடன் 'ஆசியாவிலுள்ள புறச் சாதியார்களிட மிருந்து பிலிப் அரசனின் மகனும், லாசிடாமோனியாவைத் தவிர மற்றக் கிரேக்க நாடுகளின் மகனுமாகிய அலெக்ஸாந்தர் அனுப்பியது' என்ற உரிமையுரையையும் அனுப்பினான். புறச் சாதியார்களுக் கெதிராக நடைபெறும் போராட்டத்தில், கிரேக்கர்களுடைய குறிக் கோளுக்காகவும் அலெஸாந்தருக்காகவும் ஏதென்ஸ் ஆர்வம் கொள் ளாதிருந்தது.

லிடியா சரணடைதல்

அலெக்ஸாந்தர் ஹெல்லஸ் பான்டையன் பிரிஜியா மாநிலத்திற் குக் காள்ளாஸை சாட்டராப்பாக நியமித்தான். அம்மாநிலத்தில் பாரசீகப் பேரரசின் நிர்வாக முறை தொடர்ந்து நடைபெற வேண்டு மென்றும், அதில் எவ்வித மாறுதலும் ஏற்படுத்தக் கூடாதென்றும் கட்டளையிட்டான். பிறகு அவன் லிதியாவை வெல்வதற்குத் தெற்கு நோக்கிப் பயணம் செய்தான். லிதியாவின் தலைநகரமாகிய சார்டிஸ் மூன்று வரிசைச் சுவர்களால் சூழப்பட்டிருந்தது. நகரம் ஒரு பாறை யின் மேல் கட்டப்பட்டிருந்தது. அந்நகரை 200 ஆண்டுகளுக்கு முன் பேரரசன் ஸைரஸ் கைப்பற்றினான். லிதியன் நாடு அன்று முதல் தன்னுடைய சுதந்திரத்தை இழந்துவிட்டது. மேற்கில் சார்ட்டிஸ் பாரசீகப் பேரரசின் முதன்மையாக விளங்கி வந்தது. சார்ட்டிஸ் நகரின் தற்காப்புக் கோட்டை மிகவும் வலுவானது. அது நீண்ட நாள் முற்றுகையைச் சமாளிக்கக் கூடிய ஒரு கோட்டையாக இருந்தது. அலெக்ஸாந்தர் தங்கள் நகரை முற்றுகையிட வருகிறானென்பதைக்

கேட்ட அந் நகரவாசிகள் நகரின் கதவுகளைத் திறந்து நகரையும் நகரிலுள்ள நிதி நிரம்பிய கருவூலத்தையும் அவனிடம் ஒப்படைத்தார்கள். அவர்கள் முன் யோசனையோடு சரணடைந்ததின் பயனுக அவர்களுக்கு மீண்டும் சுதந்திரம் கிடைத்தது. பாரசீகர்களால் மறுத்துவிட்ட அவர்களுடைய பழைய அரசியலமைப்பை மறுபடியும் பெற்றுக்கொண்டார்கள். லிதியா இப்போது ஒரு சுதந்திர நாடாயிற்று. அந்நகரின் நடு அரணில் அலெக்ஸாந்தர் ஒலிம்பியன் சியஸுக்கு ஓர் ஆலயம் கட்டத் தீர்மானித்தான். அப்பொழுது ஒரு பெரு மழை அரண்மனையின் மீது பெய்தது. எனவே ஆலயம் கட்டுவதற்குப் புனிதமான இடம் இதுவே யென்று அலெக்ஸாந்தர் கருதினன். அதே இடத்தில் தான் பல ஆண்டுகளுக்கு முன் லிதியரின் கடைசி அரசனைச் சிறையிலிட்ட காலத்தில் பேரிடி இடித்துப் பெருமழை பெய்தது. இவற்றைப் மனத்திற்கொண்டு ஆலயம் கட்டுவதற்கு அவ்விடமே ஏற்றதெனக் கருதினர்கள்.

பார்மேனியோவின் சகோதரன், அசாண்டர் (Asander) என்பவன் லிதியாவிற்குச் சாட்டராப்புவாக நியமிக்கப்பட்டான். பிறகு அலெக்ஸாந்தர் ஐயோனிய நகரங்களை நோக்கித் தன் படையுடன் புறப்பட்டான். இங்கு எல்லாச் செயல்களும் இங்குள்ள அரசியல் கட்சிகளின் பலத்தைச் சார்ந்ததாக இருந்தன. மக்களாட்சிக் கட்சியினர் அலெக்ஸாந்தரை ஒரு மீட்பனுகக் கருதி, அவனை வரவேற்றுர்கள். ஆனல், ஆலிகார்க் கட்சினர் பாரசீகப் பேரரசுக்கு ஆதரவாயிருந்தார்கள். எங்கெல்லாம் அக்கட்சியினர் ஆதிக்கம் நிலை பெற்றிருந்ததோ அங்கெல்லாம் அவர்கள் பாரசீகக் காவற் படைகளை ஏற்றுக் கொண்டார்கள். எபேஸஸ் பட்டினத்தில் ஆலிகார்க் கட்சியினர் செல்வாக்கு ஒங்கியிருந்தது. அலெக்ஸாந்தர் வருவதைக் கண்ட பாரசீகக் காவற்படை நகரைவிட்டு வெளியேறிற்று. அந்நகரிலிருந்த மக்களாட்சிக் கட்சியினர் ஆலிக்கார்க் கொள்கையினரைக் கொலை செய்ய ஆரம்பித்தார்கள். அலெக்ஸாந்தர் அவர்களைச் சமாதானப் படுத்தினன். அங்கே குடியாட்சி முறை அரசியலமைப்பை நிலை நாட்டினன். அலெக்ஸாந்தர் சிறிது நாள் எபேஸஸ் பட்டினத்தில் தங்கியிருந்தான். அப்போது அப்பெல்லஸ் (Apelles) என்ற சித்திரக்காரன் அவன் உருவத்தைவரைந்தான். அலெக்ஸாந்தர் தன் கையில் மின்னலைப் பிடித்திருப்பதைப் போன்ற அந்தச் சித்திரம் அங்கிருந்த ஆர்ட்டிமிஸ் (Artemis) ஆலயத்தில் வைக்கப்பட்டது.

**மைல்ட்டஸ் முற்றுகையும் அதை வெல்லுதலும், கி.மு. 334.**

அலெக்ஸாந்தர் மைல்ட்டஸ் நகரத்தை நோக்கித் தன் படையுடன் புறப்பட்டான். அவனுக்கு முதல் தடைவையாக அங்கே எதிர்ப்பேற்பட்டது. அங்குள்ள பாரசீகப் படைக்கு ஒரு கிரேக்கன்

படைத் தலைவனாக இருந்தான். ஆரம்பத்தில் அவன் அலெக்ஸாந்தர் ரிடம் சரணடைய ஒப்புக் கொண்டான். பிறகு பாரசீகப் படை மைல் டஸின் துறைமுகத்தை நோக்கி நெருங்கி வந்து கொண்டிருப்பதைக் கேள்விப்பட்டான். உடனே தற்காப்புச் செயலிலிறங்கினான். ஐரோப்பாவிற்கும் ஆசியாவிற்கும் நடந்த முந்திய போராட்டத்தில் லேட்மியான் குடாவிலும், மைல்சியன் துறைமுகங்களிலும், குறிப் பிடத்தக்கச் சம்பவங்கள் பல நிகழ்ந்ததை நாம் அறிவோம். கடல்பின் வாங்கிப் போய் விட்டதால் அவ்விடங்கள் படத்திலிருந்து மறைந்து விட்டன. லாதே (Lade) தீவில் அப்போது நடந்த போராட்டத்தில் ஆசியாவிற்கு வெற்றி கிடைத்தது. இப்போது நடந்த போராட்டத் தில் ஐரோப்பா வெற்றியடைந்தது. பாரசீகக் கடற்படை வருவதற்கு முன், 160 கப்பல்களைக் கொண்ட மாசிடோனியக் கடற்படை லாதே துறைமுகத்துக்குள் புகுந்து அதை ஆக்ரமித்துக் கொண்டது. பாரசீகக் கடற்படை லாதே துறைமுகத்தில் பிரவேசிக்க முயன்ற போது, அத்துறைமுகம் மாஸிடோனிய கடற்படையால் ஆக்ரமிக்கப் பட்டிருப்பதைக் கண்டு, அவை மைக்கேல் (Mycale) பூசந்திக்குச் சமீ பத்தில் நங்கூரம் பாய்ச்சி நின்றன. மைல்ட்டஸ் நகரம், வெளி நகரம், உள் நகரமென இரு பிரிவுகளைக் கொண்டது. அலெக்ஸாந்தர் அங்கு வந்தவுடனேயே வெளி நகரத்தைக் கைப்பற்றினான். உள் நகரத்தைச் சுலபமாக அவனால் கைப்பற்ற முடியவில்லை. அது வலு வுள்ள கோட்டைகளாலும் சுவர்களாலும் பாதுகாக்கப் பட்டிருந்தது. அலெக்ஸாந்தர் உள் நகரத்தைச் சுற்றிலும் பலமுள்ள ஒரு ஞாயிலை எழுப்பினான். லாதே தீவில் போர் வீரர்களை நிறுத்தி வைத்தான். மாஸிடோனிய முற்றுகை யந்திரங்களைக் கொண்டு உள் நகரத்தைத் தாக்கினான். துறைமுகத்திற்குள்ளிருந்த மாசிடோனியக் கடற்படை முற்றுகையினால் நெருக்கப்பட்ட நகருக்குப் பாரசீகக் கடற்படை எவ்வித உதவியுமனுப்ப முடியாதவாறு செய்தது.

### அலெக்ஸாந்தர் தன் கடற்படையைக் கலைத்துவிடுதல்

பார்மேனியோ கடற்போர் நடத்தியாகவேண்டுமென்று அலெக்ஸாந்தரை வற்புறுத்தினான். ஆனால் அலெக்ஸாந்தர் அதை மறுத்துவிட்டான். அவன் நிலைமை முழுவதையும் நன்றாக ஆராய்ந்து பார்த்து, பாரசீகக் கடற்படையைக் கடலில் போரிட்டு வெல்வதற்குப் பதிலாக, அதைத் தரையிலிருந்தபடியே வென்று விடுவதென்ற தீர்மானத்திற்கு வந்தான். ஏதென்ஸ் படையுதவி அனுப்பியிருக்குமானால் அவனுடைய திட்டத்தில் மாறுதல் ஏற்பட் டிருக்கும். இப்போது கிரீஸிலிருந்து படையுதவி வருமென்ற நம்பிக்கையை அடியோடு கைவிட்டுவிட்டான். பாரசீகர்களிட முள்ள 400 கப்பல்களை எதிர்க்கத் தன்னிடமுள்ள 160 கப்பல்கள் போதாதென்றும், மேலும் அவற்றை வைத்திருப்பது வீண் செல

வென்றும் கருதினன். அதன்படியே மைல்ட்டஸ் நகரின் வீழ்ச்சிக்குப் பின் தன் கடற்படையைக் கலைத்துவிட்டான். கிழக்கு மத்தியதரைக் கடற்கரையிலுள்ள பலமுள்ள கோட்டைகளைக் கைப்பற்றிக் கடல் முற்றுகையிடும் வேலையிலிறங்கினன். அடுத்த ஈராண்டுகளையும் இந்தத் திட்டத்தைச் செயலாற்றுவதில் கழித்தான். அவன் தன் திட்டத்தை நிறைவேற்றும்போது சிறிய ஆசியாவையும், சிரியாவையும், எகிப்தையும் வெல்லும்படி நேர்ந்தது.

கடற் படையைக் கலைக்கவேண்டாமென்று மறுத்துக் கூறியதற்குக் காரணமுமிருந்தது. பேரரசன் இவனைப் படுதோல்வியடையும்படி செய்து, மாசிடோனியாவிற்குத் திரும்பிப் போகும்படி நேரிட்டால், கப்பற் படையில்லாத காரணத்தினல இவனுடைய படையை ஆசியாவிலிருந்து ஐரோப்பாவிற்குக் கொண்டுபோக முடியாது. புரோபோன்டிஸின் இரு கரைகளும் பாரசீகக் கடற்படையின் கையிலிருக்க நேரிடின் இவன் அதைக் கடக்கமுடியாமல் அவதியுற நேரிடும். ஆகவே, ஒரு கடற்படை அவசியமென தோன்றிற்று. ஆனல் அலெக்ஸாந்தர் தன்னுடைய படைத் திறமையில் நம்பிக்கையுள்ளவன். பேரரசன் அவனை அவ்வளவு எளிதில் தோற்கடித்து மாசிடோனியாவிற்குத் திரும்பிப் போகும்படி கட்டாயப்படுத்த முடியாதென்பதை அவன் நன்ருக அறிந்திருந்தான்.

சிறிய ஆசியாவைப் பொறுத்தமட்டில், அவன் பெருமுயற்சியால் கைப்பற்றவேண்டிய இடங்களாக, காரியாவும், (Caria) ஹாலிகார்னஸஸும் (Halicarnassus) விளங்கின. கிரேனிகஸில் தப்பியோடிய பாரசீகப் படையும், ரோடியன் மெம்னேனும் இங்கு வந்து சேர்ந்தார்கள். அவர்கள் மாசோலஸ் (Mausolus) பட்டினத்தின் மீது தங்களுடைய இறுதி நம்பிக்கையை வைத்திருந்தார்கள். மாசோலஸ் பட்டினம் மூன்று அரண்களையுடைய வலுவுள்ள ஒரு பட்டினமாகும். பேரரசன் இப்போது மெம்னேனைக் கடற் படைக்கும், கடற்கரைப் பட்டினங்களின் தரைப்படைக்கும் படைத்தலைவனுக்கினன். மெம்னேன் ஹாலிகார்னஸைச் சுற்றிலும் ஓர் அகழியைத் தோண்டினன். நீண்ட நாள் முற்றுகையைச் சமாளிக்கப் போதுமான உணவுப் பொருள்களைச் சேகரித்து வைத்தான். பக்கத்திலுள்ள சிறிய பட்டினங்களில் சாவற் படைகளை நிறுத்தி வைத்தான். அலெக்ஸாந்தரைத் தடுத்து நிறுத்துவதில் ஹாலிகார்னஸஸ் நடுநாயகமாக விளங்கவேண்டுமென்பது அவன் நோக்கமாயிருந்தது.

**மாசோலஸ் நகரின் கடைசி மன்னர்கள்; ஆதா.**

அலெக்ஸாந்தர் ஹாலிகார்னஸஸ் நாட்டிற்கு அரசனுவதற்கு ஓர் வாய்ப்பிருந்தது. மாசோலஸின் சகோதரர்களில் ஒருவனுகிய

பிஸ்ஸோடாரஸ் மாசிடோனிய அரச குடும்பத்தோடு திருமணத்தின் மூலம் உறவு கொள்ள விரும்பினன். அலெக்ஸாந்தர் அவனுடைய மகளை மணந்துகொள்ள விரும்பினன். பிலிப் மன்னன் அதற்குச் சம்மதிக்கவில்லை. பிஸ்ஸோடாரஸ் தன் மகளை ஒரு பாரசீகப் பிரபுவிற்கு மணமுடித்து வைத்தான். மாமனர் இறந்த பிறகு மருமகனுகிய பாரசீகச் சீமான் அந்த நாட்டிற்கு அரசனுனன். அந் நாட்டின் அரசுகட்டிலுக்காக இடிரியஸின் (Idrieus) சகோதரியும், மனைவியுமான ஆதா (Ada) போட்டியிட்டாள். அவளுடைய கணவனுக்குப்பின் அவள் அரசியானள். அவளுடைய சகோதரன் பிஸ்ஸோடாரஸ் அவளைத் துரத்திவிட்டான். அவள் இப்போது அலெக்ஸாந்தருடைய உதவியை நாடினள். அலெக்ஸாந்தர் ஹாலிகார்னஸஸைக் கைப்பற்றியபோது, காரியா மாநிலத்தை அவளுக்குக் கொடுத்துவிட்டான். கிரீஸும் பாரசீகப் பேரரசும் இரு முறை ஒன்ருேடொன்று மோதிக்கொண்டன. ஒன்று பேரரசன் செர்லஸ் காலத்தில் நடந்தது. மற்ருென்று அலெக்ஸாந்தர் காலத்தில் நடைபெற்றது. அவ்விரு சந்தர்ப்பங்களிலும் பெண்கள் காரியாவில் பிரதிநிதிகளாக இருந்தார்கள். ஆர்ட்டோமிஸியாவின் வீரத்திற்கு ஆதாவின் சரணுகதி ஈடு செய்தது. பேரரசன் செர்லஸ் காலத்தில் ஆர்ட்டிமிஸியா வீரப் பெண்மணியாக விளங்கினள். அலெக்ஸாந்தர் காலத்தில் ஆதா, அவனிடம் சரணடைந்தாள்.

**ஹாலிகார்னஸஸ் முற்றுகை; கூதிர்காலம்; கி.மு. 334.**

அலெக்ஸாந்தர் மைன்டஸ்மீது பயனற்ற ஒரு தாக்குதல் மேற்கொண்டான். பிறகு அகழிகளை மூடிவிட்டான். பின்பு தன்னுடைய கோபுரங்களையும் யந்திரங்களையும் கொண்டுவந்து சுவர்களுக்கெதிரில் நிறுத்தினன். மைலாசாவிற்குப் போகும் சாலைக்கருகிலிருந்த வாயிலுக்குச் சமீபத்தில், சுவரின் வடகிழக்குப் பக்கத்தில் ஒரு துவாரத்தை உண்டாக்கினன். நகரவாசிகள் சரணடைவார்கள் என்ற நம்பிக்கையின் காரணமாக அலெக்ஸாந்தர் அதைத் தாக்குவதற்குத் தன்னுடைய போர்வீரர்களுக்குக் கட்டளையிடவில்லை. ஆனல் அவனுடைய பாலான்ஸ் படையைச் சேர்ந்த இருபோர்வீரர்களின் செய்கை அந்நகரவாசிகளோடு போர்புரியத் தூண்டியது. இரு போர்வீரர்கள் நன்ருகக் குடித்திருந்தார்கள். அவர்கள் குடிவெறியில் அலெக்ஸாந்தருடைய அனுமதியின்றித் தங்களுடைய போர்க் கவசத்தை அணிந்துகொண்டு, துவாரம் செய்த சுவரினருகில் சென்று பகைவர்களை வெளியே வரும்படி வாதுக்கிழுத்தார்கள். சுவரின்மேல் நின்றுகொண்டிருந்தவர்கள் அவர்களிருவரும் தனிமையாக இருப்பதைக் கண்டனர். அவர்களில் பலர் கீழே இறங்கி அவ்விரு போர்வீரர்களையும் நோக்கிச் சென்று அவர்களைச் சுற்றிலும் வளைத்துக்கொண்டு தாக்கினர்கள். அவ்விருவ

ருடைய நண்பர்கள் அவர்களை மீட்க ஓடினார்கள். சுவரினடியில் ஓர் பலத்த பூசல் ஏற்பட்டது. அப்போதும் அலெக்ஸாந்தர் அந்நகரைத் தாக்குவதற்குக் கட்டளையிடவில்லை. முற்றுகையினால் பீடிக்கப்பட்ட அந்நகரவாசிகள் ஓட்டையை அடைப்பதற்காக அரைச்சந்திர வடிவில் ஓர் உள்சுவர் ஒன்றை எழுப்பினார்கள். சில நாள் அவர்கள் அமைதியாக இருந்தார்கள். பிறகு அவர்கள் தங்கள் பொறுமையை இழந்து, நகரத்தை விட்டு வெளியேறி அலெக்ஸாந்தரின் படையை இருபக்கங்களிலும் தாக்கினார்கள். ஆனால் அலெக்சாந்தர் படை அவர்களைத் தோற்கடித்துத் துரத்திவிட்டது. அவர்கள் பட்டினத்திற்குள் நுழைந்து அதன் கதவை மூடிவிட்டார்கள். தங்கள் பரபரப்பில் பின்னால் ஓடிவந்து கொண்டிருந்த தங்கள் நண்பர்களை மறந்தார்கள். எனவே அந்நண்பர்களில் பலர் அலெக்ஸாந்தரின் போர்வீரர்களிடம் சிக்கி மாண்டனர். அப்போது தாக்குதல் நடத்தியிருந்தால் அந்நகரத்தை அலெக்ஸாந்தர் வென்றிருக்கக்கூடும். ஆனால் அவன் அதை விரும்பவில்லை. அந்நகரை அழிக்கக்கூடாதென்ற நல் எண்ணத்தோடு அலெக்ஸாந்தர், அவர்கள் தன்னிடம் தஞ்சமடையும் காலத்தை எதிர்பார்த்திருந்தான். மெம்னோன் அங்குள்ள நிலைமையை நன்கு புரிந்துகொண்டான். முற்றுகைக்கு நீண்ட நாள் நிலைத்திருப்பதனால் எவ்வித பயனும் ஏற்படாதென்பதை உணர்ந்தான். ஆகையால் தன் படையைத் துறைமுகத்திலுள்ள தீவிலுள்ள அரசனுடைய கோட்டைக்கும், சால்மாஸிஸ் அரணுக்கும் கொண்டுபோகத் தீர்மானித்தான். அவன் அன்றிரவு அந்நகரை விட்டுப் புறப்படுவதற்குமுன் அதற்குத் தீ வைத்தான். மாசிடோனியர்கள் நகருக்குள் நுழைந்தபோது அந்நகரம் எரிந்துகொண்டிருந்தது: நெருப்பினால் அழியாது எஞ்சிய இடங்களை அலெக்ஸாந்தரின் படை அழித்துவிட்டது. சால்மாஸிஸ் (Salmacis) கோட்டையை முற்றுகையிடவும், காரியாராணிக்கு உதவி புரியவும் டாலமியின் தலைமையில் (Ptolemy) ஒரு படையை நிறுத்திவிட்டு, அலெக்ஸாந்தர் புறப்பட்டான்.

### படையின் பிரிவு

குளிர்காலம் நெருங்கிவிட்டது. அலெக்ஸாந்தர் தன் படையை இரண்டாகப் பிரித்தான். ஒரு பாதியைப் பார்மேனியோவின் தலைமையில் லிதியாவில் தங்கும்படி கட்டளையிட்டான். அவன் மறுபாதியைத் தன்னோடு அழைத்துக்கொண்டு லிசியாவிற்குச் (Lycia) சென்றான். அவனுடைய படையில் புதிதாகத் திருமணஞ் செய்த வாலிபர்களிருந்தார்கள். அவர்களுக்கு விடுமுறை கொடுத்து மாசிடோனியாவிற்கு அனுப்பினான். வசந்தகாலம் வரும்போது அவர்கள் திரும்பி வந்துவிட வேண்டுமென்றும், வரும்போது உதவிப் படையுடன் வர வேண்டுமென்றும் அவர்களுக்குக் கட்டளையிட்டான். அவன் தன்

னுடைய படைகள் யாவும் பிரிஜியாவிலிள்ள கோர்டியோன் என்ற இடத்தில் மறுபடியும் ஒன்றுசேர வேண்டுமென்றும் அறிவித்தான்.

### லீசியா சரணடைதல்; பம்பீலியா, பிஸிடியா நாடுகளினூடே முன்னேறுதல்.

லீசியன் நேசநாடுகளின் பட்டினங்களில் அவனுக்கு எவ்வித எதிர்ப்பும் ஏற்படவில்லை. அந்நாடுகளின் கூட்டமைப்பு அரசியல் முறை சேதமுருவண்ணம் பாதுகாத்தான். வளமுள்ள பேசெலிஸ் என்ற எல்லைப்புற நகரத்திலிருந்து புறப்பட்டு பெம்பீலியாவின் கடற்கரையோரமாகப் பயணஞ் செய்தான். வழியில் பெர்ஜே நகரும், (Perge) ஆஸ்பென்டஸ் நகரமும் (Aspendus) அவனிடம் சரணடைந்தன. மற்றும் பல வணிகத்துறைப் பட்டினங்களும் அவனிடம் தங்களை ஒப்புவித்தன. பெர்ஜேவிலிருந்து உள்நாட்டை நோக்கிப் பிரயாணஞ் செய்தான். பிறகு பிஸிடியான் குன்றுகளின் வழியே பெரிதும் முயன்று முன்னேறிக்கொண்டிருந்தான். பிஸிடியான் மலைவாசிகளுடைய கோட்டையாகிய சாகலாஸை (Sagalassus) கைப்பற்றியதில் அவனுக்குச் சிறிது துன்பம் ஏற்பட்டது. பிரிஜியன் மாநிலத்தின் வலுவுள்ள கோட்டையாகிய கெலேனேயிக்குச் சென்ருன். அங்கு ஒரு காவற்படையை நிறுத்திவிட்டு சாங்காரியஸ் (Sangarius) நதிக்கரை மேலுள்ள கோர்டியோன் (Gordion) நகருக்கு வந்தான். கோர்டியோன் நகரம் பிரிஜியா நாட்டின் பழங்காலத் தலைநகரமாயிருந்தது.

### ஏஜியான் கடலில் மேற்கொண்ட நடவடிக்கைகள்

அலெக்ஸாந்தர் லீசியன், பிரிஜியன் மாநிலங்களைக் (Satrapies) கைப்பற்றிக் கொண்டிருந்தபோது, ஏஜியான் கடலில் சில முதன்மையான அலுவல்களைக் கவனியாதிருந்தான். மெம்னோன் பாரசீகக் கடற்படைத் தலைவனாக நியமிக்கப்பட்டிருந்தான். அவன் சியோசை (Chios) வென்ற பிறகு, லெஸ்போசின் (Leybos) பெரும் பகுதியைக் கைப்பற்றி, மைட்டிலேனே (Mytilene) நகரை முற்றுகையிட்டான். ஆனுல் அதைக் கைப்பற்றுவதற்குள் அவன் இறந்துவிட்டான். மைட்டிலேனே (Mytilene) சரணடைந்தது. டெனிடோஸ் (Tenedos) அரசனுடைய ஒப்பந்தத்தை ஏற்றுக்கொள்ளும்படி அதை வற்புறுத்தினர். இந்த வெற்றிகள் யாவும் கிரேக்க நாட்டில் அலெக்ஸாந்தருக்கு எதிராகக் கலகம் எழுப்பத் தூண்டுகோல்களாக இருந்தன. இந்த அபாயத்தை அலெக்ஸாந்தர் எதிர்பார்க்கவில்லை. பத்துப் பாரசீகப் போர்க்கப்பல்கள் மேற்கில் சிப்னோஸ் (Siphnos) வரையில் சென்று ஹெல்லாஸிஸ் அலெக்ஸாந்தருக்கு எதிராகக் கலகமெழுப்பும்படி கிரேக்க நாடுகளைத் தூண்டிவிட்டன. சால்ஸிஸிலிருந்து வந்துகொண்டிருந்த பாரசீகக் கப்பல்களில் எட்டை

மாசிடோனியாவின் மூன்றடுக்குத் துடுப்புகளையுடைய கப்பல்கள் தாக்கிப் பிடித்துக்கொண்டன. இந்த வெற்றி கிரேக்க நாட்டில் கலகம் எழும்புவதைத் தடுத்துவிட்டது.

**கார்டியோனில், கி. மு. 333.**

கார்டியோனில் அலெக்சாந்தரின் படைகள் குறிப்பிட்டபடி ஒன்றுசேர்ந்தன. புதிய படைகள் மாசிடோனியாவிலிருந்து வந்திருந்தன. கைப்பற்றிய நகரங்களில் நிறுத்தப்பட்ட காவற்படைகளுக்கு ஈடுசெய்ய இப்போது புதுப் படை அலெக்ஸாந்தருக்கு உதவி புரிய வந்துவிட்டது. கார்டியான் கோட்டையில் கார்டியஸ் (Gordius), மைடாஸ் (Midas) என்ற அரசர்களின் பாழடைந்த அரண்மனைகளிலிருந்தன. கார்டியஸ் மன்னனுடைய ரதத்தைப் பார்க்க அலெக்ஸாந்தர் மலைக்குச் சென்றான். அங்கே ரதத்தின் நுகத்தடியில் சிக்கலான ஒரு முடிச்சு போடப்பட்டிருந்தது. ஒருவித மரத்தின் பட்டையினலான கயிற்றைப் பல முடிச்சுகள் போட்டுப் பந்து போல் செய்திருந்தார்கள். அக்கயிற்றின் இரு முனைகளையும் கண்டு பிடிக்க முடியாத முறையில் முடிச்சு செய்யப்பட்டிருந்தது. இந்த முடிச்சை அவிழ்ப்பவன் ஆசியா முழுவதையும் ஆளுவான் என்ற ஓர் தெய்வமொழியுமிருந்தது. அலெக்ஸாந்தர் அதை அவிழ்க்க பன்முறை முயன்றும் பயனில்லை. உடனே அவன் தன்னுடைய வாளை உருவி அதை இரண்டு துண்டாகத் துண்டித்தான். இவ்விதமாக அவன் தெய்வமொழியை நிறைவேற்றினன். அலெக்ஸாந்தர் கார்டியோனிலிருந்து அஞ்சிரா (Ancyra) வழியாக, கப்பதோசியாவிற்குச் சென்றுன் (Cappadocia). பாபலகோனியா அவனிடம் சரணடைந்தது. கப்பதோசியா மாகாணத்தில் அலெக்ஸாந்தர் தன் ஆதிக்கத்தை நிலைநாட்டினன். பிறகு அவன் தெற்கு நோக்கிப் பயணஞ் செய்து டயானவையடைந்து அங்கிருந்து சிலிஸியன் வாயில்களுக்கும் போய்ச் சேர்ந்தான். சிறிது காலம் அலெக்ஸாந்தர் சிறிய ஆசியாவின் மத்திய பாகத்தில் தங்கியது அவனுக்கு நன்மையாக இருந்தது. அவன் இந்தக் கடினமான நாடுகளையும், போன்டஸின் தென்கரையிலுள்ள நாடுகளையும் கைப்பற்றும் முயற்சியைச் சிறிது காலத்திற்கு ஒத்திப்போட வேண்டியது அவசியமாயிற்று. பாரசிக சாட்டராப்புவாகிய அர்சாமேஸ் (Arsames), இந்தக் கணவாயைப் பாதுகாக்க நிறுத்திய படை அதைப் பாதுகாத்திருக்கக்கூடும். அலெக்ஸாந்தர் ஓர் இரவு தன்னுடைய படையைக் கூடாரத்தில் விட்டுவிட்டுச் சில பளுவற்ற ஆயுதந் தாங்கிய போர்வீரர்களுடன் கணவாயை நோக்கி நடந்தான். காவல் நிலையத்திலிருந்த போர் வீரர்கள் அலெக்ஸாந்தருடைய போர்வீரர்களின் காலடிச் சத்தம் கேட்டவுடனே காவல் புரிவதை விட்டுவிட்டு ஓட்டமெடுத்தார்கள். அதன் பிறகு அலெக்ஸாந்தர் தன்னுடைய குதிரைப் படையுடன்

தர்சுஸ் பட்டினத்தை நோக்கித் துரிதமாகச் சென்றான். அலெக்ஸாந்தர் எதிர்பாராதவிதமாக அங்கு வந்து சேர்ந்தது ஆர்ஸாமேஸுக்கு வியப்பாக இருந்தது. அலெக்ஸாந்தரை எதிர்ப்பதற்குப் பதிலாக அவனும் அங்கிருந்து ஓடிவிட்டான்.

**தர்சுஸ் பட்டினத்தில்**

தர்சுஸ் பட்டினத்தில் அலெக்ஸாந்தருக்கு ஒரு தீயசெயல் நேர்ந்தது. அச்செயல் வரலாற்றின் முறையையே மாற்றி விட்டது. சுடுவெயிலிலே நீண்ட தூரம் பிரயாணம் செய்தபடியால் அலெக்ஸாந்தர் சிட்நஸ் ஆற்றின் குளிர்ந்த தண்ணீரில் நீராடினான். குளிர் அவனைத் தாக்கியது. அது கடும் காய்ச்சலாக மாறிவிட்டது. கொடூரச் காய்ச்சலால் அவதியுற்றான். அவனுடைய வைத்தியர்களால் அவன் உடல் வெப்பத்தைக் தணிக்க முடியவில்லை. அவர்களும் குணப்படுத்த முடியுமென்ற நம்பிக்கையை விட்டுவிட்டார்கள். ஆனால் அகார்னனியாநாட்டானாகிய பிலிப் என்ற வைத்தியன் திறமை மிக்கவன். சுகபேதிக்கு எடுத்துக்கொண்டால் காய்ச்சல் தணிந்துவிடுமென்று கூறி அவன் சிகிச்சையைத் தொடங்கினான். அவன் அரசனுடைய கண்ணெதிரில் சுகபேதி மருந்து தயார் செய்து கொண்டிருந்தபோது பார்மேனியோ அனுப்பிய கடிதம் அலெக்ஸாந்தரிடம் கொடுக்கப்பட்டது. அது ஓர் எச்சரிக்கைக் கடிதம். அக்கடிதத்தில் பிலிப், டாரியஸின் கையாள் என்றும், அலெக்ஸாந்தருக்கு விஷம் கொடுத்துக் கொல்ல பிலிப்புக்கு டாரியஸ் பணம் கொடுத்திருப்பதாகவும் எழுதப்பட்டிருந்தது. அலெக்ஸாந்தர் அக் கடிதத்தைப் பிலிப்பிடம் கொடுத்துப் படிக்குமாறு கூறினான். பிலிப் அதனைப் படித்தபின், அலெக்ஸாந்தர் அவன் கொடுத்த மருந்தை விழுங்கிவிட்டான். அவனுடைய பெருந்தன்மையான நம்பிக்கையை இச்சம்பவம் விளக்கிக் காட்டுகிறது. பிலிப்பின் பராமரிப்பில் அலெக்ஸாந்தர் விரைவில் நோயிலிருந்து குணமானான்.

## 6. இஸஸ் யுத்த களம்

**ஆன்சியாலஸ், சோலி, இஸ்ஸஸ் என்ற விடங்களில் சைலீஸியாவை வெல்லுதல், கி.மு. 333, அக்டோபர்.**

பேரரசன் ஒரு பெரும் படைக்குத் தலைமை தாங்கி யூப்பரட்டஸ் நதியைக் கடந்து சென்றான். அலெக்சாந்தர் சிறிய ஆசியாவை வெல்லும் வரையில் பேரரசன் அமைதியாக இருந்தான். மேற்கொண்டு அலெக்ஸாந்தர் முன்னேறுவதைத் தடுப்பதற்காக இப்போது போர்க்களத்தில் அவனை நேருக்குநேர் சந்திக்கவந்து விட்டான். அலெக்ஸாந்தர் அவசரப்பட்டு அவனை எதிர்த்து

செல்லவில்லை. அவன் தாமதித்துப் போர்க்களத்திற்கு வந்ததற்கு ஒரு காரணமுமுண்டு. அலெக்ஸாந்தர் சைலிசியா (Cilicia) விலிருந்து சிரியாவிற்குச் செல்லும் பாதையிலுள்ள கணவாய்களைக் கைப்பற்ற பார்மினியோவை ஒரு படையுடன் தனக்கு முன்னாலனுப்பினான். மேற்கு சைலிசியாவை வெல்லுவதற்காக அலெக்ஸாந்தர் மேற்கு நோக்கிப் பயணமானான். ஆரம்பத்தில் ஆன்சியாலஸைக் கைப்பற்றினான். அங்குள்ள அசிரிய மன்னனான சார்டானபாலஸின் (Sardanapalus) உருவச்சிலையும், அதில் எழுதப்பட்டுள்ள வாசகமும் மிகவும் புகழ் பெற்றவை. அலெக்ஸாந்தர் அச் சிலையைக் கண்டு, அதனடியிலிருந்த வாசகத்தையும் படித்தான். 'சார்டானபாலஸ் ஆன்சியாலஸ், தார்ஸஸ் என்ற இரு நகரங்களையும் ஒரே நாளில் கட்டினான். ஓ அன்னியனே! நீ புசிக்கிறாய், குடிக்கிறாய், பூரிப்பாயிருக்கிறாய். இதைத்தவிர வேறொன்றையும் நீ யறியாய்'. அலெக்ஸாந்தர் அவ் வாசகத்தின் பொருளைத் தன்னுடைய திராசைக்கு ஒரு படிப்பினையாக எடுத்துக்கொண்டான். சோலி (Soli) என்ற நகருக்குச் சென்றான். அங்கு ஒரு கிரேக்கக் காவற்படை இருந்தது. அங்குள்ளவர்கள் கிரேக்க மொழியையும் கிரேக்க நிறுவனங்களையும் மறந்திருந்தார்கள். அங்கிருந்து அவன் சிலிசியன் மலைவாசிகளை எதிர்த்துச்சென்றான். ஏழு நாட்களுக்குள் அவர்களுடைய நாட்டைக் கைப்பற்றினான். பிறகு அவன் கிழக்கு நோக்கிப் பயணஞ்செய்து அங்கிருந்து அமானஸ் மலைக்கடியிலிருந்த இஸ்ஸஸ் என்ற இடத்தை நோக்கிப் புறப்பட்டான்.

**மிரியாண்டரில் அலெக்ஸாந்தர்; இஸ்ஸஸுக்கு பாரசீகர்கள் முன்னேறுதல்; அலெக்ஸாந்தர் திரும்பி வருதல்.**

டாரியஸ், மலையின் மறு பக்கத்திலிருந்தான். அவன் படை வசதியாகத் தங்குவதற்கான சமவெளி அங்கிருந்தது. இஸ்ஸஸிலிருந்து சிரியாவிற்குச்செல்ல இரு சாலைகளிருந்தன. ஒன்று, மலைகளின் கணவாய்களிலுள்ள கடினமான நேர் பாதை. மற்றொன்று மைரியாண்டரோஸ் (Myriandros) கடற்கரை வழியாகச் சுற்றிக்கொண்டு அமனுஸ் மலையைக்கடந்து செல்லும் குறுக்குப் பாதை. ஸைரஸும் ஸெனப்பனும் இந்த இரண்டாவது பாதை வழியாகவே பிரயாணம் செய்தார்கள். அலெக்ஸாந்தரும் அப் பாதையின் வழியே தன்னுடைய படையை நடத்திச்செல்ல திட்டமிட்டான். நோய்வாய்ப்பட்ட போர் வீரர்களை அவன் இஸ்ஸஸ் என்னுமிடத்தில் விட்டுவிட்டு மைரியாண்டரோஸ் என்னுமிடத்தை நோக்கிப் பயணமானான். குளிர் கால ஆரம்பமானபடியால் வழியில் கனத்த புயலும் மழையுமேற்பட்டன. இதனால் அவன் பிரயாணம் தடைப்பட்டது. ஆர்சாமேஸ் (Arsames) என்பவன் மூலமாக அலெக்ஸாந்தர் வேகமாக முன்னேறி வருவதைப் பேரரசன் கேள்விப்

பட்டிருந்தான். அலெக்ஸாந்தர் வருகையை டாரியஸ் ஒவ்வொரு நாளும் எதிர்பார்த்தான். சிலிஸியாவில் ஏற்பட்ட தடையின் காரணமாக அவன் வராததைக்கண்ட பேரரசன், அவன் தன்னைக் கண்டு பயந்துவிட்டதாகவும், பயத்தின் காரணமாக அவன் சிலிசியாவின் கடற்கரை நாடுகளைவிட்டுப் புறப்பட மனமில்லாதிருக்கிறானென்றும் நினைத்தான். அதன்படியே டாரியஸும், அவனுடைய படைத் தலைவர்களும் அலெக்ஸாந்தரைத் தேட ஆரம்பித்துவிட்டார்கள். பாரசீகப் படைகள் வடக்குக் கணவாயைக்கடந்து இஸ்ஸஸுக்கு வந்து சேர்ந்தன. அங்கே அலெக்ஸாந்தர் விட்டுச் சென்ற கிரேக்க நோயாளிகளைக்கண்டு அவர்களைச் சித்திரவதை செய்து கொன்றான். நோயாளிகளுக்கேற்பட்ட நாச விளைவிற்காக அலெஸாந்தரைக் குறைக்கூறக் கூடாது. இந்நிலை அவர்களுக்கேற்படுமென்று அன்று நினைத்துப் பார்க்கவில்லை. டாரியஸ் தன்னைத் தேடுகிறானென்று அலெக்ஸாந்தர் கேள்வியுற்றான். முதலில் அதை அவன் நம்பவில்லை. அவன் ஒரு படகில் சில ஒற்றர்களை வேவுபார்த்து வருமாறு அனுப்பினான். அவர்கள் திரும்பி வந்து டாரியஸ் இருக்குமிடத்தை அவனுக்குச் சொன்னார்கள். உடனே அவன் மைரியாண்டரோசிலிருந்து திரும்பி இஸ்ஸஸுக்கு வந்து சேர்ந்தான்.

### இஸ்ஸஸில் படைகளின் நிலைமை

இஸ்ஸஸ் சமவெளி பினரஸ் (Pinarus) என்ற ஆற்றினால் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அட்ராட்டே என்ற சமவெளியிலுள்ள கிரேனிகஸ் நதிக்கரையில் நடந்த சம்பவமே இங்கேயும் நடைபெற வேண்டியதாயிற்று. பாரசீகர்களின் படை அணிவகுத்து நிற்காமல் அலங்கோலமாக இருந்ததை அலெக்ஸாந்தர் கண்டான். பாரசீகப் படை செங்குத்தான ஆற்றின் கரையால் பாதுகாக்கப்பட்டிருந்தது. விடியற்காலை மாஸிடோனியப் படை சமவெளிக்குக் கொண்டுவரப்பட்டது. மாசிடோனியப் படை வருவதை யறிந்த டாரியஸ் 50,000 குதிரை வீரர்களையும் பளுவற்ற ஆயுதந்தாங்கிய போர் வீரர்களையும் முன்னால் தள்ளி, பாரசீகப்படையை மாசிடோனியர்கள் பார்க்காவண்ணம் செய்தான். அப்போதுதான் டாரியஸ் படையை யுத்தத்திற்காக அணிவகுத்து நிறுத்தினான். சமவெளியின் நீளமோ 3 மைல். அவனிடமுள்ள போர் வீரர்கள் கணக்கற்றவர்கள். படையின் ஒரு பாகத்தை மட்டும் யுத்தகளத்தில் நிறுத்திவைத்தான். மறுபாதியை மூலப்படையாக ஒதுக்கிவைத்தான். முன்னணியில் நிறுத்திவைக்கப்பட்டவர்கள் பளுவுள்ள ஆயுதங்கள் அணிந்தவர்கள். டாரியஸ், 30,000 கிரேக்கக் கூலிப் படையினரும், கார்டாகெஸ் (Kardakes) என்றழைக்கப்பட்ட கீழ் நாடுகளின் படையும் போரில் ஈடுபடும்படி செய்தான். இடது வியூகம் சரிவான மலையடிவாரத்தி

லிருந்து அரை வட்டத்தைப்போல் வளைந்திருந்தது. அலெக்ஸாந்தருடைய வலது வியூகத்தைத் தாக்குவதற்காக அது காத்துக்கொண்டிருந்தது. படையை அணிவகுத்து நிறுத்தியபின் முன்னால் நிறுத்திவைக்கப்பட்ட குதிரைப்படையை வியூகத்தில் வந்து நிற்கும்படி டாரியஸ் கட்டளை இட்டான். வலது வியூகத்தின் கோடி, கடற்கரையில் பரவியிருந்தது. அவ்விடம் குதிரைப்படை போர்புரிவதற்கு வசதியாகயிருந்தது.

### அலெக்ஸாந்தர் படையின் அணிவகுப்பு

மத்திய வியூகத்தில் பளுவுள்ள ஆயுதங்கள் தாங்கிய பாலன்ஸ் என்ற போர் வீரர்களை நிறுத்தினான். வலது வியூகத்தில் பளுவுள்ள ஆயுதந்தாங்கிய ஹைப்பசிஸ்ட் என்ற போர் வீரர்களை நிறுத்தினான். தெஸ்ஸாலிய மாசிடோனிய குதிரைப் படைகளை வலது வியூகத்தில் நிறுத்தினான். தன்னுடைய குதிரைப் படைத் தாக்குதலைப் பலப்படுத்தவே அவன் அவ்விதம் செய்தான். பாரசீகக் குதிரைப்படை முழுதும் கடற்கரைப் பக்கத்தில் குவித்திருப்பதைக் கண்டான். உடனே தெஸ்ஸாலியக் குதிரைப்படையைத் தன்னுடைய இடது வியூகத்திற்கு மாற்றிவிட்டான். மலைச்சரிவில் நிறுத்திவைக்கப்பட்ட பாரசீகப்படை தன்னுடைய பின்னணியையும், பக்க வாட்டையும் தாக்காவண்ணம் பளுவற்ற ஆயுதங்கள் தாங்கிய போர் வீரர்களை வலது வியூகத்தின் கோடியில் நிறுத்திவைத்தான். கார்னிகஸ் போர்க்களத்தில் செய்ததைப்போலவே இங்கும் பளுவுள்ள ஆயுதங்களணிந்த குதிரைப் படையினர் பாரசீகப் படையின் இடது வியூகத்தைத் தாக்க வேண்டிய ஏற்பாடுகளைச்செய்தான். குனுஸ் போர்க்களத்தைப்பற்றிப் படித்தவர்கள் ஆசிய நாடுகளின் படைகளை ஏளனம் செய்யக்கூடும். ஆனால் டாரியஸிடம் 30,000 கிரேக்கக் குதிரைப் படையினர் இருந்தார்கள். அவர்கள் போர் முறையை அறிந்தவர்கள். நின்று போரிடும் வகையையும் பகைவன் தப்பியோட முடியாவண்ணம் செய்யும் வகையையும் அறிந்தவர்கள். அலெக்ஸாந்தர் தோல்வியடைவானாகில் பின் வாங்கிச்செல்ல வழியில்லாமல் போய்விடும். பாரசீகர்கள் அவ்விதமாகத் தங்கள் படையை அணிவகுத்து நிறுத்திவைத்திருந்தார்கள்.

### போர்

போர் ஆரம்பமாயிற்று. அலெக்ஸாந்தர் பாரசீகப் படையின் இடது வியூகத்தைத் தாக்கினான். அவனுடைய குதிரைப் படைத் தாக்குதலை அவர்களால் சமாளிக்கமுடியவில்லை. தரைப்படை மெதுவாக முன்னேறிக்கொண்டிருந்தது. ஓடையைத் தாண்டிச் செங்குத்தான கரையைக் கடக்கும்போது ஓரிடத்தில் படைவரிசை குலைந்தது. பளுவுள்ள ஆயுதந்தாங்கிய போர் வீரர்கள் பாரசீகர்களை ஆற்றை

நோக்கி நெருக்கித்தள்ளினர்கள். முன் வரிசையில் நின்ற பாலான்ஸ் படை பின்னுக்குத் தள்ளப்பட்டிருக்குமானல் வெற்றிப் பாதையிலுள்ள அலெக்ஸாந்தருடைய வலது வியூகம் பக்கவாட்டில் தாக்கப்பட்டிருக்கும்; அலெக்ஸாந்தர் தோல்வியடைந்திருப்பான். அவனுடைய போர் வீரர்கள் அப்படிப்பட்ட தாக்குதல்கள் ஏற்படாவண்ணம் தடுத்துவிட்டார்கள். இதற்கிடையில் அலெக்ஸாந்தர் பேரரசன் நின்றுகொண்டிருக்கிற இடத்தை நோக்கித் தன்னுடைய படையைச் செலுத்தினன். டாரியஸைப் பிரபுக்கள் சூழ்ந்துகொண்டிருந்தார்கள். அங்கே கடுமையான யுத்தம் தொடர்ந்தது. அலெக்ஸாந்தரின் காலில் காயமேற்பட்டது. டாரியஸ் யுத்தகளத்தைவிட்டு ஓட ஆரம்பித்தான். இடது வியூகத்திலிருந்த போர் வீரர்களும் ஓட்டமெடுத்தார்கள். அப்போது அவனுடைய வலது வியூகம் வெற்றிப் பாதையில் சென்றுகொண்டிருந்தது. பேரரசன் யுத்தகளத்தை விட்டு ஓடிவிட்டானென்று கேள்விப்பட்டார்கள். இடது வியூகத்திலிருப்பவர்கள் ஓடிக்கொண்டிருப்பதைப் பார்த்தார்கள். உடனே வலது வியூகத்தில் வெற்றியடைந்துகொண்டிருந்த பாரசீகப் படையினர் ஓட்டமெடுத்தனர். தெஸ்ஸாலிய குதிரைப்படையினர் அவர்களைத் துரத்திபிடிக்க முயன்றூர்கள். பாரசீகப்படை வடக்கு நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. அவை அமானஸ் கணவாயை நோக்கிச் சென்றுகொண்டிருந்தன. அப்பொழுது கிரேக்கர்கள் பாரசீகர்களில் ஆயிரக்கணக்கானவர்களைக் கொன்றுகுவித்தார்கள். டாரியஸ் அவ்விடத்தில் நிலைகொள்ளவில்லை. அவன் தன் தாயை மறந்தான் மனைவியை மறந்தான். அவர்களும் போர்க்களத்திலிருந்தார்கள், அவன் மலைக்கு வந்தவுடன், தன் தேரை அங்கே விட்டுவிட்டு, தன் கேடயத்தையும், அரசனுக்குரிய உடையையும் வீசி எறிந்தான். தன்னுடைய அரிய உயிரைப் பாதுகாக்க, வேகமாகச்செல்லும் ஒரு குதிரை மீதேறி ஓட்டமெடுத்தான்.

அலெக்ஸாந்தர் பேரரசன் டாரியஸை சூரியன் மறையும் வரையில் துரத்திச் சென்றூன். வழியில் அவன் தேர், கேடயம், மேலங்கி முதலியவை சிதறுண்டுக் கிடப்பதைக் கண்டான். சூரியன் மறைந்த போது அலெக்ஸாந்தர் பாரசீகர்களுடைய பாசறைக்குத் திரும்பி வந்தான். அங்கு அவன் உணவருந்திக் கொண்டிருந்தபோது சமீபத்திலிருந்து வந்த அழுகுரலைக் கேட்டான். பெண்கள் ஓலமிட்டழும் சத்தம் அவன் செவிகளில் வீழ்ந்தது. அழுகின்ற பெண்கள் யாரென்றும் ஏன் அவர்கள் அங்கிருக்கிறூர்களென்றும் கேட்டான். அவர்கள் தான் டாரியஸின் மனைவியும் தாயும் குழந்தைகளும் என அவனருகிலுள்ளவர்கள் விளக்கினர். அவர்கள் அழுவதற்கான காரணத்தையும் அவனுக்குக் கூறினர்கள். அலெக்ஸாந்தர் பேரரசனுடைய உடையையும் கேடயத்தையும் கொண்டு வந்ததால் அவன் அவனைக் கொன்று விட்டதாக நம்பி அழுவதாகச் சொன்னர்

கள். டாரியஸ் உயிரோடிருப்பதாகவும், அவர்களை அலெக்ஸாந்தர் சகல மரியாதையோடும் கண்ணியமாய் நடத்துவார் என்றும் அப் பெண்களுக்கு எடுத்துக்கூறி ஆறுதல் செய்ய அவன் தன் நண்பனை அவர்களிடம் அனுப்பினான். அலெக்ஸாந்தருக்கு டாரியஸ்மீது தனிப்பட்ட முறையில் எவ்வித விரோதமுமில்லை. அலெக்ஸாந்த ருடைய பெருந்தன்மையான பண்பைக்கண்டு அவன் காலத்திலுள்ள வர்கள் வியப்படைந்தார்கள். இந்தச் செய்கையைப்போல், அவனுடைய மற்றச் சிறந்தசெயல்கள் அவ்வளவு வியப்பைத்தர



The Battle of ISSUS, B.C. 333

வில்லை. அலெக்ஸாந்தர் போற்றிப் புகழ்ந்து வந்த வீரன் ஆச்செல்லஸ் (Achilles) என்பவனாவான். பெண்களிலே பேரழகியான ஸ்ட்டாட் டிராவைக் கண்ணால் கண்டிருந்தால் அவன்கூட அவள்மீது ஆசை கொள்ளாமலிருந்திருக்கமாட்டான். அழகைக் கண்டு அதன்மேல் மோகம் கொள்பவன் அலெக்ஸாந்தரல்லன். அவன் ஓர் காரிய வீரன். கடமை அவனுக்குப் பெரிதே தவிர காதல் அவனுக்குப் பெரிதன்று. அவன் ஓர் அரசன். அவன் அரசக் கோட்பாட்டை மதித்து நடக்க வேண்டும். ஆகையால் அவன் டாரியஸின் மனைவியை ஓர் அரசிக்குரிய மரியாதையோடு நடத்தினான்.

**இஸ்ஸஸில் அலெக்ஸாந்தரியா நகரம் உதயமாதல்: அலெக்சாந்தரிட்டா.**

அலெக்ஸாந்தரையும் அவனுடைய சிறிய படையையும் காலின் கீழ் தள்ளி மிதித்துத் துவைக்க வந்த பாரசீகக் கும்பல் இஸ்ஸஸ் சமவெளியில் சின்ன பின்னமாகிச் சிதறுண்டோடின. இஸ்ஸஸ் சமவெளியில் வடகோடியில் கடல்வாயில்களுக்கருகில் அலெக்ஸாந்திரியா என்ற நகரமொன்றிருக்கிறது. இஸ்ஸஸில் அலெக்ஸாந்தருக்குக் கிடைத்த வெற்றியின் சின்னமாக அது இன்றைக்கும் விளங்குகிறது. அதைக் கட்டியவன் அலெக்ஸாந்தர். இப்போது அவன் பயணஞ் செய்ய வேண்டிய பாதை சிரியாவை நோக்கிச் சென்றது. அதுவே இஸ்ஸஸ் யுத்த களத்தின லேற்பட்ட விளைவாகும். கிரானிகஸ் போர் முனையில் கிடைத்த வெற்றிச் சின்னம் ஆசியாவிற்கு வழி திறந்து விட்டதைப்போல் இஸ்ஸஸில் பினரோஸ் ஆற்றங்கரையில் கிடைத்த வெற்றி சிரியாவையும், எகிப்தையும் வெல்ல வழிகாட்டிற்று. அவன் செய்யவேண்டிய எஞ்சிய வேலைகள் கடினமான முற்றுகைகளாகும். இஸ்ஸஸ் வெற்றி அவன் புகழை நிலை நாட்டியது. தன்னுடைய படையை விடப் பத்து மடங்கதிகமான டாரியஸின் தலைமையில் வந்த படையை அவன் தோல்வியுறச் செய்தான். டாரியஸை மலைநாட்டில் பின் தொடர்ந்து துரத்திச்சென்ருன். அவனிடம் பேரரசனுடைய தாயும் மனைவியும், குழந்தைளும் கைதிகளாக இருந்தார்கள். அவன் உயிரோடு யூப்பரட்டஸ் நதியைக் கடந்து விட்டான். ஆனல் அவனுடன் பிறந்த பாரசீக அரச குடும்பத்தின் அகந்தையும் கர்வமும் அவனை விட்டு அகலவில்லை. அவன் அலெக்ஸாந்தருக்குப் பணிந்துவர விரும்பவில்லை. அவன் அலெக்ஸாந்தருக்கு ஒரு கடிதம் எழுதினன். அக் கடிதத்தில் அலெக்ஸாந்தர் கோப முண்டு பண்ணுத ஆக்கிரமிப்பாள னென்று கூறி, தன்னுடைய தாயையும், மனைவியையும் குழந்தைகளையும் தன்னிடம் அனுப்பிவைக்குமாறு கேட்டுக் கொண்டான். அத்துடன் அலெக்ஸாந்தரோடு ஒரு நேச உறவு ஒப்பந்தம் செய்துகொள்ள விரும்புவதாகவும் அக் கடிதத்தில குறிப்பிட்டிருந்தான். டாரியஸ் அலெக்ஸாந்தருக்கு அவ்விதமான ஒரு கடிதம் எழுதுமளவுக்கு அவன் தாழ்த்தப்பட்டான். அக் கடிதத்திற்கு அலெக்ஸாந்தர் கண்டிப்பான பதில் அனுப்பினன். நம்முடைய நற்காலத்தின் பயனக அக் கடிதம் இன்னள் வரையில் பாதுகாக்கப் பட்டிருக்கிறது. அக் கடிதம் ஆசியாவிற்கும், ஐரோப்பாவிற்கும் அவனுடைய கொள்கையை வெளிப்படுத்தும் கருவியாக இருக்கிறது.

**அலெக்ஸாந்தரின் அராங்கப் பத்திரம்; டாரியஸுக்குக் கடிதம் கி. மு. 333.**

'உன் முன்னோர்கள் மாசிடோனியா மீதும், இதர கிரேக்க நாடுகளின் மீதும் எரிச்சலூட்டுவதற்கான எவ்வித காரணமுமில்லாதிருந்தும் படையெடுத்து வந்து எங்களுக்குத் தீங்கிழைத்தார்கள். நான் கிரேக்கர்களுடைய தலைவனாக நியமிக்கப்பட்டிருப்பதால், அவர்களுக்கிழைத்த தீமைகளுக்குப் பழிவாங்கக் கடல் கடந்து ஆசியாவிற்கு வந்திருக்கிறேன் ஏனென்றால் ஆரம்பத்தில் வலுச் சண்டைக்கு வந்தவர்கள் நீங்களே. என் தந்தைக்கு எதிராகக் கலகம் விளைவித்த பெரின்தஸ் மக்களுக்கு நீங்கள் ஆதரவளித்தீர்கள். எங்களுடைய பேரரசின் ஒரு பாகமாகிய தெரோஸ் நாட்டிற்கு ஒச்சஸ் பேரரசன் ஒரு படையை அனுப்பியதுண்டு என்னுடைய தந்தையைக் கொன்ற சதிகாரர்களுக்கு நீங்கள் உடந்தையாக இருந்தீர்கள். அதைப் பற்றி நீங்கள் அடைந்த பெருமையை உங்களுடைய கடிதங்கள் கூறுகின்றன. நீயோ வெனில் ஒச்சஸ் (Ochus) பேரரசனுடைய மகனாகிய ஆர்செஸ் (Arses) பேரரசனை பாகாஸ் (Bagoas) என்பவனுடைய உதவியைக்கொண்டு கொலை செய்து அவனுடைய அரசுகட்டிலைப் பாரசீகர்களுடைய சட்டத்திற்கு விரோதமான அநியாய முறையில் அபகரித்திருக்கிறாய். மேலும் என்னைப் பற்றித் தவறான கடிதங்களைக் கிரேக்கர்களுக்கு எழுதி எனக்கு விரோதமாகப் போரிட அவர்களைத் தூண்டிவிட்டிருக்கிறாய். அவர்கள் அந்த நோக்கத்தை நிறைவேற்றத் திரண்ட பணத்தை அவர்களுக்கனுப்பி இருக்கிறாய் (லாசிடாமோனியர்களைத் தவிர மற்ற கிரேக்க நகரங்கள் பணம் பெற்றுக் கொள்ளவில்லை.) உன் தூதுவர்கள் என்னுடைய நன்பர்களுக்கு லஞ்சம் கொடுத்து அவர்களைக் கெடுத்ததோடு, நான் கிரேக்க நாட்டிலுண்டாக்கிய அமைதியைக் குலைக்கவும் முயன்றார்கள். இவ்விதமாக வலுச் சண்டைக் கிழுத்த உங்களை எதிர்க்க உடனே நான் படை யெடுத்துவந்தேன். போர்க்களங்களின் ஆரம்பத்தில் உன்னுடைய படைத் தலைவர்களையும் சாட்டராப்புகளையும் முறியடித்தேன். இப்பொழுது உங்களையும், உங்கள் கும்பலையும் வென்றிருக்கிறேன். தெய்வங்களுடைய கருணையால் உன் நாட்டை நான் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறேன். உன்னுடைய படையில் சேர்ந்து போரிட்டவர்களும் போர்க்களத்தில் உயிர் தப்பிப் பிழைத்துவர்களுமான பலர் இப்போது என்னிடத்தில் தஞ்சம் புகுந்து என்னுடைய பாதுகாப்பிலிருக்கிறார்கள். அவர்கள் என்னுடனிருப்பதில் மகிழ்ச்சியடைகிறார்கள். இனி என்னோடு சேர்ந்து போர் புரிவார்கள். நான் ஆசியாவிற்குத் தலைவனாக இருப்பதால் நீ என்னிடம் தாராளமாக வரலாம். தவறான முறையில் நான் உன்னை நடத்துவேனென்ற அச்சமிருக்குமானால் போதுமான உத்தரவாதம் பெற உன்னுடைய நண்பர்களை என்னிடம் அனுப்பு. உன்னுடைய தாய், மனைவி, குழந்தைகளை என்னிடம் வந்து கேட்டு, பெற்றுக் கொண்டுபோ. நீ விரும்புவது எதுவானாலும் நான்

கொடுப்பேன். எதிர்காலத்தில் எதை எனக்கனுப்பினுலும் அதை நான் ஆசியாவின் பேரரசன் என்ற முறையில் அனுப்பு. ஆனல் சமநிலையில் உள்ளவனுக்கு எழுதுவதைப்போல் எழுதவேண்டாம். உன்னுடைய தேவை எதுவானுலும் அதை நான் உன்னுடைய பேரரசன் என்ற முறையில் சொல்லு. அதற்கு மாருக நடந்தால் ஒரு குற்றவாளியை நடத்துவதைப்போல் நான் உன்னை நடத்து வேன். பேரரசைப் பற்றிப் போட்டியிட விரும்பினல், நான் உன்னேடு மறுபடியும் போரிடும் வரையில் காத்திரு. போர்க்களத்தி லிருந்து ஓடக்கூடாது. ஏனென்ருல் நீ எங்கிருந்தாலும் அங்கு உனக்கு எதிராகப் படையுடன் வருவேன்.'

**பாரசிக மன்னனேடு கிரேக்கர்களின் சதித் திட்டம்; சிப்பனேஸில் பாரசிகக் கடற்படை; அகிஸின் முயற்சி; இஸ்ஸஸ் செய்தி யால் கிரீஸில் மனச் சோர்வு.**

டாரியஸ் சிரியாவிற்குத் தன்னேடு கொண்டுவந்த உடைமைகள் அவன் அமானஸ் மலைக் கணவாய்களைக் கடந்தபோது, பாதுகாப்புக் காக டமாஸ்கஸுக்கு அனுப்பப்பட்டது. அலெக்ஸாந்தர், பார்மேனி யோவை அதைக் கைப்பற்றுவதற்கு அங்கே அனுப்பினன். அங்கே அவன் சில கிரேக்க அரசியல் தூதுவர்களைக் கண்டான் அவர்களில் ஒருவன் ஸ்பார்ட்டன். மற்றவன் அத்தீனியன். மற்ற இருவரும் தீபன் நாட்டினர்கள். அவர்கள் போர் மூள்வதற்குச் சிறிது நேரத்துக்கு முன்பு டாரியஸை அவனுடைய பாசறையில் சந்தித்துத்து விட்டுவந்தவர்கள். அலெக்ஸாந்தர் ஸ்பார்ட்டன் அரசியல் தூதுவனைக் கைது செய்து அவனை நிறுத்தி வைத்துக் கொண்டான். அத்தீனியனை ஒரு நண்பனுக நடத்தினன். இரு தீபன்களையும் ஒன்றும் செய்யாமல் விட்டுவிட்டான். அவன் தீப்ஸ் நகரை அழித்து விட்டதற்காக மனம்வருந்தினன். ஆகையால் அவன் தீபன்களின்மீது இரக்கம் கொண்டிருந்தான். இனி தீப்ஸ் நாட்டி னருக்கு நன்மை செய்வதைத் தவிர அவர்களுடைய குற்றங்களுக் காகத் தண்டிப்பதில்லை என உறுதி கொண்டிருந்தான். அங்கு வந்துள்ள அத்தீனியன் எப்பிகிராட்டிஸ் என்பவன். அவனுடைய தந்தையாகிய எப்பி கிராட்டிஸ் ஒரு சிறந்த படைத் தலைவன். அவன் மாசிடோனியர்களால் புகழ்ந்து பேசப்பட்டான். ஆகையால் அத்தீனிய எப்பிகிராட்டிஸின் மகன் எப்பி கிராட்டிஸைத் தன்னுடைய நண்பனுக மதித்தான். இந்தச் சம்பவம் கிரேக்கர்கள் தங்களுடைய தலைவன் என்று வெளிப்படையாக ஒப்புக்கொண்ட அலெக்ஸாந்த ருக்கு விரோதமாக அவர்கள் பாரசீக மன்னனேடு சேர்ந்து சதி செய்தார்களென்பதைக் காட்டுகிறது. டாரியஸ் அலெக்ஸாந்தரை எதிர்த்துப் போர் புரிய யூப்பரட்டஸ் நதியைக் கடந்து வருகிரு னென்ற செய்தியைக் கேட்ட அத்தீனியர்கள், அலெக்ஸாந்தரும்

அவனுடைய படையும் பாரசீகர்களால் நசுக்கப்பட வேண்டுமென்று தங்களுடைய தெய்வங்களை நோக்கி வேண்டிக்கொண்டார்கள். வேகமாகச் செல்லக்கூடிய 100 பாரசீகக் கப்பல்கள் சிப்பக்னுஸ் (Siphnos) துறைமுகததிற்கு வந்தன. ஸ்ப்பார்ட்டன் மன்னனாகிய அகிஸ் கடற்படைத் தலைவர்களைச் சந்தித்தான். மாசிடோனியாவிற்கெதிரான ஒரு கலகத்தைக் கிளப்பிவிட அவர்களுக்குப் பணமும் கப்பல்களும் வேண்டுமென்று தெரிவித்தான். ஏதென்ஸில் ஹைப்பரைடிஸ் (Hyperides) மாசிடோனியாவிற்கு எதிராக யுத்தம் தொடுக்க வேண்டுமென்று ஆரவாரம் செய்தான். ஆனால் டெமெஸ்த்தனிஸ் முன்யோசனையுடன் அலெக்ஸாண்டருக்குத் தோல்வியேற்படும் வரையில் ஒன்றுஞ் செய்யாமல் காத்திருக்க வேண்டுமென்று அறிவுறுத்தினன். அப்பொழுதான் கிரேக்கர்களின் தலைவனாகிய அலெக்ஸாந்தர், ஒரு சிறப்பான வெற்றியையடைந்து விட்டானென்ற செய்தி வந்தது. கிரேக்க நாடுகள் மனச் சோர்வுற்றன. பாரசிகக் கடற்படை ஆசியாக் கடற்கரையில் பாதுகாக்க வேண்டிய பகுதிகள் எவையோ அவற்றைப் பாதுகாக்க வேகமாக வந்துகொண்டிருந்தன. அகிஸ் (Agis) மன்னனுக்கு 30 தாலந்தும் பத்துக் கப்பல்களும் கிடைத்தன. அவன் அவறறைக் கொண்டு கிரீட் (Crete) தீவைப் பாதுகாக்க முன் வந்தான்.

## 7. சிரியாவை வெல்லுதல்

### அலெக்ஸாந்தரின் போர்முறை திட்டத்தின் திறமை

டாரியஸ் மீண்டும் ஒரு பெரும் படையைத் தயார்செய்து யுத்தகளத்திற்குத் வருவதற்கு முன்பு, இஸ்ஸஸ் போர்க்கள வாகை வீரனாகிய அலெக்ஸாந்தர், அவனைப் பின்தொடர்ந்து அவனுடைய முயற்சிகளைப் பாழ்பண்ணவேண்டும். டாரியஸ், அலெக்ஸாந்தராக இருந்திருப்பானாகில் அவனும் இந்த முறையையே பின்பற்றியிருப்பான். சிரியாவையும் எகிப்தையும் அவன் இன்னும் விடவில்லை. ஒரு பாரசீகக் கடற்படை ஆசியாவின் கடற்படைமீது ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தது. இதை அவன் வெல்லாமல் விட்டு விட்டு, பாரசீகப் பேரரசன் தலைநகரை நோக்கி முன்னேறி இருந்தால், அவன் ஒரு பெருந் தவறிழைத்திருப்பான். இஸ்ஸஸ் வெற்றி இறுதி வெற்றியன்று; இறுதி வெற்றிபெற அவன் பல தியாகங்களைச் செய்யவேண்டியிருந்தது. இஸ்ஸஸ் வெற்றி சிரியா, எகிப்து ஆகிய இரு நாடுகளிலும் படையுடன் செல்வதற்கு வழி திறந்துவிட்டது. ஈரானையும், மெசப்பொடோமியாவையும் கைப்பற்ற அவன் தன் ஆதிக்கத்தைச் சிறிய ஆசியாவிலும், சிரியாவிலும், எகிப்திலும் நிலைநாட்டியாக வேண்டியதாயிற்று. அலெக்

ஸாந்தர் சில போயினீசியப் பட்டினங்களைக் கைப்பற்றினன். அவர்களுடைய கடல் பலத்தை அழித்துவிடுவதற்கும், அவர்கள் பாரசீக மன்னனுக்கு உதவிபுரிவதைத் தடுப்பதற்கும், அது சாதகமாக இருந்தது. அலெக்ஸாந்தரைப்போல் அவ்வளவு வேகமாகப் பாய்ந்து தாக்கக்கூடிய படைத் தலைவர்கள் யாருமேயில்லை. பாரசீக மன்னனை தொடர்ந்து செல்லாமல் தப்பியோடும்படி விட்டு விட்டான். பகைவனுடைய வலுவுள்ள மாநிலங்களைத் தனக்குப் பின்னுல் விட்டுவிட்டு முன்னேறுவதனுல் ஏற்படும் அபாயத்தை அவன் அறிந்தவன். ஆகையால் அவன் தன்னுடைய திட்டப் படியே செய்யவேண்டிய வேலைகளைச் சரிவரச்செய்து கொண்டே முன்னேறினுன்.

### போயினிஸியாவின் நிலைமை

போயினிஸியர்கள் பாரசீகப் பேரரசர்களுக்குத் தேவையான போதெல்லாம் தங்களுடைய போர்க்கப்பல்களைத் கொடுத்து உதவிபுரிந்து வந்தார்கள். ஆகையால் அம் மன்னர்கள் போயினிஸியர்களுடைய விவகாரங்களில் அடிக்கடி தலையிடுவதில்லை. அவர்கள் தங்களுடைய வியாபாரத்தின்மீது கண்ணும் கருத்துமாக இருந்தார்கள். அவர்களுடைய நகரங்கள் கடற்கரை யோரமாகத் தொடர்ச்சியாக அமைந்திருந்தன. அவற்றை லெபனேன் (Lebanon) மலைகள் உள் நாட்டுத் தொடர்பிலிருந்து பிரித்துவைத்திருந்தது. அவர்களுடைய பட்டினங்கள் மிக்கசெல்வமும் வலிமையும் பெற்றவை. போயினிஸியர்கள் தங்களுக்குள் ஐக்கியப்பட்டு ஒரு கூட்டாட்சி அரசியலமைப்பை ஏற்படுத்திக்கொள்ளவும், பாரசீகப் பேரரசிலிருந்து விடுதலை பெறவும் வாய்ப்பிருந்தது. ஆனுல் அவர்களுக்குள் ஒற்றுமையில்லை. ஒரு நகரம் மற்றொரு நகரின்மீது பொருமை கொண்டிருந்தது. வியாபாரப் போட்டியின் காரணமாகப் போட்டியும், பகையும் அவர்களுக்குள் வளர்ந்திருந்தன. எனினும், திரு, சிதோன், அராடஸ் (Tyre, Sidon, Aradus) ஆகிய நகரங்கள் தங்களுக்குள் ஒரு கூட்டாட்சி முறையை ஏற்படுத்திக் கொண்டன. ஆனுல் வியாபாரத்தினுலேற்பட்ட பகை, போட்டிகளின் காரணமாக அம் முறையால் எவ்வித பலனும் ஏற்படவில்லை. ஒரு சமயம் சிதோன் நகரம் பாரசீகப் பேரரசை எதிர்த்துக் கலகம் விளைவித்தது. ஆரம்பத்தில் திரு நகரமும், ஆர்டாஸ் நகரும் அதற்கு உதவி புரிவதாக வாக்களித் திருந்தன. ஆனுல் சிதோன் அழிக்கப்படுவதால் அதனுடைய வியாபார சந்தைகளைத் தாங்கள் கைப்பற்றிக் கொள்ளலாமென்ற எண்ணத்தின் காரணமாக அவை ஒதுங்கி நின்றுவிட்டன. சிதோன் மட்டும் கலகத்திலீடுபட்டிருந்தது. பாரசீகமன்னர் ஒச்சஸ் கலகத்தை அடக்கியதோடு நின்றுவிடாமல் அப் பட்டினத்தையே

திக்கிரையாக்கிவிட்டான். அந்நகர வாசிகள் தங்கள் நகரத்தின் உரிமையை இழந்தார்கள். இந் நிகழ்ச்சி போயினிஸியர்கள் அரசியல் சுதந்திரத்தைவிட வியாபாரத்தை மேலாகக் கருதினர்களென்பதற்கு எடுத்துக் காட்டாக விளங்குகிறது.

போயினிஸியர்களைத் தேசப்பற்றில்லாமல் பிரித்துவைத்த அவர்களுக்குள்ளிருந்த பொருமையும் பகையும் அலெக்ஸாந்தருக்குச் சாதகமாக இருந்தது. ஏஜியான் கடலிலிருந்த அவர்களுடைய கப்பல்கள் ஒன்றுகச் சேர்ந்து, அவர்களுடைய நகரங்களைப் பாதுகாக்க முனைந்திருந்திருக்குமானல், அவர்களுடைய நகரங்களை அலெக்ஸாந்தர் எளிதில் வென்றிருக்க முடியாது. அவர்களுடைய நகரங்களில் ஒரு மனப்பட்ட எண்ணமோ அல்லது நம்பிக்கையோ இருக்கவில்லை. பைபிளஸ் (Byblus) நகரமும், ஆர்டஸ் நகரமும் அலெக்ஸாந்தருக்குப் பணிந்துவிட்டன. சிதறடிக்கப்பட்டிருந்த சீதோன் அலெக்ஸாந்தரின் கருணையினல் தன் முந்திய நிலைமையைப் பெறமுடியுமென நம்பிற்று. எனவே அது அலெக்ஸாந்தருக்குக் கப்பல்கள் கொடுத்து உதவிபுரிந்தது அலெக்ஸாந்தர் அந்நகரத்திற்கு அதனுடைய பழைய அரசியலமைப்பைத் திரும்ப ஏற்படுத்திக் கொள்ள அனுமதிகொடுத்தான். அதற்குச் சொந்தமான நிலங்களும் அதனிடம் திரும்ப ஒப்படைக்கப்பட்டன.

கல்லாலான சவப்பெட்டி. (அலெக்ஸாந்தரைத் தூற்றுதல்)

அலெக்ஸாந்தருக் கொப்பான ஓர் வீரனின் உடல் ஒரு சவக் குழியில் வைக்கப்பட்டது. சீதோன் நாட்டு அரசர்களை அடக்கம் செய்யும் கல்லறைத் தோட்டத்தில் அந்தக் சவக் குழி தோண்டப் பட்டது. அக் குழி கிரேக்கர்களுடைய கலைச் சிறப்பைக் காட்டுகிறது. இந்த நினைவுச் சின்னத்திற்கும் அலெக்ஸாந்தருக்கும் தொடர்பு படுத்திக் காட்டப்படுகிறது. சவக் குழியிலுள்ள அஸ்தி சீதோன் மன்னனுடைய அஸ்தியாயிராது. வர்ணம் தீட்டிய சித்திரங்கள் கல்லறையின் இருபக்கிலுமிருக்கின்றன. அவை இரண்டிலும் அலெக்ஸாந்தர் குதிரையின்மீது அமர்ந்திருப்பதைப்போல் வரையப் பட்டிருக்கிறது. ஒன்று அவன் இஸ்ஸஸில் அடைந்த வெற்றியைக் காட்டுகிறது. மத்திய வியூகத்தில் கைகலந்த போர் நடக்கிறது. அரசன் மத்திய வியூகத்தைத் தாக்குகிருன். ஒரு படைத் தலைவன் அங்குள்ளான். ஒருவேளை பார்மேனியோவாக இருக்கலாம். மற்ருெரு புறத்தில் சிங்கவேட்டைக் காட்சி உள்ளது. அதில் நிற்பவன் அரசனுக்குரிய உடையிலிராதில், நாமவனை அலெக்ஸாந்தர் என்று புரிந்து கொள்ளாமல், யாரோ கவலை தோய்ந்த முகவாட்டமுள்ள ஒரு மனிதனென்றே கருதக்கூடும்.

**தீரு, அலெக்ஸாந்தரைப் போருக்கழைத்தல், கி.மு. 333, டிசம்பர்.**

அலெக்ஸாந்தர் தெற்கில் தீருவை நோக்கி முன்னேறினன். தீரு நகர அரசியல் தூதுவர்கள் அவனை வழியில் கண்டார்கள். அவர்களுடைய நகர மக்கள் அவன் விருப்பப்படியே நடக்கச் சித்தமாக யிருப்பதாகத் தெரிவித்தனர். அவன், அங்குள்ள புகழ்பெற்ற கிராக்கிளிஸின் ஆலயத்தில் வழிபாடு செய்ய நகரத் துக்குவர விரும்புவதாகச் சொன்னன். மாசிடோனியன் தங்களுடைய நகருக்குள் பிரவேசிப்பதை அந் நகரவாசிகள் விரும்பவில்லை. பாரசீகத்தை அவன் இன்னும் தன்னுடைய ஆதிக்கத்தின் கீழ்க் கொண்டுவரவில்லை. அவர்கள் அதற்குள் அவனைத் தங்களுடைய நகருக்குள் வர அனுமதித்து மரியாதை செய்தால், இடர்ப்பாடு ஏற்படுமென்று நினைத்தார்கள். அவர்களுடைய நகரம் பாறை மயமான ஒரு தீவில் கட்டப்பட்டது. எண்பது கப்பல்கள் அதைப் பாதுகாத்து வந்தன. அவர்களுடைய கடற்படை இப்போது ஏஜியானில் இல்லை. எனவே, அவர்கள் அவனைப் பெருநிலப் பகுதியிலுள்ள பழைய தீரு நகரிலுள்ள ஆலயத்தில் வழிபாடு செய்ய அனுமதித்தார்கள். அவர்கள், அவனேடு பாரசீகர்களோ அல்லது மாசிடோனியர்களோ வருவதை அனுமதிக்க மறுத்துவிட்டார்கள்.

அலெக்ஸாந்தர் தன் படைத் தலைவர்களை ஒன்ருகக் கூட்டி அவர்களோடு தீருவைப்பற்றி ஓர் ஆலோசனை நடத்தினன். அப்போது அலெக்ஸாந்தர், பாரசீகர்களிடம் இன்னும் கடலாதிக்கமிருப்பதால் அதை முறியடிக்காமல் எகிப்துக்குள் காலடி எடுத்து வைப்பதோ அல்லது டாரியஸைப் பின்தொடர்ந்து பிடிப்பதோ சிறந்த தன்றென்று விளக்கினன். அவர்களுடைய கடலாதிக்கத்தை முறியடிக்கக் கடற்கரையிலுள்ள சிறந்த துறைமுகமாகிய தீருவைக் கைப்பற்றியே தீரவேண்டு மென்றும் கூறினன். பாரசீகக் கடற்படையிலேயே, எண்ணிக்கையில் மிகையானதும், பலத்தில் உயர்ந்ததுமான போயினீசியர்களின் கடற்படையை முறியடிக்க, தீரு வீழ்த்தப்படவேண்டுமென்றும், தீரு வீழ்ந்துவிட்டால் போயினீசியர்களின் கடற்படை தன் ஆதிக்கத்தின்கீழ் வந்துவிடுமென்றும் விளக்கினன். மேலும், தங்கயிடமில்லாத மாலுமிகளும் போர் வீரர்களும் தன்னிடம் சரணடைய வழியுண்டாகுமென்றும் கூறினன். அப்பொழுதுதான் சைப்பரஸையும் எகிப்தையும் தான் வெல்ல முடியும் என்றும், அதைச் செய்வதற்கு, தீருநகரம் ஒரு திறவுகோலைப் போலிருக்கிறதென்றும் அலெக்ஸாந்தர் கருதினன்.

**தீருநகர முற்றுகை, ஜனவரி-ஜூலை, கி.மு. 332.**

தீருவைப் பிடித்தாக வேண்டுமென்று சொல்வது எளிதாக இருந்தது. ஆனல் கடற்படையின் உதவியின்றி அதை எப்படிப்

பிடிப்பதென்பதுதான் தெரியவில்லை. அலெக்ஸாந்தருக்குப் பல போர் முனைகளில் ஏற்பட்ட கடின உழைப்புகளில் தீருநகரைக் கைப்பற்றியபோது ஏற்பட்ட உழைப்புதான் மிகவும் கடினமானது. நகரின் சுவர்கள் மிகவும் உயரமானவையாகவும், பலமுள்ளவையாகவு மிருந்தன. அத்தீவிற்கும் பெருநிலப் பகுதிக்குமிடையிலுள்ள தூரம் சுமார் அரை மைல் இருக்கும். பெருநிலப் பகுதிக்கு எதிராகவுள்ள அத்தீவில் இரு இயற்கைத் துறைமுகங்களிருந்தன. அவற்றில்




ஒன்று வடக்கு அல்லது சிதோன் துறைமுகமாகும். மற்றொன்று தெற்கு அல்லது எகிப்திய துறைமுகமாகும். கடற்படையின் உதவி யில்லாமல் தீருவைக் கைப்பற்றுவது எளிதன்று. அதைக் கைப்பற்ற முயலுபவர்கள் தீருநகரையும் பெருநிலப் பகுதியின் கடற்கரையையும் இணைக்க ஒரு பாலம் கட்டியாக வேண்டும். அலெக்ஸாந்தர் கால தாமதமின்றி ஒரு மேட்டுப் பாதையைச் செப்பனிடும் வேலையை ஆரம் பித்தான். பெருநிலப் பகுதியிலிருந்து சிறிது தூரம் வரையில் கடல் ஆழமற்றிருந்தது. அங்குப் பாலம் அமைப்பது அவனுக்குச் சுலபமாக

இருந்தது. தீருநகரமிருந்த தீவையணுகியபோது, கடல் மிகவும் ஆழமாக இருந்தது. அங்கே பாலம் அமைப்பது அதிகச் சிரமமாக இருந்தது. தீருபட்டினத்தார் பாலம் கட்டி முடிப்பதைத் தங்களாலியன்றவரையில் தடை செய்தார்கள். நகரத்தின் சுவர்களிலிருந்தும் படகுகளிலிருந்தும் பாலம் கட்டுபவர்மீது கல் மாரி பொழியப்பட்டன. அலெக்ஸாந்தர் வேலையாட்களுக்குப் பாதுகாப்பளிக்கவேண்டும். அதற்காக அவன் மரத்தினல் கோபுரங்களைச் செய்து அணையின்மீது நிறுத்தினன். அவற்றில் வில்லாளிகளை நிறுத்தி வைத்தான். வில்லாளிகளுக்குப் பாதுகாப்பளிக்க மரக்கோபுரங்களைத் தோல்களைக்கொண்டு மூடினன். தீருபட்டினத்தார் ஒரு கப்பலைக் கட்டினர்கள். அதில் விறகுக் கட்டைகளையும் எரிபொருள்களையும் நிரப்பினர்கள். பாலத்திற்கும், கோபுரங்களுக்கும் தீ வைக்க ஓர் நல்ல நாளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். அன்றைய காற்று அவர்களுக்குச் சாதகமாக இருந்தது. எரிபொருள்களைச் சுமந்துள்ள கப்பலை, பாலத்தின் சமீபத்தில் கொண்டுவந்து, அதற்குத் தீ வைத்தார்கள். கப்பல் சுவாலைவிட்டு எரிந்தது. காற்று பலமாக இருந்தபடியால் மரக் கோபுரங்களைத் தீ பற்றிக் கொண்டது. அதை அணைக்க மாசிடோனியர்கள் முயன்ருர்கள். படகிலிருப்பவர்கள் பாலங் கட்டுபவர்களையும், அவர்களைப் பாதுகாத்தவர்களையும் கற்களைக்கொண்டும், எறி ஈட்டிகளைக் கொண்டும் தாக்கினர்கள். தீருநகரவாசிகளில் பலர் படகுகளில் புறப்பட்டு வந்து பாலம் கட்டுவதற்காகக் கடலில் நிறுத்தி வைக்கப்பட்ட மரங்களைப் பெயர்த்தெறிந்தார்கள்.

தீருநகரவாசிகளின் துணிகரச் செயலைக்கண்டு அலெக்ஸாந்தர் மனஞ் சோர்ந்துவிடவில்லை. இப்போது முன்னிலுமதிக ஊக்கத்தோடு பாலத்தைக் கட்டுவதிலீடுபட்டான். ஏற்கெனவே கட்டியுள்ள அணையை அகலமாக்கினன். மரக் கோபுரங்களையும் அவற்றிலிருந்து பகைவரைத் தாக்கும் வீரர்களையும் முன்னிலும் அதிகமாக்கினன். இதற்கிடையில் சீதோன் நகரவாசிகளிடமுள்ள கப்பல்களைக் கொண்டு வந்தான். அப்போது பைபலஸ், அராடஸ் பட்டினங்களின் கப்பல்கள் அவனுக்குக் கிடைத்தன. ரோட்ஸ், சில கப்பல்களை அனுப்பியது. சைப்பரஸ் அலெக்சாந்தருக்கு உதவிசெய்ய வந்தது. இப்போது அவனிடம் 250 மூன்றடுக்குத் துடுப்புகளையுடைய கப்பல்களிருந்தன. இப்போது அலெக்ஸாந்தர் கடலில் தீருநகரத்தின் வணிகர்களைவிடப பலமுள்ளவனுனன். அலெக்ஸாந்தருக்கு இவ்வளவு உதவி கிடைத்த போதிலும் நகரைக் கைப்பற்றுவது எளிதாகத் தோன்றவில்லை.

### டாரியஸிடமிருந்து அரசியல் தூதுவன்

தீருநகரின்மீது படை எடுப்பதற்கான கப்பல்கள் சீதோனில் தயாராக இருந்தன. பொறியமைப்பாளர்கள் முற்றுகைக்காக நூதனப் பொறிகளைச் செய்து முடித்தார்கள். பின்னிலப் பாகத்திலிருந்து கடற்

கரைக்கு வரும் பாதையில் தீருநாட்டின் போர் வீரர்கள் தொல்லை கொடுத்து வந்தார்கள். அவர்கள் ஆன்டிலிபனோன் மலைகளில் ஒளிந்திருந்தார்கள். அவர்களை அவ்விடங்களிலிருந்து விரட்டியடிக்க அலெக்ஸாந்தர் ஒரு சிறிய படையுடன் புறப்பட்டான். ஒருவேளை இப்போதுதான், பேரரசனிடமிருந்து ஓர் அரசியல் தூதுவன் அலெக்ஸாந்தரிடம் வந்திருக்க வேண்டும். டாரியஸ் அத்தூதுவனிடம், அலெக்ஸாந்தர் அவனுடைய தாய், மனைவி, குழந்தைகளைத் திருப்பியனுப்ப வேண்டுமென்றும், அதற்கான பொருள் எவ்வளவு வேண்டுமானாலும் தருவதாகவும் சொல்லியனுப்பினான். மேலும் யூப்பரட்டஸ் நதிக்கு மேற்கிலுள்ள நாடுகளை அலெக்ஸாந்தருக்குக் கொடுத்து, தன் மகளையும் அவனுக்கு மணஞ்செய்வித்து, அவனுடன் ஒரு நேச உறவு ஒப்பந்தம் செய்து கொள்ள விரும்புவதாகவும் சொல்லியனுப்பியிருந்தான். இச்செய்தியை அலெக்ஸாந்தர் தன்னுடைய மந்திராலோசனை சபையில் கலந்து யோசித்தான். பார்மேனியோ, தான் அலெக்ஸாந்தராக இருந்திருந்தால் பேரரசனுடைய விருப்பத்திற்கு இணங்கிவிடக் கூடுமென்றான். அதற்கு அரசன் சொன்னதாவது, 'நான் பார்மேனியோவாக இருந்தால் அந்த நிபந்தனைக்குக் கட்டுபடுவேன்.' பாரசீகப் பேரரசை வென்றுவிடவேண்டும். ஓர் அடி நிலத்தைக்கூடப் பாக்கிவிடக் கூடாது. இதுவே அவனுடைய திட்டம். அவன் எவ்விதமான சமரசத்திற்கும் உடன்பட மாட்டான். பணமும் மாநிலங்களும் அவனுக்குத் தேவையில்லை. டாரியஸின் பேரரசை அலெக்ஸாந்தர் கைப்பற்றிவிட்டானென்றும், அது அவனுக்குச் சொந்தமென்றும் டாரியஸுக்குச் சொல்லும்படி அலெக்ஸாந்தர் அரசியல் தூதுவனுக்குச் சொன்னான். மேலும் டாரியஸ் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும், டாரியஸின் மகளை அலெக்ஸாந்தர் விரும்பினால் அவளை மணந்தே தீருவானென்பதையும் டாரியஸுக்குச் சொல்லும்படி சொன்னான். டாரியஸுக்குத் தேவையானவற்றை அவன் நேரில் வந்து கேட்டால் கொடுக்க விருப்பமுள்ளவனாக இருக்கிறானென்பதையும் டாரியஸுக்கு அவனறிவிக்குமாறு மறுமொழி கூறி அனுப்பினான்.

அலெக்ஸாந்தர் சீதோனிலிருந்த தன் கப்பற் படையை, தீருவிற்குக் கொண்டு வந்தான். கடற்படையின் வலது வியூகம் அலெக்ஸாந்தர் தலைமையிலும், இடது வியூகம் கிராட்டரெஸ் என்பவன் தலைமையிலும், சைப்பிரியோட்டே சாலமிஸ் (Cypriote Salomis) மன்னன் பின்டகோரஸ் (Pnytagoras) என்பவனின் தலைமையிலும், தீருபட்டினத்தை நோக்கி நெருங்கிக் கொண்டிருந்தன. அந்நகரவாசிகளுக்கு அவனுடைய கப்பற்படையைக் கண்டு ஒரு பக்கம் வியப்பும், மறு பக்கம் அச்சமும் ஏற்பட்டது. ஆரம்பத்தில் அலெக்ஸாந்தரோடு கடற் சண்டையிடுவதென்று தீர்மானித்திருந்தார்கள். இப்போது அவனிடம் பெரும் எண்ணிக்கையிலிருந்த கப்பல்களைக் கண்டு மலைத்துப்போய் விட்டார்கள். கடல் பரப்பில் நின்று கொண்

டிருந்த தங்களுடைய கப்பல்களை ஒன்று சேர்த்து, துறைமுகங்களுக்குக் கொண்டு வந்தார்கள். அங்கு அவற்றை வரிசையாக நிறுத்தித் துறைமுகத்தின் வாயில்களை அடைத்துவிட்டார்கள். அவன் எழுப்பிய மேட்டுப் பாதைக்கு வடக்கில் சைப்பீரிய கப்பல்களை நிறுத்தி, சீதோன் துறைமுகத்தை முற்றுகையிட்டான். போயினிசியர்களின் கப்பல்களை மேட்டுப் பாதையின் தெற்கில் நிறுத்தி எகிப்திய துறைமுகத்தை முற்றுகையிட்டான். இந்தத் துறைமுகத்துக்கு எதிரில் பெருநிலப் பகுதியில் அலெக்ஸாந்தருடைய கூடாரமிருந்தது.

இப்பொழுது மேட்டுப்பாதையைத் தீருவிற்கருகே கொண்டு போய் நிறுத்தினர்கள். திறமை மிக்க போயினிஸியப் பொறியமைப்பாளர்களும், கோட்டையைப் பிடிப்பதற்கான நூதன இயந்திரங்களைச்செய்துமுடித்தார்கள். கிழக்குத் திசையிலுள்ள சுவர் முதலில் தாக்கப்படவேண்டியது. அதற்கான ஆயத்தங்களெல்லாம் தயாராகி விட்டன. மேட்டுப் பாதையில் சில யந்திரங்கள் நிறுத்தப்பட்டன. மற்றவை படகுகளில் அடுக்கப்பட்டன. தாக்குதல் ஆரம்பமாயிற்று. சுவரோ அசைந்து கொடுக்கவில்லை. அச் சுவர் 150 அடி உயரமும், மிகுந்த அகலமும் உடையது. நகருக்குள்ளிருந்தவர்கள் கோட்டையின் மதிற்சுவர்களின்மீது கல்லெறியும் இயந்திரங்களை நிறுத்தி வைத்திருந்தார்கள். அவ்வியந்திரங்கள் கப்பல்களை நோக்கிப் பெரும் கற்களை வீசின. ஆகையால் கோட்டைச் சுவர்களை இடிக்கும் யந்திரங்களைச் சுமந்து நின்ற கப்பல்கள் கோட்டையை நெருங்கமுடியவில்லை. தண்ணீருக்கடியிலிருந்த பெருங் கற்கள், கப்பல்கள் கோட்டையை நெருங்கமுடியாமல் தடுத்தன. எனவே, அப் பெருங் கற்களை அப்புறப்படுத்த அலெக்ஸாந்தர் திட்டமிட்டான். பாரந் தூக்கும் உருளைகளைக்கொண்ட படகுகளை அவன் அங்கே கொண்டு வந்து நிறுத்தினன். அவற்றைக்கொண்டு நீருக்குள்ளிருக்கும் கற்களை அப்புறப்படுத்த முயன்றான். வேலை மிகவும் மெதுவாக நடந்தது. அவ் வேலை நடைபெருதபடி தீருநகரவாசிகள் தடுத்து வந்தனர். மூடப்பட்ட படகுகள் துறைமுகத்திலிருந்து திடீரென்று தோன்றி, படகுகளின் நங்கூரக் கயிறுகளை அறுத்தெறிந்துவிட்டுப் போயின. படகுகள் நிலைகொண்டு நிற்காவண்ணம் அலைகள் அவற்றை இழுத்துச்சென்றன. அதைச் சமாளிக்க அலெக்ஸாந்தர் படகுகளைக் கயிறுகளைக்கொண்டு பிணைத்து வரிசையாக நிறுத்தி வைத்திருந்தான். தீருநகரிலுள்ள திறமைமிக்க நீர்மூழ்கிகள் தண்ணீருக்குள் மூழ்கிவந்து வடங்களை அறுத்தெறிந்தார்கள். அதைக்கண்ட அலெக்ஸாந்தர் வடங்களுக்குப் பதிலாக, சங்கிலிகளைக் கொண்டு நங்கூரங்களைப் பிணைத்தான். இப்போது அவனுடைய படகுகள் நீரிலுள்ள பெருங் கற்களை அப்புறப்படுத்தின. கப்பல்கள் இப்போது கோட்டைச் சுவர்களை அணுகின.

தீருநகரவாசிகள் கடைசியாக ஒரு சூழ்ச்சி செய்தார்கள். வடக்குத் துறைமுகத்திலுள்ள கப்பல்களின் பாய்களை ஒன்ருகச் சேர்த்து ஓர் பெரிய திரையைச் செய்தார்கள். அத்திரை துறைமுகத்தின் வாயிலை மூடிவிட்டது. அலெக்ஸாந்தரின் மாலுமிகள் துறைமுகத்தில் நடப்பவற்றை அறிந்து கொள்ளமுடியாது. அவர்கள் ஏழு மூன்றடுக்குத் துடுப்புக் கப்பல்களிலும், மூன்று ஐந் தடுக்குத் துடுப்புக் கப்பல்களிலும், மூன்று நான்கடுக்குத் துடுப்புக் கப்பல்களிலும் வீரர்களை ஏற்றினுர்கள். நடுப்பகல் வரையில் அவர்கள் துறைமுகத்திலிருந்தார்கள். எப்போதும் நடுப்பகலில் தான் அலெக்ஸாந்தர் தன்னுடைய கூடாரத்திற்குச் செல்வான். மாலுமிகள் கரையிலிறங்குவார்கள். அப்பொழுது தீருநாட்டின் மாலுமிகள் சலனமில்லாமல் துறைமுகத்தைவிட்டு வெளியேவந்து சைப்ரஸ் நாட்டின் கப்பல்களைத் தாக்கிச் சில கப்பல்களை மூழ்கடித் தார்கள்; சில கப்பல்களை விரட்டிப்பிடித்து மூழ்கடிக்க ஆரம்பித் தார்கள்; அவை சென்ற வேகத்தில் கரை தட்டின. அன்று அலெக் ஸாந்தர் நீண்ட நேரம் தன் கூடாரத்தில் தங்கவில்லை. அவன் கூடாரத்தைவிட்டு வெளியேறினுன். போயினீசிய கப்பல்கள் மேட்டுப்பாதையின் தென்புறத்தில் எகிப்தியத் துறைமுகத்தைக் காவல் புரிந்துகொண்டிருந்தன. அலெக்ஸாந்தர் அங்குவந்து சேர்ந்தான். அப்போதுதான் வலது பக்கத்திலிருந்த சைப்பீரியஸ் கப்பல்களுக்கு நேர்ந்த விபத்து அவனுக்குத் தெரிந்தது. தீரு நாட் டின் வீரமுள்ள மாலுமிகள் அப்போது கரை தட்டிய கப்பல்களை நாசஞ்செய்து கொண்டிருந்தார்கள். அலெக்ஸாந்தர் எகிப்தியத் துறைமுகத்திலிருந்து தீரு நாட்டின் கப்பல்கள் வெளி வராவண்ணம் காவல் புரியும்படி மாலுமிகளுக்குக் கட்டளையிட்டான். ஐந்து ஐந்தடுக்குப் படகுகளையும், வேகமாகச் செல்லும் சில கப்பல்களையும் எடுத்துக்கொண்டு, தீவைச் சுற்றிவந்தான். நகருக்குள் இருந்த வர்கள் அலெக்ஸாந்தரையும் அவனுடைய நடவடிக்கைகளையும் பார்த்துக்கொண்டிருந்தார்கள். கரை தட்டிய சைப்ரஸ் கப்பல்களை அழித்துக்கொண்டிருக்கிற மாலுமிகளை ஓடிவந்துவிடுமாறு சைகை காட்டினர்; கூச்சலிட்டனர். மாலுமிகள் அதைக் கவனிக்கவில்லை. அலெக்ஸாந்தர் அவர்களை நெருங்கி வந்தபோதுதான் அவர்கள் அவனைப் பார்த்தார்கள். சிலர் மட்டும் தப்பமுடிந்தது. அவர்க ளுடைய படகுகள் துறைமுகம் போய்ச்சேருவதற்குமுன் பழுதாக்கப் பட்டன. அன்று முதல் தீருநகரின் கப்பல்கள் எவ்விதச் செயலிலும் ஈடுபடாமல் துறைமுகத்தில் அடைந்துகிடந்தன.

போராட்டம் இப்போது தீருநகரின் பொறியமைப்பாளர் களுக்கும், அலெக்ஸாந்தருடைய பொறியமைப்பாளுக்குமிடையே ஆரம்பித்தது. கிரேக்கர்கள் புதிதாகக் கட்டிய மேட்டுப் பாதைக்கு எதிராகவுள்ள சுவரைப் பலவித யந்திரங்களைக்கொண்டு, பல்வேறு

முறைகளில் தாக்கினர். அந்தப் பக்கத்திலுள்ள சுவர் அத்தனை தாக்குதல்களையும் சமாளித்து நின்றது. கிழக்குச் சுவரின் வலது பக்கத்தில் தண்ணீருக்கடியிலிருந்த பெருங் கற்கள் அப்புறப்படுத்தப் பட்டன. ஆனால் சுவர் அசைந்து கொடுக்கவில்லை. முற்றுகை யிட்டவர்கள் தங்களுடைய சக்திகளையெல்லாம் ஒன்றுதிரட்டி எகிப்தியத் துறைமுகத்தின் தென் பகுதியைத் தாக்கினார்கள். இங்கே சுவரின் ஒரு துண்டு இடிந்து விழுந்தது. திறப்பு ஏற்பட்ட அந்த இடத்தில் போர் மூண்டது. ஆனால் தீருநகரவாசிகள் தங்களைத் தாக்குபவர்களைப் பின்வாங்கும்படி செய்தார்கள். அலெக்ஸாந்தர் தன்னுடைய போர் வீரர்கள் பின்வாங்கிய போதிலும் ஊக்கமடைந் தான். கோட்டை எவ்விடத்தில் பலவீனமாக இருக்கிறதென்பதை அறிந்துகொண்டான். இரண்டு நாளைக்குப்பின் ஒரு பெருந் தாக்குதலை நடத்த ஆயத்தங்கள் செய்தான்.

### தீருநகரத்தை வெல்லுதல், கி.மு, 332.

சுவர்களைத் தகர்க்கும் யந்திரங்களைச் சுமந்த கப்பல்கள் தெற்குச் சுவரை நோக்கி நிறுத்தப்பட்டன. மூன்றடுக்குத் துடுப்புகளை யுடைய இரு கப்பல்களில் நிறைபளுவுள்ள ஆயுதமேந்திய போர் வீரர்களிருந்தார்கள். சுவரின் ஒரு பாகம் இடிந்துவிழுந்தவுடன் கப்பல்களிலுள்ள போர்வீரர்கள் கோட்டைக்குள் புகுந்துவிட வேண்டுமென்பது அவர்களுடைய நோக்கம். இரு துறைமுகங் களுக்கெதிரில் போர்க்கப்பல்கள் நிறுத்தப்பட்டன. சாதகமான சந்தர்ப்பமேற்படும்போது போர்க் கப்பல்கள் துறைமுகத்தில் புகுந்துவிடவேண்டும். மற்றக் கப்பல்களில் பளுவற்ற ஆயுதங்கள் தாங்கிய போர்வீரர்களும் சுவரை உடைத்தெறியும் யந்திரங்களு மிருந்தன. இவை தீவைச்சுற்றி நிறுத்திவைக்கப்பட்டன. கோட் டைக்குள்ளிருந்து தாக்குதலைச் சமாளிப்பவர்களின் கவனத்தைப் பல திசைகளுக்குமிழுக்கும்படி இவ்விதமான ஏற்பாடு செய்யப்பட்டது. தென் பக்கத்துச் சுவரில் ஒரு பெரிய உடைப்பு ஏற்பட்டது. இரு கப்பல்களிலுமுள்ள பளுவுள்ள ஆயுதங்கள் தாங்கிய போர் வீரர்கள் அங்கு விரைந்து சென்றார்கள். பாலங்களைக் கீழே இறக்கி, போர் வீரர்கள் கப்பல்களிலிருந்து கரையை யடைந்தார்கள். வீரர்கள் அட்மேட்டஸ் தலைமையில் சுவர்களின் மீதேறினார்கள். அட்மேட் டஸின் மீது ஒரு வேல் பாய்ந்தது. அவன் அப்புறப்படுத்தப் பட்டான். அவனிருந்த இடத்தில் அலெக்ஸாந்தர் நின்றான். அலெக் ஸாந்தர் உடைப்பேற்பட்ட இடத்தில் நின்று போராடிய நகரவாசி களைப் பின்வாங்கி ஓடும்படி செய்தான். தெற்குச் சுவரிலிருந்த கோபுரங்களை ஒவ்வொன்றாக அலெக்ஸாந்தர் கைப்பற்றினான். மாசிடோனியர்கள் தென் சுவர் முழுவதையும் கைப்பற்றினார்கள். அலெக்ஸாந்தர் வாயில்கள் வழியே அரசனுடைய அரண்மனையை

நோக்கிச்சென்ருன். அரசனுடைய அரண்மனையே தாக்குவதற்குத் தகுதியானயிடமென்று அலெக்ஸாந்தர் நினைத்தான். ஆனல் கிரேக்கப் போர் வீரர்கள் வேறு திசைகளின் மூலமாக நகருக்குள் புகுந்துவிட்டார்கள். சீதோன் துறைமுகத்துக்குள் சைப்பீரியர்களும் எகிப்திய துறைமுகத்தில் போயினீஸியர்களும் புகுந்துவிட்டார்கள். இரு துறைமுகங்களிலுமிருந்த தீரு நாட்டின் கப்பல்கள் முடமாக்கப்பட்டன. அங்கே நிறுத்திவைக்கப்பட்ட போர் வீரர்கள் (நகருக்குள்) கைகலந்து போரிட்டுக்கொண்டே வந்துவிட்டார்கள். கடைசிச் சண்டை எஜேனேரியான் (Agenorion) என்ற விடத்தில் நடந்தது. எட்டாயிரம் பேர் கொல்லப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. உயிரோடிருந்த சுமார் 30,000 பேர்களை அடிமைகளாக விற்றுவிட்டார்கள். அந் நாட்டு மன்னனேடு, அஸிமில்க்கோவிற்கும் (Azemilco), மற்றும் சில உயர் குடிமக்களுக்கும் மட்டும் விடுதலை கிடைத்தது.

### அலெக்ஸாந்தர் தெற்கு நோக்கி முன்னேறுதல்

நீண்ட நாள் முற்றுகையிட்டு, இரத்த வியர்வை சிந்தி அலெக்ஸாந்தர் தீருநகரைக் கைப்பற்றினன். ஆனல் அவன் பட்ட பாட்டிற்குப் பலனில்லாமல் போய்விடவில்லை. தீருவில் அடைந்த வெற்றி, சிரியாவையும், எகிப்தையும் மத்திய தரைக்கடலின் கிழக்குப் பாகத்தில் கடலாதிக்கத்தையும் கொண்டுவந்து கொடுத்தது. தீரு நகரிலுள்ள ஹிராக்கிளிஸ் ஆலயத்தில் வழிபாடு செய்ய தீரு நாட்டினர் அலெக்ஸாந்தருக்கு முன்பு அனுமதிகொடுக்க மறுத்துவிட்டார்கள். இப்போது அவன் அவ்வாலயத்தில் வழிபாடு செய்தான். பலவித பலிகளையிட்டான். ஊர்வலத்தோடும் பந்தய விளையாட்டுகள் போட்டிப் பந்தயங்களோடும் வழிபாடு ஆலயத்தின் விதிப்படி நடைபெற்றது. இஸ்ஸஸ் வெற்றிக்குப்பின், பாலஸ்தீனும் (Palestine) சிரியாவும் அவனிடம் சரணடையவில்லை. தீருவில் அவன் சூடிய வாகையின் காரணமாக பாலஸ்தீனும், சிரியாவும் அவனிடம் சரணடைந்தன. எகிப்தை நோக்கித் தென் திசையில் அவன் பிரயாணம் செய்தபோது பிலிஸ்த்தியர்களின் (Philistines) வலுவுள்ள நகரமாகிய காஸா வரையில், வழியில் எவ்விதமான எதிர்ப்பும் ஏற்படவில்லை.

### காஸா முற்றுகை, அக்டோபர் - நவம்பர் கி.மு. 332.

காஸா நகரம் ஓர் உயர்ந்த குன்றின்மேல் கட்டப்பட்டிருந்தது. நகரத்தைச் சுற்றிப் பலமுள்ள ஒரு சுவர் எழுப்பப்பட்டிருந்தது. காஸா நகருக்கும், கடலுக்குமிடையே இரண்டு மைல் தூரத்திற்கு மணற்பாங்கான பூமி இருந்தது. இந்த நகரைக் கைப்பற்றப் போர்க் கப்பல்கள் பயன்படா. டாரியஸ் மன்னன் இந்நகரைத் தன்னுடைய

நம்பிக்கைக்குரிய பாட்டிஸ் (Batis) என்ற பேடியின் பொறுப்பில் விட்டிருந்தான். நீண்டநாள் முற்றுகையைச் சமாளிக்கத் தேவையான உணவுப் பண்டங்களும் வசதியும் அவனுக்கிருந்தன. பாட்டிஸ் நகரத்தின் சுவர்கள் கோட்டை கொத்தளங்கள் முதலியவற்றின் பலத்தில் நம்பிக்கை வைத்திருந்தான். ஆகையால் அவன் அதை அலெக்ஸாந்தருக்கு ஒப்படைக்க மறுத்துவிட்டான். அலெக்ஸாந்தரின் பொறியமைப்பாளர் அந்நகரத்தை உற்றுக் கவனித்தார்கள். அவர்கள் மலைமீது கட்டப்பட்டு, உயரமான சுவர்களையுடைய அந்நகரை வெல்லவே முடியாதென்ற ஒரு முடிவிற்கு வந்துவிட்டார்கள். அலெக்ஸாந்தருக்கு அதை விட்டுச் செல்ல மனமில்லை. தீருவில் வெற்றி கண்டவன், இந்த கோட்டைக்கெதிரே தன் முதுகைக் காட்டிச் செல்ல முடியாது. டமாஸ்கஸிலிருந்து எகிப்து வரையிலுள்ள சாலையில் அமைந்த பலமுள்ள இக் கோட்டையை அவன் கைப்பற்றியாக வேண்டுமே தவிரப் பகைவனிடம் விட்டுச்செல்லக்கூடாது. பட்டணத்தைச் சுற்றிப் பலமுள்ள ஒரு மதிற்சுவர் எழுப்பக் கட்டளையிட்டான். அந்த மதிற் சுவர் கோட்டையின் மதிற் சுவருக்குச் சம உயரமுள்ளதாகவும் அவற்றின்மீது கோட்டையின் சுவர்களை இடித்துத் தள்ளும் யந்திரங்களை நிறுத்தும் வகையிலுமிருக்க வேண்டுமெனக் கட்டளையிட்டான். கோட்டையின் தெற்குச் சுவர் தாக்குவதற்குத் தகுந்த இடமென அவனுக்குத் தோன்றியது. அங்கே மதிற் சுவர் எழுப்பும் வேலை துரிதமாக நடந்தது. இயந்திரங்களை ஒழுங்கான முறையில் சுவர்களில் அமைத்து வைத்தபோது, அலெக்ஸாந்தர் தேவதைக்குப் பலி செலுத்தினான். அப்பொழுது ஒரு கழுகு பலி பீடத்திற்கு மேலே வட்டமிட்டுப் பறந்து கொண்டிருந்தது. அக்கழுகு ஒரு கல்லை மாலை சூடிய அவனுடைய தலையில் போட்டது. குறிசொல்பவன் அங்கு வந்து, கல் தலையில் விழுந்ததற்கு விளக்கம் கூறினான். ‘ஓ அரசனே, நீ இந்தப் பட்டினத்தை வென்று விடுவாய், ஆனால் இன்று முதல் உன்னுடைய பாதுகாப்பான நிலையைப்பற்றி விழிப்பாயிரு’ என்று கூறி முடித்தான். அலெக்ஸாந்தர் சிறிது நேரம் எச்சரிக்கையாகவேயிருந்தான். ஆனால் கோட்டையினுள்ளிருப்பவர்கள் கோட்டையின் வாயில்களுக்கருகில் ஒன்று சேர்ந்து, மதிற் சுவர்களின் மீதிருந்து யந்திரங்களைக் கொண்டு தாக்குபவர்களை எதிர்த்தார்கள். அவர்களை நெருக்கித் தள்ளினார்கள். அதை அலெக்ஸாந்தரால் பார்த்துக் கொண்டிருக்க முடியவில்லை. அவன் தன்னுடைய போர் வீரர்களுக்கு உதவி செய்யப் பாய்ந்தோடினான். பகைவனுடைய வில்லிலிருந்து விடுபட்ட ஓர் அம்பு அவனுடைய தோளில் பாய்ந்து காயப்படுத்திற்று. அவனிடம் கூறப்பட்ட புட்குறி பாதி நிறைவேறிற்று. மறு பாதி பின்னால் நிறைவேற்றப்படும். தீருநகரைக் கைப்பற்றப் பயன்படுத்தப்பட்ட இயந்திரங்கள் கப்பல்கள் மூலமாகக் கொண்டு வரப்பட்டன. அலெக்ஸாந்தரின் மதிற் சுவர் மேலும் விரிவாக்கப்பட்டது. உயரமாகவும்

எழுப்பப்பட்டது. பகைவர்களின் சுவர்களில் சுரங்கங்கள் ஏற்படுத்தப் பட்டன. பல இடங்களில் சுரங்கங்களாலும், யந்திரங்களாலும் பகைவனுடைய சுவர் பழுதடைந்தது. நான்காவது தாக்குதலிலேயே அலெக்ஸாந்தருடைய போர் வீரர்கள் சுவர்களில் ஏற்பட்ட உடைப்பு களின் வழியே சுவரைக் கடந்து நகருக்குள் புக முடிந்தது. உயிர்ச் சேதம் தீருநகரில் ஏற்பட்டதைவிட, இங்குப் பெருமளவிலிருந்தது. பெண்களும் குழந்தைகளும் அடிமைகளாக விற்கப்பட்டார்கள். அந்தக் கோட்டையை மாசிடோனியக் கோட்டையாக மாற்றி விட்டனர்.

## 8. எகிப்தை வெல்லுதல்

**எகிப்து, மெம்பிஸில் அலெக்ஸாந்தர், நவம்பர், கி.மு. 332.**

எகிப்து இப்போது பாரசீகப் பேரரசிலிருந்து பிரிக்கப்பட்டு விட்டது. ஒதுக்கப்பட்ட அந்நாட்டின் கதவு திறந்திருந்தது. தடையின்றி நாட்டில் நுழைய வேண்டிய வேலை மட்டும் அலெக்ஸாந்தருக் கிருந்தது. அலெக்ஸாந்தரை எதிர்க்குமளவிற்கு அவர்களிடம் நாட்டுப் பற்றைக் காண்பதரிதாகயிருந்தது. அப்பொழுது எகிப்திய பாரசீக ஸாட்டராப்பாக, மாஸேஸெஸ் என்பவன் இருந்தான். மாஸேஸெஸ் (Mazaces) போயினிசியாவும், சிரியாவும் அலெக்ஸாந்தரின் ஆதிக்கத் தின் கீழ்க் கொண்டு வரப்பட்டதையும், மாசிடோனியக் கப்பல் பெலு சியம்மை (Pelusium) நோக்கி வந்துகொண்டிருப்பதையுங் கண்டான். அவனுக்கு உதவிபுரியப் படையொன்றும் அனுப்பப்படவில்லை. ஆகையால் அலெக்ஸாந்தருக்கு அவன் பணிந்துவிட்டான். அவனுடைய கண்களில் கருணையைத் தேடினன். நைல் நதியின் கிளை நதியாகிய பெலுஸியாக் வழியே தன் கப்பல்களை அனுப்பி, தன்னை மெம்பிஸில் (Memphis) சந்திக்கும்படி கட்டளையிட்டு, அலெக்ஸாந்தர் இவ்விடத் திற்கு ஹெலியோபோலிஸ் மூலமாகப் பயணஞ் செய்தான். பார்வோனுடைய தலைநகரில் அவனை எகிப்திய மன்னனென்று பிர கடனம் செய்தார்கள். அவன் அப்பிஸ் (Apis) தேவதைக்கும் மற்று முள்ள ஊர்க்காவல் தெய்வங்களுக்கும் பலியிட்டான். இவ்விதமாக அவன் அங்குள்ள மக்களின் நன்மதிப்பைப் பெற்ருன். அலெக்ஸாந்த ரின் சமயப்பற்றைப் பாரசீக மன்னன் ஒச்சஸ் (Ochus) என்பவனுடைய சமய வெறியோடு ஒப்பிட்டார்கள். அவன் எகிப்தியர்களுக்குப் புனித மான காளை மாட்டை வெட்டிப் பலியிட்டவன். இந்தப் புதிய அரசன் அவர்களுடைய சமயத்தையும் அவர்களுடைய பழக்க வழக்கங்களையும் மதித்து நடப்பதாக வாக்களித்தான். கிரேக்கர்களுடைய கலை எகிப் தியர்களுக்குக் கற்றுக் கொடுக்கப்படுமென்றும் உறுதி கூறினன். அவன் மெம்பிஸ் நகரில் பலவித போட்டி, பந்தயங்களையும் கவிதைப்

போட்டிகளையும் சித்திரக்கலை சிற்பக்கலைப் போட்டிகளையும் நடத்திப் பரிசு வழங்கினான். கிரேக்க நாடுகளிலிருந்தும் பலர் வந்து பலவித போட்டிகளில் கலந்துகொண்டார்கள்.

### அலெக்ஸந்திரியாவின் உதயம், கி.மு. 331, ஜனவரி.

மெம்பிஸிலிருந்து அவன் நைல் நதியில் வடக்கு நோக்கிப் பிரயாணஞ் செய்து, காநோப்பஸ் (Canopus) என்றவிடத்திற்கு வந்து சேர்ந்தான். அவன் அங்கே தன் வாழ்க்கையில் சாதித்திராத ஒரு காரியத்தைச் செய்தான். அதொன்று மட்டும் இந்நாள் வரையில் நிலைநின்று அவனுடைய பெயரைச் சொல்லிக் கொண்டிருக்கிறது. மேரியோட்டிஸ் (Mareotis) ஏரிக்கும் கடலுக்குமிடையில் ராகோட்டிஸுக்குக் கிழக்கில் (Rhacotis) அவன் ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்து, அங்கு ஓர் நகரத்தைக் கட்டத் திட்டமிட்டான். அவ்விடம் பேரோஸ் என்ற தீவிற்கு எதிரே இருந்தது. கவிஞன் ஹோமர், பேரோஸ் தீவைப்பற்றித் தன் இதிகாஸத்தில் வானளாவ உயர்த்திப் புகழ்ந்துள்ளார். அத்தீவில்தான் ஆரம்பத்தில் கலங்கரை விளக்கு ஏற்படுத்தப்பட்டிருந்தது. அது உலக அதிசயங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது. புதிய நகரம் அமைய வேண்டிய இடத்தை அலெக்ஸாந்தர் மன்னன் குறித்துக் காண்பித்தான். சந்தை இருக்கவேண்டிய இடம், இஸிஸ் (Isis) தெய்வத்தின் ஆலயமும் மற்ற ஆலயங்களும் இருக்கவேண்டிய இடங்கள் முதலியனவும் அவனால் தேர்ந்தெடுக்கப்பட்டன. நகர்ச் சுவரின் சுற்றளவு அவனால் தீர்மானிக்கப்பட்டது. பெருநிலப் பாகத்தைத் தீவோடு ஓர் மேட்டுப் பாதையின் மூலம் இணைத்தான். அப்பாதையின் நீளம் சுமார் ஒரு மைல் எனக் கருதப்படுகிறது. அம் மேட்டுப் பாதை இரு துறைமுகங்கள் அமைவதற்கு வழியுண்டாக்கியது. அலெக்ஸாந்திரியா 2000 ஆண்டுக் காலமாகத் துறைமுகப்பட்டினமாக விளங்குகிறது. உலகில் புகழ்பெற்ற பட்டினங்களில் அது ஒன்றாக விளங்கவேண்டுமென்ற நோக்கத்தோடு அலெக்ஸாந்தர் அவ்விடத்தைத் தேர்ந்தெடுத்தான். அப்பட்டினம் உலகச் சந்தையாக விளங்க வேண்டுமென்பதே அவன் நோக்கம். எகிப்தியத் தலைநகரமாகிய மெம்பிஸிஸைவிட அது அழகாக இருக்கவேண்டுமென்பது அவனுடைய நோக்கமன்று. மேற்கு ஆசியாவிலும், கிழக்கு மத்திய தரைக்கடலிலும் தீரு (Tyre) நகரத்தைவிட வணிகத் துறையில் சிறந்து விளங்க வேண்டுமென்பதே அவனுடைய நோக்கம். வியாபார மார்க்கத்தை போயினிஸிய கடற்கரையிலிருந்து விலக்கி, எகிப்தியக் கடற்கரை வழியே செல்லும்படி செய்யவேண்டுமென்பது அவன் நோக்கமாகும். உலக வியாபாரத்தைக் கிரேக்கர்கள் கைப்பற்ற வேண்டுமென்பது அவன் நோக்கமாக இருந்தது. ஆனால் போயினிஸியர்கள் கிரேக்கர்களைவிடச் சிறந்த வியாபாரிகள். அழிந்துபோன நகரங்களாகிய தீரு, சீதோன் மண்ணிலிருந்து ஓர் பட்டினம் எழும்பினால், அது போயி

னிசியர்களுடையதாக இருக்குமே தவிர கிரேக்கர்களுடையதாயிராது. தன் நாட்டு மக்களின் வணிக நலனைக் கருதியே அலெக்ஸாந்தர் இந்தப் புதிய நகரை நிர்மாணித்தான்.

**அமன்-ரா; ஜெயஸ் அம்மோன் ஆலயத்திற்கு அலெக்ஸாந்தர் செல்லுதல், கி.மு. 331.**

எகிப்திய மன்னர்கள் தங்களை பாராக்ஸ் (Pharaohs) என்பதின் மூலம், அம்மோனுடைய குமாரர்களாகக் கருதினார்கள். அலெக்ஸாந்தரும் தன்னை 'பாராக்ஸ்'ஸின் வாரிசென்று சொல்லிக்கொண்டான். எகிப்தியக் குருமார்களுடைய அங்கீகாரமில்லாமல் இந்தப் புதிய பட்டத்தை அலெக்ஸாந்தர் வகிக்கமுடியாது. அம்மோனுடைய ஆலயம் சிவா (Siwah) என்ற பாலைவனச் சோலையிலுள்ளது. அம்மோனை அங்குள்ள ஆலயத்தில் கண்டு வழிபட, அலெக்ஸாந்தர் அப் பாலைவனச் சோலையை நோக்கிப் பயணமானான். தன்னிடம் ஏதோ ஒரு தெய்வத்தன்மை இருப்பதாகவும், தான் ஒரு சாதாரண மனிதனல்லன் என்றும் தன்னைப்பற்றி அலெக்ஸாந்தருக்கு ஓர் எண்ணமிருந்தது. தன்னை அகில்லஸுக்குச் (Achilles) சமமானவனாக எண்ணிக்கொண்டான். பாரேட்டோனியோன் (Paraetonion) கடற்கரை வழியாக அவன் சென்றுகொண்டிருந்தான். வழியில் சிரேனே (Cyrene) நாட்டின் அரசியல் தூதுவர்களைக் கண்டான். அவன் ஆட்சியின்கீழ் அவர்களுடைய நாட்டு மக்கள் வாழ விரும்புகிறார்களென்று சொன்னார்கள். இவ்விதமாக அவனுடைய ஆதிக்கத்தின்கீழ் செரேனே கொண்டுவரப்பட்டது. அவனுடைய பேரரசின் மேற்கெல்லை கார்த்தேஜி நாட்டின் எல்லை வரையில் பரவிற்று. அங்கிருந்து அவன் பாலைவனத்திலுள்ள சீயஸ் அம்மோன் ஆலயத்தை நோக்கிச்சென்றான். பிரயாணிக்கு வழிகாட்டிச் செல்லக்கூடிய வழிகாட்டிகளில்லை. ஒழுங்கான பாதையுமில்லை. காற்றோ பயங்கரமாக வீசிற்று; மணல் மேடுகள் ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு வாரிச் செல்லப்பட்டன. பிரயாணிகளுக்கு ஆபத்தெதுவும் நேரவில்லை; அற்புதமாக அவர்கள் பிரயாணத்தை நடத்தினார்கள். அலெக்ஸாந்தருடன் துணைக்கு வந்தவர்களில் இரு மனிதர்கள் சிறப்பானவர்கள். அவர்களில் ஒருவன் டாலமி (Ptoleomy); மற்றவன் அரிஸ்ட்டோபூலஸ் (Aristobulus). அவர்களுடைய பிரயாணத்தோடு சம்பந்தமான சில கதைகளுண்டு இரண்டு இரண்டு பாம்புகள் அவர்கள் முன் சென்று வழிகாட்டிக் கொண்டு போனதாக டாலமி கூறுகிறான். அரிஸ்ட்டோபூலஸ் காகத்துடன் பேசியதாகவும், இரு காகங்கள் சீயஸின் ஆலயம் வரையில் அவர்களுக்குத் துணையாக வந்ததாகவும், அவன் கூறுகிறான். ஆலயத்தில் சீயஸ்அம்மோன் அலெக்ஸாந்தரோடு பேசியதாகக் கூறுகிறார்கள். அத் தெய்வம் அலெக்ஸாந்தரோடு என்ன

பேசியது, அலெக்ஸாந்தர் என்ன மறுமொழி கூறினான் என்பது இதுவரையில் யாருக்குமே தெரியாது. சீயஸ் அம்மோன், அலெக்ஸாந்தரைத் தன்னுடைய குமாரனாக ஏற்றுக்கொண்டது. எந்த வழியாக அலெக்ஸாந்தர் மெம்பிஸிஸுக்குத் திரும்பிவந்தான் என்பதை யாரும் சொல்வதற்கில்லை. பாரேட்டோனியன் வழியாகத் திரும்பி வந்ததாக அரிஸ்ட்டோபூலஸ் கூறுகிறான். டாலமி ஓர் சிறந்த எழுத்தாளன். அவன் தன்னுடைய வாழ்க்கையில் நடந்தவற்றைப் பதிவு செய்துவைத்திருக்கிறான். பிற்காலத்தில் அவன் எகிப்திற்கும் சிரியாவிற்கும் அரசனானான்.

### எகிப்தின் அமைப்பு முறை

அவன் மெம்பிஸிலிருந்தபோது எகிப்தில் தன் ஆட்சியை நிலை நாட்டுவதற்கான ஒழுங்குமுறைகளை ஏற்படுத்தினான். இரு எகிப்தியர்களை மன்னர்களாக்கினான். எகிப்திற்கு அண்மையிலுள்ள அராபியாவிற்கும், லிபியாவிற்கும் (Arabia and Libya) இரு கிரேக்கக் கவர்னர்களை நியமித்தான். நௌகிசாட்டிஸ் ஊரானாகிய கிளியோமேனஸ் என்பவனைக் கருவூல அமைச்சனாக்கினான். பலவித படைத் தலைவர்களையும் அவன் நியமித்தான், பிரித்தாளும் தன்மையுடைய இவ்வரசியல் முறை, கலகம் ஏற்படுவதைத் தடுக்கும்வகையில் சிறந்து விளங்கிற்று. புவியியல் முறைப்படி பார்த்தால் எகிப்து ஓர் தனி நாடென்பது விளங்கும். நிராசையுள்ள ஒரு கவர்னர் எளிதில் சுதந்திரப் பிரகடனம் செய்யவும், தன்னுடைய சொந்த ஆட்சியை நிலை நாட்டவும் வழியுண்டு. அந் நாட்டில் பாரசீகர்களின் ஆளுகையில் இப்படிப்பட்ட சம்பவங்கள் நேர்ந்ததுண்டு. அலெக்ஸாந்தர் ஏற்படுத்திய இந்த முறை வேறு வடிவில், பின்னால் வந்த ரோமர்களால் பின்பற்றப்பட்டது.

## 9. கௌகமேலா போரும், பாபிலோனிய வெற்றியும்

இளவேனிற் காலத்தில் எகிப்திற்கும் சிரியாவிற்கும் மன்னனான அலெக்ஸாந்தர் தீரு (Tyre) நாட்டிற்கு வந்தான். கடற்கரை நகரங்கள் யாவும் அவன் ஆட்சிக்குட்பட்டன. மத்திய தரையின் கிழக்குப் பாகம் அவனுடைய ஆதிக்கத்திலிருந்தது. பாரசீகப் பேரரசின் கேந்திர பாகத்திற்குச் செல்வதற்கான நேரம் வந்துவிட்டது. அலெக்ஸாந்தர் போயினீசியப்பட்டினத்திலிருந்த பலவித கொள்கைகளைப்பற்றிய ஏற்பாடுகள், நிர்வாகம், படைப் பெயர்ச்சி முதலியவைகளில் அவன் முனைந்திருந்தான். பிறகு 40,000 காலாட் படையுடனும், 7000 குதிரைப் படையுடனும் புறப்பட்டு ஆகஸ்டு

மாத ஆரம்பத்தில் யூப்பரட்டஸ் நதிக்கரையிலிருந்த தாப்ஸாகஸ் (Thapsacus) என்ற ஊருக்குவந்து சேர்ந்தான். இரு பாலங்கள் கட்டுவதற்கான ஏற்பாடுகள் அவன் அவ்விடத்திற்கு வருவதற்கு முன்பே ஆரம்பமாயிற்று. ஆனல் பாரசீக மாஸேயஸ் (Mazaeus) என்பவன், பாலங்களின் வேலை பூர்த்தியாகாவண்ணம் தடை செய்துகொண்டிருந்தான். அலெக்ஸாந்தர் அவ்விடத்திற்கு வந்த போது அவன் தன்னுடைய படையுடன் பின்வாங்கிச் சென்றுன். பாலங்கள் கட்டிமுடிக்கப்பட்டன. படைகள் ஆற்றைக் கடந்தன. பாபிலோனை இலக்காகக்கொண்டு முன்னேறுவதே அலெக்ஸாந்தரின் நோக்கமாயிருந்தது. அப்பொழுது சைரசும், 10,000 போர்வீரர் களும் சென்ற பாதை வழியே செல்வது அறிவற்ற செயலாகத் தோன்றியதால். அலெக்ஸாந்தர் வேறு சாலையின் மூலமாக முன்னேறிக்கொண்டிருந்தான். அச்சாலை மெஸேபோட்டாமியா வின் வடக்கிலிருந்து, டைகிரிஸ் நதியின் கிழக்குக் கரையோரமாகச் சென்றது. அவன் ஆசியா கண்டத்தில் பயணஞ்செய்த காலத்தில், அவனது போக்குவரத்துச் சாதனங்கள், அவனுக்குத் தேவையான பொருள் தங்குதடையின்றிப் பெறும் முறைகள், யாவும் கேட்பவர் களுக்கு வியப்பை யளிக்கின்றன. பழக்கமில்லாத அந்நிய நாடுகளில் குறிப்பிட்ட இடத்திற்குக் குறிப்பிட்ட நேரத்தில் அவன் போய்ச் சேர்ந்தானென்ற செய்திகள் அவன் கையில் ஆசியா கண்டத்தின் படம் ஒன்றை வைத்துக்கொண்டுப் பிரயாணம் செய்ததைப்போல் தோன்றுகிறது. அவனுடைய ஒற்றர் துறை குறித்த செய்தி நமக்குக் கிடைக்காவிடினும் அது மிகவும் சிறப்புள்ளதாக அமைந் திருக்கவேண்டும். அவனுக்கு வேண்டிய செய்திகள் யாவையும் யூதர்கள் கொடுத்துதவினர்கள். பாபிலோனிய சிறைவாசத்திற்குப் பின் யூதர்கள் மீடியாவிலும், பாபிலோனியாவிலும் அவற்றின் சுற்றுப்புறங்களிலும் வாழ்ந்துவந்தார்கள். அலெக்சாந்தரின் படை யெடுப்பில் அவர்கள் அவனுக்கு உதவியாக இருந்தார்கள். அவன் எகிப்திய அலெக்ஸாந்திரியாவைக் கட்டியபோது யூதர்களுக்குத் தனிச் சலுகையளித்தான். அவர்களைப் புதிய நகரில் குடியேற அனுமதித் தான். அவர்களுக்குக் குடியுரிமையளித்தான். அவர்கள் தங்கள் விருப்பம்போல் தனியிடத்தில் வாழவும், அவர்களுடைய பழக்கவழக் கங்களையும் சமயத்தையும் அவர்களுடைய விருப்பம்போல் பின் பற்றவும் அனுமதியளித்தான்.

**சந்திர கிரகணம், செப்டம்பர், 20, கி.மு. 331.**

அலெக்ஸாந்தர் சில பாரசீக சாரணர்களைக் கைது செய்திருந் தான். அவர்கள் மூலமாகப் பாரசீகப் படை தன்னை எதிர்ப்பதற்குக் காத்துக்கொண்டிருப்பதாகவும், அவை எண்ணிக்கையில் தன் னுடைய படையைவிட மேம்பட்டவையெனவும் கேள்விப்பட்டான்.

வழக்கமாக டைகிரிஸ் நதியை நினிவே பட்டினத்தருகில் கடந்து செல்வார்கள். இப்போது அவன் அவ்விடத்தில் அந் நதியைக் கடக்கவில்லை. அவன் சற்று தூரஞ்சென்று பெஸ்ஸாப்டே என்ற விடத்தில் அந்நதியைக் கடந்தான். அன்றிரவு சந்திர கிரகணம் ஏற்பட்டது. ஆசியாவின் ஆதிக்கத்திற்காக நடத்தப்போகும் போராட்டத்தில் என்ன ஏற்படுமோவென்று படை வீரர்கள் கலக்க முற்றூர்கள்.

## கௌகமேலாச் சமவெளியில் அலெக்ஸாந்தர்

அலெக்ஸாந்தர் சில நாள் தெற்கு நோக்கிப் பயணஞ்செய்தான். டாரியஸ், கௌகமேலாச் சமவெளியில் தன் படையுடன் காத்துக் கொண்டிருக்கிறுனென்பதை அலெக்ஸாந்தர் கேள்விப்பட்டான். டாரியஸிடம் 1,000,000 காலாட் படையும், 40,000 குதிரைப்படையு மிருப்பதாக அறிந்தான். அலெக்ஸாந்தர் தன் போர் வீரர்களுக்கு நான்கு நாள் ஓய்வளித்தான். பிறகு இரவோடு இரவாகப் புறப் பட்டு ஒரு குன்றையடைந்தான். அக்குன்று சமவெளியை நோக்கி இருந்தது. சமவெளியில் டாரியஸ் தன் படைகளை அணிவகுத்துப் போருக்குத் தயாராக வைத்திருந்தான். அலெக்ஸாந்தர் தன் படைத் தலைவர்களை ஒன்றுகூட்டி, அவர்களோடு போரைக் குறித்துக் கலந் தாலோசித்தான். ஆலோசனைக் குழுவில் ஒருவனுன பார்மேனியோ, ஒரு நாள் கழித்து ஆலோசனை கூறுவதாகச் சொல்லிவிட்டான். இந்த ஒரு நாள் தவணைக்குள் பாரசீகர் தங்கள் படைக்கு முன் புறத்தில் குழிகளைத்தோண்டி, அவற்றில் கூர்மையான முட்களை நட்டு அவற்றைப் புற்களால் மூடிவைத்திருக்கிறூர்களாவென்பதை கண்டுபிடிக்க விரும்பினுன். பார்மேனியோவின் ஆலோசனை ஏற்றுக் கொள்ளப்பட்டது. போர் வீரர்கள் யுத்தத்தில் அவரவர்கள் செய்ய வேண்டிய பணியின் முறைப்படி அங்கே அணிவகுத்து அவர்களை நிறுத்தினுன். அலெக்ஸாந்தர் சமவெளியில் தன் குதிரையின் மீது தனியே சவாரி செய்தான். கிரேக்கப் படைக்குத் தடையாகவுள்ள புதர்களும், மற்றச் சாதனங்களும் பாரசீகர்களால் நீக்கப்பட்டிருப் பதைக் கண்டான். தன்னுடைய குதிரைப் படைக்கும் தேர்ப் படைக்கும் எவ்விதமான இடையூறும் வழியில்லாதிருப்பதையுங் கண்டான்.

## போருக்கு முந்திய இரவு

பாரசீகப் படை கோட்டை கொத்தளங்களின் பாதுகாப்பில்லா திருந்தது. இருட்டில் தாக்குதலேற்படுமோ வென்றஞ்சினுர்கள். ஆகையால் அன்றிரவை அவர்களுடைய படை தக்க பாதுகாப்புடன் கழித்தது. பார்மேனியோ அலெக்ஸாந்தரைச் சந்தித்தான். இருட்டில் பாரசீகப் படை தாக்கப்பட வேண்டுமென்று ஆலோசனை கூறினுன்.

அலெக்ஸாந்தர் அவனுக்கு இணங்கவில்லை. 'நான் வெற்றியைத் திருடுவதில்லை' என்று அலெக்ஸாந்தர் பார்மேனியோவிற்குப் பதிலிறுத்தான். அலெக்ஸாந்தர் கொடுத்த இந்த மறுமொழியிலிருந்து அவனுடைய வீரம், முன் யோசனை முதலியவை இன்னதென்பது தெளிவாகிறது. அவன் பகைவனை வெல்லவேண்டும், அதுவும் பட்டப் பகலில் வெல்லவேண்டும், அதனால் வரும் புகழையடைய வேண்டுமென்பதே அவனுடைய நோக்கம். பட்டப் பகலில் அவன் அடையும் வெற்றியே அவனுடைய புகழை ஆசியாவில் நிலைபெறச் செய்யுமே யன்றி, இரவில் அவனுக்கு ஏற்படும் வெற்றி புகழைக் கொண்டுவராதென்பதை அவன் உணர்ந்திருந்தான்.

**கௌகமேலா யுத்தகளம், அக். 1, கி. மு. 331; பாரசீகர் படை வரிசை முறை.**

பேரரசன் மத்திய வியூகத்தில் படைக்குத் தலைமை தாங்கி நின்றான். அவனுடைய உற்றார் உறவினர்களும், அவனுடைய பாரசீக மெய்காவலர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய இரு பக்கங்களில் கிரேக்கக் கூலிப்படை வீரர்களும், இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட வீரர்களும், சில யானைகளும் ஆசியாவின் மேல் பாகத்தில் குடியேறியிருந்த காரியர்களும் (Carians) நிறுத்திவைக்கப்பட்டிருந்தார்கள். மத்திய வியூகம் மேலும் பலப்படுத்தப் பட்டது. பாபிலோனிய போர் வீரர்களும், பாரசீக வளைகுடாப் பாகத்திலிருந்துவந்த போர் வீரர்களும், சூஸாவிற்குக் கிழக்கில் வாழும் யூசியர்களும் (Uxians) சித்தாக்கனேஸ் (Sitacenes) நாடுகளிலிருந்து வந்தபோர் வீரர்களும் மத்திய வியூகத்தின் இரண்டாவது வரிசையில் நின்று கொண்டிருந்தார்கள். இடது வியூகத்தில் கார்ப்பியன் கடலெல்லைகளிலிருந்து வந்த காடவுஸிய போர் வீரர்கள் (Cadusians) அணிவகுத்து நின்றார்கள். இடது வியூகத்தில் மத்திய வியூகத்திற்கு இணைந்தாற்போல் சூஸா நகரப் போர் வீரர்களிருந்தார்கள். அவர்களுக்குச் சமீபத்தில் கலப்புள்ள பாரசீகக் குதிரைப் படை வீரர்களும், காலாட்களும் அணிவகுத்து நின்றார்கள். இடது வியூகத்தின் கோடியில் தூரக்கிழக்கு நாடுகளாகிய அரக்கோஸியா, பாக்ட்டிரியா. (Arachosia and Bactria) போன்ற நாடுகளிலிருந்து வந்த போர் வீரர்கள் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தார்கள். இந்த வியூகத்தில் 1000 பாக்ட்டிரியாக் குதிரை வீரர்களும் அரிவாள் தாங்கிய போர் வீரர்களைக் கொண்ட 100 தேர்ப் படையும் நின்றன; அரால் ஏரி (Lake Aral) எல்லைகளிலிருந்து வந்த சித்தியர்களின் குதிரைப் படையும் இடது வியூகத்தின் கோடியில் நிறுத்தி வைக்கப்பட்டது. வலது வியூகத்தில், காகோஸிய இனங்களைச் சேர்ந்தவர்கள், கிர்கானியர்கள், காஸ்ப்பியன் கடலின் கிழக்குக் கரை நாட்டிலுள்ள தாபூரியர்கள் (Hyrcanians of Tapurians)

முதலியோர் அணிவகுத்து நின்றூர்கள். பார்த்தியர்களும், ஹிந்துகுஷ் மலைச் சரிவுகளிலிருந்து வந்த சாகேயர்களும் (Sacae) மீடியர்களும், மெஸோபோடாமியா நாட்டினரும், வட சிரியாவிலிருந்து வந்தவர்களும் வலது வியூகத்தில் நிறுத்தப்பட்டிருந்தார்கள்.

## செருங்களத்தில் மாசிடோனியப் படையின் அணி வகுப்பு

குதிரைப் படைகளும், அதற்குச் சம எண்ணிக்கையுள்ள காலாட் படையும் கொண்ட கூட்டத்தை எதிர்த்து அலெக்ஸாந்தர் அதிகாலையில் மலையை விட்டுக் கீழே இறங்கினுன். அவனுடைய இடது வியூகத்தில் பார்மேனியோ தலைமையில் தெஸ்ஸாலி நாட்டின் குதிரை வீரர்களும் மற்றக் கிரேக்க நாடுகளின் குதிரை வீரர்களும் அணிவகுத்து நின்றூர்கள். மத்திய வியூகத்தில் ஆறு பட்டாளங்களை நிறுத்திவைத்தான். வலது வியூகத்தின் கோடியில் கம்பானியர்களைக் கொண்ட எட்டுப் பட்டாளத்தையும், கிளிட்டஸுடைய படையையும் நிறுத்தி வைத்தான். வலது வியூகத்தில் பளுவற்ற ஆயுதங்கள் தாங்கிய போர் வீரர்களும், ஈட்டி எறிபவர்களும், வில்லாளிகளும், வலது வியூகத்திலிருந்தவர்களுக்குப் பாதுகாப்பாக நிறுத்தி வைக்கப்பட்டனர். இஸஸ் யுத்த களத்தில் அவன் அச்சங் கொண்டதைப் போலவே இங்கேயும் தன்னுடைய படை சுற்றி வளைத்துக் கொள்ளப்படுமோ வென்றும் அல்லது பின் புறமாகத் தாக்கப்படுமோ வென்றும் பயந்தான். இஸஸ் யுத்தகளத்தில் அவனுடைய வலது வியூகம் மட்டும் பயமுறுத்தப்பட்டது. இங்கே இரு வியூகங்களும் ஆபத்தான நிலையிலிருந்தன. இந்த அச்சத்தைப் போக்குவதற்காக இரு வியூகங்களிலும் இரண்டாவது படை வரிசையை ஏற்படுத்தினுன். போர் வீரர்கள் இங்கு வட்ட வடிவ முறையில் நிறுத்திவைக்கப்பட்டார்கள். இவர்கள் பின் புறமிருந்து வரும் தாக்குதலையும், பக்க வாட்டிலிருந்து வரும் தாக்குதலையும் சமாளிக்கக் கூடிய முறையில் நிறுத்தி வைக்கப் பட்டார்கள். இடது வியூகத்திற்குப் பின்னுல், தெரேஸ் நாட்டின் குதிரைப் படையும் காலாட்படையும் மற்றக் கிரேக்க நாடுகளின் காலாட் படை குதிரைப் படைகளும் நிறுத்தி வைக்கப்பட்டன. வலது வியூகத்தின் பின்புறம் கிளியாண்டர் தலைமையில் கிரேக்கக் கூலிப் படை வீரர்களும், மாசிடோனிய வில்லாளிகளும், அக்கிரியானியன் ஈட்டி எறியும் வீரர்களும், குதிரைகள் மேலிருந்து கொண்டு வேல் வீசுபவர்களும், பேயோனிய (Paconian) குதிரைப் படையும் நிறுத்தப்பட்டன. வலது வியூகத்தின் கோடியில் மெனிடாஸ் ((Menidas) தலைமையில் கிரேக்க நாடுகளின் கூலிப் படை வீரர்கள் நிறுத்தி வைக்கப்பட்டார்கள். எதிரிகள் பக்க வாட்டில் தாக்குவதைச் சமாளிப்பது இவர்களுடைய வேலையாக இருந்தது.

வலது வியூகத்தின் கோடியில் குதிரைப் படை யுத்தம்; பன்னரி வாள்கொண்டு போரிடும் தேர்ப்படையினர் செயலைக் கெடுத்தல்.

அலெக்ஸாந்தர் பகைவனுடைய படையைத் தாக்க முன்னேறிச் சென்றபோது, அவன் பகைவனுடைய மத்திய வியூகத்தை அடைந்தான். அங்கு அவனும் அவனுடைய வலது வியூகமும் பகைவனுடைய இடது வியூகத்தினால் சூழ்ந்து கொள்ளப்பட்டனர். அதைச் சமாளிப்பதற்காகச் சாய்வாகத் தன் படை வரிசையை நடத்திச் சென்றான். அப்போது சித்தியாவின் குதிரை வீரர்கள் இவனுடைய போர் வீரர்களைத் தாக்கினார்கள். திசையை மாற்றாமல் பளுவுள்ள ஆயுதங்கள் தாங்கியபோர் வீரர்களுடன் இவன் பகைவன் படையை ஊடுருவிச் சென்றான். பாரசிகப் பேரரசன் கவலையோடு அலெக்ஸாந்தரின் படை முன்னேறுவதைக் கவனித்துக் கொண்டிருந்தான். சிறிது நேரத்திற்குள் அலெக்ஸாந்தர் வெளியே தள்ளப் படுவான் என்றும், அவன் தேர்ப் படை வீரர்களிடம் சிக்கிக் கொள்வா னென்றும் எதிர்பார்த்தான். அலெக்ஸாந்தர் மேற்கொண்டு பாரசிகப் படையின் வலது வியூகத்தை நோக்கி முன்னேறாவண்ணம் தடுப்பதற்காகச் சித்திய நாட்டுக் குதிரை வீரர்களுக்கும் பாக்ட்டிரியா நாட்டுக்குதிரை வீரர்களுக்கும் கட்டளையிட்டான். அவர்கள் அவனைப் பக்கவாட்டிலிருந்து தாக்கினார்கள். அவர்களுடைய தாக்குதலை, மெனிடாஸ், தன்னிடமுள்ள கூலிப் படையைக் கொண்டு சமாளித் தான். அவர்களைப் பின் வாங்கும்படி செய்தான். அவர்கள் மீண்டும் பலம் பெற்றுத் திரும்பித் தாக்கினார்கள். போர் மிகவும் கடுமையாக நடந்தது. மாசிடோனியர்கள் நாற்புறமும் சூழ்ந்து கொள்ளப் பட்டார்கள். அதேசமயத்தில் டாரியஸ், தன் தேர்ப் படையை, கம்பானியர்களைத் தாக்கும்படி கட்டளையிட்டான். ஆனால் வில்லாளிகளும் ஈட்டி எறிபவர்களும் தேர்ப் படை வீரர்கள்மீது அம்பு மாரியும் ஈட்டி மாரியும் பொழிந்தனர். வீரமுள்ள மலைவாசிகள் தேர்களிலிருந்த குதிரைகளின் கடிவாளங்களைப் பிடித்துச் சாரதிகளைக் கீழே தள்ளினார்கள். தேர்ப்படை சின்னாபின்னமாகச் சிதறி யோடியது.

அலெக்ஸாந்தரின் தாக்குதலும் டாரியஸின் ஓட்டமும்.

பாரசிகப் படை முழுவதும் கிரேக்க படையைத் தாக்க ஆரம்பித்து விட்டது. அலெக்ஸாந்தர் தன்னுடைய குதிரைப் படையைக்கொண்டு தாக்குவதற்கான சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். பளுவற்ற ஆயுதம் தாங்கிய குதிரைப் படைக்கு உதவிபுரிய வேல் கொண்டு போரிடும் குதிரைப் படையினரை அனுப்பினான். ஏனெனில் அவர்கள் சித்தியர்கள் பாக்ட்டிரியர்களுடைய குதிரைப் படைகளால் தாக்கப்பட்டு நெருக்கடியிலிருந்தார்கள். இவ்வுதவிப் படையைக் கண்ட பாரசிகர்கள் அவர்களைத் தடுத்து நிறுத்த, பாரசிகக் குதிரைப்

படையை யனுப்பினுர்கள். இந்தப் படை நிறுத்தப் பட்ட இடத்தில் காலி ஏற்பட்டது. அவ்விடத்தைப் பார்த்து அலெக்ஸாந்தர் தன்னுடைய குதிரைப் படையைக்கொண்டு தாக்கி, பாரசீகப் படையை இரண்டாகத் துண்டித்து விட்டான். பகைவனுடைய மத்திய வியூகத்தின் இடது பாகம் தாக்குதலுக்கு இலக்காயிற்று. அலெக்ஸாந்தர் தன் படையை வளைவாக அமைத்துப் பகைவனைத் தாக்கினுன். அவனுடைய தரைப் படை பாரசீகர்களோடு கை கலந்து போரிட்டது. பாரசீக மன்னன் நடுங்கிக் கொண்டிருந்த இடத்தில் போர் மும்மரமாக நடந்தது. அப்போது இஸஸ் போர்க் களத்தில் என்ன நேர்ந்ததோ அது கௌகமேலாவிலும் நடந்தது. பேரரசன் தேரில் போர்களத்தை விட்டோட ஆரம்பித்தான். பாரசீகர்கள் அவனைப் பின்தொடர்ந் தோடினுர்கள். பின்னுல் நிறுத்தி வைக்கப் பட்ட போர் வீரர்களையும் அழைத்துக் கொண்டு பேரரசன் ஓடினுன்.

இவ்விதமாகப் பாரசீகப்படையின் மத்திய வியூகமும், அதற்குச் சமீபத்திலிருந்த இடது வியூகமும், துண்டிக்கப்பட்டுத் துரத்தப் பட்டன. மாசிடோனியப் படையின் தென்கோடி வியூகத்தில்பளுவற்ற ஆயுதந்தாங்கிய குதிரைப்படை வீரர்கள் பாரசீகக் குதிரைப்படையோடு போரிட்டு வெற்றியடைந்தார்கள்.

**படை வரிசையில் பிளவு; மாசிடோனியப் படைவிட்டைத் தாக்குதல்.**

தரைப்படையைச் சேர்ந்த கிரேக்கப்போர் வீரர்கள் வெகுதூரம் முன்னேறிச் சென்ருர்கள். அவர்களுக்கும் மற்றக் கிரேக்கப் போர் வீரர்களுக்கும் தொடர்பற்றுப் போகும் நிலைமை ஏற்பட்டது. தெஸ்ஸாலிய குதிரைப்படை கடினமாக நெருக்கப்பட்டதை சிம்மியாஸ் அறிந்தான். உடனே அவர்களுக்கு உதவிபுரிய சிம்மியாஸ் முனைந்திருந்தான். பாரசீகப் படையின் மத்திய வியூகத்திலிருந்து போர் புரிந்த, இந்திய - பாரசீகக் குதிரைப்படை வீரர்கள் மாசிடோனியப் படையில் ஏற்பட்ட இடைவெளியைக் கண்டார்கள். அவர்கள் அவ்விடைவெளியே புகுந்து மாசிடோனியப் படையின் படைவீடுகளைக் கொள்ளையடிக்க ஆரம்பித்தார்கள். அவர்களைக் கண்ட கைதிகள், கிரேக்கர்கள் கையிலிருந்து தப்பித்து, தங்கள் நண்பர்களுக்கு உதவி செய்ய முற்பட்டனர். கிரேக்கக் கூலிப்படையும் தெரேஸியர்களும் தங்களுடைய படையின் பின்னணி ஆபத்துக்குள்ளானதைக் கண்டார்கள். அவர்கள் திரும்பிக் கொள்ளையடிப்பவர்களைத் தாக்கித் துரத்திவிட்டார்கள்.

**மாசிடோனிய வலது வியூகத்தில் வெற்றி**

யுத்தக்களத்தின் எல்லா முனைகளிலும் போர் மும்மரமாக நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது பார்மேனியோ மிகவும் கடினமாக நெருக்கப்பட்டிருந்தான். மெஸோப்போட்டாமியர்களையும் சீக்கியர்

களையும் கொண்ட பாரசீகப் படையின் வலது வியூகத்தின்கோடி, பார்மேனியோவின் படையைப் பக்க வாட்டில் அல்லது பின் புறத்திலிருந்து தாக்கி இருக்க வேண்டும். பார்மேனியோ அலெக்ஸாந்தரை உதவியனுப்பும்படி கேட்டான். அப்போது அலெக்ஸாந்தர் பேரரசனைத் துரத்திச் சென்று கொண்டிருந்தான். இச் சேதியைக் கேட்டதும், அவன் பகைவனைத் துரத்தும் வேலையை விட்டு விட்டு, பார்மேனியோவிற்கு உதவி செய்ய முற்பட்டான். அலெக்ஸாந்தர் காம்பானியப் படையுடன் தன் இடது வியூகத்தை நோக்கி வந்து கொண்டிருந்தான். அப்பொழுது பாரசீகப் படையிலிருந்த பாரசீகர்கள், பார்த்தியர்கள், இந்தியர்கள் முதலியோர் ஒழுங்கான முறையில் பின் வாங்கிக் கொண்டிருந்தார்கள். அங்கே இடர் நிறைந்த ஒரு பெரும் போராட்டம் நடந்தது. கௌகமேலா யுத்தத்தில் அந்தக் கட்டமே மிகவும் கடினமானதாயிருந்தது. பாரசீகர்கள் வெற்றிக்காகப்போராட வில்லை. தங்கள் உயிருக்காகப் போராடினுர்கள். அப் போராட்டத்தில் அறுபது காம்பானிய வீரர்கள் உயிர் நீத்தார்கள். இருந்த போதிலும் இறுதி வெற்றி அலெக் ஸாந்தருக்குக் கிடைத்தது. அங்கிருந்து அவன் பார்மேனியோவிற்கு உதவி செய்ய விரைவாகவந்து கொண்டிருந்தான். அவன் வருவ தற்குள் பார்மேனியோ பகைவர்களை வென்றுவிட்டான். அவர்கள் யுத்தகளத்திலிருந்து ஓட்டமெடுத்தார்கள். பார்மேனியோ அவர்களைக் கைது செய்ய விரட்டிச் சென்ருன். வெற்றி அலெக்ஸாந்தருடையதா யிற்று; பாரசீகப் பேரரசின் விதியும் தீர்மானிக்கப்பட்டது.

### டாரியஸை அரபெலா வரையில் துரத்திச் செல்லுதல்

அலெக்ஸாந்தர் செருக்களத்தில் காலம் கடத்தவில்லை. அவன் டாரியஸ் மன்னனைத் துரத்துவதில் ஒரு விஞடி கூடத் தாமதிக்க வில்லை. பரரசீக மன்னன் ஓடிக்கொண்டிருந்த கிழக்குத் திசையை நோக்கி இரா முழுதும் அலெக்ஸாந்தர் பயணஞ் செய்து, விடியற் காலையில் அவன் அரபெலா (Arbela) என்ற ஊரையடைந்தான். அரபெலாவில் அவன் பாரசீகப் பேரரசனைக் காணவில்லை. அவனுக்குப் பதிலாக அவனுடைய தேர், கேடயம், அவனுடைய வில் முதலியவற்றையே கண்டான். டாரியஸ் மீடியாவின் பீடபூமிக்கு ஓடிவிட்டான். அரியோபார்ஸனேஸ் யுத்தத்தில் தோற்றுப்போன படையுடன் பாரசீகத்தை நோக்கித் தென்திசையில் போய்க்கொண் டிருந்தான். அலெக்ஸாந்தர் பேரரசனையோ அல்லது சாட்டராப் பையோ தேடிச் செல்லவில்லை. அவன் பாபிலோனை நோக்கிச் சென்று கொண்டிருந்தான்.

### பாபிலோன் அலெக்ஸாந்தரிடம் சரணடைதல்

இஸஸ் போர்க்களத்தில் வெற்றியடைந்தபோது தீருநகரம் அவனை எதிர்த்தது. அவன் அந்நகரைக் கைப்பற்ற, கடும் போர் நடத்த

வேண்டியதாயிருந்தது. அதைப்போலவே பலமுள்ள அரண்மனை களையும், கோட்டைகளையுமுடைய பாபிலோனைக் கைப்பற்றப் போரிட நேரிடுமென்று அலெக்ஸாந்தர் நினைத்தான். பாபிலோன் கோட்டையைத் தாக்குவதற்கான ஏற்பாடுகளுடன் அவன் தன் படையுடன் அங்குச் சென்றான். ஆனால் நகரத்தின் கதவுகள் திறக்கப்பட்டு நகரத்தலைவர்களும் சமயத்தலைவர்களும் அலெக்ஸாந்தரை வரவேற்க எதிரே வந்து கொண்டிருந்தார்கள். கௌகமேலாயுத்தத்தில் வீரத்துடன் போரிட்ட பாபிலோனிய சாட்டராப், மாஸேயஸ் பாபிலோன் நகரையும் அதன் கோடடைகளையும் அலெக்ஸாந்தரிடம் ஒப்படைத்தான். எகிப்தில் அலெக்ஸாந்தர் எந்தக் கொள்கையைப் பின்பற்றினானோ அக்கொள்கையைப் பாபிலோனிலும் பின்பற்றினான். அக்கினியை வழிபடுகிற பாரசீகர்களால் நாட்டுச் சமயமும் சமய வழிபாடுகளும் நசித்துப் போயிருந்தன. அலெக்ஸாந்தர் அவர்களுடைய சமயத்தைப் பாதுகாப்பதாக உறுதியளித்தான். பாரசீகர்களால் அழிக்கப்பட்ட கோயில்கள், மீண்டும் புதுப்பிக்கப்பட்டன. அக்கோயில்களில் பேல் (Bel) ஆலயம் மிகவும் சிறப்பானது அவ்வாலயத்திற்கு எட்டுக் கோபுரங்களிருந்தன. ஸெர்ஸஸ் பேரரசன் சாலாமிஸிலிருந்து திரும்பி வந்த போது அவன் பாபிலோனிலிருந்த எட்டுக் கோபுரங்களையும் அழித்துவிட்டான். முன்னாள் பாரசீக சாட்டராப்பாக விருந்த மாஸேயஸ் மீண்டும் பாபிலோனிய சாட்டராப்பாகப் பணியாற்ற அலெக்ஸாந்தர் அனுமதித்தான்.

## 10. சூசியானாவையும் பெர்ஸிஸ் நகரையும் வெல்லுதல்

சூஸாவில் அலெக்ஸாந்தர், டிசம்பர், கி. மு. 331; ஹர்மோடியஸ் அரிஸ்ட்டோ ஜிட்டன் என்பவர்களின் சிலைத் தொகுதி.

யூப்பரட்டஸ் நதிக்கரையில் வளப்பமும், புதுமையும் நிறைந்த நகரில் அலெக்ஸாந்தர் தன் படையுடன் தங்கி ஓய்வெடுத்துக் கொண்டான். பிறகு தென் கிழக்கிலுள்ள சூஸா நகரை நோக்கிப் பிரயாணஞ் செய்தான். சூஸா நகரம் பாரசீகமன்னனின் கோடை அரசவையாக இருந்து வந்தது. சூஸாவைக் கைப்பற்ற பிலோஸெனஸ் என்பவனை ஒரு குதிரைப்படையுடன் அரபெலாவிலிருந்து முன்னதாகவே அனுப்பி வைத்திருந்தான். ஆகையால் சூஸா, பிலோஸெனஸினால் கைப்பற்றப்பட்டிருந்தது. அவன் அலெக்ஸாந்தரின் வருகைக்காகக் காத்திருந்தான். சூஸாவில் பொன், வெள்ளி, மதிப்பு மிக்க கற்கள் முதலியன சேமித்து வைக்கப்பட்டிருந்தன. அலெக்ஸாந்தர் அவற்றைக் கைப்பற்றினான். அந்நகரில் அவனுக்குக் கிடைத்த மதிப்பு மிக்க பொருள்களில்

சிலைத்தொகுதியுமொன்று அச்சிலைத் தொகுதியில் கொடுங்கோலர் களைக் கொன்ற ஹார்மோடியஸ், அரிஸ்ட்டேஜிட்டன் (Harmodius and Aristogition) என்பவர்களுடைய உருவங்கள் செதுக்கப்பட்டிருந் தன. பேரரசன் ஸெர்ஸஸ், அதை ஏதென்ஸ் நகரிலிருந்து சூஸாவிற் குச் கொண்டுவந்தான். இப்போது அலெக்ஸாந்தர் அதைப் பதனமாக எடுத்து ஏதென்ஸ் நகருக்கு அனுப்பிவிட்டான். இப்போது இச் சிலைத்தொகுதி வரலாற்றுச் சின்னமாக விளங்குகிறது. வரலாற்றில் ஏற்பட்ட மாறுதல் அதனைச் சிறப்பு மிக்கதாக்கி விட்டது.

**காருன். யூஸியான் கணவாய்**

காலம் குளிர்காலத்தின் மையமாக இருந்த போதிலும் அலெக்ஸாந்தர் சூஸாவை விட்டுப் புறப்பட்டான். இதுவரையில் அவன் கண்டிராத தீரச் செயலில் இப்போது அவன் ஈடுபட்டான். பாரசீக மேட்டு நிலங்களிலுள்ள கோட்டைகளில், சைரஸூம் டாரியஸூம் சேமித்து வைத்திருந்த செல்வங்கள் பாதுகாக்கப்பட்டு வந்தன. அவை நடக்க முடியாத மலைப்பாகங்களில் பாதுகாக்கப் பட்டிருந்தன. அரியோபார்ஸானேஸ் அவற்றில் பெரும் பகுதியை கௌகமேலா யுத்தகளத்திற்குப் பின் தன்னுடன் எடுத்துச் சென்றான். டாரியஸ் புது பலத்துடன் மலையிலிருந்து இறங்கி வந்து, தன்னுடன் போர் தொடுக்கக்கூடுமென்ற அச்சமும் அவனுக்கிருந்தது. ஆகையால் அரியோபார்ஸானேஸ், டாரியஸோடு சேர்ந்து கொள்வதற்கு முன், அவனைத் தாக்கி, அவன் பலத்தை ஒடுக்கி விட வேண்டுமென்று அலெக்ஸாந்தர் கருதினான். ஆகையால் அலெக்ஸாந்தர் சூஸாவில் நீண்ட நாள் தங்கிவிடாமல் உடனடியாகப் புறப்பட்டான். அவன் பிரயாணம் செய்ய வேண்டிய சாலை தென் மேற்கில் அமைந்திருந்தது. அவன் பாஸியடிகிரிஸ் (Pastigris) நதியைக் கடந்தான். அவனுக் கெதிரில் யூஸியான் (Uxian) மலைவாசிகளின் பயமிருந்தது. அவர்களுக்குப் பாரசீக மன்னர்கள் பொருளுதவி யளித்து அவர்களுடைய நட்பைத் தேடி வந்தார்கள். சாலை செல்லும் மார்க்கத்திலுள்ள கணவாய்கள் யூஸியான் மலைவாசிகளின் ஆதிக்கத்திலிருந்தன. அலெக்ஸாந்தர் அவர்களுடைய நட்பை நாடவில்லை. அதற்குப் பதிலாக அவர்கள் அறியாவண்ணம் இரவோடு இரவாகக் கணவாய்களைக் கடந்து அவர்களுடைய நாட்டின் மத்தியில் வந்து விட்டான். அதைக் கண்ட யூஸியான் மலைவாசிகள் வியப்பும் அதிர்ச்சியுமடைந்தார்கள். ஆண்டுதோறும் ஆசியாவின் பிரபுவிற்கு 100 குதிரைகளையும் 500 பொதி சுமக்கும் எருதுகளையும் 30,000 ஆடுகளையும் பரிசாக வழங்கச் சம்மதித்தார்கள்.

கிரேக்கர்கள் கேள்விப்படாத நாட்டின் மத்தியில் அலெக்ஸாந்தர் வந்து விட்டான். அவனுடைய படையெடுப்பு, நாடு பிடிக்கும் படையெடுப்பாக மட்டும் நின்று விடாமல், புதிய நாடுகளைக் கண்டு

பிடிக்கும் படையெடுப்பாகவும் இருந்தது. புவி இயல் விஞ்ஞான வரலாற்றில் அவனுடைய படையெடுப்பு ஒரு நூதன காலத்தை உண்டாக்கிவிட்டது. மத்திய ஆசியாவைப் பற்றிய பல விவரங்களை அப்படையெடுப்பின் மூலமாக ஐரோப்பியர்கள் அறிந்து கொள்ள வழியேற்பட்டது.

**பாரசீக வாயில் வழிகளைத் தாக்குதல், ஜனவரி, கி.மு. 330.**

அலெக்ஸாந்தர் தன் படையை இரு சமபாதிகளாகப் பிரித்து ஒரு பாதியைப் பார்மேனியோ தலைமையில் நேரான சாலையில் மெதுவாகப் போய்க்கொண்டிருக்கும்படி கட்டளையிட்டான். மறுபாதி அவனுடைய தலைமையில் குறுக்குப் பாதையில் பயணம் செய்தது. அவனுடன் மாசிடோனியக் குதிரைப் படையும் காலாட் படையுமிருந்தன. அவன் சென்று கொண்டிருந்த பாதை குன்றுகளுக் கிடையேயுள்ள குறுகிய பாதையாகும். அவை பாரசீகவாயிலின் வழிகளென்று அழைக்கப்பட்டன. அரியோபார்ஸானேஸ் அங்கு 40,000 காலாட்படையோடும், 700 குதிரைப் படையோடும் அங்கிருந்த பாறையினாலான கணவாயைக் காவல் புரிந்துவந்தான். அக் கணவாய் ஒரு சுவரினால் பலப்படுத்தப்பட்டிருந்தது. அலெக்ஸாந்தர் அதைத் தாக்கினான். ஆனால் அவன் தாக்குதல் முறியடிக்கப்பட்டது. பாதையைக் கடப்பது சுலபமல்ல வென்பதை அலெக்ஸாந்தர் அச் சம்பவத்தின் மூலமாக அறிந்துகொண்டான். எப்படியும் அதைக் கடந்தே தீரவேண்டும். ஏனென்றால் அந்தக் கணவாய் மூலமாகவே பாரசீகப் பேரரசனின் பட்டினங்களுக்குச் செல்லமுடியும். அலெக்ஸாந்தர் குழப்பமடைந்தான். இப்படிப்பட்ட குழப்பம் அவன் தீரு (Tyre) பட்டினத்தைத் தாக்கியபோதுகூட ஏற்பட்டதில்லை. அலெக்ஸாந்தரிடம் ஒரு கைதியிருந்தான். அக் கைதி மற்றொரு பாதையின் மூலமாகப் பட்டினங்களுக்குப் போகலாம் என்று சொன்னான். அப் பாதை மிகவும் அபாயகரமான பாதை. மலையைச் சுற்றியுள்ள காடுகளின் வழியே அது வளைந்து செல்லும்; காலமோ குளிர்காலம். மலை பனிக்கட்டிகளினால் மூடப்பட்டிருந்தது. பயணம் செய்பவர்களோ பளுவுள்ள போராயுதங்களைச் சுமந்து செல்லுகிறவர்கள். அந்த ஒரே பாதையின் மூலமாகவே பாரசீக நகரங்களுக்குச் செல்லமுடியும். ஆகையால் அலெக்ஸாந்தர் தாமதிக்காமல் அப் பாதையின் வழியே படையை நடத்திச் செல்வதெனத் தீர்மானித்துவிட்டான். கணவாய்க்குச் சமீபத்தில் கிராட்டரஸ் தலைமையில் தன்னுடைய படையின் மற்றோர் பாகத்தை நிறுத்தி வைத்தான். இப் படை கிரேக்கநாட்டின் எக்காள சத்தம் கேட்டவுடனே முன்பக்கத்திலிருந்து தாக்குதலை நடத்தவேண்டும். இந்தக் கட்டளையிட்ட பிறகு, அலெக்ஸாந்தர் புறப்பட்டான். பயணம் இரவில் ஆரம்பித்தது. சேரவேண்டிய தூரமோ பதினொரு

மைல்கள். மலை உச்சிகளையும் பனியால் மூடப்பட்ட பள்ளத்தாக்கு களையும் பெரிதும் முயன்று கடந்துசென்றான். பாரசீகப் பாசறைக்குச் சமீபத்தில் வந்துவிட்டான். அங்கிருந்து கீழே இறங்கிப் பாசறை யைத் தாக்கவேண்டிய நேரமும் நெருங்கிவிட்டது. மீண்டும் தன் படையை இரு பிரிவுகளாகப் பிரித்தான். ஒரு பிரிவை அராஸெஸ் ஆற்றுக்குப் (Araxes) பாலமெழுப்பவும், பாரசீகர்கள் பின் வாங்கி ஓடா வண்ணம் தடுக்கவும் அனுப்பினான். பொழுது விடியுமுன் பகைவர் களுடைய இரண்டு அல்லது மூன்று காவல் நிலையங்கள் அழிக்கப் பட்டன. காவல் வீரர்கள் எச்சரிக்கை செய்வதற்குப் பதிலாக ஒளிந்துகொள்ள மலையை நோக்கி ஓடிவிட்டார்கள். மாசிடோனிய எக்காளம் முழங்கியது. அரியோபார்ஸானேஸ் திடீர் தாக்குதலால் வியப்படைந்தான். கிரேட்டரஸ் முன்புறத்திலும் அலெக்ஸாந்தர் பின் புறத்திலும் அரியோபார்ஸானேஸைத் தாக்கினார்கள். பாரசீகப் போர் வீரர்களில் பலர் வெட்டித் துண்டாக்கப்பட்டார்கள். சிலர் மலையுச்சிகளிலிருந்து கீழேவிழுந்து உயிர்நீத்தார்கள். அரியோபார் ஸானேஸ் ஒரு சிறிய படையுடன் தப்பித்து மலைகளுக்குள் ஓடிவிட்டான்.

### பாரசிகத்தின் அரண்மனைகள் (பெர்ஸிபோலிஸ்)

பாரசீக மன்னர்களின் அரண்மனைகள் மெர்வடாஷ்ட்பள்ளத் தாக்கிலிருந்தன. அக் காலத்தில் மெர்வடாஷ்ட் ஒரு செழிப்புள்ள பள்ளத்தாக்கு. இப்போது அது ஒரு பாலைவனத்தைப்போல் காட்சியளிக்கிறது. அலெக்ஸாந்தர் அரண்மனைகளை நோக்கிச் சென்றான். இஸ்ட்டச்சர் நகரத்தைக் கண்டான். உலகில் பழைமையான பட்டினங்களில் பழைமையான பட்டினம் இஸ்ட்டச்சர் பட்டினம். அப் பட்டினத்தில் அரசனுடைய அரண்மனையிருந்தது. பெரிய அரண்மனைகள் அங்கிருந்து சிலமைல் தூரத்திலிருந்தன. மலையடிவாரத்திலுள்ள பாறையின்மீது அரண்மனைகள் கட்டப் பட்டிருந்தன. அரண்மனைக்குச் செல்லப் பலவித படிக்கட்டு கள் இருந்தன. அங்கு நான்கு அரண்மனைகள் இருந்தன. சிறிய அரண்மனை டாரியஸின் அரண்மனையென்றும், பெரிய அரண்மனை ஸெர்ஸஸின் அரண்மனையென்றும் சொன்னார்கள். அங்கே தூண்கள் நிறைந்த இரு கூடங்களிருந்தன. அங்கிருந்த சித்திர சிற்பவேலைப்பாடுகளைப்போல் அவன் சூஸாவிலும் கண்டதில்லை; எக்பாட்டானாவிலும் கண்டதில்லை. கிரேக்கர்கள், அரண்மனைக்கும் பட்டினத்திற்கும் பொதுவாக ஒரு பெயரிட்டு, 'பெர்ஸிபோலிஸ்' என்று அவர்கள் அழைத்தார்கள்; 'சூரியனுக்குக் கீழுள்ள பட்டினங்களில் மிகவும் செல்வம் நிறைந்தது,' என்பது அதற்குப் பொருளாகும். அரசனுடைய கருவூலத்தில் 1,20,000 தாலந்து பொன்னிருந்தன. அவற்றை அங்கிருந்து ஏற்றிச்செல்ல ஒரு

கழுதைப் பட்டாளமும் ஒட்டகப் பட்டாளமும் தேவைப்பட்டன. கருவூலத்தில் அடைபட்டுக் கிடந்த பொற்குவியல் மக்களுக்குப் பயன் படுமாறு வெளிக்கொண்டுவரப்பட்டதும், பொருளாதாரத்தில் பெரும் மாறுதல் ஏற்பட்டது.

**பாஸார் கேடே**

சைரஸின் நகரமாகிய பாஸார்கேடே அங்கிருந்து இரண்டு நாள் தொலைவில், மூர்காப் பள்ளத்தாக்கிலிருந்தது. மீதிய நாட்டு மன்னனை அழித்த இடத்திற்குச் சமீபத்தில் அப்பட்டினத்தை அவன் அமைத்தான். அங்கு அவனுடைய கல்லறையை இன்றைக் குங்கூடக் காணலாம். சில கட்டடங்களின் கற்களைக்கூட நாம் இன்றும் காணக்கூடும். அக் கற்களில் அடியிற்காணும் வாசகத்தை நாம் காணலாம். 'அச்சேமேனியனாகிய சைரஸ் மன்னன் நானே '. பாஸர் கேடே அரண்மனையிலும் அலெக்ஸாந்தர் திரண்ட பொற்குவியலைக் கண்டான்.

**ஜனவரி-ஏப்ரலில், கி.மு. 330. ஸெர்ஸஸின் அரண்மனை தீக்கிரையாதல்**

அலெக்ஸாந்தர் நான்கு மாத காலம் பாரசீக அரண்மனையில் தங்கியிருந்தான். காரமானியர் அல்லது கிர்மான் என்ற இனத்தவர் அலெக்ஸாந்தரிடம் சரணடைந்தார்கள். அவன் அங்குத் தங்கி யிருந்த காலத்தில் கொள்ளைக் கூட்டத்தவர்களைக் கண்டுபிடித்துத் தண்டித்தான். அவன் ஸெர்ஸஸ் மன்னனுடைய அரண் மனைக்குத் தீவைத்தான். அக் கொடிய செயலை அவன் புத்தி சுவாதீனமாக இருந்தபோது செய்யவில்லை. ஒருநாள் இரவு அவனும் அவனுடைய நண்பர்களும் அளவுக்கு மீறிக் குடித்திருந்தார்கள். அங்கே தாயிஸ் என்ற பெயருள்ள அட்டிக் நாட்டு பெண் பாரசீக மன்னனுடைய அரண்மனையில் அடிமையாக இருந்தாள். அவள் தன்னுடைய நாட்டையும் ஸெர்ஸஸ் அதற்குச் செய்த தீங்கையும் குடிபோதையிலிருந்த அலெக்ஸாந்தருக்கும் அவன் நண்பர்களுக்கும் எடுத்துச்சொல்லி ஸெர்ஸஸ் செய்த குற்றத்திற்காக அவனுடைய அரண்மனையைச் சாம்பலாக்கிவிட வேண்டுமென்றாள். உடனே அலெக்ஸாந்தரும் அவன் நண்பர்களும் அரண்மனைக்குத் தீ வைத்தார்கள். அரண்மனை தீப்பற்றி எரிந்துகொண்டிருந்தது. அலெக்ஸாந்தருக்குக் குடிபோதை நீங்கிவிட்டது. அவன் உடனே தீயை அணைத்துவிட்டான். தன்னுடைய செய்கைக்காக வருந் தினான்.

## 11. டாரியஸின் மரணம்

பேரரசன் டாரியஸ் எக்பாட்டானாவிற்குப்போய்ச் சேர்ந்தான். அவனிடம் உண்மையான அன்புகொண்டவர்கள் அவனைச் சூழ்ந்

திருந்தார்கள். மீதியா, ஹைர்கானியா, அரெயியா, பாக்ட்டீரியா, அரகோஸியா, டிரான்ஜியானு (Media, Hyrcania, Areia, Bectria) Arachosia and Drangiana) நாடுகளின் கவர்னர்கள் அவனுக்கு உதவியாக இருந்தார்கள். இந்த நாடுகளை அலெக்ஸாந்தர் இன்னும் வென்றுவிடவில்லை. இஸஸ் யுத்தம் முடிந்ததும், டாரியஸ் தனக்குப் பணிந்து வரவேண்டுமென்று விரும்பினுன். டாரியஸ் இணங்கி வரவில்லை. கௌகமேலாப் போர்க்களத்திற்குப் பின்பும் டாரியஸ் பணிந்து வருவானென்றும் எதிர்பார்த்தான், அவன் அவ்வாறு பணிந்து வருவானுகில், அவனுடைய பேரரசின் கிழக்குப் பாகத்தை அவனிடம் ஒப்படைத்துவிட விரும்பினுன். டாரியஸ் தன்னை அவனுடைய பேரரசனுகக் கருதினுல் அவன் விரும்பியவற்றைக் கொடுத்துவிட விரும்பினுன். அலெக்ஸாந்தர் அவனுக்காகவே பெர்ஸிஸ் நகரில் நீண்டநாள் தங்கியிருந்தான். ஆனுல் டாரியஸ் அவனிடம் சரணடைவதாகத் தோன்றவில்லை. மீதியா தற்காப்பிற்கு ஏற்ற இடமாக இருந்தது. வடக்கிலுள்ள மாகாணங்களில் அவனுக்கு ஒரு பெரும் படை இருந்தது. பின்வாங்கிச் செல்லுவதற்கு பாக்ட்டீரியா அவனுக்குத் தகுந்த இடமாகயிருந்தது.

### எக்பாட்டானுவில் அலெக்ஸாந்தர்

அலெக்ஸாந்தர் பெர்ஸிஸ் நகரை விட்டுப் புறப்பட்டு எக்பாட்டானுவை நோக்கிப் பயணஞ் செய்தான். சூஸாவிலிருந்து எக்பாட்டானுவிற்குச் செல்ல நேர் பாதையில்லை. பாரேட்டாசேனே நாட்டின் வழியே அவன் பிரயாணம் செய்ய வேண்டியதாயிற்று. அவன் வேகமாக முன்னேறிக் கொண்டிருந்தான். டாரியஸ் எக்பாட்டானுவில் ஒரு பெரும் படையுடன் அலெக்ஸாந்தருக்காகக் காத்துக்கொண்டிருக்கிருனென்ற செய்தி அவனுக்கு வழியில் கிடைத்தது. வழியில் பலவித தொல்லைகளைச் சமாளித்துக் கொண்டு அவன் எக்பாட்டானு நகருக்குச் சமீபத்தில் வந்துவிட்டான். டாரியஸ் அங்கிருந்து ஓடிவிட்டானென்ற செய்தி அவனுக்குக் கிடைத்தது. அவன் தன் பெண்களையும், மூட்டை முடிச்சுகளையும், திரண்ட செல்வத்தையும் வாரிக்கொண்டு வடக்கு நோக்கிப் பிரயாணஞ் செய்கிருனென் பதையும் அவன் கேள்விப்பட்டான். காடுசியன் படையும் சித்தியன் படையும் எக்பாட்டனுவிற்கு வந்துசேரத் தவறியதே, அவன் எக்பாட்டானுவைவிட்டுச் சென்றதற்குக் காரணமெனச் சொன்னுர்கள். அலெக்ஸாந்தர் மீதியாவையடைந்து, அங்குச் சில நாள் தங்கினுன். தெஸ்ஸாலிய போர் வீரர்களுக்கும் கிரேக்க நாடுகளிலிருந்து வந்த போர் வீரர்களுக்கும் சேர வேண்டிய சம்பளத்தைக் கொடுத்தான். அவர்கள் விரும்பினுல் தன்னுடைய படையில் பணிபுரியப் புதியதோர் ஒப்பந்தம் செய்து கொள்ளலாமென்றும் சொன்னுன். பெரும்

பாலோர் அவனை விட்டுச்செல்ல மனமில்லாதிருந்தார்கள். பெர்ஸிலில் கிடைத்த பொன் வெள்ளி முதலிய திரவியங்களை எக்பாட்டானுவுக்கு எடுத்துச்சென்று அதைப் பாதுகாக்கக் கட்டளையிட்டான். எக்பாட்டானுவிலுள்ள அவனுடைய திரவியங்கள் அவனுடைய கருவூல அமைச்சன் ஹார்ப்பாலஸ் பொறுப்பில் விடப்பட்டது. அவனுக்குதவியாக ஓர் மாசிடோனியப் படையை அங்கே நிறுத்தி வைத்தான். பார்மேனியோ வடக்கு நோக்கிப் பயணஞ் செய்து காடவுஸியா நகரத்திற்குப் போய்ச் சேர வேண்டியதாயிற்று. பார்மேனியோ காஸ்ப்பியன் கடலின் கடற்கரையோரமாகப் பிரயாணம் செய்யும்போது பேரரசனைச் சந்திக்க நேரிடுமென அலெக்ஸாந்தர் நம்பினன்.

**ராய் (Rayy); பெஸ்ஸஸ், டாரியஸைக் கைது செய்தல்; டாரியஸைத் தேடிச் செல்லல்.**

டாரியஸைப் பிடித்துவிட வேண்டுமென்ற ஒரே நோக்கத்தோடு அலெக்ஸாந்தர் தன் படையைத் துரிதப்படுத்தினன். அவனுடன் வந்த போர் வீரர்களுக்கும் பிராணிகளுக்கும் இரக்கம் காட்டவில்லை. அவன் ராகே (Ragae) நாட்டின் வழியாகச் சென்று கொண்டிருந்தான். அங்கு டாரியஸ் காஸ்பியன் வாயிலைக் கடந்து விட்டானென்ற செய்தியை அவன் கேட்டான். ராகேயில் சிறிது நேரம் தங்கிக் களைப்பாறினன். அவன் காஸ்பியன் கணவாயைக் கடந்து பார்த்தினுவிற்குள் பயணம் மேற்கொள்ள நேர்ந்தது. இப்போது டாரியஸிற்கு அழிவு நெருங்கிவிட்டது. அவனுடைய கூட்டாளிகள் அவன் மீதுள்ள நம்பிக்கையை யிழந்தார்கள். அவனைவிட்டு விலகிப் போக அவர்கள் திட்டமிட்டார்கள். ஆனல் அவன் அவர்களைவிட மனமில்லாது, அலெக்ஸாந்தரை எதிர்த்துப் போரிடத் திட்டமிட்டான். அவனுடைய படை வீரர்கள் அதற்கு இணங்கிவர மறுத்தார்கள். கிரேக்கக் கூலிப்படை மட்டும் அவனுக்குக் கடைசி வரையில் உண்மையோடு உழைத்தது. டாரியஸுக்குப்பின் தங்கள் கதி மோசமாகி விடுமென கிரேக்கக் கூலிப்படையினர் அஞ்சினர்கள். பாக்ட்டீரியாவின் சாட்டராப்பான பெஸ்ஸஸ் (Bessus) என்பவன் டாரியஸின் நெருங்கிய உறவினன். அவர்கள் டாரியஸுக்குப் பதிலாக பெஸ்ஸஸைப் பேரரசனுக்க விரும்பினர்கள். அவர்கள் சதித் திட்டமொன்றை உருவாக்கினர்கள். அதன்படியே டாரியஸைக் கைது செய்தார்கள். அவனுடைய கால் கரங்களுக்கு விலங்கிட்டு, கோவேறு கழுதைகள் பூட்டிய பல்லக்கில் பாக்ட்டீரியாவின் சாலையில் சுமந்து சென்றனர். அவனுக்கேற்பட்ட இந்தக் கதியைக் கண்ட அவனுடைய படை வீரர்கள் கலைந்து விட்டார்கள். பாரசீகப் போர் வீரர்கள் அலெக்ஸாந்தரிடம் சரணடையப் புறப்பட்டு விட்டார்கள். அவர்கள் அலெக்ஸாந்தரைப் பார்த்தியன் எல்லையில் கண்டு டாரியஸுக்கேற்பட்ட இக்கட்டை எடுத்துச்சொன்னர்கள். அதே சமயத்தில் கிரேக்கக்

கூலிப்படையினர் வடக்கு நோக்கிப் பயணம் செய்து காஸ்பியன் மலைப் பிரதேசத்துக்குப் போய் விட்டார்கள். அலெக்ஸாந்தர் தன்னுடைய பழைய பகைவன் இப்போது கைதியாக இருப்பதையும், பெஸ்ஸஸ் தன்னுடைய புதிய பகைவனாக மாறியதையும் அறிந்தான். புதிய பகைவனை நோக்கி அலெக்ஸாந்தர் வேகமாக முன்னேறினான். தன்னுடைய படையின் பெரும் பகுதியை மெதுவாக வர அனுமதியளித்துவிட்டு, ஒரு சிறிய குதிரைப் படையுடனும் சில காலாட் படையுடனும் அலெக்ஸாந்தர் பயணத்தைத் தொடர்ந்து நடத்தினான். இரா முழுதும் அவன் பயணம் தொடர்ந்தது அடுத்தநாள் உச்சிவேளை வரையில் அவன் ஓரிடத்திலும் தங்கவில்லை. அடுத்தநாள் மாலையில் ஆரம்பித்த பயணம் இரவு முழுதும் மூச்சுவிடாமல் நடந்தது. சூரிய உதயத்தில் அவன் தாரா (Thara) என்ற இடத்திற்குப் போய்ச் சேர்ந்தான். அவ்விடத்தில்தான் டாரியஸ் விலங்கிடபட்டானென்றும், அலெக்ஸாந்தர் பெஸ்ஸஸை நெருக்கினால் அவன் டாரியஸைத் தன்னிடம் ஒப்படைத்து விடுவானென்றும், அலெக்ஸாந்தர் கேள்விப்பட்டான். அலெக்ஸாந்தர் விடாமல் வேகமாக முன்னேற நேர்ந்துவிட்டது. மீண்டும் ஓர் இரா முழுதும் சலிக்காமல் பிரயாணம் செய்தான். மனிதர்களும் குதிரைகளும் களைப்படைந்து கீழே விழுந்தார்கள். மறுநாள் கதிரவன் தலைக்கு மேலே நேரே நிற்கும்பொழுது, அவர்கள் ஓர் கிராமத்துக்கு வந்தார்கள். அவ்விடத்தில் பெஸ்ஸஸ் ஒரு நாளைக்குமுன் தங்கி இருந்ததாகக் கேள்விப்பட்டான். குறுக்குபாதை ஏதாவது உண்டா என்று அலெக்ஸாந்தர் அங்குள்ளவர்களைக் கேட்டான். குறுக்குவழி இருக்கிறதென்றும், அது தண்ணீரற்ற நாட்டின் வழியே செல்கிறதென்றும் அவர்கள் சொன்னார்கள். அலெக்ஸாந்தர் 500 குதிரை வீரர்களுடைய குதிரைகளை வாங்கி அவற்றை பலமுள்ள 500 காலாட்படை வீரர்களுக்குக் கொடுத்தான். அன்று மாலை அவன் மீண்டும் பயணத்தைத் தொடர்ந்தான். இரா முழுதும் நாற்பத்தைத்து மைல் பயணம் செய்ததின் பயனாக விடியற் காலையில் பகைவர்களுடைய நடமாட்டத்தைக் கண்டான். அவர்கள் மெதுவாக நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களில் பலர் நிராயுதபாணிகளாக இருந்தார்கள். எதிர்த்தவர்களை அலெக்ஸாந்தர் விரட்டியடித்தான். அங்கு வந்துள்ளவன் அலெக்ஸாந்தரென்று கேள்விப்பட்டவுடனே அவர்கள் ஓட்டமெடுத்தார்கள். பெஸ்ஸஸும் அவனுடன் சேர்ந்த சதி திட்டக்காரர்களும் டாரியஸை ஒரு குதிரையின்மீது ஏற்றினார்கள். அவனை அங்கிருந்து புறப்படச் சொன்னார்கள். டாரியஸ் மறுத்துவிட்டான். உடனே அவர்கள் கத்தியால் குத்திக் குற்றுயிராகப் பல்லக்கில் போட்டுவிட்டு ஓட்டமெடுத்தார்கள். அவர்கள் போகும்போது பல்லக்கைச் சுமந்துசென்ற கோவேறு கழுதைகளையும் காயப்படுத்தினார்கள். அக்கழுதைகளை ஓட்டிச் சென்றவர்களையும் கொன்றுவிட்டுச்

சென்ருர்கள். காயமுற்ற கோவேறு கழுதைகள் தாகத்திஞல் வாடின. அவை சாலேயைவிட்டுப் பக்கவாட்டில் அரை மைல் தூரத்திலுள்ள ஓர் நீர்நிலேயை நோக்கிச் சென்றன. தண்ணீர் குடிப்பதற்காக வந்த ஒரு மாசிடோனியன் அவற்றைக் கண்டுவிட்டான். கழுதைகளால் சுமந்து செல்லப்பட்ட பேரரசன் நீரூற்றண்டை மாசிடோனியனேக் கண்டான். அவனுக்குக் கிரேக்க மொழி தெரியாது. பேரரசனுடைய மனேவியும் தாயும் அலேக்ஸாந்தருடைய அன்பின் பாதுகாப்பிலிருப்பதை அவன் அறிந்திருந்தான். வார்த்தைகளால் தன்னுடைய நன்றிகலந்த வணக்கத்தை அலேக்ஸாந்தருக்குத் தெரிவிக்க அவஞல் முடியவில்லே. மாசிடோனியன் அவனுக்குத் தண்ணீர் கொடுத்து அவன் தாகத்தைத் தீர்த்தான். அதுவே அவன் கடைசியாகக் குடித்த தண்ணீர். சைகை மூலமாக டாரியஸ் தன்னுடை வணக்கத்தை மாசிடோனியனுக்களித்தான். அலேக்ஸாந்தர் அந்தப் பிரேதத்தைத் உற்று நோக்கிஞன். இரக்கத்திஞல் உந்தப்பட்டு தன்னுடைய அங்கியிஞல் டாரியஸின் பிரேதத்தை மூடிஞன். அலேக்ஸாந்தர் அவனே உயிருடன் பார்த்திருப்பாஞகில் அவனேக் கொன்றிருக்க மாட்டான். சகலமரியாதையோடும் அவனுடைய உடலே அவன் தாயிடமனுப்பிஞன். பெர்ஸிபோலிஸில் அவனுடைய முன்ஞேர்களே அடக்கம் செய்த இடத்தில் அவன் அடக்கம் செய்யப்பட்டான்.

## 12. ஆசியாவின் மன்னஞகிய அலேக்ஸாந்தருடைய கொள்கையின் உள்ளுயிர்

### அலேக்ஸாந்தருடைய கொள்கையில் மாறுதல்

ஐரோப்பியர்கள் தூரக் கிழக்கு நாடுகளென்று எண்ணிவந்த நாடுகளே வென்றதையும், புதிய நாடுகளே அவன் கண்டு பிடித்ததையும் ஆராய்ந்து பார்ப்பதற்கு முன், மன்னன் என்ற முறையில் அவனுடைய கருத்தை நாம் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது. அவன் கௌகமேலாவில் வெற்றிகொண்டதிலிருந்து அவன் டாரியஸைப் பின்தொடர்ந்துபிடிக்க முயன்றவரையிலுள்ள மாதங்கள் மிகவும் நெருக்கடியானவை. இக்காலத்தில் அவனுடைய அரசியல் கொள்கையிலும், அவனுடைய கடமையிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டன.

### அவனுடைய சகிப்புத்தன்மைக் கோட்பாடு

அவன் வென்ற நாடுகளில் சகிப்புத்தன்மை என்ற கொள்கையைப் பின்பற்றிஞன். அக்கொள்கை அவனுடைய பரந்த நோக்கத்

திறனும், அரசியல் திறமையினாலும் ஏற்பட்டது. எல்லா நாடு களுக்கும் பொதுவான ஒரு திட்டத்தை அவன் உண்டாக்கவில்லை. ஒவ்வொரு நாடும் அதற்குச் சொந்தமான நிறுவனங்களைப் பாது காத்துக் கொள்ளவேண்டுமென வற்புறுத்தினான். அவன் ஒரு நூதன கொள்கையை அனுசரித்தான். அதுதான் அதிகாரப் பங்கீட்டு முறை. அவன் பாரசீக அரசியல் முறையில் அதிகாரப் பங்கீடென்ற நூதன முறையைப் புகுத்தினான். பாரசீகப் பேரரசில் மாநிலக் கவர் னருக்கு முழு அதிகாரம் கொடுக்கப்பட்டிருந்தது. அவன் வெறும் படைத் தலைவனாகமட்டுமிருக்கவில்லை, நிர்வாகத்துறைத் தலைவ னாகவும், கருவூலத்தின் தலைவனாகவுமிருந்தான். ஆகவே, நிர்வாகம், படை, நிதி இம் மூன்றும் அவனுடைய ஆதிக்கத்தி லிருந்தன. அலெக்ஸாந்தரின் ஆட்சியில் மாநிலக் கவர்னருக்கு உள் நாட்டு நிர்வாகத்தின்மீது மட்டும் ஆதிக்கம் அளிக்கப்பட்டது. மாநிலத்தின் நிதி விவகாரங்களை கவனிக்க ஓர் அதிகாரியையும், படைக்குத் தலைமைதாங்கிச் செல்ல ஓர் அதிகாரியையும் அவன் நியமித்தான். இவர்கள் இருவரும் நிர்வாகத் தலைவனுக்குக் கட்டுப் பட்டவர்களல்லர். இவர்கள் மூவரும் தனித்தனியே பேரரசனின் ஆணைக்கு மட்டும் கட்டுபட்டு நடக்கவேண்டும். அவனுடைய அதிகாரப் பங்கீட்டு முறை மாநிலங்களில் கலகங்கள் எழும்பா வண்ணம் தடுப்பதற்காக ஏற்படுத்தப்பட்டது. சமய சம்பந்தமான காரியங்களில் அவன் எகிப்திலும், பாபிலோனியாவிலும் எவ்வளவு பரந்த நோக்கத்தோடும், சகிப்புத்தன்மையோடும் நடந்துகொண் டானென்பதை நாமறிவோம்.

### பேரரசனின் வாரிசு என்ற முறையில் அவன் பின்பற்றிய கொள்கை

மாசிடோனிய மன்னனும், கிரேக்க நாடுகளின் படைத் தலைவனும், கிரேக்கர்களின் வாகை வீரனுமாகிய அலெக்ஸாந்தரின் கொள்கை நம்மை வியப்படையச்செய்கிறது. அவன் வென்ற நாடு களிலுள்ள புறச்சாதியார்களைக் கோழைத் தன்மையுள்ளவர்க ளென்றும், கிரேக்கர்களுக்குக் கீழ்ப்பட்ட இனத்தவர்களென்றும் கருதி, அவர்களைப் புறக்கணித்துவிடவில்லை. அலெக்ஸாந்த ரோடுவந்த கிரேக்கர்களும் மாசிடோனியர்களும், கிழக்கு நாடுகள் கொள்ளையடித்தற்குத் தகுந்த இடமென்றும், தங்களுடைய அறிவுத் திறமையினாலும் வீரத்தினாலும், அங்குள்ள செல்வங்களைப் பறிப்பதற் கேற்ற நாடுகளென்றும் கருதினார்கள். தங்களுடைய அடிமைகளாக வாழ்வதற்கென்றே இயற்கையவர்களைப் படைத்திருக்கிறதென்றும் எண்ணினார்கள். 'இயற்கையாகவே அடிமைகள்' என்று மக்க ளினத்தில் ஓர் பகுதியினரை அலெக்ஸாந்தருடைய ஆசிரியனாகிய அரிஸ்டாட்டில் கூறுகிறான். இஸ்ஸஸ், கௌகமேலா என்ற

இடங்களிலடைந்த வெற்றி, ஐரோப்பியர்கள் ஆசிய நாடுகளின் மக்களைவிடச் சிறப்பானவர்களென்பதை உணர்த்துகிறது. அலெக்ஸாந்தர் எவ்வளவுக்கெவ்வளவு வெற்றியின்மேல் வெற்றிப் பெற்றானே, அவ்வளவுக்கவ்வளவு அவனுடைய கருத்துக்களும் விரிவடைந்தன. அவன் தன்னைப்பற்றியும், ஆசியாவோடு தனக்குள்ள உறவைப் பற்றியும் உயர்வாக நினைக்க நேர்ந்தது. கிரேக்கர்களுக்கும், புறச் சாதியார்களுக்குமுள்ள உயர்வு தாழ்வு என்ற எண்ணத்தைத் தன்னுடைய மனத்திலிருந்து துடைத்தெறிந்தான். கிரேக்கர்கள் ஆசியா நாட்டினரைவிட உயர்ந்தவர்களென்று பேசுவது ஓர் அர்த்தமற்ற பேச்சென்று எண்ணினான். பேரரசை ஏற்படுத்தத் திட்டமிட்டபோது, அப் பேரரசில் சமத்துவம் நிலைபெற வேண்டுமென்பதே அவனுடைய நோக்கம். ஐரோப்பியர்களுக்கும் ஆசியா மக்களுக்குமிடையே எவ்விதமான உயர்வு தாழ்வும் இருத்தல் கூடாதென்பதையும் அவன் தன்னுடைய கருத்தில் வைத்தான். அவன் பாரசீகர்களுக்கும் மாசிடோனியர்களுக்கும் சொந்தமான அரசனாக விரும்பினானே தவிர, அவன் மாசிடோனியர்களின் அரசனாக இருப்பதை விரும்பவில்லை. இந்த எண்ணம் கௌகமேலா யுத்தகளத்திற்குப்பின் அவனிடமிருந்து வெளிப்பட்டது. சரணடைந்த பாரசீக நாட்டு பிரபுக்களையும், கவர்னர்களையும் அன்போடும் கண்ணியத்தோடும் வரவேற்றான். இரானியப் பிரபுக்களிடமுள்ள அருங்குணங்களை அறிந்துகொள்ளவும், அவற்றிற்காக அவர்களைப் புகழ்ந்து பேசவும் கற்றுக் கொண்டான். சில கிழக்கு மாகாணங்களில் பாரசீகர்களை சாட்டராப்புகளாக நியமித்தான். உதாரணமாக, பாபிலோனுக்கு மாஸேயஸை சாட்டராப்பாக நியமித்தான். அவனுடைய அரசவையில் ஐரோப்பியர்கள் மட்டும் அங்கத்தினர்களல்லர். கிழக்கு நாட்டின் அறிஞர்களும் அவனுடைய அரசவையில் அங்கத்தினர்களாக இருந்தார்கள். அவனுடைய அரசவையின் பண்பாட்டில் கிழக்கு நாடுகளின் பண்பாட்டையும் சேர்த்துக் கொண்டான். கிழக்கு நாடுகளிலுள்ளவர்கள், தங்களுடைய எசமானர்களுக்குமுன் முகங்குப்புற விழுந்து வணங்குவதும் அவனுடைய காலைத் தொட்டுக் கும்பிடுவதும் அவன் நின்று கொண்டிருக்கிற மண்ணை முத்துவதும் வழக்கம். அலெக்ஸாந்தர் அப்பழக்கத்தை ஆதரித்தான். தன்னுடைய கீழ்நாடுகளின் குடிமக்கள் தன்னை ஓர் அன்னியனாகக் கருதாமல், அவர்களில் ஒருவனென்று கருதவேண்டுமென விரும்பினான். அதற்காக அவன், பாரசீகப் பேரரசர்கள் உடையணிந்ததைப் போலவே உடுத்திக் கொண்டான். அரசவைச் சடங்குகள் கீழ்நாட்டு முறைப்படி நடப்பதை அவன் ஒப்புக் கொண்டான். இக்கொள்கை வீரம் நிறைந்த ஓர் புதிய கொள்கையாகும். இக்கொள்கை அவனுடைய அரும்பெரும் சேவைக்கு இணக்கமானதாகும். அது கிழக்கிற்கும்,

மேல்நாடுகளுக்குமுள்ள தடுப்புச் சுவரை உடைத்தெறிந்தது. இவ்விதமான அவனுடைய கோட்பாட்டை நாம் அவனுடைய வாழ்க்கையின் ஆரம்பத்தில் காண்பதரிது. இக்கொள்கையில் அவனுடைய தான் என்ற ஆணவமும் கலந்திருந்தது. அது அவனுக்கு அவனுடைய சொந்த இனத்தவர்களாலும் நாட்டினராலும் தொல்லைகளைக் கொண்டு வந்தது. மாசிடோனியர்கள் தங்களுடைய மன்னனுடைய புதிய வழியையெதிர்த்தார்கள். ஆசிய நாட்டினர்களின் செல்வாக்குப் பெருகுவதைக் கண்டு அவர்கள் மனம் புழுங்கினர்கள். அவர்கள் அலெக்ஸாந்தர் பாரசீக மன்னர்களின் உடையில் காட்சியளித்தபோது அதைக்கண்டு அதிர்ச்சியுற்றூர்கள். மாசிடோனிய நாட்டு அரசியல் கோட்பாடு அலெக்ஸாந்தருடைய பேரரசு நிலைமைக்கு இசைந்து வராததொன்ருகும். அவன் பலவிதமான சடங்குகள், முறைகள் முதலியவற்ருல் சூழப்பட்டிருந்ததைக் கண்ட மாசிடோனியர்கள், அவன்மீது அருவருப்புக் கொண்டார்கள். அரசியல், படை முதலியவற்றைப்பற்றிய பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் அவன் தன்னுடைய நாட்களைக் கழித்ததுண்டு. அத்துடன் மேற்கத்தியர்களை அவர்களுடைய மனம் புண்படாமல் கிழக்கத்தியர்களோடு சமரசம் செய்து வைப்பதற்காக ஏற்பட்ட பிரச்சினை அவனுடைய எல்லா பிரச்சினைகளிலும் மிகவும் கடினமான பிரச்சினையாக இருந்தது.



The Empire of
ALEXANDER THE GREAT
Parasangs
Stadia
English Miles
Empire of Alexander
States federated to the Empire
Independent States
Route of Alexander the Great
Route of Nearchus
Route of Craterus
MEDITERRANEAN SEA
PONTUS, EUXINE
CASPIAN SEA
ARABIA
LIBYA
EGYPT
INDIAN OCEAN
MACEDONIA
THRACE
CAPPADOCIA
ARMENIA
MESOPOTAMIA
PARTHIA
GEDROSIA
CARMANIA
ARACHOSIA
Scythians
Babylon
Persepolis
Alexandria

# 18. தூரக்கிழக்கு நாடுகளின் படையெடுப்பும் வெற்றியும்

## 1. ஹிர்கேனியா, ஆப்பிரிக்கா, பாக்டீரியா, சோக்டியாஞ

ஹிர்கேனியா (Hyrcania) (டாபரிஸ்தான், மஜேந்திரன்) வெற்றி கி.மு. 330. அஸ்ட்ராபாத் (மேஷேத் அருகில்) அலெக்ஸாண் டிரியா அரியோன் (ஹெராட்) டிராங்கியாஞவைக் கைப்பற்றல்; பார்ஸெஸ்டஸ் கொல்லப்படல்.

டாரியஸைக் கொன்றவர்கள் ஓட்டம்பிடித்தனர். பெஸ்ஸஸ் (Bessus) பாக்டிரியாவிற்கும், நபர்ஜனஸ் ஹிர்கேனியாவிற்கும் ஓடினர். அவர்கள் ஓடிய திசையில் அலேக்ஸாந்தர் முன்னேறினுன். கேஸ்டிரியஸ் பகுதியில் ஓர் எதிரி இருக்கும்போது அவர் பெஸ்ஸ ஸைத் துரத்திச் செல்லமுடியவில்லே. அதனுல் அவருடைய முதல் வேலே பார்த்தியாவிலிருந்து தென் காஸ்பியன் கடற்கரையைப் பிரிக்கும் எல்பர்ஜ் மலேத் தொடரைக் கடந்து, தாபுரி (Tapuri) மார்தி (Mardi) ஆகிய நிலங்களே அடிப்படுத்துவதாய் இருந்தது. இந்தப் பகுதிகளில் ஒதுங்கியிருந்த பாரசீக அதிகாரிகள் அடிபணிந் தனர். அதனுல் ஆதரவு அளிக்கப்பட்டனர். நபர்ஜனஸின் உயிர் காப்பாற்றப்பட்டது. தாபூரிய மலேகளில் புகலடைந்திருந்த கிரேக்கச் செல்வர்கள் ஒப்பந்தத்திற்கு இணங்கி அடிபணிந்தனர். மாசிடோனுக்காகக் கிரீஸில் புகுந்தவர்கள் எல்லோரும் விடுதலே செய்யப்பட்டனர். மற்றவர்கள் டாரியஸிடம் பெற்றுவந்த அதே சம்பளத்திற்கு மாசிடோனியப் படையில் பணி செய்யுமாறு வற்புறுத் தப்பட்டனர். காடுகள் அடர்ந்திருந்த தெற்கு காஸ்பியன் கரையின் இன்றியமையாத்தன்மையை அலேக்ஸாந்தர் உணர்ந்தான். அதனுல் அவன் எக்படஞவிலிருந்து கிளம்பி,கடலின் தென் மேற்குப் பக்கத்தின் காடுசியன் எல்லேப்பகுதியைப் பிடிக்குமாறு பர்ாமேனியோ

விற்குக் கட்டளை அனுப்பினன். அவனும் காலந்தாழ்த்திக் கொண் டிருக்க முடியவில்லை. ஜத்ரா கார்ட்டாவில் (zadracarta) இரண்டு வாரங்கள் தங்கி விளையாட்டுப் போட்டிகள் நடத்திய பிறகு கிழக்கு நோக்கி அரியாவிற்கு வடக்கே இருந்த சூசியாவிற்குச் சென்ருன். அங்கு அரியாவின் கவர்னரான சதிபர் ஜனஸ், அவனைச் சந்தித்து அடிபணிந்தான். அவருடைய மாகாணத்தில் அவன் பதவியை அலெக்ஸாந்தர் உறுதிப்படுத்தினன். அங்கே பெஸ்ஸஸ், ஆர்டா ஸெர்ஸஸ் என்ற பெயருடன் பேரரசனுக்குரிய நடைமுறைகளை மேற் கொண்டுவிட்டான் என்றும், அவன் தன்னுடைய தலைப்பாகையை 'நேராக' அணிந்துகொண்டிருக்கிருன் என்றும் செய்திகள் வந்தன. அலெக்ஸாந்தர் உடனே பாக்டீரியாவிற்குச் செல்லும் பாதையில் புறப்பட்டான். இவன் சென்ற அப்பாதை மேரு (Merv) விஞல் போடப்பட்டிருக்கக்கூடும். மத்திய ஆசியாவின் காடுகளில் பழக்கப்பட்ட போக்குவரத்துப் பாதைகள் பல, ஆயிரமாண்டுகளாக அப்படியே இருக்கின்றன. ஆனல் அவன் சிறிது தூரம் செல்வ தற்குள், சதிபர் ஜனஸ் அவனுக்குப் பின்னல் கிளர்ச்சி செய்துள் ளான் என்ற செய்தியைக் கேட்டு அவன் திடுக்கிட்டான். எனவே தன் பயணத்தைவிட்டுத் திரும்பிவந்து அரியா மாகாணத்தைப் பெறுவதைக்காட்டிலும் செய்யத்தக்கது வேருென்றும் இல்லை எனக் கருதினன். ஏனெனில் அந்த மாகாணம் தனியாக இருக்கமுடிய வில்லை. டாரியஸைக் கொன்றவர்களுள் ஒருவரான பர்சான் டெஸின் மாகாணத்தைச் சேர்ந்த டிராங்கியான; அரகோசியா முதலிய அருகிலுள்ள நாடுகளினல் பகைமை கொள்ளப்பட்ட நாடாய் இது இருந்தது. தம் படையின் ஒரு பகுதியுடன் வல்விரை வாகத் திரும்பிப் பின்சென்று, இரண்டு நாளில் அலெக்ஸாந்தர் ஆசியாவின் தலைநகரான அர்டோகோனவிற்குச் (Artocoana) சதிபர்ஜனஸ், பாக்டிரியாவில் பெஸ்ஸஸைத் தேடுவதற்காகக் குதிரை மீது ஏறிச்சென்ருன். மலைகளுக்கு ஓடிச்சென்ற அவனு டைய துருப்புக்கள் பின்தொடரப்பட்டு வெல்லப்பட்டன. அங்கு மேலும் எவ்வித எதிர்ப்பும் ஏற்படவில்லை. அதனல் வெற்றியாளர் தெற்குப் பக்கமாக டிரங்கியானவிற்குச் சென்றனர். அவனுடைய பாதை தவருனதாக இருக்கமுடியாது; அந்தப் பாதை ஹிராத் மூலம் செயிஸ்டானுக்குச் செல்வதாயிருந்தது. அரியாக்களின் அலெக்ஸாந்திரியா என்ற புதிய மாகாணத்திற்குத் தலைநகராகவும் கோட்டைகொத்தளங்கள் நிறுவுவதற்கு ஏற்ற இடமாகவும் இருந் திருக்கலாம். எவ்வித தாக்குதலுமின்றி டிராங்கியான அடி பணிந்தது. இந்தியர்களிடம் ஓடிச்சென்ற சாட்ராப் அவர்களால் கைவிடப்பட்டுக் கொல்லப்பட்டான்.

**(? செயிஸ்டானில் பரா) பைலோடஸின் சதி, பார்மேனி யோவின் விதி.**

டிராங்கியானு நாட்டின் தலைநகரான பிராப்தாசியாவில் ஒரு அவல நிகழ்ச்சி நிகழ்ந்தது. அதைப்பற்றி நமக்கு அதிகம் தெரியாத தால் அதன் குற்றங்குறைகளை மதிப்பிடமுடியாமல் இருக்கிறது. பார்மேனியோவின் மகனான பிலோடஸ், அலெக்ஸாந்தரின் உயிருக்கு உலைவைக்கச் சதி செய்ததாக அவன் காதுகளுக்குச் செய்தி எட்டியது. அரசன் மாசிடோனியர்களை அழைத்துக் கூட்டங் கூட்டித் தளபதிக்கு எதிரான குற்றங்களைக்கூறினான். அலெக்ஸாந் தரைக் கொல்லச் சதி செய்ததாகப் பிலோடஸ் ஒப்புக்கொண்டான். ஆனால் அதைப்பற்றி விரிவாக ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் இது அவன்மேல் சாட்டப்பட்ட பல குற்றங்களுள் ஒன்றே ஆகும். மாசிடோனியர்களில் பெரும்பாலோர் கிழக்குப் பகுதியைப்பற்றி அரசன் கொண்டிருந்த கொள்கையின் வளர்ச்சிகளைப்பற்றி அதிருப்தி கொண்டிருந்தாலும், பிலோடஸைக் குற்றவாளி என்றே தீர்மானித்தனர். அவர்களுடைய ஈட்டிகளால் பிலோடஸ் குத்தித் துளைக்கப்பட்டான் மகன் இறந்துவிட்டான். ஆனால், தன் மகனான பிலோடஸின் துரோகச் சதிகளில் ஈடுபட்டிருந்தாலும் படாவிட் டாலும், தந்தையை உயிருடன் விட்டுவைப்பது ஆபத்தாக இருந்தது. மிக விரைவில் செல்லும்படி மீடியாவிற்கு (Media) ஒரு தூதுவன் அனுப்பப்பட்டான். பழைய தளபதியைக் கொல்லும்படி பார்மேனியோவின் படைத்தலைவர்கள் சிலருக்கு அனுப்பப்பட்ட ஆணைகளைத் தாங்கிக்கொண்டு அத்தூதுவன் சென்றான். பிலோ டஸின் குற்றம் உறுதிப்படுத்தப்பட்டால் அதை ஐயுறுவதற்கான காரணம் ஏதுமில்லை. பிலோடஸைப் பொறுத்தவரை, அலெக்ஸாந்தர் கடுமையான நடவடிக்கைகளை எடுத்ததற்காக அவரைக் குறைகூற முடியாது. அந்நடவடிக்கைகள் எடுப்பது அவருக்கே மனத்துன்பம் கொடுப்பதாய் இருந்திருக்கும். மாசிடோனியாவில் மன்னிக்கத்தக்க ஒரு குற்றமானது, தூர நாடுகளில் ஒரு பாசறைக்குள் கண்ணோட் டத்துடன் கவனிக்கப்படமுடியாதுதான். ஏனெனில் அங்கே வெற்றியும் பாதுகாப்பும், விசுவாசம், ஒழுங்குக்கட்டுப்பாடு இவற்றைப் பொறுத்தே அமைந்திருக்கும். ஆனால், பார்மேனி யோவின் மரணம், விசுவாசமற்ற ஒரு செயல் நடந்திருப்பதாக ஐயுற்று, முன்னெச்சரிக்கையாக மேற்கொண்ட ஒரு தற்செயலான நிகழ்ச்சியே ஆகும்; அவனுக்கு எதிரான சான்றுகள் ஒன்றும் காணப்படவில்லை; அவன்மேல் விசாரணை ஒன்றும் நடத்தப்பட வில்லை என்பதைத் திட்டவட்டமாகக் கூறலாம்.

**அலெக்ஸாந்தர். செயிஸ்டானில் குளிர்காலத்தில் தங்குதல் கி.மு. 330-29. அரகோசியாவில் அலெக்ஸாந்திரியா. காக்கசஸின் அலெக்ஸாந்திரியா (அல்லது ஹூபியன் கி.மு. 329—28.**

இதற்கிடையில் அலெக்ஸாந்தர் தம் திட்டங்களை மாற்றிக்கொண்டான். முன்பு விரும்பியபடி பாக்டீரியா வழியில் திரும்பிச் செல்வதற்குப்பதிலாக, அவன் ஒரு சுற்றுச் சுற்றிவரத் தீர்மானித்தான். ஆப்கானிஸ்தான் வழியாகச்சென்று அதைத் தன்னடிப்படுத்திக் கொண்டு, ஹிந்துகுஷ் மலைகளைத் தாண்டிக் கிழக்கிலிருந்து ஆக்ஸஸ் சமவெளியில் இறங்கலாம் என்று தீர்மானித்தான். முதலில் அவன் செயிஸ்டானையும், அப்போது கெட்ரோசியா என்று அழைக்கப்பட்ட பலுச்சிஸ்தானத்தின் வடமேற்குப் பகுதிகளையும் பெறலாம் என்று தெற்கு நோக்கி முன்னேறினான். 'நன்மை புரிவோர்,' என்று கிரேக்கர்களால் அழைக்கப்பட்ட அமைதியும் நட்பும் வாய்ந்த அரியாஸ்பே மக்கள் செயிஸ்டானின் தெற்கே வாழ்ந்துவந்தனர். அவர்கள் மத்தியில் அலெக்ஸாந்தர் குளிர்காலத்தின் ஒரு பகுதியைக் கழித்தான். அவர்களுடைய நிலப்பரப்பை ஒரு சிறிது பெருக்கியும், எந்த மாகாணத்துக்கும் அமையாமல் அவர்களைச் சுதந்தரமுடையவர்களாக்கியும், அவர்களை மகிழ்வித்தான். அருகிலிருந்த கோட்ரோசியர் தாங்களாகவேவந்து அவன் அடிபணிந்தனர். புராவைத் தலைநகராகக்கொண்டு கேட்ரோசியன் மாகாணம் உருவாக்கப்பட்டது. வசந்தகாலம் வந்தபோது அலெக்ஸாந்தர் ஹல்மன் சமவெளியை நோக்கி வட கிழக்காக முன்னேறிக் காந்தஹாருக்குச் சென்றான். காந்தஹார் என்ற பெயரை நாம் உச்சரிக்கும் போது நாம் வெற்றியாளர் ஒருவரின் பெயரை உச்சரிக்கிறோம் ஏனெனில் அவர் அரக்கோஜியாவில் நிறுவிய முக்கியமான நகரம் அநேகமாகக் காந்தஹாரின் அருகேயே இருந்தது. காந்தஹார் என்பது அலெக்ஸாந்திரியா என்பதன் சிதைவாகவே காணப்படுகிறது. வழி, மலைகளின்மீது கஜ்னியைத் தாண்டி, காபூல் (Cabul) நதியின் மேலைக்கரைச் சமவெளியில் சென்றது. அலெக்ஸாந்தர் உயர்ந்த மலைத்தொடரான ஹிந்துகுஷின் அடிவாரத்திற்கு வந்தான். உலகத்துக் கூரையிலிருந்து பிரிந்து செல்வதும், மத்திய பாகத்திலிருந்து தென் பாகத்தையும், மேற்கு ஆசியாவிலிருந்து கிழக்கு ஆசியாவையும் பிரித்துக்கொண்டு செல்லும் பாமீர்கள் ஹிந்துகுஷ், ஹிமாலயம் ஆகிய பெரிய மலைத்தொகுதிகள், கிரேக்கர்களால் காக்கசஸ் என்ற பொதுப்பெயரால் அழைக்கப்பட்டன. ஆனால் ஹிந்துகுஷ், பரோபானிஸஸ் (Paropanisus) என்ற சிறப்புப் பெயரால் தெளிவாக அறியப்பட்டது; ஹிமாலயம் இமாமஸ் (Imaus) என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப்பட்டது. ஹிந்து-குஷின் அடிவாரத்தில் அவன் குளிர் காலத்தைக் கழித்தான். இந்தப்

பகுதியை அடைவதற்காகக் காபூலுக்கு வடக்கே ஓரிடத்தில் மற்ருெரு அலெக்ஸாந்திரியாவை நிறுவினுன்; அது காக்கஸின் அலெக் ஸாந்திரியா என்று பிரித்தறியப்பட்டது. அவன் இந்தப் பகுதி களில் இருக்கும்போது, ஸாடிபார்சனஸ் இன்னும் அரீயாவில் தங்கி யிருந்து, ஒரு கிளர்ச்சியைத் தூண்டிக்கொண்டிருக்கிருன் என்று அறிந்தான். அவனை அடக்குவதற்காகச் சில படைகளை அனுப் பினுன்; இரு திறத்தார்க்குமிடையே போர் நடந்தது. அதில் ஸாடிபார்சனஸ் கொல்லப்பட்டார்.

(? குந்துஸ்) (தஸ்குர்கான்)

வசந்தகாலத் தொடக்கத்தில் காக்கசஸைக் கடக்க முற்பட்டது ஒரு பெரிய சாதனை ஆகும். வழி நடைத் துன்பங்களும், கடுங்குளிர், போதிய உணவுப் பொருள் இன்மை, ஆகிய இடையூறுகளும் பொறுத்துக் கொள்ளப்பட்டன. காக்கசஸைக் கடப்பது ஆல்பஸ் மலையை ஹான்னிபால் கடப்பது போன்றே கடினமாயிருந்தது. படை வீரர்கள் ரொட்டிக்குப்பதிலாக பச்சை இறைச்சியையும், சில்பியன் (silphlan) பூண்டையும் உண்ணுவதோடு மனநிறை வடைய நேரிட்டது. கடைசியில் வடக்குச் சரிவில் உள்ளதும், பாக்டிரியாவின் எல்லைக் கோட்டையுமான டிராப்சகாவை (Drapsaca) அவர்கள் அடைந்தனர். வழி நடையால் களைப்புற்ற படையைக் களைப்பாற்றிவிட்டு, அலெக்ஸாந்தர் அயோர்ன்ஸை கோட்டை வழியாகச் சமவெளிக்குக் கீழிறங்கிச் சென்ருன்; ஓர் எளிய நாட்டின் வழியாகப் பாக்டிரியாவிற்குச் சென்ருன். அது அந்த நாட்டின் முக்கிய நகரம். அது தன் பழைய சுற்றுப்புறத்தைப் பாதுகாத்து வைத்துள்ளது. ஆனுல் பால்க் (Balklh) என்று தன்னுடைய பெயரை மாற்றிக்கொண்டுள்ளது.

பாக்டிரியாவை வசப்படுத்திக் கொள்ளுதல் (ஆர். சாருவ்ஷன்)

படையின் முன்னேற்றத்தைத் தடுப்பதற்காக, பெஸ்ஸஸ் ஆர்டாசெர்ஸஸ் என்ற கபடன், மலைகளின் அடிவாரம்வரை வெட்டி, கிழக்கு பாக்டிரியாவை வீணுக்கினுன். ஆனுல் அலெக்ஸாந்தர் அருகில் வந்தபோது அவன் ஆக்சஸின் குறுக்காக ஓட்டம் பிடித் தான். அவனுடைய சொந்த நாட்டுக் குதிரைப்படை அவனைக் கைவிட்டது. வாகைசூடிய பெரு வீரன் எவரும் எதிர்த்து நிற்க வில்லை. அதனுல் எவ்விதமான தாக்குதலுமின்றி மற்ருெரு மாகாணம் மாசிடோனியப் பேரரசிற்கு உரிமையாயிற்று. அந்த நாடோடியைத் தொடர்ந்து சோக்டியானுவிற்குள் அலெக்ஸாந்தர் உடனே சென்ருன். இந்த நாடு ஆக்சஸ் ஜக்சார்ட்டஸ் ஆகிய நீரோட்டங்களுக்கிடையே அமைந்துள்ளது. சோக்ட் (Sogd)

என்ற நதியின் பெயரிலிருந்து அது சோக்டியானு என்று அழைக்கப்பட்டது. அது அந்நாட்டின் வழியாக ஓடி, சாமர்க்கண்ட,




புக்காரா, நகரங்களுக்கு அருகே சென்று ஆக்சஸின் நீரை அடையுமுன்பு, பாலைவனத்தின் மணல்களில் மறைந்துவிடுகிறது.

பெஸ்ஸஸ் தம்முடைய படகுகளை எரித்துவிட்டிருந்தான். அலெக்ஸாந்தர் வெப்பமிக்க பாலைநிலம் வழியே இரண்டு அல்லது மூன்று நாட்கள் நடந்து, களைப்புற்று ஆக்சஸின் கரைகளை அடைந்தபோது, அவன் தன்னுடைய படையினரைப் பழங்காலத்துச் சாதனமாகிய தோல்கள் மூலம் அக்கரைக்கு அனுப்ப நேர்ந்தது. மத்திய ஆசியா மக்கள் ஆற்றைக்கடக்கத் தோல்களைப் பயன்படுத்திவந்தனர்; இன்றும் அதனைப் பயன்படுத்தி வருகின்றனர். அலெக்ஸாந்தரின் படை வீரர்கள் செம்மறியாட்டுத் தோலினுல் ஆகியவை போன்ற பகுதியில் காற்றை அடைக்காமல். புற்களை அடைத்தனர். அவர்கள் கிளிப் (kilib) என்ற இடத்தில் ஆற்றைக் கடந்தனர். அந்த இடத்தில் அதன் எதிரெதிர் கரைகள் ஒரு மைலில் மூன்றில் இரண்டு பங்கு தூரத்தில் இருந்தன. பின்பு சாமர்க்கண்ட் என்று எளிதில் அறிந்துகொள்ளப்படுகின்ற அந்நாட்டின் முக்கிய நகரான மராகண்டாவை நோக்கி முன்னேறிச் சென்றனர்.

ஆக்சஸின் வடக்கே பெஸ்ஸஸுக்கு ஆதரவு ஏதுமில்லை. சோக்டியன் கூட்டாளிகள் சிலர் அவனுக்கு இருந்தனர். அவர்களுக்கு ஸ்பிடாமினெஸ் (Spitamenes) டாட்டாபெர்னஸ் (Dataphernes) என்போர் தலைவர்களாக இருந்தனர். ஆனுல் கபடன் ஒருவனுக்காக அவர்கள் தங்கள் நாட்டைத் தியாகம் செய்யத் தயாராயில்லை. அலெக்ஸாந்தரின் ஒரே நோக்கம் பெஸ்ஸியஸைப் பிடிப்பதுதான் என்றும், பிறகு அவன் சோக்டியானுவைவிட்டு வெளியேறி விடுவான் என்றும், தன் பேரரசின் வடக்கு எல்லையாக ஆக்சஸையே வைத்துக் கொண்டு விடுவான் என்றும் எண்ணிக்கொண்டு, அவர்கள் அந்த ஆக்கிரமிப்பாளனைப் பிடித்துத் தந்து விடுவதாக ஒரு செய்தியை அவனுக்கு அனுப்பினர். லாகஸ் (Lagus) என்ற மன்னனின் மகனுன டாலமியை, பெஸ்ஸியஸைப் பிடித்துவருவதற்காக, 6000 ஆட்களுடன் அனுப்பினர். சோக்டியன் நண்பர்களால் கைவிடப்பட்ட அவனை அவர்கள் சுவர் சூழ்ந்த ஒரு கிராமத்தில் கண்டுபிடித்தனர். அலெக்ஸாந்தரின் கட்டளைப்படி அவன் விலங்கு பூட்டப்பட்டு, நிர்வாணமாக, படை சென்று கொண்டிருந்த பாதையின் வலது பக்கத்தில் நிறுத்தப்பட்டிருந்தான். சிறைப்பட்ட அவனைக் கடந்து செல்லும் போது, அலெக்ஸாண்டர், அவனருகில் நின்று, அவன் அரசனும், மக்கட்கு நன்மை செய்பவனுமான டாரியஸைக் கொன்றதின் காரணத்தை வினவினன். வாகை வீரன் கருணையைப் பெறலாம் என்ற நம்பிக்கையுடன், மற்றப் பாரசீகப் பிரபுக்களுடன் சேர்ந்து அக் காரியத்தைச் செய்துவிட்டதாகப் பெஸ்ஸியஸ் பதிலளித்தான். அவன் சவுக்காலடிக்கப்பட்டு, பாக்டிரியாவிற்கு அனுப்பப்பட்டான். அங்கே தம் விதியை எண்ணிக்கொண்டு அவன் காத்திருந்தான்.

ஜக்ஸார்டஸ் நதி (சிர் தாரியா Syr Darya); டோன் (Don) அலெக்ஸாண்டிரியா எஸ்கேட், (கொட்ஜென்ட்), கி.மு. 328.

ஆனால், அலெக்ஸாந்தர் தன் செலவை (march) நிறுத்திக் கொள்ளவில்லை. சோக்டியானவை இணைத்துக் கொள்வதென்று தீர்மானித்துவிட்டான். தன் பேரரசின் வடக்கு எல்லையாக ஆக்ஸஸ் இல்லாமல், ஜக்ஸார்டஸே இருக்கவேண்டும் என்று கருதினன். பாலை நிலத்து மக்கள் இந்நதியை டனயிஸ் (Tanais) என்று அழைத்தனர். மயோடிக் (Maeotic) ஏரியில் தன் நீரைச் செலுத்துகின்ற தமக்கு அறிமுகமான டனயிஸ் நதி என்று கிரேக்கர்கள் எண்ணினர். அதனல் அதை ஆசியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடை எல்லையாகக் கருதினர். அதனல் அதற்கு அப்பால் வாழ்ந்த இடையர்களை 'ஐரோப்பாவின் சிதியர்கள் (Scythians),' என்று நினைத்தனர் என்று சொல்லப்படுகிறது. ஆனல் அவர்கள் இந்த மாதிரியான தவற்றைச் செய்துவிட முடியாது. ஏனெனில் அவர்கள் காஸ்பியன் கடல் சமுத்திரத்தின் ஒரு வளைகுடா என்றே கருதினர். இந்த இரு தவறுகள் ஒன்றுக்கொன்று முரணனவை. சாமர்க் கண்டைக் கைப்பற்றிக் காவலுக்காகப் போர் வீரர்களை நிறுத்தி வைத்துச் சென்ற படையினர் வடகிழக்காக, இயற்கை அவர்களுக்கு வகுத்துத் தந்த மாற்றமில்லாத பாதை வழியாகவே சென்றனர். சோக்டியன்கள் வடக்கேயிருந்து வரும் படையெடுப்பாளர்களுக்கு எதிராகத் தற்பாதுகாப்புக்காகக் கட்டிவைத்திருந்த ஏழு கோட்டைகளையும் கைப்பற்றிக் கொண்டனர். அப்பாதையின் மூலம் ஜக்ஸார்டஸை அடையலாம். அங்கே அந்த ஆறு, குளிர்ந்த பெர்கான (Fergana)ச் சமவெளியிலிருந்து புறப்பட்டு, திசை மாறி, ஸ்டெப்ஸ் (Steppes) என்ற பெருங் கரம்பு நிலத்தில் பாய்கிறது. அது மிக மிக முக்கியத்துவம் வாய்ந்த இடமாகும். ஏனெனில் பெர்கான, தென்மேற்கு ஆசியாவிற்கும், சீனவிற்கும் இடையே பெரும் போக்குவரத்து வாயிலாக விளங்குகிறது. டியான்-ஷன் (Tian-shan) மலைகளின் கணவாயாக உள்ளது. அது அடுத்த பக்கத்தில் காஷ்கர் (Kashgar) நாட்டில் இறங்கிச்செல்கிறது. இங்கே அலெக்ஸாண்டர் யுத்த தந்திர நுண்ணறிவுடன் தன் பேரரசின் எல்லையை நிலைநாட்ட முடிவு செய்தான். ஆற்றின் கரைகளில் 'கடைசி அலெக்ஸாண்டிரியா' (Alexandria the Ultimate) என்று அழைக்கப்பட்ட ஒரு புதிய நகரை அமைத்தான். அதன் சுற்றுப் புறத்தைப்பற்றி எவ்வித ஐயமும் இல்லை; அதுதான் பிற்காலத்து கொட்ஜெண்டாகும்.

### சோக்டியான அலெக்ஸாந்தருக்கு எதிராக எழல்

இதுவரை வந்து அரக்கோசியாவையும், பாக்டிரியாவையும் வென்ற எளிமையை மனத்தில் கொண்டு, வாகை வீரன அலெக்ஸாந்தர், ஆக்ஸஸுக்குப் பிறகு நிலைமை வேறு விதமாயிருக்கலாம்

என்று எண்ணாதவனைப்போலக் காணப்பட்டான். ஆனால் சோக்டியானத் தலைவர்கள் பாரசீகப் பிரபுக்களைப்போல் இல்லை; ஐரோப்பியப் படையெடுப்பாளருக்கு எதிராகத் தங்கள் சுதந்திரத்தைக் காத்துக் கொள்ள எவ்வித இடையூற்றையும் ஏற்கத் தயாராய் இருந்தனர். அலெக்ஸாண்டர் புதிய நகரத்தைப்பற்றித் திட்டமிட்டுக் கொண்டிருக்கும்போது, தன் பின்னாலுள்ள சில நாடுகள் போர்க்கோலம் பூண்டுள்ள செய்தியை அறிந்தான். ஸ்பிடாமினெஸ் அந்த இயக்கத்தின் தலைவனாயிருந்தான். அவனுக்கு ஆக்ஸியார்டஸ் போன்ற மற்ற தலைமையான சோக்டியன்கள் உதவியாயிருந்தனர். ஏழு கோட்டைகளிலும் விடப்பட்டிருந்த சில மாசிடோனியப் படை வீரர்களும் பிடிக்கப்பட்டு விட்டனர். சாமர்க்கண்ட் கோட்டையைப் பாதுகாத்து நின்ற படையும் கோட்டையில் பிடிக்கப்பட்டது. மேற்குப் பாலை நிலங்களுக்குச் செய்தியனுப்பப்பட்டது; மஸ்ஸாகெடே (massagetae) யும், மற்ற சிதியன் இனத்தவரும், உள் நுழைந்தவரைத் துரத்துவதற்காகக் கூட்டமாய்த் திரண்டு வந்தனர். அலெக்ஸாந்தருக்கு இது மிக்க நெருக்கடியான நேரமாகும்.

**கோடைக்காலம், 328 கி.மு. (உராட்யூப்)**

முதலில் அலெக்ஸாண்டர் கோட்டைகளை மீட்கப் புறப்பட்டான். இரண்டு நாட்களில் ஐந்து கோட்டைகளை அடைந்து, அவற்றைத் தீக்கு இரையாக்கினான். மிகப் பெரியதும், மிக வலிமை வாய்ந்ததுமான சைருபோளஸ் (Cyrupolis) மிக்க தொல்லை தந்தது; ஆனால் அலெக்ஸாண்டர் தோழர்கள் சிலருடன் சுவருக்கு அடியில் நீர் வற்றிய ஓடையின் மணலில் தவழ்ந்து சென்று படைகளுக்காக ஒரு வாயிலைத் திறந்து விட்டான். அந்நாட்டு மக்கள் மிகத் தீவிரமாக எதிர்த்து நின்றனர்; அச்சண்டையில் அரசர் காயமுற்றார். சைருபோலிஸ் கோட்டை வீழ்ந்த பிறகு, ஏழாவது நகரத்தினர் ஒப்பந்தம் செய்து கொண்டனர். இந்த இடங்களில் வாழ்ந்தவர்களில் மீதியிருந்தவர்கள், சங்கிலிகளால் பிணைக்கப்பட்டுப் புதிய அலெக்ஸாண்டிரியாவில் குடியேற்றுவதற்காக நடத்திச் செல்லப்பட்டனர்.

அடுத்த வேலை சாமர்க்கண்டிற்கு விடுதலை நல்குவதாய் இருந்திருக்க வேண்டும். ஆனால் அலெக்ஸாந்தருக்குப் புதியதோர் ஆபத்து காத்துக் கொண்டிருந்தது. அதனால் முற்றுகையிடப்பட்ட கோட்டைப் படையின் உதவிக்கு ஒரு சில ஆயிரம் துருப்புகளையே அவர் அனுப்ப முடிந்தது. வடக்கேயிருந்து இடையர்கள் ஜக்ஸார்டஸின் கரைகளில் வந்து குவிந்து கொண்டே இருந்தனர். அவர்கள் ஆற்றைக் கடந்து, பின்னாலிருந்து மாசிடோனியர்களுக்குப் பெருந்தொல்லை கொடுப்பதற்குத் தயாராய் இருந்தனர். அவர்கள் எல்லோரையும் முறியடித்து, ஆற்றின் பாதையை அடையும் வரை மேலும் முன்னேறுவது

முடியாத செயலாய் இருந்தது. களிமண்ணுலாகிய சுடாத கற்களால் அலெக்ஸாண்டிரியாவின் சுவர்கள் அவசரமாகக் கட்டப்பட்டன; குறுகிய காலமாகிய இருபது நாட்களுக்குள், அந்த இடம் வசிப்பதற்கு ஏற்ற இடமாக மாற்றப்பட்டுவிட்டது. இதற்குள் நாகரிகமற்றவர் களின் வீரர்கள் ஆரவாரிப்போடும், பேரிரைச்சலோடும் வடகரையில் நின்று கொண்டிருந்தனர். அலெக்ஸாந்தர் ஆற்றைக் கடப்பதெனத் தீர்மானித்தார். பலியாகக் கொடுக்கப்படும் படைப்புக்கள் பயன்தரத் தக்கவையாயில்லை; அவை அரசனுக்குத் துன்பம் வருவதை அறிவிக் கின்றன என்று குறி கூறுபவர் எச்சரித்தனர். ஆனால் அலெக் ஸாந்தர் அதனால் சிறிதும் மனங்கலங்கவில்லை. கரைக்கு எறிபடை எந்திரங்களைக் கொண்டு வந்து, இடையர்களைப் பயமுறுத் தினன். அவர்கள், தங்களிடத்தில் அவ்வளவு தூரத்திலிருந்து கற்களும் அம்புகளும் வந்து விழத் தொடங்கியதாலும், அவர் களுடைய தலைமைவீரர்களுள் ஒருவரின் குதிரை வீழ்ந்துவிட்ட தாலும், கரையிலிருந்து சிறிது தூரத்திற்குப் பின்வாங்கி ஓடினர். அதுவே படை ஆற்றைக் கடப்பதற்கேற்ற காலமாயிருந்தது. சிதியன்கள் முறியடிக்கப்பட்டனர். அலெக்ஸாந்தர் தன் குதிரைப் படையின் தலைவனை, அவர்களைக் கரம்பு நிலமான 'ஸ்டெப்புகள்' (Steppes) வரை துரத்திச் சென்றான் கடுமையான கோடை வெப்பத்தால் நாவறட்சியுற்ற அரசன், பாஸ் நிலத்திலிருந்த அசுத்த நீரைக் குடித்தான். அதனால் பயங்கர நோய்வாய்ப்பட்டான். இவ்வாறு பலியாகக் கொடுக்கும் படைப்புக்களைப் பற்றிய ஆருடம் [illegible]ந்து.

**அலெக்ஸாந்தர் மேற்கு சோக்டியானவில் குளிர்காலத்தைக் கழித்தல், கி.மு. 328-7. ஜாரியாஸ்பாவில் (சார்ஜுயியில்)**

அதிர்ஷ்டவசமாக அலெக்ஸாண்டர் விரைவில் குணமடைந்தார். ஏனெனில் தெற்கேயிருந்து துன்பச் செய்தி ஒன்று வந்தது. உதவிப்படை மாரகண்டாவை அடைந்தபோது, ஸ்பிடமெனுஸ் சோக்டியான நகருக்கு மேற்காக ஓடிவிட்டான். மாசிடோனியர்கள் அவனை நாட்டைவிட்டே முழுதும் ஓட்டிவிடலாமென்று நம்பிக் கொண்டு அவனுக்குப்பின்னல் படையுடன் சென்றனர். ஆனால் அவர்கள் முன்யோசனை யுடையவர்களாய் இருக்கவில்லை. முழுப் படையும் துண்டிக்கப்பட்டது. இந்தப் பேராபத்தை அறிந்த அலெக்ஸாந்தர் சாமர்க்கண்டிற்குக் குதிரைப் படையுடனும், கனங் குறைந்த துருப்புக்களுடனும் விரைந்தான். ஒருநாளைக்கு ஐம்பது அல்லது அறுபது மைல்கள் விதம் பிரயாணம் செய்து மூன்று நாட்களில் சாமர்க்கண்டை அடைந்தனர். எவ்வளவுதான் கனங் குறைந்த தளவாடங்களைப் பெற்றிருப்பினும், சோக்டியன் நாட்டில் கோடைக் காலத்தில், காலாட் படையினர் அவ்வளவு வேகமாகச்

சென்றிருக்கவே முடியாது. சாமர்க்கண்டை முற்றுகையிடுவதற்காகத் திரும்பிவந்திருந்த ஸ்பிடாமெனஸ், அலெக்ஸாந்தரின் வருகையை அறிந்து மேற்கு நோக்கி மீண்டும் பாய்ந்து சென்றான். ஆனால் அலெக்ஸாந்தர் அவனைத் துரத்திக்கொண்டு சென்றான். சோக்டின் கரையில் தன் படையினர் வெட்டப்பட்டிருந்த இடத்தைப் பார்வையிட்ட வல்லரசன், இறந்தவர்களைப் புதைத்தான். பிறகு ஆற்றைக் கடந்து அந்த நாடோடிக் குறுநில மன்னரையும், அவருடைய சிதியன் கூட்டாளிப் படைகளையும் துரத்திக்கொண்டே பாலை நிலத்தின் எல்லைவரை சென்றான். நாட்டைப் பாழ்படுத்திக் கொண்டே சோக்டியானாவைத் தாண்டிச் சென்றான். பிறகு தென் மேற்காக ஆக்ஸஸுக்குச் சென்று, மேற்குப் பாக்டிரியாவை கடந்து சென்றான். ஜாரியாஸ்பாவில் குளிர்காலத்தைக் கழித்தான். சோக்டியன் நகரங்களான மரகண்டாவும், சோக்டியானாவும் தங்களுக்குள் கொண்டிருந்த தொடர்புகளைப் போலவே, பாக்டிரியன் நகரங்களான ஜாரியாஸ்பாவும், பாக்டிரியாவும் ஒன்றுக்கொன்று தொடர்புள்ளவையாயிருந்தன.

### பெஸ்ஸஸின் இறுதிக்காலம்; அலெக்ஸாந்தரின் கீழை நாட்டு அரசியல் கொள்கை.

ஜாரியாஸ்பாவில், டேரியஸின் கொலைக்காக, பெஸ்ஸஸ் முறையாக விசாரணை செய்யப்பட்டான். அவனுடைய மூக்கும் காதுகளும் துண்டிக்கப்பட்டபின், சிலுவையில் அறைந்து கொல்வதற்காக எக்படனாவுக்கு (Ecbatana) அழைத்துச் செல்லப்பட்டான். நம்மைப்போலவே கிரேக்கர்களும் உறுப்புக்குறை செய்தலை நாகரிகமற்ற தண்டனையாகவே கருதினர். இந்தக் கொள்கையை அலெக்ஸாந்தர் மீறியது மகிழ்ச்சிதரத்தக்க செய்தியன்று. ஆனால் கீழை நாட்டவர்களுக்குக் கீழை நாட்டு முறைப்படி தண்டனை கொடுப்பது, கீழை நாட்டின் மற்றப் பழக்கவழக்கங்களையும் மேற்கொள்வதாயின் ஏற்புடைத்தாகவே அமையும். அயலினத்தவரை வெற்றிகொள்ளும் ஒவ்வொரு வெற்றியாளருக்கும் மிகக் கடினமான சிக்கல்கள் ஏற்பட்டு விடுகின்றன. தம்முடைய கொள்கைகளுக்கும் இலட்சியங்களுக்கும் முரண்பாடான அயல்நாட்டுப் பழக்கவழக்கங்களை மேற்கொண்டு தம்முடைய கொள்கை, இலட்சியங்களுக்கு அவர் ஊறு செய்வாரா? அல்லது அவர் தம்முடைய சொந்த நாகரிகத்தின் கொள்கைகளை விடாப்பிடியாகவும். உறுதியாகவும் பற்றி, புதிய குடிமக்களோடு எவ்விதத் தொடர்பும் இல்லாமல் இருப்பாரா? வெல்லப்பட்ட நாட்டின் ஆட்சிமுறைக்கு மிகச் சிறந்ததான கொள்கையை மேற்கொள்வாரா, அல்லது, தம்முடைய தாய்நாட்டில் மேற்கொள்ளப் படுவதும் ஏற்றுக்கொள்ளப்படுவதுமான, ஆனால் வேறிடங்களில்

பயனற்ற அல்லது ஆபத்து மிக்கதுமான ஒரு கொள்கையைச் சுமத்து வாரா? அலெக்ஸாந்தர் இரண்டாவது முறையை ஏற்கவில்லை. கிரேக்க நாகரிகத்தைக் கிழக்கே பரப்புவதுதான் அவருடைய வாழ்க்கையின் பெரும் வேலையாக இருந்தது. ஆனால் இச் செயல் கிரேக்கர்களின் தளபதி அல்லது மாசிடோனியாவின் பாசிலியஸ் (basileus) ஆகிய அந்நியரால் செய்யமுடியாது என்று அவன் உணர்ந்தான். கீழ் நாட்டவரை அவர்களுடைய முறையில் சென்று அணுகவேண்டும்; அவர்களுடைய சொந்த பாணியில் அவர்களுடைய அரசராய் ஆகவேண்டும் என்று விரும்பினான். கிரேக்க நாகரிகத்தை அவர் களிடையே நிலைநாட்டுவதற்கு மிகச்சிறந்த உறுதியான வழி அவர் களுடைய விருப்பு வெறுப்புக்களை அனுதாபத்துடன் காண்பதுதான் என்று கண்டான். அதனால் அலெக்ஸாந்தர், கிழக்கத்திய ஆடம் பரம்மிக்க பேரரசனின் முறையை மேற்கொண்டான்; கீழை நாட்டுக் குடிமக்கள் தம்மைத் தாழ்ந்து பணிந்திடவேண்டும் என்று விதித்தான். அரசன் தெய்வத்தின் வடிவமே என்ற வழக்கு மொழியைத் தானும் மேற்கொண்டான். அவன் டாரியஸுக்கு அடுத்ததாகப் பட்டத்துக்கு வந்தவன். அதனால் அந்த முடியர சரைக் கொன்றது தம்மையே கொன்றதுபோன்ற பெருங் குற்றமு மாகும் என்று கருதினான். அதனால் கீழைநாட்டுக் குடிமக்களுக்கு மனத்தில் பதியும்படியான ஓர் எடுத்துக்காட்டாக, அந்த அரசரைக் கொன்றவருக்குக் கிழக்கு நாட்டுப் பாணியில் தண்டனை கொடுக்கும் செயலை வேண்டுமென்றே மேற்கொண்டான்.

**மாசிடோனியர்களிடம் புகழ் குறையப் பெறல்**

அலெக்ஸாந்தர் கீழைநாட்டு அரசமுறைகளை மேற்கொண்டதும், பாரசீகர்களிடம் அவன் காட்டிய கருணையும், மாசிடோனிர்களால் மிகவும் வெறுக்கும் செயல்களாக இருந்தமை ஒரு துரதிர்ஷ்டமாகும். இரண்டுபட்ட கொள்கைகளை, ஒன்று அவருடைய தோழர்களுக் காகவும், மற்றொன்று அவருடைய பாரசீக அமைச்சர்களுக்காகவும், வைத்திருப்பது எப்பொழுதும் கடினமாகும். இந்த முரண்பாட்டை எப்பொழுதும் வைத்திருக்கவேண்டும் என்பது அலெக்ஸாந்தரின் கொள்கை அன்று. மாசிடோனியர்களுக்கும் பாரசீகர்களுக்கும் பொதுவான அரசனாகிய தன்னிடம் அவர்கள் கடைசியில் ஒரே மாதிரியான தொடர்புகொள்வார்கள் என்றே அவன் நம்பினான். இதற்கிடையே படையெடுப்புக்களுக்கிடையே கிடைத்த ஓய்வின் போது மாசிடோனியர்களுக்குள் அதிருப்தி புகையத் தொடங்கியது. அவர்கள் தங்களுடைய அரசரிடம் அன்பு பாராட்டியபோதிலும், அவன் வெற்றிக்காகத் தாங்கள் உதவிபுரிந்ததை எண்ணிப் பெருமை கொள்பவராய் இருந்தபோதிலும், கிரானிகஸில் வெற்றியடைந்த போது இருந்தவரை போலவே அவர் இப்போது இல்லை என்று

எண்ணினர். அடிவணங்கிய கீழை நாட்டினரால் உயர்த்தப்பட்ட பெருமித உணர்ச்சி அவரை மாற்றிவிட்டது; அவருடைய நம்பிக்கைக்கு உரிய பார்மேனியோ என்ற தளபதியை அவர் கொன்றது இந்த மாற்றத்தைக் குறிப்பதாகும் என்று உணரப்பட்டது.

**கி. மு. 327 (முதல் மாதங்கள்) சாமர்க்கண்டில் அலெக்ஸாந்தர்; க்ளிடஸ் கொலை செய்யப்படல்:**

வெறும் வாயை மெல்பவனுக்கு அவல் கிடைத்தாற் போல், அந்தச் சமயத்தில் அவர்களுடைய இந்த அதிருப்தி உணர்ச்சிக்குத் தற்செயலாக ஒரு நல்ல காரணமும் ஏற்பட்டது. சோக்டியானாவில் ஏற்பட்ட கிளர்ச்சி இயக்கங்கள், குளிர்காலம் முடியும் முன்னரே அலெக்ஸாந்தரை மீண்டும் ஆக்ஸஸுக்கு வரும்படி செய்தன. அவன் சாமர்க்கண்டில் சிறிது காலம் தங்கினான். நீண்ட காலமாக ஆக்ஸஸின் பிரதேசங்களில் தங்கியதனால் ஏற்பட்ட எதிர்பாராத தீய விளைவுகளில் ஒன்று, அதிக அளவில் குடிப்பழக்கம் படையில் பெரிகியதாகும். கோடைக் காலத்தில் மிகக் கடுமையான உஷ்ண நிலை பொறுக்க முடியாத நாவறட்சியை அடிக்கடி தேற்றுவித்தது. அதனால் மாசிடோனியர்கள் பாலைநிலத்திலிருந்த உப்பு நீரூற்றுக்களின் நீரையோ நகரத்தின் அசுத்த நீரையோ குடித்து நோய்வாய்ப்படாமலிருக்க, மிக்க போதை தரும் அந்நாட்டு மதுவாகிய திராட்சைரசத்தைக் குடித்துத் தம் தாகத்தைப் போக்குவது இன்றியமையாததெனக் கருதினர். அந்தச் சமயத்திலிருந்து அலெக்ஸாந்தர் குடிக்கும் மதுவின் அளவு அதிகப்பட்டு வந்ததுடன், குடிப்பதும் ஒரு வழக்கமாக ஆகிவிட்டது. ஒருநாள் இரவு சாமர்க்கண்ட் கோட்டையில் அவன் நீண்ட நேரம் குடித்துக் கொண்டிருந்தான். டையோஸ்கூரி (Dioscuri)யின் நினைவுநாளை அவன் விருந்துடன் கொண்டாடினான். அவனுடைய படையுடன் வந்திருந்த கிரேக்க நூலாசிரியர்கள் அவனை டையோஸ்கூரிக்குப் மேலாக உயர்த்திப் பேசி அவனுடைய சிறப்புக்களைப் புகழ்ந்தேத்தினர். ஆனால் அவனுடைய மாற்றாந்தாயின் மகனான க்ளிடஸ், குடிவெறி மிக்கவனாய்த் திடீரென்று எழுந்து, அவனுடைய சிறப்புக்களை இழித்துக்கூற முற்பட்டான். அவன் பேசத் தொடங்கியபின் உணர்ச்சி வசப்பட்டு, அலெக்ஸாந்தரைத் தாக்கி இகழ்ந்து கூறவும் முற்பட்டுவிட்டான். பார்மேனியோ, பிலோடஸ்போன்ற மாசிடோனிய வீரர்களுக்கு அலெக்ஸாந்தர் தான் பெற்ற வெற்றிகளுக்காகக் கடமைப்பட்டிருக்கிறான் என்றும், அலெக்ஸாந்தரின் உயிரைக் கிரானிகஸில் காப்பாற்றியது தான்தான் என்றும் அவன் கூறினான். இவ்விரண்டு பேச்சும் அலெக்ஸாந்தரின் உள்ளத்தில் பாய்ந்து அவனைத் துளைத்தன; அவனுடைய கோபத்தையும் பொங்கியெழச் செய்தன. அவன் எழுந்து நிற்க முயன்றுகொண்டே க்ளிடஸைப் பிடித்துக்

கட்டுமாறு உத்தரவிட்டான். குடிபோதையிலிருந்த அவனுடைய ஆணைகளுக்கு யாரும் கீழ்ப்படியவில்லை. டாலமியும், விருந்தில் கலந்துகொண்ட மற்றவர்களும், க்ளிடஸை அந்த மண்டபத்தை விட்டுப் பலவந்தமாக வெளியேற்றிக் கொண்டிருந்தனர். மற்ற வர்கள் அரசனின் சினத்தை அடக்க முயன்று கொண்டிருந்தனர். ஆனால் விரைவில் க்ளிடஸ் திரும்பிவந்து. வாயிலின் அருகில் நின்று கொண்டு, 'படையினர் போரிடுகின்றனர்; தளபதிகள் புகழடை கின்றனர். என்ற இகழ்ச்சிப் பொருள் தரும்படி யூரிபைடிஸ்ஸின் (Euripides) சில பாடல்களைக் கத்திப் பாடினான். அரசன் எழுந்து நின்றான்; மெய்காப்பாளரின் கையிலிருந்த ஒரு ஈட்டியை எடுத்துத் தம் மாற்றுந்தாய்க்குப் பிறந்த சகோதரன் மீது விரைவாக விட்டெறிந்தான். அவன் குடிபோதையிலிருந்த போதிலும், குறி தப்பவில்லை. க்ளடஸ் இறந்து விழ்ந்தான். பிறகு அலெக்ஸாந்தர் கழிவிரக்கங் கொண்டான். நண்பர்களைக் கொன்ற கொலையாளி என்று தன்னைத்தானே சிந்தித்துக்கொண்டு, ஊணுறக்கமில்லாமல் அவன் மூன்று நாட்களாகக் கூடாரத்திலேயே இருந்தான். அவனுடைய துக்கத்தில் படையினரும் பங்கெடுத்துக் கொண்டனர். க்ளிடஸ் கொல்லப்பட்டது நியாயமானதே என்று வாதம் செய்தனர். அன்று டையோனிசஸின் (Dionysus) விழாக் கொண்டாடப்பட்டதால் டையோனிசஸின் கோபமே அலெக்ஸாந்தர் மூலம் வெளிப்பட்டது என்றும், அதுவே அந்த அவலச் செயலுக்குக் காரணமாகும் என்றும் கூறப்பட்டது. அதனால் டையோனிசஸுக்குப் பதிலாக டையோஸ் கூரியைக் கொண்டாடினர்.

### பிராங்கிடே நகரம் (கிளிப்புக்கருகில்)

இந்தத் துரதிருஷ்டமான குடிபோதையில் ஏற்பட்ட கைகலப்பால் விளைந்த அவலச் செயல். அலெக்ஸாந்தரின் வாழ்க்கையில் அழிக்க முடியாத ஒரு மாசுபடிந்த கறையாக உள்ளது. ஆனால் சோக்டியானாவின் மீது அவன் படையெடுத்த செயலுடன் ஒப்பிடும் போது, அது ஒரு சாதாரணச் செயலாகவே காணப்பட்டது. பெஸ்ஸியஸைத் தொடர்ந்து துரத்திக்கொண்டு அவன் முதலில் ஆக்ஸஸைக் கடந்த போது, வழியிலிருந்த குறிப்பிடத்தக்க நகரம் ஒன்றினை அவன் நடத்திய முறையைப் பற்றி நாம் முன்பு பார்க்க வில்லை. மைலேடஸிலிருந்து (Mitetus) இருபதுமைல் தூரத்திலிருந்த அப்போலோ (Apollo) கோயிலின் பொறுப்பாளர்களாயிருந்த பிரான்கிடேக்கள் (the Branchidae) அக்கோயிலின் கருவறையிலிருந்த செல்வங்களைக் காட்டிக் கொடுத்து விட்டதாகக் குற்றஞ் சாட்டப் பட்டனர். அவர்களுடைய உயிர் மிலேசியன்களின் கோபத்திலிருந்து தப்பமுடியாதவையாய் இருந்தன. செர்க்ஸஸ்கள் (Xerxes) அவர் களைக் கிரேக்கர்கள் பின் தொடர்ந்துவந்து வஞ்சம் தீர்த்துக்கொள்ள

முடியாத தூரத்தில், மத்திய ஆசியாவிற்கு அனுப்பிவிட்டனர். அவர்கள் சோக்டியாஞவில் அலெக்ஸாந்தர் கடந்து சென்ற இடத்திற்கு வெகு தூரமல்லாத ஒரு தனியிடத்தில், குடியேற்றி வைக்கப்பட்டனர். அந்த இடம் ஹெல்லாஸிலிருந்து வெகு தூரத்தில் இருந்தாலும் அது கிரேக்க மதத்தையும், கிரேக்கப் பழக்க வழக்கங்களையும் பாதுகாத்து வந்தது; கிரேக்க மொழியையும் அது மறந்து விடவில்லை. ஒரு கிரேக்கப் படை வருவதைக் கேட்டு அங்குள்ளோர் எவ்வளவு கிளர்ச்சியும், உணர்ச்சியும் அடைந்திருப்பர் என்பதை எளிதில் கற்பனை செய்து கொள்ளலாம் அங்கிருந்த மக்கள் அலெக்ஸாந்தரை வரவேற்பதற்காகவும், கப்பங் கொடுப்பதற்காகவும் மகிழ்ச்சியுடன் வந்தனர். ஆனுல் அலெக்ஸாந்தர் ஒன்றை மட்டும் மறவாமல் நினைத்துக்கொண்டிருந்தான்; அவர்களுடைப் முன்னேர்கள் அப்போலோவிற்கு எதிராக மாபெருங் குற்றத்தைச் செய்துவிட்டனர்; கிரீஸுக்கு எதிராகப் பாரசீகத்தை ஆதரித்தனர் என்பது அவன் நினைவை விட்டகலவில்லை. அக்குற்றம் மிலேடஸின் ஆட்களால் ஒருபோதும் மறக்கப்படவில்லை. அரசன் தன் படையிலிருந்த மைலேசியர்களை அழைத்து பிராங்கிடேக்களைப் பற்றித் தீர்ப்புக்கூறுமாறு கேட்டான். மைலேசியன்கள் ஒருமுகமான முடிவிற்கு வரவில்லை. அதனுல் அலெக்ஸாந்தர் அந்த நகரத்தின் விதியைத் தீர்மானித்தான். அந்த நகரத்தைச் சுற்றித் தன் படை வீரர்களைப் பலவிடங்களிலும் நிற்கும்படி செய்து, அந்நகரினுள் இருந்த எல்லோரையும் கொலை செய்து விடும்படியும், நகரத்தைத் தரைமட்டமாக்கும்படியும் உத்தரவிட்டான். முதலில் குற்றம் புரிந்தோரின் சந்ததியார்களில் ஒருவரும் உயிரோடு விட்டுக் வைக்கப்படவில்லை; கொலைக்கு ஆட்பட்டவர்களில் பெரும்பாலோர் ஐந்தாவது தலைமுறையையே சேர்ந்திருப்பர். முன்னேர்களின் குற்றங்களுக்காகப் பல தலைமுறைகளுக்குப் பின்வந்த சந்ததியினருக்குத் தண்டனை கொடுத்தல் என்னும் காட்டுமிராண்டிக் கொள்கையினை வற்புறுத்துவதைக் காட்டிலும், கொடிய செயலை நாம் கற்பனை செய்தும் பார்க்க முடியாது. அலெக்ஸாந்தரின் புகழை மாசுபடுத்தும் திடுக்கிடத்தக்க கதை இப்படிப்பட்டது! ஆனுல் நல்ல வேளையாக நாம் உண்மையல்ல வென்று இக்கதையைத் தள்ளிவிடலாம். ஏனெனில் இக்கதை மிகமிகப் பழமையானவர்களும் சிறந்த வாலாற்று நிபுணர்களுமான டாலமி, அரிஸ்டோபூலஸ் (Aristobulus) ஆகியோரின் வரலாற்றுக் குறிப்புக்களில் கூறப்படவில்லை. அலெக்ஸாந்தர் சில கொடிய செயல்களைச் செய்திருக்கிருன்; ஆனுல் இந்தப் பெரும் மானிடக்கொலை போல மிகத் திடுக்கிடச் செய்யத் தக்கது வேறென்றும் இல்லை.

பரேடசெனியின் குகைவு (ஹிஸ்ஸார்); ரோக்ஸானிக்கும் அலெக்ஸாந்தருக்கும் திருமணம், கி.மு. 327.

அலெக்ஸாந்தரின் வெற்றியைக் கண்டு பயந்து, கடைசியில் சிதியர்கள் அவனுடைய கருணையைப் பெறுவதற்காக ஸ்பிடா மெனஸைக் கொல்லும் வரை மேற்குப் பாக்டிரியாவிலும், மேற்கு சோக்டியானாவிலும் இன்னும் பல எதிர்ப்புகள் இருந்தன. குறுநில மன்னராயிருந்த இந்த ஸ்பிடாமெனஸுடன் எதிர்ப்புகள் எல்லாம் அடங்கின. ஆனால் பரேடசெனீ என்றழைக்கப்பட்ட சோக்டியானாவின் முரட்டுத்தன்மைமிக்க கிழக்குப் பகுதிகளை அடிப் படுத்தும் வேலை ஒன்றுதான் மீதியாயிருந்தது. இந்தப் பகுதிகளில் முக்கியமான ஒரு கணவாயைப் பெற்றிருக்கும் சோக்டியன் மலை ஆக்ஸியார்ட்டெஸின் வசத்தில் இருந்தது. இரவில் துன்பங்களைப் பொருட்படுத்தாமல் மாசிடோனியப் படை வீரர்கள் அதன்மீதேறி அதைக் கைப்பற்றினார்கள். அவர்களால் சிறை பிடிக்கப்பட்டவர் களுள் ரோக்ஸானி என்பவளும் ஒருத்தி ; அவள் ஆக்ஸியார்ட் டெஸின் மகள் ; அலெக்ஸாந்தரின் காதலியுமாவாள். எப்பொழுதும் பெண்களை அலட்சியமாகவே புறக்கணித்துவந்த அலெக்ஸாந்தர் சோக்டியன் கன்னியான அவளுடைய அழகினாலும், நடை, பழக் கங்கள் இவற்றினாலும் மனங்கவரப்பட்டுவிட்டான் ; கீழினத்தைச் சேர்ந்த ஒருத்தியிடம் காதல் கொள்வதைப்பற்றி, பெருமிதம் மிக்க மாசிடோனியர்கள் இழிவாகப் பேசிவந்தாலும். அவளைத் தம் மனைவி யாக ஏற்றுக்கொள்ளத் தீர்மானித்தது, அலெக்ஸாந்தரின் சிறப்பான தனிப்பண்பிற்கு ஒரு சான்றாகும். பரேடசெனீயின் மற்றக் கோட்டைகளை அடிப்படுத்திவிட்டு அவர் பாக்ராவிற்குத் திரும்பிய போது, அந்த நாட்டின் பழக்கப்படி ஒரு ரொட்டித் துண்டைக் கூறுக்கி மணப்பெண்ணுடன் உண்டு திருமண விழாவைக் கொண் டாடினான். இத் திருமணத்தில் அவனுடைய காதல் ஒருபுறமிருக்க அரசியல் கொள்கை ஒன்றும் இருந்தது. அது ஆசியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையே ஏற்பட்ட ஒற்றுமையின் சின்னமாகவும், நாகரிகமற்றவர்களுக்கும், கிரேக்கர்களுக்குமிடையேயிருந்த ஏற்றத் தாழ்வாகிய தடைகளை அகற்றும் வாய்ப்பாகவும், கீழ்நாட்டு அரசராக அலெக்ஸாந்தர் வீற்றிருப்பதற்கேற்ற தகுதியை நல்குவதாயும் இருந்தது.

ஒலிந்தஸின் கல்லிஸ்தெனஸ் விழுந்து வணங்க மறுத்தல்

ஏறத்தாழ அதேசமயத்தல் அரசவை வழக்கமுறைகளை ஓர் ஒழுங்கிற்கு உட்படுத்தும் முயற்சி மேற்கொள்ளப்பட்டதெனத் தெரிகிறது. தெய்வத்தின் வடிவாகக் கருதப்பட்ட அரசரின் முன்பு தாங்கள் மட்டும் விழுந்து வணங்குமாறு கட்டாயப்படுத்தப்பட்டு, மாசிடோனியர்களும், கிரேக்கர்களும் அவ்வாறு செய்யவேண்டிய தில்லை என விதிவிலக்குச் செய்யப்பட்டது பாரசீகப் பிரபுக்களுக்கு அதிருப்தியை அளித்தது. பெரும்பாலான கிரேக்கர்களும் விழுந்து

வணங்குவதற்கு இணங்கியிருப்பர். ஆனல் அவர்களுள் முதன்மை வாய்ந்த ஓர் அறிஞன் இந்தப் பழக்கத்தை எதிர்த்து நின்று, உண்மைகளைத் துணிந்து கூறி, தன்மேல் அரசன் அதிருப்தி கொள்ளுமாறு செய்துகொண்டான். அவ்வறிஞன், அரிஸ்டாட்டிலின் மருமகனை கல்லிஸ்தெனஸ் என்பவனுவான். அவன் அலெக்ஸாந்தரின் படையெடுப்புக்களைப்பற்றிய வரலாற்றை எழுதிக்கொண்டு வந்தான். அலெக்ஸாந்தரின் படையெடுப்புக்களைச் சிறிதும் வெறுப்பின்றிப் புகழ்ந்து பேசினன். தான் புகழடைவதற்காக அன்றி, அலெக்ஸாந்தரைப் புகழடையச் செய்வதற்காகவே படையில் சேர்ந்ததாக அவன் கூறுவது வழக்கம். ஹெபேஸ்டியனும் (Hephaestion) மற்றும் பலரும் ஓர் அரசவிருந்தின்போது அலெக்ஸாந்தரை விழுந்து வணங்கி விருந்தினர்களை வியப்புக்குள்ளாக்க வேண்டுமென்று ஓர் ஏற்பாடு செய்தனரென்று கூறப்பட்டுள்ளது. அலெக்ஸாந்தர், ஒவ்வொரு விருந்தினரும் தன்னிடம் முறையே வந்து வணக்கம் செலுத்திவிட்டுப்போகும்போது, அவர்களுக்காகத் தன் தங்கக் கிண்ணத்தை உயர்த்தி மதுவருந்தினன். முதலில் ஏற்பாட்டை இரகசியமாகச் செய்தவர்களில் சிலர் அலெக்ஸாந்தருக்கு முன்பு சென்று கீழ்விழுந்து வணங்கினர்; அவர்கள் ஒவ்வொருவரையும் அரசர் கையில் முத்தமிட்டார். கல்லிஸ்தெனஸ் தன்னுடைய முறை வரும்போது மதுவருந்திவிட்டு அரசருக்குப் பணிந்து வணக்கம் செலுத்தாமல் முத்தம் பெறுவதற்காக அவரருகில் சென்றுன். அலெக்ஸாந்தர் அவனுக்கு முத்தமளிக்கவில்லை. கல்லிஸ்தெனஸ், 'ஒரு முத்தம் பெருமல் வறிதே செல்கின்றேன்' என்று கூறிக்கொண்டே திரும்பிச் சென்றுன். இது போன்ற நிகழ்ச்சிகள் அரசருக்கும், அவருடைய வரலாற்றுளருக்கு மிடையே மன வெறுப்பை விளைவித்தன. முன்னேறிச் செல்லும் அலெக்ஸாந்தரின் படையுடன் வந்த கல்லிஸ்தெனஸ், பிற தத்துவஞானிகள் இலக்கிய ஆசிரியர்கள் இவர்களின் கடமைகளில் ஒன்று. அலெக்ஸாந்தருககுக் குற்றேவல் புரிந்துவந்த மாசிடோனிய இளைஞர்களாகிய பணியாட்களுக்குக் கல்வி கற்பிப்பதாகும். அவர்களில் சிலரிடம் கல்லிஸ்தெனஸ் பெருஞ் செல்வாக்குப் பெற்றிருந்தான்.

**பணியாட்களின் சதி; கல்லிஸ்தெனஸ் துரோகக் குற்றம் சாட்டப்பட்டுத் தூக்கிலிடப்படல்.**

ஒருநாள் கரடி வேட்டையின்போது ஹெர்மொலாஸ் (Hermolaus) என்ற பணியாள் அவ் விலங்கைக் கொல்வதன் மூலம் அரசரைக் கொல்லப்போகும் சதியை முன்னறிவிக்கும் ஓர் அறிவில்லாச் செயலைச் செய்தான். மரியாதைக்கு மாறுன அச் செயலைச் செய்ததற்காக அவன் சவுக்கால் அடிக்கப்பட்டதுடன், அவனுடைய குதிரையும் பறித்துக்கொள்ளப்பட்டது. இந்த அவமதிப்பால்

மனம் துன்புற்றுக் கொண்டிருந்த ஹெர்மோலாஸ், அலெக்ஸாந்தர் தூங்கும்போது அவரைக் கொன்றுவிடலாமென்று அவனுடைய சில தோழர்களுடன் கலந்து, சதித்திட்டம் தீட்டினுன். ஆனல் அந்தக் குறிப்பிட்ட இரவு அலெக்ஸாந்தர் தூங்காமல் விடியற்காலம்வரை குடித்துக் கொண்டேயிருந்தான். மறுநாள் சதி அம்பலப்படுத்தப் பட்டது. சதிகாரர்கள் கைது செய்யப்பட்டு, எல்லாப் படையினரின் ஒருமுகமான தீர்ப்பின்படி கொல்லப்பட்டனர். கல்லிஸ்தெனஸும் சதிக்கு உடந்தையாக இருந்ததாகக் குற்றம் சாட்டப்பட்டுக் கையில் விலங்கிடப்பட்டு, பின்பு தூக்கிலிடப்பட்டான். ஹெர்மோலாஸ் உண்மையில் கல்லிஸ்தெனஸை மிக அதிகமாகப் போற்றிப் புகழ்ந் தவர்களுள் ஒருவனுவான். ஆனல் அந்த வரலாற்றுளருக்கு எதிராக எந்தச் சான்றும் இருந்ததாகத் தெரியவில்லை. டாலமியும், அரிஸ்டோபூலஸும், பணியாட்கள் சித்திரவதை செய்யப் பட்டதால், 'கல்லிஸ் தெனஸ்தான் தங்களைத் தூண்டினுர்' என்று கூறினர் என்று தனித்தனியே கூறியுள்ளனர். ஆனல் மாருக, அலெக்ஸாந்தர் ஒரு கடிதத்தில் 'சித்திரவதைசெய்தும் உடந்தை யாளியின் பெயரை அறியமுடியவில்லை' என்று கூறியிருப்பதாகச் சொல்லப்படுகிறது. கிரீஸில் மாசிடோனியக் கட்சியை எதிர்ப்பவர் களின் கையாள் என்று கல்லிஸ் தெனஸை அலெக்ஸாந்தர் ஐயப்பட் டிருக்கலாம் என்பது சிறந்த காரணமாயிருக்கலாம்.

### ஆசியாவின் மேல்நாட்டு வெற்றியாளர்களுள் அலெக்ஸாந் தரின் நிலை

கோடைக்காலம் முடியுமுன்பே அலெக்ஸாந்தர் பாக்டீரியாவிற்கு விடைகொடுத்து விட்டு, இந்தியாவை வெல்லப் புறப்பட்டான். டாரியஸ் இறந்து மூன்று ஆண்டுகள் கழிந்துவிட்டன. உலகத்தின் வரலாற்றேடுகளில் அந்த மூன்று ஆண்டுகளும் மிகச் சிறப்பானவை. அந்த மூன்ருண்டுக் காலத்திற்குள்தான் மேல்நாட்டு வெற்றி யாளரான அலெக்ஸாந்தர் ஆசியாவின் வரலாற்று முறைகளைக் குலைத்து, ஆப்கானிஸ்தானத்தை அடிப்படுத்தி, ஜக்ஸார்ட்டஸ் நதிவரையில் வடக்கேயிருந்த இடையர்கள் மீது அதிகாரத்தைப் பரவச்செய்தான். ஆப்கானிஸ்தானத்தை வெற்றிகொண்ட முதல் மேல்நாட்டினரும், கடைசி மேல்நாட்டினரும் அவனே; ஆப்கானிஸ் தானத்தின்மீது போர் தொடுத்த முதல் படையெடுப்பாளனும் அவனே; ஆனல் அவனே கடைசிப் படையெடுப்பாளனுக இல்லை. ஆக்ஸஸுக்கு அப்பாலிருந்த பிரதேசங்களின்மீது படையெடுத்து வென்ற முதல் ஐரோப்பியனும், அவனே. இக்காலச் சந்ததி யினரின் நினைவிலிருப்பதுபோல, ஒரு ஐரோப்பிய வல்லரசினுல் அவை மீண்டும் வெல்லப்படும் எனபதை இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே அவன் எதிர்பார்த்தது போலக் காணப்படுகிறது.

அவனுடைய அடுத்த புதிய முயற்சி, வடமேற்கு இந்தியாவை வென்ற ஆங்கிலேயரின் சொந்த வெற்றியை முன்கூட்டியே அறிவித்தது போலக் காணப்பட்டது. ஆனல் இங்கிலாந்து தெற்கேயிருந்து வந்து வெற்றிபெற்றது; ரஷ்யா வடக்கேயிருந்து வந்து வெற்றி பெற்றது. அலெக்ஸாந்தர் ஒருவர்தான், மேற்கிலிருந்து நேராகச் சிந்துவிற்கும், ஆக்ஸஸுக்கும் வந்து வெற்றிபெற்ற ஐரோப்பியராவர்.

பாரசீகப் பேரரசின் ஆட்சிக்குத் தலைமை பெற்றதன் விளைவாக, மாசிடோனியப் பேரரசர் பாக்டிரியாவிலும், சோக்டியானவிலும் செய்யவேண்டியிருந்தவேலை தவிர்க்க முடியாதிருந்தது. தெற்கே வாழ்ந்த மக்களின் நாகரிகத்திற்கு நிரந்தரமாகப் பெருந்தொல்லையாக இருந்த பாலைநிலத்து நிலையாகத் தங்காத இனத்தவர்களுக்குத் தடைவிதிக்க வேண்டியவராயிருந்தார். அந்தப் பகுதிகளில் பல புதிய குடியேற்றங்களை நிறுவினர். பட்டாளத்துக் கோட்டைப் படைகள் தங்குவதற்காக மட்டுமன்றி, இடையர்களைப் படிப்படியாக நிலைத்த வாழ்க்கையின் முறைகளில் மேலும் பழக்குவதற்காகவும் அவற்றை நிறுவினர் எனலாம். அவரது இந்நோக்கம் உண்மையானல், அது ஒரு வீணன நம்பிக்கையே ஆகும். இடையரினத்தவர்களை, அவர்களுக்கு விருப்பமில்லாது போயினும் நிலத்தை உழுபவர்களாக ஆக்குவதற்கு ஒரே ஒரு வழிதான் உண்டு என்பதை வரலாறு காட்டுகிறது. நாற்புறமும் நாகரிகம் சூழ்ந்திருக்க, அவர்களை ஒரு குறுகிய நிலப்பரப்புக்குள் வாழும்படி செய்து, அவர்கள் ஒழுங்கான, கடினமான உழவு வாழ்க்கையை மேற்கொள்ளும் கட்டாயத் தேவையை ஏற்படுத்துவதுதான் அந்த ஒரே வழியாகும். ரஷ்யாவில் இவ்வித நாகரிக வளர்ச்சியின் அழுத்தத்தினல், மத்திய ஆசியாவின் நாடோடிகளின் நிலப்பரப்பு படிப்படியாகச் சுருங்கிக் கொண்டு வருகிறது. ஆனல் அலெக்ஸாந்தர் காலத்தில் அவர்களுக்குப் பின்னல் எல்லையில்லாத நிலப்பரப்பும், அவர்களுக்கு முன்னல் முடிவறியமுடியாத எதிர்காலமும் இருந்தன.

## 2. இந்திய வெற்றி

நிக்கேயா (Nicaea) வில் தங்குதல் (காபூல் அல்லது பக்ராம்?) கி.மு. 327.

அலெக்ஸாந்தர் தான் வந்த கணவாயைவிடச் சிறிது மேற்காக இருந்த ஒரு கணவாய் வழியாக ஹிந்துகுஷைக் கடந்து, ஆப்கானிஸ்தானத்திற்குத் திரும்பிவரும்போது, பால்க்கிலிருந்து காபூலுக்குப் பெரும்பாதை வழியாகவே வந்திருப்பான் என்று தோன்றுகிறது.

பத்து நாட்களுக்குள் அலெக்ஸாண்டிரியாவை அடைந்த அவன், வேறொரு நகரத்திற்குச் சென்றான். அந் நகரை அவன் திரும்ப நிறுவினான் என்று கொள்ளமுடியாது போயினும், அந் நகருக்கு நிக்கேயா என்று புதுப் பெயரிட்டான் என்று எப்படியுங் கூற முடியும். அந்நகரம் காபூலிலேயே இருந்தது என்றுங் கொள்ள லாம். அங்கே அவன் நவம்பரின் நடுப்பகுதிவரை தங்கியிருந்தான். அச்சமயம் மாகாணத்தைச் சீர்செய்வதிலும் மேலும் முன்னேறு வதற்குத் தயாராயிருப்பதிலும் அவன் ஈடுபட்டான். அவன் தன் படையின் பெரும் பகுதியை பாக்டிரியாவில் விட்டுவந்தான். ஆனால் அதைவிடப் பெரிய படை ஒன்றை, 30,000 வீரர்களைப் புதிதாகச் சேர்த்துத் தயாரித்துவிட்டான். புதிய படையில் பாக்டிரியா, சோக்டியர், தாஹே (Dahea), சாகே (Sacae) ஆகிய பகுதிகளில் வாழ்ந்த ஆசிய மக்களே இருந்தனர். ஏழாண்டுகளுக்கு முன்பு அவன் ஹெல்லெஸ்பாண்ட்டைக் (Hellespont) கடப்பதற்கு எவ்வளவு படை தேவைப்பட்டதோ, அதைவிட இரண்டு மடங்கு இப்போது அவன் இந்தியாவுக்குள் இறங்குவதற்கு வேண்டியதாய் இருந்தது. படை முன்னேறிச் செல்லச் செல்லப் படையினரின் எண்ணிக்கையும் மிகுதிப்பட்டுவந்தது. படையில் புதிதாய்ச் சேர்ந்து வந்தவர்களின் எண்ணிக்கை—ஒவ்வொரு மாகாணத்திலும் விடப் பட்டுவந்த படையினர், சண்டையிலும் நோயிலும் இறந்தவர்கள், இவர்களின் எண்ணிக்கையைக் காட்டிலும்—மிகுதியாய் இருந்து வந்தது.

### அலெக்ஸாந்தரின் பாசறை

கடந்த இந்த ஆண்டுகளில் அலெக்ஸாந்தரின் பாசறையே அவனுடைய அரசவையாயும், தலைநகராயும், அவனுடைய பேரரசின் அரசியல் மைய இடமாயும் இருந்தது. அப்பாசறை மத்திய ஆசியா வழியாக மலை, ஆறு இவற்றின்மேல் ஏறி உருண்டு செல்லும் ஒரு பெரிய நகரமாகவே காணப்பட்டது. பல்வகையான தொழில்கள் செய்வாரும் அங்கிருந்தனர்; அரசருக்கும், அவருடைய படை யினருக்கும் வேண்டிய தேவைகளைக் கவனித்துக் கொள்ளும் சில இன்றியமையாதவர்கள் அங்கே இருந்தனர்; மற்றையோர் கொள்ளைப் பொருளைச் சுமந்து செல்லும் படை வீரர்களிடமிருந்து இலாபம் பெறும் நோக்கத்துடன் அவர்கள் கூடவே வந்து கொண்டிருந்தனர். அப்படி வந்தவர்களுள் பலவகைக் கைத்தொழில்கள் செய்வாரும் இருந்தனர். பொறியியலார், மருத்துவர்கள், சோதிடர்கள்; குறைந்த விலைக்குப் பொருளை வாங்குவோர், பணத்தைச் சில்லறை மாற்றித் தருவோர், இலக்கிய ஆசிரியர்கள், கவிஞர்கள், இசைப் பாடகர்கள், உடற்பயிற்சிப் போட்டியாளர்கள், கோமாளிகள்; காரியதரிசிகள், எழுத்தாளர்கள், அரசவை ஊழியர்கள், பல பெண்கள், அடிமைகள்:

இவர்கள் எல்லோரும் படையினருடன் சேர்ந்து சென்றனர். வழியில் தங்குமிடங்கள் பலவற்றில் உடற்பயிற்சிப் போட்டிகளும், இசைப் போட்டிகளும் நடைபெற்றன. கிரேக்கர்கள் தங்கள் தாய்நாட்டை நினைந்து மனக் கிளர்ச்சி கொள்வதற்காகவும், நாகரிகமற்றவர்களின் கற்பனைக்கு விருந்தாயிருக்குமாறு செய்வதற்காகவும் அவை நடத்தப் பட்டன. அலெக்ஸாந்தரின் எல்லா அரசியல் கடிதப் போக்குவரத் தையும் நடத்திவந்த யூமனெஸ், கார்டியா ஆகிய இருவரும், பார சீகத்தில் அரசாங்க நாட்குறிப்பேடு வைக்கப்பட்டு வந்ததைப் போலவே, தங்கள் அரசாங்க நாட்குறிப்பேட்டை ஒழுங்காக வைத்துக் கொண்டு வந்தனர்.

## இந்தியாவின் நிலைமை (காபூல் நதி)

இந்தியத் தீபகற்பத்தின் வடிவம், பரப்புப்பற்றி அலெக்ஸாந்த ருக்கு ஒன்றுந் தெரியாது. அதனால் அவன் இந்தியாவை வெல்வது கோபென், சிந்துச் சமவெளிகளை வெல்வதுடன் முற்றுப்பெறுவது என்று எண்ணிக் கொண்டிருந்தான் போலும். இந்தியாவின் சமப் பிரதேசத்திற்கு, வடமேற்கு மலைகளின் வழியாகப் படையெடுத்துச் சென்ற, ஆரிய மொழி பேசும் முதல் படையெடுப்பாளன் அவன் அல்லன். அவனுக்குப் பற்பல நூற்றாண்டுகளுக்கு முன்பு ஆரிய இடையர்கள் அலையலையாகத் தொடர்ந்து வந்து இந்தியாவில் நிலை யாகக் குடியேறிவிட்டனர். மத்திய ஆசியாவிலிருந்து, ஹிந்து-குஷ் மலைப் பிரதேச வழியாக, தங்களுடைய பழைய பாடல்களுடன் இந்தியாவிற்குள் நுழைந்தனர். அப் பழைய பாடல்களுள் சில இன்றும் நமக்குக் கிடைக்கின்றன. அவர்கள் 'மிகப் பெருஞ் செல்வம் தருவதாகிய' சிந்துநதிப் பிரதேசத்திற்கு வந்து நிலைத்த உழவு வாழ்க்கையை மேற்கொண்டனர். டையோஸ் பிதர் (Dyaus Pitar) என்று கடவுளை அழைத்த வடஇந்தியாவில் வாழ்ந்த இந்தியர்களி டையே தோன்றி வளர்ந்த நாகரிகமும், அவர்களுடைய சகோதர மொழியைப் பேசியவரும், ஜீயஸ் பதேரை (Zeus Pater) ஏஜியன் (Aegean) கடற்கரைகளிலிருந்து வழிபட்டவர்களுடைய நாகரிகமும், வியக்கத்தக்க வகையில் தம்முள் வேறுபட்டுக் காணப்பட்டன. பிராமணர்களின் சாதிகளும், போர் வீரர்களின் சாதிகளும், மத ஆசிரி யர்களான இந்தப் பிராமணர்கள் அரசியலில் கொண்டிருந்த செல் வாக்கும், சுதந்திர இயல்பும், எப்போதும் மகிழ்ச்சியாயிருக்க வேண்டும் என்ற மனப் பாங்கு கொண்டிருந்த கிரேக்கர்களுக்குப் பிடிக்காதவையாயும், அந்நிய நாட்டு இயல்பாயும் காணப்பட்டன. மாபெரும் டாரியஸ் அரசர் ஏற்கெனவே சிந்து நாடுகளின் ஒரு பகுதியைத் தமக்குரிய பிரதேசங்களாக இணைத்துக் கொண்டிருந்தார்; அப்பிரதேசங்கள் டாரியஸின் சந்ததியினருக்கு இடைவிடாது துருப் புக்களை அனுப்பிக் கொண்டிருந்தன. கரியாண்டாவைச் சேர்ந்த

சைலாக்ஸ் (Scylax) என்பவர் அலெக்ஸாண்டரின் ஆணையின்படி சிந்துவிற்குப் பிரயாணஞ் செய்து, தன் பிரயாணத்தைப் பற்றிய ஒரு விளக்கத்தை வெளியிட்டிருப்பார் என்பது தெரிகிறது. இந்தியாவின்




அதிசயங்களைப்பற்றிக் கூறப்பட்ட கதைகள், கிரேக்கப் படையெடுப்பாளர்களின் ஆர்வத்தைத் தூண்டிவிட்டன. இந்தியா நேர்மையான

மக்களும், புதுமையான விலங்குகளும், செடி கொடி மரங்களும், தங்கம் நவரத்தினங்கள் இவற்றின்மூலம் அளவிலாப் பெருஞ் செல்வமும் கொண்ட நாடென்று அவர்கள் எண்ணினர். உலகத்தின் கிழக்குப் பகுதியில் கடலால் சூழப்பட்ட கடைசி நாடு அதுவென்றே அவர்கள் கருதினர்.

ஒம்பிஸ் (Omphis); (தக்கசிலா); (பௌரவா - The Paurava); (அசிக்னி - Asikni); ஆரியர்களும் திராவிடர்களும்.

அந்தச் சமயத்தில் வடமேற்கு இந்தியா பல சிறிய வேறுபட்ட சிறு பிரதேசங்களையும், கிராம சமூகங்களையும் கொண்டிருந்தது. சிந்து, ஹைடாஸ்பெஸ் இவற்றிற்கு இடையேயிருந்த நாட்டின் வடக்கு மாவட்டங்கள்—இப் போது ஜீலம் என்று அழைக்கப்படுகின்ற நதியின் கரையில் இருந்தவை—ஒம்பிஸ் என்ற அரசரால் ஆளப்பட்டு வந்தன. சிந்துவிற்கு அருகிலிருந்த தக்ஷீலா அவருடைய தலைநகரா யிருந்தது. அவருடைய சகோதரர் அபிசாரெஸ் (Abisares), ஹஸா ராவையும் (Hazara), அண்டையிலிருந்த காஷ்மீரின் பகுதிகளையும் ஆண்டு வந்தார். ஹைடாபெஸ்ஸுக்கு அப்பால் பேரரசின் வலிமை வாய்ந்த இராச்சியம் இருந்தது. 'ஐந்து நதிகளில்' இரண்டாவ தான சீனுப் (Chenab) என்ற நதியின் கரைவரையிருந்த அசேஸின்ஸ் அல்லது 'கறுப்பு நிற நாடு' வரை அவர் தன் அதிகாரத்தைச் செலுத்தி வந்தார். சீனுப்பின் கிழக்கே, ராவீ, பீயாஸ் இவை பாயும் நாடுகளில் மற்றச் சிறு பிரதேசங்களும், 'அரசரில்லாத,' தங்களுக் கென்று ஒரு தலைவர் இல்லாத சுதந்திர இனத்தவர்களும் இருந்தனர். அந்தச் சிறு பிரதேசங்களும், சுதந்திர சமூகங்களும் பழக்க வழக்கங் களிலும் மதக் கொள்கையிலும் தம்முள் மிக வேறுபட்டு இருந்தன. அவற்றிடையே ஒற்றுமை அல்லது ஒன்று சேரும் இயல்பு காணப்பட வில்லை. சுதந்திர இனத்தினர் அரசர்களை வெறுத்தனர்; அவர் களுக்குப் பயந்தனர்; அரசர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண் டிருந்தனர். அந்த இராச்சியங்கள் எல்லாம் ஒரே இனத்தினர்க்கு உரியவை அல்ல. அநேகமாகப் பெரும்பாலோர் ஆரியர்களாயிருந் தனர்; ஆனல் மல்லி (Malli) போன்ற சிலர் பழைய 'திராவிட' இனத்தைச் சேர்ந்தவர்கள். திராவிடர்களைப் பஞ்சாப்பில்கூட ஆரியர்கள் முழுதும் அடக்கியாளவோ, அடிமைப்படுத்தவோ முடிய வில்லை. அதனுல் ஒரு படையெடுப்பாளர் அஞ்சுவதற்கான ஒரு பொதுவான எதிர்ப்பு அங்கே இருக்கவில்லை. அவர் ஒவ்வொரு நாடாகப் பார்த்துக் கொண்டு செல்ல வேண்டும் தங்கள் அண்டை நாட்டவர்களின்மீதுள்ள வெறுப்பினுல் பலரும் அவரை வரவேற்பர் என்று உறுதியாகச் சொல்லலாம். தக்ஷீலாவின் அரசர் மாசிடோனிய வெற்றியாளரிடமிருந்து பல பெருஞ் செயல்களை எதிர்பார்த்தார். சிறப்பாக அவருடைய எதிரியான போரஸ் வீழ்ச்சியுறவேண்டுமென்று

எதிர்பார்த்தார். அவர் அலெக்ஸாந்தரை நிக்கேயாவில் சென்று கண்டார்; அப்பெரும் பேரரசின் பாதங்களில் வீழ்ந்து, தன் இராச்சியத்தையும் அவருடைய பாதங்களில் வைத்து, இந்தியாவை அடிமைப் படுத்துவதற்குத் தாம் உதவுவதாகவும் உறுதியளித்தார். சிந்துவின் மற்றப் பக்கத்திலிருந்த ஏனைய தலைவர்களும் அடிபணிந்தனர்.

உயர்ந்த சமவெளியான காபூலிலிருந்து பஞ்சாப்பிற்குச் சென்ற அலெக்ஸாந்தரின் நேர் பாதை கோபென் அல்லது காபூல் நதியின் கரையின் வழியாக கைபர் கணவாயின் பெரிய வாயில் மூலம் சென்றது. ஆனால் இடையிலுள்ள பகுதிகளை வெல்லாமல் அவர் சிந்துவிற்கு முன்னேறிச் செல்வது இயலாததாயிருந்தது. அதனால் அவன் காபூலின் இடதுபக்கமிருந்த ஆற்றுச் சமவெளிகளைப் பணியச் செய்ய வேண்டியிருந்தது. அச்சமவெளிகள் இமயமலையின் பெரிய மேற்குச் சரிவில் இருந்தன.

**நைஸா (நங்கன்ஹர்-Nanghenhar)**

படையினர் நைஸா என்றழைக்கப்பட்ட நகரத்திற்கு வந்தனர். அது ஜெலாலாபாத்துக்கு வெகு தூரத்தில் இருக்கவில்லை போலும். அந்நகரின் பெயர் உடனே எல்லாக் கிரேக்கர்களுடைய மனத்திலும் அவர்களுடைய கடவுளான டையோனிஸஸின் நினைவை எழுப்பியது. ஏனெனில் அக் கடவுள் ஸியஸின் தொடையிலிருந்து பிறந்தபோது நைஸா மலையில்தான் சுரமகளிரால் வளர்க்கப்பட்டார் என்று புராணக்கதை கூறிற்று. அந்த மலை திரேஸில் (Thrace) இருப்பதாகப் பொதுவாகக் கருதப்பட்டு வந்தது, ஆனால் ஒரு பழம் பாட்டில் அது "நைல் நதிக்கு அருகே', இருப்பதாகக் கூறப்பட்டுள்ளது. எனினும் பிரயாணிகளின் உலக வரை படத்தில் அது காணப்படவில்லை. ஆனால் இங்கே உண்மையான நைஸா இருந்தது. அந்நகருக்கருகில் ஒரு மலை இருந்தது. அம் மலையின் பெயர் 'தொடை' என்று பொருள்படும் கிரேக்கச் சொல்லான மீரோஸ் (meros) என்ற வார்த்தையை ஒத்திருந்தது. அம் மலையின் சரிவுகள் பச்சைச் செடிகொடிகளாலும் புதர்களாலும் மூடப்பட்டிருந்தன. அதனால் அவை டையோனிஸஸால் நிறுவப்பட்டவை என்று அவர்கள் கூறினர்; இந்தியாவை அடிமைப் படுத்துவதற்காக அக் கடவுள் கிழக்கு நோக்கி வந்தார் என்றும் கருதினர்; இப்பொழுது அலெக்ஸாந்தர் தன் பாதையில் சென்று கொண்டிருந்தார். தாங்கள் செல்லுமிடங்களிலெல்லாம் மதுக் கடவுளின் (bacchic god) முன்னேற்றத்தின் சுவடுகளைக் கண்டுபிடிப்பதில் கிரேக்கர்களும் மாசிடோனியர்களும் கவனமாயிருந்தனர்.

### சித்ரால் (Chitral) முதலிய இடங்களில் அலெக்ஸாந்தரின் போர்; (அஸ்ரகாஸ்-Acrakas) அயோர்னஸ்.

இப்போருக்காக அலெக்ஸாந்தர் தன்னுடைய படையைப் பகுத்துவைத்தான். ஹெபேஸ்டியன் காலாட் படையில் மூன்று தொகுதிகளுடனும், மாசிடோனியக் குதிரைப் படையில் பாதியுடனும் கூலிக் குதிரைப் படையினர் எல்லோருடனும், சிந்துவின் குறுக்கே ஒரு பாலங் கட்டவேண்டும் என்ற ஆசையைத் தாங்கிக் கொண்டு கைபர் கணவாய் வழியாய்ச் சென்றூர். அரசன் கனமில்லாத துடுப்புக் களுட்பட மீதியுள்ள படைகளுடன் நதியின் வடக்கேயிருந்த கடின மான பாதையில் இறங்கிச் சென்றுன். பலம் வாய்ந்த மலைவாசி களுடன் போரிடுவதில் குளிர்காலம் கழிக்கப்பட்டது. குறிப்பாக அஸ்பாசியன்களுடனும், அஸ்ஸா செனீக்களுடனும் போரிடப் பட்டது. தூரத்திலிருந்த சித்ரால் பிரதேசத்தில் குனர் மாவட்டத் திலும், பன்ஞ்கர் (Panjkar) சுவாட் சமவெளிகளிலுமுள்ள அவர் களுடைய தகர்க்க முடியாத கோட்டைகளைக் கைப்பற்றுவதிலும் குளிர்காலம் கழிந்தது. மாசிடோனியப் படை இந்தக் காட்டுப் பிரதேசங்களில் பெற்ற வெற்றிகளைப் பற்றி அறிவது மகிழ்ச்சி தருவதாயிருக்கும்; ஆனுல் அந்த இடங்களை நாம் நிச்சயமாய் அடையாளங் கண்டு பிடித்துக் கூற முடியவில்லை. சுவாட் சமவெளி யில் அஸ்ஸாசெனிய மக்களுக்குரிய தாயிருந்த மஸ்ஸாக (Massaga) என்பது அலெக்ஸாந்தர் கைப்பற்றிய மிக முக்கியமான கோட்டை களுள் ஒன்று. அதை நாம் நிலப் படத்தில் குறிப்பிட்டுக் காட்ட முடியாது. ஆனுல் அதே மக்களுடைய மற்ரெரு கோட்டையான டிர்ட்டா (Dyrta) என்பதை தீர் (Dir) என்ற இடமாகக் கூறிவிட லாம். எல்லாவற்றையும்விட மிகவும் ஆச்சரியம் வாய்ந்தது, அயோர்னஸ் குன்றினை வெற்றி கொண்டதும், அதை அளந்தது மாகும். அயோர்னஸ், ஆம்புக்கு (Amb) அருகில், சிந்துவின் வலது கரையில், அந்நதி காபூலுடன் சேரும் கூடலுக்குச் சுமார் அறுபது மைலுக்கு அப்பால் இருந்தது. உள்ளத்து உரன், பொறுமை இவற்றுடன் கூடிய ஓர் அற்புத முயற்சியால் அலெக்ஸாந்தர் இக்கோட்டையைப் பிடித்த பிறகு, அஸ்ஸாசெனீ யஸின் கிளர்ச்சியை ஒடுக்குவதற்காக தீர் வரை வந்த வழியே திருப்பிச் செல்ல நேரிட்டது.

### அட்டாக் (Attock) அருகில் சிந்துவைக் கடத்தல். கி. மு. 326.

இந்தக் கடுங்குளிர்காலப் போருர்குப் பிறகு, வசந்தகாலம் தொடங்கும் வரை படையினர் சிந்துவின் இக் கரையில் தங்கி இளைப்பாறினர். பிறகு விளையாட்டுகள். தெய்வங்களுக்குப் பலி கொடுத்தல் முதலியவற்றுடன் ஆற்றைக் கடந்து தக்ஷீலாவை

நோக்கிக் கிழக்கே மூன்று நாள் பயணஞ் செய்தனர். ஆரிய உழவர்களுக்குரிய அந்த வளநாடு, பாக்டீரியா, சோக்டியானுப் பகுதிகளின் வறண்ட குடியிருப்புக்களுக்கு முற்றிலும் மாறுபாடாக இன்பம் தருவதாய் இருந்தது. தக்ஷீலாவின் அரசர் அடக்கமான ஆடம்பரத்துடன் அலெக்ஸாந்தரை வந்து சந்தித்தார். மற்றக் குறுநிலமன்னர்களும் அவருக்கு வணக்கம் செய்ய அந் நகரில் கூடியிருந்தனர். அண்மையில் வென்ற நாடுகளின் ஆட்சி இப்போது ஒழுங்குப்படுத்தப்பட்டது. சிந்துவின் மேற்கேயுள்ள பகுதிகளை உள்ளடக்கிய ஒரு புதிய மாகாணம் நிறுவப்பட்டது, அது மக்காடாஸின்(Machatas) மகனை பிலிப்பிடம் ஒப்படைக்கப் பட்டது. மாசிடோனியக் கோட்டைகள் தக்ஷீலாவிலும், சிந்துவின் கிழக்கே யிருந்த மற்றும் சில இடங்களிலும் நிறுத்தப்பட்டன. அத் துருப்புக்களுக்கு ஒரு பொதுத் தளபதியாக பிலிப் நியமிக்கப் பட்டார். இது அலெக்ஸாந்தரின் அரசியல் கொள்கையில் ஒரு மாறுதலைக் குறிக்கிறது. அவருடைய நேரடியான ஆட்சிக்கு, சிந்து கிழக்கு எல்லையாக இருந்தது. சிந்துவிற்கு அப்பால் புதிய மாகாணங்களைத் தோற்றுவிக்க அலெக்ஸாந்தர் கருதவில்லை. ஆனல் காக்கப்படும் நாடுகளாகவே அவற்றை இணைத்து, எல்லைப்புற மாகாணத்தின் கவர்னரின் பொதுக் கண்காப்பில் வைக்கச் செய்யவேண்டும் என்று விரும்பினர்.

### அலெக்ஸாந்தரும் போரஸும் ஹைடாஸ்பெஸில் பாசறைகளை அமைத்துக் கொள்ளல்

பிறகு அலெக்ஸாந்தர் தென்புறப் பாதை வழியாக ஹைடாஸ் பெஸுக்குச் சென்ருன். அங்கு அந்நிலத்தில் அவருடைய முன்னேற் றத்தை எதிர்க்கக்கூடிய ஓர் வல்லரசினை அவன் சந்திக்கவேண்டி யிருந்தது. போரஸ் அரசர் முப்பது அல்லது நாற்பதாயிரம் வலிய படை வீரர்களைச்சேர்த்துக்கொண்டு அலெக்ஸாந்தருக்கு அறை கூவல் விடுத்தார். அலெக்ஸாந்தர் படை நதியைக் கடப்பதைத் தடுக்கப் போரஸ் நதியின் இடது கரையில் பாசறையை அமைத்துக் கொண்டார். துருப்புகளை அக்கரைக்கு அனுப்புவதற்காகச் சிந்துவில் கட்டப்பட்ட படகுகள், அலெக்ஸாந்தரின் ஆணையின்படி, வண்டி களின் அளவுக்கேற்றபடி இரண்டு மூன்று பகுதிகளாக அறுக்கப் பட்டு வண்டிகளில் வைத்து ஹைடாஸ்பெஸுக்கு அனுப்பப்பட்டன. கனமான பருவ மழையால் மெதுவாகவும் துன்பப்பட்டும் நடந்து சென்ற படையெடுப்பாளரின் படைகள் ஜெலால்பூருக்கருகில் ஆற்றின் வலது கரையில் பாசறையை அமைத்துக்கொண்டன. தங்களுக்கு எதிர்ப்புறக் கரையில் போரஸின் படை அணிவகுப்புக்கள், அவருடைய வலிமைமிக்க போர்க்கருவியான யானைகளால் சூழத் திருக்கப்பட்டிருப்பதை அவர்கள் கண்டனர். அந்தப் படையின்

எதிரில் ஆற்றைக் கடந்து செல்ல எண்ணுவது வீணகும். ஏனெனில் யானைகளின் பிளிறலையும், நாற்றத்தையும் பொறுக்கமுடியாத குதிரைகள் திண்ணமாக ஆற்றில் மூழ்கடிக்கப்பட்டுவிடும். ஆற்றின் வழுவழுப்பான, ஏமாற்றக்கூடிய அக்கரையில் அம்பு மாரிகளைப் பொறுத்துக்கொண்டு இறங்குவது என்பது அநேகமாக முடியாத தொன்றே என்று அலெக்ஸாந்தரின் ஆட்கள் எண்ணினர். அலெக்ஸாந்தர் தன் எதிரியை ஏமாற்றுவதற்கும், திகைக்க வைப்ப தற்கும் பல வழிகளைக் கையாண்டார். தானிருந்த இடத்திலேயே நீண்ட காலம் தங்கப் போவதாகத் தீர்மானித்தவரைப்போலப் பெரும் தானியக் களஞ்சியங்களைச் சேர்த்துக்கொண்டிருந்தார்; மழைக்காலம் முடியும்வரை தான் காத்திருக்க விரும்புவதாக ஒரு வதந்தியைக் கிளப்பிவிட்டார்; படைப் பகுதிகளை அங்குமிங்கும் அனுப்பிப் படையினர் எப்போதும் இயங்கிக்கொண்டிருக்குமாறு செய்தார். பிறகு ஒரு நாள் இரவு அவருடைய முரசுகள் முழங்கின; அவருடைய குதிரைப்படை நீர்நிலைவரை ஓடிவந்தன; எதிரியின் கண்களில் முழுப்படையும் ஆற்றைக் கடப்பதற்குத் தயாராய் இருப்பது போலவே தோன்றியது. போரஸ் தம்முடைய யானை களைக் கரைவரை செலுத்தித் தன் படைகளை அணிவகுத்து வைத்தார். ஆனல் அது ஒரு பொய் எச்சரிக்கையாகப் போய் விட்டது.

ஒவ்வோர் இரவும் ஆற்றைக் கடப்பதுபோல மாசிடோனியப் படை இயக்கஞ்செய்தது, ஒவ்வோர் இரவும் இந்தியர்கள் காற்றிலும் மழையிலும் பல மணி நேரங்கள் நின்றுகொண்டிருந்தனர். ஆனல் பேரொலிகளைத் தொடர்ந்து செயல் ஒன்றும் நடைபெருததால் போரஸ் அந்தப் பயனற்ற இரவுக் காவல்களினுல் சலிப்புற்றூர்; கோழை மனமுடைய எதிரியின் பொய்யான முன்னறிவிப்புக்களைப் புறக்கணித்தார். இதற்குள் அலெக்ஸாந்தர், போரஸ் ஏமாந் திருக்கும் சமயம் பார்த்துத் தன்னுடைய காரியத்தை முடித்துக் கொள்ள ஒரு பெரிய திட்டத்தைத் தீட்டிவைத்துக் கொண்டிருந் தான்.

### அலெக்ஸாந்தரின் தந்திரம்

பாசறையிலிருந்து சுமார் பதினறு மைலுக்கு அப்பால் ஹைடாஸ்பெஸ் வளைந்து தெற்கிலிருந்து மேற்காகத் திசை திரும்பு கிறது. அந்தத் திரும்பு கோணத்திற்கு எதிரில் ஆற்றினிடையே காடுகள் நிறைந்த ஒரு தீவு இருந்தது. ஆற்றின் வலது கரையும் நெருங்கிய காடுகளால் மறைக்கப்பட்டிருந்தது. அங்கேதான் ஆற்றைக் கடப்பதற்கு அலெக்ஸாந்தர் தீர்மானித்தான். படகுகளை அங்கே கொண்டுபோகும்படி செய்தான்; ஆழ்ந்த குறுகிய ஆற்றி னருகே காடுகளில் மறைந்து கொள்ளும் பாதுகாப்புக்காகப் புது

முயற்சிகள் கையாண்டான். ஆக்ஸஸ் நதியைக் கடப்பதற்குப் பயன்படுத்தியதுபோல வைக்கோல் திணிக்கப்பட்ட தோல்களைத் தயார் செய்திருந்தான். தக்க தருணத்தில், காடுகள் சூழ்ந்த மேடான பகுதிக்குத் தம் துருப்புகளின் ஒரு பகுதியை அனுப்பினன். எதிரியின் நோக்கிலிருந்து தப்புவதற்காக அத்துருப்புக்கள் ஆற்றிலிருந்து சிறிது தூரம் விலகியே சென்றன. க்ரேடெரஸின் (Craterus) ஆணையின்கீழ் போதுமான அளவுடைய ஒரு படை பாசறையிலேயே விடப்பட்டது. போரஸ் அப்போதிருந்த நிலையிலிருந்து முழுப் படையையும் நகர்த்தும்வரை அல்லது அவர் தோற்கடிக்கப்பட்டு அடிபணியும்வரை ஆற்றைக் கடக்கக்கூடாதென்று க்ரேடெரஸுக்கு உத்தரவிடப்பட்டது. மற்றப் படைகள் பாசறைக்கும் தீவுக்குமிடையே தக்க சமயத்தில் ஆற்றைக் கடப்பதற்காகப் பல இடங்களில் நிறுத்தப்பட்டன. பிறகு மாலையில் குறிப்பிட்ட இடத்திற்கு அலெக்ஸாந்தர் நேரில் வந்து, வெள்ளம் பொங்கிப் புரண்டோடிய அவ்வாற்றைக் கடப்பதற்கான ஏற்பாடுகளை, கடுங்காற்று வீசிக்கொண்டிருந்த அந்த இரவு முழுதும் கண்காணித்துக் கொண்டிருந்தான். இங்கே ஆற்றின் வலது கரையில் அபிசாரேக்களின் வருகைக்கு எதிராக எச்சரிக்கையாக, தான் கொண்டுவந்திருந்த படைக்கலங்கள் நிரம்பப் பெற்ற காலாட் படைப் பகுதிகளை நிறுத்திவைத்தான்.

கரையிலிருந்த எதிரிகளின் காதுகளில் எவ்விதச் சத்தமும் கேளாதபடி செய்த காற்றும் மழையும் விடியலுக்கு முன்பு குறைந்தன; வழியும் தெளிவாகத் தெரியத் தொடங்கிற்று. அலெக்ஸாந்தர் மூன்று பாய்மரங்களும் முப்பது துடுப்புக்களுமடங்கிய ஒரு படகில் படையுடன் சென்றன்; தீவு பத்திரமாகக் கடக்கப்பட்டது. ஆனல், அக்கரையை அடைவதற்கு முன்பே இந்தியப் படை வீரர்கள் அவர்களைக் கண்டுவிட்டனர்; தங்கள் தலைவருக்கு எச்சரிக்கை செய்வதற்காகக் குதிரைமீது முழு வேகத்துடன் சென்றனர். முதலில் கரையில் இறங்கிய அரசன் குதிரைப் படையினர் முழுவதும் இறங்கும் வரையிலும், பின்பு அணிவகுத்து நிற்கும் வரையிலும் காத்திருந்தான். ஆனல் சிறிது தூரம் முன்னேறிச்சென்ற பிறகுதான் அவன் இறங்கியது நதியின் அக்கரையிலன்று; ஆனல் மழை வெள்ளத்தால் நிரம்பி ஓடிக்கொண்டிருந்த ஒரு கால்வாயினல் அக்கரையிலிருந்து பிரிக்கப்பட்ட ஒரு தீவின் மீது இருப்பதாக உணர்ந்தான். படையினர் தங்கள் பொருள்களை மூட்டைகளாகக் கட்டிப் பத்திரப்படுத்துவதற்கேற்ற இடம் கண்டுபிடிப்பதற்குச் சிறிது நேரமாயிற்று. நீர் மட்டம் மாரளவிற்கு வந்துவிட்டது. கடைசியில் படையினர் முழுவதும் அக்கரையில் இறங்கினர். நடக்கப்போகும் போருக்குத் தயாயிருக்கும்படி அலெக்ஸாந்தர் தம்முடைய ஆட்களுக்குக் கட்டளையிட்டான்.

அப்போர் அவன் வாழ்க்கையில் நடந்த மூன்று பெரும் போர்களுள் ஒன்று. காலாட் படையினருக்கு அதிகமாகச் சேதமில்லாமல் போரில் வெற்றி காணவேண்டும் என்று அலெக்ஸாந்தர் விரும்பினான். அவனிடம் 6000 சிப்பாய்களும், சுமார் 4000 கனமில்லாத படைக்கலந் தாங்கிய காலாட்களும் 1000 சிதியன் வில்லாளிகள் உள்பட 5000 குதிரைப்படை வீரர்களுமே இருந்தனர். குதிரைப்படை வீரர்கள் எல்லோருடனும் புறப்பட்டுப் பேரரசின் பாசறையை நோக்கி மிக வேகமாக ஓடினான்; காலாட்படையினர் பின்னால் அவர்களைப் பின்பற்றி வரும்படி செய்தான். பேரரசின் படை முழுவதும் தம்மை எதிர்க்கவருமானால், தன் காலாட் படைக்காகக் காத்திருக்கலாமென்றும், எதிரி பின்வாங்கிச் செல்லும் அறிகுறிகளைக் காண்பித்தால் தன்னுடைய மேலான குதிரைப்படையுடன் எதிரியைத் தாக்கி விடலாம் என்றும் எண்ணினான். அப்போது எதிரே ஒருபடை வருவதைக் கண்டான். அது 1000 குதிரை வீரர்களும், அறுபது யுத்தத் தேர்களும் அடங்கியதாய் பேரரசின் மகன் தலைமையில் வந்தது. மாசிடோனியர்களை அக்கரையில் இறங்கவிடாமல் செய்ய நினைத்திருந்த அப்படை மிகக் காலந் தாழ்த்திவிட்டது. எதிரியின் குறைந்த எண்ணிக்கையைப் பார்த்தவுடன் அலெக்ஸாந்தர் தன்னுடைய குதிரை வீரர்களை ஊக்கி, எதிரிப் படைகளை எளிதாகப் பின்னோடச் செய்தான்; இளவரசரையும் அவருடைய நானூறு ஆட்களையும் கொன்றான்.

**ஹைடாஸ்பெஸ் யுத்தம்: இந்தியப்படை அணிவகுப்பு.**

ஆனால் போரஸ் தன் முக்கிய படையுடன் முன்னேறிவந்து கொண்டிருந்தார். க்ரேடெரஸுக்கு எதிராக ஆற்றின் கரையைப் பாதுகாக்கும்படி ஒரு சிறிய படையை நிறுத்திவைத்துவிட்டு மீதி எல்லாப் படைகளுடனும் வந்தார். அவருடைய குதிரைப் படையினரும், யுத்த தேர்களும் இயங்குவதற்கேற்ப மணல் பகுதியை அடைந்தவுடன் அவர் போர் அணிவகுப்பில் படைகளை நிறுத்தினர். எல்லாவற்றுக்கும் முன்னாக நூறடி தூரத்திற்கு ஒரு யானையாக இரு நூறு யானைகளை ஒழுங்காக நிறுத்திவைத்தார். அந்த யானைகளுக்குச் சிறுது தூரத்தில் அவருடைய காலாட்படை இருந்தது. அதன் எண்ணிக்கை 20,000-க்குக் குறையாது. அணிவகுப்பின் இரு புறங்களிலும் அவர் தம்முடைய குதிரைப் படையை நிறுத்தினர். அப்படையின் எண்ணிக்கை 4000 இருக்கலாம். அலெக்ஸாந்தர் தம்முடைய சிப்பாய்களுக்காகக் காத்திருந்தார். அவர்கள் வந்ததும் யானைகளுக்கு எதிராக அவர்களை நிறுத்தினர். முன் பக்கத்தில் சென்று தாக்குவது முடியாததாக இருந்தது. ஏனெனில், இந்தியப் படையின் உண்மையான பலமாக இருந்த யானைகள் பாதுகாப்புக் கோபுரங்களாக நின்றுகொண்டிருக்கும்போது, அந்த

விலங்குகளுக்கிடையே குதிரைகளோ, காலாட் படைகளோ துணிந்து செல்ல முடியாது. எதிரியின் பெரும் படைகளைத் தாக்குவதற்கு ஒரே ஒரு வழி பக்கவாட்டில் குதிரைப் படையுடன் தாக்குவதே யென்று அலெக்ஸாந்தர் உணர்ந்தான் ; அதனால் பக்கவாட்டுத் தாக்குதலினால் எதிரியின் குதிரைப் படையும் காலாட்படையும் குழப் பத்தில் மூழ்கிச் சிதறுவதைப் பார்க்கும்வரை காலாட் படையுடன் முன்னேறிவர வேண்டாமென்று செல்யூகஸுக்கும் மற்றக் காலாட் படைத் தளபதிகளுக்கும் அலெக்ஸாந்தர் கட்டளையிட்டான். அலெக் ஸாந்தர் தன்னுடைய தாக்குதலை இடது பக்கவாட்டில் செய்யலாம் என்று தீர்மானித்தார். ஏனெனில் அது ஆற்றுப்பக்கமாக இருந்தது;




அவருடைய துருப்புகள் எளிதில் அக்கரையை அடைந்துவிட முடியும். தன் தீர்மானத்தின்படியே அவன் தன்னுடைய எல்லாக் குதிரைப் படையினரையும் வலது பக்கத்தில் நிறுத்திவைத்தார். ஒரு படைப் பிரிவு கோயனஸ் (Coenus) என்பவரிடம் ஒப்படைக்கப் பட்டது. அவர் வலது பக்கம் நன்கு அணிவகுத்து நின்றார். பின்புறத்திலிருந்து எதிரிப் படையைத் தாக்குவதற்கும், எதிரியின் இடது புறத்தைத் தாக்கும்போது அப்பகுதியிலிருக்கும் துருப்புக் களுக்கு உதவியாக வலது பக்கத்திலிருந்து குதிரைப்படையினர் வந்தால் அவர்களைக் கவனித்துக்கொள்வதற்கும் தயாராய் இருந்தார். குதிரைமீதே வந்து சிதியன் வில்வீரர்களைப் பகைவரின் குதிரைப் படைமீது நேரடியாகத் தாக்குதலைச் செய்யத் தொடங்கினர்.

அலெக்ஸாந்தரின் குதிரைப்படை இன்னும் நீளணி வரிசையிலேயே இருந்தது ; அணிவகுப்பை முற்றிலும் செய்து முடிப்பதற்கு நேரமில்லாதிருந்தது. சிதியின் வில்வீரர்கள் பகைவர்கள்மீது அம்பு மாரிகளைப் பொழிந்தனர் ; அலெக்ஸாந்தர் மீதமுள்ள பெரும் பான்மையான தன் குதிரைப் படையுடன் எதிரியைப் பக்கவாட்டில் தாக்குவதற்காகத் தானே பொறுப்பேற்றுச் சென்றான். இவ்வாறு பகைவரை முதலில் தம்மைத் தாக்கும்படி விட்டுவிட்ட, உயிர்க்குறுதி பயப்பதுபோன்ற மாபெருந் தவறைச் செய்துவிட்ட போரஸ் வலது பக்கத்திலிருந்து மீதியுள்ள படையணிவகுப்புகளை எவ்வளவு விரைவாக இடதுபக்கத்திற்குக் கொண்டுவர முடியுமோ அவ்வளவு விரைவாகக் கொண்டுவந்தார். பகைவரின் படையணிவகுப்புகளை முறியடிக்கும் தக்கதருணத்தை அலெக்ஸாந்தர் பயன்படுத்திக் கொண்டார். பேரரசின் அணிவகுப்புகள் பின்னால் சிதறியோடி யானைகளுக்குப் பின்னே பாதுகாப்பாக ஒளிந்துகொண்டனர். பிறகு படையின் அந்தப் பக்கத்திலிருந்த யானை வீரர்கள் தங்கள் யானைகளை மாசிடோனியக் குதிரைகளைத் தாக்குமாறு துரத்தினர். அதே சமயத்தில் மாசிடோனியக் காலாட் படையினர். முன்னால் விரைந்துவந்து யானைகளைத் தாக்கினர். யானைகள் எதிரிகளை நோக்கிப் பக்கவாட்டில் திரும்பி ஓடிக்கொண்டிருந்தன. ஆனால் படையணியிலிருந்த மற்ற யானைகள் கிரேக்க சிப்பாய்களின் வரிசைகளுக்குள் செலுத்தப் பட்டன. யானைகள் பகைவர்களை மிதித்தும் துவைத்தும் பெரும் நாசத்தைச் செய்தன. யானைகள் அடைந்த வெற்றியைக் கண்டு புத்துணர்ச்சி கொண்ட இந்தியக் குதிரைப்படையினர் மீண்டும் அணிவகுத்துப் படைக்கலங்களுடன் எதிரியைத் தாக்கச் சென்றனர். ஆனால் மாசிடோனியக் குதிரைப் படையினரால் பின்னால் துரத்தியடிக்கப்பட்டனர். மாசிடோனியக் குதிரைப் படையினர் வரிசை வரிசையாக அணிவகுத்துக் கொண்டிருந்தனர். இந்தியப் படையினர் மீண்டும் யானையாகிய சுவருக்குப் பின்னால் ஒளிந்துகொள்ள முற்பட்டனர். ஆனால் யானைகளில் பல காயங்களால் கடுஞ்சினமடைந்தன ; பாகர்க்கும் அடங்காது ஓடின. சில யானைகள் தங்கள் வீரர்களை இழந்தன ; குழப்பத்தில் பகைவரையும், நண்பர்களையும் பிரித்தறியாது யானைகள் எல்லோரையும் ஒன்றாகக் கருதி மிதிக்கத் துவங்கின. அதனால் இந்தியப் படை வீரர்கள் மிகுதியாகத் துன்புற்றனர் ; மாண்டனர். ஏனெனில் அவர்கள் யானைகள் சினத்துடன் சுற்றித் திரிந்த இடத்திற்குள்ளேயே அடைந்திருந்தனர். ஆனால் மாசிடோனியர்கள் யானைகளைப் பக்கவாட்டிலிருந்தும் பின்புறத்திலிருந்தும் தாக்க முடிந்தது. படைக்கருவிகளை எடுத்துக்கொண்டுவருவதற்குப் பின்புறமுள்ள திறந்த வெளிக்குச் சென்று திரும்ப அவர்களுக்கு வசதியிருந்தது. கடைசியில் யானைகள் மிகவும் சோர்வுற்றபோதும், யானை வீரர்களிட

மிருந்த படைக் கருவிகள் எல்லாம் குறைந்த போதும், அலெக்ஸாந்தர் பகைவர்களைச் சூழ்ந்து நெருங்கினான். எதிரியின் அருகிலேயே சென்று எதிரிகளைத் தனித்தனியே தாக்குமாறு தன் சிப்பாய்களுக்குக் கட்டளையிட்டான். தன் படையினரைப் புதிதாக அணிவகுத்துக் கொண்டு பக்கவாட்டிலிருந்து தாக்குதலை நடத்த முற்பட்டான். பகைவரின் குதிரைப்படை ஏற்கெனவே பலவீனப்பட்டுச் சிதைந்திருந்தமையால், இரட்டிப்புத் தாக்குதலை எதிர்த்துச் சமாளிக்க முடியாமல் களைத்தன. அதனால் அப்படை முறிந்தது. கிரேக்கச் சிப்பாய்கள் பகைவரின் காலாட் படைகள்மீது உருண்டனர். இதுவரை யுத்தத்தில் தீவிரமாக ஈடுபடாதிருந்த போரசின் காலாட் படையினர் விரைவில் கலைந்தோடினர். இதற்குள் நதியின் அக்கரையிலிருந்த தளபதிகளான க்ரேடெரஸ் போன்றோர், வெற்றி அலெக்ஸாந்தரைத் தேடி வந்துகொண்டிருக்கிறதென்று உணர்ந்து எவ்வித எதிர்ப்புமின்றி ஆற்றைக் கடந்துவந்து தக்க தருணத்தில் அவருடைய வெற்றியைப் பெரு வெற்றியாகச் செய்தனர்; எதிரிகளைத் துரத்தியடித்தனர். இரண்டாந்தரத் தளபதியாக, ஆனால் மிக வீரம் பொருந்திய போர் வீரராகக் காணப்பட்ட போரஸ், தம்முடைய படைகள் எல்லாம் சிதறியோடிவிட்டதைக் கண்டும், பெருவாரியான யானைகள் இறந்தபின் எஞ்சியவை யானை வீரர்களையிழந்து தனிச்சைப்போல் திரிந்து வருவதைக் கண்டும் போர்க்களத்திலிருந்து—டாரியஸ் இரண்டுமுறை ஓடிவிட்டதைப்போல—ஓடிவிடவில்லை. ஆனால் மிக உயரமாக யானைமீது அமர்ந்துகொண்டு போர் செய்து கொண்டேயிருந்தார். கடைசியில் அவருடைய வலது தோள் காயப்படுத்தப்பட்டது. அவருடைய உடம்பில் அப்பாகம் ஒன்றுதான் கவசத்தால் மூடப்படாமல் இருந்தது. பிறகு அவர் களத்தைச் சுற்றிவந்து களத்திலிருந்து சென்றுவிட்டார். அலெக்ஸாந்தர் அவருடைய பேராற்றலைக் கண்டு வியந்து தூதர்களை அனுப்பி அவரைத் தாம் அரசரிடம் திரும்பி வருமாறு தூண்டும்படி செய்தான். பிறகு வெற்றியாளராகிய அலெக்ஸாந்தரே வயது முதிர்ந்த அரசரைச் சந்திப்பதற்காகக் குதிரைமீது சென்றார். அவருடைய தோற்றப் பொலிவையும், அழகையுங் கண்டு வியந்து, 'உங்களை எப்படி நடத்தவேண்டும் என்று விரும்புகிறீர்?' என்று இந்திய அரசரைப் பார்த்துக் கேட்டான். 'ஓர் அரசனைப்போல நடத்துக' என்றார் போரஸ். 'எனக்காக உம்மை ஏதாவது வரம் கேட்டுக்கொள்ளும்' என்றான் அலெக்ஸாந்தர். 'முன்பு சொன்னதிலேயே எல்லாம் அடங்கியிருக்கிறது' என்று பதிலளித்தார் போரஸ்.

### ஹைடாஸ்பெஸில் அலெக்ஸாந்தரின் நகரங்கள்

அலெக்ஸாந்தரும் சிறைப்பட்ட அரசரை அரசருக்குரிய மரியாதைகளுடன் நடத்தினான். அவன் அவருடைய நாட்டை

அவருக்கே திருப்பிக் கொடுத்ததுடன், அந்நாட்டின் எல்லைகளையும் பெரிதும் விரிவுபடுத்தித் தந்தார். அப்போதிலிருந்து போரஸின் நாடு மாசிடோனியப் பேரரசுக்கு உட்பட்ட இராச்சியமாக மாறி விட்டது. தோற்ற அரசரை நடத்திய அரசப் பண்பு முறை பெருந்தன்மையை நிறைசெய்ததெனினும், அது ஆழ்ந்த அரசியல் கொள்கையின் விளைவால் முகிழ்த்ததேயாகும். இரண்டு சமமான வலிமை படைத்த அரசர்களின் பரஸ்பர பொருமையின் அடிப்படையைக் காட்டிலும், சிந்துவிற்கு அப்பாலுள்ள அவருடைய இராச்சியத்தின் ஆட்சி பாதுகாப்பாய் நிலைபெறுவதற்கு வேறு எந்தச் சிறந்த அடிப்படையும் இருந்திருக்க முடியாது. அவன், தக்ஷீலாவின் தலைவரை மிகுந்த பலமும் பாதுகாப்பும் உடையவராக ஆக்கினான். தன் எதிரியாயிருந்த போரஸை மீண்டும் அதே அரசபதவியில் அமர்த்தியதால் அவர் எப்பொழுதும் தன்னிடம் விசுவாசமாயிருப்பார் என்ற உறுதி அவனுக்குக் கிட்டியது. ஆனால் ஹைடாஸ்பெஸின் இருபக்கங்களிலும், போர்க்களத்திற்கு மிக அருகிலேயே, இரண்டு நகரங்கள் நிறுவப்பட்டன. அவை புதிதாக அடிப்படுத்தப்பட்ட நாட்டைக் காக்கும் கோட்டைகளாக விளங்குதற் குரியவாய் இருந்தன. நதியின் வலது பக்கத்தில் புசெல்பா (Bucephala) என்ற நகரம் நிறுவப்பட்டது. அப்பெயர் வயது முதிர்ச்சியினாலும், சோர்வினாலும் யுத்தத்திற்குச் சிறிது முன்பு இறந்துவிட்ட அலெக்ஸாந்தரின் குதிரையைக் குறிக்கும். இடது பக்கத்தில் வெற்றி நகரமாக, நிக்கேயா (Nicaea) நிறுவப்பட்டது.

(Mong) அலெக்ஸாந்தர் பஞ்சாப் வழியாக முன்னேறிச் செல்லல் (Ravee) சங்களா (Sangala) பிடிபடல்.

க்ரேடெரஸை நகரங்களை நிர்மாணிக்கும்படி விட்டுவிட்டு அலெக்ஸாந்தர், காஷ்மீரின் எல்லைப் புறத்திலிருந்த மலைமக்களான கிளாசேக்களை (Glausae) அடிப்படுத்துவதற்காகவும், அதேசமயத்தில் அபிசாரெஸை அச்சுறுத்துவதற்காகவும் வடக்கு நோக்கிப் படையுடன் சென்றான். மலைகளின் எல்லைப் புறத்திற்கு அருகாகவே, பேராபத்துடனும் சில உயிர்ச் சேதத்துடனும் ஒன்றரைமைல் அகலமான அசேஸினெஸைக் கடந்து, போரஸின் மருமகனும், போரஸ் என்ற பெயரையே பெற்றிருந்தவருமான அரசரின் எல்லைப் பகுதிக்கு நுழைந்தான். இந்தப் போரஸ் தன் மாமனுடன் பகைமை கொண்டிருந்தான். அவரை மேலாட்சி செய்யும் உரிமை பெற விழைந்திருப்பான் போலும். போர் தொடங்கு முன்பே அவன் அலெக்ஸாந்தருக்குப் பணிந்து விடுவதாகத் தூதுக்குழுக்களை அனுப்பினான். ஆனால் வெற்றியாளர் தன் மாமனுக்குக் காட்டிய ஆதரவைக் கண்டு பயந்து ஏமாற்றமுற்றுக் கிழக்கு நோக்கி ஓடினான். அலெக்ஸாந்தர் விரைந்து தனியே அவரைத் துரத்திச்

கொண்டே சென்றான்; வழியில் இருந்த ஹைட்ராஓடிஸ் (Hydraotis) அசேசினெஸைப் போலவன்றி எளிதாகக் கடக்கப்பட்டது. ஆனால் இளம் போரஸின் நாட்டையும், இரண்டு நதிகளுக்கும் இடையிலிருந்த இனங்களையும் அடிப்படுத்துவதாக ஹெபேஸ்டிபோனைத் தெற்கு நோக்கிப் படையுடன் செல்லுமாறு ஏவிவிட்டு வந்திருந்தான். 'தோஆப்பின்' (doab) வடக்கேயிருந்த எல்லாப் பிரதேசங்களிலும், அதாவது இரண்டு நதிகளுக்கும் இடைப்பட்ட நிலமும் மூத்த போரஸின் இராச்சியத்தோடு சேர்க்கப்பட இருந்தன. ஆனால் சிறிது காலத்திற்கு முன்பு போரஸுடம், அபிசாரெஸுடம் வெல்ல முடியாத, சுதந்திரமான, யுத்த மனப்பான்மைவாய்ந்த கதேயன்கள் (Cathaeans) அலெக்ஸாந்தருடன் சண்டையிடுவதற்குத் தயாராயிருக்கின்றனர் என்ற சேதி கேட்டு அவன் இளம் போரஸைத் துரத்திச் செல்வதைக் கைவிட்டான். அவன் அவர்களுடைய முக்கியமான நகரமான சங்களாவை நோக்கிச் சென்றான். அந்நகர் ஒரு பக்கம் ஒரு மலையாலும் மற்றொரு பக்கம் ஓர் ஏரியாலும் வலிமையான அரணாகவும் அகழியாகவும் சூழப்பட்டுப் பாதுகாக்கப்பட்டிருந்தது. அது லாஹூரின் வடமேற்கே அநேகமாக அமிர்தசரஸுக்கு அருகில் இருந்தது. கதேயன்கள் அருகிலிருந்த சில மலையினத்தவர்களின் உதவியுடன் மலையைச் சுற்றி மூன்று வரிசையில் படைக்கலம் நிறைந்த வண்டிகளை நிரைத்துவைத்து வேலியமைத்துக் கொண்டனர். பெரும் போராட்டத்திற்குப் பின்பு அகழ் சூழ்ந்த அந்தக் கோட்டை தகர்ந்தது; அதைப் பாதுகாத்துக் கொண்டிருந்தவர்கள் புறமுதுகிட்டு நகரத்திற்குள் ஓடிச் சென்றனர். அவர்கள் இருளில் ஏரியின் மூலம் தப்பிச் செல்ல முயன்றனர். இந்தத் திட்டத்தை யறிந்த அலெக்ஸாந்தர் ஏரியின் கரைகளில் வரிசையாகத் தம் படைவீரர்களை நிறுத்திவைத்தார். பிறகு அந்த இடம் தகர்க்கப்பட்டுப் பாழாக்கப்பட்டது. அருகிலிருந்த இனத்தவர்களும் அடிபணிந்தனர்; முன்பு போலவே இந்த நிலம் முழுவதும் போரஸின் ஆட்சித் தலைமையின் கீழ் வைக்கப்பட்டது. இவ்வாறு பஞ்சாப்பின் நிலப் பகுதியான, சிந்துவிற்கும் ஜீலத்திற்கும் இடைப்பட்ட பகுதி தக்ஷிலாவின் ஓம்பிஸுக்கு உரியதாகவும், ஜீலம் பியாஸ் இவற்றிற்கு இடைப்பட்ட பிற பகுதிகள் எல்லாம் போரஸுக்குச் சேர்ந்தவையாகவும் ஆக்கப்பட்டன.

அலெக்ஸாந்தர் படையெடுப்பின் காலவரையறை; படை முன்னேறிச் செல்ல மறுத்தல்.

பிறகு அலெக்ஸாண்டர் ஹைபாசிஸ் (Hyphasis) அல்லது பியாஸை நோக்கி முன்னேறிச் சென்றான்; அந்நதி சட்லெஜுடன் சேர்ந்து, சதாத்ரு அல்லது 'நூறு ஓடைகளாக' உருவாகும் இடத்திற்குமேல் உயரமான இடத்தை அடைந்தான். அவனுடைய முன்

னேற்றத்தின் கடைசி இடமாக இருக்கும்படி விதி வகுத்துவிட்டது. அவன் மேலும் முன்னேறிச் சென்று கங்கைச் சமவெளிப் பகுதிகளை ஊடுருவ நினைத்தான்; ஆனால் எதிர்பாராத தடை ஒன்று ஏற்பட்டது. மாசிடோனியர்கள் பல ஆண்டுகளாக நடந்துவரும் கடும் போர்களினால் தளர்ந்துவிட்டனர்; முன்பின்னறியாத பிரதேசங்களுக்கு இவ்வாறு முடிவின்றி உருண்டு கொண்டே செல்வதால் தளர்ச்சியுற்றனர். அவர்களுடைய எண்ணிக்கை மிகச் சுருங்கிவிட்டது அவர்களில் பலர் உருக்குலைந்து தக்க பருவத்திற்கு முன்பே முதுமையடைந்து விட்டனர். சிந்துவைக் கடக்க முற்பட்டபோதிலிருந்து இடைவிடாது அவர்களைத் தாக்கிக்கொண்டும், அவர்களுடைய கடின முயற்சிகளை இரட்டிப்புக் கடினமுள்ளவையாக ஆக்கியும் வந்த பயங்கரமான பேய் மழையின் கொடுமை அவர்களால் பொறுக்க முடியாத எல்லைக்கு அவர்களைக் கொண்டுபோய் விட்டுவிட்டது அவர்களுடைய தளவாடங்கள் தேய்ந்துவிட்டன; போர் வீரர்களுள் ஒருவர் வருணித்தவாறு குதிரைகளின் குளம்புகள் நீண்ட தூரக் கரடு முரடான பிரயாணங்களால் தேய்ந்துவிட்டன; கடினமான யுத்தங்களால் அவர்களுடைய படைக் கருவிகள் முனை மழுங்கியும் உடைந்தும் சீரிழந்தன; அனுபவமிக்க கிரேக்கப் போர்வீரர்களின் உடல்கள், இந்தியக் கந்தைகளால் மூடப்படவேண்டிய நிலைமை ஏற்பட்டு விட்டது. ஏனெனில் அவர்களுடைய கிரேக்க ஆடைகள் எல்லாம் கிழிந்துபோய்விட்டன. எல்லோரும் மேற்கே தங்கள் தாய்நாட்டுக்குச் செல்லப் பெரிதும் அவாக் கொண்டனர். ஏற்கெனவே போதுமான புகழ் அடைந்துவிட்டது. இன்னும் ஏன் கடும் உழைப்புக்குமேல் கடும் உழைப்புச் செய்யவேண்டும்? பேராபத்துக்குமேல் பேராபத்தை அடைய வேண்டும்? ஹைபாசிஸின் கரைகளில் இந்தச் சிக்கல்நிலை ஏற்பட்டது; படைவீரர்கள் மேலே நகர்வதில்லை என்று முடிவு செய்தனர். கங்கையின் வளமான பகுதிகளை அடைவதற்கு முன்பு அவர்கள் பதினொரு நாட்கள் இந்தியப் பாலைவனத்தைக் கடந்தாக வேண்டும் என்று வந்த செய்தி அவர்களுடைய தீர்மானத்தை இன்னும் வலிமைப்படுத்தியது. அலெக்ஸாந்தர் கூட்டிய அதிகாரிகளின் கூட்டத்தில் கோனஸ் (Coenus) எல்லோருடைய கருத்தும் இதுவென எடுத்து மொழிந்தார். மிகவும் திகைப்புற்ற அரசர் கூட்டத்தைக் கலைத்துவிட்டு மறுநாட் காலையில் அவர்களை மீண்டும் வரவழைத்து, தான் முன்னேறிச் செல்லப் போவதாகவும், ஆனால் யாரையும் தம்முடன் வரும்படி வற்புறுத்தப் போவதில்லை என்றும் கூறினன். மாசிடோனியர்கள் மாசிடோனியாவிற்குத் திரும்பிச் சென்று அங்குள்ளோரிடம் அவர்கள் ஒரு பகைமைநாட்டில் தங்கள் அரசரை விட்டு வந்ததைப்பற்றிக் கூறட்டும் என்றும் கூறினன். அவன் தன்னுடைய கூடாரத்திற்குச் சென்று இரண்டு நாட்கள் வரை தன் தோழர்களில் எவரையும் பார்க்க விரும்பாதவனய் இருந்தான்.

அதன்மூலம் அவர்களுடைய மனம் சாந்தமடையும் என்று எதிர்பார்த்தான். அவனுடைய வெறுப்பு மாசிடோனியப் படையினர்க்கு வருத்தத்தைத் தந்தபோதிலும், அவர்கள் தங்கள் முடிவைத் தளர்த்தவோ, மாற்றிக் கொள்ளவோ விரும்பவில்லை. மூன்ருவது நாள் அலெக்ஸாந்தர் ஆற்றைக் கடக்கும் முன்பு வழக்கம்போலச் சில பலிகளைச் செய்யும் சடங்கைச் செய்தான். அவன் பலியிட்ட உயிர்கள் சாதகமில்லாத அறிகுறிகளைக் காட்டின. அது உண்மையில் விதியின் தற்செயலான பிறழ்ச்சி என்று கருதப்பட முடியாதவையாய் இருந்தன. பிறகு அரசன் இணங்கிஞன்; தாமும் திரும்பிச் செல்லத் தீர்மானித்துவிட்டதாக விடாப் பிடியான தம் படைக்கு அறிவித்தான். அவனுடைய விருப்பம் தெரிவிக்கப்பட்டவுடனே வழிநடையால் களைப்புற்றிருந்த பெரும் வீரர்கள் எக்களிப்பால் கூத்தாடினர்; பெரும்பாலோர் இன்பக் கண்ணீர் வடித்தனர். பிறரால் வெல்லப்பட முடியாத அரசரின் கூடாரத்தைச் சூழ்ந்து கொண்டு, தன் மாசிடோனியர்களால் ஒருமுறை வெல்லப்படுவதற்கு அனுமதித்த அவரை வாழ்த்திப் போற்றிக் கொண்டாடினர். ஹைபாசிஸின் கரைகளில் அலெக்ஸாந்தர் ஒலிம்பஸின் பன்னிரண்டு பெரிய கடவுளர்க்கும் பன்னிரண்டு கோபுர பலிபீடங்களை எழுப்பிஞன். தன்னுடைய வியப்பு நிறைந்த வழியில் எல்லாம் வெற்றிகளைக் கொடுத்ததற்காகவும், உலகத்தின் முடிவிடத்திற்கு மிக அருகாமை வரையில் பாதுகாப்பாகத் தம்மை கொண்டு உய்த்ததற்காகவும் அக்கடவுளர்க்கு நன்றி தெரிவிக்கும் முறையில் அப்பலி பீடங்களை நிறுவிஞன்.

### ஆசியாவின் நிலவியலைப்பற்றி அலெக்ஸாந்தரின் கருத்து

உலகத்தின் முடிவிடத்தின் எல்லைக்கருகாமை வரையில்தான் செல்ல முடிந்தது; அதை அடையவில்லை. இதுதான் ஹைபாசிஸில் அலெக்ஸாண்டரின் பெரும் ஏமாற்றமாக இருந்தது. இந்த ஏமாற்றத்தின் அளவை நன்ருக அறிந்துகொள்ள வேண்டுமாஞல் அவன் நிலவியலைப் பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களை அறிந்துகொள்ள வேண்டும். இந்தியப் பெருந் தீப கற்பகமாகிய, ஆசியாவின் தெற்கு விரிவெல்லையைப்பற்றியும், இந்தியாவிற்கும் தெற்கே இன்னும் பல பெருந் தீவுகள்இருந்ததைப்பற்றியும் அவனுக்கு ஒன்றுந் தெரியாது. சைஞவின் பரப்பெல்லை பற்றியும் சைபீரியா என்ற ஒன்று இருப்பதைப் பற்றியும் அவனுக்குச் சிறிதும் சந்தேகங்கூட ஏற்பட்டதில்லை. அட்லாண்டிக் உலக நிலப்பரப்பின் மேற்கு எல்லையாக இருந்தது போலக்' கங்கையாற்றின் நீர் விழும் கடலே உலக நிலப்பரப்பின் கிழக்கு எல்லையாகும் என்று அவர் எண்ணிக்கொண்டிருந்தான். மேலும் அந்தக் கிழக்குக் கடல் ஹிந்து-குஷ், பாமீர் மலைகளின் சரிவுகளின் அடிவாரங்களை இன்னும் அடித்துக்கொண்டு செல்வதாகவும், சிதியாவின் வடக்குக் கரைகளைச் சுற்றிக்கொண்டு செல்வதாகவும்,

காஸ்பியன் கடலின் தொடர்ச்சியாகச் செல்வதாகவும் கற்பனையில் எண்ணிக் கொண்டிருந்தான். தெற்குக் கடலில் சிந்துவின் முகத்து வாரத்திலிருந்து அராபியக் குடாவிற்குக் கப்பலில் செல்லலாம் அல்லது லிபியாவைச் சுற்றிக்கொண்டு ஹெராக்கிளிஸின் தூண் களுக்குச் (Pillars of Heracles) செல்லலாம் என்றும், அவன் திட்ட மிட்டிருந்தது போலவே இத்திட்டங்களைப்பற்றி விரைவில் இன்னுங் கூறப்போகிறோம். கங்கையின் முகத்துவாரத்திலிருந்து கப்பலில் புறப் பட்டு சிதியா, ஹிர்கேனியா இவற்றின் கரைகளைச் சுற்றிச் செல்ல லாம் என்றும் அவன் அநேகமாகக் கனவு கண்டிருப்பான். ஹைபாசி ஸிற்கு அப்பாலுள்ள பகுதிகளை இணைத்துக் கொண்டபின் அல்லது அவற்றைத் திறம்பட வெற்றிகொண்ட பிறகு அலெக்ஸாந்தரின் மனம் பின்னே திரும்பிச் செல்ல இசையவில்லை. அவனிடம் ஒரு சிறு படைதான் இருந்தது. ஏனெனில் வழியில் ஜீலமிலிருந்து பியாஸ் வரையிலுள்ள பல இடங்களில் பெரிய படைப் பகுதிகளை விட்டுவிட்டு வந்திருந்தான். கங்கைச் சமவெளியில் அமைதியுடன் வாழ்பவர் களிடமிருந்து அவன் பகைமையை எதிர்பார்க்கவில்லை. முதல் பட்சமாக அவனுடைய படையெடுப்பு புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் ஒரு பிரயாணமாகவே அமைந்திருக்கும். 'சூழ்நிலைகள் அப்பிரயாணத்தை வெற்றிப் படையெடுப்பாக மாற்றியிருக்கவுங் கூடும்.

அலெக்ஸாந்தர் வெற்றிக்காக வெற்றியடைய வேண்டும் என்று வெற்றியில் திருப்திப்படுத்த முடியாத அளவு கொண்டிருந்த வெறி யினுல் புகழைப் பற்றியும், புதிய இராச்சியங்களைப்பற்றியும் பலவித மான பெருங் கனவுகளைக் கண்டு கொண்டிருந்தவனுயும், அதில் ஒரு வெறிபிடித்தவனுயும் அடிக்கடி வருணிக்கப்படுகிருன். பூமியின் வடிவத்தைப்பற்றி அறிந்திருக்கும் நமக்கு அவனுடைய திட்டங்கள் முரட்டுத்தனமானவையாகக் காணப்படுதலின், அவனுடைய திட்டங் களை மதிப்பிடும்போது நாம் அவனுடைய தப்பான கருத்துக்களுக்கும், முழுமை பெருத அளவிற்கும் ஏற்றபடி நம் கற்பனையைச் சுருக்கிக் கொள்ளவேண்டும். அவன் மனத்துள் நினைத்துக் கொண்டிருந்தது போலவே பூமியின் வடிவும் இயல்புகளும் இருந்திருப்பின் அவனுடைய பேரரசு பூமியின் எல்லைகளைத் தொட்டுக் கொண்டிருக் கும்படி செய்வதற்கு இருபது ஆண்டுகள் போதுமானவையாய் இருந் திருக்கும். அவன் கிழக்குக் கடலிலிருந்து மேற்குக் கடல்வரையி லுள்ள பகுதிகளை ஆண்டிருப்பான். சிதியாவின் கடைசி எல்லைகளி லிருந்து லிபியாவின் கரைகள் வரையுள்ள பகுதியை ஆண்டிருப்பான்; இடையிலிருந்த மூன்று கண்டங்களிலும் அவன் அமைதி நிலவச் செய்திருப்பான். மக்கள் வாழ்வதற்குரிய இடங்களில் எல்லாம் கிரேக்க நகரங்களை நிர்மாணித்திருப்பான். அலெக்ஸாந்தர் பேராசை பிடித்தவனுகத்தான் இருந்தான். ஆனுல் அந்தப் பேராசை அவனைக் குருடாக்கிவிடவில்லை; அவன் உண்மை எது, பொய்த்தோற்றம் எது

என்றறியும் வல்லமை நிரம்பப் பெற்றவனுகவே இருந்தான். சிந்து நதிப் படையெடுப்பு வெறும், வேண்டுமென்று செய்த ஆக்கிரமிப்பாக இருக்கவில்லை; ஆனல் அக்காலத்தில் முரட்டுத்தனமான மலையினத் தாரின் கையிலிருந்த இந்திய வாணிகத்தின் மார்க்கங்களைப் பெற்றுத் தமக்கென நிறுவுவதற்கு அப்படையெடுப்பு அவசியமாயிருந்தது. சிந்துவின் எல்லைப் பகுதியைப் பெறுவதற்குப் பஞ்சாப்பை அடிப் படுத்துவதும் அவசியமாயிருந்தது. வாணிகத்தின் பெரும் உள் நோக்கங்கள் மாசிடோனிய வெற்றியாளரின் பேராசைகளுக்குள் மறைந்திருந்தன. போனீசிய வணிகர்கள் அவனுடைய படையுடன் தொடர்ந்து வந்ததும் குறிப்பிடுதற்குரிய ஒரு செய்தியேயாகும்.

அலெக்ஸாந்தர் ஹைடாஸ்பெஸுக்குத் திரும்பிச் சென்ருன். வழியில் அசேசின்ஸ் நதிக்கரையில் ஒரு புதிய நகரத்தை நிறுவி யிருந்த ஹெபேஸ்டியானை அழைத்துக்கொண்டான். ஹைடாஸ் பெஸின்மீது பெரும் யுத்தம் நடந்த இடத்தில் க்ரேடெரஸ் இரண்டு நகரங்களைக் கட்டியதுடனல்லாமல் போக்குவரத்துக்களுக்காக ஒரு பெரிய கடற்படையையும் தயார் செய்து வைத்திருந்தான். அக் கடற்படை அலெக்ஸாந்தரின் படையினரை ஆற்றின் மூலம் சிந்து விற்கும் கடலுக்கும் எடுத்துச்செல்லத் தயாராயிருந்தது. அக் கடற்படை நியார்க்கஸ் (Nearchus) என்பவரின் ஆணையின் கீழ் இருந்தது. அரசரின் சொந்தக் கப்பல் ஒனேசிகிரிட்டஸ் (Onesicritus) என்பவரால் ஒட்டப்பட்டது. அவர் பிறகு அலெக்ஸாந் தரின் படையெடுப்பைப்பற்றி ஒரு புத்தகம் எழுதினர். படையின் மீதிப் பகுதி இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு ஆற்றின் இரு மருங்கிலும் நடந்துவந்தது. அவ்விரண்டு படைப் பிரிவுகளுக்கும் ஹெபேஸ்டியனும் க்ரேடெரஸும் தலைவர்களாயிருந்தனர்.

### முல்தான் முற்றுகை ; அலெக்ஸாந்தர் காயமடைதல்.

அவர்கள் முன்னேறிச் செல்லும்போது 'தோஆப்பு'களின் தென்பகுதிகளைத் தடையின்றிக் கடந்து சென்றனர் ; அடிபணியாத இனத்தவர்களை அடக்கிவிட்டுச் சென்றனர். அவர்கள் சந்திக்க வேண்டியிருந்த ஒரே ஒரு வலிமைவாய்ந்த எதிர்ப்பு, சுதந்திரமும், யுத்த மனப்பான்மையும் பெற்றிருந்த மல்லி (Malli) மலையினத்தவர் களிடமிருந்து எதிர்பார்க்கப்பட்டது. அவர்களுடைய நிலப்பகுதி ராவி நதியின் இரு பக்கங்களிலும் இருந்தது. ஆற்றின் தென் கரையில் வாழ்ந்த பெரும் எண்ணிக்கை கொண்ட இந்தியர்களை வென்று சிதறியோடும்படி செய்த அலெக்ஸாந்தர், அவர்களை, இக்காலத்து முல்தான் பகுதியிலிருந்த அவர்களுடைய முக்கிய நகரத்திற்குத் துரத்திச்சென்ருன். அந்தக் காலத்திற்குப் பிறகு ராவி தன் படுகையை மாற்றிக்கொண்டது ; அலெக்ஸாந்தர்

காலத்தில் அது முல்தானுக்குக் கீழே சீனுப்பில் பாய்ந்துகொண்டிருந்தது. இங்கே அலெக்ஸாந்தர் ஒரு பெரிய துணிகரச் செயலைச் செய்யவேண்டிவனுனன். அந்த நகரம் எளிதாகக் கைப்பற்றப் பட்டது; இந்தியர்கள் கோட்டைக்குள் ஓடிப் பதுங்கிக்கொண்டனர். மண் சுவரை அளப்பதற்காக இரண்டு ஏணிகள் கொண்டுவரப் பட்டன.

ஆனுல் மேலிருந்து மாரிபோல எறிபடைகள் வீழ்ந்துகொண்டிருந்தமையால் அவற்றைக்கீழே வைக்கமுடியாது போயிற்று. தாமதத்தைக்கண்டு பொறுமையிழந்த அலெக்ஸாந்தர் ஓர் ஏணியைப் பற்றிக் கீழேவைத்து கேடயத்தின் பாதுகாப்பில் அதன் மேல் ஏறினுன். இலியான் கோயிலிலிருந்த புனித கேடயத்தை வைத்துக் கொண்டிருந்த போசெஸ்டாஸும் (Peucestas)' லியோன்னுடஸும் அவனைப் பின்தொடர்ந்து ஏணியில் ஏறினர். அப்ரியஸ் (Abreas) மற்ருெரு ஏணிமீது ஏறினுன். அலெக்ஸாந்தர் மதிலின் பார்வைக் கூடத்தை அடைந்ததும், அந்த இடத்தில் அமர்த்தப்பட்டிருந்த இந்திய வீரர்களை எடுத்துச் சுழற்றிக் கீழே வீசினுன். அல்லது அவர்களைக் கொன்ருன். கிரேக்க சிப்பாய்கள் கோட்டையின் முழுக் காவல் படைக்கும் தெரியும்படியான சுவரின் மீது தங்கள் அரசர் நின்றுகொண்டிருப்பதைப் பார்த்ததும், ஏணிகளில் முண்டியடித்துக் கொண்டு ஏறினர். ஏணிகள் பாரந்தாங்காது முரிந்தன. ஏணிகள் முரியுமுன்பு போசெஸ்டாஸ், லியோன்னுடஸ், அப்ரியஸ் ஆகிய மூவர் மட்டுமே மதிற்சுவரை அடைந்தனர். அலெக்ஸாந்தரின் நண்பர்கள் கீழே குதித்துவிடுமாறு, அவரை வேண்டிக்கொண்டு கத்தினர். ஆனுல் அவன் பதிலாகப் பகைவரின் மத்தியில் குதித்து விட்டான்.

அவன் தன் பாதங்களினுல் மீண்டும் மதில் மீது ஏறினுன். சுவரின் மீது முதுகு சாய்ந்திருக்குமாறு ஏறிக்கொண்டே, தன்னைப் 'பேரரசன்' என்று அடையாளமறிந்துகொண்ட எதிரிகள் கூட்டமாக வந்து தாக்கும்போது தனியாக இருந்து தன்னைப் பாதுகாத்துக் கொண்டான். தன்னுடைய வாளினுல் அவன் அவர்களுடைய தலைவரையும், அவன் மேல் தாக்குதல் செய்வதற்காக ஓடிவந்தவரையும் வெட்டி வீழ்த்தினுன்; கற்களை எறிந்து இரண்டு பேரை வீழ்த்தினுன்; மற்றவர்கள் அவனை அணுகுவதற்குத் தைரியமில்லாது எறிபடைகளை எறிந்தனர். இதற்குள் அவனுடைய மூன்று தோழர்களும் மதிலைக் காத்துக்கொண்டிருந்தவர்களை ஒழித்துவிட்டுத் தங்கள் அரசருக்கு உதவுவதற்காகக் கீழே தாவிக்குதித்தனர். அப்ரியஸ் ஒரு அம்புபட்டு வீழ்ந்து இறந்தார். பிறகு அலெக்ஸாந்தரும் மார்பில் ஒரு காயத்தைப் பெற்ருன். சிறிது நேரம் அங்கு நின்று சண்டையிட்டான். ஆனுல் கடைசியில் இரத்த இழப்பினுல்

மூர்ச்சித்துத் தன் கேடயத்தின் மீதே வீழ்ந்தான். போசெஸ்டாஸ் டிராஸ் நகரின் புண்ணிய கேடயத்துடன் அவருக்குப் பாதுகாப்பாக அவருக்கு மேல் நின்ருன். பாதுகாப்பு வரும்வரையிலும் லியோன் ஞடஸ் மற்றப் பக்கத்தினின்று அவனைக் காத்தான். ஏறுவதற்கு ஏணிகளில்லாமையால் மாசிடோனியர்கள் மதிற்சுவரில் ஆப்புக்களை அறைந்தனர். ஒரு சிலர் சுவரின்மீது தங்களால் முடிந்தவரை தொற்றிக்கொண்டு ஏறினர்; சண்டை நடக்கும் இடத்தில் குதித்தனர், இவர்களில் சிலர் கோட்டையின் வாயில்களுள் ஒன்றைத் திறப்பதில் வெற்றியுற்றனர். பிறகு கோட்டை பிடிக்கப்பட்டது. தங்கள் அரசர் இறந்துவிட்டாரென்றே நினைத்துப் பெருஞ்சினவெறி கொண்டிருந்த படை வீரர்கள் அந்த இடத்திலிருந்த எந்த ஆணையும் பெண்ணையும். குழந்தையையும் உயிரோடு விட்டுவைக்க வில்லை. ஆனல் அலெக்ஸாந்தர் கடுமையாகக் காயமுற்றவரா யிருந்தும் குணமடைந்தார். அலெக்ஸாந்தர் இறந்துவிட்டார் என்ற வதந்தி ராவியும் சீனப்பும் சந்திக்கும் இடத்தில் காத்துக்கொண் டிருந்த முக்கிய படையின் பாசறையை எட்டிவிட்டது. அது பயங்கரமான திகிலையும், துக்கத்தையும் கையறு நிலையையும் உண்டாக்கிவிட்டது அலெக்ஸாந்தர் சாகவில்லை என்று வந்த கடிதங்கள் அவர்களுக்கு நம்பிக்கையை ஊட்டவில்லை. அதனல் அலெக்ஸாந்தர் ராவியின் நதிக்கரைக்குக் கொண்டுபோய் அங்கிருந்து பரசறைவரை படகில் தம்மைக்கொண்டு போகும்படி கட்டளையிட் யிட்டான். அவன் பாசறையை நெருங்கும்போது அவனது படுக்கைக் குப் பாதுகாப்பாய் இருந்த, படகின் பின்புறமிருந்த திரை விலக்கப் பட்டது. இன்னும் சந்தேகம் கொண்டிருந்த படை வீரர்கள், படகு கரையின் அருகேவந்து அவன் தன் கையை ஆட்டும் வரையிலும், தாங்கள் பார்ப்பது அவனுடைய பிணமே என்று எண்ணிக்கொண் டிருந்தனர். பிறகு படையினர் மகிழ்ச்சியாரவாரம் செய்து களிப் புற்றனர்.

கரையிலிருந்து அவன் தூக்கிச் செல்லப்பட்டபோது சிறிது நேரம் அவர் எல்லோரும் பார்க்கும்படியாகக் குதிரைமீது வைக்கப்பட்டான்; பிறகு அவர்களுடைய ஐயமெல்லாம் அகலுவதற்காக அவன் சில அடிகள் தூரம் அடியெடுத்துவைத்து நடந்தான்.

### அவசரப்பட்டு அலெக்ஸாந்தர் தம்மை ஆபத்துக்குள்ளாக்கிக் கொள்ளல்

இந்தத் துணிகரச் செயல் அலெக்ஸாந்தருக்குரிய பலவீனத் திற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாயுள்ளது. அது இன்னும் அவனுடைய மற்றப் பல செயல்களாலும் விளக்கப்பட்டுள்ளது. போரின் கிளர்ச்சியில், படைகளின் நடுவில் அவன் தான் ஒரு படைத்தலைவன் என்பதை எளிதில் மறந்து விடுபவனய் இருந்தான்.

இவ்வுலகத்திலேயே மிகவும் அறிவு வாய்ந்த சிறந்த தளபதிகளுள் ஒருவனுய் இருந்தபோதிலும் அவன் போர்க்களத்தில் திட்டமிட்டுப் படையைச் செலுத்துவதைவிட அல்லது யுத்த தந்திர முறைகளைக் கண்டுபிடித்துக் கையாள்வதை மிக அதிகமான இன்பம், கடுமை யான சண்டைக்கிடையே போரிடுவதிலும், குதிரைப் படையின் தலைமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்டு போர் செய்வதிலும் கண்டான். அவனுடைய கண்களும் காதுகளும் 'போரின் பிரகா சத்தினுலும், அழகு, புதுமைச்செழிப்பு இவற்ருலும், ஈட்டிகளின் பேரொளியாலும்' நிறைவது வழக்கம்.

ஆபத்தை விரைந்து மேற்கொள்வதில் அவன் தயங்குவதில்லை. அவன் தான் காயமடையாமல் எந்த ஒரு போரையும் நடத்தவில்லை. கடைசியான ஆபத்தான ஒரு சமயத்தில், அவனுடைய நெருங்கிய நண்பர்கள் அவன் ஒரு தளபதியாகச் செயல்படாமல் ஒரு சாதாரண படைவீரரைப் போலச் செயல்படத் தொடங்கியது கண்டு அவனை இகழ முற்பட்டபோது, அவன் மனத்தில் மிகக் கடுமையாகப் புண்பட்டான். ஏனெனில் அவனுடைய மனச்சான்றே அவனைக் குத்தியது. அவன் தன்னுடைய பாதுகாப்பை ஆபத்துக் குள்ளாக்கிக் கொண்டது முழுப் படைக்கே செய்த ஒரு குற்றமாகும்.

கி.மு. 325 (பஞ்சாப்) அலெக்ஸாண்டிரியா; சோக்டியன் அலெக்ஸாண்டிரியா நிறுவப்படல்

மல்லி இனத்தினர் முழுவதும் அடிபணிந்தனர்; அவர்களைப் பின்பற்றி அவர்களைப் போலவே போர் செய்யும் பண்புகளில் புகழ் பெற்றிருந்த அவர்களுடைய தெற்கு அண்டை நாட்டினரான ஆக்ஸிட்ரேசஸ்களும் அடிபணிந்தனர், பஞ்சாப்பின் இந்தக் கீழ்ப் பகுதிகள் போரசின் இராச்சியத்துடன் சேர்க்கப் படவில்லை. ஆனுல் பிலிப்பின் பொறுப்பில் விடப்பட்டிருந்த மாகாணத்திற்கு நேரடியாக கீழ்ப்பட்ட நிலப்பகுதிகளாகச் செய்யப்பட்டன. அலெக்ஸாந்தர் புண்கள் ஆறிக் குணமடைந்த பிறகு, அவனுடைய கடற்படை ஹைபாசிஸ் சந்தியைக்கடந்து அப்பால் சென்றது. இந்திய மலையினத் தார் வெற்றியாளரிடம் இந்தியாவுக்கேயுரிய பொருள்களான நவரத் தினங்கள், அழகான திரைச் சீலைகள் பழக்கப்படுத்தப்பட்ட சிங்கங்கள், புலிகள் இவற்றைக் காணிக்கையாகத் தந்தனர். நான்கு கிளை நதிகள் ஒன்ருய்ச் சேர்ந்து சிந்துவின் பெரும் வெள்ளத்துடன் சேருமிடத்தில், ஒரு புதிய அலெக்ஸாண்டிரியாவிற்குக் கால்கோள் செய்யப்பட்டது. அது பஞ்சாப்பிற்கும், கீழ்ப்பாகத்துச் சிந்து எல்லைப் பகுதிக்கும் ஒரு வாணிகக்களமாயும், பிலிப்பின் மாகாணத்துத் தென் எல்லையைக் காக்கும் நகரமாயும் விளங்க வேண்டியிருந்தது- தெற்குப் பக்கமாக முன்னேறிச் சென்றதில்

அடுத்த கட்டம் ஆற்றின் மேலேயே இருந்த, சோக்டித் தலைநகர மாகும். அலெக்ஸாந்தர் அந்நகரை ஒரு கிரேக்கக் குடியிருப்பாக மாற்றிப் புதுப்பித்து அமைத்தான். படகுத் துறைகளைக் கட்டினன். அது சோக்டியன் அலெக்ஸாண்டிரியா என்று அழைக்கப்பட்டது. அது கடற்கரை வரை பின்பு விரிந்த தென் மாகாணத்தின் இருப்பிட மாக விளங்கவிருந்தது. இந்த மாகாணம் ஏஜினேரின் (Agenor) மகனை பெய்த்தான் (Peithon) என்பவருடைய பாதுகாப்பில் விடப்பட்டது.

பாடலம் (ஹைதராபாத்து); அலெக்ஸாந்தர் இந்தியக் கடலில் செல்லுதல்.

சிந்துவின் வளம் நிறைந்த, ஜனநெருக்கம் மிக்க நாட்டின் சிறு பிரதேசங்கள் வடக்கே பிராமணர்களின் பெரும் அரசியல் சக்தியின் ஆட்சிக்குக் கீழிருந்த நாடுகளுடன் வேறுபிரித்தறியப் பட்டன; வெளிநாட்டார்கள் நுழைவை மிகக் கடுமையாக எதிர்த்த இப்பிரா மணச் சாதியின் செல்வாக்கினல் அரசர்கள் ஒன்று அலெக்ஸாந்த ருடன் போர் செய்யத் தயாராய் இருந்தனர் அல்லது அவனுக்கு அடிபணிந்தால் விரைவில் எதிர்த்துக் கிளர்ச்சியைத் தொடங்கினர். இந்தப் பகுதிகளை அடக்குவதில் வசந்த காலம் கழிந்தது. சிந்து முகத் துவாரத்தின் உச்சியிலிருந்த பாடலாவை அரசர் அடையும்போது, அப்போது நடுக்கோடைக் காலமாக இருந்தது. அரக்கோசியாவில். அரசாங்கத்துக்கு எதிராகக் கிளர்ச்சி ஒன்று எழுந்தது என்ற செய்தியைக் கேள்வியுற்று, அலெக்ஸாந்தர் தன் படையின் கணிச மான ஒரு பகுதியுடன் போலன் கணவாய் வழியாகத் தென் ஆப்கானிஸ்தானத்துக்குச் சென்று, அக் கிளர்ச்சியை அடக்குமாறு கிரேடெரஸை அனுப்பினன். அலெக்ஸாந்தர் தானே பலுச்சிஸ்தானத் தின்மூலம் படையுடன் வரப்போவதாகக்கூறி க்ரேடெரஸ் தன்னைப் பெர்சியன்குடா வாயிலுக்கருகில் நீர்மான் என்ற இடத்தில் வந்து சந்திக்கவேண்டும் என்று ஆணையிட்டான். படையின் மற்ரெரு பிரிவு கடல் வழியாக டைக்ரிஸின் முகத்துவாரத்துக்குச் செல்ல வேண்டும் என்று ஆணையிடப்பட்டது. மிகப் பிரசித்திப் பெற்ற அவனுடைய அலெக்ஸாண்டிரியா எகிப்துக்கு எப்படியோ அப்படியே பாடலாவும் அவனுடைய இந்தியப் பேரரசுக்கு இருக்கவேண்டும் என்று அரசன் கருதினன். கோட்டைக்கு அரண்கள் அமைக்கும் பொறுப்பையும், ஒரு பெரிய துறைமுகத்தைக் கட்டும் பொறுப்பையும் ஹெபாஸ்டியனிடம் விட்டுச் சென்ருன். பிறகு அவன் தென் கடலைப் பார்ப்பதற்காகத் தானே படகில் சென்ருன். அப்பொழுது தென்மேற்கிலிருந்து பருவக்காற்று வீசும் காலமாயிருந்தது. அலைகள் இல்லாத மத்திய நாட்டுக் கடலைக் கண்டு பழகியிருந்த மாசிடோனியர்கள் முதலில் கடலில் எழுந்து அடங்கிய உயர்ந்த

அலைகளைக் கண்டு முதலில் வெகுவாகத் திகைப்புற்றனர். அந்தச் சமயத்தில் ஆற்றின் முக்கியமான கிளைப்பகுதியில் மிகப் பெரிய அலைகள் எழுந்து கொண்டிருந்தன. பல கப்பல்கள் நீரில் மூழ்கடிக்கப்பட்டன. ஆனால் மாலுமிகள் விரைவில் பருவத்தையும் அலைகளையும் நன்கு புரிந்து வைத்துக்கொண்டு விட்டனர். அதனால் அலெக்ஸாந்தர் திறந்த கடலில் வெற்றிகரமாகச் செல்ல முடிந்தது. அவன் போசிடானுக்குப் பலி கொடுத்தான். ஒரு தங்கக் கிண்ணத்திலிருந்து குடிபானத்தைக் கீழே கொட்டி நீரேய்ட்ஸுக்கும் (Nereids) டையோஸ்கூரிக்கும் அர்க்கியங்களைக் கொடுத்தான். அவனுடைய முன்னோரான அக்கில்லஸின் அன்னையான தீட்டிஸுக்கும் (Thetis) அர்க்கியம் செய்தான். பிறகு நீரிலேயே கிண்ணத்தை வீசி எறிந்தான். இந்தச் சடங்கு மேற்கு நாட்டுக்கும் தூரக்கிழக்கு நாட்டுக்கு மிடையே வாணிகத்திற்காக ஒரு கடல் வழியைத் திறந்துவிட்டது. இந்தக் கடல் வழியைக் கண்டுபிடிக்கும் பொறுப்பு நியார்க்கஸ் (Nearchus) என்பவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் அலெக்ஸாந்தரின் சொந்த நெருங்கிய நண்பராயும், படைகளின் நம்பிக்கையைப் பெற்றவராயும் இருந்தார். அலெக்ஸாந்தர் தன்னுடைய தரைச் செலவை இலையுதிர்காலத்தின் தொடக்கத்திலேயே மேற்கொண்டான். ஆனால் நியார்க்கஸும் அவருடைய நீர்ப்படையும் கிழக்குப் பருவக்காற்றுகள் தொடங்கி அவர்களுக்கு உதவியாயிருக்கும் வரை, அதாவது அக்டோபர் வரை, காத்திருக்கவேண்டியிருந்தது.

## 3. அலெக்ஸாந்தர் பாபிலோனுக்குத் திரும்புதல்

அலெக்ஸாந்தர் இப்போது மெக்ரான் என்று அழைக்கப்படுகிற ஜெட்ரோசியப் பாலைவனத்தின் மூலம் பிரயாணம் செய்ததைப் போன்ற பயனற்ற, உயிருக்கு ஆபத்து நிறைந்த வேறு எந்தப் புது முயற்சியையும் செய்ததில்லை. அந்நாட்டின் இனிமையில்லாப் பண்பைப் பற்றி அவன் பொதுவாக ஏதேனும் செய்திகள் கேள்விப்பட்டிருக்கக் கூடும், ஆனால் அவனை எதிர்நோக்கியிருந்த துன்பங்களையும், பயங்கரங்களையும் பற்றி அவன் என்றும் எதிர்பார்த்திருக்க மாட்டான். இந்த மார்க்கத்தை அவன் தேர்ந்தெடுத்ததன் நோக்கம் கடற் படையில் பாதுகாப்புக்காக வேண்டிய பொருள்களைப் பெற்றுத் தருதலும், கரையின் வழியே சில இடங்களில் கிணறுகள் வெட்டி உணவைச் சேகரித்து வைத்தலும் ஆகும். மேலும் காட்டுப் பிரதேசத்தின் கிழக்கு எல்லையில் மலைகளின் மீது வாழ்ந்து வந்த பலம் மிக்க, போர் மனப்பான்மையுடைய ஓரீட்டே (Oritae) என்ற மக்களை அடிப்படுத்தும் நோக்கமும் அவனுக்கு இருந்தது. ஆனால் ஓரீட்டேக்களை அடிப்படுத்தும் நோக்கம் ஒன்று மட்டும் இருந்திருந்தால் அவன் பாடலாவிலிருந்து படையெடுத்துச்சென்று அந்

நோக்கத்தை நிறைவேற்றிக் கொண்டிருந்திருக்க முடியும். மெக்ரான் வழியாகத் தரையில் சென்றதும், நியார்க்கஸின் கடற் பிரயாணமும் ஒரே துணிகரச் செயலின் தம்முள் தொடர்புகொண்ட இரண்டு பகுதிகளே யாகும். அந்தக் காலத்துக் கடற் பிரயாணிகள் அவ்வளவு கோழைகளாயிருந்தனர். பாலை நிலம் வழியாகச் செல்லும் தரைப் பயணத்தைக் காட்டிலும், முன்பின் அறியாத இடங்களுக்குக் கடலில் செல்வது மிகக் கடுமையானதாகக் கருதப்பட்டது.

மெக்ரான் வழியாக அலெக்ஸாந்தர் செல்லுதல் (ஆகஸ்ட், செப்டம்பர், அக்டோபர்) கி.மு. 325.

சுமார் முப்பதாயிரம் ஆட்களுடன் அலெக்ஸாந்தர் சிந்து முகத் துவாரத்திற்குப் பாதுகாப்பாயிருந்த மலைச்சுவரைக் கடந்து, ஆர்பிஸ் நதியையும் கடந்து ஓரிட்டேக்களை அடிப்படுத்தினான். அவர்களுடைய முக்கிய கிராமமான ரம்பாசியாவை, ஓரிட்டே அலெக்ஸாண்டிரியா என்ற புதிய குடியேற்றத்தை நிறுவுவதற்காகத் தேர்ந்தெடுத்தான். அவனுடைய திட்டத்தினால் மேற்கொள்ளப்படும் கடல் மார்க்கத்தில் சில நிலையங்களைப் பெற்றிருப்பது அவசியமாயிருந்தது. பிறகு அவன் கெட்ரோசியப் பாலைநிலத்தில் இறங்கினான். அவருக்கு அங்கே எந்த எதிர்ப்பும் ஏற்படவில்லை. ஏனெனில் அவனுடைய நுழைவை வெறுக்கும் மக்கள் யாரும் அங்கே இருக்கவில்லை. மலைகளில் ஒரு சில பரிதாபப்படத்தக்க கிராமங்களும், கடற்கரையில் இன்னும் மிகுதியாக இரங்கத்தக்க மீன்பிடிப்போர் குடில்களுமே காணப்பட்டன. நீரின்றி, வறண்ட பாலைவனத்துப் பாறைகள், மணல் இவற்றின் வழியாகத் துன்பத்துடன் படை சென்றது; குதிரைக்கு உணவு தேடுவோர் பெற்ற அற்பமான சில பொருள்களும் கடலில் வந்துகொண்டிருக்கும் கடற்படையினருக்காகச் சேர்த்துவைக்க வேண்டியிருந்தது. ஆழமாகக் கால்பதியும் மணல்களில் காலடி எடுத்துவைத்துச் செல்லுதல் அநேகமாக முடியாததாகவே இருந்தது; இரக்கமற்ற வெப்பம் இரவில் படை செல்வதை இன்றியமையாததாக்கியது. பாலைவனச் சோலையை அறியும் அவசியம் இருந்தமையின் அந்தப் படை அடிக்கடி அளவுக்குமீறிய தூரம் வரை செல்லவேண்டியிருந்தது. அலெக்ஸாந்தரும் கால் நடையாகத் தள்ளாடி நடந்துவந்து வழியிலிருந்த கஷ்டங்கள் எல்லாவற்றிலும் பங்கு கொண்டான் என்று சொல்லப்படுகிறது. போரிலீடுபடாதவர்களும், பாசறைப் பணியாட்களும்தான் உண்மையில் மிகுந்த துன்பத்துக்கு உள்ளாயினர். கடைசியில் பாலை நிலம் கடக்கப்பட்டுவிட்டது. கடற்கரைப் பகுதிகளை விட்டுவிட்டு, படையில் மீதியிருந்தவர்கள் கெட்ரோஸிய மாகாணத்தின் தலைநகரான புரா (Pura) விற்கு வடக்கே சென்றனர். இரண்டு மாதங்களுக்கு முன்பு இந்தியாவிலிருந்து புறப்பட்ட படையில் மிகச்சிறு

பகுதியினரே சோர்வுற்று உடல் நைந்து உயிரோடிருந்தனர்; அலெக்ஸாந்தரின் எல்லாப் போர்களிலும் ஏற்பட்ட கூட்டுச் சேதத்தைவிடப் பயங்கரயான கெட்ரோஸியப் பாலைவனத்தின் வழியாக வந்த பயணத்தால் ஏற்பட்ட சேதங்கள் மிகுதி. ஆனால் பாலைவனச் செலவின் பேராபத்துக்களை அநேகமாக மிகைப்படுத்திக் கூறிய கூற்ருகவும் இருக்கலாம்.

**நியார்க்கஸின் கடற் பயணம், கி.மு. 325, அக்டோபர்—டிசம்பர்.**

புராவில் தங்கிக் களைப்பாறிய பிறகு அரசன் கிர்மானுக்குப் புறப் பட்டுச்சென்ருன்; அங்கே அரக்கோசியாவில் கலகத்தையடக்கிவிட்டு வந்த க்ரேடெரஸ் அவனிடம்வந்து சேர்ந்தான். அதே சமயத்தில் கடற்படை கிர்மான் கரையை அடைந்துவிட்டது என்ற செய்தி வந்தது. விரைவில் நியார்க்கஸ் பாசறைக்குவந்து அலெக்ஸாந் தரின் மனக் கவலையைப் போக்கினர். அவரும் துன்பங்களும் ஆபத் துக்களும் மலிந்த கதையைச் சொன்னர். அலெக்ஸாந்தர் புறப் பட்டுப் போனவுடனே. இந்தியர்களின் பகைமைப் பண்புகள் துரத் தியதனல் கிழக்குப் பருவக்காற்றுத் தொடங்குவதற்கு ஒரு மாதம் முன்னமே புறப்படநேர்ந்தது என்றும், முகத்துவாரத்தின் மேற்கே சிறிது தூரத்தில் ஒரு துறையில் எதிர்க்காற்றுகளினல் இருபத்துநான்கு நாட்கள் தங்கிவிட நேர்ந்தது என்றும் கூறினர். பிறகு கோக்கலா (Cocala) வுக்கருகில் ஒரு புயல் வந்து அவருடைய கப்பல்களுள் மூன்றை நாசமாக்கிவிட்டது. மீதியிருந்த கடற் பயணத்தில் இனிய தண்ணீரும், உணவுப் பொருள்களும் கிடைக் காமல் மாலுமிகள் மிகவும் தவித்துப்போயினர். எனினும் அவர்கள் கடைசியில் வந்துசேர்ந்துவிட்டதனல் அரசன் பெருங்களிப்புக் கொண்டான். பெர்சியன் குடாவையும், பாஸ்டிக்ரிஸ் என்ற ஆற்றையுங் கடந்து சூசாவிற்குச் சென்று கடற்பிரயாணத்தை முடிக்கும்படி நியார்க்கஸ் அனுப்பப்பட்டார். ஹெபேஸ்டியன் இங்கே கரை வழியாகச் செல்லுமாறு அனுப்பப்பட்டார்; அலெக்ஸாந் தரும், பெர்சிபோலிஸ், பசர்காடே (Pasargadae) வழியாக மலைகளின் மீது படையுடன் சென்ருன்.

**அலெக்ஸாந்தரின் கவர்னர்கள் ஒழுங்குதவறி நடத்தல்; அலெக் ஸாந்தர் அவர்களை நடத்திய விதம்.**

தாயகம் திரும்பிச்செல்ல அலெக்ஸாந்தர் விரைந்தார். பாரசீகம், மாசிடோனியா முதலிய எந்த நாட்டிலும் தன்னுடைய மாகாணத் தைப் பலாத்காரத்திலும், பேராசைக் கொள்ளையாலும் துன்புறுத் தாத கவர்னர்களே இல்லை. சிலர் அரசர் தூரக் கிழக்கிலிருந்து ஒரு போதும் திரும்பிவர மாட்டார் என்ற நம்பிக்கையில் சுதந்திரமான

சிறு இராச்சியங்களை நிறுவ முற்பட்டுத் திட்டம் உருவாக்கிக்கொண் டிருந்தனர். கிர்மான், பெர்சிஸ், சூசா ஆகிய இடங்களிலும், துரோகம், கொடுங்கோன்மை ஆகிய இக் குற்றங்களைப் புரிந்த கவர்னர்களையும் அதிகாரிகளையும் தயவுதாட்சணியமின்றித் தண்டித்துத் தன் அதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டுவதுதான் அரசரின் மிகவும் உடனடியாகச் செய்யவேண்டிய வேலையா யிருந்தது. பல கவர்னர்கள் பதவியிலிருந்து விலக்கப்பட்டனர்; அல்லது கொல்லப்பட்டனர்; மீடியாவின் அட்ரோபடெஸ் (Atropates) தன் பதவியில் விசுவாசத்துடனிருந்த ஒருசிலர்களுள் ஒருவராவார். ஆனால் மீடியாவின் கோட்டைப் படை அவ்வளவு நன்றாக நடந்துகொள்ளவில்லை. அந்த மாகாணத்தின் கோயில் களையும், கல்லறைகளையும் கொள்ளையடித்ததற்காக இரண்டு அதிகாரி களையும், அறுநூறு படைவீரர்களையும் தூக்கிலிட்டதைக் காட்டிலும் அந்தச் சமயத்தில் வேறு எதுவும் அலெக்ஸாந்தரின் அழிவுக்கு மிகச்சிறந்த காரணமாய் இருக்கவில்லை. மற்ற எல்லாத் தீமைச் செயல்களைக் காட்டிலும் பசர்காடேவிலிருந்த சைரஸ் கல்லறையைத் திறந்து கொள்ளையிட்டதுதான் அரசனுக்குப் பெரிதும் கலக்கத்தைச் கொடுத்தது. அது பாவத்தைவிட இன்னும் கொடியதாய் இருந்தது; அரசர்களின் அரசாண்மைக்கு எதிராகச்செய்த கொடுஞ் செயலாக அது மதிக்கப்பட்டது. கல்லறையின் காவலர்களாயிருந்த மேஜியன்களை அலெக்ஸாந்தர் சித்திரவதை செய்தார்; ஆனால் அக்கொடுஞ் செயலைச் செய்தவர் யார் என்பது கண்டுபிடிக்க முடிய வில்லை.

### ஹர்பாலஸின் ஓட்டம்

அலெக்ஸாந்தரின் வருகையை அறிந்து குற்றமுள்ள நெஞ்சின ரான ஓர் அமைச்சர் ஓட்டம் பிடித்தார். அவர்தான் கஜானாத் தலைவரான ஹர்பாலஸ் (Harpalus). முன்பு ஒரு முறை அவர் தம் பொறுப்பில் பொய்ம்மை வாய்ந்தவராகக் காணப்பட்டார். ஆனால் மன்னிக்கப்பட்டு, பாரசீகத்தின் அரசச் செல்வங்களையெல்லாம் பாது காக்கும் பொறுப்பு மீண்டும் அவரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் தன் தலைவரின் பொருளைப் பாபிலோனில் மிக ஆடம்பரமாகத் தாராளமாகச் செலவிட்டுக்கொண்டிருந்தார். இந்தக் கொடுஞ் செயல்கள் பற்றிய செய்தியெல்லாம் அலெக்ஸாந்தருக்கு இந்தியாவி லிருக்கும்போது எட்டியதால், அவர் மேற்கே செல்வதுதான் அறிவுடைமையானது என்று கருதினர். பெருஞ் செல்வத்தை எடுத்துக்கொண்டு அவர் சிலீசியாவுக்குச் சென்றார். 6000 பேரைப் பணங்கொடுத்து மெய்காவலர்களாக அமர்த்திக்கொண்டு அவர் அத்தீனிய வேசியான கிளிசெராவுடன் டார்சஸில் அரசபோகத்தில்

வாழ்ந்தார். அலெக்ஸாந்தர் திரும்பிவந்தபோது டார்ஸஸ் பாது காப்பாக இருக்கமுடியவில்லை. அவர் கிரீஸுக்கு ஓட்டம் பிடித்தார் ; அவரை நாம் விரைவில் சந்திப்போம்.

**அலெக்ஸாந்தரின் அரசியல் கொள்கை; கிரேக்கர்கள், ஆசிய நாட்டினர் இவர்களை ஒன்றாயிணைத்தல்; இதைச் செய்வதற் கேற்ற வழிகள். (1) இடம் மாற்றிக் குடியேற்றல், (2) கலப் புத் திருமணம்.**

தம்முடைய மாசிடோனிய, பாரசீகக் கவர்னர்களை அவர்களுடைய ஒழுங்கு தவறிய ஆட்சிக்காகக் கடுமையாகக் தண்டித்த பிறகு, அலெக்ஸாந்தர் முன்பு கருதியிருந்ததுபோல கிழக்கையும். மேற்கை யும் பிரிக்கும் தடைகளை உடைத்தெறியச் சில திட்டங்களை மேற்கொள்ளத் தொடங்கினர். மத்தியதரைக் கடல் மக்களின் வாணிக அறிவை அவர் கீழ் நாட்டு மக்களுக்குத் தடையின்றி வெளிப் படுத்தினர். ஆனல் அவருடைய நோக்கம் இன்னும் அதிகமாகச் செய்யவேண்டும் என்பதே; ஆசியாவையும் ஐரோப்பாவையும் ஒன்றுபட்ட நாடாக ஒன்ருய் இணைத்துவிட வேண்டுமென்று எண்ணினர். இந்த நோக்கத்தை ஈடேற்றுவதற்காக அவர் பற்பல முறைகளைப் பின்பற்றினர். கிரேக்கர்களையும் மாசிடோனியர் களையும் ஆசியாவிலும், ஆசிய மக்களை ஐரோப்பாவிலும் நிலையான குடிமக்களாகக் குடியேற்றத் திட்டமிட்டார். தூரக் கிழக்கு நாடு களில் எண்ணிலாத கலவை நகரங்களை நிர்மாணித்ததன் மூலம் இத் திட்டம் ஓரளவு வெற்றி பெற்றதெனக் கொள்ளலாம். இரண் டாவது வழி பாரசீகர்களுக்கும், மாசிடோனியர்களுக்குமிடையே கலப்புத் திருமணங்கள் நடக்கச்செய்வது. இக் கொள்கை மிகச் சிறந்த முறையில் சூசாவில் தொடங்கப்பட்டது. அரசர் தானே டாரியஸின் மகளான ஸ்ததீராவை மனைவியாக ஏற்ருர் ; அவருடைய நண்பர் ஹெபேஸ்டியன் அவளுடைய சகோதரியை மனைவியாகக் கைப்பற்றினர்; மிகப் பல மாசிடோனிய அதிகாரிகள் பாரசீகப் பிரபுக்களின் புதல்விகளை மணஞ்செய்து கொண்டனர். பாரசீக முறைப்படி திருமணச் சடங்குகள் அன்றே கொண்டாடப் பட்டன ; அலெக்ஸாந்தர் 9000 விருந்தினர்களுக்கு விருந்தளித் தான் என்று சொல்லப்படுகிறது. மாசிடோனியப் பொது மக்களில் 10,000 பேர் தங்களுடைய அதிகாரிகளின் உதாரணத்தைப் பின் பற்றி ஆகிய மனைவிமார்களை ஏற்றுக்கொண்டனர் என்று சொல்லப்படுகிறது. அவர்கள் எல்லோருக்கும் அலெக்ஸாந்தர் தாராளமாகப் பரிசுகளும் கொடைகளும் வழங்கினன். இத்திரு மணக் கலப்புக்களால் பிறக்கும் குழந்தைகள் அவ்வினங்களை ஒன்றுபடுத்தும் வலிமைவாய்ந்த ஒரு கருவியாய் இருக்கும் என்று எதிர்பார்த்தான். ஏற்கெனவே சோக்டியான இளவரசியை மணம்

புரிந்து கொண்ட அலெக்ஸாந்தர் பெர்சியாவின் வழக்கமான பலதார மண முறையை ஏற்றுக் கொண்டான்; அவன் ஒச்சஸின் (Ochus மகளான பரிசதீஸ் (Parysatis) என்ற மற்றொரு அரசமகளையும் மணந்து கொண்டான். இத்திருமணங்கள் அவருடைய அரசியல் கொள்கையின் நேரடி விளைவுகளே; உதாரணத்திற்காக அவை செய்யப்பட்டன; ஏனெனில் அலெக்ஸாந்தர் ஒரு போதும் பெண்களின் செல்வாக்குக்கு மசிந்ததில்லை. சூசாவில் நடந்த திருமணங்கள் பெரும் அளவில் நடக்கும் அரசியல் தொடர்பான திருமணங்களுக்கு ஒரு பாடமாக இருந்தன.

## 3. படைத்துறை ஊழியத்தில் சமத்துவம்

ஆனால் இந்த இரண்டு இனங்களையும் ஒன்றுயிணைப்பதற்கு மிகச் சிறந்த வழி இரு இனத்தைச் சேர்ந்தவர்களையும் முழுச்சமத்துவ முறையில் படைத்துறை ஊழியத்தில் அமர்த்திக் கொள்வதா யிருந்தது. இந்த நோக்கத்தைக் கருத்துட்கொண்டே அலெக்ஸாந்தர் டாரியஸ் இறந்து சிறிது காலத்திற்குள் எல்லாக் கிழக்கு மாகாணங்களிலும் உள்ள இளைஞர்களுக்கு மாசிடோனியப் போர் முறைப் பயிற்சியும் ஒழுங்குக் கட்டுப்பாட்டுப் பயிற்சியும் கொடுக்கப் படவேண்டும் என்று ஏற்பாடுகளைச் செய்திருந்தான். உண்மையில் கிரேக்கப் போர்ப் பயிற்சிப் பள்ளிகள் ஒவ்வொரு மாகாணத்திலும் நிறுவப்பட்டன. ஐந்தாண்டுகளின் முடிவில் கிரேக்கப் பயிற்சி யளிக்கப் பெற்ற 30,000 நாகரிகமற்ற கீழைநாட்டார் மாபெரும் அரசரின் பணிக்குத் தயாராகிவிட்டிருந்தனர். அவருடைய அழைப்பின்பேரில் அப்படை சூசாவில் கூடியது. அப்படையின் வருகை மாசிடோனியர்களின் மனத்தில் இயல்பான நியாயமற்ற அதிருப்தி யுணர்ச்சியைத் தோற்றுவித்தது. அப்படையின் பணிகளினின்றும் விலகி அலெக்ஸாந்தர் சுதந்திரமாயிருப்பார் என்று அவர்கள் ஆருடம் கூறினர். பாரசீகர்கள், பாக்டிரியர்கள், ஆரியர்கள் போன்ற மற்றக் கீழ்நாட்டினரை மாசிடோனியக் காலாட்படைப் பிரிவுகளில் சேர்த்துக் கொண்டதும் தன்னுடைய படையின் இயல்பை மாற்றும் அவருடைய திட்டங்களை அறிந்தனர். அவர் ஒன்பது சிறந்த பாரசீகர்களை அரசப் படையிலேயே சேர்த்துக் கொண்டிருந்தார். படைவீரர்களின் கடன்களைச்—சுமார் இருபது லட்சம் பவுன்களைத்—தானே கொடுத்த அரசரின் தாராள மனப் பான்மையினாலும் பொதுவான அதிருப்தியைக் குறைக்க முடியவில்லை.

### ஒபிஸில் (Opis) மாசிடோனியக்கலகம்

அலெக்ஸாந்தர் வசந்த காலத்தில் சூசாவை விட்டு எக்படனு விற்குச் சென்றான். பசிடிக்ரிஸ் நதியின் வழியாகச் சென்று

பாரசீகக் குடாவை அடைந்தான். கடற்படையைப் பார்வையிட்டான்; பின்பு டைக்ரிஸுக்குக் கப்பலில் சென்ருன். கப்பல் போக்குவரத்தைத் தடுப்பதற்காகப் பாரசீகர்களால் கட்டப்பட்டிருந்த அணைகளை அகற்றினன். வழியில் படை அவனிடம் வந்து சேர்ந்தது. பின் ஒபிஸில் தங்கினன். அங்கே அவன் மாசிடோனியர்களை ஒன்ருய் ஒரு கூட்டத்திற்கு அழைத்தான். முதுமையாலும், போர்க் காலங்களிலும் போருக்குத் தகுதியற்றவர்களான சுமார் 10,000 பேர்களை முறைப்படி வேலையிலிருந்து நீக்கி, அவர்களுக்கு வாழ்க்கையில் எல்லாச் சௌகரியங்களும் கொடுப்பதாக வாக்குறுதி தந்தான். அவனுடைய சொற்கள் பெருமகிழ்ச்சியுடன் அவர்களால் வரவேற்கப்படும் என்று அவன் ஆசையுடன் எதிர்பார்த்தான். ஆனல் அவன் ஏமாற்றமடைந்தான். புகைந்துகொண்டிருந்த அதிருப்தி இப்போது குரல் மூலம் வெளிப்படத் தொடங்கியது. 'எங்கள் எல்லோரையும் நீக்கிவிடு' என்ற குரல் எழுந்தது. சிலர் இகழ்ச்சியாக 'போய் உங்கள் அப்பா அம்மானுடன் (Ammon) சேர்ந்து வெற்றி பெற்றுவா' என்று கத்தினர். அரசன் நிச்சயமாய் வியப்பும் திகைப்பும் அடைந்திருப்பான். ஹைபாஸிஸ் நதிக்கரையில் போரினலும் உழைப்பினலும் சோர்வுற்றுவிட்டதாகவும், தாய்நாடு திரும்பவேண்டும் என்ற எண்ணம் மிகுதியாகப் பெற்றுள்ளதாகவும் கூறிக்கொண்டே படைவீரர்கள், இப்போது அவர்களில் வயது முதிர்ந்தவர்களை மதிப்புடன் வேலையிலிருந்து நீக்குவதைக் கண்டு பெரு வெறுப்புற்றனர். அலெக்ஸாந்தர் மேடையிலிருந்து ஆரவாரித்துக் கொண்டிருந்த கூட்டத்தினருக்கு மத்தியில் தாவிக் குதித்தான்; கலகக்காரர்களின் முன்னணியிலிருந்த பதின்மூன்று பேரைச் சுட்டிக்காட்டித் தன் சிப்பாய்களை நோக்கி, அவர்களைப் பிடித்துக் கொல்லுமாறு கட்டளையிட்டான். மற்றவர்கள் அஞ்சி அடங்கினர். ஆழ்ந்த அமைதியினிடையே அரசன் மேடைமீது மீண்டும் ஏறினன். பின்பு கடுமையான ஒரு சொற்பொழிவுடன் படை முழுவதையும் நீக்கிவிட்டான். பிறகு அவன் அரண்மனைக்குத் திரும்பிச் சென்ருன். மூன்ரும் நாள் அவன் பாரசீக மீடியப் பிரபுக்களை அழைத்து, இதுவரை மாசிடோனியர்களால் வகிக்கப் பட்ட கௌரவமும் நம்பிக்கையும் பொருந்திய பதவிகளில் அவர்களை அமர்த்தினன். மாசிடோனியப் படையின் பெயர்கள் புதிய, நாகரிகமற்ற படைக்கு மாற்றப்பட்டன. இதைக் கேள்விப் பட்டனர் மாசிடோனியர்கள். அவர்கள் தங்கியிருப்பதா, போய் விடுவதா என்று ஒரு தீர்மானத்துக்கும் வரமுடியாமல் இரங்கத்தக்க முறையில் தங்கள் பகுதிகளிலேயே இன்னும் தங்கியிருந்தனர். அரண்மனை வாயில்களுக்கு முன்பு தோன்றினர். பணிவோடு தங்கள் படைக் கருவிகளைக் கீழே வைத்தனர்; அரசனைக் காண்பதற்கு அனுமதி வேண்டினர். அலெக்ஸாந்தர் வெளியே வந்தான். கண்ணீர்

மல்க அவனுக்கும் படையினருக்குமிடையே இணக்கம் ஏற்பட்டது; பலிகளும் விருந்துகளும் நடத்தப்பட்டன. இந்த நாடகம் போன்ற நிகழ்ச்சி, ஹினபாசிஸியிலிருந்த துருப்புக்களின் செயலைப் போல வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்ததாக இல்லை. அது அரசரின் தாராளமான கொள்கைக்கு எதிராக, கடைசியாகப் பயனற்ற கிளர்ச்சி யொன்றை மாசிடோனியர்கள் செய்த உணர்ச்சிப் பான்மையை மட்டும் காட்டுவதாக இருந்தது. புதிய அமைப்புக்கு இடங்கொடுத் தாக வேண்டுமென்று உணர்ந்து, எதிர்த்த அப் படையினர் இணங்கி விட்டனர்.

### பழம்பெரும் வீரர்கள் மாசிடோனியாவிற்குத் திரும்புதல்

கிரேடெரஸ், பாலி பெர்க்கான் (Polyperchon) ஆகியோரின் தலைமையில் முதுபெரும் வீரர்கள் தங்கள் தாயகம் நோக்கித் திரும்பினர். ஆசியப் பெண்களுக்குப் பிறந்த குழந்தைகளை அங்கேயே விட்டுவிட்டுச் சென்றனர். அரசர் அக் குழந்தைகளை மாசிடோனிய முறையில் வளர்க்கப்போவதாக உறுதியளித்தார். கிரேடெரஸ் மாசிடோனியாவின் ராஜப் பிரதிநிதியாக ஆண்டிபேடர் (Antipater) என்பவருக்குப் பதிலாக அமர்த்தப்படவிருந்தார். ஆன்டிபேடர் புதிய துருப்புக்களுடன் ஆசியாவிற்குச் செல்ல வேண்டியவராயிருந்தார். ஆன்டிபேடருக்கும், அரச-அன்னைக்கும் இடையே மன வேறுபாடுகள் தோன்றியிருந்தமையின், இந்த ஏற்பாடு விரும்பத்தக்கதாயிருந்தது. அலெக்ஸாந்தருக்கு அவ் விருவரும் ஒருவரை ஒருவர் குறை கூறிக்கொண்டே கடிதங்கள் எழுதிக் கொண்டிருந்தனர்.

### எக்படனாவில் அலெக்ஸாந்தர்; ஹெபேஸ்டியனின் மரணம்; அலெக்ஸாந்தரின் துயரம்.

கோடைகாலமும், குளிர்காலத்தின் தொடக்கமும் மீடியாவின் தலைநகரில் கழிக்கப்பட்டன. அங்கே அலெக்ஸாந்தருக்கு மாபெருந் துயரமளிக்கக் கூடிய நிகழ்ச்சி ஒன்று நேர்ந்தது. மூவாயிரம் இசைவாணர்கள் அல்லது 'டையோனிசியாக் கலைஞர்கள்' என்று அழைக்கப்பட்டவர்கள் கிரீசிலிருந்து எக்படனாவுக்கு வந்து சேர்ந் தனர். அந் நகரம் களியாட்டங்களாலும், நாடக நிகழ்ச்சிகளாலும் விழாக்கோலம் பூண்டிருந்தது. இந்தப் பெருங்களியாட்டத்திற்கிடை யே ஹெபேஸ்டியன் நோய் வாய்ப்பட்டார். ஏழு நாட்களில் உடல் மெலிந்து, இறந்தார். அலெக்ஸாந்தர் தன் உயிர் நண்பனை இழந்து விட்டதால் துக்க சாகரத்தில் மூழ்கினன்; மூன்று நாட்கள் உண்ணுமல் பட்டினி கிடந்தான். அவனுடைய பேரரசு முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்திருந்தது. திறமையற்றவராகக் காணப்பட்ட இரங்கத்தக்க மருத்துவரைச் சிலுவையிலறைந்து அலெக்ஸாந்தர்

கொன்ருன் என்று சொல்லப்படுகிறது. நண்பரைப் பிரிந்து தனி மைப்பட்ட பேரரசர் தேற்றப்பட முடியாதவராயிருந்தார். அவருக்கு மற்றச் சிறந்த தோழர்கள் இருக்கலாம். விசுவாசம் மிக்க அமைச்சர் களும், வேலையாட்களும் இருக்கலாம். ஆனால் 'என் தலைவரான அரசர்' என்று கூருமல், வெறுமனே 'என் நண்பர் அலெக்ஸாந்தர்' என்று கூறக்கூடிய மற்ருெரு நண்பர் அவருக்கு இனிக் கிடைக்க முடியாது. சவம் பாபிலோனுக்கு எரியூட்டுவதற்காக அனுப்பப் படடது. ஈடிணையில்லாத சிறப்புடன் சவ ஊர்வலத்தை நடத்து வதற்காக 10,000 திறமைமிக்கவர்கள் தனியே அமர்த்தப்பட்டனர்.

**கோஸேயன்கள் (Cossaeans) அடிப்படுத்தப்படல், கி. மு. 324–3; குளிர்காலம். மேற்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் தூதுக் குழுக்கள் (ரோமிலிருந்து தூதுக்குழு இல்லை).**

அந்த ஆண்டில் இறுதியில் அலெக்ஸாந்தர் பாபிலோனுக்குச் சென்ருன். வழியில், கொள்ளையடித்தலைத் தொழிலாகக் கொண் டிருந்த லூரிஸ்டன் மலைமக்களை வேட்டையாடும் கிளர்ச்சி யூட்டும் அனுபவத்தைப் பெற்ருன். அந்தத் திருடர்கள் அவர்களுடைய மலையிருப்பிடங்கள் வரை துரத்தப்படடனர். அவர்களுடைய தலைவர் கொல்லப்பட்டது ஹெபேஸ்டியனின் ஆவிக்கு ஒரு பலி என்று வரு ணிக்கப்பட்டது. அலெக்ஸாந்தர் பாபிலோனுக்குச் சென்று கொண் டிருக்கும் போது தூரநாடுகளிலிருந்து தூதுவர்கள் அவருடைய பார்சறைக்கு வந்தனர். பிரட்டியர்கள், லூகானியர்கள், எட்டுஸ்கர்கள், கார்த்தேஜீனியர்கள், ஸ்பெயின் நாட்டு போனீசியக் குடியேற்றங்கள், கருங்கடலின் சிதியர்கள், லிபியர்கள், எதியோப்பியர்கள் இவர்கள் எல்லோரும் ஏற்கெனவே உலகத்தின் பாதிப்பாகத்திற்குத் தலைவராகி விட்ட பேரரசர் அலெக்ஸாந்தரின் நட்பைப் பெறுவதற்காகத் தூதுவர்களை அனுப்பியிருந்தனர். கிழக்கு உலகின் வெற்றியாளர் இனிமேல் மேற்கிலும் முன்னேறிவிடுவாரோ என்று மேற்கு உலகத்து நாடுகள் ஒருவித அச்சங்கொள்ளத் தலைப்பட்டன. கிரேக்க சிசிலியின் ஆதரவாளராகத் தனக்கு எதிராக அவர் வந்துவிடுவாரோ என்றும், மூத்த டைருக்குச் (Tyre) செய்தவற்றை அழித்து விடுவாரோ என்றும் கார்த்தேஜ் நடுங்கிக் கொண்டிருந்தது. ஆனல் கார்த்தேஜின் அதிகாரத்தை அழிக்கும் விதியைப் பெற்றதும் அலெக்ஸாந்தரின் பேரரசில் ஒருபகுதியை உரிமையாகப் பெறப் போவதுமான இத்தாலியின் நகரத்திலிருந்து எந்தத் தூதுவரும் வரவில்லை.

**பாபிலோனை அடைதல்; கால்டியன்களின் எச்சரிக்கை; பெல் கோயில்**

அலெக்ஸாந்தர் பாபிலோனுக் கருகில் வந்தபோது, விண் மீன்களை நோக்கிச் சோதிடம் கூறும் பூசாரிகளின் குழு ஒன்று,

பெல் கடவுள் (God Bel) அவன் நகரக்குள் வருவது அவனுக்கு நன்மையன்று என்று தங்களிடம் வெளிப்படுத்தியதாகக் கூறி, நகருக்குள் புகவேண்டாமென்று அறிவுரை கூறியது. அவன் யூரிப்பைடிஸின் ஒரு பாட்டின் அடியுடன் சால்டியர்களுக்குப் பதிலளித்தான் ; 'மிக நன்ருக ஊகிப்பவனே எதிர்காலத்தை மிக நன்ருக உணரும் வன்மையுடையவனுவான்.' இவ்வாறு கூறி அவன் தன்னுடைய படைக்குத் தலைமை பூண்டு நகரினுள் நுழைந்தான். சால்தியப் பூசாரிகள் தங்களுடைய வருமானத்தைக் கோயிலைப் பழுது பார்ப்பதில் செலவிட மனமில்லா தவர்களாயிருந்தமையால் மிகவும் பழுதுபட்டுப் போயிருந்த பெல் கோயிலை மீண்டும் நன்ருகக் கட்டுவதற்கான முயற்சிகளை முதலில் மேற்கொண்டான் அலெக்ஸாந்தர். தாங்கள் கோயிலைப் புறக்கணித்து வைத்திருந்ததைக் கண்டு அரசன் சினங்கொள்வானே என்று பயந்தே அப் பூசாரிகள் அவனைப் பாபிலோனுக்குள் நுழைய வேண்டாமென்று தடுத்தனர் என்று கருதப்பட்டது.

## 4. அராபியப் படையெடுப்புக்கான ஏற்பாடுகள் ; அலெக்ஸாந்தரின் மரணம்

### அரேபியாவில் அலெக்ஸாந்தரின் திட்டங்கள்

நியார்க்கஸின் வெற்றிகரமான கடற்பயணத்திற்குப் பிறகு அலெக்ஸாந்தரின் மனம் கடல்துறைப் புது முயற்சிகளைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தது. வடக்கு, தெற்குக் கடல்களின் மீது செல்வதற்கு அவன் மனம் விரும்பியது. காடுகளில் மரம் வெட்டிக் கொண்டுவந்து காஸ்பியன் கடலில் கப்பல் ஓட்டுவதற்காகக் கப்பற் படை ஒன்று கட்டும்படியும், கிழக்குக் கடலுடன் காஸ்பியன் கடல் கொண்டிருந்த தொடர்பைப்பற்றி அறிந்துவரும்படியும், அவன் ஏற்கெனவே ஹெரார்கிளிடிஸ் (Heraclides) என்பவரையும். கப்பல் கட்டும் குழுவினர்களையும் ஹிர்கெஸியன் மலைகளுக்கு அனுப்பி வைத்தான். ஆனல் அவனுடைய உடனடியான, மிகச் சிறந்த முயற்சியாக இருந்தது கடல் மூலம் சென்று அரேபியாவை வெற்றி கொள்வதாகும். கிழக்கே அவனுடைய பேரரசின் எல்லைக்கு அப்பாலிருந்த தீபகற்பத்தை வெல்லாததால் அவனுடைய கிழக்குப் பேரரசு முழுமையடையவில்லை: அரேபியாவின் வளமான வாசனைப் பொருள் விளையுமிடங்களைப்பற்றி அவன் அறிந்திருந்தான். ஆனல் அங்கேயிருந்த பாலைவனத்தின் பரப்பைப் பற்றியும், தரைப் படையெடுப்பு மிகக் கடினமானதுடன், உழைப்புக் கேற்ற ஊதியம் தாராதது என்பதையும் அறியாதவனுயிருந்தான். எனினும் மணற் பிரதேசமான அந் நாட்டை உரிமையாகப் பெறுவது அவனுடைய முக்கிய

நோக்கமாக இருக்கவில்லை. அது அவனுடைய பெருந்திட்டங்களின் வரிசையில் ஒன்றாகவே இருந்தது. அவனுடைய இந்தியப் படையெடுப்பும் நியார்களின் கடற் பயணமும் அவனுக்குப் புதிய கருத்துக்களைக் கொடுத்தன. மத்தியதரைக் கடலைப்போல மற்றொரு பெரும் வாணிகக் கடலாகத் தென் கடலையும் மாற்றிவிடலாம் என்று அவன் கருதத் தொடங்கினான். பாரசீகக் குடாத் துறைமுகத்தை இரண்டாவது போனீசியத் துறைமுகமாக்கலாம் என்று கருதினான். சிரியன் கடற்கரைக்குச் சென்று கடற்கரையில் நிலப்பகுதியிலும், தீவுகளிலும் குடியேற்றம் அமைக்குமாறு அவன் கடலோடிகளை அனுப்பினான். சிந்துவிலிருந்து டைக்ரிஸ், யூப்ரடிஸ் வரையிலும், பின்பு அங்கிருந்து கருங்கடலுடன் நைல் நதியை இணைக்கும் கால்வாய்கள் வரையிலும், ஒழுங்கான ஒரு வாணிக மார்க்கத்தை நிறுவலாம் என்று நம்பிக்கொண்டிருந்தான். இந்தச் சாதனையைச் செய்து முடிக்கும்வரை அவன் உயிரோடு இருந்திருந்தால், நெக்கோ அரசரின் திட்டத்தை மீண்டும் புதுப்பித்தவனாயும், சூயஸின்மூலம் நீர் மார்க்கத்தை உண்டுபண்ணியவனாயும் விளங்கியிருப்பான். அப்போது வலிமைமிக்க பாபிலோன் புதிய கடல்துறை வாணிகத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டிருந்திருக்கலாம். அலெக்ஸாண்டிரியா அல்லது படாலாவிலிருந்து கடல் வாணிகப் பொருள்கள் புதிய கடலில் துறைகளுக்குக் கொண்டுபோகப் பட்டிருக்கும். அலெக்ஸாந்தர் பாபிலோனைத் தன் பேரரசின் தலைநகரமாக ஆக்கிக் கொண்டான். அது அறிவுடைமையின்பாற்பட்ட செயலே. ஆனால் அதன் பண்பு இப்போது மாற்றப்படவிருந்தது. அது கடல் துறை நிலையமாகவும், கடல்வாணிகக் களமாகவும் ஆகவிருந்தது. கப்பல்கட்டும் துறைகளைக் கட்டத் திட்டமிட்டதுடன் ஆயிரம் கப்பல்கள் இருப்பதற்கு இடம் அமைந்த ஒரு பெரிய துறைமுகத்தை வெட்டுவதற்காக அலெக்ஸாந்தர் முற்பட்டான்.

### அவன் ஏற்பாடுகள்: பாபிலோனியச் சதுப்பு நிலத்திற்கு அவனுடைய பயணம்

நியார்க்கஸின் கடற்படை யூப்ரடிஸ் வழியாகப் பிரயாணஞ் செய்து பாபிலோனில் அரசரைச் சந்தித்தது. ஆனால் நேரவிருக்கும் பெரும் புது முயற்சிக்குப் அப் படை போதியதாய் இருக்கவில்லை. புதிய போர்க்கப்பல்களைக் கட்டுவதற்குப் போனீசியர்களுக்குக் கட்டளைகள் அனுப்பப்பட்டன; கப்பல்களில் பன்னிரண்டு மூன்றடுக்குகள், மூன்று நாலடுக்குகள், நான்கு ஐந்தடுக்குகள் கொண்டவையும், முப்பது துடுப்புகள்கொண்ட முப்பது படகுகளும் கட்டுவதற்கு ஆணை அனுப்பப்பட்டது. கப்பலின் பகுதிகள் தனித்தனியாகக் கட்டப் பட்டன. அவை தரை மார்க்கமாக யூப்ரடிஸிலிருந்த தப்சகஸுக்கு அனுப்பப்பட்டு, அங்கே ஒன்றாய்ச் சேர்க்கப்பட்டன. சைப்ரஸ்

மரத்தினல் மற்றக் கப்பல்கள் பாபிலோனில் கட்டப்பட்டன. கோடை காலத்தில் அப்படை புறப்பட்டது. இடையிலுள்ள காலத்தின் ஒரு பகுதியை அலெக்ஸாந்தர் யூப்ரடிஸ் வழியாக பல்லகோபஸ் கால்வாயைப் பார்வையிட்டு வருவதில் கழித்தான். வசந்தகாலத்தின் பிற்பகுதியில் ஆர்மீனிய மலைகளின் வடக்குச் சரிவுகளில் இருந்த குளிர்காலத்தில் உறைந்த பனிக்கட்டிகள் உருகி, வெள்ளமாகப் பெருக்கெடுத்து, யூப்ரடீஸின் கரை புரண்டோடும்படியும், பாபிலோனியச் சமவெளியில் மேவிச் செல்லும்படியும் செய்தன. பாபிலோனுக்குக் கீழே தொண்ணூறு மைல் தூரத்தில், மேவிச்செல்லும் நீரைச் சதுப்பு நிலத்தில் பாயச் செய்வதற்காக ஒரு கால்வாய் வெட்டப்பட்டது. அச் சதுப்பு நிலம் தென்மேற்கே பல காததூரம் வரை பரவியிருந்தது. இலையுதிர் காலத்தில், படுகையை விட்டு நீர் செல்லாதவாறு கால்வாய் ஒரு மதகினல் மூடப்பட்டது. ஆனல், மதகு அடிக்கடி சரியாக வேலைசெய்யாது கெட்டுவந்தது. அதனல் கால்வாயை ஆற்றுடன் இணைக்கும் வேருெரு சிறந்த இடத்தைத் தேர்ந்தெடுக்க முனைந்தது, கால்வாயின் வழியே சென்றனர். சிறிதுகாலம் சதுப்புநிலங்களினூடே சுற்றியலைந்து ஒரு புதிய நகரத்திற்கு இடம். தேர்ந்தெடுத்தனர். அங்கே உடனே கட்டிடங்கள் தோன்றலாயின. அந் நகரம், பாபிலோனியாவிலிருந்து செங்கடல்வரை பாலைநிலத்தின் குறுக்கே கட்டப்படவிருந்த பல கோட்டைகளுள் ஒன்ருயிருந்தது என்பதை நாம் ஊகித்துக் கொள்ளலாம்.

### காலாட் படையில் சீர்திருத்தம்

பாபிலோனுக்குத் திரும்பிவந்தபோது, கரியா, லிடியா ஆகிய இடங்களிலிருந்து வந்த சில மேற்கு நாட்டுத் துருப்புக்களும், போஸ்டாவினுல் பயிற்சி கொடுக்கப்பட்ட 2000 பாரசீகர்களும் படையில் சேர்ந்திருப்பதை அரசன் கண்டான். ஒரு பெரிய பட்டாளச் சீர்திருத்தத்தைச் செய்ய அவன் முனைந்தான். கடந்த சில காலமாக அவனுடைய மனத்தில் அச் சீர்திருத்தத்தைப் பற்றிய சிந்தனை இருந்துவந்திருக்கவேண்டும். உண்மையில் அது அவன் தந்தையின் படையை முழுவதும் மாற்றியமைக்கும் சீர்திருத்தமாக, கனத்த ஆயுதங்கள் தாங்கிய கிரேக்கப் படைத் துறை முறையாக இருந்தது. நன்ருகப் பயிற்சிபெற்ற படையினுல் அலெக்ஸாந்தர் பலவற்றைச் சாதித்திருந்தான்; ஆனல் அவனுடைய அனுபவத்தில், அவனுடைய காலாட்படை மிக உயர்ந்த தரத்தில் இருக்கவில்லை என்று தோன்றியது. பெரும் பாரமும், உரம் மிகுந்த பலமும் கொண்டிருப்பதான நன்மைகள், படையினர் எளிதில் இயங்கமுடியாத தன்மையால் அடிபட்டுப் போயின. தளவாடங்களை அதிகமாகக் குறைத்துவிடாமல் படையின்

விரைவான இயக்கத்திற்கான ஒருவழியை அவன் கண்டுபிடித்தான். அவன் புதிய 20,000 பாரசீகர்களைத் தன் காலாட் படையில் பின் வருமாறு புகுத்தினன்: படையில் முன்னணியின் பின்னுள்ள ஒற்றை அணி வரிசையில் பதினறு ஆட்கள் வைத்திருக்கும் வழக்கம் அப்படியே வைத்துக் கொள்ளப்பட்டது. ஆனல் அவர்களில் நால்வர் மட்டும் மாசிடோனியக் காலாட்படை வீரர்களாயிருந்தனர். வரிசையின் முதல் மூன்று வீரரும், கடைசி வீரருமாயிருந்தனர். நான்காவது முதல் பதினைந்தாவது வரிசை வரையுள்ள பன்னிரண்டு வரிசைகளில் பாரசீகர்கள் தங்கள் நாட்டிற்குரிய வில், எறியீட்டிகள் ஆகிய கனங் குறைந்த ஆயுதங்கள் தாங்கி நின்றனர். இந்தப் புதிய படை அமைப்பினல் புதிய யுத்த தந்திரத்தை மேற் கொள்ளவேண்டியுமிருந்தது. அது படையின் முன் வரிசைகள் வழிவிடப் பின்னுலிருக்கும் வில் வீரர்களும், எறியீட்டியாளர்களும் இடைப்பட்ட பகுதிகளில் பரந்து சென்று, தங்களுடைய ஆயுதங்களை எறிவதற்கும் பின்பு மீண்டும் நெருங்கிக் கூடி ஒழுங்காக ஐயைந்து பேராக அல்லாமல் மும்மூன்று பேராக அணிவகுத்துச் செல்வதற்கும் வழிவகுப்பதாயிருந்தது. இதுபோன்று கனமான ஆயுதங்களுடை யோரையும் கனமில்லாத ஆயுதங்களுடையோரையும் ஒன்ருக இணைத்துவைத்தது அலெக்ஸாந்தரின் சொந்த அறிவில் தோன்றிய திட்டமேயாகும். ஆனல், அத் திட்டத்தை முழுமையடையச் செய்வ தற்கு அப்பெருந் தலைவரின் திறமை முழுவதும் வேண்டப்பட்டது. இதில் வியப்பிற்குரியது யாதெனில், அலெக்ஸாந்தர் தன் அரேபியப் படையெடுப்புக்குச் சில நாட்கள் முன்புதான் இந்தப் புதுமுறை யைப் புகுத்தினன் என்பதுதான். அவன் ஏற்கெனவே பரிசோ தனைகள் செய்திருக்கக்கூடும் என்று நாம் எண்ணத் தோன்று கிறது. அவனிடம் சூசாவில் வந்து சேர்ந்தவர்களும், மாசிடோனிய முறையில் போர்ப் பயிற்சி பெற்றவர்களுமான 30.000 கீழை நாட்டு வீரர்களுடன் அவன் பரிசோதனைகள் நடத்தியிருக்கவுங் கூடும். இந்த யுத்த தந்திரச் சீர்திருத்தத்தில் அரசியல் நோக்கங்களும் இருந்தன. ஐரோப்பாவையும் ஆசியாவையும் இணைத்து வைப்ப திலும், மாசிடோனியர்களையும் பாரசீகர்களையும் ஒன்ருய் இணைத்து வைப்பதிலும் அது மற்ருெரு படியாகும் எனக் கொள்ளலாம்.

### ஹெபேஸ்டியனின் சவ ஊர்வலம், கி.மு. 323. மே மாதம்

படையெடுத்துப் புறப்படுவதற்கு முன்பு செய்து முடிக்க வேண்டிய ஒரு செயல் அரசரின் உள்ளத்தில் உறைந்து கிடந்தது. அதுதான் ஹெபேஸ்டியனின் சவ ஊர்வலம். இறந்தவர்க்குச் செய்யவேண்டிய மரியாதைகள் செய்யப்பட்டன. அம்மானின் தெய்வ மொழி கேட்கப்பட்டது. ஒரு வீரரைப் போல இறந்தவரை மதிப்புச் செய்யலாம் என்று தெய்வ மொழி கட்டளையிட்டது. அதன்படி

அலெக்ஸாந்தர் எகிப்திய அலெக்ஸாண்டிரியாவிலும், மற்ற நகரங்களிலும் ஹெபேஸ்டியனுக்கு நினைவுக் கோபுரங்கள் எழுப்பவேண்டுமென்று கட்டளையிட்டான். பாபிலோன் முன்பு என்றுங் கண்டிராத பெருஞ் சிறப்புடன் இறுதிச் சடங்குகள் செய்யப்பட்டன. சவத்தின் சிதையானது பலவகையான கொடைப் பொருள்களால் அலங்கரிக்கப்பட்டு, 200 அடி உயரமுள்ள ஒரு கோபுரமாக உயர்ந்து காணப்பட்டது.

**அலெக்ஸாந்தர் நோய்வாய்ப்படல்; டேசியஸின் (Daesius) கணக்குப்படி 16, 17, 18, 19-24, 25, 27 ஆம் நாட்கள்; 28ஆம் தேதி (ஜூன் 13) அவன் மரணமடைதல்.**

கடைசியில் தெற்கே படையெடுத்துச் செல்வதற்கு எல்லா ஏற்பாடுகளும் செய்து முடிக்கப்பட்டன. ஜூன் மாதத்தின் தொடக்கத்தில் ஒரு நாள் நியார்க்கஸும் அவருடைய கடற்படை வீரர்களும் அவர்களுடைய கடற் பிரயாணத்தைத் தொடங்கும் சமயத்தில் அவர்களுக்கு ஒரு அரச விருந்து அளிக்கப்பட்டது. இரவில் நெடு நேரத்திற்குப் பிறகு அலெக்ஸாந்தர் தன் இருப்பிடத்திற்குத் திரும்பிச் செல்லும்போது மீடியன் என்ற பெயருடைய அவனுடைய நண்பர் ஒருவர் இரவு முழுவதையும் குடித்துக் களித்துக் கழிப்பதற்காக அவனைத் தன் இடத்திற்கு இட்டுச் சென்றார். மறுநாள் காலையில் அவன் நீண்டநேரம் உறங்கினன். மாலையில் மீடியஸுடன் உணவருந்திவிட்டுமீண்டும் பெருங் குடியில் மூழ்கினன். மறுநாள் விடியற்காலையில் குளித்துவிட்டு உணவருந்தியபின் அவன் காய்ச்சலுடன் கூடிய உறக்கத்தில் மூழ்கினன். விழித்தபோது அவன் :வழக்கம்போல தினந்தோறும் கொடுக்கும் கடவுட் பலிகளைத் தயார் செய்யும்படி வற்புறுத்தினன். ஆனல் காய்ச்சல் அவனை விட்டு நீங்கவில்லை; அவனுல் நடக்கக்கூட முடியவில்லை. அவன் பலிபீடத்திற்கு ஒரு பல்லக்கில் வைத்து எடுத்துச் செல்லப்பட்டான். அவன் படுக்கையிலிருந்து கொண்டே நான்கு நாட்களுக்குப் பின்பு தொடங்கவிருந்த படையெடுப்பைப்பற்றி நியார்க்கஸுடன் தீவிரமாகக் கலந்தாலோசித்துக் கொண்டிருந்தான். மாலையின் குளிர்ந்த காற்றில் அவன் ஆற்றிற்குக் கொண்டு செல்லப்பட்டான். ஆற்றின் அக் கரையிலிருந்த ஒரு தோட்டம் சூழ்ந்த மனைக்கும் எடுத்துச் செல்லப்பட்டான். அங்கே அவன் கடுங் காய்ச்சலுடன் ஆறு நாட்கள் படுத்த படுக்கையாய்க் கிடந்தான்; ஆனல் ஒழுங்காகத் தினந்தோறும் கடவுளுக்குப் பலிகளைக் கொடுக்கும்படி செய்து வந்தான். படையெடுப்புக்காக நாளைக்குப் புறப்படலாம், நாளைக்குப் புறப்படலாம் என்று ஒவ்வொரு நாளாய்ப் புறப்பாட்டை ஒத்திப்போட்டு வந்தான். பிறகு அவன் நிலை மிக மோசமாயிற்று. மீண்டும் அவன் அரண்மனைக்கே கொண்டு வரப்பட்டான். அங்கே அவன் சிறிது நேரம் கண்மூடினன்; ஆனல்

காய்ச்சல் சிறிதும் குறையவில்லை. அவனுடைய அதிகாரிகள் அவனைப் பார்க்க வந்தபோது அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. நோய் மிக மிகக் கடுமையாகிவிட்டது. அலெக்ஸாந்தர் இறந்துவிட்டான் என்ற வதந்தி மாசிடோனியப் படை வீரர்களிடையே பரவியது. பெருஞ் சந்தடியுடனும் கூச்சலுடனும் அவர்கள் அரண்மனை வாயிலுள் நுழையத் துடித்தனர்; மெய் காப்பாளர்கள் அவர்களை உள்ளே விடாமல் இருக்க முடியவில்லை. ஒவ்வொருவராக அவர்கள் தங்கள் இளமை பொருந்த அரசரின் படுக்கைக்கு முன்பு சென்று வரிசையாகவும், ஒருவர்பின் ஒருவராகவும் நின்றனர். ஆனால் அவனால் அவர்களிடம் ஒன்றும் பேச முடியவில்லை. எனினும் அவனால் கைகளைச் சிறிது ஆட்டியும் கண்களால் சைகை செய்தும் அவர்களை வரவேற்க மட்டும் முடிந்தது. போசெஸ்டாஸும் அலெக்ஸாந்தரின் தோழர்களில் வேறு சிலரும் செராபிஸ் (Serapis) கோயிலில் இரவு முழுதும் தங்கியிருந்து, அவர் தெய்வத்தின் உதவியால் குணப்படுத்தப்பட முடியுமானால் கோயிலுக்குள் அவனைக் கொண்டுவரலாமா என்று கடவுளைக் கேட்டனர். ஒரு குரல் அவனைக் கோயிலுக்குள் கொண்டுவர வேண்டாமென்றும், இருக்குமிடத்திலேயே இருக்கட்டும் என்றும் எச்சரித்தது. ஜூன் மாதத்தில் ஒருநாள் மாலையில் அலெக்சாந்தர் மரணம் அடைந்தான். அப்போது அவனுக்கு வயது முப்பத்துமூன்றுகூட முடியவில்லை. இவைதாம் அரசாங்க நாட்குறிப்பில் பதிவு செய்யப்பட்டுள்ள, அவனுடைய கடைசி நோயைப் பற்றிய, ஆதார பூர்வமான முழு விவரங்களாகும். ஆனால் அவனுடைய உயிருக்கே உலை வைத்த நோயின் சரியான இயல்பைப்பற்றி நாம் அறிந்துகொள்வதற்கு இவை போதுமான செய்திகளைத் தரவில்லை.

### அவன் செயல்கள்; அவன் மேலும் என்ன செய்திருக்கக் கூடும்?

சில குறிப்பிட்ட கால கட்டங்களில் பேரரசர்களின் அகால மரணம் அடிக்கடி நாட்டின் வரலாற்றின் போக்கைப் பாதிப்பதாக இருக்கும். ஆனால் அலெக்ஸாந்தரின் மரணத்தைப்போல வேறு எந்தத் தற்செயல் நிகழ்ச்சியும் அவ்வளவு தெளிவாகவும், முழுமையாகவும் வரலாற்றின் திசையை மாற்றியதில்லை. மேற்கு ஆசியாவை வெற்றி கொள்வதற்கும் அங்கே தம் அரச முத்திரையைப் பதிப்பிப்பதற்கும் அவனுக்குப் பன்னிரண்டு ஆண்டுகள் போதுமானவையாயிருந்தன. பல நூற்றாண்டுகளானபோதிலும் அவன் விட்டுச் சென்ற அரச முத்திரை ஆசியாவில் அழிந்துபோய்விடவில்லை. எனினும் அவனுடைய பணி அப்போதுதான் தொடங்கியிருந்தது. அவனுடைய ஆசியப் பேரரசின் அரசியல் உருமாற்றத்திற்கான பல திட்டங்கள் அவனால் கொண்டு வரப்பட்டன. அவை அவனுடைய மூலக் கருத்தின் சிறப்புத் திறத்தையும், நல்லன என்று எண்ணியவற்றை அவன் சிக்கெனப் பிடித்துக் கொள்ளும் திறத்தையும்,

உண்மைகளைக் கண்டறிந்து அவற்றை உறுதியாகப் பற்றிக்கொள்ளும் திறத்தையும், சீரொழுங்கமைப்பில் அவனுடைய திறத்தையும், அவனது அற்புதமான மூளை சக்தியையும் காட்டுகின்றன. எனினும் அத் திட்டங்கள் எல்லாம் அவற்றை உருவாக்கிய தலைவரின் கைவண்ணத்தால் வளர்ச்சியுறுவதற்கு இன்னும் பல ஆண்டுகள் தேவைப்பட்டன. அலெக்ஸாந்தருடைய கொள்கையின் இன்றியமையாத பாகமாகிய இராச்சிய ஒற்றுமை அவன் இறந்ததும் மறைந்துவிட்டது. பேரரசு வலிமைமிக்க பல மாசிடோனியர்களால் பிரிக்கப்பட்டது. திறமையும், செயல்முறை அறிவும் வாய்ந்தவர்களாயினும் அவர்களிடம் பேரரசை நிறுவியவரின் மேதைமையில் காணப்பட்ட உயர்ந்த பண்புகள் காணப்படவில்லை. அவனால் தொடங்கி வைக்கப்பட்ட பொறுத்துக்கொள்ளும் கிரேக்கப் பண்பாட்டை அவர்களும் மேற்கொண்டனர். அவனுடைய போதனைகள் அவர்களிடமிருந்து மறைந்து போய்விடவில்லை. இவ்வாறு அவனுடைய வேலை பயனற்றதாய்ப் போய்விடவில்லை. அற்புதமான அந்தப் பன்னிரண்டு ஆண்டுகளில் செய்யப்பட்ட கடு முயற்சிகள் கிழக்கு நாடுகளில் ரோமானிய அதிகாரம் பரவுவதற்கு வழிவகுத்ததுடன், உலகப் பொது மதம் பரவுவதற்கும் வழி வகுத்தது.

அலெக்ஸாந்தரின் பணியைப் பற்றிய உண்மையான அபிப்பிராயத்தைத் தோற்றுவித்து அவனுடைய வரலாற்றை எழுதுவது முடியாததாயிருக்கிறது. ஏனெனில், நமக்குக் கிடைத்திருக்கும் ஆவணங்களில் அலெக்ஸாந்தர் தளபதியாயும், போர் வீரராயுமிருந்து செய்த பணிகளைப் பற்றிய செய்திகளே நிறைந்துள்ளன. நாட்டு நலன் கருதி அவன் செய்த பணிகள் விடப்பட்டுவிட்டன. போர் முரசுகளின் முழக்கத்திலும், ஈட்டிகளின் மோதல்களிலும் ஆட்சி முறை அமைப்பைப் பற்றிய விளக்கங்கள் விடப்பட்டு விட்டன. ஆனால் அரசியல் அமைப்பு, ஆட்சி முறை பற்றிய விளக்கங்கள், இவற்றைப் பற்றி அறியவே வரலாற்று ஆராய்ச்சியாளர் விரும்புகின்றனர். குறிப்பாக, தூரக் கிழக்கு நாடுகளில் அவன் புதிதாக நிறுவிய நகரங்கள், மாசிடோனியர், கிரேக்கர். கீழை நாட்டினர் இவர்களை ஒன்றாகப் பிணைத்து வைப்பதற்காக அவன் செய்த புதிய பரிசோதனைகள் இவற்றைப்பற்றிய செய்திகளை யறிய அவர்கள் விரும்புகின்றனர். இவ் விஷயங்களைப்பற்றி ஒன்றும் எழுதாமல் அலெக்ஸாந்தரைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புக்களை யஎழுதி அவனுடைய தோழர்கள் அறியாமையால் அவனுடைய பெருமைக்குத் தவறிழைத்து விட்டனர். அதனால்தான் அவனுக்குப் படையெடுத்து வெற்றிகொள்ள மட்டும்தான் தெரியும்; வெற்றி கொள்வதைப் பற்றித்தான் அவன் எப்பொழுதும் கவலைப்பட்டான் என்ற பொருந்தாத கருத்து உலகில் பெரும்பான்மையாக நிலவுகிறது.

நன்கு பயிற்சி பெற்ற வீரர்களை அளவில்லாமல் பெற்றிருந்த மிகச் சிறந்த வலிமை வாய்ந்த இந்த அரசன் மேற்கு நாடுகளையும் வெல்வதற்கு முனைந்திருப்பான் என்பதில் ஐயங்கொள்வதற்கு இடமேயில்லை. அவனுக்குப் பின் வந்தவர்களுள் ஒருவர் தோல்வி கண்டதைப் போலல்லாது, சிசிலியையும், பெரும் ஹெல்லாஸையும் இணைத்துக் கொள்வதிலும், கார்த்தேஜை வெல்லுவதிலும், இத்தாலியத் தீபகற்பத்தை அடக்கியாள்வதிலும் அவன் வெற்றி கண்டிருப்பான் என்பதிலும் நாம் சிறதும் ஐயங்கொள்ளமுடியாது. அவன் மரணம் ஐரோப்பாவைப் பொறுத்தவரை அதை எப்படிப் பாதித்தது என்பதை உணர்வதற்கு நாம் இன்னும் நம் கற்பனையைச் செலவழிக்க வேண்டியதில்லை. இந்தியாவைப் பொறுத்த வரை அவன் அங்கே மீண்டும் திரும்பிச் சென்றிருப்பான்; சோர்வுற்று வெறுப்புக் கொண்ட அவனுடைய படையினரால் கைவிடப்பட்ட கங்கைச் சமவெளிக்குச் செல்லும் திட்டம் புதிய துருப்புக்களின் உதவியால் மீண்டும் மேற்கொள்ளப்பட்டிருக்கும் அப்போதைய நிலைமையில் அவன் இந்திய நாகரிகத்தில் மறையாத முத்திரை ஒன்றையும் ஏற்படுத்திச் சென்றுவிடவில்லை. அவனுக்குப் பின்வந்த அரசர்கள் விரைவில் பஞ்சாபின்மீது கொண்டிருந்த பிடிப்பை விட்டுவிட்டனர். அலெக்ஸாந்தர் இன்னும் கால்நூற்றுண்டு வாழ்ந்திருந்தால் நிலவியல் அறிவின் எல்லையை விரிவுபடுத்தியிருப்பான் என்பதைச் சொல்லத் தேவையில்லை. காஸ்பியன் கடலின் உண்மையான இயற்கைநிலை அறியப் பட்டிருக்கும்; இந்தியத் தீப கற்பத்தின் தெற்கு எல்லைப் பரப்பு கண்டுபிடிக்கப்பட்டிருக்கும்; ஆப்பிரிக்காவில் போனீசியக் கடற் பயணம் மீண்டும் தொடங்க ஒரு முயற்சி செய்யப் பட்டிருக்கும். மேலும் ஜக்ஸார்டஸிற்கும் அப்பாலுள்ள நிலங்களில் முன்னேறியிருந்த அலெக்ஸாந்தர் ஆசியாக் கண்டத்தின் கிழக்கிலும் வடக்கிலும் பரந்திருந்த அகன்ற நிலப் பரப்பைப்பற்றிச் சில உண்மைகளையும், சீன நாகரிகத்தில் சில வியப்பான உண்மைகளையும் அறிந்துகொள்ளத் தவறியிருக்க மாட்டான்.

அவனுடைய திடீர் மரணம் விதியின் விளையாட்டினுல் நேர்ந்த தன்று; அது அவனுடைய குணவியல்புக்கும், அவனுடைய தீரச் செயல்களுக்கும் ஏற்ற இயல்பான விளைவே. பல பிறப்புக்களின் சக்திகளை அவன் பதின்மூன்று ஆண்டுகளுக்குள் நெருக்கி அடைத்து வைத்துக்கொண்டிருந்தான். அவனுடைய உடலுக்கும் மூளைக்கும் கடுமையான வேலை தரக்கூடியவையாயிருந்த போதிலும், தளபதி, நாட்டு நலன் கருதிய அரசன் என்ற இரு பதவிகளின் கடமைகளை மட்டும் செய்வதில் அவன் மனநிறைவடைந்திருந்திருப்பின், அவனுடைய தனிப்பட்ட வலிமைமிக்க கட்டான உடல் இன்னும் பல ஆண்டுக்காலம் நீடித்திருந்திருக்கும். ஆனுல், அவனுடைய வழி

யாளர்களை அவனிடம் பேரன்பு காட்டச்செய்த குணமான அவனுடைய ஒளிமிக்க மனவியல்பு, போர் வீரரின் தீரம், நல்ல நட்புடைமையின்மீது காதல் இவையே அவன் உடல் நலத்திற்கு அழிவு தருபவையாகிவிட்டன. அவன் உடல் முழுவதும் போர்த் தழும்புகள் இருந்தன; மூல்தானில் அவன் தப்பித்துவந்தமைக்கு விலையாக இருந்த பயங்கரமான காயம் என்றுமே ஆருமலே இருந்தது. போர்க்களத்திலும் சரி, விருந்தாட்டிலும் சரி, எவ்விடத் திற்கும் தன்னை ஈடுபடுத்திக்கொள்ளத் தயாராயிருந்த அவன், இளமையிலேயே இறக்கும்படியாக விதி இருந்தது.

## 5. மாசிடோனியாவின்கீழ் கிரீஸ்

**மெகாலோபோலிஸ் யுத்தம்-கி.மு. 331.**

கிரீஸின் கரைகளிலிருந்துதான் உலக வரலாற்றின் அலைகள் சென்றுகொண்டிருந்தன. வெற்றிமிக்க வீரர்களான மாசிடோனியர்களின் தொடர்ந்த படையெடுப்பினுல் வெற்றிக்குமேல் வெற்றி கொள்ளப்பட்டுவந்தவையும், உலகத்தில் தங்கள் நாகரிகத்தைப் பலவிதமான உணர்ச்சிகளுக்கிடையே வெளிப்படுத்திக்கொண்டிருந்த காட்சியைக் கண்டுகொண்டிருந்தவையுமான சிறு நாடுகளில் என்ன நடந்துகொண்டிருந்தன என்பதைப்பற்றி நின்று பார்க்க நமக்கு நேரமில்லை. இஸ்ஸஸின் வாயில்களில் அலெக்ஸாந்தர் பெற்ற வெற்றியும், பின்பு கடல்வழியாக அவன் பெற்ற மேலாண்மையும், கிரேக்கர்களில் பலருக்கு எச்சரிக்கைப் பாடங்களைக் கற்பித்தன; இஸ்த்மசின் கூட்டு அரசுகள் வெற்றியாளருக்குப் பாராட்டுக்களையும் ஒரு தங்கக் கிரீடத்தையும் அனுப்பினர்; பன்னிரண்டு மாதங்களுக்குப் பிறகு, படைத்துறை வலிமை எதுவுமில்லாது மனவுறுதி மட்டும் பெற்றிருந்த ஸ்பார்த்திய அரசனுன ஆகிஸ் (Agis) மாசிடோனியாவின்மீது மீண்டும் போர் தொடுத்தபோது பெலோப்போனீஸ்ஸைத்தவிர வேறு எவரிடமிருந்தும் அவருக்கு உதவியோ, ஆதரவோ கிடைக்கவில்லை. ஏதென்ஸிலிருந்த சில எதிர்ப்புச் சக்திகள் அந்தச் சண்டையை ஆதரிக்க முற்பட்டன: ஆனுல் போசியன் (Phocion), டெமாடெஸ் (Demades) ஆகியோர் மட்டுமன்றி டெமாஸ்தெனீஸுங்கூட அறிவுடைமையுடன் மக்களை அடக்கினர். ஆகிஸ், மெகலோபோலிஸைத் தவிர மற்ற அர்க்காடியர்களையும், பெல்லெனியைத் (Pellene) தவிர மற்ற அக்கேயன்களையும், எலேயன்களையும் (Eleians) தம்மிடம் வந்து சேருமாறு தூண்டினுர். மேலும், அவரிடம் கூலிக்கமர்த்தப்பட்ட படைகளும் இருந்தமையின் அவர் படை பெருகியிருந்தது. அப்போது மாசிடோனிய ராஜப்பிரதிநிதி திரேஸில் எழுந்திருந்த கிளர்ச்சியை

அடக்குவதில் ஈடுபட்டிருந்தமையால், அவர் பெலோயன்னீஸஸை அடக்க வருமுன்னர் அவர் சில வெற்றிகளை அடைவது எளிதா யிருந்தது. கூட்டுப் படைகளின் முக்கிய நோக்கம் மெகலோ போலிஸைக் கைப்பற்றுவதுதான். அர்கேடியாவின் கூட்டுத் தலைநகரான அது அர்கேடியக் கூட்டரசுகளினுலேயே முற்றுகையிடப் படும் விந்தையான நிலையை எய்தியது. திரேஸில் இருந்த சூழ்நிலை களிலிருந்து விடுதலையுற்ற ஆண்டிபேடர், மெகாலாபோலிஸின் விடுதலைக்காகத் தெற்கு நோக்கி உடனே வந்தார்; கடுமையாகப் போரிட்டுக் கூட்டுப்படைகளை முறியடித்தார். ஆகிஸ் போரிட்டுக் கொண்டே வீழ்ந்தார். மேலும், எவ்வித எதிர்ப்பும் இல்லை. ஸ்பார்ட்டா அடைக்கலப் பொருள்களை அலெக்ஸாந்தருக்கு அனுப் பியது. அவன் தன்னுல் வெல்லப்பட்ட கிரேக்கர்களுக்கு அபய மொழிகள் அளித்தான்.

டாரியஸ் உயிரோடிருக்கும்வரை, கிரேக்கர்களில் பலர், விதி அலெக்ஸாந்தருக்கு எதிராகத் திரும்பினுலும் திரும்பும் என்று இரகசிய நம்பிக்கைகள் வைத்துக்கொண்டிருந்தனர்; பாரசீகத் துடன் கள்ளத்தனமாகத் தொடர்பு கொண்டிருந்தனர். ஆனுல் டாரியஸ் இறந்ததும் அவர்களுடைய நம்பிக்கைகள் அழிந்தன; கிரேக்க நாட்டில் பேரமைதி நிலவியது. அலெக்ஸாந்தர் இந்தியாவி லிருந்து திரும்பும்வரை அந்த அமைதி குலையும்படி எதுவும் நடக்க வில்லை. இதற்கிடையில் கிரீஸ், இரண்டு தலைமுறைகளாக எதிர் பார்த்துக் கொண்டிருந்த நிம்மதியை அனுபவித்தது. குடும்பத்தில் சுமையாக இருந்த குழந்தைகளுக்கு ஒரு களம் கிடைத்துவிட்டது. அவர்கள் ஆயிரக் கணக்கில், பத்தாயிரக் கணக்கில் ஆசியாவிற்குச் சென்றனர்; நிலையான இல்லங்களுக்காக அன்றி வாழ்க்கைத் தொழில்களை நாடியே சென்றனர்.

**ஏதென்ஸ்; டெமாஸ்தெனீஸின் கொள்கையியல்பு; அரசரைப் பற்றிய பேச்சுக்கள். கி.மு. 330.**

தீபெஸின் வீழ்ச்சிக்கும், அலெக்ஸாந்தரின் மரணத்துக்கும் இடைபட்ட பன்னிரண்டு ஆண்டுகள் ஏதென்ஸுக்கு இணையில்லாத நலம் விளைவித்த இடைவேளைக் காலமாயிருந்தன. பொதுக் காரியங்களைக் கவனிக்கும் பொறுப்பு, அக் காலத்தில் மிகச் சிறந்த நாட்டுப் பற்றுடையவர்களான போசியன், லைகர்கஸ் (Lycurgus) ஆகிய இருவரின் கையிலுமிருந்தது. டெமாடெஸ் என்ற நா வன்மைமிக்க சொற்பொழிவாளரின் ஆதரவுடன், அவர், எந்த விதமான முட்டாள்தனமான புது முயற்சிகளிலும் ஈடுபடாதவாறு மக்களை அறிவுறுத்திவந்தார். அமைதிக் கொள்கையை நிலைநாட்டும் அவசிய மேற்பட்டபோது அதை ஆதரிக்கக்கூடிய அளவுக்கு டெமாஸ்தெனீஸ் தெளிந்த அறிவினைப் பெற்றிருந்தார். அவர்

தன் பழைய எதிரியான ஏஸ்சினெஸைத் (Aeschines) திறம்பட முறியடித்து வென்றதைக் கண்டு போசியன் அவரிடம் பொருமை கொள்ளவில்லை. ஏனெனில், அந்த வெற்றி தனியார் ஒருவரைக் குறித்ததே யன்றி, அரசியல் முக்கியத்துவம் பெற்றிருக்கவில்லை. பிலிப்பின் மரணத்துக்குச் சிறிது முன்பு, டெமாஸ்தெனீஸ் நாட்டுக்குச் செய்த பொதுநலத் தொண்டுகளுக்காகவும், சிறப்பாக நகரச் சுவர்களைச் செப்பனிடுவதற்குச் சொந்தப் பணத்திலிருந்து செலவழித்த அவருடைய வள்ளல் மனப்பான்மைக்காகவும், நாடகக் கொட்டகையில் மக்கள் முன்னிலையில் தங்கக் கிரீடத்தினுல் அவருக்கு முடிசூட்டி, அவரைக் கௌரவப்படுத்த வேண்டும் என்ற தன் திட்டத்தை டெஸிபோன் வெளியிட்டார். கவுன்சில் அந்தத் திட்டத்தை ஏற்றுக்கொண்டு ஒரு தீர்மானத்தை நிறைவேற்றியது. ஆனல், ஏஸ்சினெஸ் இதைப் பிரேரணை செய்தவர்மீது ஒரு குற்றத்தைச் சுமத்தினுர்; செயல் முறையில் அத் திட்டம் அவரை கிராபே பரனேமோனுக்கு (Graphe Parenomon) வெளிப்படுத்திக் காட்டிவிடும் என்று கூறினுர். அதன் விளைவாகக் கவுன்சிலின் தீர்மானம் மக்கள் முன்பு கொண்டுவரப்படவில்லை. அந்த விஷயம் ஆறு ஆண்டுகளாக அப்படியே வைக்கப்பட்டிருந்தது. இரு கட்சியினரும் ஏதோ ஒரு முடிவை ஏற்றுக் கொள்ளாதவர்களாய் இருந்தனர். ஏஸ்சினெஸ் தமக்குச் செய்யப்பட்ட தீங்கைப்பற்றியே எண்ணிக் கொண்டிருந்தார். டெஸிபோன் அதை நீதி மன்றத்துக்குக் கொண்டு போகும்படி வற்புறுத்தினுர். மாசிடோனியாவை அடிப்படுத்த ஆகிஸ் எடுத்த முயற்சி பாழாகிய தன்மை, ஏஸ்சினெஸ் தன் எதிரியை எதிர்ப்பதற்குக் கடைசியில் ஊக்கமளித்தது. மிகச் சிறந்த திறமை பெற்ற ஒரு சொற்பொழிவில் ஏஸ்சினெஸ், டெமாஸ்தெனீஸின் பொது வாழ்க்கை பற்றி விளக்கி, அவர் ஒரு துரோகி என்றும், ஏதென்ஸின் எல்லாப் பேராபத்துக் களுக்கும் அவரே காரணமானவர் என்றும் வாதம் செய்து நிரூபித்தார். அற்புதமான சொற்பொழிவின் சிகரமாயிருந்த டெமாஸ்தெனீஸின் பதில், நீதிபதிகளின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது. ஏஸ்சினெஸ் அவர்களுடைய ஐந்தில் ஒரு பங்கு ஓட்டுக்களையும் பெறமுடியாமல், ஏதென்ஸை விட்டுச் சென்றுர்; பின் அரசியல் உலகிலிருந்தே மறைந்தார். அதீனிய நீதிபதிகளின் உள்ளத்தைக் கவர்ந்தது நாட்டு நலனில் அக்கறைகொண்ட டெமாஸ்தெனீஸ் அல்லர்; நா வீறுகொண்ட டெமாஸ்தெனீஸே என்று கூறுவது மிகையாகாது. முடியாட்சியைப்பற்றிய பேச்சைத் தவிரப் பல ஆண்டுகளாக டெமாஸ்தெனீஸ் அநேகமாகச் சொற்பொழிவு எதுவுஞ் செய்யவில்லை. முடியாட்சியைப்பற்றி நிகழ்த்திய அவருடைய சொற்பொழிவு, கிரேக்க சுதந்திரத்திற்கு அடித்த சாவுமணியாக வருணிக்கப்பட்டுள்ளது. பொதுமக்களறியும்படி

வேலை செய்வதில் பயனில்லை என்று அவர் எண்ணினர்; ஆனால், அவர் மறைமுகமாக வேலை செய்துகொண்டிருந்தார்.

### ஏஸ்சினெஸ் தன்காலத்து விந்தை நிகழ்ச்சிகள்பற்றிக் கூறுதல்

ஏஸ்சினெஸ் முடியாட்சியைப்பற்றிச் செய்த இரண்டு சொற்பொழிவுகளில் மிகவும் சுவையான பகுதி, அவர் பூவுலகின்மீது அண்மைக்காலத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல்களைப்பற்றிக் கூறியதாகும். அந்தத் திடுக்கிடத்தக்க மாறுதல்களைப்பற்றிக் கிரேக்கர்கள் என்ன நினைத்தார்கள்? உலகத்தின் நடைமுறை மாறிக்கொண்டு வருவதையும், கிரீஸில் மிக உயர்ந்த மதிப்பும் செல்வாக்கும் பெற்றவை, மற்ற இடங்களில் மதிப்பிழந்து வருவதையும் பற்றி எத்தகைய உணர்ச்சிகளைப் பெற்றனர் என்பவற்றை நாம் அறிய விரும்புகிறோம். அவர்களுடைய வியப்பைப்பற்றி ஏஸ்சினெஸ் பின்வருமாறு கூறுகிறார்:

'எல்லாவகையான விந்தை நிகழ்ச்சிகளும், சிறிதும் எதிர்பார்க்க முடியாத நிகழ்ச்சிகளும் நம்முடைய வாழ்நாட் காலத்தில் நடைபெற்று வருகின்றன. நம்மைப் பின்பற்றி வருபவர்களுக்கு நம்முடைய அசாதாரண அனுபவங்கள் அற்புதம் நிறைந்த கதைகளாகத் தோன்றலாம். ஆதாஸ் (Athos) வழியாகக் கால்வாய் வெட்டியவரும், ஹெல்லஸ்பாண்டைப் பாலத்தின்மூலம் இணைத்தவரும், கிரேக்கர்களிடமிருந்து நீரையும் நிலத்தையும் தட்டிக்கேட்டவரும், "சூரியன் தோன்றியதிலிருந்து மறையும்வரை உள்ள உலக முழுவதற்கும் நானே தலைவன்" என்று தன்னுடைய கடிதங்களில் துணிவுடன் எழுதி வந்தவருமான பாரசீக அரசர், இப்போது மற்ற ஆட்களின் மீது அதிகாரஞ் செலுத்தப் போராட்டம் செய்யவில்லை. ஆனால் தன் உயிரையும் உடலையுங் காப்பாற்றிக்கொள்ளப் போராடுகிறார். நம்முடைய அண்டை வீட்டுக்காரரான தீபெஸ்கூட, ஒரே நாளில், கிரேக்கர்களின் மத்தியிலிருந்தும் பிடிக்கப்பட்டார். கிரீஸின் கொள்கை பொய்ம்மையானதாயிருந்ததால் அவர் பிடிக்கப்பட்டது நியாயமானதே எனலாம். ஆனால், கிரேக்கர்கள் கடவுளின் செயலால் கண்ணிழந்திருந்தனரேயன்றி, மனித இனம் இழைத்த குற்றங்களால் இந்நிலையடையவில்லையென்று திட்டவட்டமாகக் கூறலாம். முன்பு கிரேக்கர்களின் தலைவர்களாகத் தங்களை உயர்த்திக் கொண்டிருந்த இரங்கத்தக்க லாசிடிமோனியன்கள் (Lacedaemonians) இப்போது அலெக்ஸாந்தரிடம் அடைக்கலம் அடைந்துள்ளனர், யாருக்குக் குற்றம் இழைத்தார்களோ, தெரியவில்லை, அதே அரசரிடம் இப்போது கருணைவேண்டிக் கெஞ்சுவதற்காகச் சென்றிருக்கிறார்கள். முன்பு எல்லோராலும் உதவிக்காக எதிர்நோக்கப்பட்டதாயும்; கிரேக்க உலகத்துக்குப் புகலிடமாயுமிருந்த நம்முடைய சொந்த

நகரம், இப்போது கிரேக்கர் தலைமைக்கு முயல்வதை நிறுத்திவிட்டது. ஏனெனில் சொந்த நாட்டின் நிலமே ஆபத்தில் இருக்கிறது.'

### மேற்கில் அத்தீனியச் செயற்பாடுகள்; பிலோநாட்டு ஸ்கெஒத்தெக்

மத்தியதரைக் கடலின் போக்குவரத்தைப் புதிய கால்வாய்களின் மூலம் திருப்பும்வரையிலும் மாசிடோனியப் பேரரசு நிலைக்கவில்லை. ஏதென்ஸ் இன்னும் பெரும் வாணிக வளச் செழிப்பை அனுபவித்து வந்தது. ஏதென்ஸ், எட்ரஸ்கன் என்ற கடற்கொள்ளையர்களிடமிருந்து தன்னைப் பாதுகாக்கும் தளமாக இருக்கும்படி, ஹட்ரியாடிக் துறையிலுள்ள ஒரு புதிய இடத்திற்கு ஒரு குடியேற்றத்தை அனுப்பி வைத்தது. எட்ரஸ்கன் கடற்கொள்ளையர் அந்தக் கடல்களில் வியாபாரஞ் செய்து வந்தவர்களுக்குப் பெருந் தொல்லை கொடுத்து வந்தனர். அமைதியே ஏதென்ஸின் அறிவிக்கப்பட்ட கொள்கையாக இருந்தபோதிலும், சுழன்றுவரும் சூழ்நிலைகளில், ஏதென்ஸ் ஒன்றுதான் கடல்மீது மேலாண்மை செய்யும் வாய்ப்பை மீண்டும் பெறலாம் என்று கருதி, போருக்கு ஆயத்தமாயிருப்பதைப் புறக்கணிக்காமல் இருந்தது. கடற்படைக்காகவும், புதிய கப்பல் தங்கும் துறைகளுக்காகவும் பணம் செலவிடப்பட்டது. கடற்படையில் ஏறத்தாழ 400 சிறு கப்பல்கள் இருந்தன. பிலோ என்ற கட்டடக் கலைஞரால், 'கப்பலின் துடுப்புக்களையும் சங்கிலிகளையும் தொங்க விடுவதற்காகக் கட்டப்பட்ட அழகான சலவைக் கல்லாலான கட்டடம்' ஜியா (Zea) என்ற துறைமுகத்தில் கட்டி முடிக்கப்பட்டது. அவ்வழியே செல்வோர்கள் அங்கு வைக்கப்பட்டிருக்கும் பொருள்களையெல்லாம் எளிதில் பார்த்துத்தெரிந்துகொள்ளும் பொருட்டு' அக்கட்டடத்தின் சுவர்கள், தூண்கள் இவை அமைக்கப்பட்டிருந்தன.

### லைகர்கஸின் நிதி மந்திரிசபை; கி.மு. 338-326; ஸ்டேடியம்; அபோலோ லிசியஸின் கோயிலில் உடற்பயிற்சி விளையாட்டுக் கூடம்; நாடகக் கொட்டகை; அவலச்சுவைக் கவிஞர்களின் ஆதார பூர்வமான பிரதிகள்

இந்தக் கடற்படைச் செலவிற்கு முக்கியப் பொறுப்பானவர் லைகர்கஸ் என்பவராவார். போசியனும், டெமாடெஸும் அசெம்பிளியில் மிகவும் செல்வாக்குள்ளவர்களாக இருக்கும்போது, நாட்டின் பொருள் இலாகா, அலெக்ஸாந்தர் தன்னைச் சரணடையும்படி வற்புறுத்திக் கேட்கும் அளவிற்கு மாசிடோனியாமீது பகைமை பாராட்டி வந்த, அரசியல் மகன் ஒருவனிடம் ஒப்படைக்கப்பட்டிருந்தமை, அக்காலத்தில் ஏதென்ஸில் நிலவியிருந்த உணர்ச்சிச் சிறப்புக்கு எடுத்துக்காட்டாய் உள்ளது. கடந்த சில ஆண்டுகளில் நிதியலுவலக அமைப்பில் முக்கியமான மாறுதல்கள் செய்யப்பட்டிருந்தன.

தியோரிக் நிதியின் தலைவராக யூபூலஸ் (Eubulus) விளங்கினர். ஆனால் இப்போது செலவினங்களின் கட்டுப்பாடு பொது நிதியின் அமைச்சர் ஒருவரின் கையில் இருந்தது. அவர் மக்களால் தேர்ந் தெடுக்கப்பட்டு ஒரு பான் எதீனிக் (Panathenaic) விழாவிலிருந்து அடுத்த விழா வரும்வரை நான்காண்டுகள் பதவி வகித்தார். லைகர்கஸ் இந்தப் பதவியில் பன்னிரண்டு ஆண்டுகள் இருக்கும்படி நியமிக்கப்பட்டார். முதல் நான்காண்டுகள் தன் சொந்தப் பெய ரிலும், அடுத்த எட்டாண்டுகள் அவர் தன் மகன், மற்றொரு பெயரள விலிருந்த அமைச்சர் ஆகியோரின் பெயரிலும் அப் பதவியை வகித்து வந்தார். எனினும், அவர் கவுன்சிலின் கருத்துப்படியே நடந்து வந்தார். ஆனால் ஆண்டுதோறும் கூடுகின்ற அந்த மகாசபையில் நிரந்தரமான, அனுபவமிக்க அமைச்சரின் செல்வாக்கு தவிர்க்க முடியாத வகையில் மிகப் பெரிதாயிருந்தது. அப் புதிய முறை பழைய முறையின் தெளிவான முன்னேற்றமாகவே காணப்பட்டது. வருமானத்தைப்பற்றிய துறை தகுதி வாய்ந்த நிரந்தரமான நாட்டுப் பற்றுள்ளவரின் கையிலேயே இருப்பது நல்லதாயிருந்தது. அத் துறை, உடன் வேலை செய்பவர்களினால் பாதிக்கப்படாமலும் இருக்க வேண்டும். அவருடைய வேலைக் காலமும் ஓராண்டு வரையறைக் குட் பட்டதாயிருக்கக்கூடாது. செயல் முறையில் அப் பதவி, பொதுப் பணித்துறையின் செயல்களையும் கவனித்துக் கொள்வதாயிருந்தது. லைகர்கஸின் அமைச்சவை புதியன கட்டும் முயற்சிகளில் பெயர் பெற்றது. அவர் இலிசஸின் தென் கரையில் பான் எதீனிக் ஸ்டேடி யத்தைக் கட்டினர். லிசியன் உடற்பயிற்சிக் களத்தை திரும்பக் கட்டினர். அந்தப் பயிற்சிக் களத்தில்தான் தத்துவ ஞானி அரிஸ் டாட்டில் தன்னுடைய காலை, மாலை உலாக்களை மேற்கொண்டார்; 'நிலையாகத் தங்காத' சீடர்களுக்குப் போதனை செய்துகொண்டிருந் தார். அந்தப் பயிற்சிக் கூடம் லைகாபெட்டஸ் மலைக்குக் கீழே நகரத் தின் கிழக்கில் ஓரிடத்தில் அமைந்திருந்தது. ஆனால் லைகர்கஸின் மிகவும் நினைவுகூரத்தக்க வேலை டையோனிசஸின் நாடகக் கொட்ட கையைத் திரும்பக் கட்டியதாகும். இப்பொழுது நாம் பார்ப்பதுபோல, அக்ரோபோலிஸின் செங்குத்தான சரிவுகளில் ஏறுவதற்காக சலவைக் கல்லாலான படிவரிசைகளைக் கட்டியவரும் அவரே. அவருடைய முயற் சியால் கட்டப்பட்ட கட்டடங்கள் பாழடைந்த பகுதிகளின் மத்தியில் இருந்தாலும், பிற்காலத்தில் புதியன இணைத்தும் மாற்றியும் கட்டப் பட்ட கட்டடங்களுக்கிடையில் இருந்தாலும், வேறுபடுத்தி அறியக் கூடியனவையாயுள்ளன. அவலச் சுவைக் கவிஞர்களான ஈச்லிஸ் (Aeschylus), சோபோக்ளஸ், யூரிப்பைடிஸ் என்ற மூவரின் சிலைகளை நாடகக் கொட்டகையில் அமைத்ததுடன் அவர்களுடைய நூல்கள் எவ்வாறு அரசாங்கத்தினால் பாதுகாக்கப்படவேண்டும், எவ்வாறு மக்களால் படிக்கப்படுவதற்காகப் பிரதி யெடுக்கப்படவேண்டும்

என்பதைப்பற்றியெல்லாம் அறிவித்து அவர்களுடைய நூல்களை ஆதார பூர்வமானவையாகச் செய்தார்.

**லாரியன் வெள்ளிச் சுரங்கத்தின் வேலை; க்ஸெனோபன் டிலேக் டிகல், கி.மு. 335.**

ஸ்பார்ட்டர்கள் தெசீலியாவைக் (Decelea) கைப்பற்றியபோது மூடப்பட்டு, பின்பு நான்காம் நூற்றுண்டின் முற்பகுதி முழுவதும் முதலீடும் முயற்சியுமின்றிப் புறக்கணிக்கப்பட்டிருந்த லாரியன் வெள்ளிச் சுரங்கங்கள் திறக்கப்பட்டு, அவற்றில் தீவிரமாக வேலை நடந்துவந்தது என்பதை, ஏதென்ஸின் செல்வ வளத்தையும், அதன் பெரிய பொதுநலச் செலவீட்டையும் பற்றிக் குறிப்பிடும்போது கூறுவது முக்கியமாகும். அச் சுரங்கங்கள் பெரும்பாலும் ஒரு புதிய கொள்கையின்படி மேற்பார்வை செய்யப்பட்டு வந்தன; அதாவது, அவை தனியார் கம்பெனிகளின்கீழ் இருந்தன. வரலாற்றாசிரியரான க்ஸெனோபன், புறக்கணிக்கப்பட்ட வருவாயின் மூலமான சுரங்கங்கள் பற்றி ஒரு சிறு நூலை எழுதியிருந்தார். அந்தத் தொழிலின் மறு மலர்ச்சி நேரடியாகவோ, மறைமுகமாகவோ, அவருடைய உரைகளின் செல்வாக்கின் விளைவாய்த் தோன்றியது என்பதை அறிவது சுவை பயப்பதாகும்.

**எபேபியின் (ephebi) நிறுவனம், கி.மு. 336.**

கோரோனியாவின் (Chaeronea) தோல்விக்குப் பிறகு ஏதென்ஸின் இளங் குடிமக்களைப் படைத்துறை வாழ்க்கையில் பயிற்சி பெறும்படி செய்யும் ஒரு புதிய முறை உருவானதைக் காட்டிலும், அக் காலத்தில் கவனத்தைக் கவரக்கூடிய செயல் வேறு எதுவுமில்லை. இளைஞர்கள் பதினெட்டு வயது முடிந்ததும் தங்களுடைய பிரதேசத்தி லிருந்த பதிவேட்டில் பெயர்களைப் பதிவு செய்துகொண்டனர். அவர் களுக்கு இரண்டாண்டுகள் பயிற்சியளிக்கப்பட்டது. அந்த இரண் டாண்டுகள்வரை ஏதென்ஸின் இளங்குடிமகன் எபே போஸ் (ephebos) என்று அழைக்கப்பட்டான். அவன் குறிப்பிட்ட சில வழக்குகளில் தவிர, வேறு எந்த வழக்குகளோடும் சம்பந்தப்பட்டு நீதிமன்றத்தில் வாதியாகவோ, பிரதிவாதியாகவோ தோன்றக் கூடாது.

எல்லா ஆட்டிக் எபேபிகளையும் பொதுவாகக் கண்காணிப்பது, ஒரு தளபதியிடம் (kosmetes) விடப்பட்டது. அவர் அதீனிய அசெம்பிளியால் தேர்ந்தெடுக்கப்பட்டவராவார். அவருக்குங் கீழ்ப் பத்து ஒழுங்குக் கட்டுப்பாட்டுத் தலைவர்கள் (Sophronistai) ஒவ்வோர் இனத்திற்கும் ஒருவராக இருந்தனர்; அந்த நிறுவனம் சமயத்தின் சமர்ப்பணத்தையும் பெற்றிருந்தது. பிறகு அவர்கள் மூனிச்சியா

விலும் கடற்கரையிலுமிருந்த காவல் வீடுகளில் ஓராண்டு வேலை பார்த்தனர். தனியான பயிற்சித் தலைவர்களிடமிருந்து ஒழுங்கான பட்டாள நடைமுறை ஆணையைப் பெற்றனர்; கனமான கருவிகள் தாங்கிக்கொண்டு செய்யும் பயிற்சிகளில் அத் தலைவர்கள் அவர்களுக்குப் பயிற்சி தந்தனர். வில், எறியீட்டி இவற்றை எய்வது எப்படியென்பதும், பீரங்கியைக் கையாள்வதும், சொல்லிக்கொடுக்கப் பட்டன. ஒழுங்குக் கட்டுப்பாட்டின் தலைவர்களால் கண்காணிக்கப் பட்டுவந்த கோட்டை விடுதிகளில், ஒவ்வோர் இனத்தின் எபேபிகளும் ஒன்ருயமர்த்து உண்டனர். முதலாண்டின் முடிவில் அவர்கள் நாடகக் கொட்டகையில் ஒரு கூட்டத்தினர் முன்பு தோன்றுவர்; போர்க் கலையில் தாங்கள் பெற்ற திறமையை எல்லோருமறியும்படி காட்டிப் பின்பு ஒவ்வொருவரும் அந் நகரத்திலிருந்து ஒரு கேடயம், ஒரு ஈட்டி இவற்றைப் பெற்றனர். இரண்டாவது ஆண்டு நாட்டின் எல்லைப்புறங்களில் ரோந்து வருவதிலும், சிறைகளைக் காப்பதிலுங் கழியும். கோட்டைக் காவல், ரோந்து வருதல் ஆகிய கடமைகள் எப்பொழுதும் அட்டிக்காவின் இளைஞர்களிடையே கொடுக்கப்பட்டு வந்தன. ஆனுல் அவர்கள் இப்போது முற்றிலும் புதிய ஒழுங்குக் கட்டுப்பாட்டில் ஒழுங்குற அமைக்கப்பட்டிருந்தனர்; ஸ்பார்ட்டாவின் கண்டிப்பான முறையும், ஆட்டிக்கின் மென்மையான முறையும் கலந்ததாக அந்தப் புதிய ஒழுங்குக் கட்டுப்பாடு இருந்தது. கூலிப் படை முறையின் நுழைவுகளைத் தடுக்கும் வகையாகவும், குடிமக்கட் படையின் வளர்ச்சியை ஓங்கச் செய்வதற்கும், திட்டமிட்டுச் செய்யப் பட்ட முயற்சியென்றே அது அநேகமாகப் பலருக்குந் தோன்றும். அந்தச் சமயத்திலிருந்து கறுப்பு மேலங்கியும், அகன்ற விளிம்புடைய தொப்பியும் கொண்ட எபேபிகளின் சீருடை அதீனிய வாழ்க்கையிலும், கலையிலும் ஓர் ஒயிலான இயல்பாக விளங்கத் தொடங்கியது.

கோரோனியப் பேராபத்துக்குப் பிறகு அதனுல் தூண்டப்பட்ட இந்த மறுமலர்ச்சி முழுதும் மதப் பண்பினைப் பெற்றிருந்ததும் குறிப்பிடத்தக்கது.

எடியோபுடாடுகளின் புரோகித குடும்பத்தைச் சேர்ந்த லைகர்கஸ் உண்மையிலேயே பக்திமிக்க மனிதராயிருந்தார்; அவர் தம் பக்தியின் ஈடுபாட்டைத் தம் ஆட்சி முறையிலும் வெளிப்படு மாறு செய்தார். கடந்த நூருண்டுகளாக ஏதென்ஸில் கடவுளைத் தொழுவதற்குப் பொது மக்கள் அவ்வளவு ஆர்வத்துடன் திரண் டெழுந்த காட்சியை முன்பு எப்போதும் பார்த்திருக்கமுடியாது. லைகர்களின் சகாப்தத்து இரண்டு முக்கிய நினைவுச் சின்னங்களான பான் எதீனிக் விளையாட்டரங்கும் (Stadion) டையோனிஸஸ் நாடகக் கொட்டகையும் மதச்சார்புடைய கட்டடங்களாய் இருந்தமை

எப்போதும் நினைவில் இருத்திக் கொள்ளவேண்டிய செய்தி யாகும்.

இவ்வாறு ஏதென்ஸ் அறிவுடைமையுடன் தன் பொருளாதார நலத்தைக் கவனித்துக்கொண்டது. அதற்குக் கடவுளின் கருணை யையும் நாடியது. ஏதென்ஸுக்கு நேர்ந்த ஒரே ஒரு பெருந் தொல்லை தானியப் பஞ்சமாகும். ஆனால், அலெகஸாந்தர் சூசா விற்குத் திரும்பிவந்தபோது இரண்டு நிகழ்ச்சிகள் நடந்தன; அவை கிரீஸின் பேரமைதிக்குப் பெரிதும் பங்கம் இழைத்து விட்டன.

**நாடு கடத்தப்பட்டோர், கி.மு. 324.**

நாடு கடத்தப்பட்ட ஏறக்குறைய 20,000 நபர்களும், மீண்டும் தங்கள் சொந்த நகரங்களுக்கே திரும்பி வருவதற்கான ஏற்பாடு களைச் செய்வதாக அலெக்ஸாந்தர் வாக்குறுதி யளித்தார். ஒலிம் பியன் விழாவில் கூடியிருந்த மாபெரும் கூட்டத்திற்கு அவர் நிகானோரை அனுப்பினர்; அவர் மூலம் நாடு கடத்தப்பட்ட குடி மக்களை மீண்டும் இராச்சியங்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று ஆணை அனுப்பினர். கட்சிகள் தம்முள் இணங்கிப்போவது நியாய மான, கௌரவம் தரத்தக்க முறையே; ஆனால் கொரிந்த் கூட்டர சுகளின் ஒப்பந்தப்படி, மாசிடோனிய அரசர் கூட்டரசுகளின் சொந்த விவகாரங்களில் தலையிட்டு, ஆணைகளை அனுப்புவதற்கு அதிகாரம் இல்லாதவராயிருந்தார். ஏதென்ஸ், ஈடோலியா ஆகிய இரண்டு நாடுகள் மட்டும் தடையெழுப்பின. ஏனெனில், அந்தக் கட்டளை வற்புறுத்தி நிறைவேற்றப்பட்டால், அவை தகாதமுறையில் பெற்ற இலாபங்களை இழந்துவிட நேரும். ஈடோலியன்கள் ஈனியாடேவை (Oeniadae) உரிமையாக்கிக் கொண்டிருந்தனர்; அதில் வாழ்ந்த அகேர்னனியன் சொந்தக்காரர்களை வெளியே துரத்தினர். அலெக்ஸாந்தரின் ஆணைப்படி நியாயமான குடிமக்கள் தங்கள் சொந்த நகரத்துக்குத் திரும்பி வந்துவிடுவர்; இடையிற் புகுந்தோர் இடமில்லாது தவிப்பர். சமோசில், ஏதென்ஸின் நிலைமையும் அப்படிப்பட்டதாகவே இருந்தது. விரைவில் சமோசியர்கள் தங்கள் நாடுகளுக்குத் திரும்பிவந்து விடுவர்; அங்கே குடியேறியிருந்த அதீனியர்கள் வெளியேற வேண்டும். அதனால் ஏதென்ஸும் ஈடோலியாவும் அவ்வாணையை எதிர்க்கத் தயாராயிருந்தன.

**அலெக்ஸாந்தரின் தெய்வத் தன்மை**

அதே சமயத்தில் அலெக்ஸாந்தரின் ஒரு விருப்பம் தெரிவிக்கப் பட்டு அது உடனே ஒப்புக்கொள்ளப்பட்டது. கிரேக்கர்கள், தன் தெய்வத்தன்மையை ஒப்புக்கொள்ளவேண்டுமென்று வேண்டினர்.

ஸ்பார்ட்டா(Sparta) அலட்சியமாக, 'அலெக்ஸாந்தர் விருப்பப்பட்டால் தன்னைக் கடவுள் என்று அழைத்துக்கொள்ளட்டும்.' என்று பதில் கூறியதாகச் சொல்லப்படுகிறது. அவருடைய வேண்டுகோளை மறுப்பதைப்பற்றி ஏதென்ஸில் எந்த அறிவுள்ள மனிதனும் எண்ணியிருக்கமாட்டான்; மிகத் தீவிர நாட்டுப்பற்றுள்ளவர்கள்கூட அவரை 'ஜியஸின் மகன் அல்லது போசீடாஸின் மகன் அல்லது அவரவர் விரும்பிய கடவுளின் மகன்' என்று அழைக்க அனுமதித்திருப்பர். கொரிந்தின் கிரேக்கர்கள் அலெக்ஸாந்தரைத் தங்கள் தலைவராயும், பாதுகாவலராயும் கருதுவாராயின், அவர்களிடையே அவருடைய நிலையும் உண்மையில் அதுவாகத்தான் இருந்தது. அவருடைய தெய்வத்தன்மையை அதிகாரபூர்வமாக ஒப்புக்கொள்வதில் எவ்வகையான முரண்பாடும் ஏற்படாது. ஹோமரிக் அரசர் 'மக்களால் கடவுளாகவே மதித்துப் போற்றப்பட்ட' நாளிலிருந்து, மதிப்புமிக்க பேரரசர் அல்லது தலைவரைக் கடவுளாகக் கருதிப் போற்றுவது கிரேக்கர்களின் செவியில் குற்றமானதாகவோ, அயல் நாட்டுப் பாணியாகவோ படுவதற்குக் காரணமில்லை. லைசாண்டருக்குத் (Lysander) தெய்வத்திற்குரிய மரியாதைகள் அளிக்கப்பட்டன; அக்காடமியைச் சார்ந்த சீடர் ஒருவர் தம்முடைய தலைவர் பிளேட்டோவிற்கு ஒரு பலி பீடத்தை நிறுவினர். அதனால் கிரேக்கர்கள் அலெக்ஸாந்தரின் விருப்பத்துக்கு இணங்குவதால் அவர்கள் பொருந்தாத நெறியில் செல்வதாக எண்ணுவதற்கு இடமில்லை.

## 6. ஹர்பாலஸின் கதையும், கிரேக்கக் கிளர்ச்சியும்

கிரீஸில் ஹர்பாலஸ்; வசந்தகாலம், கி.மு. 324; ஏதென்ஸில் அவருக்கு வரவேற்பு; அவருடைய மரணம்.

இதற்கிடையே, அலெக்ஸாந்தரின் பேரரசு வழுக்கும் அஸ்திவாரங்களின்மீதே நிறுவப்பட்டுள்ளது என்று சில தேச பக்தர்கள் நம்புமாறு ஒரு நிகழ்ச்சி நடந்தது. ஹர்பாலஸ் ஐயாயிரம் பேரடங்கிய நிலைப்படை, ஒரு கூலிப்படை, முப்பது கப்பல்கள் இவற்றுடன், தன் தலைவருக்கு எதிராக ஒரு கிளர்ச்சியைத் தூண்ட ஆட்டிகா கடற்கரையின்று வந்தார். முன்பு தானியக் கொடை அளித்ததன்மூலம், ஏதென்ஸின் குடியுரிமையை அவர் பெற்றிருந்தார். ஆனல் இந்த வேடத்தில் வந்த அவரை, அதீனியர்கள் அறிவுடைமையுடன் தங்கள் நகரில் தங்க அனுமதி தரவில்லை. அவர் துணிகரச் செயல் வீரர்களுக்கு என்றும் புகலிடமாயிருந்த கேப்-டேனரான் என்ற இடத்திற்குக் கப்பலில் சென்று, தன்னுடைய ஆட்களையும் கப்பல்களையும் அங்கே விட்டுவிட்டு, மீண்டும் சுமார்

700 தாலந்துகளுடன் ஏதென்ஸுக்குத் திரும்பினர். படைக்கலம் தாங்கிய படையுடன் வராததால் இப்போது அவர் ஏற்றுக்கொள்ளப் பட்டார். ஆனல் சில நாட்களில் மாசிடோனியாவிலிருந்தும், அலெக்ஸாந்தரின் மேற்கு ஆசியாவின் நிதியமைச்சரான பிலோக் ஸனஸிடமிருந்தும் அவர் சரணடைய வேண்டுமென்று வேண்டி ஒரு செய்தி வந்தது. நாட்டிலிருந்து ஓடிவந்துவிட்ட ஒருவரின் செல்வப் பொருள்களையும், திருட்டுச் சொத்தையும் பாதுகாப்பது போர் அறத்தின்பாற்பட்டதே. ஆனல் டெமாஸ்தெனீஸின் திட்டப் படி ஒரு தந்திரச்செயல் மேற்கொண்டனர். அவர்கள் ஹர்பாலஸின் செல்வங்களை அபகரித்துக்கொண்டு, அலெக்ஸாந்தரால் இதற்கென அனுப்பப்பட்ட அதிகாரிகளிடம் அவரை ஒப்படைத்துவிடப் போவ தாகக் கூறினர்; ஆனல் பிலோக்ஸனஸிடமோ, ஆன்டிபேடரிடமோ அவரை ஒப்படைக்க மறுத்தனர் விரைவில் ஹர்பாலஸ் தப்பியோடி டேனரானுக்குத் திரும்பினர்; அதன்பிறகு சில நாளிலேயே அவர் அவருடைய துணிகரச் செயல் தோழர்களுள் ஒருவராலேயே கொலை செய்யப்பட்டார்.

**ஹர்பாலஸுக்கு ஏற்பட்ட பழி; இலஞ்சமும் கையாடலும்; டெமாஸ்தெனிஸ் இருபது தாலந்துகளைப் பெறுதல்; டெமாஸ் தெனிஸ் இகழ்ந்துரைக்கப்படல்.**

திருட்டுச் சொத்து, அக்ரோபோலிஸில் இதற்கெனத் தனியாக நியமிக்கப்பட்ட கமிஷனர்களின் பொறுப்பில் ஒப்படைக்கப்பட்டது. அக் கமிஷனர்களுள் டெமாஸ்தெனீஸும் ஒருவர். ஹர்பாலஸ் சுமார் 700 தாலந்துகளைக் கொண்டுவந்திருந்தார் என்பது ஒரு செய்தி மூலம் அறியப்பட்டது. ஆனல் டெமெஸ்தெனீஸும் அவருடைய தோழர்களும் அரசாங்கப் பதிவேட்டில் அதைப் பதிவு செய்யவோ, எண்ணிக்கையைக் குறிக்கவோ எப்படியோ தவறி விட்டனர். திடீரென்று 350 தாலந்துகள்தாம் அக்ரோபோலிஸில் இருக்கின்றன என்று கண்டுபிடிக்கப்பட்டது. செல்வாக்குமிக்க அரசியல் வாதிகளால் மற்ற 350 தாலந்துகளும், கோட்டையில் பணம் வைக்கப்படுமுன்பு இலஞ்சமாகப் பெற்றுக்கொள்ளப்பட்டன என்ற குற்றத்தை உடனே நாட்டில் பரப்பினர். எதிர்க்கட்சியைச் சேர்ந்தவர்களின்மீது சந்தேகம் தோன்றியது. உதாரணமாக, டெமாடெஸ், டெமாஸ்தெனீஸ் இவர்கள்மீது ஐயம் தோன்றியது. ஆனல் இலஞ்சம் வாங்கியதாகக் குற்றம் ஒருபுறமிருக்க, டெமாஸ் தனீஸ் தன் கடமையில் அலட்சியமாக இருந்துவிட்டதாகப் பழியும் சுமத்தப்பட்டது. அரசாங்கப் பொருளைப் பாதுகாக்கும் பொறுப்பு அவர் கையில் இருந்தது; ஏதென்ஸ் அப் பொருளை அலெக் ஸாந்தருக்கு ஒப்படைக்கும் பொறுப்பைப் பெற்றிருந்தது. அலெக்

ஸாந்தர் விசாரணை செய்யுமாறு கூறினர். அதன்படி மக்கள் அரியோபாகஸ் கவுன்சிலை விசாரணை நடத்துமாறு கேட்டுக்கொண்டனர். பிலோக்ஸஸை, தன் கைக்கு வந்திருந்த ஹார்பாலஸின் கணக்குப் பதிவேட்டைக் கொண்டுவந்து கொடுத்தார். அந்தச் சான்றின்படி 700 தாலந்துகள் இடைக்காலப் பொருளாக அக்ரோபோலிஸில் கொடுத்துவைக்கப்பட்ட தென்பது நிருபிக்கப்பட்டது. பிறகு, வேறொன்றும் எழுதப்படவில்லை. சில அத்தீனியர்கள் இலஞ்சம் வாங்கியதாகவும் காட்டப்பட்டது. ஆனால் டெமாஸ்தெனீஸ் அவர்களுள் ஒருவராக இல்லை. மற்ற 350 தாலந்துகள் எப்படி மறைந்து போயின என்பதற்குப் போதிய சான்று தேவைப் பட்டது; ஆனால் அரியோபாகஸ் நீதி மன்றம், தலைமையான நாட்டுப்பற்றுள்ள அரசியல் வாதிகள் போதிய அளவு எண்ணிக்கை யுடைய தாலந்துகளைப் பெற்றுவிட்டனர் என்று நம்பியது. அம் மன்றத்தின் அறிக்கையில் டெமாஸ்தெனீஸ் இருபது தாலந்துகளைப் பெற்றதாகக் கண்டிருந்தது. அவருக்கு எதிராகச் சான்றுகள் மறுக்கமுடியாதவையாயிருந்தன. ஏனெனில் அவரே தன் குற்றத்தை ஒப்புக்கொண்டார். இருபது தாலந்துகளையும் பின்னல் திருப்பிக் கொடுத்துவிடலாமென்று தியோரிக் நிதியில் சேர்த்து விட்டதாகவும் தந்திரமான ஒரு சாக்கைக் கூறினர். ஆனால் அதீனிய நாட்டுக்கு அவர் கொடுக்கவேண்டிய கடனுக்காக, போதிய அதிகார ஆணையின்றி, அலெக்ஸாந்தரின் பணத்திலிருந்து கொடுத்தது எப்படிப் பொருத்தமாகும்? அவர் தனக்காக அன்றிக் கட்சியின் நன்மைக்காகவே அப் பணத்தை எடுத்துக்கொண்டார் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த ஊழல்களிலிருந்து அவருடைய கட்சி விடுபடுவது மிகவும் இன்றியமையாததாகும். அதனால், டெமாஸ் தெனீஸுக்குப் பப்ளிக் பிராசுக்கூட்டராக ஹைபெரீடெஸ் என்பவர் தோன்றினர். அவருடைய பேச்சின் பெரும்பாலான பகுதிகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன; மேலும் மற்ற பிராசிக்கூட்டர் களுக்காக டினர்க்கஸ் என்ற சாதாரண எழுத்தாளர் ஒருவர் எழுதி வைத்த அவருடைய மற்றொரு பேச்சின் முழு வடிவமும் நமக்குக் கிடைத்துள்ளது. டெமாஸ்தெனீஸ்மீது இரண்டு வகையான குற்றங்கள் சுமத்தப்பட்டன. ஒன்று அவர் பணத்தை எடுத்துக் கொண்டார் என்பது. இரண்டாவது, அவர் வேண்டுமென்றே அரசாங்க வைப்புத் தொகைக் கணக்கைப் பதிவு செய்யாமல் இருந்த துடன், அப் பணத்திற்குக் காவலாக வைக்கப்பட்ட மற்றவர்களும் பதிவு செய்யாமல் கவனமின்றி இருக்கச் செய்தார் என்பது. இரண்டாவது குற்றம் ஒன்றிற்காகவே அவருக்குக் கடுமையான தண்டனையைக் கொடுக்கலாம்; அவருடைய நடத்தை அலெக்ஸாந் தரின் முன்பு அந்த நகரை எக்கச் சக்கமான நிலையில் வைத்து விட்டது என்பதைக் கருதும்போது நீதிபதிகள் அளவுக்கு

அதிகமான கடுமையுடன் இருந்தார்கள் என்று சொல்லமுடியாது. அவருக்கு ஐம்பது தாலந்துகள் அபராதம் விதிக்கப்பட்டது. அதைக் கட்டமுடியாததால் அவர் சிறையிலடைக்கப்பட்டார்; ஆனால் தற்போது தப்புவதற்கு முயன்றார். தன் நாட்டுக்கு மதிப்புக்குறைவு ஏற்படாதவகையில் ஓர் அரசியல்வாதி இலஞ்சம் வாங்குவது கிரீஸின் கண்ணோட்டத்தில் ஒரு சிறு குற்றமாகவே கருதப்பட்டது. பொதுமக்களின் கருத்தில், இந்த மறைமுகமான கையாடல் டெமாஸ்தெனீஸின் நேர்மைப் பண்பிற்குச் சிறிது பங்கம் விளைவித்துவிட்டது. இலட்சக்கணக்கானவர்கள் வந்து தூண்டினாலும் அப்படிப் பணத்தை எடுத்துக்கொள்ளாத வன்மை படைத்த நிசியாஸ், போசியான் போன்றவர்களின் வரிசையில் வைத்து அவர் எண்ணப்படுவதற்கில்லை. அவர் ஊழல் ஒன்றும் இல்லாதவர் என்று யாரும் நினைத்துக்கொண்டிருக்கவில்லைதான். ஆனால் இந்த இரண்டு சூழ்நிலைகளும் அவருடைய நிலைமையைப் பெரிதுபடுத்தி விட்டன. டெமாஸ்தெனீஸ் எடுத்துக்கொண்ட பணம் திருட்டுச் சொத்து; அதை ஏதென்ஸ் அலெக்ஸாந்தரிடமே ஒப்படைத்துவிட வேண்டும். மேலும் அவர் அப்பொருளின் பாதுகாப்புக்கென நியமிக்கப்பட்ட கமிஷனர்களில் ஒருவர். இவற்றால் அவருடைய செய்கை சாதாரண ஓர் ஊழலாகக் கருதப்பட முடியாது.

**மாசிடோனியாவிற்கு எதிராகக் கிரேக்கக் கிளர்ச்சி, கி.மு.323; ஆன்டிபேடர் லாமியாவில் முற்றுகையிடப்படல். கி.மு. 323-2; கிரேன்னான் யுத்தம், கி.மு. 332, ஆகஸ்டு.**

அலெக்ஸாந்தர் உயிரோடு இருந்திருந்தால், அதீனியர்கள் சாமோஸைத் தாங்களே வைத்திருப்பதற்கு அனுமதி கொடுக்கும்படி அவனைத் தூண்டியிருப்பர்; ஏனெனில் அவன் எப்போதும் ஏதென்ஸிடம் தாராள மனப்பான்மையுடன் இருந்தான். அவன் இறந்த செய்தி வந்தபோது ஏதென்ஸின் மக்கள் அதை நம்ப மறுத்தனர். 'அவர் உண்மையில் இறந்திருந்தால், உலகம் முழுவதிலும் அவருடைய பிணத்தின் நாற்றம் வீசியிருக்கும்' என்று டெமாடெஸ் என்ற சொல்லேர் உழவர் அழுத்தமாகக் கூறினார். ஏதாவது ஆபத்து நேருமென்ற சிறு நம்பிக்கையில் தேசபக்தர்கள் மனக்கோட்டை கட்டிக் கொண்டிருந்தனர். எல்லாவற்றைக் காட்டிலும் மிகப் பெரிய பேராபத்து நேர்ந்துவிட்டது. அலெக்ஸாந்தரின் அதிகாரத்தை எதிர்ப்பது ஒரு பைத்தியக்காரத்தனமாகவே கருதப்பட்டது; ஆனால் அவருடைய மரணத்திற்குப் பிறகு ஏற்பட்ட நிலைபெறாத நிலையில் சுதந்திரத்தை நிறுவுவதற்காக முற்படுவது அவசரக் குடுக்கையின் செயலாகத் தோன்றவில்லை. ஏதென்ஸ் மாசிடோனியாவிலிருந்து கிளர்ச்சி செய்தது; ஈடோலியாவும் வடக்குக் கிரீசிலிருந்த மற்ற பல நாடுகளும் அதனுடன் சேர்ந்து

கொண்டன. அலெக்ஸாந்தரால் வேலையிலிருந்து நீக்கப்பட்ட எட்டாயிரம் வீரர்கள் கூலிப் படைகளாக அதனுடன் சேர்ந்தனர். அவர்களுள் ஒரு படைத் தலைவரான லியோஸ் தெனீஸ் என்ற அதீனியர், தெர்மாபைலேயை வசப்படுத்திக் கொண்டார். அந்தக் கணவாய்க் கருகில் கிரேக்கக் கூட்டுப் படைகள் ஆன்டிபேடரிடம் சிறிது வெற்றிகொண்டது; ஆண்டிபேடர் தம்முடைய படைகளை ஒன்ருகத் திரட்டியவுடனே தெற்குப் பக்கமாக வந்திருந்தார். தெஸ்ஸாலியக் குதிரைப்படை அவரைக் கைவிட்டது. பியோஷியா வைத் (Boeotia) தவிர வட கிரீஸிலிருந்த வேறு எந்த நாடும் மாசிடோனியாவிற்கு விசுவாசத்துடன் இருக்கவில்லை. அத்த ராஜப் பிரதிநிதி வலிமைவாய்ந்த குன்று நகரமான லாமியாவில் போய் அடைந்துகொண்டார்; அந்நகரம் தெர்மோபைலே கணவாயில் லுத்ரைஸ் என்ற இடத்தில் இருந்தது. அங்கே அவர் லிபோஸ் தெனீஸ் என்பவரால் முற்றுகையிடப்பட்டார். இந்த வெற்றிகள் பெலோப் போனிஸஉக்குச் சில ஆதரவாளர்களைத் தேடித்தந்தது. கிரேக்கர்கள் கடலில் வன்மை மிக்கவர்களாக இருந்திருப்பின், சிறிது காலத்துக்காவது அந்த ஆதரவாளர்களால் பெருவெற்றி கிடைத் திருக்கும். ஆனல் அண்மைக் காலத்தில் கடற்படையமைப்பில் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டதும், ஏதென்ஸ் 170 போர்க் கப்பல் களுக்கு மேல் மிதக்கவிட முடியாமல்போனது வியப்பான செய்தியே. மாசிடோனியர்கள் 240 போர்க் கப்பல்களை விட்டனர். வீரமிக்க தளபதியான லியோஸ்தனீஸஉக்கு யுத்தக் கவுன்சில் தடைகளை விதித்தது. அக் கவுன்சிலில் பல்வேறு கூட்டரசுகள் கலந்து கொண்டிருந்தன. அந்நிலைமை பாரசீகப் படையெடுப்புக் காலத்தை நமக்கு நினைவூட்டுகிறது. ஆனல் முற்றுகையிடும் போது, ஒரு பெருங்கல் அவருடைய உயிருக்கு ஊறு விளைவிக்கா திருந்திருப்பின், கூட்டுப் படைகளுக்காகப் பல செயல்கள் செய்யப் பட்டிருக்கும். வசந்த காலத்தில் ஹெல்லஸ் பாண்டைன் பிரிக்யாவின் கவர்னரான லியான்னுடஸ் ஒரு படையின் தலைமை பூண்டு வந்தமை லாமியா முற்றுகையை எழுப்பியது. கிரேக்கர்கள் புதிய படை ஆண்டிபேடருடன் சேர்த்துகொள்ளு முன்பு, அதை எதிர்ப்பதற்காகத் தெஸ்ஸாலிக்குச் சென்றனர். சண்டை நடந்தது. அதில் கிரேக்கர்களின் கை மேலோங்கியது; லியோன்னுடஸ் போரில் காயமுற்று இறந்தார். மறுநாள் ஆன்டிபேடர் தோல்வி யுற்ற படையுடன் சேர்ந்து மாசிடோனியாவிற்குத் திரும்பிச் சென்ருர். கிழக்கிலிருந்து வந்துகொண்டிருந்த கிரேடெரஸை அங்கே எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். கிரேடெரஸ் வந்தபோது இருவரும் சேர்ந்து தெஸ்ஸாலிக்குச் சென்றனர். கிரேனன் (Crannon) என்ற இடத்தில் போர் தொடங்கினர்; அப் போரில் இரு தரப்பினருக்கும் சேதம் மிகக் குறைவே. மாசிடோனியர்களின்

கை சிறிது ஓங்கியிருந்தது. அந்தச் சண்டை கிரேக்கர்களின் தோல்வியில் முடிந்தது. கிரேக்கர்கள் தங்கள் போராட்டத்தைத் தொடர்ந்து நடத்தாமைக்கு முக்கிய காரணம் கிரேன்னுனில் அவர்கள் பெற்ற தோல்வியன்று ; ஆனல் அவர்களுக்குள் ஒற்றுமையில்லாமையும், தாங்கள் முழுதும் நம்பிக்கை வைப்பதற்குரிய ஒரு தலைவர் இல்லாமையுமே ஆகும். கடைசியில் ஒவ்வொரு நாடும் தனித்தனியாகச் சமாதான ஒப்பந்தம் செய்துகொள்ள நேர்ந்தது.

**ஹைபேரீடேஸின் மயானப் பேச்சு ; ஏதென்ஸின்மீது சுமத்தப்பட்ட ஒப்பந்த விதிகள்.**

இந்தப் பயனில்லாத போரில் இறந்தவர்களைக் குறித்துக் கையறு நிலையில் ஒரு சொற்பொழிவு ஆற்றினர். 'தான் மேற்கொண்டவற்றில் எல்லாம் வெற்றி கொண்டார் ; ஆனல் விதியின் பிடியினின்று அவரால் தப்ப முடியவில்லை.' என்று லியோஸ்தெனீஸுக்கு உரிய சிறப்புக்களை எடுத்துக் கூறினர். லியோஸ்தெனீஸ் சிறப்புக்களைச் சிறிது மிகைபட எடுத்துக் கூறினரா என்பதைப் பற்றிச் சொல்ல நமக்கு உரிமையில்லை. அச் சொற்பொழிவில் ஒரு பகுதி வரலாற்றுப் பாங்கை உண்மையில் சிதைப்பதாயிருந்தாலும், தேசபக்தர்களின் உணர்ச்சியை விளக்குவதில் திறம் பெற்றிருக்கிறது. " நரகில் வீழ்த்து நாம் நைந்து துன்புற நேர்ந்தாலும், நம்முடைய இறந்த படைத் தலைவருக்கு வலது கையை உயர்த்துபவர்கள் இங்கு யார் இருக்கிறார்கள் ? ட்ராய் நகருக்கு எதிராகப் போர்ப் படைகள் தாங்கிய அந்த அரை-தெய்வங்களால் அவர் வியப்புடன் வரவேற்கப்படுவார் என்று நாம் நினைக்காமலிருக்க முடியுமா ? ஆம், கிரேக்க நாட்டுக்கு விடுதலை நல்கித் தங்கள் பெயரின் புகழை நிலைநாட்டிய மில்டியாடெஸ் (Miltiades), தெமிஸ்டோக்ளெஸ் (Themistocles) ஆகியோர் அங்கே இருந்து அவரை வரவேற்பார்கள் என்று கருதுகிறேன் ".[1]

ஆன்டிபேடர் போயோடியோவில் முன்னேறிச் சென்று ஆட்டிகாவின்மீது படையெடுக்கத் தயாராயிருந்தபோது ஏதென்ஸ் அடிபணிந்தது. தன்னுடைய அதிகாரத்தை மீண்டும் பெறுவதற்காகச் செய்த முயற்சிகளில், ஏதென்ஸ் நிறையச் செலவிட்டது. அலெக்ஸாந்தரைப் போன்றவர் அல்லர் ஆன்டிபேடர். மாசிடோனின் அரச குடும்பத்திற்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட திறமை வாய்ந்தவராய் அவர் விளங்கினர். ஆனல், அலெக்ஸாந்தரைப் போலக் கிரேக்கப் பண்பாட்டில் அனுதாபம் உடையவராய் அவர் இருக்கவில்லை. ஏதென்ஸின் பழைய மரபுகளையும், நினைவுகளையும் பற்றிய இரக்கச் சிந்தனை அவருடைய இதயத்தில் காணப்படவில்லை.

[1] பேராசிரியர் ஜேப்ப்ன் (Jebb) மொழிபெயர்ப்பு.

வலிமையான கண்டிப்பான நடவடிக்கைகள் மேற்கொண்டாலன்றித் தாம் இப்போது அடக்கிவிட்ட கிளர்ச்சி மீண்டும் எழாமல் தடுக்க முடியாதென்றும், மாசிடோனியா அந்தக் கிளர்ச்சியிலிருந்து பாது காக்கப்பட முடியாதென்றும் கருதினர். அதனல் அவர் மூன்று நிபந் தனைகளை விதித்தார். போசியனும், டெமாடெஸும் அவற்றை ஏற்றுக் கொள்ளவேண்டிய நிர்ப்பந்தத்துக் குள்ளாயினர்; அவையாவன: சொத்துத் தகுதிக்கேற்ப ஜனநாயக அமைப்பு மாற்றியமைக்கப்பட வேண்டும்; முனிச்சியாவில் மாசிடோனியக் கோட்டைக் காவல் படை வைத்திருக்கப்பட வேண்டும்; டெமாஸ்தெனீஸ், ஹைபெரீடெஸ் இவர்களும், இவர்களுடைய நண்பர்களும் ஒப்படைக்கப்பட வேண்டும் என்பனவாகும்.

**டெமாஸ்தெனீஸின் மரணம்; கி.மு. 322, அக்டோபர்.**

பெல்லோப்பெனீஸஸில் உள்ள கூட்டுப் படைகளின் நோக் கத்தை நிறைவேற்றுவதற்காக டெமெஸ்தனீஸ் தன் சொல் வன்மையைப் பயன்படுத்தினர். அவருடைய முயற்சிகளும் வீண் போகவில்லை; அவர் ஏதென்ஸுக்குத் திரும்பிவரும்படி அழைக்கப் பட்டார். அந்த நகரம் அடிபணிந்தவுடனே அவரும், மற்றச் சொற் பொழிவாளர்களும் ஓட்டம் பிடித்தனர். ஹைபெரீடெஸ் இரண்டு தோழர்களுடன் ஈஜினுவிலுள்ள ஈகஸ் (Aeacus) கோயிலில் புகல் வேண்டினுர். அங்கிருந்து அவர்கள் ஆன்டிபேடரிடம் எடுத்துச் செல்லப்பட்டுக் கொல்லப்பட்டனர். டெமாஸ்தெனீஸ் கலௌரியாத் தீவிலிருந்த போசீடான் கோயிலுக்கு ஓட்டம் பிடித்தார். ஆன்டி பேடரின் தூதர்கள் அவர்முன் தோன்றி வரும்படி அழைக்கும்போது, ஒரு கதையின்படி, ஒரு பேனுவில் மறைத்து வைத்திருந்த விஷத்தை எடுத்து விழுங்கிவிட்டார். இவ்வாறு கொலையாளின் கையில் விழாமல் அவர் தன்னை விடுவித்துக்கொண்டார்.

**ஏதென்ஸில் சொத்துத் தகுதி புகுத்தப்படல்-£ 80.**

மாசிடோனியத் தளபதியின் ஆணைப்படி மேற்கொள்ளப்பட்ட அரசியலமைப்பு முறை ஒரு முன்னேற்றப் படி என்று அரிஸ்டாட்டி லினுல் மதிப்பிடப்பட்டிருக்கும். நிறுவனங்கள் மாற்றப்படவில்லை; ஆனுல் ஜனநாயகம் ஒரு 'அரசாட்சியாக' (Polity) அல்லது குறுகிய ஜனநாயகமாக மாற்றப்பட்டது. வாக்குரிமை வரையறுக்கப்பட்டது; இவ் வரசாட்சி முறையைக் கொண்டு வருவதற்குத் தெராமெனஸ் (Theramenes) போன்ருேர் முயன்று வந்தனர். 2000 டிராக்மாவுக்குக் குறைந்த வருமானமுடைய எல்லாரும் தங்கள் குடிமக்களுரிமைகளை இழந்தனர். இதனுல் குடிமக்கள் பட்டியல்களிலிருந்து 12,000 பெயர் கள் அழிக்கப்பட்டன என்று சொல்லப்படுகிறது. 9,000 குடிமக்களே எஞ்சியிருந்தனர். இவ்வாறு வாக்குரிமை முதலிய உரிமைகள் பறிக்கப்பட்ட எண்ணிலாத ஏழை மக்கள் ஆட்டிகாவை விட்டு நீங்கித்

த்ரேசில் குடியேறினர். அங்கே ஆன்டிபேடர் அவர்களுக்கு நிலம் கொடுத்தார். அவ்வாறு குடியேறியவர்களில் சாமோசிலிருந்து வந்த வர்களும் சிலர் இருக்கலாம். அவர்கள் அந்தத் தீவை விட்டுச் செல்லும்படியும், தகுதியான உரிமையாளர்களுக்கு இடந்தரும்படியும் வற்புறுத்தப்பட்டனர்.

## 7. அரிஸ்டாட்டிலும் அலெக்ஸாந்தரும்

**கி.மு. 367; அரிஸ்டாட்டில் கி.மு. 384-3 இல் பிறத்தல்; பெல்லா விற்கு அழைக்கப்படல்; கி.மு. 343-2; கி.மு. 355; மரணம் கி.மு. 322.**

அவர் காலத்தில் வாழ்ந்த, அறிவுலகையே இயக்கும் மேதைமை பெற்றிருந்த மற்றொருவருடன் தொடர்பு கொள்ளும் சந்தர்ப்பம் தற் செயலாக அலெக்ஸாந்தருக்கு ஏற்பட்டது. அரிஸ்டாட்டிலின் தந்தை இரண்டாம் அமின்டாஸ் என்பவரின் அரசவை மருத்துவராக இருந்தார். அரிஸ்டாட்டிலும் தந்தையின் தொழிலையே மேற்கொள்ள வேண்டியவராயிருந்தார். தமது பதினேழாம் வயதில் அவர் ஏதென் ஸுக்குச் சென்றார். அங்கே ப்ரோக்ஸனஸ் (Proxenus) என்பவரின் பாதுகாப்பிலிருந்தார். ஒலிம்பியாவில் அலெக்ஸாந்தரின் கட்டளை களை நாடறியச் செய்த நிகானோர் (Nicanor) என்பவர், ப்ரோக்ஸ னஸின் மகனுவார். பின்பு அரிஸ்டாட்டில் அவருக்குத் தன் ஒரே மகளைத் திருமணஞ் செய்து கொடுத்தார். முதலில் அரிஸ்டாட்டில் இசோக்ரடீஸ் (Isocrates) பள்ளியில் பயின்றார்; ஆனால் பிளேட்டோ சிசிலிக்குத் திரும்பி வந்தபோது அரிஸ்டாட்டில் அவருடைய தத்துவ ஞான இலட்சியக் கொள்கையினால் ஈர்க்கப்பட்டார். அக் கொள்கை அவருக்குச் 'சிந்தனை வாழ்க்கையை' (Life of Speculation) கொடுத் தது. அது அவருடைய அனுபவ முதிர்ச்சியின் விளைவால் தோன் றியது என்று கருதுகிறார். அவ் வாழ்க்கைதான் பூரணமான மகிழ்ச்சி யைக் கொடுக்கக்கூடியது என்றும் கருதுகிறார். பிளேட்டோவின் மரணத்துக்குப் பிறகு அவர் ஏஜியன் (Aegean), அஸ்ஸோஸ், மிடிலெனே கடற்கரைகளின் வடகிழக்குப் பகுதிகளில் சில ஆண்டு களைக் கழித்தார். பிறகு இளவரசருக்குக் கல்வி கற்பிக்குமாறு அவரைப் பிலிப் மன்னர் அழைத்தார். அவர் அப்போது ஞானம், கல்வி இவற்றில் மிகச் சிறந்த பிரசித்தி அடைந்திருக்கவில்லை. அவருடைய தந்தை மாசிடோனிய அரசவையுடன் தொடர்பு கொண்டிருந்ததனால் ஒருவேளை பிலிப் அவரைத் தேர்ந்தெடுத்தார் எனலாம். அரிஸ் டாட்டில் அலெக்ஸாந்தருக்குக் கற்பித்த கல்வி முக்கியமாக இலக்கியக் கல்வியும், மொழியியல் கல்வியுமாகும். அவர் ஒரு ஆசிரியராக வந் தார்; ஒரு தத்துவ ஞானியாக வரவில்லை. ஒளிமிக்க ஆசிரியருக்கும், ஒளிமிக்க மாணவருக்குமிடையே எப்படிப்பட்ட தொடர்புகள் நிலவின

என்பதைப்பற்றி நமக்கு ஒன்றுந் தெரியவில்லே. இவர்கள் இருவரும் வெவ்வேறு மன இயல்புகள் கொண்டிருந்தார்கள்; அம் மன இயல்பு கள் அநுதாபம் நிறைந்தவையாக இருக்கவில்லே. அலேக்ஸாந் தரின் பொங்கியெழுந்த ஊக்க உணர்ச்சியை இன்னுந் தூண்டி விடாமல் அதை அரிஸ்டாட்டில் அடங்கச் செய்திருப்பார் என்றே நாம் நினேக்கலாம். பிளேட்டோ அவருடைய ஆசிரியராய் இருந் திருந்தால் எப்படித் தொடர்பு மிகுதிப்பட்டிருக்குமோ அந்த அள வுக்கு அரிஸ்டாட்டிலுடன் பிறகு உறுதிப்படவில்லே. ஏதென் ஸுக்குத் திரும்பிவந்த பிறகு அரிஸ்டாட்டில் தம்முடைய தத்துவக் கொள்கைப் பள்ளியை நிறுவினர். முன்பு அக்கேடமி பெற்றிருந்த ஸ்தானத்தை லேசியம் (Lyceum) எடுத்துக் கொண்டது. சிசிலியில் ஏற்பட்ட தோல்விக்குப் பிறகு அக்கேடமி கொஞ்சங் கொஞ்சமாக மக்களின் பார்வையிலிருந்து மறைந்து வந்தது. அவர் பன்னிரண்டு அல்லது பதின்மூன்ருண்டுகள் போதனே செய்துவந்தார். ஐயமின்றி அந்த ஆண்டுகள் அவருடைய தத்துவக் கொள்கைச் செயற்பாட்டின் மிகச் சிறந்த காலமாகும். அலேக்ஸாந்தர் இறந்து நீண்ட காலத் திற்குப் பிறகு அவர் இறந்தார்.

### அரிஸ்டாட்டிலுக்குக் கடன்பட்டிருக்கும் ஐரோப்பா

அலேக்ஸாந்தர், அரிஸ்டாட்டில் இவர்களுடைய அறிவு இடை விடாது வேலே செய்துவந்த அந்த ஆண்டுகளேக் காட்டிலும் மிக அற்புதமான காலம் ஒருபோதும் தோன்றவில்லே. ஐரோப்பா தன் மக்களினத்தவர்கள் எல்லோருக்கும் உயர்ந்த கல்வியைக் கொடுக்க முடிந்ததற்கு அரிஸ்டாட்டிலேத் தவிர வேறு எவரும் காரணமில்லே; அவர் ஒருவருக்கே ஐரோப்பா கடன்பட்டிருக்கிறது என்று கூறுவது சிறிது மிகையான உரையாகும். அவர் முதலில் கண்டுபிடித்துக் கூறியபடியே சிந்தனே விதிகளின் இயல் இன்றும் கற்பிக்கப்பட்டு வருகிறது. அவருடைய ஒழுக்க நெறி, அரசியல் இவற்றின் அடிப் படை நூல்களேத் தவிர ஒழுக்க நெறி, அரசியலறிவு இவற்றிற்கு முன்னுரையாக விளங்கத்தக்க சிறந்த நூல்கள் இன்னும் ஏற்பட வில்லே. அவருடைய முறை மத்திய காலத்து மக்களின் மிக மிகக் கூர்மையான உள்ளங்களே அடக்கியாண்டது. மத்தியகால மக்களின் ஆய்ந்தறியும் திறன்கள், குறுகிய மனப்பான்மையுடன் விளக்கப்பட்ட சமய நெறியால் பாதிக்கப்பட்டிருந்தாலும், வியக்கத்தக்க வகையில் வலிமை பொருந்தியவாயும், நுண்மையவாயும் இருந்தன.

### அரிஸ்டாட்டில் ஏதென்ஸுக்கும் மாசிடோனியாவிற்கும் எதிராக வெறுப்புணர்ச்சி கொள்ளல்; நாகரிகமற்றவர்களேயும் வெறுத்தல்.

நுண்ணிய ஆய்வறிவுத் திறத்தில் மிகச் சிறந்தவராயும், புறத் தோற்றத்து உண்மைகளேத் தொகுத்து ஆராய்ந்து அவற்றினியல்பு

களைக் கண்டின்புறுபவராயும், வெறுப்புணர்ச்சிகள் இல்லாதவராய் இருக்கவில்லை. தன்னலம் மிக்கவர்கள் வாழ்ந்துவந்த சிறிய கிராம மான ஸ்டாகிரா என்ற ஊரில் ஒரு சிறுவனாக வளர்ந்து வரும்போது அவர் எல்லாச் சால்சிடியன் (Chalcidian) பகுதிகளைக் காட்டிலும் ஏதென்ஸ்மீது பொதுவாக எல்லோரும் மறைமுகமாகவோ வெளிப் படையாகவோ கொண்டிருந்த வெறுப்புணர்ச்சியைத் தம்முள்ளத்தில் வாங்கிக் கொண்டார். ஏதென்ஸிலேயே தம் இருப்பிடத்தை அமைத்து வாழ்ந்தாலும், அவர் அந்த அவநம்பிக்கையைப் பின்னால் மாற்றிக்கொள்ள முடியவில்லை. அவர் எப்பொழுதும் ஸ்டாகிராவி லேயே வாழ்ந்து வந்தார். ஏதென்ஸ் அவருக்கு ஓர் அயலிடமாகவே தோன்றியது. இந்த ஆரம்ப வெறுப்புணர்ச்சியே அவர், ஜன நாயகத்தின் மாதிரியாகக் கருதிய அத்தீனிய நிறுவனங்களைப்பற்றிப் பூரணமான நடுநிலையுடன் நின்று தீர்ப்புக் கூறுவதைத் தடை செய்தது. மாசிடோனியாவுக்கு எதிராகவும் அவர் வெறுப் புணர்ச்சி கொண்டிருந்தார். சால்சிடியர்கள் தங்கள் அண்டை நாட்டினரான மாசிடோனியர்களைத் தங்களுக்குங் குறைந்த நாகரிகம் உடையவாகவே கருதினர். பிலிப்புக்கும் ஒலிம்பியாஸுக்கு மிடையே ஏற்பட்ட இகழத்தக்க சண்டைகளைப் பார்த்திருக்கக்கூடிய அரிஸ்டாட்டிலின் பெல்லா அரசவை அனுபவங்களும் அவருடைய உள்ளத்தில் சாதகமான எண்ண மதிப்பை ஏற்படுத்தவில்லை. இதனால் அவர் அலெக்ஸாந்தரின் புது வெற்றி முயற்சிகளைப் போற்றாமலிருந்தார். ஆனால் அனுதாப உணர்ச்சி பெறாமல் இருந்ததுடன் அவர் அம்முயற்சிகளை இகழ்ந்துரைக்கவும் தொடங் கினார். ஏனெனில், அவர் சிறிய கிரேக்கக் குடியரசு நாட்டின் எண்ணத்திலேயே மூழ்கியிருந்தவர்; பெரிய இராச்சியத்தை அவர் இகழ்ந்து கூறினார். மேலும் கிரேக்கர்கள் தாங்களே மற்ற இனத்து மக்களைக் காட்டிலும் இயற்கையான அறிவிலும், ஆற்றலிலும் உயர்ந்தவர்கள் என்ற நம்பிக்கையை அவரும் உறுதியாகக்கொண் டிருந்தார். இதனால் அலெக்ஸாந்தருடைய கொள்கையின் மிகப் புதிய, மிகச் சிறந்த சிறப்பியல்புகளை எதிர்த்தார்; கிரேக்கர்களையும், நாகரிக மற்றவர்களையும் ஒன்றாக வைத்து ஆளும் அவருடைய பண்பை வெறுத்தார். இவ்வாறு மாசிடோனியர்கள்மீது அவ நம்பிக்கையும் வெறுப்புணர்ச்சியும் கொண்டிருந்தமையால் அவர் ஒரு பெரிய வாய்ப்பினை இழந்தார். அலெக்ஸாந்தரின் படையெடுப்பு இயற்கையின் வரலாற்றில் புதியன கண்டுபிடிப்பதற்கு ஒரு புதிய களத்தை அறிவியலுக்குத் தந்தது. அதனால் அலெக்ஸாந்தர் சென்ற வெவ்வேறு சீதோஷ்ண நிலையுடைய வெவ்வேறு நாடுகளிலும் காணப்பட்ட விலங்குகள், தாவர இனங்கள் இவற்றைப்பற்றிய விரிவான செய்திகளைச் சேர்த்துக் கொடுக்கும்படி அரிஸ்டாட்டிலை வற்புறுத்தி இருந்தால், அவர் அவ்வரசருக்கு எவ்வளவு துன்பங்களை

ஏற்படுத்தியிருப்பார் என்பதை நாம் கற்பனையால் உணர்ந்து கொள்ளலாம்.

### அரிஸ்டாட்டிலின் இலட்சிய அரசாங்கம்

அலெக்ஸாந்தர் உருவாக்கிக் கொண்டிருந்த அரசாங்கத்தின் இயல்போடு அவர் காலத்தில் வாழ்ந்த சிந்தனைமிக்க அறிஞர்கள் வரைந்த இலட்சிய அரசாங்கத்தின் இயல்புகளை ஒப்பிட்டுப்பார்க்கும் போது புதிய உணர்ச்சி நமக்கு ஏற்படும். அரிஸ்டாட்டில் சிறிய, எல்லா வசதிகளுடனும் பொருந்திய, பாதுகாப்பான நகர அரசாங்கத்தை விரும்புகிறார். கடலுக்கு அருகில் ஆனால் கடற்கரை யின் மேல் இல்லாததாயும், அருகிலேயே துறைமுகம் இருப்பதாயும், ஆனால் நகரத்தோடு துறைமுகம் தொடர்பு அற்றதாயும் இருக்க வேண்டுமென்று விரும்புகிறார். ஏனெனில் அப்போதுதான் நகரின் சுற்றுப்புறங்களும், குடிமக்களும் துறைமுகத்தினால் தூய காற்றைப் பெறுவர் என்றும், அயல்நாட்டினர், குறைந்த விலைக்குப் பொருளை வாங்கிக் கொள்வோர், கடலோடிகள் முதலிய துறைமுக மேடைகளில் நெருங்கிக் கொண்டிருப்பவர்கள், நகரிலும் புகுந்து நகரின் சூழ்நிலை யைக் கெடுக்காமலிருப்பர் என்றும் அவர் கருதுகிறார். நகரம் ஒரு வாணிக மையமாக இருக்கவேண்டும்; அது தன்னுடைய இன்றி யமையாத் தேவைகளுக்கு மட்டும் ஏற்றுமதி இறக்குமதிகளைச் செய்துகொள்ள வேண்டும். அது ஒரு சிறு நகரமாயிருக்க வேண்டும். அந்நகரில் வாழ்வோர் ஒருவர்க்கொருவர் மற்றவர்களைப் பற்றி எல்லாம் தெரிந்துகொள்ளுமளவிற்குக் குறைந்த எண்ணிக்கை உடையவர்களாயிருக்க வேண்டும். நகரக் குடிமக்களுக்குச் சம உரிமைகள் இருக்கவேண்டும். அவர்களுடைய இளமைக் கால வாழ்வு படைத்துறைப் பணியில் கழியவேண்டும்; அவர்கள் நடு வயதை அடையும்போது அரசியல் பதவிகளை மேற் கொள்ளலாம்; முதுமைக்காலத்தில் புரோகிதர்களாக மாறிவிடவேண்டும். இந்தக் குடியாட்சிப் பிரபுத்துவத்துக்கு உட்பட்டவர்களாய், ஆனால் வாக் குரிமையிலிருந்து முற்றிலும் விலக்கப்பட்டவர்களாயிருந்தவர்கள் வணிகர்களும், சிறு கைத்தொழில் செய்வோர்களுமே யாவர். நகரத்தின் ஒரு பகுதி நிலம் அரசாங்கத்துக்குரிய பொது நிலமா யிருக்கவேண்டும். அதிலிருந்து கிடைக்கும் வருமானம் கோயில்களைப் பரிபாலிக்கவும், தெய்வங்களைத் தொழுவதற்கும் பயன்படுத்தப்பட வேண்டும்; அந் நிலத்தின் விளைச்சல் நகரமக்களுக்கு உணவாக வேண்டும். அந் நிலங்கள் கிரேக்கரல்லாத இனத்துத்தொழிலாளர்கள் அல்லது அடிமைகளால் உழப்படவேண்டும். இப்படிப்பட்ட நகரம் தான் அரிஸ்டாட்டில் வரைந்த சிறு தனிப்பட்ட சமுதாய நகரமாகும். ஆனால் அவருடைய முன்னாள் மாணவராயிருந்த அலெக்ஸாந்தர் அவருடைய அறிவுத்துறைக்கும் அப்பாலான

துறையான புதிய அரசியலின் சிக்கல்களை ஊடறுத்துக் கொண்டு வெவ்வேறு இனங்களைச் சேர்ந்த மக்களைக் கொண்ட நகரங்களை நிறுவினர்; ஒரு நாட்டையும் மற்றொரு நாட்டையும் பிரிக்கும் தடைகளை எல்லாம் தகர்த்தெறிந்து உலக முழுவதும் பரந்த வாணிகத்திற்கான திட்டங்களைக் கொண்டுவந்தார்; இலட்சக்கணக் கானவர்களடங்கிய பேரரசை நிறுவினர். பிளேட்டோவின் குடியரசுக் கருத்துக்களைப் போல அவ்வளவு புதிய கருத்துக்கள் இல்லாத அரிஸ்டாட்டிலின் குடியரசுக் கருத்துக்கள் விரைவாகப் பரவவில்லை. அவருடைய குடியரசு சாதாரண கிரேக்கப் பிரபுத்துவத்தின் நகரங்கள் வெட்டப்பட்டும் கவனமாகக் கத்தரிக்கப்பட்டும், முறையான கல்வியால் சீர்திருத்தப்பட்டும் உருவாக்கப்பட்ட குடியரசேயாகும். விரிந்து செல்லும் சக்தியில்லாமலிருந்தது. அக்குடியரசு ஸ்பார்ட்டா வைப் போலத் தனிப்பட்ட குடிமக்களின் சுதந்தர வளர்ச்சிக்கு அதில் இடமில்லாமலிருந்தது. அத் தத்துவ ஞானியின் விருப்பப்படியே கிரேக்க நகரங்கள் எல்லாம் உருவாக்கப்பட்டிருந்தால் அவை ஐரோப்பிய நாகரிகத்துக்கு இவ்வளவு சிறப்புக்களைக் கொடுத்திருக்க முடியாது.

மனித வரலாற்றில் கிரேக்க நகரங்கள் இனி மற்ற எவருஞ் சொல்ல வேண்டாத அளவிற்கு உயர்ந்திருக்கவில்லை என்று அரிஸ்டாட்டில் தம் மரணத்திற்கு முன்பு கூறினரோ என்று நாம் வியப்படையலாம். அனேகமாக அலெக்ஸாந்தரின் அகால மரணம் உலகம் பழைய முறையிலேயே மீண்டும் செல்லும் என்ற நம்பிக்கை யைக் கொடுத்திருக்கும். கிரேக்க நகர அரசகங்களின் ஒளிமிக்க காலம் விரைவில் ஒரு முடிவிற்கு வந்து விட்டது. அதனல் அக் காலம் உண்மையைப் புரிந்துகொண்டிருக்க முடியாது. நாகரிக விளக்கை ஏற்றி வைத்துக் கொண்டு வந்த எந்த மக்களும், முடியாட்சி முடி சாய்ந்துவிட விரும்பவில்லை; முடியாட்சியில்லாத நிலை ஏற்படும் என்பதை உணர்ந்துகொள்ள முடியாதவர்களாயுமிருந்தனர். மாறுதலை ஏற்றுக்கொள்ளக் கிரேக்கர்கள் தயங்கியிருந்தால் அவர்களை மன்னித்து விடலாம். அத் தயக்கமே அவர்களுக்குச் சிறிது கீழான இடமே உலகில் ஏற்படும்படி செய்தது. ஆனல் இவ்வாறுதான் வரலாற்றின் கடுமையான விதிகள் தகுதிவாய்ந்தவர்களுக்குப் பயனளிக்கின்றன. கிரீஸின் குடியரசுகள் அழியாத பணியைச் செய்தன. அவை மனித இனத்துக்குப் பலவற்றை அறிமுகப்படுத் தின. எல்லாவற்றுக்கும் மேலாக, அச்சம் இல்லாத சுதந்திரச் சிந்தனையை அவை உலகத்துக்குக் கொடுத்தன.

## கலைச்சொல் அகராதி

(ஆங்கிலம் - தமிழ்)

A

Acropolis — சேம அரண்
Administration — ஆட்சி முறை
Anachronism — கால இட முரண்பாடு, பிற்காலப் பண்புகளை முற்காலத்திற்கும், முற்காலப் பண்புகளைப் பிற்காலத்திற்கும் தவருக ஏற்றிக் குழப்புதல்
Annihilate — நிர்மூலமாக்கு
Apophthegms — அரசியற் பழமொழிகள்
Archaeology — புதைபொருள் ஆராய்ச்சி
Aristocracy — உயர்குடியாட்சி
Attack — தாக்கு

B

Barbarian — காட்டுமிராண்டி
Barracks — பாளையங்கள்
Besiege — முற்றுகையிடு
Bireme — இரண்டு (அடுக்கு) வரிசைத் துடுப்புகளைக்கொண்ட கப்பல்
Blockade — தடைவளைப்பு
Blustering — வீம்பு பேசுகின்ற
Bodyguards — மெய்காப்பாளர் படை
Breach of contract — ஒப்பந்தத்தை மீறுதல்
Bribe — கைக்கூலி
Bronze age — வெண்கலக் காலம்

C

Campaign — போருக்கான ஏற்பாடு, போர் வினையில் ஈடுபடுதல்

Camp-follower — இராணுவக் குழுவோடு செல்லும் பரிவாரத்தார்
Cavalry — குதிரைப்படை
Characteristics — தனிச் சிறப்புகள்
Chronology — கால வரிசைமுறை
Citadel — சேம அரண்
City-States — நகர-அரசுகள்
Clan — குலம்
Climate — வெப்பதட்பநிலை
Coincidence — ஒருங்கொத்த நிகழ்ச்சி
Comedy — இன்பியல் நாடகம்
Communism — பொதுவுடைமை
Confederation — கூட்டுக்குழு, நாடுகளின் இணைவு
Conservative spirit — பழமை விரும்பும் பண்பு
Contemporary — சமகாலம்
Copies — படிகள்
Copper age — செப்புக் காலம்

D

Decree — ஆணை, கட்டளை
Democracy — மக்களாட்சி
Despotic constitution — வல்லாட்சி அமைப்பு
Diplomacy — அரசியற் செயலாட்சி நலம்
Discipline — கட்டுப்பாடு
Discontented people — அமைதியற்ற மக்கள்
Discourse — உரையாடல், பேருரை
Doctrine of flux — மாறுதலின் கோட்பாடு
Doctrine of relativity — காலஇடப் பொதுத் தொடர்புத் தத்துவம்
Dynasty — வமிசம்

E

Eisphora — அத்தீனியச் சொத்துவரி
Empire — பேரரசு
Enterprise — துணிவுச் செயல்
Epoch — சகாப்தம்
Extremists — தீவிரவாதிகள்

F

Federation — கூட்டாட்சி
Fine arts — கவின்கலைகள்

First fruits — முதற் பேறுகள்
Fortification — அரண் அமைத்தல்

G

Genealogy — குடும்ப வரலாற்று வரிசை
Geography — பூவியல்
Geology — மண்ணூல்

H

Hereditary kingship — வழிவழியாக வந்த முடியரசு
Homogeneous — ஒருபடித்தான
Hostages — பிணைகள்
Hyperbolic — உயர்வு நவிற்சியான (ஐப்பர் போலஸ் என்பவருடைய பெயரைக்கொண்டு வந்த வார்த்தை)
Hyperboreans — கிரேக்க புராண மரபின்படி வட காற்றுக்கு அப்பால் கதிரொளி வளமிக்க பகுதியில் வாழும் மனித இனத்தவர்

I

Ideal state — உயர்குறிக்கொண்ட அரசியல்
Individualism — தனியாள் உரிமைக் கொள்கை
Influx — உள்நோக்கி நுழைதல்
Interest — வட்டி
Intermediary — நடுவர்
Invasion — படையெடுப்பு
Iron age — இரும்புக் காலம்

J

Joint-undertaking — கூட்டு முயற்சிகள்
Judge — நீதிபதி
Judgment — முறைமன்றத் தீர்ப்பு
Judiciary — நீதிநிலையத் துறை

K

Kingdom — முடியரசு நாடு, இராச்சியம்

L

Laconic — மணிச் சுருக்கமான (லாக்கோனிய என்னும் பதத்திலிருந்து தோன்றியது)

Landmark — வரலாற்றில் திருப்புமுனை, முக்கியக் கட்டம்
Law-givers — சட்டம் ஈந்தவர்கள்
League — கூட்டிணைப்புச் சங்கம்
Liaison — (படை) தொடர்பு
Liberty — ஆட்சித் தனியுரிமை
Light-armed soldiers — சிறுதிறமான ஆயுதங்களை அணிந்த போர்வீரர்கள்
Local government — குறுநில ஆட்சி
Location — இட அமைப்பு
Lot — சீட்டுக் குலுக்கும் முறை

M

Market place — விலைக்களம்
Masters — பணிமுதல்வர்கள்
Mediator — மத்தியஸ்தன்
Medism — மீதிய மன்னர்களுடன் சேர்ந்து சதியாலோசனை செய்தல்
Mercenary army — கூலிப்படை
Metal age — உலோக காலம்
Metropolis — தலைநகரம்
Middle ages — இடைநிலைக் காலம்
Migrate — இடம்பெயர்
Moderation — மிதமான அளவுக்கு
Monarchy — முடியாட்சி, முடியரசு
Muses — கலைத்தேவதைகள்
Museum — பொருட்காட்சிச்சாலை
Mutiny — படைவீரர் கலகம்
Mythology — புராணக் கதைத் தொகுதி

N

Nationalist — தேசீயவாதி

O

Oath — ஆணை, பிரமாணம்
Official — பணிமனை சார்ந்த
Oligarchy — சிறுகுழு ஆட்சி
Oppress — ஒடுக்கு
Oracle — தெய்வீக மொழி, தெய்வீக மொழி கூறுமிடம்

Orator — நாவலர்
Ostracism — அரசியலில் தகாதவன் என்று மக்களால் கருதப்பட்டவனைப் பத்து ஆண்டுகளுக்கு நாடு கடத்தும் முறை

P

Parliament — பாராளுமன்றம்
Patriotic spirit — நாட்டுப் பற்றூர்ந்த மனப்பாங்கு
Phalanx — மாஸிடோனியரின் செறிவுமிக்க காலாட்படையணி
Philistines — பிலிஸ்தியர்கள்
Phoros — திறை, கப்பம்
Policy — அரசியற் கோட்பாடு
Polis — நகரம்
Political organisation — அரசியல் அமைப்பு
Politician — அரசியல் வல்லுநர்
Prerogatives — உயர் உரிமைகள்
Promontary — ஊற்றுநிலம்
Put into commission — சிறப்புக் குழுவினடியில் கொண்டு வரப்பட்டது

R

Ram — தகர்ப்புப் பொறி
Rate of interest — வட்டி விகிதம்
Reconstruction — புனரமைப்பு
Refined luxurious life — நாகரிகச் சுகவாழ்வு
Regicide — மன்னனைக் கொலைசெய்தவன்
Representatives — பிரதிநிதிகள்
Republic — குடியரசு
Rise in prices — விலைவாசிகளின் உயர்வு

S

Sacred war — புனித யுத்தம்
Sea-faring life — கடல் சார்ந்த வாழ்க்கை
Servitude — அடிமைத்தனம்
Small-scale industries — சிறுகருவித் தொழில்கள்
Social organisation — சமூக அமைப்பு
Social war — சமூகப் போர்
Sovereignty — ஆதிபத்தியம், இறைமை

Speculations — ஊகவாணிகம், மெய்விளக்கத் துறை எண்ண நீள் நினைவுகள்
State — நாட்டின் அரசு
Statesman — அரசியல் மேதகை
Stone age — கற்காலம்
Stratagem — போர்த்தந்திரம்
Surrender — சரணடைதல்
Swear — ஆணையிடுதல், உறுதியாகக் கூறுதல்
Syntaxeis — நன்கொடை, உதவிப் பணம்

T

Theoretical — கொள்கைநிலை
Throne — அரியணை
Timocracy — செல்வர்குடி ஆட்சி
Tradition — மரபு
Tragedian — துன்பியல் நாடகக் கவிஞன்
Treasury — கருவூலம்
Trireme — மூன்று (அடுக்கு) வரிசைத் துடுப்புகளைக்கொண்ட கப்பல்
Tyrants -- கொடுங்கோலர், டைரன்டுகள்

U

Undaunted — உறுதி தளராத
Undermine — கீழறு
Unsocial — கூடி மகிழாத
Urn — தாழி, புதைகலம்

V

Vulgar — நயநாகரிகமற்ற

W

Warrant — பற்றுணை
Weights and measures — நிறுத்தல், அளத்தல் அளவை
Wing — படையின் பக்க அணி
Wrong-doer — தீங்கு இழைப்பவர்

## கலைச்சொல் அகராதி

(தமிழ் - ஆங்கிலம்)

அ

அடிமைத்தனம் — Servitude
அத்தீனியச் சொத்துவரி — Eisphora
அமைதியற்ற மக்கள் — Discontented people
அரசியல் அமைப்பு — Political organisation
அரசியற் கோட்பாடு — Policy
அரசியற் செயலாட்சி நலம் — Diplomacy
அரசியற் பழமொழிகள் — Apophthegms
அரசியல் மேதகை — Statesman
அரசியல் வல்லுநர் — Politician
அரசியலில் தகாதவன் என்று மக்களால் கருதப்பட்டவனைப் பத்து ஆண்டுகளுக்கு நாடுகடத்தும் முறை — Ostracism
அரண் அமைத்தல் — Fortification
அரியணை — Throne

ஆ

ஆட்சித் தனியுரிமை — Liberty
ஆட்சிமுறை — Administration
ஆணை — Decree
ஆணை — Oath
ஆணையிடுதல் — Swear
ஆதிபத்தியம் — Sovereignty

இ

இட அமைப்பு — Location
இடம்பெயர் — Migrate
இடைநிலைக் காலம் — Middle age

| | | |
|---|---|---|
| இரண்டு (அடுக்கு) வரிசைத் துடுப்புகள்கொண்ட கப்பல் | — | Bireme |
| இராச்சியம் | — | Kingdom |
| இராணுவக் குழுவோடு செல்லும் பரிவாரத்தார் | — | Camp-follower |
| இரும்புக் காலம் | — | Iron age |
| இறைமை | — | Sovereignty |
| இன்பியல் நாடகம் | — | Comedy |

உ

| | | |
|---|---|---|
| உதவிப் பணம் | — | Syntaxeis |
| உயர் உரிமைகள் | — | Prerogatives |
| உயர்குடி ஆட்சி | — | Aristocracy |
| உயர்குறிக்கொண்ட அரசியல் | — | Ideal state |
| உயர்வு நவிற்சியான (ஐப்பர் போலஸ் என்பவரின் பெயரைக் கொண்டு வந்த பதம்) | — | Hyperbolic |
| உரையாடல் | — | Discourse |
| உலோக காலம் | — | Metal age |
| உள்நோக்கி நுழைதல் | — | Influx |
| உறுதி தளராத | — | Undaunted |
| உறுதியாகக் கூறுதல் | — | Swear |

ஊ

| | | |
|---|---|---|
| ஊகவாணிகம் | — | Speculation |
| ஊற்றுநிலம் | — | Promontary |

ஒ

| | | |
|---|---|---|
| ஒடுக்கு | — | Oppress |
| ஒப்பந்தத்தை மீறுதல் | — | Breach of contract |
| ஒருங்கொத்த நிகழ்ச்சி | — | Coincidence |
| ஒருபடித்தான | — | Homogeneous |

க

| | | |
|---|---|---|
| கப்பம் | — | Phoros |
| கட்டளை | — | Decree |
| கட்டுப்பாடு | — | Discipline |
| கடல் சார்ந்த வாழ்க்கை | — | Sea-faring life |
| கருவூலம் | — | Treasury |
| கலைத்தேவதைகள் | — | Muses |
| கவின்கலைகள் | — | Fine arts |
| கற்காலம் | — | Stone age |

கா

| | | |
|---|---|---|
| காட்டுமிராண்டி | — | Barbarian |
| காலஇடப் பொதுத் தொடர்புத் தத்துவம் | — | Doctrine of relativity |
| காலஇட முரண்பாடு, பிற்காலப் பண்புகளை முற்காலத்திற்கும், முற்காலப் பண்புகளைப் பிற்காலத்திற்கும் தவருக ஏற்றிக் குழப்புதல் | — | Anachronism |

கி

| | | |
|---|---|---|
| கிரேக்க புராண மரபின்படி வட காற்றுக்கு அப்பால் கதிரொளி வளமிக்க பகுதியில் வாழும் மனித இனத்தவர் | — | Hyperboreans |
| கீழறு | — | Undermine |

கு

| | | |
|---|---|---|
| குடியரசு | — | Republic |
| குடும்ப வரலாற்று வரிசை | — | Genealogy |
| குதிரைப்படை | — | Cavalry |
| குலம் | — | Clan |
| குறுநில ஆட்சி | — | Local government |

கூ

| | | |
|---|---|---|
| கூட்டாட்சி | — | Federation |
| கூட்டிணைப்புச் சங்கம் | — | League |
| கூட்டுக்குழு | — | Confederation |
| கூட்டு முயற்சி | — | Joint-undertaking |
| கூடி மகிழாத | — | Un-social |
| கூலிப்படை | — | Mercenary army |

கை

| | | |
|---|---|---|
| கைக்கூலி | — | Bribery |

கொ

| | | |
|---|---|---|
| கொடுங்கோலர் | — | Tyrants |
| கொள்கைநிலை | — | Theoretical |

ச

| | | |
|---|---|---|
| சகாப்தம் | — | Epoch |
| சட்டம் ஈந்தவர்கள் | — | Law-givers |

சமகாலம் — Contemporary
சமூக அமைப்பு — Social organisation
சமூகப் போர் — Social war
சரணடைதல் — Surrender

சி

சிறப்புக்குழுவினடியில் கொண்டு வரப்பட்டது — Put into commission
சிறுகருவித் தொழில்கள் — Small-scale industries
சிறுகுழு ஆட்சி — Oligarchy
சிறுதிறமான ஆயுதங்களை அணிந்த போர்வீரர்கள் — Light-armed soldiers

சீ

சீட்டுக் குலுக்கும் முறை — Lot system

செ

செப்புக் காலம் — Copper age
செல்வர்குடி ஆட்சி — Timocracy

சே

சேம அரண் — Acropolis
சேம அரண் — Cadmea

டை

டைரன்டுகள் — Tyrants

த

தகர்ப்புப் பொறி — Ram
தடைவளைப்பு — Blockade
தலைநகரம் — Metropolis
தனிச் சிறப்புகள் — Characteristics
தனியாள் உரிமை — Individualism

தா

தாக்கு — Attack
தாழி — Urn

தி

திறை — Phoros

தீ

தீங்கு இழைப்பவர் — Wrong-doer
தீவிரவாதி — Extremist

து

துணிவுச் செயல் — Enterprise
துன்பியல் நாடகக் கவிஞன் — Tragedian

தெ

தெய்வீக மொழி அல்லது தெய்வீக மொழி கூறுமிடம் — Oracle

தொ

(படை) தொடர்பு — Liaison

தே

தேசீயவாதி — Nationalist

ந

நகர-அரசுகள் — City-States
நகரம் — Polis
நடுவர் — Intermediary
நயநாகரிகமற்ற — Vulgar
நன்கொடை — Phoros

நா

நாகரிகச் சுகவாழ்வு — Refined luxurious life
நாட்டின் அரசு — State
நாட்டுப்பற்றூர்ந்த மனப்பான்மை — Patriotic spirit
நாடுகளின் இணைவு — Confederacy
நாவலர் — Orator

நி

நிர்மூலமாக்கு — Annihilate
நிறுத்தல், அளத்தல் அளவைகள் — Weights and measures

நீ

நீதிநிலையத்துறை — Judiciary
நீதிபதி — Judge

ப

| | | |
|---|---|---|
| படிகள் | — | Copies |
| படையின் பக்க அணி | — | Wing |
| படையெடுப்பு | — | Invasion |
| படைவீரர் கலகம் | — | Mutiny |
| பணிமனை சார்ந்த | — | Official |
| பணிமுதல்வர்கள் | — | Masters |
| பழைமை விரும்பும் பண்பு | — | Conservative spirit |
| பற்றுணை | — | Warrant |

பா

| | | |
|---|---|---|
| பாராளுமன்றம் | — | Parliament |
| பாளையங்கள் | — | Barracks |

பி

| | | |
|---|---|---|
| பிணைகள் | — | Hostages |
| பிரதிநிதிகள் | — | Representatives |
| பிரமாணம் | — | Oath |
| பிலிஸ்தியர்கள் | — | Philistines |

பு

| | | |
|---|---|---|
| புதைகலம் | — | Urn |
| புதைபொருள் ஆராய்ச்சி | — | Archaeology |
| புராணக் கதை | — | Mythology |
| புனரமைப்பு | — | Reconstruction |
| புனித யுத்தம் | — | Sacred war |

பூ

| | | |
|---|---|---|
| பூவியல் | — | Geography |

பே

| | | |
|---|---|---|
| பேரரசு | — | Empire |
| பேருரை | — | Discourse |

பொ

| | | |
|---|---|---|
| பொதுவுடைமை | — | Communism |
| பொருட்காட்சிச்சாலை | — | Museum |

போ

போர்த்தந்திரம் — Strategy
போர்வினையில் ஈடுபடுதல் — Campaign
போருக்கான ஏற்பாடு — Campaign

ம

மக்களாட்சி — Democracy
மண்ணூல் — Geology
மணிச்சுருக்கமான — Laconic
மத்தியஸ்தன் — Mediator
மரபு — Tradition
மன்னனைக் கொலைசெய்தவன் — Regicide

மா

மாறுதலின் கோட்பாடு — Doctrine of flux
மாஸிடோனிய செறிவுமிக்க காலாட்படையணி — Phalanx

மி

மிதமான அளவுக்கு — Moderation

மீ

மீதிய மன்னர்களுடன் சேர்ந்து சதியாலோசனை செய்தல் — Medism

மு

முடியரசு நாடு — Kingdom
முடியரசு — Monarchy
முடியாட்சி — Monarchy
முதற் பேறுகள் — First fruits
முற்றுகையிடு — Besiege
முறைமன்றத் தீர்ப்பு — Judgement

மூ

மூன்று (அடுக்கு) வரிசைத் துடுப்புகள்கொண்ட கப்பல் — Trireme

மெ

மெய்காப்பாளர் படை — Bodyguards
மெய்விளக்கத்துறை எண்ண நீள் நினைவுகள் — Speculations

வ

வட்டி — Interest
வட்டி விகிதம் — Rate of interest
வமிசம் — Dynasty
வரலாற்றில் திருப்புமுனை — Land-mark
வல்லாட்சி அமைப்பு — Despotic constitution
வழிவழியாக வந்த முடியரசு — Hereditary kingship

வி

விலைக்களம் — Market place
விலைவாசிகளின் உயர்வு — Rise in prices

வீ

வீம்பு பேசுகின்ற — Blustering

வெ

வெண்கலக் காலம் — Bronze age
வெப்பதட்ப நிலை — Climate

# பொருட்குறிப்பு அகராதி

இ



ஈ



எ

டே



டை

பீ



பு



பூ



பெ

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

## சென்னை - 9.

## 1965வரை வெளியிட்டுள்ள நூல்கள்

**பொருளாதாரம்**

| | நூல் | ஆசிரியர் | விலை |
|---|---|---|---|
| *1. | பொருளாதாரம் - II | சி. வேலாயுதம் | 9-00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | திருமதி ஆர். தாமரஜாட்சி | 12-00 |
| 3. | பொருளாதாரம்-ஓர் அறிமுகம் - I | தி. சி. மோகன் | 12-00 |
| 4. | பொருளாதாரம்-ஓர் அறிமுகம் - II | எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | 10-75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | க. முத்தையன் | 7-00 |
| *6. | பணவியலும் பாங்கியலும் - II | சி. வேலாயுதம் | 11-50 |
| 7. | நவீன பாங்கு இயல் | க. வெற்றிவேல் | 7-50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | பி. வி. ஸ்ரீநிவாசன் | 5-50 |
| *9. | அரசாங்க நிதி இயல் | அர. சேஷாசலம் | 4-75 |
| 10. | இந்தியப் பொருளியல் - I | எம். பாலசுப்பிரமணியன் | 10-00 |
| 11. | இந்தியப் பொருளியல் - II | எம். லூர்துநாதன் | 4-25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை - I | சி. சுந்தரராஜன் | 10-75 |
| 13. | நமது பொருளாதாரப் பிரச்சினை - II | எஸ். குழந்தைநாதன் | 10-50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு - I | கெ. சி. இராமசாமி | 6-00 |
| 15. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு - II | ,, | 6-00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | தி. சி. மோகன் | 5-00 |
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு - I | மு. க. சுப்பிரமணியம் | 11-00 |
| 18. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம் - I | மா. குமாரசாமி | 10-00 |
| 19. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி - I | தே. வேலப்பன் | 10-00 |

* மூல நூல் (Original Book)

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 20. | பணம்—சிறு விளக்கம் | ... | ... | கோ. இராதாகிருஷ்ணன் | ... | ... | 10—00 |
| *21. | வணிக இயலின் தத்துவங்கள் | ... | ... | கு. ஆளுடைய பிள்ளை | ... | ... | 9—50 |
| 22. | பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | ... | ... | சூ. ரா. கருப்பண்ணன் | ... | ... | 11—00 |
| வரலாறு | | | | | | | |
| *23. | பிரிட்டன் வரலாறு - I | ... | ... | கி. ர. அனுமந்தன் | ... | ... | 10—00 |
| *24. | பிரிட்டன் வரலாறு - II | ... | ... | ,, | ... | ... | 9—75 |
| *25. | ஐரோப்பிய வரலாறு - I | ... | ... | டி. வி. சொக்கப்பா | ... | ... | 4—50 |
| 26. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றாண்டுகாலச் சரித்திரம் | ... | ... | வை. விருத்தகிரீசன் | ... | ... | 15—00 |
| 27. | இங்கிலாந்து வரலாறு - I | ... | ... | இரா. அண்ணாமலை | ... | ... | 13—00 |
| 28. | இங்கிலாந்து வரலாறு - II | ... | ... | பா. மாணிக்கவேலு | ... | ... | 13—00 |
| 29. | இங்கிலாந்தின் வரலாறு - I | ... | ... | க. த. திருநாவுக்கரசு | ... | ... | 15—00 |
| 30. | இந்தியாவின் சிறப்பு வரலாறு - I | ... | ... | தி. வெ. குப்புசாமி | ... | ... | 7—50 |
| அரசியல் | | | | | | | |
| *31. | இந்திய அரசியலமைப்பு | ... | ... | வி. கண்ணையா | ... | ... | 4—75 |
| 32. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | ... | ... | டி. செல்லப்பா | ... | ... | 8—50 |
| 33. | தற்கால அரசியல் அமைப்புகள் | ... | ... | மோ. வள்ளுவன் கிளாரன்சு | ... | ... | 8—50 |
| 34. | பன்னாட்டு அரசியல் - I | ... | ... | திருமதி நூர்ஜஹான்பாவா | ... | ... | 16—00 |
| 35. | பொதுத்துறை ஆட்சி இயல் - I | ... | ... | வி. கண்ணையா | ... | ... | 9—00 |
| 36. | பொதுத்துறை ஆட்சி இயல் - II | ... | ... | அ. ஜெகதீசன் | ... | ... | 7—25 |
| உளவியல் | | | | | | | |
| 37. | குழந்தை உளவியல் - I | ... | ... | கி. ர. அப்புள்ளாச்சாரி | ... | ... | 8—00 |
| 38. | குழந்தை உளவியல் - II | ... | ... | ,, | ... | ... | 7—00 |

| | | | |
|---|---|---|---|
| 39. | உட்கவர் மனம் | சி. ந. வைத்தீஸ்வான் | 7—00 |
| 40. | இளையோர் உளவியல் - I | இ. இரா. அரங்கராசன் | 12—00 |
| 41. | இளையோர் உளவியல் - II | ,, | 9—00 |
| 42. | சமூக உளவியல் | என். வேதமணி மானுவேல் | 9—25 |
| 43. | பிறழ்நிலை உளவியல் | அ. பெசன்ட் கிரிப்பர்ராஜ் | 11—00 |
| 44. | பித்தரின் உள்ளம் | ,, | 3—00 |
| **தத்துவம்** | | | |
| 45. | இந்து சமயத் தத்துவம் | ஞா. ராஜாபகதூர் | 5—50 |
| **அறவியல்** | | | |
| 46. | அறவியல்—ஓர் அறிமுகம் | கோ. மோ. காந்தி | 8—50 |
| **அளவையியல்** | | | |
| 47. | அளவை இயல்-தொடக்க நூல் | கி. ர. அப்புள்ளாச்சாரி | 2—50 |
| **மானிடவியல்** | | | |
| *48. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 49. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ. சுப்பிரமணியன் | 5—50 |
| **சமூகவியல்** | | | |
| 50. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |
| **புவியியல்** | | | |
| *51. | ஆசியா - I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| *52. | ஆசியா - II | ,, | 8—75 |
| *53. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ. எஸ். நாராயணன் | 8—50 |
| *54. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |

* மூல நூல் (Original Book)

| | | | |
|---|---|---|---|
| *55. | தென் கண்டங்கள் - ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *56. | புவிப் புறவியல் - II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *57. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *58. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *59. | சமுத்திரவியல் | கோ. இராமசுவாமி | 6—50 |
| 60. | காலநிலை இயல் - I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 61. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *62. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |
| **புள்ளியியல்** | | | |
| *63. | புள்ளியியல்-அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |
| 64. | புள்ளியியல் முறைகள் - I | கோ. சண்முகசுந்தரம் | 10—00 |
| 65. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமி நரசிம்மன் | 6—50 |
| **விலங்கியல்** | | | |
| *66. | விலங்கியல் | பெ. மா. அண்ணாமலை, இரா. முருகேசன் | 12—00 |
| **பௌதிகவியல்** | | | |
| 67. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10—00 |
| **பொது நூல்கள்** | | | |
| 68. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 69. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |
| 70. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| 71. | சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியன் | 2—50 |
| *72. | நீரிழிவு-க்ஷயரோகம் | ஜி. வேங்கடசாமி, ஏ. கதிரேசன் | 2—50 |

* மூல நூல் (Original Book)